வில்லிபுத்தூரார்

இயற்றிய

# மகாபாரதம்

முதலாவது

## ஆதிபருவம்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்

இயற்றிய உரையுடன்




வை. மு. நரசிம்மன்

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கம்பெனி

17, தெளிசிங்கப்பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி,

சென்னை - 5

ஹேவிளம்பி ஸு ஆவணி மீ } 1957 [விலை ரூ. 4—0—0

35-3

# பொருளடக்கம்.



———

# முகவுரை.

அருந்தமிழன்பர்காள்!

"அரிதரிதுமானிடராதலரிது" என்றபடி பெறுதற்கு அரிய மானுடப்பிறவி யெடுத்ததற்குப்பயன் இம்மையில் நூல்களைக் கற்றலால் நல்லறிவு பெற்று முன்னோர் கடைப்பிடித்த வழியை மேற்கொண்டு அவ்வாயிலாக மறுமையில் நற்கதிபெறுதலேயாம். அதற்காகவே நூல்களில் தலைசிறந்த வேதம் கடவுளால் வெளியிடப்பட்ட தென்பது, வைதிகமதத்தவரெல்லார்க்கும் ஒப்ப முடிந்த பொருளாம்.

அதன்பொருளை யுள்ளவாறு அறிவது கருவியின்றியியலாத செயல்: அன்றியும், அஃது எல்லார்க்கும் இயைவதுமன்று. ஆகவே, பண்டைக்காலத்துப் பெரியோர் அவ்வேதங்களின் பொருளை யறிவதற்கு ஸ்மிருதி இதிஹாஸ புராணங்கள் ஆகிய நூல்களை யியற்றினர். அவற்றுள்ளும், ஸ்மிருதி, வேதத்தைப்போலவே யுள்ளது: இதிஹாஸபுராணங்களே யாவரும் ஓதியும் கேட்டும் அறிதற்கு ஏற்றனவாம். இவை வேதத்தின்பொருளை வளர்ப்பன என்ற காரணத்தால் உபப்ரும்ஹணங்க ளெனப்படும்: உபப்ரும்ஹண மென்ற சொல்லுக்கு வளர்ப்பது என்று பொருள். வேதோபப்ரும்ஹணங்களான இதிஹாஸபுராணங்களுள் இதிஹாஸங்களே சிறந்தனவாதலால், 'இதிஹாஸபுராணங்கள்' என்று புராணங்களுக்கு முன் இதிஹாஸம் வைத்து, வழங்கப்படுவதாயிற்று.

இதிகாஸமென்பது பழையதொரு சரித்திரத்தைப் பலகிளைக் கதைகளைக்கொண்டு கூறுவதாம். அங்ஙனமுள்ளவை பாரதமும் இராமாயணமுமே யென்பது யாவரும் உடன்பட்ட பொருளாம். அந்தப் பாரதம் நம் தமிழ்மொழியில் வழங்குவதே நம்நாட்டாரால் போற்றுதற்கு உரியது. இவ்வாறுகிய தமிழ்ப்பாரதம் எளியநடை வாய்ந்ததாய், மிடுக்குள்ளதாய், உள்ளும் புறம்பும் பொலிந்திலங்குஞ்சுவையுடையதாய், யாவராலும் போற்றப்படுவதாய், நம் வில்லிபுத்தூராராற் கௌடநெறியாற் பாடப்பெற்றுள்ளது.

இது எளியநடையை யுடையதேயாயினும் வடமொழி மிகக் கலந்திருத்தலால், தென்மொழியறிவோடு வடமொழியறிவும் இல்லாதவர்க்கு உண்மைப்பொருள்காண்டலரிது: ஆகவே, அப்படிப்பட்டதற்குஉண்மைப்பொருள் விளங்க உரைஇன்றியமையாதது. இத்தகைய உரை, காலஞ்சென்ற எனது ஆசிரியன்மாரான ஸ்ரீ. உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமிகளாலும், ஸ்ரீ. உ. வே. சே. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமிகளாலும் பலபகுதிகட்கும் இயற்றி முன்னரே அச்சிடப்பட்டது: யானும் சில பகுதிக்கு அவர்களுடனிருந்து உரையெழுதிப் பழகியதுண்டு. அங்ஙன் வெளியிட்ட பகுதிகள்-சபாபருவம் பீஷ்மபருவம் துரோணபருவம் கர்ணபருவம் சல்லியபருவம் சௌப்திகபருவம் என்பனவாம்.

இதுவரையும் வெளிவாராதவை, ஆதிபருவமும் ஆரணிய பருவமும் விராடபருவமுமே. (இவற்றிலும் பலசருக்கங்கட்கு முன்னரே அவர்களெழுதி வெளிப்படுத்திய உரை உண்டு.)

அவற்றுள் உரையில்லாத பகுதிகளாகிய தற்சிறப்புப்பாயிரம் குருகுலச்சருக்கம் சம்பவச்சருக்கம் என்ற இவைகட்குப் புதிதாக உரையெழுதிச் சேர்த்தும், உரையுள்ள பகுதிகளைப் பார்வையிட்டுச் சில திருத்தங்கள் செய்தும் சங்கப்பதிப்பிலுள்ள பாடல்களோடு ஒத்துப்பார்த்து அப்பதிப்பிற் சிறப்புற்றிருந்த பாடல்களை மேற்கொண்டும் வியாசபாரதம் பாலபாரதம் என்ற இவைகட்கும் இந்நூற்கும் உள்ள ஒற்றுமைவேற்றுமைகளை ஆங்காங்குக் குறிப்பிட்டும் மூலமும் உரையுமாக இந்த ஆதிபருவத்தை வெளியிட்டுள்ளேன். இந்நூலாசிரியரின் குமாரராகிய வரந்தருவார் இயற்றிய சிறப்புப்பாயிரப் பாடல்களையும் முகப்பிற் குறிப்புரையோடு வெளியிட்டுள்ளேன். இப்பதிப்பில், **அரும்பதவகராதி முதலியன, அபிதானசூசிகையகராதி, சில அருந்தொடர்கள், செய்யுள் முதற்குறிப்பகராதி** என்பனவும் இறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன.

**வில்லிபாரதத்தின் முதனூலைப்பற்றிய ஆராய்ச்சி:**—'வில்லிபுத்தூரார் பாடிய இந்தப்பாரதம், வியாசபாரதத்தை முதனூலாக்கொண்டதென்று நூலாசிரியரே கூறியிருந்த போதிலும், வடமொழியில் அகஸ்தியபட்டரென்பவரியற்றியுள்ள **பாலபாரத** மென்னும் காவியத்தின் பொருளமைதியோடு பலவிடத்தும் ஒத்திருக்கின்றது: ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து இந்நூலுக்கும் அந்நூலுக்கும் இடையிடையே பலவேறுபாடுகளும் உள்ளனவாயினும் சிற்சிலவிடங்களில் இந்நூல் அந்நூலின் மொழிபெயர்ப்பென்றே சொல்லலாம்படி யுள்ளது' என்று கூறி, இற்றைக்கு நாற்பத்துஏழு வருடங்கட்குமுன் பரமபதித்த எனது ஆசிரியர் ஸ்ரீ. உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமி தாம் பரமபதிப்பதற்கு ஏறக்குறைய இருபது வருஷங்கட்கு முன்னர்க் கண்டுபிடித்து வெளியிட்டுள்ளார். உதாரணங்களும் ஆதிபருவசரிதத்தைக் கூறுமிடத்தினின்று காட்டியுள்ளார். இவ்வுண்மையை நூல் முழுவதும் ஒப்பிட்டுப்பார்த்துக் கண்டறியவேணுமென்ற அவாத்தோன்றியும், பார்த்தற்குப் புத்தகமும் அவகாசமும் கிடைக்காமலிருந்தன. இந்த ஆதிபருவத்தை முதன்முதலில் அச்சிடத்தொடங்கியபோது அந்நூல் கிடைத்தமையால், ஆதிபருவம் முழுவதையும் ஒப்பிட்டுப்பார்த்தேன்.

பாலபாரதமென்பது வடநூல் அகஸ்தியகவியினால் வடமொழியிற் பாண்டவசரித்திரத்தைத் தொகுத்துக் கூறும் பத்தியகாவியமாகும்: அது-இருபதுசருக்கங்களைக் கொண்டது. குலமுதல்வனான சந்திரன் பிறப்புமுதல் பாண்டவர் மேலுலகஞ் சேர்ந்தது வரையிலுமுள்ள சரித்திரம்முழுவதையும் தொகுத்துக்கூறுவது. அவற்றுள் முதலாறுசருக்கங்கள், ஆதிபருவத்துச் சரிதையைக் கூறுவனவாகும். இந்த ஆறுசருக்கங்களையும் ஊன்றிப்படித்துப் பார்த்ததில் அப்பாரதத்தின் மொழிபெயர்ப்பு வில்லிபாரதமென்று சொல்லலாம். முக்கால்பகுதி பாலபாரதத்தோடு ஒத்துள்ளது. ஆனால், காண்டவதகனச்சருக்கத்திலோ ஒன்றுக்குப் பாதிதான் அங்ஙன்சொல்லத்தக்கது: மற்றவை வில்லிபுத்தூரார் தமது கற்பனாசக்தியினால் உரைத்த பாடல்களாகும். மொழி

பெயர்ப்பான பாடல்களும், புதிதாகக் காண்பவர்க்கு மொழி பெயர்ப்பு என்று தோன்றாதவாறு இயற்கையாகவே அமைந்தன போலத் தோன்றுகின்றன. இங்ஙன் பாடிய வில்லிபுத்தூரார் திறம் மிகவும் பாராட்டற்குரியது.

ஆயினும், வில்லிபுத்தூராரின் பாரதம்முழுவதும் பாலபாரதத்தின் மொழிபெயர்ப்பாகவே அமைந்ததென்று சொல்ல இயலாது.- இந்த ஆதிபருவத்தைப் பாலபாரதத்தோடு ஒப்பிட்டுப் பார்த்ததும் இறுதிப்பருவங்கட்கும் பாலபாரதத்துக்கும்ஒற்றுமை வேற்றுமை யெவ்வாறு உள்ளன என்றுகவனித்து நோக்கினேன். வில்லிபாரதத்திற் காணப்படும் இறுதிப்பருவங்களாகிய சல்லிய சௌப்திகபருவங்களிற்கூறிய கதைப்பகுதியைக் கூறுவது, பாலபாரதத்திலே 78-சுலோகங்களைக் கொண்ட பதினெட்டாஞ்சருக்கமாகும். அந்தச்சருக்கத்தில், கூறியுள்ளனவான — சல்லியன் சேனாதிபதி யானது, சல்லியன் சகதேவனால் மாண்டது, துரியோதனனை வீமன் கொன்றது, க்ருஷ்ணனுடைய தூண்டுதலால் பாண்டவர்கள் வேற்றிடத்திலிருக்க அசுவத்தாமன் த்ருஷ்டத்யும்நன் முதலானோரைக் கொன்றது என்றாற் போன்ற சில விஷயங்கள் தவிர, மற்றைவர்ணனைகள் கதைப்போக்குக்கள் யாவும் பாலபாரதத்தோடு சிறிதும் ஒற்றுமைப்படாது வில்லிபாரதத்தில் வேறுபட்டே யுள்ளன. மற்றும் ஆங்காங்குத் தள்ளிப் பார்த்தபோதும் வேறுபட்டுள்ளதாகவே காண்கின்றது. இன்னும் முற்றவும் ஒத்திட்டுப்பார்க்க வசதி நேர்படவில்லை.

இங்ஙனிருப்பதுகொண்டு நான் ஊகிப்பது—மிகவும் பெருகியிருந்த பாரதகதையைச் சுருக்கிக்கூறவிரும்பிய வில்லிபுத்தூரார் பாலபாரதமென்ற வடமொழிக்காப்பியம் முதற்கதைப்பகுதியை இனிதுசுருக்கிக் கூறியிருப்பது கண்டு அதனையொட்டி நூலைத் தொடங்கினார்: பின்னர்த் தம்விருப்பின்படியே இந்நூலைப் பாடினாரென்பது.

இனி, பாலபாரதந்தான் வில்லிபுத்தூரார் பாரதத்தை யொட்டிச் சில விடத்து எழுதப்பட்டதென்று கூறலாகாதோ என்று கற்போர்க்கு ஓரெண்ணம் உண்டாகலாம்: அந்தஎண்ணத்தை மாற்றுவதற்கு மூன்று காரணங்கள் உள்ளன.

முதலாவது-பாலபாரதத்துக்கூறிய வருணனையை வில்லிபுத்தூரார்பின்னும் சிறப்புறக் கூறுவது: அங்ஙன் கூறுவதற்கு உதாரணம்வருமாறு:—பொழுது விடிதலை வருணிக்குமிடத்துப் பாலபாரதத்தில் ''உந்மிஷத்யுஷஸி தஸ்ய ரக்ஷஸோ-ரக்தமுஷ்ணமிவ பாதுமுத்ஸுகா: | ஸ்வாப மாகலித மாங்காத்யயம்-வாஸவ்ருக்ஷமத தத்யஜு: ககா: [இரவுபுலரும்வரைத் தாம் கொண்ட துயிலை விடியல்நேரம் வந்தபோது விட்டிட்டு அந்த ராக்ஷஸனுடைய வெம்மையுள்ள இரத்தத்தைப்பருகுவதற்கு ஆசை யுற்றனபோற் பறவைகள் தம்வாழிடமான மரத்தைவிட்டன]," ''தாவதுத்திதகரஸ் தமோமயம்-ராக்ஷஸம் விசகலய்ய பாநுமாந் | பீமஸேநஇவ பார்த்தமாநஸாநீ-அம்புஜாநி தத்ருசே விகாஸயந் [அப்போதுஎழுந்தகரங்

களை யுடையவனுய்த் தமோமயராக்ஷஸனைச் சிதறவடித்துக் கதிரவனுனவன் பீமஸேநன்போன்று பிரஜையின்மக்களுடைய மனத்தைத் தாமரைகள் போல மலர்த்தியவண்ணம் தோன்றினுன்]" என்று கூறியிருப்பதை, வில்லிபுத்தூரார் "பெருந்திறனிசா சரப்பிணத்தை யவ்வனத், திருந்துளபறவைகட் கிருள்செய்கங்குலின், விருந்திடக் கொளுத்திய விளக்கெனும்படி, யருந்திசை பொலிவுற வருக்கன் ருேனறினுன்", "கரங்களானிசாசரவிருளைக்காய்ந்துகொண், டிரங்கி நீள வனத்திடையிரவின்மாழ்கிய, வரங்கொடாமரை முகமலர்த்து நீர்மையால், உரங்கொள் வீமனுக்கெதிருதயபானுவே" என்று பின்னுஞ்சிறப்புறக் கூறியிருப்பதும்; காண்டவவனத்தை அக்கினி பகவான் எரிக்க மேகம் மழைபொழிந்ததைக் கூறுமிடத்து "உபரிஜ்வலநஸ்யத்ருச்ய மாநா: ஹ்ருஷிதைராவத ஹஸ்ததண்டதைர்க்யா: | விததுர் ஜகதண்ட மண்டபஸ்ய-ஸ்படிக ஸ்தம்பதியம் கநாம்பு தாரா: [ஐராவதயானையின் துதிக்கைபோல் நீண்டனவாய் அக்கினிக்கு மேலே காணப்படுவனவான மேகதாரைகள் ஜகதண்டமாகிய மண்டபத்தின் ஸ்படிகஸ்தம்பமென்ற எண்ணத்தை யுண்டாக்கின] என்று கூறியிருப்பதை, "மண்டிமீதெழுந்த வன்னியின்சிகைக ளிந்திரன மதலைவாளிகளாற், கண்டகூடத்திற்கமைத்த செம்பவளக் காண்டகுதூண்டிரள் காட்ட, அண்டகூடத்திற் கிந்திரன் பளிங்காலமைத்த பல்லாயிரகோடி, சண்டதூணங்கள் போன்றன பரந்து தனித்தனி முகில்பொழி தாரை" என்று பின்னும் நலமுறக்கூறியிருப்பதுங் காண்க. இரண்டாவது- வைஷ்ணவராயிருக்கிற இந்த வில்லிபுத்தூரார் "ப்ரணமலக்நோநலலாடபஸ்மநா-ப்ருசம் பவித்ரீக்ருதபாதபங்கஜா" என்று அகஸ்தியபட்டர் கூறியதை யொட்டி "தொழுது நெற்றியில் விபூதியாலன்னை தன் துணையடித் துகளீக்கி" என்று வியாசமுனிவரை நெற்றியில் விபூதியணிந்திருப்பவராகக் கூறியது. மூன்ருவது-கி. பி. 1232-1323 இல் தெலுங்குதேசத்தில் அரசாண்ட காகதியபிரதாப ருத்திரனுடைய காலத்திலிருந்தவர்பாலபாரதத்தின் நூலாசிரியராகிய அகஸ்தியபட்டரென்று ஆராய்ச்சியாளர் அகஸ்தியகவியின் காலத்தை நிர்ணயித்திருப்பது: இது நிற்க.

சுருக்கமுறப் பாரதகதையைக் கூறவேணுமென்றுகருதி முதலிற் பாலபாரதத்தையொட்டிப் பாடிய வில்லிபுத்தூரார் சிலவிடத்து வியாசபாரதத்தையே யொட்டியும் கூறியுள்ளார்: என்ருலும், சிலவிடத்து வியாசபாரதம் பாலபாரதம் என்ற இரண்டிலும் ஒற்றுமைப்பட்டுள்ளவற்றை வேறுபடுத்தியுங் கூறியுள்ளார்: இவ்விஷயம் பலவும் உரையில் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ளன. இவ்வாறு இருப்பதனுல்தான் வில்லிபுத்தூரார், தமது நூலுக்கு வியாசபாரதமே முதனூலென்று கூறியுள்ளார். அது தக்கதே யாகும்.

இந்நூலைப்பாலபாரதத்தோடுவைத்து ஒற்றுமை வேற்றுமைகளைக் கவனிக்குமாறு அந்நூலின் பிரதியைத் ,தமது நண்பரிடத்தினின்றுவாங்கி உதவியதுமன்றி, அந்நூற்பொருளை உடனிருந்து ஆராய்ந்தும் உதவிய ஸ்ரீ. உ. வே. H. சேஷய்யங்கார் (ரிடைர்டு மதருஸ் யூனிவர்ஸிடி, கன்னட அஸிஸ்டெண்ட்லெக்சரர்) ஸ்வாமி

விஷயத்தில் நன்றியறிதலோடு என் பணிவைக் காட்டுவதன்றி வேறு கைம்மாறிலேன்.

இந்நூலை 18-யாண்டுகட்குமுன் முதன்முறை அச்சிடும்போது ஒத்துப் பார்த்தல் முதலிய உதவிகள் புரிந்த விவேகாநந்தா கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் ஸ்ரீமான். கோ. ஜகந்நாதாசார்யர், M.A.L.T., அவர்கட்குச் செந்தமிழ்ச்செல்வமும் பல்வகைநலனும் பெருகுமாறு திருமால் அருள்புரிவாராக.

அச்சகத்தாருடைய அக்கறையின்மையென்ன அசாக்கிரதையென்ன இவைகளாலும் என்னுடைய சோர்வாலும் பல பிழைகள் ஏற்பட்டமைக்கு மிகவும் வருந்துகிறேன். புள்ளியிடாமை அரைப்புள்ளி கோடிடல் முதலிய விடுபடுகை மாறுபடுவது என்றாற் போன்ற சிறு சிறு பிழைகளை வாசகர்களே எளிதிற் கண்டுபிடிக்க இயலுமென்ற காரணம்பற்றி அவைகளைப்பிழைத்திருத்தத்திற் காட்டவில்லை: முக்கியமான பல பிழைகள் பிழைத்திருத்தத்திற் காட்டப்பட்டுள்ளன. அவைகளை வாசகர்கள் முதன்முதலில் திருத்தியமைத்துக் கொள்ளின் நலமாம்.

இதிலுள்ள குற்றங்குறைகளை அறிஞர் தமது நற்பண்பினாற் பொறுப்பதுமன்றி, எனக்கும் அறிவுறுத்துவராயின் அன்னாரிடத்து நன்றியறிதலோடு உரியகாலத்து அவற்றை வெளிப்படுத்துவேன்.

திருமகள்கொழுநனை திருமால் தனது சரிதையாகிய இந்நூலில் அடியேனுக்கு மனம்பதியுமாறுசெய்து இந்நூலின் ஆதி பருவத்திற்கு உரைவெளியிடுதலாகிய இந்தப்பணிக்குத் தோன்றாத் துணையாய் நின்று உதவிய கருணைத் திறத்திலீடுபட்டு அனவரதமும் அப்பரமனை வாழ்த்துகின்றேன்.

ஜயஹூ வைகாசிமீ } இங்ஙனம்

வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யன்.

மூன்றாம் பதிப்பு :-இந்தப் பதிப்பு இரண்டாம் பதிப்பை யொட்டியே அமைந்துள்ளது. எனினும், ஒரோவிடங்களில் சில அரிய விடயங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இந்தப்பதிப்பு அச்சாகுங்கால் அச்சுத்தாளைத் திருத்தல், அரியவிடயம் சேர்த்தல் முதலிய வகையால் பெரிதும் உதவியவர்-விவேகாநந்தர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் C. ஜகந்நாதாசார்யர் எம். ஏ. எல். டி.; இவருடன் துணைபுரிந்தவர்—ஈகை. ஸ்ரீ. E. S. வரதாசார்யர் பி. ஏ., என்பவர். இவ்விருவர்திறத்தும் நன்றியறிதலுடையேன்.

ஹேவிளம்பிஹூ ஆவணிமீ } இங்ஙனம்

வை. மு. நரசிம்மன்.

# நூலாசிரியர் வரலாறு

தமிழில் மகாபாரதமென்னும் பெருங்காப்பியம்பாடிய மகா கவி, வில்லிபுத்தூரா ரென்பவர்; இவர் பிராமணசாதியிற் பிறந்தவர். இவருடைய மதம் திருமண்காப்புத்தரிக்கும் வைஷ்ணவ மென்பது, இப்பாரதத்தின் முதலிலும் இந்நூற்சருக்கங்களின் தொடக்கம் பலவற்றிலும் இவர் ஸ்ரீமகாவிஷ்ணுவின் விஷயமாகவே பலவாறு கடவுள்வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், ''எங்கள்மாதவன்'' என்று நூலைத் தொடங்கியிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வாரெனத் திருநாமமுடைமையாலும், இவர் ஒன்பதாம்போர்ச்சருக்கத்துக் காப்புச் செய்யுளில் ''ஓராறுபேதசமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, னீராறு நாம முரைசெய்து மண்கோடிடுவார்கள் காணுமிமை யோர்'' எனத் துவாதசோர்த்துவ புண்டரத்தைச் சிறப்பித்துக் கூறியதனாலும், பதினேந்தாம்போர்ச்சருக்கத்துக்காப்பில் ''கொத்த விழ்த்த சோலைமன்னு குருகையாதி நெஞ்சிலே, வைத்த முத்தி நாதன்'' என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் 'கலிய னெங்கள் மங்கையாதி கண்டுகொண்ட நாமமே'' எனத் திருமங்கையாழ்வாரையும் கூறியுள்ளதனாலும் தெளிவாகத் தெரியலாம்.

நடுநாடென்று சொல்லப்படுகிற திருமுனைப்பாடிநாட்டில் சனியூரிலே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் வீரராகவாசாரிய ரென்பவருக்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்து* வில்லிபுத்தூ ராழ்வாரென்று இயற்பெயர் பூண்ட இவர் பாரதம்பாடிய காரணம்:— இவர் இளமையிலே நல்லாசிரியரை யடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் மிகவல்லவராய் வடமொழி யிலும் மிக்கதேர்ச்சிபெற்று ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் மிக எளிதில் அமிழ்தினும்இனி யனவாகப் பாடவல்லவராய், சேரசோழபாண்டியரென்னுந் தமிழ் நாட்டு மூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப் பட்டு ஆங்காங்குச் சென்று தமது கல்வித்திறத்தைப் பலவகை யாலுங் காட்டி அவர்களைக் களிப்பித்து, அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பலபெரும்பரிசுகளைப் பெற்று, பற்பலகவிகள் பாடித் திருமாலை இரவும் பகலும் எப் பொழுதுந் துதித்துக்கொண்டு, தமிழ்நாடு முழுவதிலும் தமது கல்விப் பெரும்புகழைப் பரவச்செய்துவந்தார்.

அங்ஙனம் வருகையில், முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே வக்கபாகை யென்னும் இராசதானியில் வீற்றிருந்து செங்கோல் செலுத்திய கொங்கர்குலத்துத்தோன்றிய வரபதியாட்கொண்டா னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்வி கேள்வித் திற

---

* வில்லிபுத்தூராழ்வாரென்பது - ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவ வதரித்த பெரியாழ்வார்க்கு வழங்கும்: அதனையே இவர்க்கு இட்டனரென்க. இச்சொல் வில்லிபுத்தூராரென்றும் வழங்கப் பெறும்.

மைகளைக் கேள்வியுற்று இவரை வரவழைத்து அநேக சன்மானங்கள்செய்து தனது ஆஸ்தானபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரை நோக்கி 'வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரதசரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப் பாடல்களினூற் சுருக்கமுற ஒருபெருங்காப்பியமாகப் பாடித் தந்தருளல் வேண்டும்' என்று பிரார்த்திக்க, க்ருஷ்ணனுடைய சரித்திரம் ஆங்காங்கு வருவதுபற்றி அவ்வேண்டுகோளுக்கு இசைந்து சொறசுவை பொருட்சுவைகள் மிக்குவிளங்கும்படி நல்ல நடையிலே இவ்வில்லிபுத்தூரார் நாலாயிரத்து முந்நூற்றுச் சொச்சம்பாடல்களாற் பாடினூர்.

இவர், தம்காலத்திற் கல்விச்செருக்குஅடைந்திருந்த புலவர்கள் பலரையும் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக, தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாகவைத்துக்கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது, "குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னிங்கில்லை குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி, யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை யிரண்டொன்ரு முடிந்து தலையிறங்கப்போட்டு, வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லை விளையாட்டாக் கவிதைதனை விரைந்துபாடித், தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைக ளுண்டுதேசமெங்கும் புலவரெனத் திரியலாமே" என வழங்குந் தனிப்பாடலினூல் அறியப்படும். இவர் காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும் அன்புவைத்திருந்ததனூல், இவர் இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்து வந்தார்கள்.

இவருடைய காலம்:—பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத்தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று வரபதியாட்கொண்டா னென்னும் அரசனைக் கூறியிருத்தலாலும், அவ்வரசனை இரட்டையர்களும் பாடியிருத்தலாலும், அவ்விரட்டையராற் பாடப்பட்ட இராசநாராயணசம்புவராய னென்பான் கி. பி. 1331-1383 வரை ஆட்சிபுரிந்தானென்று சாசனவாராய்ச்சியாளர் கூறுவதாலும், இவர்காலம் பதினூன்காம் நூற்ருண்டின் இடைப்பகுதியாகுமென்றும், அருணகிரியார் காலமும் இதுவேயென்றுங் கூறுவர்.

இவ்வில்லிபுத்தூரார் சிவத்துவேஷம் பாராட்டுகிற வீரவைஷ்ணவரல்லர்; அது-முதலில் விநாயகஸ்தோத்திரஞ் செய்திருத்தலாலும், அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கத்திலும், அருச்சுனன் தவநிலைச்சருக்கத்திலும் பதின்மூன்ரும்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிரதாயத்துக்கு வழுவுருதபடி சிவபிரானைச் சிறப்பித்தும் இதரதேவர்களைத் தாழ்த்தியுங் கூறியதனூலும் நன்கு புலனுகிறது. வைஷ்ணவராகிய இவர் சிவபிரானைச் சிறப்பிக்குமிடத்துத் தமது பரதேவதையாகிய திருமாலையும் தாழ்த்திக் கூறுவது-தமது காலத்திருந்த அரசரை மகிழ்விக்கவேண்டித் தம்கொள்கையாகவன்றிப் பிறன்கோட்கூறலாகக் கூறியதாகுமென்க. அன்றியும், வியாசர் புராணங்களில் ஒவ்வொரு தேவரை

ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக் கூறியிருத்தல்போலவே, இவரும் தமது நூலில் சூரியன் அக்கினி யமன் முதலிய மற்றைத்தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷபாதமில்லாமற் சிறப்பித்துக் கூறியிருக்கின்றார். தம்மையாதரித்த வக்கபாகைவரபதியாட்கொண்டானை ஆங்காங்கு உபமான முகத்தாற் சிறப்பித்துக்கூறியுள்ளார். அங்ஙன் கூறுவதை இந்த ஆதிபருவத்தில் காண்டவதகனசருக்கத்தில் 69 - ஆம் பாடலிலுங் காணலாம்.

கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய **பெருந்தேவனா**ரென்பவர் பாரதம்பாடியுள்ளார். அந்நூலுள் பழைய உரைகளிற் கிடைக்கின்ற சிலபாடல்களன்றி, மற்றையவை காணப்படவில்லை. பிறகு ஒன்பதாம்நூற்றாண்டில் மூன்றாம் நந்திவர்மன்காலத்திருந்தவராய்ப் பெருந்தேவனாரென்று பெயர்வழங்கப்பெற்ற ஒருவர் மகாபாரதத்தைத் தமிழில் வசனமும் பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப்**பாரதவெண்பா**வென்று பெயர். அதிற் சில பகுதிகளே இப்போது கிடைக்கின்றன. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில்அரும்பாக்கத்துஅருணிலைவிசாகன் பாரதத்தை இனியசெந்தமிழ்ப் படுத்தினன் என்றுதிருவாலங்காட்டுச்சாசனம்கூறும்; இந்நூல்வழக்குவீழ்ந்ததுபோலும்.

இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும் இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின் முடி பொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி, அழியாமரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கண விதிப்படி இவ்வாசிரியராற்பிறநூல் மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல்வேண்டுமென அறிக.

வில்லிபுத்தூரார் தமது பாரதத்திற் பாடியது, முதற்பத்துப் பருவமே; மற்றையெட்டுப்பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்:—நூல் முழுவதையும் பாடினால், பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது மரணசரித்திரத்தைத் தம்வாயாற் சொல்லவேண்டுமேயென்று கருதி, "கனைகடற்பாரளித்து அவரு மங்கரி லறநெறியே கருதிவாழ்ந்தார்" என மங்களகரமாகச் சரித்திரத்தைப் பாடிமுடித்தனரெனக்கொள்வது தகுதியுடையது. பாண்டவசரித்திரங் கூறுகிற பாரதசம்பு முதலிய சில நூல்களிலும் பின்னிட்ட கதை காணப்படவில்லை. (கம்பர் இராமாயணத்தில் உத்தரகாண்டம்பாடாமல் விட்டதற்கும் இப்படிப்பட்ட காரணமே முக்கியமாகும்.) இனி, இந்நூலின் பின்னைய பருவங்களும் இவராற் பாடப்பட்டுப் பிற்காலத்திற் கிடைத்தற்கு அரியவையாயின என்று கொள்வாரு முளர். "கலியுகவியாதன் சொல்லக் கணபதியெழுதுபாடல், பொலிவுறு தமிழிலாருயிரமென விருத்தம் போற்றிச், சலிவற வில்லிபுத்தூரிறைவனுஞ்சார்வபௌம, னொலிகெழுமறையோர்கோமா னுயர்ந்தவரு

வப்பச்சொன்னான்" என ஒருசெய்யுள் வில்லிபுத்தூரார்பாரதத்து ஏட்டுப்பிரதி சிலவற்றில் வரந்தருவார் பாடிய சிறப்புப்பாயிரத்தி னிறுதியிற் காணப்படுகின்றது: இது, பழைய பாடலாக இருக்கு மாயின், இதிற்கூறிய ஆறுயிரம் பாடல்களில் பத்துப்பருவங்களாக வுள்ள நாலாயிரத்துமுந்நூற்றுச்சில்லறைபோக, மற்றவை இவர் பாடிய எட்டுப்பருவங்க ளெனக் கொள்ளலாம்.

வில்லிபுத்தூரார் பாடியபாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் முந்நூறு நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ் செய்யுட்களை யெடுத்துக்கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளை யென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல் பாடி இடையிடையிற் கோத்தும், இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப்பருவங்களையும் பூர்த்திசெய்தார்; அது '**நல்லாப்பிள்ளை பாரதம்**' என வழங்கும்: அந்நூலாசிரியர், இற்றைக்கு நூற்றுநாற் பது வருடங்கட்குமுன் இருந்தவர். இதுதவிர, இற்றைக்கு, 190 வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம்-அரங்கநாதகவிராயர் பாடியபாரதத்தின் பிற்பகுதியும்ஒன்று உளது; அது, ஏறக்குறைய 2500 செய்யுட்களையுடையது. இனி, மாவிந்தம் என்னும் பெயரால் தமிழில் பாரதக் கதையைச்சொல்லும் ஒரு நூலுண்டு என்றும் கூறுப: மற்றும், பழையகாஞ்சிப்புராணஆசிரியர் ஒரு பாரதத்தை இயற்றியுள்ளாரென்று அப்புராணச் சிறப்புப்பாயிரம் தெரிவிக் கின்றதென்றும் அந்நூல் இப்போது கிடைக்கவில்லையென்றும் கூறுப.

இவர்மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடி யிருப்பதாகத் தெரியவில்லை.

இவர் தமது நூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனி மொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்த மானதென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழி பெயர்த்தும் உபயோகித்திருக்கின்றனர். தமிழில் எந்தநூலாசிரிய ரும் வடமொழிகளை இவரவ்வளவு எடுத்துக்கொள்ளவில்லை. வட சொற்களைத் தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர் காலந்தொடங்கித்தான் அதிகமாயிருத்தல்வேண்டும். இவர் பாடல் களில்-உவமை,உருவகம், எடுத்துக்காட்டுவமை,தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல், உயர்வுநவிற்சி முத லிய பொருளணிகள் அமைந்திருப்பதுமாத்திரமேயன்றி, மடக்கு [யமகம்], பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந் திருத்தலையும், இவரது செய்யுள்நடை பலவிடத்தும் முடுகுடைய தாதலையும் பலவகைச்சந்தங்கள் சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும், யுத்தவருணனை எல்லா நூல்களினும் இந்நூலிற் சிறந்திருத்தலையும் காணலாம்.

## நூலாசிரியர் குமாரர் வரந்தருவார்

### பாடிய

### * சிறப்புப்பாயிரம்.

1. பொருப்பிலேபிறந்துதென்னன்புகழிலேகிடந்துசங்கத்து
இருப்பிலேயிருந்துவைகையேட்டிலேதவழ்ந்தபேதை
நெருப்பிலேநின்றுகற்றோர்நினைவிலேநடந்தோரேன
மருப்பிலேபயின்றபாவைமருங்கிலேவளருகின்றாள்.

2. அகத்தியன்பயந்தசெஞ்சொ லாரணங்கம்புசாதன்
முகத்தினில்வாழுமந்தமொய்குழலருளினாலே
பகைத்தெதிர்பொருதெய்வப்பாரதகதையிம்முந்நீர்ச்
செகத்தினில்விருத்தயாப்பாற்செய்கெனச்செய்ததன்றே.

---

* சிறப்புப்பாயிரம் என்பது-ஒருநூலுக்கே சிறப்பாக அமைந்துள்ள பாயிரமென்க. "ஆக்கியோன்பெயரே வழியேயெல்லை, நூற்பெயர்யாப்பே நுதலிய பொருளே, கேட்போர்பயனோடாயெண் பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே," "காலங்களனே காரணமென்றிம், மூவகையேற்றி மொழிநருமுளரே" என்றதனால், பாயிரத்திற் கூறப்படுவன-இவையென அறிக. இந்தச்சிறப்புப் பாயிரத்திற் கூறப்படுவன-பாடினார் இன்னாரென்பதும், பாடக் காரணமு மாகும்.

1. பேதை பாவைமருங்கிலே வளருகின்றாளென்க. ஓரேன மருப்பிலே பயின்றபாவையென்றது-பூமிதேவியை. வராகாவதாரஞ் செய்த திருமால் தன்கோட்டிலே பூமியை யேந்தியமை, புராணப் பிரசித்தம். பேதையென்பது-தமிழணங்காகிய குழந்தையை. பேதை-குழந்தைப்பருவம்: அப்பருவத்துக்கு வயதுஎல்லை-ஐந்து வயதுமுதல் ஏழுவயசுவரையிலும். தமிழைப் பேதையென்றதற்கு ஏற்ப, பிறவி முதலியனகூறினார். பொருப்பு-அகத்தியரின் வாழிடமான பொதியமலை. பாண்டியரே தமிழ்வளர்த்தோ ராதலால், அவர்புகழிலே தமிழ்ப்பேதை கிடப்பாளென்க. மதுரையில் சங்கத்தாரால் தமிழ்மொழி வளர்க்கப்பட்டு வளர்ந்ததனால் 'சங்கத்திருப் பிலேயிருந்து' என்றது. திருஞானசம்பந்தர் சமணருடன் வாது நிகழ்த்திப் புனல் வாதத்தில் அச்சமணரை வெல்லுமாறு "வாழ்க வந்தணர்" என்ற பாசுரத்தை ஓலையிலெழுதி நட்டாற்றில் விட்டபோது அவ்வேடு கரையெதிரேறி வந்தது என்ற சரித்திரத்தை யுட்கொண்டு, 'வையையேட்டிலே தவழ்ந்த' என்றது. அங்ஙனமே நள்ளாற்றுப்பதிகம் எழுதிய ஏட்டை நெருப்பிலேயிட, அப்பதிகம் வேவாதுகிடந்த தென்ற வரலாறுபற்றி, 'நெருப்பிலே நின்று' என்றது. கற்றோர் அத்தமிழ்மொழியைப் பயின்று வருதலால் 'கற்றோர்நினைவிலேநடந்து' என்றது.

2. அம்புசாதம்-தாமரை: அதில்தோன்றியவன்-அம்புசாதன், அம்புயாதன் என்று பாடம் ஓதுவாருமுளர். முகம்-ஈண்டு, முகத்திலுள்ள நா: "கலைமகள்வாழ்க்கை முகத்ததெனினு, மலரவன்" என்றதும் காண்க. மொய்குழல் என்றது சரசுவதியை. பெரும் பான்மைபற்றி, விருத்தயாப்பு என்றது. பாரதகதை செய்கெனச் செய்தது என்பதை, மேலே விளக்குவர்.

வேறு.

3. தேடினரியாவரேகொலெழுவகையானுஞ்சீர்த்தி
நீடினரவரேயென்பர்நீணிலத்துயர்ந்தமாந்தர்
பாடினரியாவர்யாவர்பாடுவித்தார்கொலென்று
நாடினர்தெளியும்வண்ணநவையறநவிலலுற்றேன்.

4. நாணிரைத்தநேகதாரகாகணமாநவமணியுடனவ்விதங்கொள், கோணிரைத்தீரேழ்புவனமும்வலஞ்செய்கொற்றநேமியின்வருகொண்டல், வாணிரைத்திரவிவிதிர்ப்பபோன்மின்னிவான்முகடுறநெடும்பளிக்குத், தூணிரைப்பனபோனந்திமால்வரையின்சூழலிற்றூரைகொண்டதுவே.

5. வம்பருமலருஞ்செம்பொனுமணியுமருங்கெலாநெருங்குமக்குன்றின், உம்பரார்ப்பெழப்பாரளவுநின்றேங்கியுள்ளுறத்துள்ளிவீழருவி, அம்புராசியைமான்மந்தரஞ்சுழற்றியமுதெழக்கடைந்தநாளதற்குத், தம்பமாமதியையதனுடன்பெயர்த்துச்சார்த்திவைத்தென்னலாந்தகைத்தே.

---

3. தடாகபிரதிஷ்டை, தநநிக்ஷேபம், அக்கிரகாரபிரதிஷ்டை, தேவாலய பிரதிஷ்டை, நந்தவன பிரதிஷ்டை, பிரபந்தநிர்மாணம், ஸத்திரபிரதிஷ்டை என்ற இவ்வேழுவகையால் கீர்த்தியைத் தேடுவர்: இவை 'ஸப்தஸந்தாநம்' எனப்படும். இவ்வேழுவகையிற் பிரபந்தநிர்மாணத்தாலாகிய புகழ், பாடுவார்க்கு உரியதாகும்: அப்புகழைப் பெற்றவர் இன்னாரென்று கூறத்தொடங்கியவர் அதனைச் செய்வித்தாராகிய பாடுவித்தாரையும் உடன்கூறலுறுகிறாரென்க. நவையற-குற்றமில்லாமல்: செவ்வனே. நவிலல்-சொல்லுதல்.

4. நூலாசிரியர் தோன்றிய திருமுனைப்பாடிநாட்டினைப் பற்றிக்கூறலுற்று ஆங்குப்பாயும் பெண்ணையாறு நந்திமலையில் தோன்றுவதைக் கூறுகின்றார்: நாள்-அசுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களை. நிரைத்து-ஒழுங்காக உண்டாக்கி: (அவற்றோடு), தாரகாகணம் ஆம் நவ மணியுடன்-நட்சத்திரக் கூட்டங்களாகிய புதிய இரத்தினங்களோடு. நவமணியென முறை நவின்ற என்றூ பிரதிபேதம். நவவிதங்கொள் கோள் - ஒன்பதுவகையான கிரகங்கள்: அவை-சூரியன் முதலியன. இவற்றால்எல்லாப்பொருட்கும் ஆதிகாரணன் திருமாலே யென்று தெரிவித்தவாறு. வலஞ்செய்-பிரதட்சிணஞ் செய்கின்ற: ஈரேழ் புவனத்தவரும் உய்யுமாறு திருமாலை வலஞ்செய்கின்றனரென்க. நேமி-சக்கரப்படை: அதையுடைய திருமாலுக்கு, ஆகுபெயர். திருமால்போல் வருகின்ற கொண்டலென்க: கொண்டல்-நீரைக் கொண்ட மேகம். நேமியின் வரு-மேருமலையினின்று வருகின்ற என்றுரைரு முளர். இரவிபோன்ற பேரொளி படைத்த வாளை நிரைத்து விதிர்ப்பபோல் மின்னியென்க. மழைத்தாரை-பளிக்குத்தூணை யொக்கும். நந்திமால் வரை-குடகுமலை: இது பெண்ணையாறு தோன்றும் மலையாகும்.

5. வம்பு-வாசனை. உம்பர்-மேலிடம். ஆர்ப்பு - ஆரவாரம். உம்பருடெழ என்றும்பாடம். உள்ளுற-(கண்டோர்) மதிக்க. அம்பு

6. வெண்ணெயேகமழும்பவளவாய்விமலன்மெய்யெனக் கருகிமெல்லியலார், கண்ணேயேயனையநெடுங்கடன்முகந்துக கனமுந்திசைகளும்விழுங்கிப், பண்ணைசூழ்ந்திலகுந்திருமுனைப் பாடிப்பழையநாடனைத்தையுமொருதன்,பெண்ணையேகொண்டு போகமுய்த்திடுமாற் புயலெனும்பெயருடைப்பெரியோன்.

7. தொடுத்தநாண்மலர்வேய்ந்தகிலளைந்துந்திச்சுழிவயினில ங்கமெய்த்தனங்க, ளெடுத்துமேல்வீசிமணிமருங்கலையவினங் கொள்வண்டொடுசிலம்பிரங்க, அடுத்தநீள்சுரதமகளிரிற்றடங்க ணிறஞ்சிவப்புறக்கரையழிந்து, படுத்தபேரணைப்போர்புரிந்த தாலந்தப்பண்ணையங்கானல்சூழ்பெண்ணை.

8. அவ்வைபாடலுக்குநறுநெய்பால்பெருகியருந்தமிழறிவி னுற்சிறந்து, பௌவநீராடைத்தரணிமான்மார்பிற்பயிலுமுத் தரியமும்போன்று, மொய்வரால்கெண்டைவாளைசேன்மலங்கு முதலியசனமெதிர்கொள்ளத், தெய்வமாநதிநீர்பரக்குநாடனைத் தத்திருமுனைப்பாடிநன்னாடு.

---

ராசி-இங்கே, பாற்கடல். மலையைச்சார்ந்த அருவி, மந்தர மலை யைச்சார்ந்த அடைதூணுனமதியையொக்குமென்க: **தற்குறிப்பேற்றம்.** வைத்து-வைத்தால்: எச்சத்திரிபு.

6. முகில்பெய்தலால் நந்திமலையில் அருவிபெருகிப் பின் னர்ப் பெண்ணைமாநதியாய் அம்முனைப்பாடி நாட்டிற்பாய்வது கூறப்படுகின்றது. மாற்புயலெனும்-கரியபுயலென்கிற. விமலன்-திருமால். ககனம்-ஆகாயம். திக்குத்திசைதெரியாமல் மேகம் கவிந்துகொள்வதை 'ககனமுந்திசைகளும்விழுங்கி' என்றார். பண்ணை-வயல். திருமுனைப்பாடிநாடு என்றது-நடுநாடு. பெண்ணை யேகொண்டு - பெண்ணையாற்றைக்கொண்டு மகளைக்கொண்டு என்றும், போகம்-விளைவு இன்பம் என்றும் இருபொருள்தரும்.

7. இது அப்பெண்ணை அணைக்கட்டையுமுடையதாதல் கூறும். பண்ணை அம் கானல்-வயல்களோடு அழகிய சோலைகளை யுடைய பெண்ணையென்க. பெண்ணைநதியைச் சுரதமகளிர்க்கு ஒப்பாகக்கூறுகின்றார்: **சிலேடையுவமை:** மகளிர்க்குச்சேரும்போது,— அகில் - அகிற்புகை. உந்திச்சுழி-கொப்பூழாகிய சுழி. வயின்-வயிறு. தனங்கள்-கொங்கைகள். மருங்கு-இடை. மருங்கு அலைய மணி [ஆபரணங்களை] மேலெடுத்துவீசி. வண்டு-கைவளை. தடங் கண்-பெரிய கண். கரையழிந்து- வரம்புகடந்து. அணை போர்-அணையிற் செய்யும்போர்: கலவிப்போர். பெண்ணைநதிக்கு ஆகும் போது,—அகில்-அகிற்கட்டைகள். உந்திச்சுழி வயின் இலங்க-உந்திபோன்ற சுழி இடங்கடோறும் இலங்க. மெய்த் தனம்-உண் மையாகியபொன். மணி-நவமணி. மருங்கு-பக்கம். சிலம்பு இரங்க-மலை எதிரொலிசெய்ய. தடங்கள்-வாவிகள். கரை யழிந்து-கரை கடந்து. படுத்த-கட்டப்பட்ட. பேர் அணை - பெரிய அணைக்கட்டு.

8. திருமுனைப்பாடிநாடு பெண்ணை நீர்பாயப்பெறுவதென் பது. உத்தரியம்போல்வது பெண்ணைநதியென்க. ஔவை பாட

9. பாவருந்தமிழாற்பேர்பெறுபனுவற்பாவலர்பாதிநாளிர வின், மூவருநெருக்கிமொழிவிளக்கேற்றிமுகுந்தனைத்தொழுத நன்னாடு,தேவருமறையுமின்னமுங்காணாச்செஞ்சடைக்கடவுளை ப்பாடி, யாவருமதித்தோர்மூவரிலிருவர்பிறந்தநாடிந்தநன்னாடு.

வேறு.

10. அந்தத்திருநாட்டந்தநதி யமுதம்பெருகியிருகரையுஞ்
சந்தத்துடன்காரகில்கமழத்தடங்காவகஞ்சூழ்தடநிறைப்பக்
கந்தக்குவளைமேய்பகட்டின்காலானெரிந்துகதிர்முத்தஞ்
சிந்தச்சிந்தக்கொழுமுனைக்குமுன்னேருழுவசெய்ச்சங்கம்.

11. கொழுநீர்மதுவுண்கடைசியர்தங்குழைதோய்விழியினெழு நிழலைக், கழுநீர்மலரென்றொருபகலுங்காலான்மயக்கிக்களைது வைப்பார், முழுநீளுடுதமதுநிழன்முழுதுங்கண்டுதொழுதிறைஞ் சிச், செழுநீரரமங்கையரென்றுதிகைப்பார்நகைப்பார்செறு வெல்லாம்.

---

ளுக்குப் பெண்ணைநதி நெய்பால் பெருகிய சரிதை, அருச்சுனன் *தீர்த்தயாத்திரைச் சருக்கத்து 16-ஆம் பாடலினுரையிற் கூறப் படும். ஔவைபாடலுக்குப் பெருகியதனால், அருந்தமிழறிவினாற் சிறந்து என்றது. முதலிய சனம்-முதலியவற்றின் திரள்; முதலிய வற்றைச் சனங்கள் என்று கூறுதலும் ஒன்று.

*9.* இது அந்தத் திருமுனைப்பாடி நாட்டிற்குள்ள வேறு வகைச் சிறப்பைக் கூறுவது. பாவலரென்றது-பொய்கையாழ்வார் பூதத்தாழ்வார் பேயாழ்வார் என்ற மூவரை: இவர்கள் முதலாழ் வார்களென்றுங் கூறப்படுவர். இவர்கள் சரித்திரமும் தீர்த்த யாத்திரைச்சருக்கத்து 16-ஆஞ் செய்யுளிலுள்ளது. நான்காமடி யிற்குறிக்கப்பட்ட மூவர்-தேவாரம்பாடிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திகள். திருநாவுக்கரசரும் சுந்தரமூர்த் திகளும் இந்நாட்டில் முறையே திருவதிகை திருவெண்ணெய் நல்லூர் என்ற ஊரில் தோன்றியவராவர். காணாச்செஞ்சுடர்க் கடவுளை என்றும் பாடம்.

*10.* யாற்றுநீர்ப்பாய்வதனாலானநீர்வளவருணனை. அமுதம்-நீர். சந்தம்-சந்தனம். தடங்காவகம் சூழ் தடம்-பெரியசோலையி னுள்ளிடத்திற் சூழ்ந்திருக்கும் தடாகம். பகடு-எருமைக்கடா. செய்ச்சங்கம்-கழனியிலுள்ள சங்குப்பூச்சிகள். முத்தஞ்சிந்த ஏரு ழுவதுபோல உழுவன என்க. முன்னேயுழவுசெயுஞ்சங்கமென்றும் பாடம்.

*11.* இதுவும் அது: ஒருபகலும்-களைபறிக்கும் ஒவ்வொரு பகலிலும். களை துவைப்பார்-களைபறிப்பவராகியமகளிர். மயக்கித் திகைப்பாராய் நகைப்பாரென்க. செறு-வயல்.

12. கரும்புங்கமுகுந்தலைதெரியாக்கழனிச்செந்நெற்களையாகி
யரும்புங்குவளைநறுமலர்த்தேனாறுயெங்குஞ்சேறாக
விரும்புஞ்சுருதியிசைகேட்டுவேலைக்கழிக்கானலங்கைதை
சுரும்புந்தும்பிகளுமருந்தமாறுதென்றுஞ்சோறிடுமால்.

வேறு.

13. கம்பலைக்கழனிச்சேனைக்காவலர்கரங்கணீக்கிப்
பைம்புலத்துழுநர்தங்கள்பலவகைவிளைவுமீட்டி
ஐம்புலத்தவர்க்குமீந்தாங்கறத்தினைவளர்த்தலாலே
செம்புலக்கிழத்திக்காவியன்னதச்செல்வநாடே.

வேறு.

14. எண்ணுமாகடலேழுமன்றிருகடலாகப்
பெண்ணைமாநதிநறுநெய்பால்பெருகுமப்பழனப்
பண்ணைநீள்வளம்பல்குசீர்ப்பழையநன்னாட்டில்
வண்ணநான்கினுமுயர்ந்துளோனொருமுனிவந்தான்.

15. ஐந்துபாவுடைநால்வகைக்கவிக்கதிபதியாய்
வந்துவட்டமாமணியிலான்மணிமுடிபுனைந்து
பைந்துழாய்முடிப்பரமனைப்பலகவித்துறையுஞ்
சிந்தையான்மொழிந்தன்பர்தந்திருவுளம்பெற்றோன்.

---

*12.* **நீர்வளத்தாலான நிலவளம்:** தலைதெரியா-வேற்றுமை தெரியாத. கானல்-கடற்கரை. கைதை-தாழை: இதனிடத்து ஒருபிரபுவின் தன்மை தொனிக்கும். சுருதியிசை-சுருதியோடுகூடிய இசை. சோறு-உணவு என்ற பொருளும்தோன்றும்: தாழையினுட்பகுதி சோறு எனப்படும்; மகரந்த மென்றுரு முளர்.

*13.* **நாட்டுச்சிறப்பு:** சேனைக்காவலர்கரங்கள்-சேனையையுடைய மன்னவர்க்கு உரிய வரிப்பொருள்கள். ஐம்புலத்தவர்-தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்பவர். புலக்கிழத்தி-நிலமகள்.

*14.* **அந்நாட்டில் வில்லிபுத்தூரார் தோன்றியமை:** வண்ணம்நான்கு-பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்பன. கடலேழு-உவரி கருப்பஞ்சாறு தேன் நெய் தயிர் பால் நன்னீர் இவற்றின் மயமானவை.

*15.* **மூன்று கவிகள் வில்லிபுத்தூராரின் சிறப்பு:** ஐந்துபா-வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா மருட்பா என்பன. நால்வகைக் கவி-ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்பன. கவிக்கதிபதியாதற்கேற்ற முடிபுனைந்துள்ளானென்க. அன்பர்தந் திருவுளம் பெற்றோன் என்றது, திருமாலடியார்களால் இவன் சிறந்த அடியவனென்று மதிக்கப்பெற்றவனென்றபடி.

16. தென்னர்சேரலர்செம்பியரெனப்பெயர்சிறந்த
மன்னர்மூவரும்வழங்கியவரிசையாலுயர்ந்தோன்
முன்னரெண்ணியமுத்தமிழ்ப்பாவலரெவரும்
பின்னர்வந்தொருவடிவுகொண்டனரெனப்பிறந்தோன்.

17. தாரகாயனவண்டலைதண்டலைச்சனியூர்
வீரராகவனருள்பெறுவில்லிபுத்தூரன்
ஊரராமுடிமண்மிசையுயர்புகழ்நிறுத்தித்
தீரகாகளம்பெறுதலின்யாரினுஞ்சிறந்தோன்.

வேறு.

18. எங்குமிவனிசைபரப்பிவருநாளில்யாமுரைத்தவிந்த நாட்டிற், கொங்கர்குலவரபதியாட்கொண்டானென்றொரு வண்மைக்குரிசிலோடின்றி, வெங்கலியின்மூழ்காமற்கருநடப்பேர் வெள்ளத்துவிழாமனொன்காஞ், சங்கமெனுமுச்சங்கத்தண்டமிழ் நூல்கலங்காமற்றலைக்கண்டானே.

19. மற்றவனிப்புவியாளும்வளவனுக்குமுடிகவித்துவழு தித்தெவ்வைச், செற்றவனுக்கவனியெல்லாஞ் செங்கோன்மை நிலைபிட்டுச்செல்வமெல்லாம், கற்றவருக்கிருகையுடைக்கற்பகம் போலினிதளித்துக்கமலமாதுங், கொற்றவையுமனங்களிப்பத் தன்னுமமேருவினுங்கோட்டினனே.

---

16. தென்னர்-பாண்டியர். கேரளரென்றும் பாடம். செம்பியர்-சோழர். வரிசை-சிறப்பு. முன்னர்-முற்காலத்து.

17. தார காயன வண்டு-தாரமென்ற இசையைப் பாடவல்ல வண்டு. காயணவண்டு என்று படிப்பாருமுண்டு. தாரகாகண வண்டு என்றும் பாடம். அலை-சஞ்சரிக்கின்ற. தண்டலை-சோலை. தீரகாகளம் - மனத்திண்மையைக் காட்டும் வெற்றிச்சின்னம். தகப்பனார் பெயர் வீரராகவனென்பது இதிற் பெறப்படும்.

18. நான்குகவிகள் வில்லிபுத்தூராரைக் கொண்டு பாரதம் பாடுவித்த வரபதியாட்கொண்டான் சிறப்புக் கூறும். நடுநாடு, மாகதக்கொங்கு எனப்படும்: அதனையாண்டவர் கொங்கர்: அக் கொங்கர்குலத்துத் தோன்றியவன் வரபதியாட்கொண்டானென்ற அரசன். கலி-வறுமை. அடுத்துள்ள கருநாடநாட்டினுள் வழங்கும் கன்னடபாஷையில் மனம்பதியாமல் செந்தமிழ்ப்பாஷையிலேயே அன்னான் மனம் பதிந்ததனால், 'கருநடப்பேர் வெள்ளத்து விழாமல்' என்றது. முதலிடை கடைச்சங்கமென்று மதுரையில் வழங்கிய சங்கங்களில் அரங்கேறிய தமிழ்நூல்களை நிலைகலங்காமற் பாதுகாத்துத் தன்னாட்டில் நான்காஞ்சங்கமென்னுமாறு புலவர் கூட்டத்தைத் திரட்டியிருந்தனன் அந்தமன்னவனென்க.

19. வழுதித்தெவ்-பாண்டியனாகிய பகைவன். கொற்றவை-வீரலட்சுமி. கோட்டினான்-எழுதினான். இச்செய்யுளின் குறிப்பினால், சோழவரசர்க்குக் கீழ்ப்படிந்து அவனதுபகைவரையோட்டிய சிற்றரசன் இந்த வரபதியாட்கொண்டானென்பது பெறப்படும். பகைவென்றதனால் கொற்றவையும், புலவர்க்கு வழங்குமாறு அப்

20. தென்னாட்டில்வடநாட்டிற்குடநாட்டிற்குணநாட்டிற் றெவ்வரோடக், கன்னாட்டியமர்பொருதுகங்கைநீரூட்டுவித்துக் கண்டன்வேங்கை, எந்நாட்டுமெழுதியவன்றிருமரபோர்பெற்ற புகழ்யாவர்பெற்றார், அந்நாட்டுக்கொற்றமெல்லாமக்குரிசில் புகழொடவதரித்ததன்றே.

21. ஆற்றியமெய்ச்செல்வத்தாலளகையைவென்றிருங்கவி னலமரூரை, மாற்றியபொற்றடமதில்சூழ்வக்கபாகையினறத் தின்வடிவம்போலத், தோற்றியவக்கொங்கர்பிரான்சூழ்தமிழா னட்கொண்டான்சுற்றத்தோடு, போற்றியவிப்புவிமுழுதுந் தன்றிருப்பேர்மொழிகொண்டேபுரந்தானம்மா.

22. பிறந்துய்யக்கொண்டவனிப்பேருலகம்பெருவாழ்வு கூருநாளில், நிறைந்த புகழ்ச்சனிநகர்வாழ்வில்லிபுத்தூரனை நோக்கி நீயுநானும், பிறந்ததிசைக்கிசை நிற்பப்பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர்தங்கள், சிறந்த செவிக்கமுத மெனத் தமிழ்மொழியின்விருத்தத்தாற்செய்கவென்றான்.

23. இருக்காதிமறைமொழிந்தோனியம்பியவிப்பெருங் கதையையாருங்கேட்பச், சுருக்காகப்புராணமுறைசொல்லுக வென்றலினவனுஞ்சொல்லலுற்றான், பெருக்காளர்முதலாய பெருங்குலத்தோரிக்கதையின்பெற்றிகேட்டார், செருக்காக வவன்மைந்தன்வரந்தருவானிப்பதிகஞ்செப்பினனே.

---

பகைவரிடத்தினின்று பெரும்பொருளை யீட்டியதனாற் கமலமா தும்களிப்பரென்க.

20. அமர்பொருது பிறகு அப்போரில் பெருவீரங்காட்டி யிறந்தோர்க்கு அவர்வடிவந்திட்டிய கல்லைப் பிரதிஷ்டைசெய்து அதற்குக் கங்கைநீரைக் கொண்டு அபிஷேகஞ்செய்வித்துஎன்க. நாட்டி = நிறுத்தி. கண்டன்-சோழனுடைய,வேங்கை-புலிக்கொடி.

21. அமரரூரைமாற்றிய-தேவரூரை மேம்பாடுஇல்லாமற் செய்வித்த.மாற்றிய வக்கபாகை, பொற்றடமதில்சூழ் வக்கபாகை என்க. ஆற்றிய மெய்ச் செல்வம்என்றதனால் தருமவழியாற் சம் பாதித்த செல்வமென்றதாயிற்று.வக்கபாகை-வரபதியாட்கொண் டானது நகரம்.

22. வரபதியாட்கொண்டான் வில்லிபுத்தூராரைப் பாரதத் தை விருத்தப்பாவாற் பாடுமாறுகேட்டுக்கொண்டது. பிறந்து உய்யக்கொண்டவன்-தான்பிறந்ததனால் உலகத்தாரைஉய்யுமாறு செய்தவனாகிய ஆட்கொண்டான்.

23. இருக்காதி மறைமொழிந்தோன்-வியாசன். சுருக்காக- சங்கிரகமாக. புராணமுறை-பழமையான முறைமை. என்றலின்- என்று சொன்னதனால். அவனும்-அந்த வில்லிபுத்தூரனும். பெருக்காளர் - செல்வப்பெருக்கமுள்ளவர்: இச்சொல்-அறிவுச் செல்வப் பெருக்கமுடையாரையும் பொருட் செல்வப்பெருக்க முடையாரையுங் காட்டும். செருக்கு ஆக-கல்விச்செருக்குத் தோன்ற.

# மகாபாரதம்.

பாரதம் என்னுஞ் சொல்லுக்கு-பரதனது வமிசத்தைப்பற்றிய நூலென்றுபொருள். இங்குக் குறித்த பரதனென்பவன் -சந்திர வமிசத்தில் துஷ்யந்த மகாராசனுக்குச் சகுந்தலையினிடந் தோன்றிப் பிரசித்திபெற்ற ஓரரசன். பரதவமிசத்துத்தோன்றினவர், பாரதர்; (அவராவார் - பாண்டவரும், துரியோதனுதியரும்:) அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல் பாரதமெனப்பட்டது. இது - வடமொழித்தத்திதாந்தநாமம். (ஒரு வடசொல் சிறிது மாறித் தன்னேடு இயைபுடைய பொருளையேனும் தன்பொருளையேனும் உணர்த்துவது, தத்திதாந்த நாமம்.) இனி, வருணச்சிரம தருமம் இராசதருமம் மோட்சதருமம் நீதி முதலிய சிறந்த உறுதிப் பொருள்களையெல்லாம் அறிவிப்பதனுல் முனிவர்கள் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து மற்றையெல்லா நூல்களினும் மிகுந்த பாரம் (அதாவது மகிமை) உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும் பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். இருக்கு முதலிய நான்கு வேதங்களோடு ஒப்ப ஐந்தாம்வேதமென்று சிறப்பித்துக் கூறப்படுவதும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்ம பர்வத்திலும் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிக பர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பதும் இந்நூலுக்கு எல்லா நூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். இதுபற்றியே, இது மகா பாரதம் எனப்படும். இந்நூலை முதலில் வடமொழியிற்செய்தவரான வியாச மகாமுனிவரால் வைக்கப்பட்ட 'மகாபாரதம்' என்கிற முதனூலின் பெயரே வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு 'ஜயம்' என்றும் ஒரு பெயருண்டு.

இது, இதிகாசம் இரண்டனுள் ஒன்று: (மற்ருென்று - இராமாயணம் என்ப.) உபதேச பரம்பரையில் வந்த பழைய சரித்திர மொன்றைப் பிரதானமாக எடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறும் நூல் - இதிகாசமென்றும், உலகத்தின் தோற்றம் ஒடுக்கம் முனிவர்கள் அரசர்கள்மரபு அவர்கள் சரித்திரங்கள் மநுவந்தரம் என்னும் ஐந்து விஷயங்களை விரவிக் கூறும் நூல்-புராணமென்றும் வேறுபாடு உணரத்தக்கது. புராணம்-பிராம்மம் முதலாகப் பதினெட்டு வகைப்படும். வேதத்தின் கருத்து இன்னதென்று நியாயப் பிரமாணங்களால் தேற்றி விளக்குதல்பற்றி, இந்த இதிகாசபுராணங்கள், வேதத்திற்கு உபப்பிரஹ்மணங்களென்று சொல்லப்படும்: உபப்பிரஹ்மணமென்ருல் வளர்ப்பதென்று பொருள்.

---

## தற்சிறப்புப்பாயிரம்

இத்தொடர் - தனக்குச் சிறத்தலையுடைய பாயிரமென்று விரியும். பொதுவாக வன்றிக் கவி தாம் தொடங்கும் நூற்கே உரியதாகுமாறு சிறப்பாக அமைந்த பாயிரமென்பது, கருத்து. பாயிரம்-பாஹ்யம் என்ற வடசொல்லின் திரிபு: வெளிப்பட்டது என்பது, அவயவப்பொருள்: நூற்குப் புறம்பாக அமைந்திருக்கும் நூன்முகம், பாயிரமெனப்படும்: "முகவுரை பதிகம் அணிந்

துரை நான்முகம், புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்'' என்ருர், பவணந்திமுனிவரும். இந்தத் தற்சிறப்புப்பாயிரத்திற் கூறப்படும் விஷயம், கடவுள் வணக்கமும், நூல்நுதலும் பொருளுமாம்: இதனை, ''தெய்வவணக்கமுஞ் செயப்படுபொருளும், எய்தவுரைப்பது தற்சிறப்பாகும்'' என்பதனு லறிக.

## 1.—கடவுள் வாழ்த்து.

**நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே**
**வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தஞ்சொன்னநாள்**
**ஏடாக வடமேரு வெற்பாக வங்கூரெ ழுத்தாணிதன்**
**கோடாக வெழுதும்பி ரானைப்ப ணிந்தன்பு கூர்வாமரோ.**

(இதன் பொருள்.) நீடு ஆழி உலகத்து - பெரிய கடலாற் சூழப்பட்ட உலகத்திலே, 'மறை நாலொடு - நான்கு வேதங்களுடனே, ஐந்து - (இது) ஐந்தாவது வேதமாகும்,' என்று நிலை நிற்க - என்று வழங்கும்படி நிலைத்து நிற்குமாறு, வாடாத தவம் வாய்மை முனிராசன் மாபாரதம் சொன்ன - அழியாத தவத்தின் மெய்ம்மையையுடைய இருடியர்க்கு அரசனுன வியாசமுனிவன் மகாபாரதத்தைச் சொல்லிவந்த, நாள் -காலத்தில்,—வடமேரு வெற்பு ஆக ஏடு ஆக - வடக்குத்திசையிலுள்ள மேருமலை முழுதும் (அந்நாலை) எழுதும் ஏடாகுமாறும், தன் கோடு அம் கூர் எழுத்து ஆணி ஆக - தன்னுடைய (வாயில் முளைத்துள்ள) தந்தமே அழகிய கூரிய எழுத்தாணியாகுமாறும், (அந்தத் தந்தத்தைப் பிடுங்கிக் கையிற்கொண்டு), எழுதும்-(மகாபாரதம் முழுவதையும்) எழுதின, பிரானை-விநாயகக் கடவுளை, பணிந்து-வணங்கி, அன்புகூர்வாம்-அன்புமிகுவாம்;(எ-று.)அரோ-ஈற்றசை.

''பாரத:பஞ்சமோவேத:'' என்பது காண்க. பிரமன்தோன்றி 'மகாபாரதத்தையெழுதுமாறு கணேசனை நினைப்பாய்' என்ன வியாசமுனிவன் அங்ஙனமே கணேசனைத் தியானித்துப் பாரதத்தை எழுதுமாறு வேண்டிக்கொள்ள, அவ்வேண்டுகோட்கு இணங்கி விநாயகக் கடவுள் எழுதினு னென அறிக. மகாபாரதத்தையெழுதின கடவுளாதல்பற்றி ஏற்புடைக் கடவுள் வணக்கமாக விநாயகரைக் கவி வணங்குகின்ருரென்க. வெற்புஆக என்ற இடத்து 'ஆக' என்பது-எல்லாம் என்ற பொருளைக் குறிப்பிக்க வந்தது: ஊராக அவனுக்குப்பகை என்ற இடத்துப்போல: இனி, வெற்பு ஏடாக, ஆகவம் கூர் தன் கோடு எழுத்தாணி ஆக என்று பிரித்து எடுத்து-போரில்மிக்க தன்னுடைய தந்தக் கொம்பு எழுத்தாணியாக என்று உரைப்பாருமுளர். மாபாரதம் சொன்ன நாள் எழுதும்பிரான் என்று விநாயகரைக் கூறியதனுல், யான் தமிழ்ப்படுத்த இதனையும் இடையூறின்றி முடியுமாறு அவன் அருள்வனென்ற கருத்துக் குறிப்பிக்கப்படும். 'மாமேரு' என்றும் பாடம். சிலபிரதிகளில், இந்தச் செய்யுளும் அடுத்த செய்யுளும், இந்நூலாசிரியரின் குமாரர் பாடிய சிறப்புப் பாயிரத்திற் காணப்படுகின்றன.

முதலிரண்டுகவிகள் - பெரும்பாலும் முதல் நான்கு சீர்கள் காய்ச்சீர்களும் ஈற்றுச் சீரொன்று கனிச்சீருமாகிவந்த கலிநிலைத் துறைகள். (1)

**2.—இதுவுமது.**

முருகார்ம லர்த்தாம முடியோனை யடியார்மு யற்சித்திறந்
திருகாமல் விளைவிக்கு மதயானை வதனச்செ ழுங்குன்றினைப்
புருகூதன் முதலாய முப்பத்து முக்கோடி புத்தேளிரும்
ஒருகோடி பூதேவ ருங்கைதொ ழுங்கோவை யுறவுன்னுவாம்.

(இ-ள்.) முருகு ஆர்-வாசனைபொருந்திய, மலர்-(கொன்றைப்) பூக்கள் தொடுக்கப்பட்ட, தாமம்-கொன்றைமாலையை, முடியோனை-சிரசிற்கொண்டுள்ளவனும், அடியார் முயற்சி திறம்-பக்தர்களின் முயற்சியின்கூறுபாடு, திருகாமல்-மாறுபட்டிடாமல், விளைவிக்கும்-பயனைவிளையச் செய்கின்றவனுகி, மதம் யானை வதனம் செழுங் குன்றினை-மதயானையின் முகம்போன்ற முகத்தைப் பெற்று வளமுள்ள மலைபோல் ஓங்கி நிற்பவனும், புருகூதன் முதல் ஆய முப்பத்து முக்கோடி புத்தேளிர்உம்-இந்திரனைத்தலைவனுகவுடையராய் முப்பத்து முக்கோடியரென்று சொல்லப்படுகின்ற தேவர்களாலும், ஒருகோடி பூதேவர்உம்-ஒரு கோடிக் கணக்கான அந்தணராலும், கைதொழும்-வணங்கப்படுகின்றவனுமான, கோவை-தலைவனுகிய விநாயகக்கடவுளை, உற-மிகவும், உன்னுவாம்-தியானிப்போம்; (எ - று.)

அடியார்முயற்சித்திறந் திருகாமல் விளைவிக்கும் குன்று எனவே, அடியவனுகிய எனது முயற்சியை [மகாபாரதத்தைத் தமிழாற் பாடுதலை]யும் இடையூறின்றி முற்றுவிப்பான் அக்கடவுள் என்ற கருத்துக் குறிப்பிக்கப்படும். விநாயகக் கடவுள் வணக்கமாகவேயுள்ள இந்த இரண்டாவது செய்யுள், சில பிரதிகளி லில்லை: ஒருகால் கவியினுற் பாடப்படாது இடைச்செருகலாய் வந்ததாயிருக்கலாம். முப்பத்து முக்கோடியர்-அஷ்டவசுக்கள், ஏகாதசருத்திரர், துவாதசாதித்தர், அசுவினிதேவரிருவர் என்ற முப்பத்துமூவர்தேவர்களைத் தலைமையாகக் கொண்டவர்கள்: இவர்கட்கெல்லாந் தலைவன் தேவேந்திரன் என்க. வானுலகத்துத்தேவர் போலப் பூமியில் விளங்குபவரென்ற காரணத்தால் பிராமணர், பூதேவரெனப்பட்டார். கோடி-மிகப்பலரென்ற பொருட்டது. புருஹூதன்-யாகத்தில் மிகுதியாக அழைக்கப்படுபவனென அவயவப் பொருள்படும். (2)

**வேறு.**

**3.—முதற்கடவுளின் வாழ்த்து.**

ஆக்கு மாறய னுமுத லாக்கிய வுலகம்
காக்கு மாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம்
வீக்கு மாறர னுமவை வீந்தநாண் மீளப்
பூக்கு மாமுத லெவனவன் பொன்னடி போற்றி.

(இ-ள்.) எவன்—,ஆக்கும் ஆறு-படைக்கும்படி, அயன் ஆம்-பிரமனுவனே: முதல் ஆக்கிய உலகம் - முதலிற் படைக்கப்பட்ட அவ்வுலகத்துப் பிராணிகளை, காக்கும் ஆறு - பாதுகாக்கும்படி, செங்கண் நிறை கருணை-(செந்தாமரை மலர்போன்று) செந்நிறமான கண்களிலே நிறைந்த கருணையாகிய, அம்-நீரைக்கொண்ட,

கடல் ஆம்-கடல் போன்ற திருமாலாவனே: வீக்கும் ஆறு-(காப்பாற்றப்பட்ட உயிர்களை) அழிக்குமாறு, அரன் ஆம்-சிவனுவனே: அவை வீந்த நாள் - அவை அழிந்த காலத்தில், மீள பூக்கும்-மீண்டும் படைக்கின்ற, மா முதல்(ஆம்)-சிறப்புற்ற முதற்கடவுள் ஆவனே: அவன்-அந்த முதற்கடவுளின், பொன் அடி-அழகிய திருவடிகள், போற்றி-வாழ்க; (எ - று.)

'எவன்' என்பது - 'அயனும்' முதலிய நான்கனோடும் இயையும். அம் - அழகிய எனினுமாம். "அவை வீந்த நாளுந்திப் பூக்குமா முதல்" என்றும் பாடமுண்டு. போற்றி - போற்றிய என்ற வியங்கோளின் ஈற்றுயிர்மெய் சென்றது.

இதுமுதல் ஆறுகவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகி வந்த கலிநிலைத்துறைகள். மேல் குருகுலச்சருக்கத்து முதல்முப்பத்திரண்டு கவிகளும், இந்தக் கலிநிலைத்துறையேயாகும். (3)

4.—அறம்முதலியவற்றின் வாழ்த்து.

ஏழ்பெருங்கடன்மாநிலமெங்குநல்லறமே
சூழ்கவண்டமிழோங்குகதேங்குகசுருதி
வீழ்கபைம்புயல்விளங்குகவளங்கெழுமனுநூல்
வாழ்கவன்புடையடியவர்மன்னுமாதவமே.

(இ - ள்) ஏழ் பெருங் கடல் மா நிலம் எங்குஉம் - ஏழு பெரிய கடலாற் சூழப்பட்ட பெரிய பூமி முழுவதும், நல் அறம் ஏ சூழ்க-சிறந்த தருமமே பரவியிருக்கட்டும்: வள் தமிழ் ஓங்குக - வளப்பம் பொருந்திய தமிழ்மொழி யோங்கிநிற்கட்டும்: சுருதி - வேதங்கள், தேங்குக - (எங்கும்)நிறைந்திருக்கட்டும்: பைம் புயல் - கரியமேகம், வீழ்க - (வானத்தினின்று மழைநீரைப்) பொழியட்டும்: வளம் கெழு மனு நூல் - பல விஷயங்களும் நன்கு விளங்குகின்ற மனு தருமசாத்திரம், விளங்குக - (அதனிற் கூறப்பட்டுள்ள தருமங்கள் நடத்தப் பெறுதலால்) விளக்கமுறட்டும்: அன்புஉடை-(கடவுளிடத்து) மெய்யன்புடைய, அடியவர் - அடியார்கள், மன்னு - மேற்கொண்டுள்ள, மா தவம் - சிறந்த தவம், வாழ்க - வாழட்டும்; (எ - று.)

கடவுள் வாழ்த்துக் கூறிய கவி, இதனால், அறம் முதலியவற்றைச் செழிக்க வாழ்த்துகின்றார். உலகத்துக்கு நல்ல நெறியைப் போதித்தலே காவியத்துக்குப் பயனாதலால், அக்கருத்துத் தோன்ற 'எங்கும் நல்லறமே சூழ்க' என்பது முதலாகக் கூறினா ரென்னலாம். (4)

5.—இதுமுதல் மூன்று கவிகள்-அவையடக்கம்.

அவையடக்கமாவது - அவையோர்க்குத் தான் அடங்கியிருக்கை:அவையத்தார்க்கு மனவெறுப்புமுதலியனதோன்றாமல் அன்னாரை அடங்குமாறு செய்தலெனினுமாம்: அங்ஙன் அவையடக்கத்தைத் தெரிவிக்கும் பாடல், அவையடக்கமெனப்படும்.

கன்னபாகமெய்களிப்பதோரளப்பிருெல்கதைமுன்
சொன்னபாவலன்றுகளறுசுகன்றிருத்தாதை
அன்னபாரதந்தன்னையோரறிவிலேனுரைப்பது
என்னபாவமற்றென்னைபின்றென்சொலாதுலகே.

(இ - ள்.) கன்னபாகம்-காதின் பகுதி, மெய் களிப்பது-உண் மையான மகிழ்ச்சியை யடைதற்குக் காரணமான, அளப்பு இல்-அளவில்லாத (மிக்க), ஓர் தொல் கதை-ஒரு பழமையான கதை யை, முன்-முன்னே, சொன்ன—, பாவலன்-கவி, துகள் அறு சுகன் திருத்தாதை-குற்றமற்ற சுகனுடைய சிறப்புற்ற தந்தையான வியாசனுவன்; அன்ன பாரதம் தன்னை-அந்தப் பாரதத்தை, ஓர் அறிவு இலேன் உரைப்பது-சிறிது அறிவும் இல்லாத நான் சொல் லுவது,—என்ன பாவம் - என்ன தீச்செயல்! இன்று-இப்போது, உலகு - உலகோர், என்னை - (தகாத செயலில் மூண்டுள்ள) என்னை, என் சொலாது - என்ன சொல்லமாட்டார்? (எ - று.)

கன்னபாகம்=கர்ணபாகம்: வடசொற்றொடர். மெய்-உடலு மாம். பாவம் - பாபம் என்ற வடசொல்லின் திரிபு: பாவம் என்ற வடசொல்லின் திரிபு எனக்கொண்டு, என்ன அபிப்பிராயம் என்றுமாம், மற்று-அசை. (5)

6. மண்ணிலாரணநிகரெனவியாதனுர்வகுத்த
எண்ணிலாநெடுங்காதையையானறிந்தியம்பல்
விண்ணிலாதவன்விளங்குநீடெல்லையையூமன்
கண்ணிலாதவன்கேட்டலுங்காண்டலுங்கடுக்கும்.

(இ - ள்.) மண்ணில் - பூமியிலே, 'ஆரணம் - வேதத்துக்கு, நிகர் - ஒப்பு ஆகும்,' என - என்னுமாறு, வியாதனுர்-வியாச முனி வர், வகுத்த - விரிவாகச் சொல்லியருளிய, எண் இலா - அள வில்லாத (மிகப் பெரிய), நெடுங் காதையை - நீண்ட (பாரத) கதையை, யான் அறிந்து இயம்பல் - யான் தெரிந்துகொண்டு சொல்லுதல்,—விண்ணில் - ஆகாயத்திலே, ஆதவன் - சூரியன், விளங்கு - விளங்குகின்ற, நீடுஎல்லையை - நீண்டவரம்பை, ஊமன் கேட்டல்உம் - ஊமையானவன் வினவியறிதலையும், கண் இலா தவன் - குருடன், காண்டல்உம் - கண்டறிதலையும், கடுக்கும் - ஒத்திருக்கும்; (எ-று.)

ஊமன் கண்ணிலாதவன் கேட்டலும் காண்டலும் கடுக் கும் - முறைநிரனிறைப்பொருள்கோள். (6)

7. முன்சொலாகியசொல்லெலாமுழுதுணர்முனிவன்
தன்சொலாகியமாப்பெருங்காப்பியந்தன்னைத்
தென்சொலாலுரை செய்தலிற்செழுஞ்சுவையில்லாப்
புன்சொலாயினும்பொறுத்தருள்புரிவரேபுலவோர்.

(இ - ள்.) முன் சொல் ஆகிய சொல் எலாம் - முற்பட்ட சொல்லாகிய வேதம் முழுவதையும், முழுதுஉணர் - ஒன்றுவிடா மல் நன்கு அறிந்த, முனிவன்தன் - வியாச மகரிஷியின், சொல் ஆகிய - வாக்காகிய, மாபெருங் காப்பியந்தன்னை - சிறந்த பெரிய காப்பியமாகிய பாரதத்தை, தென்சொலால் - தமிழ்மொழியினுல், உரை செய்தலின் - சொல்லுதலினுல், செழுஞ்சுவை இல்லா புல் சொல் ஆயின்உம் - (என்னுடைய சொல்) மிக்க சுவையில்லாத

இழிவாகிய சொல்லாயிருப்பினும், புலவோர் - வித்துவான்கள், பொறுத்து அருள்புரிவர் - பொறுமைகொண்டு கருணை செய்வார்கள்; (எ - று.)

நித்தியமாதலால், வேதம் 'முன்சொல்' எனப்பட்டது. என் சொல்இழிவானதேயானாலும்வடமொழியிலுள்ளமாப்பெருங்கதை தமிழி லெழுதப்படுவதென்ற காரணங்கொண்டு, சொல்லப்படும் பொருளின் மேன்மையால் பொறுத்துப் புலவர் என்மீது அன்பு கொள்ளுவரென்று அவையோர்க்கு அடக்கங் கூறியவாறு. (7)

8.—நாம் பாரதம்பாடக் காரணம்.

முன்னு மாமறை முனிவருந் தேவரும் பிறரும்
பன்னு மாமொழிப் பாரதப் பெருமையும் பாரேன்
மன்னு மாதவன் சரிதமு மிடையிடை வழங்கும்
என்னு மாசையால் யானுமீ தியம்புதற் கிசைந்தேன்.

(இ - ள்.) முன்னும் மாமறை - நினைந்து ஓதப்படும் சிறந்த வேதங்களில் வல்ல, முனிவர்உம் தேவர்உம் பிறர்உம் - முனிவர்களும் தேவர்களும் மற்றையோரும், பன்னும் - ஆராய்கின்ற, மா மொழி - சிறந்த மொழிகளைக் கொண்ட, பாரதம்பெருமைஉம் - பாரதத்தின் சிறப்பையும், பாரேன் - ஆலோசிக்கமாட்டேன்: 'மன்னும் - பெருமைபொருந்திய, மா தவன் - திருமகள் கொழுநனை திருமாலின் [ஸ்ரீக்ருஷ்ணபகவானின்], சரிதம் உம் சரித்திரமும், இடை இடை-இந்நூலின் நடுநடுவே, வழங்கும்-வழங்காநிற்கும்', என்னும் - என்கின்ற, ஆசையால் - விருப்பத்தினால், யான் உம் - (ஏற்ற திறமையில்லாத) நானும், ஈது - இந்தச் சரிதத்தை, இயம்புதற்கு - (தமிழ்ப்பாடலாற்)சொல்லுதற்கு, இசைந்தேன் - சம்மதித்தேன்; (எ - று.)

"நாராயணகதாமிமாம்" என்றார், வேதவியாசரும். ஆசை பற்றிக் கூறியதாதலால், என் குற்றம் பொறுக்கத்தக்கது என்ற அவையடக்கமும் இதில் தோன்றும். (8)

---

முதலாவது

# ஆதிபருவம்

பாரதம் அந்தந்தப் பாகத்தின் விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், ஸௌப்திகபருவம், ஸ்திரீ பருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப் பருவங்கள் அடங்கியுள்ளது. அவற்றுள் ஆதிபர்வம் என்ற வடமொழித் தொடருக்கு - (கதாநாயகர்களான பாண்டவர்கள் அவர்களுக்குப் பங்காளிகளான துரியோதனாதியர்கள் என்னும் இவர்

களின்) முதல் வரலாற்றைக் கூறுவதாகிய பாகமென்று பொருள். இந்நூலின் பருவம் பதினெட்டனுள் முதலாவது பருவமென்று பொருள் கொள்ளலாமாயினும், மற்றைப் பருவங்களிற்போலவே, கதாநாயகரின் சரித்திரத்தைப்பற்றிப் பெயர் வைத்தாரென்று கொள்ளலே நேர். பாண்டவ துரியோதனாதியர்கள் பிறந்த சந்திரகுலத்தின் சரித்திரமும், இவர்களுடைய பிறப்புவரலாறும், இளம் பருவத்தில் நிகழ்ந்த செய்திகளும் இப்பருவத்திற் கூறப்படுகின்றன. பருவம்=பர்வம்: கணு; கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய (ஏகதேசம்-ஒரு பகுதி) கணுப்போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பை 'பருவம்' என்பது- உவமவாகுபெயர். "இலேநந்தியல் காலே" என்ற சூத்திரத்து 'ரவ்வழி உவ்வுமாம்' என்றதனால், பர்வம் பருவமென ரகரத்திற்குப் பின் உகரம் வந்தது: இந்த ஆதிபருவம், குருகுலச் சருக்கம் முதலிய எட்டுச் சருக்கங்களையுடையது: காண்டவ தகனச் சருக்கத்தின் முதற்பத்தொன்பது பாடல்களை வசந்த காலச் சருக்கம் எனத் தனியே ஒன்றாக்கி, ஒன்பது சருக்கங்களையுடைய தென்பாரு முளர். வியாசமாமுனிவர் தாம் பாரதத்துக்கு இட்ட பருவப் பெயர்களையே இந்நூலாசிரியரும் இட்டுள்ளார்.

முதலாவது

## குருகுலச்சருக்கம்

குருகுலத்தைப்பற்றிய சருக்கம் என்று விரியும். குரு என்பவன் - சந்திர குலத்திற் பிரசித்திபெற்ற ஓரரசன். இவன ஸரஸ்வதீ த்ருஷத்வதீயென்ற நதிகளின் இடையிலே ஒரு புண்ய க்ஷேத்திரத்தை யேற்படுத்தினான்: அந்த க்ஷேத்திரத்தில்தான் பாரத யுத்தம் நடந்தது. சருக்கம் - ஸர்க்கமென்ற வடசொல்லின் திரிபு: முடிபு அல்லது படைப்பு என்று பொருள்: அது, சங்கேதத்தாற் பெரியவகுப்பினுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும்.

**1.—சந்திரகுலத்தரசன் கதையைக் கூறுவேனெனல்.**

**எங்கண் மாதவ னிதயமா மலர்வரு முதயத்**
**திங்கண் மரமர பினிற்பிறந் திசையுடன் சிறந்தோர்**
**அங்கண் மாநிலத் தரசர்பல் கோடியவ் வரசர்**
**தங்கண் மாக்கதை யானறி யளவையிற் சமைக்கேன்.**

(இ - ள்.) எங்கள் மா தவன் - எமது இலக்குமிக்குத் தலைவனாகிய திருமாலின், இதயம் - நெஞ்சமாகிய, மா மலர்-சிறந்த தாமரை மலரினின்று, வரும் - தோன்றிய, உதயம் - தோற்றத்தையுடைய, திங்கள் - சந்திரனுடைய, மாமரபினில்-சிறந்த வமிசத்திலே, பிறந்து—, அம் கண் மாநிலத்து - அழகிய இடம் பொருந்திய (இந்தப்) பெருநிலத்திலே, இசையுடன் சிறந்தோர்-கீர்த்தியோடு மேம்பட்டவராகிய, அரசர்—, பல்கோடி-பலகோடிக் கணக்கினராவர்: அ அரசர் தங்கள் மா கதை - அவ்வரசர்களின் சிறந்த கதையை, யான் அறி அளவையின் - யான் அறிந்த அளவினால், சமைக்கேன்-அமைத்துக் கூறுவேன்; (எ - று.)

இதனால், சந்திரகுலத்துத்தோன்றிய அரசர் பலரின் சிறந்த கதையைப் பாரதமென்று பேர்கொண்ட இந்நூன்முகத்தாற் கூறுவே னென்பதாம். "சந்த்ரமா மநஸோ ஜாத:" என்று சந்திரன் திருமாலின் மனத்தினின்று தோன்றியவனெனக் கூறியிருத்தல் காண்க. தமது வழிபடுகடவுளிடத்துக் கொண்ட ஈடுபாடு தோன்ற, 'எங்கண் மாதவன்' என்றார். மாதவன்—மா-இலக்குமிக்கு, தவன் - கணவனென்று உறுப்புப்பொருள். கோடி-இங்கு எண்ணலளவையாகுபெயர்: பெயர்ப்பயனில்லை. (9)

**2.—இதுமுதல் நான்கு கவிகள்-சந்திரன் சிறப்பைத் தெரிவிக்கும்.**

**பொருந்தவானுறைநாள்களைநாடொறும்புணர்வோன்**
**அருந்தவானவர்க்காரமுதன்புடனளிப்போன்**
**திருந்தவானவர்க்கரியவன்செஞ்சடைமுடிமேல்**
**இருந்தவானவன்பெருமையையார்கொலோவிசைப்பார்.**

(இ - ள்.) வான் - ஆகாயத்திலே, பொருந்த—, உறை - தங்குகின்ற, நாள்களை (அசுவினி முதலிய) நட்சத்திரங்களை, நாள்தொறும் - தினந்தோறும், புணர்வோன் - சேர்பவனும்,—வானவர்க்கு - தேவர்கட்கு, அருந்த-உண்ணுமாறு, ஆர்அமுது-அருமையான அமிருதத்தை, அன்புடன்-அன்போடு, அளிப்போன் - தருபவனுமாகி, திருந்து அ வானவர்க்கு அரியவன்-செம்மை பெற்ற அந்தத் தேவர்கட்குள்ளே அருமைப்பாட்டையுடையவனாகிய சிவபெருமானது, செஞ்சடை முடிமேல்-செந்நிறமுள்ள ஜடையைக்கொண்ட திருமுடிமேலே, இருந்த-தங்கியிருக்குந் தன்மைவாய்ந்த,வானவன்-கடவுட் சந்திரனது, பெருமையை—,இசைப்பார்-அறிந்து சொல்ல வல்லவர், யார்கொல்ஓ - யாவர்கொலோ? (எ - று.)

சந்திரன் அசுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களில் முறையே எந்த எந்த நட்சத்திரத்துடனிருக்கின்றானோ, அந்தந்த நட்சத்திரநாளாக அத்தினம் வழங்கப்படுவது காண்க: சந்திரன் தன்னுடைய அமுதகலைகளை இரவி முதலிய தேவர்களுக்குத் தினம் ஒரு கலைவீதம் கொடுக்கின்றானென்பதும், அதனால்தான் தேய்பிறையில் தினமானம் ஒவ்வொரு கலை குறைந்து வருகின்றதென்பதும், சிவபெருமானுடைய சடைமுடிமேல் பிறைச் சந்திரன் எப்போதும் தங்கிநிற்கின்றானென்பதும் நூற்கொள்கை. சிவபெருமான் முடிமேல் தங்குதல் தன் கலைகளைத் தேவர்க்கு உணவாகக் கொடுத்தல் முதலிய மேம்பாடு உடைமையால், சந்திரன் பெருமையை முழுதும் அறிந்து இசைக்க முடியாதென்றார். திருந்த என்று எடுத்து, திருந்த இருந்த என்று இயைப்பினுமாம். (10)

**3. மண்டலம்பயிலுரகர்பேருயிர்ப்பினுன்மயங்கி**
**மண்டலம்பொரவருந்தியபெருந்துயர்மாற**
**மண்டலந்தனைநிழலெனுமரபினுற்றனது**
**மண்டலம்பொழியமிழ்தின்மெய்குளிரவேவைத்தோன்.**

(இ-ள்.) (அன்றியும் அந்தச் சந்திரன்),—மண்டலம் பயில் - மண்டலகதியாகச்செல்லுகின்ற, உரகர்-பாம்புகளின், பேர்உயிர்ப்பினால்-பெருமூச்சினோடு, மயங்கி-கலந்து, மண்டு அலம் பொர-

மிக்க விஷமானது மோதுவதனல், வருந்திய - வருத்தமடைந்த, பெருந் துயர் - மிக்க துன்பம், மாற-நீங்கும்படி—மண் தலந்தனை - மண்மயமாயமைந்த இந்தப்பூமியை,நிழல்எனும் மரபினுல்-(தனது) சாயையென்கின்ற [நிலாவெனப்படுகின்ற] முறைமையினுலும், தனது மண்டலம் பொழி அமிழ்தின் - தன்வட்டவடிவமானஉருவம் பொழிகின்ற அமிருதத்தினுலும், மெய் குளிர-உடல் குளிரும்படி, வைத்தோன் - வைத்தவன்; (எ-று.)

பாம்புகளின் நெட்டுயிர்ப்போடு விஷமும் கலக்கப்பெற்றதனுல், இந்தப் பூமி மிக்க வெதுப்பையடைய, அவ்வெம்மையைத் தனது நிலவினுலும் தன் அமுதகலைகளினுலும் போக்கிக் குளிர்ச்சியடையச்செய்பவன் சந்திரனென்க. யமகவணி. மண்டு அலம்பொர மயங்கி வருந்திய பெருந்துயர் எனக் கொண்டு கூட்டி யுரைப்பாருமுளர். அலம் = ஹாலம். (11)

4. பைம்பொன்மால்வரைமத்தினிற் பணிவடம்பிணித்திட்டு
உம்பரானவர்தானவ ருடன்கடைந்திடவே
தம்பமானதுமன்றியத் தழல்விட்ந்தணிய
அம்புராசியினாரமு துடனவதரித்தோன்.

(இ - ள்.) (அன்றியும் அந்தச்சந்திரன்),—பைம் பொன் மால் வரை மத்தினில்-பசும்பொன்மயமான பெரியமலையாகிய மந்தரகிரியென்னும் மத்திலே, பணிவடம்-ஆதிசேஷனுகிய கடைகயிற்றை, பிணித்திட்டு-கட்டி, உம்பர் ஆனவர்-தேவர்கள், தானவருடன் - அசுரருடனே (கூடி), கடைந்திட - கடையாநிற்க,—(அப்போது), தம்பம் ஆனது உம் அன்றி-(தயிர்கடையும்) மத்துக்கு அடைதாணுக அமைந்ததல்லாமல், அ தழல் விடம் தணிய - அங்குத் தோன்றிய தழல்போன்ற [மிகவெப்பமான] விடத்தின் கொடுமை தணியும்படி, அம்புராசியின்—அந்தத் திருப்பாற்கடலிலே, ஆர் அமுதுடன் - அருமையான அமிருதத்துடனே, அவதரித்தோன்- தோன்றியவன் ; (எ - று.)

தேவர்கள் தாம் இழந்தசெல்வத்தை மீண்டும் பெறும் பொருட்டு விட்டுணுவின்மொழிப்படியே திருப்பாற்கடலில் மந்தரகிரியை மத்தாகநாட்டிவாசுகியென்னும் நாகத்தைக்கடைகயிருகப் பூட்டிக் கடையும்போது அந்தச்சந்திரன் அந்தமந்தரகிரியாகிய மத்துக்கு அடைதாணுக அமைந்தான்: அன்றியும் கடைகின்றபோது முதன்முதலில் அந்தக் கடலிலிருந்துநஞ்சுதோன்ற அந்தவெப்பத்தைத் தணிக்குமாறு அமிருதத்துடனே அந்தச்சந்திரனுந் தோன்றினனென்பதாம். மேரு மந்தரம் இமயம் என்ற இந்தமலைகளை அபேதமாகக்கூறுவது கவிசமயமாதலால், மந்தரமலையை இங்கு 'பொன்மால்வரை' என்ருர். பணி - பணீ: வடசொல்: படத்தை யுடையதென்பது அவயவப்பொருள். அம்புராசி-ஜலத்தின் திரளையுடைய தெனக் கடலுக்குக் காரணப்பெயர்; பாற்கடலுக்கு இலக்கணை. (12)

5. பத்திரட்டியிலிரண் டொழிந்தபல்கலையோன்
மித்திரற்கவைகொடுத்து முன்மீளவுங்கவர்வோன்
அத்திரிப்பெயரந்தணனம்பகந்தனிலும்
சித்திரக்கனன்முகத்தினும்பிறந்தொளிசிறந்தோன்.

(இ - ள்.) (அன்றியும் அவன்),—பத்து இரட்டியில்-இருபது என்னும் எண்ணில், ஈர் இரண்டு ஒழிந்த - நான்குகுறைந்த [பதினாறாகிய], பல்கலையோன் - பலவான கலைகளை யுடையவன்: மித்திரற்கு - சூரியனுக்கு, அவை-அந்தப் பதினாறு கலைகளையும், முன்—,கொடுத்து—,மீளஉம்-மறுபடியும், கவர்வோன் - பெற்றுக் கொள்பவன்: அத்திரி பெயர் அந்தணன் - அத்திரியென்ற பெயரைக்கொண்ட அந்தணனானுடைய, அம்பகந்தனில்உம்-கண்ணிலும், சித்திரம் கனல் முகத்தின்உம் - விசித்திரமான (கிரணங்களையுடைய) அக்கினியின் முகத்திலும், பிறந்து—, ஒளி சிறந்தோன்-ஒளிவிஞ்சி யிருப்பவன்; (எ - று.)

சந்திரன் தனது கலைகளைத் தேய்பிறையில் தினம்ஒவ்வொன்றாகச் சூரியனுக்குக் கொடுத்து, அமாவாசையில்அக்கடவுளோடு ஒன்றியிருந்து, வளர்பிறையில் தினம் ஒவ்வொன்றாக அக்கலைகளைக் கொள்கின்றானென்பது ஒருசார் நூற்கொள்கை. அத்திரிமுனிவரின் விழியினிற் சந்திரன் தோன்றிய வரலாறு:—உபப்பிரமராகிய அத்திரிமுனிவர் இந்திரியநிக்கிரகஞ் செய்து மூவாயிரம்வருடம் தவம் புரிகையில், தேஜோரூபியாகிய அவருடைய கண்களிலிருந்து பத்துத்திக்குக்களிலும் பேரொளி வீசிக்கொண்டு நீர் பெருகவே, அந்தக் கருப்பத்தைத் திக்தேவிகள் பதின்மரும் வகிக்கத்தொடங்கிப் பின்பு தங்களாற் பொறுக்கமுடியாமல் சந்திரரூபமான அந்தக் கருப்பத்தோடு பூமியில் விழ, அப்பால் நான்முகக்கடவுள் அந்தச் சந்திரனை வேதமயமான தேரின்மீது ஏற்ற, ஸப்தரிஷிகள் வேதவாக்கியங்களைக்கொண்டு துதித்ததனால் அச்சந்திரன் மிக்க ஒளி பெற்று உலகத்துக்குப் பேரொளியைத் தருபவனாயின னென்பதாம். இங்குக்கூறிய சந்திரன்பிறப்பினுள் நெருப்பினின்று தோன்றிய வரலாறு தெரியவில்லை: வந்தவிடத்துக் கண்டுகொள்க. சித்திரக்கனல் முகத்து என்பதற்கு - ஒருசாரார் விசித்திரமான சோதியையுடைய சூரியனிடத்து என்று கூறுவராயினும், "மித்திரற்கவைகொடுத்து முன் மீளவும் கவர்வோன்" என்றதையே குறிப்பதாகு மாதலாற் கூறியதுகூறலாம். மித்திரர்க்கு என்று பாடமாயின், நண்பராகிய தேவர்கட்கு என்று பொருளாம். (13)

6.—சந்திரனுக்குப்புதல்வனாகப் புதன் பிறந்தமை.

அந்தியாரணமந்திரத் தன்புடனிவனை
வந்தியாதவர்மண்ணினும் வானினுமில்லை
புந்தியாலுயர்புதனெனும் புதல்வனைமகிழ்வால்
தந்தியாவருங்களிப்புற விருக்குநாட்டன்னில்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அந்தி - மாலைப்போதில், ஆரணம்மந்திரத்து-வேதமந்திரத்தால், அன்புடன் - அன்போடு, இவனை-இந்தச்சந்திரனை,

வந்தியாதவர் - வணங்காதவர், மண்ணின்உம் - இந்தநிலவுலகத்திலும், வானின்உம் - மேலுலகத்திலும், இல்லை—:(இப்படிப்பட்ட சந்திரன்),—புந்தியால் உயர் - புத்தியினால்மேம்பட்ட, புதன் எனும் புதல்வனை-புதனென்னும் பேரையுடைய புத்திரனை, மகிழ்வால் தந்து-மகிழ்ச்சியோடு (தாரையினிடமாகப்) பெற்று, யாவர் உம் களிப்புஉற - (அந்தப்புதனுடைய நுண்ணறிவைக்கண்டு) எல்லாரும் மகிழ்ச்சியடைய, இருக்கும் நாள் தன்னில்—,—(எ-று.) —"மநுவருண்மைந்தன்......இளையெனும் பெயர் மடவரலாயினனென்ப" என்று அடுத்த கவியோடு தொடர்ந்துமுடியும்.

வியாழனென்னும் தேவகுருவின் பத்தினியான தாரையைச் சந்திரன் கண்டு காதல்கொண்டு அன்னாளோடுகூடிப் புதனென்ற புதல்வனைப் பெற்றானென்க. தந்தியாவரும் – குற்றியலிகரம். "உந்தியாரழகுடைய பேருரோகிணிவயிற்றிற், புந்தியாலுயர் புதனையப் புண்ணியன் பயந்தான்" என்று சிறுபான்மையாகக் காணப்படும் பாடம், புராணகதையோடு மாறுபடுதலாற் கொள்ளத்தக்கதன்று. மாலைச்சந்தியைத்தொழுவதைச் சந்திரனைத் தொழுவதாகக்கொண்டு கூறினர் போலும். (14)

7.—மநுவின் புதல்வன், சாபத்தால் இளையென்னும் பெண்ணாதல்.

வளைநெடுஞ்சிலைக்கரத்தினன் மநுவருண்மைந்தன்
உளையெழும்பரித்தேரின னுறுவதொன்றுணரான்
விளையருந்தவவிபினமுற் றம்பிகைவிதியால்
இளையெனும்பெயர் மடவரலாயினனென்ப.

(இ - ள்.) வளை நெடுஞ் சிலை கரத்தினன்-வளைந்துள்ள நீண்ட வில்லைக் கையிலேந்தியவனான, மநு-மநுவென்றஅரசன், அருள்-பெற்ற, மைந்தன்-புதல்வனான இளனென்பவன், உளை எழும் பரி தேரினன் - பிடரிமயிர் ஓங்கிவளரப்பெற்ற குதிரையைப்பூட்டிய தேரின்மீது ஏறிச்செல்பவனாய், உறுவது - (அங்குச் சென்றால் தனக்கு) நேரிடக்கூடிய தீங்கை, ஒன்று - சிறிதும், உணரான்- அறியாதவனாகி,—விளை அரு தவம் விபினம் உற்று - முதிர்ந்த அருமையான தவத்திற்குரிய காட்டை யடைந்து, அம்பிகை விதியால் - உமாதேவி கட்டளையிட்டிருந்ததனால், இளை எனும் பெயர் மடவரல் - இளையென்று பெயர்கொண்ட ஒருபெண்ணாக, ஆயினன்—, என்ப - என்று கூறுவர்; (எ-று.)

மநுபுத்திரனான இளனென்பான் ஒருகால் தேரின்மீது ஏறிக்கொண்டு காடுசென்றவன், 'இங்குவருபவர் பெண்ணாய்விடுக' என்று பார்வதிதேவி ஏற்படுத்தியிருந்த ஓரிடத்து அதனை யறியாமையாற் சென்றுசார, அந்தப் பார்வதிதேவியின் ஏற்பாட்டின்படியே பெண்ணுருவம் அந்த இளனைச் சேர, அவன் இளையென்று யாவரும் பேரிட்டழைக்கும் பெண்ணாயினனென்பதாம். அம்பிகை = அம்பிகா. மடவரல்-மடமைக்குணம் வருதலையுடையவள். இளையை வைவஸ்வதமநுவின் மகவாக மகாபாரதத்திற் கூறியிருக்கின்றது. (பாலபாரதத்திலோ கர்த்தமரிஷியின் மகவாகக் கூறியுள்ளது.) (15)

8.—புதன் அந்த இளையைக் கண்டு காதலித்து அவளைக் கூடுதல்.

மாரகாகளமெழுவதோர் மதுமலர்க்காவில்
தாரகாபதிபுதல்வனத் தையலைக்காணு
வீரகாமபாணங்களின் மெலிவுறமயங்கித்
தீரகாமமுஞ்செவ்வியு மிகும்படிதிளைத்தான்.

(இ - ள்.) மாரன் காகளம்-மன்மதனது வெற்றிச்சின்னமாகிய குயிலின் ஓசை, எழுவது-(தன்னிடத்து) ஒக்கம்பெற்றிருப்பதாகிய, ஓர் மதுமலர் காவில்-ஒப்பற்றதேன்நிறைந்த மலர்களைக்கொண்ட சோலையிலே, தாரகாபதி புதல்வன் - சந்திரனுக்குப்புத்திரனாகிய புதனென்பவன், அ தையலை காணு-அந்த இளையென்ற பெண்ணைக்கண்டு, வீரம்காமம்பாணங்களின்-வீரத் தன்மையையுடைய காம பாணங்களினாலே, மெலிவுஉற-(தன்உடம்பு) மெலிவடைய,— மயங்கி - புத்தியில் மோகங்கொண்டு, தீரம் காமம்உம்-மிக்க காமமும், செவ்விஉம் - அழகும், மிகும்படி - (அத்தையலுக்கு) மிகுமாறு, திளைத்தான் (அவளைக்) கூடினான்; (எ - று.)

காகளம் - ஒருவகையூதுகருவி: குயில் மன்மதனுக்குக் காகளமெனப்படும்: இங்கு அச்சொல் - மன்மதனது ஊதுகருவியாகக் கொள்ளப்படும் குயிலைக்காட்டி, ஆகுபெயராய், அந்தக்குயிலினோசையைக் காட்டிற்று. (16)

9.—புதனுக்கும் இளைக்கும் புதல்வனாகப் புரூரவா தோன்றுதல்.

புதனுமந்தமென்பூவையும் புரூரவாவினைத்தஞ்
சுதனெனும்படிதோற்றுவித் தனரவன்றோன்றி
இதநலம்பெறுமழகினுந் திறலினுமிலங்கி
மதனனுங்கலைமுருகனு மெனும்படிவளர்ந்தான்.

(இ - ள்.) புதனும்—, அந்த மெல் பூவைஉம்-அந்தமெல்லிய பூவைபோன்ற இளையும், புரூரவாவினை-புரூரவஸ்என்பவனை, தம் சுதன் எனும்படி - தம்முடைய புதல்வனென்று (யாவரும்) சொல்லும்படி, தோற்றுவித்தனர்-உண்டாக்கினார்கள்: அவன்-அந்தப் புரூரவசு, தோன்றி - பிறந்து, இதம் - நன்மைக்குணத்துடனே, நலம்பெறும் அழகின்உம் - சிறப்புப்பொருந்திய அழகிலும், திறலின்உம்-வலிமையிலும், இலங்கி-விளங்கி, மதனன்உம் - மன்மதனும், கலை முருகன்உம் - போர்க்கலையில்வல்ல முருகக்கடவுளும், எனும்படி-என்று (கண்டோர்) கூறும்படி, வளர்ந்தான்—; (எ-று.)

அழகிற்கு மன்மதனும், அழகு திறல் என்ற இரண்டிற்கும் முருகக்கடவுளும் உவமையாவர்: இனி, மெல்லியமலர்களைக் கொண்டு மூவுலகத்து ஆடவர்மகளிரையெல்லாம் வெல்லும் வல்லமை பெற்றுள்ளான் மன்மதனென்ற காரணத்தால், அழகு திறல் என்ற இருதன்மையிலுமே இருவரும் உவமையாவரென்றலும் ஒன்று. பின்னிரண்டடியை முறைநிரனிறையாகக் கொள்வாருமுளர். பூவை - நாகணவாய்ப்புள்: அதுபோல் இன்குரலையுடைய பெண்ணுக்கு, உவமவாகுபெயர். (17)

**10.—இதுமுதல் மூன்றுகவிகள்-அசுரர்கவர்ந்துசென்ற உருப்பசியைப் புரூரவா மீட்டு, இந்திரன் தூதினூற் பூமியில் மணந்திருந்தமை கூறும்.**

**பொருப்பினைச்சிறகரிந்தவன் புரத்துமங்கையருள்**
**உருப்பசிப்பெயரொண்டொடி யுருவினிற்சிறந்தாள்**
**தருப்பொழிற்பயில்காலையிற் றானவர்காணு**
**விருப்புறக்கவர்ந்தேகின ரவளுடன்விசும்பில்.**

(இ-ள்.) பொருப்பினை சிறகு அரிந்தவன்-மலைகளின் சிறகை (வச்சிராயுதத்தினல்) அரிந்திட்டவனான தேவேந்திரனுடைய, புரத்து-அமராவதிபட்டணத்திலே வாழ்கின்ற, மங்கையருள்-அப்ஸரஸ் ஸ்திரீகளுக்குள்ளே, உருவினில் சிறந்தாள்-வடிவழகினல் மேம்பட்டவளான், உருப்பசிப்பெயர்ஒள் தொடி-உருப்பசியென்று பேர்பெற்ற அழகிய தொடியினைப் பூண்டவளாகிய பெண், தரு பொழில் பயில் காலையில் - மரங்களைக்கொண்டசோலையிலே சஞ்சரிக்கும்போது, தானவர் காணு-சில அசுரர்கள்(அவளைக்)கண்டு, விருப்புஉற-(அவளிடத்து) விருப்பந்தோன்றியதனுல், கவர்ந்து-(அவளைக்) கவர்ந்துகொண்டு, விசும்பில் - ஆகாயவழியே, அவளுடன் ஏகினர் - அவளுடன் சென்றூர்கள்; (எ-று.)

முற்காலத்தில் மலைகளெல்லாம்சிறகுடையனவாயிருந்து,ஊர்களின் மேலிருந்து அழித்துவருதல்கண்டு முனிவர் முதலியோர் முறையிட,இந்திரன் தன் வச்சிராயுதத்தால்அவற்றின் சிறகுகளை யறுத்திட்டானென்ற கதைபற்றி, 'பொருப்பினைச் சிறகரிந்தவன்' என்றது. உருப்பசி உருவாற் சிறந்திருந்தது, அன்னூரை அசுரர் கவர்தற்கு ஏதுவாயிற்றெனக. உருப்பசி - ஊர்வசியென்ற வட சொல்லின் திரிபு. பதரிகாச்சிரமத்தில் திருமால் நாராயணரூபியாயிருந்து தவஞ்செய்ய அத்தவத்தைக் கெடுக்கும்படி மேனைமுதலிய தேவமாதர் வர, நாராயணமுனிவர் தமது ஊருவினின்றும் [தொடையினின்றும்] ஓர் கட்டழகியைப் படைத்தனுப்ப, அங்ஙனம் படைக்கப்பட்ட அம்மாதின் கட்டழகைக்கண்டு அத்தேவமாதரெல்லாம் வெள்கிப் பின் அவளைத் தம்முடன் சேர்த்துக்கொண்டன ரென்பது வரலாறு. அங்ஙனம் நாராயண முனிவரின் ஊருவினின்று தோன்றிய காரணம்பற்றி, அம்மாது ஊர்வசி யென்று பேர்பெற்றூள். மித்திரனென்ற சூரியனது சாபத்தால் இவள் பூமியில் புரூரவஸோடு வசிக்குமாறு நேர்ந்ததென்ப. ஒண்டொடி-பண்புத்தொகையன்மொழி. தாநவர் - கசியபமுனிவர் மனைவியருள் தனு என்பாளிடம் தோன்றியவர். (18)

**11. கொண்டுபோதலுமபயமென் றுருப்பசிகூவ**
**அண்டர்யாவருமஞ்சின ரவருடனடுபோர்**
**வண்டுசூழ்குழலணங்கையிம் மதிமகன்மகனும்**
**கண்டுதேர்நனிகட்வின னசுரர்மெய்கலங்க.**

(இ-ள்.) கொண்டு போதலும்-(அசுரர்கள் உருப்பசியை அவ்வாறு) கொண்டுபோனவளவிலே, உருப்பசி-உருப்பசியென்ற அந்தத் தெய்வமங்கை, அபயம் என்று—,கூவ-கதற,-(அதுகேட்டு),

அண்டர்யாவர்உம்-தேவர்களெல்லாரும், (அந்த ஊர்வசியை மீட்கும் பொருட்டு), அவருடன்-அந்த அசுரர்களுடனே, அடு போர்-(உயிரைக்) கொல்லவல்ல போரைச்செய்வதற்கு, அஞ்சினர்-பயந்தார்கள்: வண்டு சூழ் குழல் அணங்கை - வண்டுகள் மொய்க்கப்பெற்ற கூந்தலையுடைய தெய்வமகளாகிய அந்த ஊர்வசியை, இமதி மகன் மகன்உம்-இந்தச்சந்திரனுடைய புத்திரனாகியபுதனுக்கு மகனானபுரூரவசும், கண்டு-(அசுரர் கவர்ந்துசெல்வதைப்)பார்த்து, அசுரர் மெய் கலங்க-(தான் வருகின்ற நிலையைக் கண்டே) அந்த அசுரர்கள் உடல் நடுங்கும்படி, தேர் - (தன்னுடைய) இரதத்தை, நனி கடவினன் - மிகவும் வேகமாகத் தூண்டி (அசுரர்செல்லுமிடத்து)ச் செலுத்தினான்; (எ-று.)

அபயம் என்ற வடசொல் - அச்சமில்லாமற் காக்கவேண்டிய பொருளாவேன் யான் என்பதைக் குறிப்பிக்கும். போதலும்-உம் மீற்று வினையெச்சம். தனிகடவினனென்றும் பாடமுண்டு. (19)

**12.** **நிறந்தருங்குழலரிவையை நிறுத்திவாளவுணர்**
**புறந்தரும்படிபுரிந்தபின் புரந்தரன்றூதால்**
**மறந்தருங்கழன்மன்னவன் மண்மிசையணைந்து**
**சிறந்தவன்பொடத்தெரிவையை நலம்பெறச்சேர்ந்தான்.**

(இ-ள்.)நிறம் தரும்-ஒளிபொருந்திய,குழல் அரிவையை-கூந்தலழகியாளாகிய அந்த உருப்பசியை, நிறுத்தி - (அசுரர் கொண்டு போகமுடியாதபடி) தடுத்து,—வாள் அவுணர்-வாள்போற்கொடியவரான அந்த அசுரர்கள், புறம் தரும்படி - முதுகுகொடுத்து ஓடும்படி, புரிந்தபின்-செய்தபின், புரந்தரன் தூதால் - இந்திரனுடைய தூதுவனால், மறம் தரும் கழல் மன்னவன்-(தன்) வீரத்தைக்காட்டியவனான வீரக்கழலையணிந்தஅந்தப்புரூரவமன்னவன், மண்மிசை அணைந்து-பூமியின்மீது சேர்ந்து, சிறந்த அன்பொடு-மிக்ககாதலோடு, அத் தெரிவையை-அந்த உருப்பசி நங்கையை, நலம் பெற - இன்பமுண்டாக, சேர்ந்தான் - (அன்னாளோடு) கூடியிருந்தான்; (எ-று.)

ஊர்வசியைப் புரூரவாமீட்டதனையறிந்த இந்திரன்,ஒரு தூதுவனைஅந்தப் புரூரவசினிடம்அனுப்பி அவளைமணந்து சிலகாலம் பூமியில் வாழ்ந்திருக்குமாறு பணிக்க, அந்தப்பணியின்படியே அந்த ஊர்வசியை அம்மன்னவன் மணந்து சுகித்திருந்தனனென்க. நலம்-ஆகுபெயரால், நல்ல இன்பத்தைக் காட்டிற்று.(20)

**13.—புரூரவசுக்கு அந்த ஊர்வசியினிடம் ஆயுவென்பவன் பிறத்தல்.**

**மாயனூருவின்வந்தருளந்தமான்வயிற்றில்** உருப்பசி
**ஆயுவென்றொருசெம்மலை யம்மகனளித்தான்**
**தேயுவும்பலதேவரு மகிழமற்றிவனே**
**மேயவண்புகழ்வேந்தரில் வேள்வியான்மிக்கோன்.**

(இ-ள்.) அ மகன் - அந்தப் புரூரவசு,—மாயன் ஊருவின் வந்தருள் அந்த மான் வயிற்றில்-மாயைக்குணமுடையவனாகிய திருமாலின் தொடையினின்றுதோன்றிய அந்த மான்போன்ற (பார்

வையையுடையவளான)உருப்பசியின் வயிற்றிலே, ஆயு என்றஒரு செம்மலை-ஆயுவென்று பேர்படைத்த செம்மைக்குணமுடையஒரு புத்திரனை, அளித்தான் - தந்தான்: வண் புகழ் மேய வேந்தரில்- சிறந்த புகழ் பொருந்திய அரசர்களுக்குள், இவன்ஏ - இந்த ஆயுவே, தீயுஉம்-அக்கினிதேவனும், பல தேவர்உம்-பல தேவர் களும், மகிழ - உவகைகொள்ளுமாறு, வேள்வியான் மிக்கோன்- யாகத்தினால் மேம்பட்டவன்; (எ-று-)—மற்று-அசை.

வேள்வியை இந்தப் புரூரவன் புத்திரனான ஆயுவென்பவன் மிகுதியாகச் செய்தானாதலால், தமக்கு அவியுணா மிகுதியாகக் கிடைப்பதுபற்றித் தேவரும், வேள்வியில் தலைமையிருத்தலால் அந்த அனற்கடவுளும் மகிழ்வாராயினர்: மான் - உவமையாகு பெயர். ஊரு-தொடை: தற்சம வடசொல். (21)

14.—ஆயுவின்மைந்தன் நகுட னென்பவன்.

முகுட்மும்பெருஞ்சேனையுந் தரணியுமுற்றுஞ்
சகுடநீரெனச்சதமகம் புரியருந்தவத்தோன்
நகுட்நாமவேனராதிப னுகருக்கரசாய்
மகுடமேந்தியகுரிசிலா யுவின்றிருமைந்தன்.

(இ-ள்.) முகுடம் உம்-(தான் அணிந்திருந்த)கிரீடமும்,பெருஞ் சேனைஉம்-(ஆளுவதற்குக் கருவியான) மிக்கசேனையும்,தரணிஉம்- (ஆளப்படும்) உலகமும், முற்றுஉம்-(ஆகிய) யாவற்றிலும், சகுடம் நீர் என-சேம்பினிலையில் நீர்போல, (பற்றற்றவனாய்),-சதமகம்புரி- நூறு அசுவமேத யாகங்களைச் செய்த, அருந் தவத்தோன் - அரு மையான நோன்பினையுடையவனாகிய, நகுடன் நாமம் வேல் நராதி பன்-நகுடனென்றுபேர்பெற்ற வேற்படையையுடைய மன்னவ னாகி, நாகருக்கு அரசு ஆய் - தேவலோகத்தார்க்கும் அரசனாகி, மகுடம் ஏந்திய குரிசில் - தேவேந்திரன் முடியைத்தரித்த சிறந் தோன்,—ஆயுவின் திரு மைந்தன்-அந்த ஆயுவின் சிறந்த புதல் வனாவன்; (எ-று.)

ஆயுவின் புத்திரன் நஹுஷன்: இவன்பற்றற்றுநின்று தவத் தைச்செய்து நூறு அசுவமேதயாகமுஞ் செய்து முற்றியதனால், தேவேந்திரபதவி பெற்று வானவர்க்கரசனுமாயினானென்பதாம். சேம்பிலையில் நீர் இருந்தும் சேம்பு அதில் ஒட்டின்றியிருப்பது போல இந்நகுஷனிடத்து முகுடம் சேனை முதலியன இருந்தும் அவற்றிற் பற்றுவையாதிருந்தமை முன்னிரண்டடிகளில் விளக் கப்பட்டது. முகுடம்-கிரீடத்திறோருறுப்பு. அது-ஆகுபெயரால், கிரீடத்தைக் காட்டிற்று. சகுடம்-சேம்பு: அதன் இலைக்கு முத லாகுபெயர்.நராதிபன்-தீர்க்கசந்திபெற்றவடமொழித்தொடர்.(22)

15.—நகுடன் அகத்தியசாபத்தாற் சர்ப்பமாதல்.

புரந்தரன்பதம்பெற்றபின் புலோமசைமுயக்கிற்கு
இரந்துமற்றவளேவலின் யானமுற்றேறி
வரந்தருங்குறுமுனிமுனி வாய்மையான்மருண்டு
நிரந்தரம்பெரும்புயங்கமா னவனுமந்நிருபன்.

அகத்தியன்
நகுடன்

(இ-ள்.) புரந்தரன் பதம்-இந்திரபதவியை,பெற்ற பின்-(அந்த நகுடன்) பெற்றபின்பு, புலோமசை முயக்கிற்கு-இந்திராணியைத் தழுவுதலை, இரந்து-வேண்டி, மற்று-பிறகு,அவள் ஏவலின்-அந்த இந்திராணியின் கட்டளைப்படியே, யானம்-பல்லக்கை, உற்று-பொருந்தி, ஏறி—,—வரம் தரும்-வரங்கொடுக்கவல்ல, குறு முனி-அகத்தியமுனிவன், முனி - சினந்துகூறிய, வாய்மையால் - (வெகுளிச்) சொல்லால், மருண்டு-மனமயக்கங்கொண்டு, நிரந்தரம்-நிலையாக, பெரும் புயங்கம் ஆனவன்உம்-பெரிய சர்ப்பமானவனும்,அ நிருபன்-அந்த நகுடமன்னவன்; (எ-று.)

புரந்தரன்-பகைவரின் புரத்தை [உடலை அல்லது பட்டணத்தை]ப் பிளப்பவ னென்று அவயவப்பொருள்படும். புலோமஜா என்ற வடசொல்-புலோமனென்ற அசுரனிடத்தினின்று பிறந்தவளென்று பொருள்படும்: இது,இந்திராணியின் பெயராகும். புஜங்கமென்ற வடசொல்-மார்பினாற் செல்வதென்றேனும், வக்கிரமாகச் செல்வதென்றேனும் உறுப்புப்பொருள்படும். சந்திரகுலத்தவனை நகுடனென்ற இவன் நூறு அசுவமேதயாகஞ்செய்து இந்திரபதவி பெற்றுச் சிவிகையேறிச்செல்கின்றகாலத்து இந்திராணிமேல் வைத்த காதல்மிகுதியால் தன்சிவிகையைத் தாங்கிச்செல்கின்ற ஏழுமுனிவர்களுள் குறுமுனிவராதலால் மெதுவாய்நடந்த அகத்தியரைநோக்கி, விரைவிற்செல்க என்பான் 'ஸர்ப்ப ஸர்ப்ப' [ஓடு ஓடு] என்று கூறினுகை, அகஸ்தியர் வெகுண்டு 'நீ சர்ப்பமாகுதி' என்று சபிக்க,அவன் அவ்விந்திரபதவியிழந்து உடனே பாம்பாகி நிலத்திற்கிடந்தா னென்பது வரலாறு. (23)

## 16.—நகுடன்புதல்வன் யயாதி.

மற்றவன்றிருமைந்தன்வின் மைந்தினுலுயர்ந்த
கொற்றவன்றிறற்கொற்றவைக் கிருபுயங்கொடுத்தோன்
முற்றவன்பகைமுகங்கெட முகந்தொறுந்திசையிற்
செற்றவன்பெருஞ்செற்றமில் குணங்களிற்சிறந்தோன்.

(இ-ள்.) அவன் திரு மைந்தன்-அந்தநகுடனது சிறந்த புத்திரன்,-வில் மைந்தினுல்உயர்ந்த கொற்றவன்-வில் வலிமையினுல் மிக்க வெற்றியையுடையவன்: திறல் கொற்றவைக்கு இரு புயம் கொடுத்தோன்-வலிமைக்கு உரிய தேவதையாகிய வீரலட்சுமிக்கு(த்தன்னுடைய) இரண்டு தோள்களையும் வாழுமிடமாகக் கொடுத்தவன்: வல் பகை முற்ற-(தன்னுடைய)வலிய பகைவர்யாரையும், திசையில் முகந்தொறுஉம்முகம் கெட-எல்லாத் திக்குக்களினிடங்களிலும் சிதைந்தோடும்படி, செற்றவன்-அழித்தவன்: பெருஞ் செற்றம் இல் குணங்களில் சிறந்தோன் - (கொடுமை) மிக்க சினமென்ற துர்க்குணத்தைப் பெருமல் நற்குணங்களினுல் மிக்கவன்: (எ-று.)—இவன் பெயர் யயாதிஎன்பது, மேற்செய்யுளிற் பெறப்படும்.

கொற்றவை - வெற்றிக்குரியதேவதை: ஆதலால், அவளை வீரர்களின் புயத்தில் வாழ்பவ ளெனக் கவிஞர் கூறுவர். பகை-ஆகுபெயர். வேன்மைந்தினிலுயர்ந்து என்றும் பாடம். (24)

**17.—அந்த யயாதி சுக்கிராசாரியர்புதல்வியைமணந்து இருபுதல்வரைப் பெறுதல்.**

யயாதியென்றுகொண்டிவனையே யெவரினுஞ்சிறக்க
வியாதனும்புகழ்ந்துரைத்தது மற்றிவன்மேனுள்
புயாசலங்களுக்கிசையவே புகரவன்புதல்வி
குயாசலந்தழீஇயிருவர்வெங் குமரரையளித்தான்.

(இ-ள்.) இவனை எ - இந்நகுடனது புத்திரனையே, யயாதி என்றுகொண்டு - யயாதியென்றுபாராட்டிக்கொண்டு, எவரின்உம் சிறக்க-யாவரினும் மேன்மைபெறும்படி, வியாதன்உம்-வியாசமகரிஷியும், புகழ்ந்து உரைத்தது-புகழ்ந்து கூறியது: மேல்நாள்-முற்காலத்தில், இவன்-இந்தயயாதி, புயஅசலங்களுக்கு இசைய-(தன்னுடைய) மலைபோன்ற புஜங்களுக்குஏற்க, புகரவன் புதல்வி-சுக்கிராசார்யருடைய புத்திரியின், குய அசலம் தழீஇ-மலைபோன்ற தனங்களைத் தழுவி, வெம் குமரர் இருவரை-கொடுங்குணமுடைய இரண்டு புத்திரர்களை, அளித்தான்—; (எ-று.)

புயாசலங்களுக்குஇசையக் குயாசலந் தழுவினனென்று நயம் காண்க: மலையோடு மலை சேர்தலியல்பாதல் அறிக. யயாதியின் உபாக்கியானம் வியாசபாரதத்து விரிவாகக் கூறப்பட்டிருத்தலால், யயாதியென்றுகொண்டு வியாதனும் புகழ்ந்துரைத்தது இவனையே யென்றார். புகரவன் புதல்வியின் பெயர், தேவயானை யென்பது. இருவர்குமரர்-யது துருவசுஎனப்படுவர்: வெங்குமர ரென்றது-இவர்கள் தந்தைசொல்லைக்கேளாதவராதலால்; இத்தன்மை, மேல் இருபத்துமூன்றாங் கவியில் விளங்கும். மற்று-அசை. (25)

**18.—இதுவும்அடுத்தகவியும்-தேவயானைக்குப் பணிப்பெண்ணும் விடபன்மனென்னும் அசுரமன்னன்மகளுமான சன்மிட்டையை, யயாதி, கந்தருவமணத்தாற் சேர்ந்தமை கூறும்.**

அன்னகாலையிலிவடன தாருயிர்த்துணையாய்
முன்னிசைந்தபேரிசைவினு லேவலின்முயல்வாள்
நன்னலந்திகழ்கவிதனக் குரைகெழுநண்பாம்
மன்னவன்றருமடவர லிவனுழைவந்தாள்.

(இ-ள்.) அன்ன காலையில்-அக்காலத்தில், இவள் தனது-இந்தத் தேவயானையின், ஆர்உயிர்துணை ஆய்-அரியஉயிர்த்தோழியாய்,முன் இசைந்த பேர் இசைவினுல் ஏவலின் முயல்வாள்-முன்னம் உடன்பட்ட மிக்க உடன்பாட்டின்படியே (அந்தத்தேவயானையின்) ஏவலைமுயன்றுசெய்பவளான, நல் நலம் திகழ் கவி தனக்கு உரை கெழு நண்பு ஆம் மன்னவன் தரும் மடவரல்-மிக்க நற்குணத்தால் விளங்குகின்ற சுக்கிராசாரியனுக்குப் புகழ்ந்து கூறப்படும் நண்பனான (வ்ருஷபர்வனென்ற) அசுரமன்னவன் பெற்ற பெண், இவனுழை-இந்தயயாதியினிடத்து, வந்தாள்—; (எ-று.)

சன்மிட்டையென்பவள் - அசுரகுருவான சுக்கிராசார்யர்க்கு நண்பனான வ்ருஷபர்வன்மகள்: சுக்கிராசார்யரின்புத்திரி தேவ

யானையும் விடபன்மன்மகளான சன்மிட்டையும் உயிர்ப்பாங்கியரா யிருந்தனர். ஒருகால் சன்மிட்டை தன்னைச் சினந்துபழித்த தேவ யானையைக் கிணற்றில் தள்ளினளாக, அதனையறிந்த விடபன்மன் தன்மகளைத் தேவயானையின் விருப்பிற்கு ஏற்ப அன்னாளுக்குப் பணிப்பெண்ணாக்கினான்: சன்மிட்டையும் தன் தந்தைகூறியபடி அந்தத்தேவயானைக்கு ஏவல்செய்தொழுகுபவளாயினாளென்ற விஷயம், முன்னிரண்டடிகளில் அறியத்தக்கது. கவியென்பது சுக் கிராசார்யரின் பெயர்களுள் ஒன்று. (26)

19. ஆழிமன்னனவ்வணங்கினை யணங்கெனக்கண்டு
பாழிவன்புயம்வலந்துடித் துடலுறப்பரிந்து
வாழிதன்மனைமடவர லறிவுருவண்ணம்
யாழினோர்பெரும்புணர்ச்சியி னிதயமொத்திசைந்தான்.

(இ-ள்.) ஆழி மன்னன் - ஆஜ்ஞாசக்கரத்தையுடைய யயாதி யரசன், அ அணங்கினை - அந்த அழகிய சன்மிட்டையை, அணங்கு என கண்டு - தெய்வப்பெண்போற் கட்டழகியாளாகப்பார்த்து, பாழி வல் புயம் வலம் துடித்து - மிக்க வலிமைபொருந்திய தோள் களில் வலத்தோள் துடிக்கப்பெற்று, உடல் உற பரிந்து - (அவளு டைய) உடம்பைச் சேர மனத்திற்கருதி, தன் மனை மடவரல் அறி வுரு வண்ணம் - தன்மனைவியாகிய தேவயானை அறியாதபடி, யாழி னோர் பெரும் புணர்ச்சியின் - கந்தருவர்களின் பெருமை பெற்ற மணத்தினால், இதயம் ஒத்து இசைந்தான் - மனமொத்து மணந் தான்; (எ-று.) — வாழி - அசை.

மிக்க கட்டழகியான அந்தச் சன்மிட்டையை ஒருகால் யயாதி மன்னவன் கண்டு காதல்கொண்டு, தன்மனைவியறியாதபடி அவளை மணக்கவேண்டுமென்ற கருத்தினால் காந்தர்வவிவாகத்தினால் மணந்துகொண்டானென்பதாம். சுக்கிராசார்யன் தேவயானையை யயாதிக்கு மணஞ்செய்து கொடுக்கும்போது அவளுக்குத்தோழி யும் பணிப்பெண்ணுமான சர்மிஷ்டையையும் போஷிக்குமாறும், ஆனால் மணக்கக்கூடாதென்றும் சொல்லிக்கொடுத்தானென்று வியாசபாரதத்தி லுள்ளது. "அறநிலையொப்பே பொருள்கோ டெய்வம், யாழோர்கூட்ட மரும்பொருள் வினையே, யிராக்கதம் பேய்நிலையென்றிக்கூறிய, மறையோர் மன்றலெட்டிவை" என்பத னால், எண்வகைமணம் இன்ன வென்றும், அவற்றுள் யாழோர் கூட்டமென்பதொன்று என்றும் அறியலாம்: இவ்வெண்வகை மணத்துள் யாழோர்கூட்டமாவது - ஆணும்பெண்ணுமாகிய இருவர் ஒத்தார்தாமே கூடுங் கூட்டம்: இது, காந்தர்வவிவாஹ மெனச் சிறப்பித்துச் சொல்லப்படும். வலப்புயந்துடித்தல், அண் மைக்காலத்தில் நிகழவிருக்குஞ் சுபத்தைத் தெரிவிக்கும் முற் குறியாகிய நன்னிமித்தம். (27)

20.— சன்மிட்டை பூருஎன்பவனைப் பெறுதல்.

சாருமன்பினிற்கற்பினிற் சிறந்தசன்மிட்டை
சேருமைந்தினுமுயர்வினுந் தேசினுஞ்சிறந்து
மேருவென்றிடமேதினி யாவையுந்தரிப்பான்
பூருவென்றொருபுண்ணியப் புதல்வனைப்பயந்தான்.

(இ - ள்.) சாரும் - பொருந்தியுள்ள, அன்பினின் - அன்பினாலும், கற்பினின்-கற்பினாலும், சிறந்த - மேம்பட்டிருந்த, சன்மிட்டை - சர்மிஷ்டா என்பவள்,—சேரும் மைந்தின்உம் உயர்வின்உம் தேசின்உம் சிறந்து - (தன்னிடத்துப்) பொருந்திய வலிமையினாலும் மேன்மையினாலும் ஒளியினாலும் மேம்பட்டவனாய், மேரு என்றிட மேதினி யாவைஉம் தரிப்பான் - மேருமலையென்று சொல்லுமாறு பூமிமுழுவதையும் தாங்குபவனான, பூரு என்ற ஒரு புண்ணியப் புதல்வனை-பூருவென்று பேர்கொண்ட ஒப்பற்ற புண்ணியசாலியான புத்திரனை, பயந்தாள் - பெற்றாள்; (எ-று).

மலைகள் பூமியின்மீதிருந்து பூமியைத் தாங்குவதனால், 'பூதரம்' எனப் பெயர் பெறும்: அங்ஙன் அதனைத்தாங்கும் மலைகளுள் மிக மேம்பட்டதாகிப் பூமியின் நடுவிலிருப்பதான மேருவெனப்படும் மலை, பூமியைத்தாங்குபவற்றில் தலைமைபெற்றதென்பது சொல்லாமலே விளங்கும். யயாதியின் புதல்வனான இந்தப் பூரு, தன் தோள்வலிமையாற் பூமிமுழுவதுந் தாங்குவதால், அவனை 'மேருவென்றிட மேதினியாவையுந்தரிப்பான்' என்றது. மேருவென்றிட என்றே பிரிப்பினுமாம். தகப்பனாரின் சொல்லை மீறாது நடப்பவனாதல் பற்றி 'புண்ணியப்புதல்வன்' என்றது. இவன் மூத்தவனல்லாதவனாயினும், தந்தைக்குக்கீழ்ப்படிந்து அவனருள்பெற்று இராச்சியத்துக்கு உரியனாயினனென்ற பொருள் இங்குப் புலப்படும். (28)

**21.—சன்மிட்டையின் புதல்வரால் அன்னாளைத் தன்கணவன் காதலியாகக் கொண்டதை யூகித்துச் சீறித் தந்தையில்லத்தைத் தேவயானை சார்தல்.**

**மருவிளங்கொடியனையமென் மருங்குலாள்பின்னும்**
**இருவர்மைந்தரைப்பயந்தன ளிறைமனைகாணா**
**உருவிளங்கியவுலகுடை நிருபனுக்கிவண்மேல்**
**திருவுளங்கொலென்றழன்றுதன் றாதையிற்சென்றாள்.**

(இ - ள்.) மருவு இளங் கொடிஅனைய மெல் மருங்குலாள் - பொருந்திய இளங்கொடியையொத்த மெல்லிய இடையையுடையவளாகிய சன்மிட்டை, பின்னும்-பூருவைத்தவிர, இருவர் மைந்தரை பயந்தனள்-இரண்டு புதல்வரைப் பெற்றாள்: இறை மனை-அரசன் தேவியாகிய தேவயானை, காணா - (அந்தப்புதல்வரைப்) பார்த்து, (அவர்கள் தன்கணவனது சாயையுடையவரா யிருந்ததனால்), உரு விளங்கிய உலகு உடை நிருபனுக்கு-வடிவத்தினால் விளங்குபவனாகி உலகங்களையெல்லாம் தன்னதாகக்கொண்ட அரசனுக்கு [யயாதிக்கு], இவள்மேல் திருவுளம் கொல் - இந்தச் சன்மிட்டையின்மீது கருத்துப்போலும், என்று - என்றுகருதி, அழன்று-(யயாதி மன்னவனைச்) சினந்து, தன் தாதை இல் சென்றாள் - தன்னுடைய தந்தையாகிய சுக்கிராசாரியரின் வீட்டினையடைந்தாள்; (எ - று.)

பூருவைத்தவிர இன்னும் இரண்டுபுத்திரரைச் சன்மிட்டை பெற, அந்தப் புதல்வரிடத்துத் தன் கணவனது சாயையைக் கண்டு, இந்தச்சன்மிட்டைமீது நம்கணவன் காதல்கொண்டு இப்புத்திரரைப் பெற்றான்போலு மென்று ஊகித்துணர்ந்துதேறி,

தேவயானையின் கோபம்

தான் இருக்கையில் வேருெருத்தியை மணந்த காரணத்தினுல் மன்னவனிடத்துச் சினந்து தன்தந்தையின் வீட்டைத் தேவயாஃன சேர்ந்தனளென்பதாம். பூருவைத் தவிர, சன்மிட்டையின் மற்றை யிருபுதல்வர்-த்ருஹ்யு அனு என்பவர். பூரு-சன்மிட்டையின் ஈற்றுப் புதல்வனுவனென்பது வியாசபாரதத்துப் பெறப்படும். இறைமஃன-இறைவனுக்கு மஃனவி: நான்காம் வேற்றுமைத் தொகை: முறைப்பொருளது,மஃன-மஃனவிக்கு இடவாகுபெயர்.(29)

22.—தேவயாஃன தன்தந்தையினிடம் யயாதி மன்னவனெழுக்கத்தைச் சொல்ல, அந்தச் சுக்கிரனுடைய சாபத்தால் யயாதி முதுமை யடைதல்.

சென்றுதாதையைப்பணிந்திது செப்பலுஞ்சினவேல்
வென்றிமன்னஃனவிருத்தனும் வகையவன்விதித்தான்
அன்றுதொட்டிவஃனம்முதற் பிணியினுலழுங்கி
இன்றுநூறெனநரைமுதிர் யாக்கையோடிருந்தான்.

(இ - ள்.) (தேவயாஃன), சென்று - (தாதையின்வீட்டைச்) சேர்ந்து, தாதையை பணிந்து - (தன்) தந்தையான சுக்கிரஃன வணங்கி, இது செப்பலும்-(தன்கணவன் சன்மிட்டையைமணந்த) இதைச் சொல்லுதலும்,—சினம் வேல் வென்றி மன்னஃன-சினத்தைக்கொண்ட வேற்படைதாங்கிய வெற்றியையுடைய யயாதியரசஃன, விருத்தன் ஆம் வகை-முதுமையுடையோனுகுமாறு, அவன்-அந்தச் சுக்கிராசாரியன், விதித்தான்-கட்டஃளயிட்டான் [சபித்தான்]: அன்றுதொட்டு - (சுக்கிரன் சபித்த) அந்தநாள்முதல், இவன்-இந்த யயாதி மன்னவன், ஐ முதல் பிணியினுல்-சிலேட்டுமத்தைத் தஃலமையாகக்கொண்ட நோயினுல், அழுங்கி-வருந்தி, இன்று நூறு என-இப்போது (இவனுக்கு) நூறுவயசு (ஆய்விட்டது) என்று (இவன் முதுமைகண்டு யாவரும்) சொல்லும்படி, நரை முதிர் யாக்கையோடு - கிழத்தனத்தினுல் முதிர்ந்த சரீரத்துடனே, இருந்தான்—;(எ - று.)

விருத்தன்=வ்ருத்தன்: வடசொல். முதுமைப்பருவத்துச் சிலேட்டுமம் விஞ்சிய இருமல்வியாதி தோன்றுத லியற்கையாதலறிக. (30)

23.—யயாதி தன் மைந்தர்களோவ்வொருவரையும் இளமையைத் தந்து தன் முதுமையைப் பெறுமாறு கேட்க, பூருவே இசைதல்.

அந்தமன்னவன்மைந்தரை யழைத்தெனக்குசனுர்
தந்தமூப்பைநீர்கொண்மினும் மிளமைதந்தென்ன
மைந்தர்யாவருமறுத்திடப் பூருமற்றவன்றன்
இந்தமூப்பிஃனக்கவர்ந்துதன் னிளமையுமீந்தான்.

(இ - ள்.) அந்த மன்னவன் அந்தயயாதியரசன், மைந்தரை-(தன்) புத்திரரான யதுமுதலியோர்கஃள, அழைத்து—, 'எனக்கு-, உசனுர்-சுக்கிராசார்யர், தந்த-(சாபமூலமாகக்) கொடுத்த, மூப்பை-முதுமையை, நும் இளமை தந்து - உங்களுடைய இளமையைக் கொடுத்திட்டு, நீர் கொண்மின் - நீங்கள் கைக்கொள்ளுங்கள்,' என்ன-என்றுவேண்ட,—மைந்தர் யாவர்உம் மறுத்திட-(பூருவை

யொழிந்த மற்றைப்) புதல்வர்யாவரும் (அவ்வேண்டுகோட்கு இசையாது) மறுத்துவிட,—பூரு-பூருவென்பவன், அவன்தன்-அந்த யயாதியினுடைய, இந்நரைப்பினை - இந்த முதுமைப்பருவத்தை, கவர்ந்து-பெற்றுக்கொண்டு, தன் இளமைஉம் ஈந்தான்-தன் இளமைப் பருவத்தையும் (அந்தத் தந்தைக்குக்) கொடுத்தான்;(எ - று.)

சுக்கிராசாரியர் சபித்தபோது யயாதிமன்னவன் சாபவிமோசனங்கேட்க, அவர் வேண்டுமானல், இந்த ஐரையை [மூப்பை] அயலார்க்குப் பண்டமாற்றுப்போற்கொடுக்குமாறு அருள்புரிந்தாரென்று வியாசபாரதத்திற் கூறியுள்ளது. உசனர் - 'ஆர்' உயர்த்தற்கண்வந்தது: சபித்திட்டமைபற்றிய வெகுளியினல் இழித்தற்கண்வந்ததென்பாருமுளர். உசன்=உசநஸ். (31)

**24.—பூருவினிளமைகொண்ட யயாதி, மனஞ்சலிக்கக் காமவின்ப நுகர்ந்து பின் அந்தப்பூருவுக்கு இளமையைத் தந்திடுதல்.**

**விந்தைபூமகண்முதலிய மடந்தையர்விரும்ப**
**முந்தைமாமணம்யாவையும் பலபகன்முற்றிச்**
**சிந்தையாதரந்தணிந்தபின் சிந்தனையின்றித்**
**தந்தைமீளவுமிளமைதன் றனயனுக்களித்தான்.**

(இ - ள்.) விந்தை-வீரலட்சுமியும், பூமகள்-பூமிதேவியும், முதலிய—, மடந்தையர் - பெண்டிரும், விரும்ப - விருப்பங்கொள்ள, (இளமையைப்பெற்று), தந்தை - (பூருவின்) தகப்பனை அந்த யயாதி, முந்தை மா மணம் யாவைஉம்-பழமையான (வாத்ஸ்யாயநம் என்ற நூலிற் கூறிய) சிறந்த கரணங்களெல்லாவற்றையும், பல பகல் முற்றி-பல தினங்களில் நுகர்ந்து திருத்தியடைந்து, சிந்தை ஆதரம் தணிந்த பின்-மனத்திலிருந்த இச்சை அடங்கிய பின்பு, சிந்தனை இன்றி-(காமவின்பத்தில்) நசையற்று, மீளஉம் - மீண்டும், இளமை-(தான் பூருவினிடத்துப்பெற்ற) இளமையை, தன் தனயனுக்கு அளித்தான் - தன்புத்திரனுகிய அந்தப் பூருவுக்கே கொடுத்திட்டான்;'(எ - று.)

இளமைப்பருவம் வந்ததற்கு ஏற்ப, வீரம் முதலியனவும் உடம்பில் தோன்றியதனல், வீரத்துக்குஉரிய தேவதையாகிய வீரலட்சுமியும், வீரத்தினுற்காக்கப்படுபவளாகிய பூமிதேவியும் ஆகிய இம்மடந்தையரும் சன்மிட்டைபோலவே இந்த யயாதியினிடத்து விருப்பங்கொள்ளலானுர்களென்பது முதலடியின் பொருள். வீரலட்சுமி விந்தியமலையில் வசிப்பவளென்ற காரணத்தினல், 'விந்த்யவாஸிநீ' என்று ஒரு பெயர் பெறுவள்: 'அச்சொல் விந்தை' என்று சிதைந்து வந்தது. மணமென்பது-மகளிரோடு கூடும் கலவி வகைகளை: அவை கரணங்க ளெனப்படும். (32)

**25.—பின்பு அரசவுரிமை முதலியவற்றை யயாதி பூருவுக்கே அளித்தல்.**

**இடியுமாறுகொணெடுமொழி யயாதியன்றிவற்கே**
**முடியுமாலையுமுத்தவெண் கவிகையுமுரசும்**
**படியும்யாவையும்வழங்கியெம் பனிமதிமரபிற்**
**கடியுநீயினியெனமகிழ்ந் தளியுடனளித்தான்.**

(இ - ள்.) இடிஉம் ஆறு கொள் நெடுமொழி-இடியும் தணியும் கம்பீரத்தொனிகொண்ட சொற்களையுடைய, யயாதி—, அன்று-(இளமையைத் திருப்பிக் கொடுத்த) அப்போது, (அந்தப் பூருவை நோக்கி), 'எம் பனி மதி மரபிற்கு - எம்முடையதான குளிர்ந்த சந்திரனிடத்துவந்த (இந்த) வமிசத்துக்கு, அடிஉம்-காரணமா யிருப்பவனும், இனி—, நீ—,' என-என்று சொல்லி, மகிழ்ந்து-உவகைகொண்டு,—'இவற்கு ஏ-இந்தப் பூருவுக்கே,முடிஉம்-(பரம்பரையாகவந்த) அரசகிரீடமும், மாலை உம்-(தன் மரபினர்க்குரிய) அடையாளப் பூமாலையும், வெள் முத்தம் கவிகைஉம்-வெள்ளிய முத்துக்குடையும், முரசும்—, படிஉம்-பூமியும், யாவைஉம் - (ஆகிய) எல்லாமும், (உரியன என்று),' வழங்கி - சொல்லி, அளியுடன்-அன்போடு, அளித்தான்-கொடுத்தான்; (எ - று.)

அரசர்க்குஉரிய தசாங்கத்தில் ஈண்டுக்கூறியன ஒழிந்த மற்றவை 'யாவையும்' என்பதனாற் குறிக்கப்பட்டன. தன் முதுமையைக்கொண்டு இளமையைத் தன் விருப்பின்படி தந்து தன் மனவிருப்பத்தை நிறைவேற்றியதனால் மனமுவந்த தந்தை 'சன்மிட்டையின் குமாரனான பூருவுக்கும் அவன் சந்ததியார்க்குமே இராச்சியம் உரியதாகுக' என்று சொல்லி, தன்னுடைய அரசாட்சியை அந்தப் பூருவுக்கே கொடுத்தனனென்க. (33)

**26.—பூருவின் குலத்திலே பரதன் என்று ஒரு மன்னவன் தோன்றுதல்.**

**விரதமிஞ்சியவேள்வியாற் கேள்வியான்மிக்கான்**
**சுரதமங்கையர்முலைக்குவ டணிவரைத்தோளான்**
**பரதனென்றெருபார்த்திவன் பரதமுமிசையுஞ்**
**சரதமின்புறவக்குலந் தனிலவதரித்தான்.**

(இ-ள்.) விரதம் மிஞ்சிய - விரதத்தை மிகுதியாகக்கொண்ட, வேள்வியால்-யாகத்தினாலும், கேள்வியால்-கேள்வியினாலும், மிக்கான் - மேம்பட்டவனும், சுரதம் மங்கையர் - சுரதத்திற்கு உரிய மகளிரின், முலை குவடு அணி - முலையினுச்சி அணியப்பெற்ற, வரை தோளான்-மலைபோன்ற தோளையுடையவனுமான, பரதன் என்ற ஒரு பார்த்திவன்-பரதனென்று பேர்பூண்ட ஓரரசன், பரதம்உம் - நாட்டிய சாஸ்திரமும், இசைஉம்-சங்கீத சாஸ்திரமும், சரதம் இன்புற-இனிதி னின்பமடைய, அ குலம் தனில் - அந்தப் பூருவின் குலத்திலே, அவதரித்தான்-பிறந்தான்; (எ - று.)

பூருவின் வமிசத்தில் தோன்றிய பரதன் வேள்வி கேள்விகளில் மிக்கவனாக இருந்ததுபோலவே, சங்கீதம் நாட்டியம் என்னும் இவற்றிலும் மிக்கவனாகியிருந்தா னென்க. இந்தப் பரதன் துஷ்யந்த மகாராசனுக்குச் சகுந்தலையினிடம் தோன்றியவன். கேள்வி-ச்ருதி யென்ற வடசொல்லின் பொருளது எனினுமாம். பார்த்திவன்-பிருதிவிக்குத்தலைவனென்று பொருள்படும். (34)

27.—பரதமன்னவன் சிறப்பு.

சுரசமூகமுஞ்சுராரிகள் சமூகமுஞ்சூழ
விரசுபூசலின்வாசவ னடுங்கிவெந்திடுநாள்
அரசர்யாவருமறுமுகக் கடவுளென்றயிர்ப்பப்
புரசைநாகமுன்கடவின னுகமும்புரந்தோன்.

(இ - ள்.) சுர சமூகம்உம்-தேவர்களின் கூட்டமும், சுர அரிகள் சமூகம்உம்-தேவர்களின்பகைஞரான அசுரருடையகூட்டமும், சூழ - சுற்றிநிற்க, விரசு - (ஒருவரோடொருவர்) நெருங்கிச்செய்த, பூசலின் - பெரும்போரிலே, வாசவன் - இந்திரன், நடுங்கி—, வெந் இடும் நாள் - புறங்கொடுத்தோடினபோது,—அரசர் யாவரும்—, அறுமுகக்கடவுள்என்று அயிர்ப்ப-தேவசேனுபதியாகிய சண்முகமூர்த்தியோ என்று எண்ணிச் சந்தேகிப்ப, புரசை நாகம் முன் கடவினன்-கழுத்திடுகயிற்றையுடைய யானையை முன்னே தூண்டிச் செலுத்தினவனாகி, நாகம்உம் புரந்தோன் - தேவலோகத்தையும் பாதுகாத்தான், (அந்தப்பரதன்); (எ - று.)

இவன் இங்ஙன் வீரனுக இருந்ததனுல்தான் இவன் வமிசத்தவர் பாரதரென்றும், அவர்கள் செய்த போர் பாரதப்போர் என்றும் கூறப்படும். அசுரரை வென்று, சுரரைத் தேவலோகத்தில் நிலைநாட்டியதனுல், இவனுக்கு அறுமுகக்கடவுள் ஒப்பாவன்.

28.—அத்தியென்பவன் அவதரித்தல்.

முக்குலத்தினுமதிக்குலமுதன்மைபெற் றதுவென்று
எக்குலத்தினிலரசும்வந் திணையடியிறைஞ்ச
மைக்குலத்தினிற்புட்கலா வர்த்தமாமெனவே
அக்குலத்தினிலத்தியென் பவனவதரித்தான்.

(இ-ள்.) முக் குலத்தின் உம்-(சூரிய சந்திர அக்கினியர் என்னும்) மூவரிடத்தினின்று தோன்றிய அரசவமிசம் மூன்றுக்குள்ளும், மதி குலம்-சந்திர குலமானது, முதன்மை பெற்றது - தலைமையை யடைந்தது, என்று—, எ குலத்தினில் அரசுஉம்-எந்தக் குலத்திலுதித்த அரசரும், வந்து—, இணை அடி - (தன்னுடைய) இரு தாள்களில், இறைஞ்ச-வணங்கிநிற்க,—மைகுலத்தினில் புட்கலாவர்த்தம் ஆம் எனஏ-மேகக்கூட்டங்களுள் புட்கலாவர்த்தம் சிறந்து தோன்றுவதுபோல, அ குலத்தினில்-அந்தப்பரதகுலத்திலே, அத்தி என்பவன் - ஹஸ்தியென்ற அரசன், அவதரித்தான்-தோன்றினுன்; (எ - று.)

அத்தி = ஹஸ்தி: இவன் ஸுஹோத்ர னென்பானுடைய புத்திரன். புட்கலாவர்த்தம்-மேகங்களுள்பொன்மழைபொழிவதென்ப.

29.—அத்தியென்பவன் அத்திபுரியை யமைத்தல்.

கொண்டல்வரகனுங்குபேரனு நிகரெனக்குறித்துப்
புண்டரீகன்முன்படைத்தவப் புரவலனமைத்தது
எண்டிசாமுகத்தெழுதுசி ரியக்கர்மாநகரும்
அண்டர்தானமுமுவமைகூ :ரத்தினுபுரியே.

(இ-ள்.) 'கொண்டல் வாகன் உம் - மேகத்தை வாகனமாக வுடைய இந்திரனும், குபேரனும்—, நிகர்-(இவனுக்கு) ஒப்பாவர்,' என-என்று, குறித்து - எண்ணி,—புண்டரீகன் - தாமரையில் வாழ்பவனுகிய பிரமதேவன்,முன்—,படைத்த-சிருஷ்டித்த, அ புரவலன்-அந்த அத்தியென்ற அரசன், அமைத்தது - (தனக்கு) இராசதானியாகப்படைத்த நகரம்,—எண்திசா முகத்து - எட்டுத் திக்கிலும், எழுது-எழுதிய, சீர்-கீர்த்தியையுடைய,இயக்கர்-இயக்கரின்,மா நகர்உம்-சிறந்த நகரமும்[அளகையும்], அண்டர் தானம் உம் - தேவர்கள் வாழிடமான அமராவதிநகரமும், உவமை கூர்-உவமையாக மிகப்பெற்ற, அத்தினுபுரி - அத்தினுபுரியென்ற பட்டணமாகும்; (எ - று.)

செல்வத்தினுல் யட்சராஜனுன குபேரனது ராஜதானியாகிய அளகாபுரியும், அழகினுல் தேவேந்திரராஜதானியான அமராவதியும்போலும்அத்தினுபுரியென்க. அத்தியென்பவனுலேற்படுத்தப் பட்டதுபற்றி, இந்நகரம் அத்தினுபுரியெனப் பெயர்பெற்றது: இனி, யானைச்சேனையை மிகுதியாக வுடையதாக இவ்விராசதானியை யமைத்ததனுல் வந்த பெயருமாம். (37)

**30.—கஜேந்திரனும் முதலையுமானவரும் இக்குலத்து உதித்தவரே.**

மீனமாகியவிண்ணவன் விநதைமுன்பயந்த
யானமீதெழுந்தருளிவந் திருபதம்வழங்கக்
கானநாண்மலர்க்கயத்திடைக் கயமும்வெங்கராமும்
ஆனமானவரிருவரு மக்குலத்தவரே.

(இ-ள்.) மீனம் ஆகிய - மச்சாவதாரஞ்செய்த, விண்ணவன்-திருமாலாகிய தேவன், விநதை முன் பயந்த யானம்மீது-விநதையென்பவள் முன்புபெற்ற (கருடனுகிய) வாகனத்தின்மேல், எழுந்தருளிவந்து—, இருபதம் வழங்க-(தன்னுடைய) தாளிணைகளைக் காட்சிகொடுக்குமாறு, கானம் நாள் மலர் கயத்திடை - நறுமணம் பொருந்தி யன்றுமலர்ந்த தாமரைமலரைக்கொண்ட பொய்கையிலேயிருந்த, கயம்உம் - யானையும், வெம் கராம்உம் - கொடிய முதலையும், ஆன—, மானவர் இருவர்உம்-பெருமையுள்ளோரிருவரும், அகுலத்தவர்ஏ-அந்தக் குலத்திற்பிறந்தவரே யாவர்; ()

யானையானவனை இந்திரத்யும்நனென்றும், முதலையானவனை அநூ என்றும் கூறுப. இந்தக் குருகுலச்சருக்கத்து இந்த ஓரிடந்தவிரச் சந்திரன்முதல்விசித்திரவீரியனென்றஅரசன்வரையில் பாலபாரதந்திற் கூறிய முறையும் இந்நூலிற்கூறியமுறையும் ஒத்திருக்கின்றன: அத்தியென்ற அரசனைக் கூறியபின் குரு என்ற அரசனே பாலபாரதத்திற் கூறப்பட்டுள்ளான்: கயமும் முதலையும் ஆன அரசரைப்பற்றி, அந்தப் பாலபாரதத்திற் கூறப்பட்டிலது. ஒருகுலத்தின் சிறப்புத்தோன்றப் பொறுக்கிக் கூறுமிடத்து அந்தக்குலத்தினில் தவறுசெய்து சாபமடைந்தவரைப்பற்றிச் சொல்லுவது சிறவாதாதலாலும், இங்ஙன் சாபமடைந்தவராகக் கூறப்படுவார்இந்தக்குலத்தவரேயென்றுநிச்சயமாகக்கூறுதற்கு ஏற்ற மேற்கோள் கிடையாமையாலும், ஒருகால் இந்தப்பாடல் இடைச்செருகலாயிருக்குமோ என்று தோன்றுகின்றது. (38)

**31.—அந்தக்குலத்து உதித்தவனே 'குரு' என்பவன்.**

பொருபெரும்படைத்தொழில்வயப் புரவிதேர்மதமா
மருவருந்தொழில்மன்னர்நீ தியின்தொழில்வளங்கூர்
சுருதியின்ருெழின்முதலிய தொழிலனைத்தினுக்கும்
குருவெனும்புகழ்க்குருவுமக் குலத்திலங்குரித்தான்.

(இ - ள்.) பொரு - போர்செய்யும், பெரும் படைத்தொழில்-மிக்க சேனைகளின் தொழில்களிலேவல்லனவான, வயம் புரவி-வெற்றிபொருந்திய குதிரையும், தேர் - இரதமும், மதம் மா-மதம் பொருந்திய யானையும்,(ஆகிய இவற்றுடனே),மருவு அரு தொழில் மன்னர் நீதியின் தொழில்-கிட்டுதற்கு அரிய போர்த்தொழிலிலே வல்ல அரசருடைய நீதியின் தொழின்முறையிலும், வளம் கூர்-வளமைமிக்கவனாகி,—சுருதியின் தொழில் முதலிய தொழில் அனைத்தினுக்குஉம்-வேதத்திற்கூறிய தொழில்முதலிய எல்லாத் தொழில்கட்கும், குரு - (இவன்) குருவாவன், எனும் - என்று சொல்லத்தக்க, புகழ்-புகழையுடைய, குருஉம்-குரு என்ற அரசனும், அ குலத்தில் - அந்தக் குலத்திலே, அங்குரித்தான் - தோன்றினான்; (எ - று.)

அரசநீதித்துறையிலும் வேள்வித்துறையிலும் குருஎன்று சொல்லுமாறு மிகச்சிறந்துநின்றனன், இந்தக்குருஎன்ற சந்திர குலத்தரசனென்க. சுருதியின்தொழில் - வேதத்தில்விதித்திருக்கிற தொழில்: அஃதாவது-யாகஞ்செய்தல். குருஎன்று அம் மன்னவன் பெயர்படைத்ததற்கு ஒருகாரணங் கற்பித்துக் கூறுவார் போன்று, 'மன்னர்நீதியின்ருெழில் சுருதியின்ருெழில் முதலிய தொழிலனைத்தினுக்குங் குருவெனும்புகழ்க்குருவும்' என்ருர். இவன் பிதா சவ்வருணன், வசிட்டமுனிவனருளால் இவனைப் பெற்றனனென்ப. (39)

**32.—குருமன்னவன் சிறப்பு.**

வருகு லத்தவ ரெவரையும் வரிசையா லின்றும்
குருகு லத்தவ ரெனும்படி பேரிசை கொண்டான்
இருகு லத்தினு மாசறு தேசினு லிவனுக்கு
ஒருகு லத்தினும் முரைப்பதற் குவமைவே றுண்டோ.

(இ - ள்.) (இவன்),—வரு - (தனக்குப்பின்னே) தோன்றிய, குலத்தவர் - குலத்திலுள்ளவரான, எவரையும்—, வரிசையால்-சிறப்பாக, இன்றுஉம்-இப்போதும், குருகுலத்தவர் - குருகுலத்திலேபிறந்தவர், எனும்படி - என்றுசொல்லும்படி, பேர் இசை கொண்டான் - மிக்ககீர்த்திபெற்றவன்: இரு குலத்தின்உம் - (இந்தச்சந்திரகுலந்தவிர மற்றைச் சூரியகுலம் அக்கினிகுலம் என்ற இந்த) இரண்டுகுலங்களிலேனும், ஒருகுலத்தின்உம்-வேறுள்ள எந்த ஒருகுலத்திலேனும், மாசு அறு தேசினால்-குற்றமற்ற தேஜசினால், இவனுக்கு—, உவமை உரைப்பதற்கு-உவமையாகச் சொல்வதற்கு, வேறு உண்டுஒ-வேறொருவர் உளரோ?

இவன் தனக்குத் தானே ஒப்பாவனன்றி,இவனுக்கு உவமையாகச் சொல்லத்தக்கவர் வேறு எந்தக்குலத்திலும் இல்லையென்ப

தாம். இருகுலம்-தாய்தந்தையர்குலம் என்றும் கொள்ளலாம். ஒரு குலத்தின்டம் என்பதற்கு-சிற்றரசர்தோன்றிய எந்த ஒரு குலத்திலும் என்று உரைத்தாருமுளர். (40)

வே று.

**33.—கவிக்கூற்று: குருகுலத்தில் சந்தனு என்று ஒருவன் தோன்றினன்: இனி, அவன் செயலைக் கூறவேனெனல்.**

அந்தநன் மரபினி லமுத வெண்டிரைச்
சிந்துவின் மிசைவரு திங்க ளாமெனச்
சந்தனு வெனும்பெயர்த் தரணி காவலன்
வந்தன னவன்செயல் வகுத்துக் கூறுவாம்.

(இ-ள்.) அந்த நல் மரபினில்-சிறந்த அந்தக் குருவமிசத்தில், அமுதம் - பால்மயமான தாய், வெள் திரை சிந்துவின் மிசை - வெண்மையான அலைகளையுடைய பாற்கடலின்மீது,வரு-தோன்றுகின்ற, திங்கள் ஆம் என-சந்திரனைப்பாவானென்று சொல்லும்படி, சந்தனு எனும் பெயர் தரணிகாவலன் - சந்தனுஎன்று பேர்கொண்ட பூமியைக் காப்பவனான அரசன், வந்தனன் - தோன்றினான்: அவன் செயல் - அவனுடைய செய்தியை, வகுத்து கூறுவாம்-விவரித்துச் சொல்லுவோம்; (எ-று.)

ப்ரதிபனென்ற அரசன் சிபிவமிசத்தில்தோன்றிய சுகந்தியென்பவளை மணக்க, அவர்களுக்குத் தேவாபி சந்தனு பாஹ்லிகன் என்று மூன்றுகுமாரர் தோன்றினர். முதல்வன் இளையனாயிருக்கும்போதே கானகஞ் சென்றிட்டான். அதனால், இந்தச் சந்தனு குருகுலத்துப்பிரதானனானான்: இவன் வயதுமுதிர்ந்த எவரெவரைக் கையால்தொடுகின்றானோ அவர் யாவரும் யௌவன மடைபவரும், சுகமனுபவிப்பவருமாயினர்: இதனால் இவனுக்குச் சந்தனு எனப்பெயரென்று முதனூல் கூறும். குருகுலத்திற்குப் பாற்கடலும், அக்குலத்திலே தோன்றிய சந்தனுவுக்கு ஆங்குத் தோன்றிய சந்திரனும் உவமை. மகிழ்ந்துகேண்மினோ என்றும் பாடம்.

இதுமுதல் நாற்பத்தாறு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ் சீரொன்று மாச்சீரும், மற்றையவை விளச்சீர்களுமாகிவந்த கலிவிருத்தங்கள். (41)

**34.—வேட்டையாடி யிளைப்புற்ற சந்தனு கங்கைக்கரை சேர்தல்.**

வேனிலானிவனென விளங்குகாலையிற்
கானகவேட்டைபோ யிளைத்தகாவலன் சந்தனு
ஆனமென்குளிர்புன லாசையான்மணித்
தூநிறக்கங்கையாள் சூழலெய்தினன்.

(இ-ள்.) 'இவன்—, வேனிலான்-மன்மதனேயாவன்', என-என்று (கண்டவர்) நினைக்கும்படி, விளங்கு காலையில் - (மிக்க அழகோடு), விளக்கமுற்றிருந்த காலத்தில், கானகம் வேட்டை போய்-காட்டிற் செய்யப்படும் வேட்டைக்குச் சென்று, இளைத்த-சோர்வடைந்த, காவலன் - அந்தச் சந்தனுராசன்,—குளிர் ஆன மெல் புனல் ஆசையால் - குளிர்ச்சி பொருந்திய மெல்லிய நீரில் விருப்பத்தினால், மணி தூ நிறம் கங்கையாள் - அழகிய

வெண்மைநிறம்பொருந்திய கங்காநதியின், கு
எய்தினன்-போய்ச் சேர்ந்தான்; (எ - று.)

வேட்டையாடி யிளைத்ததனால், தண்ணீரில்
கொண்ட சந்தனுராசன் கங்கைக்கரையை யடைந்தா
காமவின்பத்தை மிகுவித்தற்கு ஏற்ற வேனிற்காலத்திற்கு
யவனாதலால், மன்மதன் 'வேனிலான்' எனப்படுவன். ம
முத்துமாம். ஆனமெய் குளிர் புனல் என்றும் பாடம். (42)

35.—அப்போது கங்காநதி அங்குப் பெண்வடிவுகொண்டிருத்தல்.

மருவருங்குழல்விழி வதனம்வார்குழை
இருதனந்தோள்கழுத் திதழொடின்னகை
புருவம்வண்புறவடி பொற்பப்பாவையர்
உருவுகொண்டனட்ன துடைமைதோன்றவே.

(இ - ள்.) (அப்போது கங்காநதி),—மரு வரும் குழல் - நறு மணம் வெளிவருகின்ற கூந்தலும், விழி - கண்களும், வதனம்-முகமும், வார் குழை-நீண்டகாதும், இரு தனம்-இரண்டுமுலைகளும், (இரு) தோள்-(இரண்டு) தோள்களும், கழுத்து - கழுத்தும், இதழொடு-வாயிதழும், இன் நகை-இனிய பற்களும், புருவம்-புருவங்களும், வள் புறம் அடி-வளப்பமுள்ள புறவடிகளும், (ஆகிய இவ்வுறுப்புக்கள்), பொற்ப - அழகுபெற்றிருக்க, தனது உடைமை தோன்ற - தான் பெண்வடிவமுடையளாயிருப்பது தெரியும்படி, பாவையர் உருவு-பெண்களின் வடிவத்தை, கொண்டனள்—;

குழையென்பது - ஒருவகைக்காதணியையே யன்றி, காது என்னும் பொருளைக் காட்டுவதை "மணித்தோடுங் குழையிலாட" என்ற இடத்துங் காண்க: குழைந்திருப்பது குழை எனக் காதுக்குக் காரணவிடுகுறி. (43)

36.—கங்கையின் பெண்தெய்வம் தோன்றியதைச் சந்தனு காணுதல்.

கங்கையின்வெள்ளமேற் கருத்துமாறியிம்
மங்கைதன்பேரொளி வனப்பின்வெள்ளமே
தங்கியசோகமுந் தாபமுங்கெடப்
பங்கயவிழிகளாற் பருகினனரோ.

(இ - ள்.) கங்கையின் வெள்ளம் மேல்-கங்காநதியின் வெள்ளத்தின் மீது (சென்ற), கருத்து-(தன்) மனம், மாறி-மாறப்பெற்று, இ மங்கை தன்-இந்தக் கங்காநதியின் பெண்தெய்வத்தின், பேர் ஒளி வனப்பின் வெள்ளம்ஏ - மிக்க ஒளியைக்கொண்டுள்ள அழகின் பெருக்கையே, தங்கிய சோகமும் தாபமும் கெட-(தன்) மனத்துப் பொருந்திய சோகதாபங்கள் கெட்டொழிய, பங்கயம் விழிகளால்-தாமரைமலர்போன்றகண்களினால், (சந்தனு),பருகினன்—;

நீர் பருகவேணுமென்ற எண்ணத்தோடு வந்த சந்தனுவின் கருத்து அங்குத்தோன்றிய கங்காநதியின் பெண் தெய்வத்தின் அழகுவெள்ளத்திற் செல்லவே, அவனுடைய சோகதாபங்கள் அகன்றனவென்க. (44)

**37.—கங்கையைக் காட்சியிற் கண்ட சந்தனுவின் ஐயம்.**

வையகமடந்தைகொல் வரைமடந்தைகொல்
செய்யபங்கயமலர்த் திருமடந்தைகொல்
துய்யவண்கலைவிதச் சொன்மடந்தைகொல்
ஐயமுற்றனனிவ ளார்கொலென்னவே.

(இ - ள்.) வையகம் மடந்தை கொல் - (இவள்) பூமிதேவி தானோ? வரை மடந்தை கொல் - மலைமகளோ? செய்ய பங்கயம் மலர் திரு மடந்தை கொல் - செந்நிறமுள்ள தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகள்தானோ? துய்ய வள் விதம் கலை சொல் மடந்தை கொல்-வெண்ணிறமுள்ள செழிப்பான பலவகைப்பட்ட கலைகளுக்கும் உரிமைபூண்ட சொல்லுக்குஉரிய தெய்வமான சரசுவதிதானோ? (அல்லது), இவள் ஆர் கொல்-இவள் வேறு எவளாயிருப்பாளோ? என்ன-என்று, (அந்தக் கங்கையின் பெண் தெய்வமான மகளைக்குறித்து) ஐயம் உற்றனன்-(சந்தனு) சந்தேகித்தான்;

மிக்க பொறுமையுடையாள் போலுதலால் 'வையகமடந்தை கொல்' என்றும், கற்புடையாள்போலத் தோன்றுதலால் 'வரை மடந்தைகொல்' என்றும், பேரழகுபெற்றுப் பாக்கியவதியாயிருத்தலால் 'திருமடந்தைகொல்' என்றும், பேரறிவுடையாள்போலத் தோன்றுதலால், 'சொல்மடந்தைகொல்' என்றும் ஐயுற்று, அன்னார் இங்கு வருவதற்குக் காரணந் தெரியாமையால், 'ஆர் கொலோ' என்று துணிவுபிறவாது கூறினான் சந்தனுவென்க. அகத்திணைக் கோவைகளில் முதலில் காட்சியும் பின்னர் ஐயமும் கூறப்படுவதுபோலவே, இங்கும் கீழ்ச் செய்யுளாற் காட்சியும், இச் செய்யுளால் ஐயமும் கூறப்பட்டன. (45)

**38.—தெளிவும் வினவுதலும்.**

கண்ணிமைத்திருநிலங் காலுந்தோய்தலாற்
பெண்ணிவண்மானுடப் பிறப்பினளென
எண்ணமுற்றவளரு கெய்தியாவர்செய்
புண்ணியநீயெனப் புகழ்ந்துபோற்றினான்.

(இ - ள்.) கண் இமைத்து-கண்கள் இமைக்கப்பெற்று, கால் உம் - பாதங்களும், இரு நிலம் தோய்தலால்-பெரியபூமியிற் படிதலால், பெண் இவள்-பெண்ணாகிய இவள், மானுடம் பிறப்பினள்-மனிதப் பிறவியைச் சேர்ந்தவள், என - என்று, (கண்ட மாதின் திறத்தில்), எண்ணம் உற்று - (ஐயவறிவு நீங்கித் தெளிவான) எண்ணத்தையடைந்து, அவள் அருகு எய்தி-அவளுடைய சமீபத்திற் போய், 'நீ—, யாவர் செய் புண்ணியம்-யார் செய்த புண்ணியப் பயனாகத் தோன்றியவள்?' என-என்று, புகழ்ந்து போற்றினான்—; (எ - று.)

கண்ணிமைத்தல், பாதங்கள்பூமியிற்படிதல், அணிந்த மலர்மாலை வாடுதல் என்ற இன்னோரன்னவை, தேவரினும் மானிடர்க்குள்ள வேறுபாடுகளென்றறிக. 'தெய்வமகளோ?' என்று ஐயுற அவ்வளவு பேரழகு பெற்ற ஒருத்தி ஒருத்தற்கு மகளாக வாய்ப்பது புண்ணியப் பயனே யாதலால், 'யாவர்செய் புண்ணியம் நீ' என்றான். (46)

**39.—அந்தக் கங்காநதிப்பெண் சந்தனுவைக்கண்டு தன்துயர்நீங்குதல்.**

> போற்றியகுரிசின்மெய் புளகமெய்தவே
> ஏற்றியவிழியின ளிளகுநெஞ்சினள்
> சாற்றியமலரயன் சாபமிவ்வழித்
> தோற்றியதெனவுறு துயரநீங்கினள்.

(இ-ள்.) போற்றிய - (அந்தக்கங்காநதிப்பெண்ணைப்)புகழ்ந்து கூறின, குரிசில்-ஆண்களிற்சிறந்தவனான சந்தனுராசனுடைய, மெய்-உடம்பானது, புளகம் எய்த-மயிர்க்கூச்சையடைய, ஏற்றிய-செலுத்திய, விழியினள்-கண்களையுடையவளும், இளகும் நெஞ்சினள்-(அந்தச்சந்தனுராசனிடத்துக்) குழைந்த நெஞ்சையுடையவளுமாகி,—மலர் அயன் சாற்றிய சாபம்-(திருமாலின் உந்திக்) கமலத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவன் கூறிய சாபமொழி, இவ்வழி-இவ்விடத்து, தோற்றியது-காண்கின்றது, என-என்று,உறு துயரம்-(தான்) கொண்ட துயரத்தை, நீங்கினள்—; (எ - று.)

வருணதேவனே பிரமனதுசாபத்தினால் சந்தனுவாய்ப் பிறந்தானென்றும்,தான் மணக்கவேண்டியவன் இவன்தான் என்றும். கங்காநதியின் பெண்தெய்வம் உணர்ந்தாளாதலால், அவனைக் கண்டதும் ஒருவாறு துயரம் நீங்கப்பெற்றாளென்க. சாபவரலாறு மேல் 56-ஆம் பாடல்முதல் கூறப்படும். அன்புகொண்டு பார்த்த பார்வை பட்டதனால், மெய், புளகம்எய்துவதாயிற்று. மேற்புளக மெய்தவே என்றும் பாடம். (47)

**40.—சந்தனுவும் அவளிடத்து ஆதரங் கூர்தல்.**

> பொங்கியமதர்விழிப் புரிவுமாதரந்
> தங்கியமுகிண்முலைத் தடமுநோக்கியே
> இங்கிதமுறைமைநன் றென்றுவேந்தனும்
> அங்கிதமுடனவட் கன்புகூரவே.

(இ-ள்.) பொங்கிய-மிக்க, மதர் - களிப்பினையுடைய, விழி புரிவுஉம்-கண்ணின் செயலாகிய குறிப்புநோக்கமும், ஆதரம் தங்கிய - விருப்பந்தங்கப்பெற்ற, முகிழ் முலை தடம்உம் - (தாமரை) மொட்டையொத்த கொங்கைத் தலமும் [கொங்கைபூரித்தலையும்], நோக்கி—பார்த்து,—இங்கிதம் முறைமை நன்று - (என்விஷயத்து இவளுடைய) குறிப்புச்செயலின் முறை இனிதாக வுள்ளது, என்று—, வேந்தன்உம்-சந்தனுராசனும், அங்கு - அப்போது, இதமுடன்-இதமாக, அவட்கு - அந்தக்கங்கையாள் திறத்தில், அன்பு கூர-அன்பு மிக,—(எ-று.)—"உசாவினான்" என அடுத்த கவியோடு முடியும். இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில். (48)

**41.—சந்தனு, 'நீ கன்னிகையாயின் என்னை மணக்க விருப்பமுண்டோ?' என்று கங்கையாளைக் கேட்டல்.**

> கன்னியேயாமெனிற் கடிகொள்பான்மையை
> என்னின்மற்றுயர்ந்தவ ரில்லைமண்ணின்மேல்
> உன்னினைவுரையென வுசாவினானிகல்
> மின்னிலைவடிகொள்வேல் வேந்தர்வேந்தனே.

(இ-ள்.) இகல் - போர்க்குஉரியதும், மின் இலை - மின்னல் போன்ற இலையைக்கொண்டதும், வடி கொள் - கூர்மையைக் கொண்டதுமான, வேல்-வேற்படையையுடைய, வேந்தர் வேந்தன்-அரசர்க்கரசனான சந்தனு, (கங்கையின் பெண்தெய்வத்தை நோக்கி),—'கன்னியே எனில்-(நீ) கன்னிகையேயானால், கடிகொள் பான்மையை-விவாகஞ்செய்துகொள்ளுதற்கு உரிமையுடையாய்: மண்ணின்மேல் - பூமியின்மீது, என்னில் - என்னைக்காட்டிலும், உயர்ந்தவர்-சிறந்தவர், இல்லை—: (என்னை மணந்துகொள்ளும் விஷயத்தில்), உன் நினைவு-உனதுஎண்ணத்தை, உரை-சொல்லுவாய்,' என-என்று, உசாவினன் - வினவினன்; (எ-று.)—பான்மையை-முன்னிலை யொருமைக்குறிப்புமுற்று. (49)

42.—அந்தக்கங்கை நாணமுற்றிருந்து பிறகு பேசலுறுதல்.

நாணினளாமென நதிமடந்தையும்
பூணுறுமுலைமுகம் பொருந்தநோக்கினள்
சேணுறுதனதுமெய்த் தேசுபோனகை
வாணிலவெழச்சில வாய்மைகூறுவாள்.

(இ-ள்.) நதி மடந்தைஉம்-நதியின் பெண்தெய்வமான கங்கையும், நாணினள் என-வெட்கமடைந்தவள்போல, பூண் உறு—ஆபரணங்கள் பொருந்திய, முலை முகம் - தனங்களின்முகத்தை, பொருந்த—,நோக்கினள்-பார்த்தவளாய் [தலைகவிழ்ந்தவண்ணம் இருந்துகொண்டு என்றபடி],சேண் உறு-தூரத்தேவிளங்குகின்ற, தனது மெய் தேசு போல்-தனது உடம்பினொளிபோல, நகை-(தன்) சிரிப்பினின்று, வாள் நிலவு எழ - ஒளி பொருந்திய நிலவு [வெள்ளொளி] தோன்ற, சில வாய்மை-சில வார்த்தைகளை,கூறுவாள்-சொல்பவளானாள்; (எ-று.)—அவற்றை மேலே காண்க.

தலையைக் கவிழ்த்துக்கொண்டிருத்தல் நாணங்கொண்டுள்ளாளென்பதைக் குறிப்பிக்கும் ஆதலால், 'நாணினளாமென முலை முகம்பொருந்த நோக்கினள்' என்றது. கங்கை வெண்ணிறத்தவளென்பது, பிரசித்தம். சேண்-ஆகாயமுமாம். சிரிக்கும் பற்களிலிருந்து வெள்ளொளி வெளிப்படுதலால், 'மெய்த்தேசுபோல் நகை வாணிலவெழ' என்றது. ஆம்-அசை. நாணினளொடுங் கினதி மடந்தையும் என்று பிரதிபேதம். (50)

43.—இதுவும் அடுத்தகவியும்-ஒரு தொடர்: கங்கை 'நான் என்னசெய்யினும் கேட்பதில்லையென்றால் மணப்பேன்' என்ன, மன்னவனும் உடன்படுதல்.

இரிந்துமெய்ந்நடுங்கிட் யாதியாதுநான்
புரிந்ததுபொறுத்தியேற் புணர்வலுன்புயம்
பரிந்தெனைமறுத்தியேற் பரிவொடன்றுனைப்
பிரிந்தகன்றிடுவனிப் பிறப்புமாற்றியே.

(இ-ள்.) இரிந்து-அஞ்சி, மெய் நடுங்கிட - உடல்நடுங்கும்படி, நான் புரிந்தது யாது யாது-நான்செய்வது எது எதுவோ, (அவற்றையெல்லாம்), பொறுத்திஏல்-பொறுப்பாயென்றால், உன் புயம்

புணர்வல்-உனது தோளைச் சேர்வேன் [உன்னை மணந்துகொள்வேன்]: பரிந்து - இரக்கங்கொண்டு, எனை - என்செயலை, மறுத்தி ஏல் - மறுப்பாயானால், அன்று - (என்றைக்கு மறுக்கின்றாயோ) அன்றைக்கு, பரிவொடு-மனவருத்தத்தொடு, இ பிறப்பு மாற்றி-இந்தப்பிறவியை மாற்றிக்கொண்டு, உனை - உன்னை, பிரிந்து—, அகன்றிடுவன்-நீங்கிவிடுவேன்; (எ-று.)—புரிந்ததுஎன்பது-இயல்பினால் வந்த காலவழுவமைதி. (51)

44. மெய்தருவிதியினேன் விரதமற்றிவை
எய்தரிதொருவரா லெய்தவல்லையேல்
கைதருகெனப்பெருங் காதலாளனும்
உய்வரிதெனவிசைந் துடன்படுத்தினன்.

(இ-ள்.) 'மெய் தரு விதியினேன்-உண்மையாகப் பொருந்திய நியமத்தையுடைய எனது, விரதம்-கொள்கைகளாகிய, இவை - இவைகள், ஒருவரால்-ஒருத்தரால், எய்த-செய்தல், அரிது-அருமையானது: எய்த வல்லைஏல் - (இதனைச்)செய்ய வல்லமையுடையையேயானால், கை தருக-பாணிக்கிரகணஞ்செய்துகொள்க,' என-என்று (அந்தக்கங்காநதியின் பெண்தெய்வம்) கூற,— பெருங்காதலாளன்உம் - (அம்மங்கையினிடத்து) மிக்ககாதல் கொண்டவனான சந்தனுவும், 'உய்வு அரிது-(இவள் கூறும் நிபந்தனைக்கு இசைந்தாவது இவளை மணம்புரியவேண்டும்: இல்லாவிட்டால்) உயிர் பிழைத்தல் முடியாது', என-என்று கருதியதனால், இசைந்து - (அவளுடைய நிபந்தனைகட்கு) உடன்பட்டு, உடன்படுத்தினன்-(தனக்கு மனைவியாகுமாறு அவளை) இசைவித்தான்; (எ - று-)

விவாகமென்பது - வடமொழியில் பாணிக்கிரகணமென்று பெயர்பெறுதலால், மணக்கஎன்றபொருளில், 'கைதருக' எனப்பட்டது; ஒன்றை நிச்சயிப்பவர் கையறைந்துதருதல் இயற்கையாதலால், கங்கையாள் என்நிபந்தனைக்கு நீ உடன்பட்டமை விளங்குமாறு கையெறிந்துதருக என்றபொருளில், 'கைதருக' என்றாளென்றலும் ஒன்று. இங்குச் சந்தனுவைப் பெருங்காதலாளன் என்ற பெயராற் குறித்தது-பெருங்காதலையுடையவனாயிருந்ததனால்தான் அந்தக் கங்கைகூறிய கடியநிபந்தனைக்கு உட்பட்டு அவளை மணந்தானென்ற கருத்தைப் புலப்படுத்தும். (52)

45.—தன்னை மணத்தற்குக் கங்கையாளை உடன்படுமாறு சந்தனு கூறுதல்.

எனதுயிரரசுவாழ் வென்பயாவையும்
நினதுநின்னேவலி னிற்பன்யானென
வனிதையைமருட்டினன் மன்றலெண்ணியே
தனதனுநிகரிலாத் தனமகிபனே.

(இ - ள்.) தனதன்உம் நிகர் இலா தனம் மகிபன்-குபேரனும் ஒப்பாதலில்லாத பெருஞ்செல்வத்தையுடைய சந்தனுராசன்,— வனிதையை - அந்தக்கங்கையின் பெண்தெய்வத்தை, மன்றல் எண்ணி-விவாகஞ்செய்து கொள்ளவேணுமென்பதைநினைந்து,— 'எனது உயிர் - என்னுடைய உயிரும், அரசு - இராச்சியமும், வாழ்வு-வாழ்வும், என்ப - என்றுசொல்லப்படுபவையான, யாவை உம்-எல்லாமும், நினது - உன்னுடையது: யான்— , நின் ஏவலில்

நிற்பன்-உன்னுடைய கட்டளையின்கீழ் அடங்கிநிற்பேன்,' என - என்று சொல்லி, மருட்டினுன்-(தன்திறத்தில்) மனம் மயங்கச் செய்தான்; (எ - று.)

சந்தனுவின் பணிமொழியால் கங்கையாள் அந்த அரசனிடத்து விருப்பங்கொண்டன ளென்றவாறு. என்ப - பலவின்பாற் பெயர். என்பயாவையும் இனது - ஒருமைப்பன்மைமயக்கம். நந்தன் = செல்வத்தைத் (தன்னிடத்துத்) தாங்குபவன். (53)

46.—சந்தனுவும் கங்கையும் அக்கினிசாட்சியாக மணம்புரிந்து மகிழ்தல்.

அருமறைமுறையினு லங்கிசான்றெனத்
திருமணம்புரிந்துளந் திகழவைகினுன்
இரதியுமதனனு மல்லதில்லைமற்று
ஒருவருமுவமையென் றுலகுகூறவே.

(இ-ள்.) அரு மறை முறையினுல்-(அறிதற்கு) அரியவேதத்திற் கூறிய முறைப்படி, அங்கி சான்று என - அக்கினிதேவன் சாட்சியாக அமைய, திருமணம் புரிந்து - விவாகஞ்செய்து கொண்டு, இரதிஉம் மதனன்உம் - இரதிதேவியும் மன்மதனும், அல்லது-அல்லாமல், மற்று ஒருவர்உம் உவமை இல்லை - வேறு ஒருவரும் உவமையில்லை, என்று—, உலகு-உலகத்தவர், கூற-,— உளம் திகழ-மனம்மகிழ, வைகினுன்-(சந்தனு) இருந்தான்; (54)

47.—கங்கையாள் கருக்கொண்டு பெற்றமைந்தனைக் கங்கைநீரிலெறிதல்.

மருவுறச்சிலபகன் மணந்துமான்விழி
கருவுயிர்த்தனளெனக் களிகொள்காலையிற்
பருவமுற்றன்புடன் பயந்தமைந்தனைப்
பொருபுனற்புதைத்தனள் புவனங்காணவே.

(இ - ள்.) சில பகல் - சிலநாள்கள்,—மருவு உற மணந்து - பொருந்தக்கூடியிருந்து, 'மான் விழி-மான்போன்ற கண்பார்வையையுடைய கங்கையென்பாள், கரு உயிர்த்தனள் - (கருப்பம் கொண்டிருந்து) ஈன்ருள்', என-என்று, (சந்தனுமகாராசன்), களி கொள் காலையில் - மனம் மகிழும்போது,—(அம்மகிழ்ச்சிகெட),— பருவம் உற்று அன்புடன் பயந்த மைந்தனை - கரு முதிரும்பருவத்தையடைந்து [பத்துமாதம் வயிற்றிற்கொண்டிருந்தபின்] அன்போடு பெற்ற குமாரனை, புவனம் காண-உலகத்தவர் பார்த்துக்கொண்டிருக்கையில்தானே, பொரு புனல் - அலைமோதுகின்ற நதியின் நீரில், புதைத்தனள் - வீசி யெறிந்தாள், (அந்தக் கங்கையாள்); (எ - று.) ()

புனலில் புதைத்தல் - நீரில் மறைந்திடும்படி வீசி யெறிந்திடுதல். மான்விழி - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (55)

48.—வருந்தினுளயினும், சந்தனு பெருங்காதலால் ஒன்றும் பேசாது, முன்னிலும் அவளிடம் அன்புகொண்டிருத்தல்.

கண்டுளம்வெருவிமுன் கதித்தவாசகங்
கொண்டுரையெடுத்திலன் கொண்டகாதலான்
ஒண்டொடியுடன்மணந் துருகிவைகினன்
பண்டையினெழுமடி பரிவுகூரவே.

(இ-ள்.) கண்டு-(தன் மனைவியின் கொடுஞ்செயலைப்) பார்த்து (முதலில்), உளம் வெருவி-மனத்தில் வெறுப்புக்கொண்டு நின்று (பிறகு), முன் கதித்த வாசகங்கொண்டு-மணந்தபோது (நிபந்தனையாகக்) கூறிய வாசகத்தினால், உரை எடுத்திலன்-(அவள் பெற்ற குழந்தையைக் கங்கையாற்றில் எறிந்தது குறித்து) ஒரு பேச்சும் தெரிவியாதவனாய்,—கொண்ட காதலான் - (அந்தக் கங்கையாளிடத்துப்) பெருங்காதல்கொண்ட சந்தனு,—பண்டையின் - முன்பு இருந்ததைவிட, எழு மடி பரிவு கூர - ஏழுமடங்கு அன்பு மிக, ஒள் தொடியுடன் - ஒள்ளிய தொடியென்னும் அணிபூண்டவளான அந்தக் கங்காதேவியுடன், மணந்து - கூடி, உருகி - மனம் கரைந்து, வைகினன் - தங்கியிருந்தான்; (எ - று.)

கொண்ட காதலான் - கருத்துடையடைகொளியணி. கதித்த என்ற பெயரெச்சத்தில் 'கத்' என்பது - வடமொழியான வினையடி. (56)

49.—பின்னும் கங்கையாள் ஆறு குழந்தைகளையும் முன்போலவே பெற்றவுடன் கங்கையிலெறிந்து மாய்க்கவும், மன்னவன் வாளா இருத்தல்.

பின்னருமறுவரைப் பெற்றதாய்மனம்
முன்னரின்மும்மடி முரண்டுமாய்க்கவே
மன்னவனவற்றினும் வாய்திறந்திலன்
நன்னகர்ச்சனமெலா நடுநடுங்கவே.

(இ - ள்.) பின்னர்உம்-பின்னும், அறுவரை - ஆறு மக்களை, பெற்ற-ஈன்ற, தாய்-(கங்காதேவியாகிய) தாயானவள், முன்னரின்-முன்பிருந்ததைக்காட்டிலும், மனம்—, மும்மடி முரண்டு - மூன்று மடங்கு மாறுபட்டு,மாய்க்க-(குழந்தைகளைப் பெற்றபோதே கங்கை நீரிலெறிந்து) உயிர்போக்கவும், (அச்செயலைக்கண்டு), நல் நகர் சனம் எலாம் - சிறந்த நகரத்துச் சனங்களெல்லாம், நடுநடுங்க - நடுங்காநிற்கவும், மன்னவன்-சந்தனுராசன், அவற்றின்உம்-அவ்வக்காலங்களிலெல்லாம், வாய் திறந்திலன் - (அந்தக் கங்கையாளிடத்து அவள் செய்யுங் கடுஞ்செயலைக் குறித்து) வாய் திறந்து பேசினானில்லை; (எ - று.)

முன்னரின்-ஐந்தாம் வேற்றுமைப்பொருள் தந்ததோரிடைச்சொல்: இவ்வாறு வருவதனை வடநூலார்விபக்திப்ரதிரூபகம் அவ்யயம் என்பர். (57)

50.—மங்கைமார் கங்கையாளின்செயலுக்குக் கண்ணீர்வடித்தல்.

வழுவறுகுருகுல மன்னன்மைந்தரோர்
எழுவரைமுருக்கின ளீன்றதாயெனப்
பழுதறுமகப்பல பயந்தமங்கையர்
அழுதனர்கட்புன லாறுபாயவே.

(இ - ள்.) 'வழு அறு - குற்றமற்ற, குருகுலம் மன்னன் - குருகுலத்தில் தோன்றிய அரசனான சந்தனுவின், மைந்தர் ஓர் எழுவரை-ஏழுமைந்தரை, ஈன்ற தாய் - பெற்ற தாய், முருக்கினள் -

(ஆற்றுவெள்ளத்தில் வீசியெறிந்து) கொன்றுள்,' என - என்று சொல்லி,—பழுது அறு - குற்றமற்ற, பல மக - பல பிள்ளைகளை, பயந்த-பெற்ற, மங்கையர்-, கண் - (தம்முடைய) கண்களிலிருந்து, புனல் - சோகக்கண்ணீர், ஆறு பாய-நதிவெள்ளம்போற் பெருக, அழுதனர் - புலம்பினார்கள்; (எ-று.)

'வழுவறு' என்று குருகுலமன்னவனுக்கு அடைமொழி கொடுத்ததனால், 'பெற்றபிள்ளையைக் கொல்லும் பெரும்பாதகியை மனைவியாகக்கொண்டிருக்கின்றா னென்ற பெரும்பழி இவனுக்கு நேருமே!' என்று அன்னார் இரக்கங்கொண்டு கருதலாயின ரென்பது, தோன்றும். வழுவறுஎன்பதை மைந்தர் என்பதனோடு இயைத்து - உறுப்புக்குறைமுதலிய குற்றமில்லாத [பேரழகை யுடைய] மைந்தரென்று உரைப்பினுமாம்: "நிறை மகவுடையவர் நெறிசெலைம்பொறிக், குறைமகக்குறையினும் கொடுப்பராமுயிர்" என்றவாறு பலபுதல்வரை யுடையோரும் தமது மகவுள் பொறிக் குறையையுடைய ஒருமகவு உயிர்நீங்கினும் தம்முயிரை மாய்ப்பது இயல்பாயிருக்க, பெற்ற தாயான இவள் தான்பெற்ற புதல்வர் குற்றமற்ற பேரழகரெனக்கண்டும் ஒருவரிருவரல்ல எழுவரைச் சிறிதும் அருளின்றி வதைத்தனளே! என்று புலம்பினரென்பார், 'வழுவறு மைந்தர் ஒரெழுவரை முருக்கினளீன்றதாயென மங்கை யர் அழுதனர்' என்றார். (58)

**51.—எட்டாம்முறை கங்கையாள் கருக்கொள்கையில், மன்னவன் மனம் முன்போன்று அன்னுளிடத்துப் பதிந்திராமை.**

கங்கையென்றுலகெலாங் கைதொழத்தகும்
மங்கையங்கனந்தரம் வயிறுவாய்த்துழி
வெங்கயகடகரி வேந்தன்மாமனப்
பங்கயந்துறந்தது பழையவின்பமே.

(இ - ள்) கங்கை என்று - கங்கைகங்கைஎன்று சொல்லிக் கொண்டு, உலகுஎலாம் - உலகத்தவரெல்லாராலும், கைதொழ தகும் - கைகூப்பித் தொழுதற்குத்தக்க, மங்கை-(கங்கைநதியின் தெய்வமான) பெண்,—அனந்தரம் - பிறகு, வயிறுவாய்த்தஉழி- கருக்கொண்டபோது, வெம் கய கடகரி - உக்கிரத்தைக்கொண்ட பெருமைபெற்ற மதயானையைக்கொண்ட, வேந்தன் - சந்தனுமன் னவனுடைய, மா மனம் பங்கயம்-பெருமைபெற்ற மனத்தாமரை, பழைய இன்பம் துறந்தது-முன்னையனுபவித்துவந்த இன்பத்தை வெறுத்திட்டது; (எ - று.)—அங்கு - அசை.

மன்னவன்மனம், முன்போலச் சிற்றின்பத்திற் பெருவிருப்புக் கொள்ளாது சிறிதுவெறுப்புக் கொண்டதென்க. பங்கயம்=பங் கஜம்: சேற்றில் முளைப்பது எனப் பொருள்படும் வடசொல்திரிபு. கய - பெருமை: உரிச்சொல். கடம் - யானையின்கன்னம்: அங்கு நின்றுபெருகும் மதநீருக்கு ஆகுபெயர். கரி=கரீ: கையையுடைய விலங்கு என யானைக்குக் காரணக்குறி. (59)

**52.—மங்கை ஈன்றுளென்று கேட்டலும், மன்னவன், அக்குழந்தையைத் தாயின்கைக்கு அகப்படாமைகொண்டு, அவளிடம் பணிந்துபேசுதல்.**

மதலையைப்பயந்தனள் மடந்தையென்றலும்
கதுமெனச்சென்றுதாய் கைப்படாவகை
இதமுறப்பரிவுட னெடுத்துமற்றவள்
பதயுகத்தாமரை பணிந்துபேசுவான்.

(இ-ள்.) 'மடந்தை - கங்காதேவியென்னும்பெண், மதலையை பயந்தனள்-ஓராண்மகவை யீன்றாள்', என்றலும்-என்று (பணியாளர் தன்னிடம்வந்து) கூறியவுடனே, (சந்தனுமன்னவன்).—கதுமென சென்று-விரைந்துபோய் (பிறந்த அக்குழந்தை), தாய் கை படாவகை-(பெற்ற)தாயின் கையில் அகப்படாதபடி, இதம் உற-(அந்தக்குழந்தைக்கு) நன்மையுண்டாகுமாறு, பரிவுடன் - அன்போடு, எடுத்து—, மற்று அவள்-மாறுபட்ட [பெற்ற குழந்தையைக் கங்கையில் வீசிமாய்க்குங் குணமுடைய] அந்தத்தேவியின், பத யுகம் தாமரை - தாமரை மலர்போன்ற உபயபாதங்களில், பணிந்து-வணங்கி, பேசுவான்-சொல்வானானன்; (எ-று.)—பேசுவதை மேலே காண்க.

தன்தேவியைத் தன்கருத்துக்கு இசைவிக்கவேணுமென்று எண்ணிப் பேசுவதனால், மன்னவன் பேசும்போது, தன்தேவியின் பதயுகத்தாமரையிற் பணிவானாயினன். குழந்தையைப் பெற்றவுடன் விரைவுடன்சென்று எடுத்தது, முன்னைய குழந்தைகளைப் போலவே இந்தக் குழந்தையையும் கங்கையில் எறியாமலிருக்கும் பொருட்டு. (60)

**53.—அந்தப்புதல்வனைக் கொன்றிடாதிருக்குமாறு மன்னவன் தேவியை வேண்டுதல்.**

நிறுத்துகமரபினை நிலைபெறும்படி
வெறுத்தெனைமுனியினும் வேண்டுமாலிது
மறுத்தனன்யானென மனஞ்செயாதினிப்
பொறுத்தருள்புரிகவிப் புதல்வன்றன்னையே.

மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) மரபினை - வமிசத்தை, நிலை பெறும்படி - (அழியாது) நிலைபெற்றிருக்கும்படி, நிறுத்துக - நிற்கச்செய்வாய்: வெறுத்து எனை முனியினும்-வெறுப்புக்கொண்டு என்மீதுகோபித்தாலும், இது வேண்டும்-இச்செய்கை செய்தே தீரவேண்டும்: யான் மறுத்தனன் என-(உன்மனப்போக்கின்படி செய்யமுடியாதவாறு) நான் தடுத்தேனென்று, மனம் செயாது-மனத்திற் (கொடுமை) கொள்ளாது, இனி - இப்போது, பொறுத்து - பொறுமைகொண்டு, இ புதல்வன்தன்னை-இந்த ஆண்மகவை, அருள்புரிக-கருணைசெய்க.

கருணைபுரிகஎன்றது - ஆற்றுவெள்ளத்தில் வீசியெறிந்து மரித்திடச் செய்யாமல் புதல்வனுக்கு உயிர்ப்பிச்சை தரவேணுமென்றுவேண்டியபடி. இப்புதல்வனை அருள் புரிகஎன்று மன்னவன் வேண்டினனாயினும், நீ உடன்படாவிடினும் நான் இம்முறை நதிப்புனலிலே ஈன்ற மகவை யெறிதற்கு ஒருப்படேனென்றதன்

மனவுறுதியைத் தெரியப்படுத்த, 'வெறுத்தெனை முனியினும் இதுவேண்டும்' என்கின்றானென்க. ஆல்-அசை. (61)

**54.—கங்காதேவி அரசன்செயலைக் கண்டித்துக் கூறுதல்.**

என்றுபற்பலமொழி யிவனியம்பவே
நன்றுநன்றவனிப நவின்றவாசகம்
இன்றுநின் றிரங்கினை யெழுவர்மைந்தரைக்
கொன்றவன்றென்செய்தாய் கொடியையென்னவே.

(இ-ள்.) என்று—, பல் பல மொழி-பலபடியான வார்த்தைகளை, இவன்—இந்தச்சந்தனுராசன், இயம்ப - சொல்ல,—(அது கேட்ட கங்காதேவி மன்னவனை நோக்கி),—'அவனிப-மன்னவனே! நவின்ற-(நீ) கூறிய, வாசகம்-சொல், நன்று நன்று - மிகநன்று யிருந்தது: இன்று—, நின்று - மனத்திலுறுதிகொண்டிருந்து, இரங்கினை-(பிள்ளை யிறப்பதற்கு) இரக்கமுற்றாய்: எழுவர் மைந்தரை கொன்ற அன்று-எழுபுத்திரர்களை (நதிப்புனலிலே வீசியெறிந்து) கொன்ற அவ்வப்போது, என் செய்தாய்-என்னசெய்தாய்? கொடியை-கொடுமையையுடையாய்,' என்ன-என்று பழித்துக்கூற—(எ-று.)—"அரசனுமுணர்ந்து" என மேற்கவிபோடு குளகமாகத் தொடரும்.

எழுவர்மைந்தரைக் கொன்றஅன்று என்செய்தாய் என்றது-இப்போது எட்டாவது குழந்தைக்காகக்கொண்ட இரக்கம் அப்போது எல்லாம் எங்கேபோய்விட்டது? என்றவாறு. அரசன் கங்கையைப் பழித்தாற்போலக் கூற, அன்னாள் மறித்துப்பழித்தாளென்க. நன்று நன்று-இகழ்ச்சிக்குறிப்பு: அடுக்கு, வெகுளிபற்றியது. (62)

**55.—அப்போது அரசன்மனதது உணர்ச்சிதோன்றி அந்தத்தேவியை 'நீ யார்? பெற்ற புதல்வரைக் கொன்ற காரணம் என்?' என்றுவினவ, கங்கையாள் கூறத்தொடங்குதல்.**

அரசனுமுணர்ந்துநீ யார்கொல்பாலரைத்
திரைசெறிபுனலிடைச் செற்றதென்கொலாம்
உரைசெயவேண்டுமென் றுரைப்பவஞ்சியும்
வரிசையினுயர்ந்ததன் வரவுகூறுவாள்.

(இ-ள்.) அரசன்உம் - சந்தனுவும், உணர்ந்து - உணர்ச்சியடைந்து [மனத்திடையாராய்ச்சி தோன்றப்பெற்று என்றபடி], 'நீ யார் கொல்—? பாலரை-(பெற்ற) புதல்வரை, திரை செறி புனலிடை-அலைநெருங்கிய வெள்ளநீரிலே, செற்றது-உயிர்நீங்குமாறு எறிந்தது, என் கொல் ஆம் - என்னகாரணம்பற்றியாகும்? உரைசெய வேண்டும் - (இவ்விஷயங்களைக்) கூறவேண்டும்' என்று உரைப்ப-என்று கூற,—வஞ்சிஉம்-வஞ்சிக்கொடிபோன்ற கங்காதேவியும், வரிசையின் உயர்ந்த-பெருமையினால் மேம்பட்ட, தன்-தன்னுடைய, வரவு - (இவ்வுலகத்து) வந்துபிறந்த சரிதையை, கூறுவாள்-சொல்லுபவளானாள்; (எ - று.)

வரவு-தொழிலாகுபெயரால், வருதலைக்கொண்ட சரிதையையுணர்த்தும். (63)

**56.**—இதுமுதற் பதினெட்டுக்கவிகள்-ஒருதொடர்: கங்காதேவி தன்சாபவரலாறு முதலியவற்றைச் சந்தனுவிடம் கூறுதலைத்தெரிவிக்கும்.

**வான்முகமதியமும் புதியமாலிகைக்**
**கான்முகவிதழியுங் கமழுங்கங்கையாள்**
**தேன்முகம்பொழிதரு செய்யதாமரை**
**நான்முகன்பேரவை நண்ணினளரோ.**

(இ-ள்.) வால்-வெள்ளிய, முகம் மதியம் உம் - ஆரம்பமான (ஒற்றைக்கலைப் பிறையான] சந்திரனும், புதிய மாலிகை கான் முகம் இதழி உம்-புதிய மாலையாகக் கட்டப்படுகின்ற நறுமணத்தைத் தன்னிடத்தேயுடைய கொன்றையும், கமழும்-நறுமணம்வீசுகின்ற, கங்கையாள்-கங்காதேவி,—தேன்முகம் பொழிதரு-தேனை(த் தன்) வாயினின்று பெருக்குகின்ற, செய்ய தாமரை-செந்தாமரை மலரில் (வீற்றிருப்பவனான), நான்முகன்-பிரமதேவனுடைய, பேர் அவை-பெருமைபெற்ற சபையை, (ஒருகாலத்து), நண்ணினாள் - கிட்டினாள்; (எ-று.)—இச்செய்யுள் கங்காதேவியின் பெண் தெய்வம் சத்திய லோகத்திலே பிரமனது சபையிலே சென்றமை கூறியது.

சிவபெருமானது சடைமுடியில் கங்கை உறைபவளாதலால், அவளிடத்து மதியமும் இதழியும் கமழுமென்க. கங்கையாள், முன் நிகழ்ந்த சரித்திரம் கூறத் தன்னைப் படர்க்கையாகவைத்துப் பேசுகின்றாள். இதழிகமழுங்கங்கையாள் என்பது ஏற்குமாயினும், 'மதியங் கமழும் கங்கையாள்' என்றது-உபசாரவழக்காகும். முக மதியம்-முகத்துக்கு உவமையாகுஞ் சந்திரனென்றும், வான்-வானத்திலுள்ள என்றும் உரைப்பாருமுளர். அரோ-ஈற்றசை. ()

**57. இருங்கலையிமையவ ரெதிரிறைஞ்சுவாள்**
**மருங்கலைமதியினை மதிக்குமாறுபோல்**
**அருங்கலையயலுற வதிர்ந்துவீசினன்**
**பொருங்கலையெனுமிகற் புரவிவீரனே.**

(இ-ள்.) பொரும் - போர்செய்யவல்ல, கலை எனும் - கலைமானென்கிற, இகல் புரவி-வலிமையுள்ள வாகனத்தைக் கொண்ட, வீரன் - வீரனாகிய வாயுதேவன்,—இரு கலை இமையவர் - மிக்க கல்வியையுடைய தேவர்களின், அலை மதியினை-சஞ்சலமான புத்தியை, மதிக்கும்ஆறு போல்-அளவிட்டு அறியுந் தன்மைபோல,-எதிர்-பிரமதேவனெதிரிலே, இறைஞ்சுவாள் - வணங்குபவளான கங்கையினுடைய, மருங்கு- இடையிலே தரித்துள்ள, அருகலை-அருமையான ஆடையை, அயல்உற-(உள் அவயவந்தெரியும்படி) அப்பாற் செல்ல [சிறிதுவிலக], அதிர்ந்து - ஒலிசெய்துகொண்டு, வீசினன்—; (எ - று.)

தேவர்களின் புத்தி எவ்வாறுள்ளது என்று மதித்து அறிதற்கு அந்தக்கங்காதேவியின் உடுத்த ஆடையை வாயுதேவன் விலகச்செய்வது காரணமாகு மாதலால், இமையவர் மதியினை மதிக்குமாறுபோலென்று பயன்தற்குறிப்பேற்றவணியாகக் கூறினர். மூன்றுமடியில், கலை-வஸ்திரம். மானத்தைக் காத்து நிற்பதாதலால், 'அருங்கலை' எனப்பட்டது. வாயுதேவனுக்குக் கலைமான் வாகனமாதலால், அவனை 'கலையெனுமிகற்புரவிவீரன்' என்றார்.

குதிரையென்ற சிறப்புப்பொருளையுடைய புரவிஎன்ற சொல்-ஊர்தியென்னும் பொதுப்பொருளைத் தந்தது. இச்செய்யுளில், முதலெழுத்து வேறுபட்டிருக்கஇரண்டுமுதலியசில எழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள்வேறுபட்டது திரிபு என்னுஞ்சொல்லணி. இரண்டாமடியில் மருங்கலை அலையினை மறிக்குமாறுபோல்என்றும் பாடம். மாறுபோல் என்று பதம்பிரித்தால், இரண்டாமடி முற்று மோனையாம். மாறு விதமென்னும் பொருளதாதலை "விளங்கக் கேட்டமாறுகொல்" என்ற விடத்துங் காண்க. (65)

**58.** திருத்தகுமவயவந் திகழ்ந்துதோன்றவே
கருத்துடனவைக்கணோர் கண்புதைக்கவும்
மருத்தினைமனனுற மகிழ்ந்துகாதல்கூர்
உருத்தகுமுரிமையோ டொருவனோக்கினன்.

(இ-ள்.) திரு தகும் அவயவம்-அழகுவிளங்குகின்ற உள் அவயவம், (அப்போது), திகழ்ந்து தோன்ற-விளங்கித் தோன்றியதனால், அவைக்கணோர்-சபையிலிருந்தவரான தேவர்கள்யாவரும், கருத்துடன் - நல்லெண்ணத்துடன், கண் புதைக்கஉம் - (தம்) கண்ணைமூடிக்கொள்ளாநிற்கவும்,-மருத்தினை மனன்உறமகிழ்ந்து-(கங்கையாளின் ஆடையைவிலகுமாறுசெய்த)வாயுதேவனை மனப்பூர்வமாகக்கொண்டாடி,காதல் கூர்உரு-ஆசைமிகுதற்குக் காரணமான அந்த அவயவத்தை, தகும் உரிமையோடு-பார்த்தல் தகுமென்ற உரிமையோடு,ஒருவன்—,நோக்கினன்-; (எ-று.) நோக்கிய ஒருவன் இன்னானென்பது அடுத்த செய்யுளில் விளங்கும். (66)

**59.** நோக்கியவருணனை நுவலுநான்மறை
ஆக்கியமுனியுருத் தழன்றுபார்மகள்
பாக்கியமென்னவுற் பவிக்கநீயெனத்
தாக்கியவுருமெனச் சபித்தகாலையே.

(இ-ள்.) நோக்கிய-(ஆடைவிலகியதும் கங்காதேவியின் உள் அவயவத்தைப்) பார்த்த, வருணனை - நீர்க்கடவுளை,—நுவலும்-(மூன்று வருணத்தவரும்) ஓதுதற்கு உரிய, நால் மறை ஆக்கிய முனி - நான்குவேதங்களையும் (பரம்பொருளினிடம் கற்று) வெளியாக்கிய முனிவனாகிய பிரமதேவன், உருத்து அழன்று - மிகக் கோபித்து, 'நீ—,பார்மகள் பாக்கியம் என்ன-பூமிதேவிசெய்த நல்வினைப்பயன் என்று (கண்டவர்) கருதுமாறு, உற்பவிக்க-(பூமியிற் சிறப்புடன்) தோன்றுவாய்,' என-என்று,—தாக்கிய் உரும் என-(மேல்) மோதிய இடிபோல (பெருவருத்தமுண்டாகும்படி), சபித்த காலை-சபித்தபோது,—(எ - று.)—"வானிடைநதியையும் தந்தையேவினன்" என்க.

இட்சுவாகு வமிசத்தவனான மஹாபிஷக் என்ற அரசனே தான் செய்த தவவேள்விகளால் சத்தியலோகத்தைச் சேர்ந்திருந்தானாக, அவனே கங்கையின் அவயவத்தைக் கண்டதனாற் சபிக்கப்பட்டானென்று வியாசபாரதத்து உள்ளது: பாலபாரதத்திலும் அங்ஙனமே யுள்ளது. (67)

60. கோனிட்நினைவொடு குறுகிநீயுநன்
மானிடமடந்தையாய் மணந்துமீள்கென
வானிடைநதியையும் வழுவினலவள்
தானிடருறும்வகை தந்தையேவினன்.

(இ - ள்.) 'நீஉம்—, கோன் இடம்-அரசனாகப்பிறக்கும் வருணனிடம், நினைவொடு-(அன்புகொண்ட) மனத்தொடு, நல் மானிடம் மடந்தை ஆய்-அழகிய மானிடமகளாய், குறுகி-கிட்டி, மணந்து-(அவனைக்) கூடி (சிலகாலந்தங்கியிருந்து), மீள்க-மீண்டு (உன் சுய) வடிவத்தையடைவாய்,' என-என்று, வானிடை நதியைஉம்-ஆகாயத்திற் செல்லும் கங்கைநதியின் பெண்தெய்வத்தையும், வழுவினல்-(அவள்செய்த) தவற்றினல், அவள் இடர் உறும் வகை-அக்கங்கை மனத்துயரமடையும்படி, தந்தை - படைத்தற் கடவுளான அந்தப்பிரமன், ஏவினன் - (சாபமிட்டு) அனுப்பினன்; (எ - று.)

வானிடைநதியின் வழு-தன்னைக் காதல்கொண்டுநோக்கின வருணனைப் பிரமசபையிற் காதலோடு தானும் பார்த்தது. நினைவொடு குறுகி என்பதற்கு-முற்பிறப்புணர்ச்சியோடு கிட்டி என்று உரைத்தலும் ஏற்கும். தந்தை-யாவற்றையும் தந்தவன் என்ற காரணத்தினற் படைத்தற்கடவுளைக் காட்டிற்று. தான்- அசை. ()

61. பாரினுநமக்கொரு பதமுண்டென்றவள்
ஈரமுற்றிழிதரு மெல்லைவானகத்து
ஓரிடையுடன்விழு முற்கைபோன்முக
வாரொளிமழுங்கினர் வசுக்கடோன்றினர்.

(இ - ள்.) 'பாரின் உம் - பூமியிலும், நமக்கு— ஒரு பதம் - ஒரு ஸ்தானம், உண்டு-இருக்கின்றது,' என்று—, அவள்-அந்தக்கங்காதேவி, ஈரம்உற்று - கசிவுகொண்டு, இழிதரும் - (பூலோகத்தை நோக்கி) இறங்குகின்ற, எல்லை-போதினில்,—வானகத்து - ஆகாயத்திலே, ஓரிடை-ஓரிடத்திலே, உடன் விழும் உற்கை போல் - ஒருசேரவிழுகின்ற கொள்ளிக்கட்டைபோல, முகம் வார்ஒளி மழுங்கினர்-முகத்தினுடைய மிக்கவொளி மழுங்கினராகி, வசுக்கள்-வசுக்களென்னும் தேவகணங்கள், தோன்றினர்-காணப்பட்டார்; (எ - று.)

இது, கங்கை பூமியிலிறங்கும்போது, வானகத்திலே ஓரிடத்திலே வீழும் பல விண்வீழ்கொள்ளிபோல முகவொளி மழுங்கி வானத்திலிருந்து இறங்கும் வசுக்கள் அந்தக் கங்காதேவியாற் காணப்பட்டமை கூறுகின்றது. ஆகாசகங்கையாயிருந்தவளுக்குப் பூமியிலும் பகீரதனற்கொணரப்பட்டு இருக்குமிடம் ஏற்பட்டதனல், 'பாரினும் நமக்கு ஒருபதமுண்டு' எனக்கருதினள்; அங்ஙனங்கருதியதனல் மனத்திற் சிறிது தேறுதலுண்டாயிற்றென்க. (69)

62. என்னையிங்கிழிந்தவா றெங்கண்மாநதி
யன்னையென்றவளடி யவர்வணங்கலும்
தன்னையங்கயனிடு சாபங்கூறினள்
பின்னையங்கவருந்தம் பெற்றிபேசுவார்.

(இ - ள்.) 'மாநதி-சிறந்தநதியாகிய, எங்கள் - எங்களுடைய, அன்னை-தாயே! இங்கு-இங்கே, இழிந்த ஆறு-இறங்கிய காரணம், என்னை-யாதோ?' என்று—, அவள் அடி - அந்தக் கங்காநதியின் பெண்தெய்வத்தின் பாதங்களிலே, அவர்-அந்தவசுக்கள், வணங்கலும்-தொழுதவளவில்,—(அந்தக் கங்காதேவி), தன்னை-தனக்கு, அங்கு - பிரமலோகத்தில், அயன் இடு - பிரமதேவனிட்ட, சாபம்-சாபத்தை, கூறினாள் - சொல்லினாள்: பின்னை-பின்பு, அவர்உம்-அந்தவசுக்களும், அங்கு - அப்போது, தம்பெற்றி - தம்முடைய நிகழ்ச்சியை, பேசுவார்-சொல்பவரானார்கள்; (எ - று.)—வசுக்கள் தம் பெற்றி பேசுவதை மேல் ஆறுகவிகளிற் காண்க.

இது, வசுக்கள் வினவவே, கங்காதேவி தன் சாபத்தைத் தெரிவித்தமை கூறியது. அன்னை - அண்மைவிளி: இயல்பு. அயன் - அஜன்: ஸ்வயம்பூ என்றதன் பொருளையுடைய வடசொல்: இனி, அகாரவாச்சியனான திருமாலினிடத்தினின்று தோன்றியவனென உரைத்தலு முண்டு. (70)

63. உற்றுறையெங்களு ளொருவன்றன்மனைப்
பொற்றொடிக்கழிந்தவள் புன்மைவாய்மையாற்
சற்றுமெய்யுணர்வறத் தகாதொன்றெண்ணினன்
மற்றெழுவருமவன் வயத்தராயினேம்.

(இ-ள்.) உற்று-(வானத்துப்) பொருந்தி, உறை-வசிக்கின்றவரான, எங்களுள்—, ஒருவன் - ஒருத்தன் [பிரபாசனென்பவன்], தன் மனை-தன்னுடைய மனைவியாகிய, பொன் தொடிக்கு-பொன்னாலாகிய வளையை யணிந்தவள்திறத்தில், அழிந்து - (மனவுறுதி) தப்பி, அவள் புன்மை வாய்மையால் - அவள்கூறிய இழிவையுடைய பேச்சினால், சற்றுஉம்-சிறிதும், மெய்உணர்வுஅற-மெய்யுணர்வென்பது இல்லாதுநீங்க, தகாது ஒன்று - தகாத தொரு செயலை, எண்ணினன்-(செய்யக்) கருதினான்: மற்று எழுவர்உம்-மற்றைஎழுபேரும், அவன் வயத்தர் ஆயினேம் - (தகாதஇச்செயலைச் செய்தல் வேண்டாஎன்று தடுக்காமல்) அந்தப்பிரபாசனுக்கு உடந்தையராக ஆயினோம்; (எ - று.)—ஆறுகவிகள்-ஒருதொடர்: வசுக்களின் சாபவரலாறு.

பொற்றொடி-வேற்றுமைத்தொகையன்மொழி. எழுவராவார்-அனலன் அனிலன் ஆபன் சோமன் தரன் துருவன் ப்ரத்யூஷன் என்பவர். (71)

64. தூநகைமொழிப்படி சோரராகியே
வானவர்வணங்குதாள் வசிட்டன்வாழ்மனைத்
தேனுவையிரவினிற் சென்றுகைக்கொளா
மீனெறிகரந்தென மீளவேகினேம்.

(இ-ள்.) தூ நகை-வெள்ளியசிரிப்பையுடைய (பிரபாசனென்ற வசுவினுடைய) மனைவியின், மொழிப்படி - பேச்சின்படி, சோரர் ஆகி - திருடராகி,—வானவர் வணங்கு தாள் வசிட்டன் வாழ் - தேவர்களும் வணங்குகின்ற பாதங்களையுடையவனான வசிஷ்டமுனிவன்வாழ்கின்ற, மனை - மனையிலேயுள்ள, தேனுவை - பசுவை, இரவினில் சென்று - இராத்திரியிற்போய், கைக்கொளா-கவர்ந்து

கொண்டு,மீன் நெறிகரந்து என-மீன்சென்றவழி ஒளித்ததுபோல (ச் சென்ற அடிச்சுவடும் தெரியாதபடி), மீள ஏகினோம்-மீண்டு (எம்மிடத்துக்குச்) சென்றிட்டோம்; (எ - று.)

நீரிற் சஞ்சரிக்கும்போது மீன் சென்று மீண்ட இடம் தெரியாமற்போவதனால், அவ்வாறுசென்றுமீண்ட தம்நெறிக்கு மீனின் நெறியை உவமை கூறினர். தூநகை-பண்புத்தொகையன்மொழி. தேநு-வடசொல். வானவர்-வானத்திலுறைபவர்: தேவர். வசிட்டன் - இந்திரியத்தை வென்றவன்: தேஜசுள்ளவனென்றுமாம். 'மீனெறிகவர்ந்தென' எனவும் பாடம். (72)

**65.** பசுக்கவர்ந்தனரெனப் பயிலுமாதவம்
முசுக்குலமனையமெய்ம முனிவர்கூறலும்
சிசுக்களினறிவிலாச் சிந்தைசெய்தவர்
வசுக்களென்றருந்ததி மகிழ்நனெண்ணினன்.

(இ-ள்.) பயிலும் மாதவம் - பழகுகின்ற பெருந்தவத்தையுடையரான, முசு குலம் அனைய - முசுவென்னும்வானரசாதியையொத்த,மெய்-உடம்பையுடைய,முனிவர்-முனிவர்கள், 'பசு கவர்ந்தனர் - பசுவை (யாவரோ) திருடிக்கொண்டுபோய்விட்டார்கள்,' என-என்று, கூறலும் - சொன்னவளவில்,—அருந்ததி மகிழ்நன்-அருந்ததிக்குக்கணவனான வசிஷ்டமாமுனிவன், 'சிசுக்களின்-சிறுகுழந்தைகள்போல, அறிவு இலா - ஆராய்ச்சியில்லாமல், சிந்தைசெய்தவர்-(திருடுமாறு) எண்ணியவர், வசுக்கள் - வசுக்களாவர்,' என்று—, எண்ணினன்-ஞானதிருஷ்டியினாலறிந்தான்; (எ - று.)

மயிர்வளர்ந்திருத்தலும் உடம்பு ஒட்டியிருத்தலும்பற்றியும், குந்தியிருக்கும் தன்மைபற்றியும், முசுக்குலம், முனிவர்க்கு உவமை. முனிவர்கள்மீதுள்ள வெகுளியால் 'முசுக்குலமனைய' என்றனர். முசு—குரங்கின்சாதிபேதம். இலா-இல்லாமல்: ஈறுகெட்ட எதிர்மறைக் குறிப்புவினையெச்சம்: இது சிந்தைசெய்தவர் என்ற விடத்திலுள்ள செய்தவரென்பதில் செய்என்ற வினையுடன் தொடரும். அருந்ததி-வசிஷ்டமுனிவரின்மனைவி. (73)

**66.** உம்பதமிழந்துநீ ருத்திமண்ணுளோர்
தம்பதம்பெறுகெனச் சாபங்கூறலும்
எம்பதம்பெறுவதென் றினியெனுவவன்
செம்பதமெமதுபூஞ் சென்னியேந்தினேம்.

(இ-ள்.) (தனது ஞானதிருஷ்டியினால் வசுக்கள் தேனுவைக் களவாடியதை யறிந்த வசிட்டமுனிவன்),—'நீர்—, உம்பதம்-உமது பதவியை [வசுக்களாயிருப்பதை], இழந்து—, உததி மண் உளோர் தம்-சமுத்திரத்தினாற் சூழப்பட்ட பூமியிலே யிருப்பவருடைய, பதம்-நிலையை, பெறுக-அடைவீராக,' என—, சாபம் கூறலும்—,—'எம் பதம்-எமக்குஉரிய பதவியை [வசுக்களாயிருப்பதை], பெறுவது - (நாங்கள்) மீண்டும் அடைவது, இனி-இனிமேல், என்று-எப்போது?' என-என்றுவினவி, அவன் செம்பதம்-அந்தவசிஷ்ட முனிவனின் அழகிய திருவடிகளை, எமது பூ சென்னி ஏந்தினேம்-எமது மலரை முடித்தற்குஉரிய சென்னியில் தாங்கினேம்; (எ - று.)

எமதுசாபத்திற்கு ஒருவிமோசனம் ஏற்படுமாறு திருவருள் புரியவேணுமென்று வசிஷ்டமுனிவன் பாதங்களில் வணங்கினோ மென்றவாறு. உததி-நீரையுடையது: கடல்: வடசொல். (74)

67. அன்புடைமுனிமுனி வாறிமானுடப்
புன்பிறப்பெழுவரும் புரிந்துமீளுதிர்
மின்புரைதெரிவைசொல் விழைந்தநீயவண்
இன்பமற்றநேகநா ளிருத்தியென்னவே.

(இ-ள்.) அன்புஉடை-கருணையையுடைய, முனி-அவ்வசிட்ட முனிவன், முனிவு ஆறி-கோபந்தணிந்து, "எழுவர்உம்-(தேனுவைக் கவர்தற்கு உடந்தையாயிருந்த) ஏழுபேரும், புல் மானுடம் பிறப்பு புரிந்து மீளுதிர் - புல்லியமானிடப்பிறவியையெடுத்து (உடனே உமது பதவிக்கு) வந்துவிடுங்கள்: மின் புரை தெரிவை சொல் விழைந்த-மின்னலைப்போன்ற [பேரொளிபடைத்த] மனைவியின் சொல்லை விரும்பிக் கேட்டுக் களவைப் பிரதானனாகஇருந்து செய்த, நீ—, அவண்-அந்தப்பூமியில், இன்பம் அற்று-பெண்ணின்பத்தை நீங்கி, அநேகம் நாள் இருத்தி-வெகுகாலம் இருப்பாயாக", என்ன-என்றுகூற,—(எ-று.)—"செல்வமும்...எண்மருமிழந்தனம்...என" என்று அடுத்த கவியோடு தொடரும்.

தெரிவையின்சொல்லை விழைந்து களவாடிய பிரபாசனுக்கு மானுடனாகித் தெரிவையின்பம்நீங்கி மண்ணுலகிற் பலநாளிருந்து பிறகுதன்பதவியையடையுமாறும், அவனுக்குஉடந்தையாயிருந்த மற்றையெழுவர்க்கும் பூமியில் மானுடப்பிறவி யெடுத்து உடனே மீளுமாறும் சாபவிடை தந்தனன் வசிட்ட முனிவனென்க. (75)

68. விண்வருசெல்வமும் விழைவுமேன்மையும்
எண்மருமிழந்தன மென்செய்வேமென
மண்வருதையலை வணங்கத்தையலும்
பண்வருமொழிசில பகர்ந்துதேற்றினள்.

(இ-ள்.) (இங்ஙனம் வசிட்டமுனிவன் சபித்ததனால்), எண்மர் உம்-(வசுக்களாகிய நாங்கள்) எட்டுப்பேரும்,—விண் வரு செல்வம்உம்-சுவர்க்கலோகத்துப் பெறுமாறுவருகின்ற ஐசுவரியத்தையும், விழைவுஉம்-போகத்தையும், மேன்மைஉம்-சிறப்பையும், இழந்தனம்-இழந்திட்டேம்: என் செய்வேம்-(இனி) என்செய்ய மாட்டுவேம்? என-என்று, மண் வரு தையலை வணங்க-பூமியிலிழிகின்ற கங்காதேவியை வணங்க,—தையல்உம்-அந்தத் தேவியும், பண் வருமொழிசில-இராகத்தையொத்த சிலசொற்களை, பகர்ந்து -சொல்லி, தேற்றினள்-(அவர்களுடைய மனவருத்தத்தைச் சிறிது) ஆறச் செய்தாள்; (எ-று.)—கங்கையாள் தேற்றுவதை மேலிரண்டு செய்யுள்களிற் காண்க. (76)

69. வலத்துயர்தடம்புய வருணனுங்குரு
குலத்தினிலயன்வரங் கொண்டுதோன்றுமால்
நலத்துடனவன்மனை நண்ணுமெல்லையில்
நிலத்திடையென்வயி விருந்தோன்றுவிர்.

(இ-ள்.) வலத்து - வலிமையினால், உயர் - மிக்க, தட புயம் - பெருமை பெற்ற தோளையுடைய, வருணன்உம்—, குருகுலத்தினில்-குருகுலத்திலே, அயன் வரங்கொண்டு-அயனுடைய விருப்பத்தினால் [பிரமசாபத்தினால்], தோன்றும்-உதிப்பான்: (யான்), நலத்துடன்-சிறப்புடனே, அவன் மனை - அவனுடைய மனைவியாக, நண்ணும் எல்லையில் - (அவனைச்)சேரும்போது, நீரும்—, நிலத்திடை-நிலவுலகத்திலே, என்வயின்-என்னிடத்து, தோன்றுவீர்-புத்திரராகப் பிறப்பீராக; (எ-று.)—இதுவும், அடுத்தகவியும்-கங்கையாள் வசுக்களைத் தேற்றியதைத் தெரிவிக்கும். வரம் - விருப்பம். அயன் வரம்-பிரமனிட்டசாப மென்க. (77)

70. அஞ்சன்மினும்மைநா னவனிதோயுமுன்
எஞ்சவிட்டிடுவனிவ் விறைவன்றன்னையும்
நெஞ்சுறத்தந்தைபா னிறுத்திநானுமவ்
வஞ்சகப்பிறப்பினை மாற்றுவேனென்றாள்.

(இ-ள்.) அஞ்சன்மின் - (பூமியில் எவ்வாறு வசிப்பதென்று) அஞ்சவேண்டா: நான்—, உம்மை—, அவனி தோயும் முன் - பூமியில் படுவதற்கு முன்னமே [பூமியில் நீர் பிறந்தவுடனே], எஞ்ச - உயிரொடுங்கும்படி, வீட்டிடுவன்-இறக்கச்செய்வேன்: இ இறைவன் தன்னைஉம் - பிரபாசனென்கிற தலைமைபெற்ற இவனையும், நெஞ்சுஉற - (பிதாவின்) மனத்திற்குப் பொருந்துமாறிருக்க, தந்தைபால்-தந்தையினிடத்தில், நிறுத்தி-நிற்கச்செய்து,—நான் உம்—, அ வஞ்சகம் பிறப்பினை-தீமையால்விளைந்த அந்த(என்னுடைய) மானுடப்பிறவியை, மாற்றுவேன் - போக்கிடுவேன், என்றாள்-என்றுகூறினாள்; (எ - று.)

எஞ்ச - சாபங் கழியும்படி யெனினுமாம். அஞ்சன்மின்-ஏவற் பன்மை வினைமுற்று. அவனி=அவநீ: காத்தற்கு உரியது: பூமி. (78)

71. நாலிருவசுக்களு நதிமடந்தைசொற்
பாலிருசெவிப்படப் படாதநற்றவம்
சாலிருநிலத்திழி தாயையன்புடன்
காலிருகரத்தினாற் கசிந்துபோற்றினர்.

(இ-ள்.) நால் இரு வசுக்கள்உம் - வசுக்கள் எண்மரும், நதி மடந்தை-கங்காதேவியின், சொல் பால்-சொல்லமுதம், இரு செவி பட-(தமது) இரண்டுகாதிலே விழ, படாத நல்தவம் சால் - அழியாத சிறந்த தவப்பயன் பொருந்திய, இருநிலத்து இழி - பெரிய பூமியிலே யிழிகின்ற, தாயை-கங்கையாளை, கசிந்து - மனமுருகி, அன்புடன் - அன்போடு, கால் - பாதங்களிலே, இரு கரத்தினால்-(தமது) இரண்டு கைகளினாலும், போற்றினர் - வணங்கினர்கள்; (எ-று.)

எப்படிப்பட்டவரும் தவப்பயனைப் பெறுதற்குரிய புண்ணிய பூமி பூதலமே யாதலால், 'படாத நற்றவஞ்சா லிருநிலம்' என்றது. 'படர்ந்தநல்லறம்' என்றும்பாடம். போற்றுதல் - வணங்குதல்: "வந்தித்தல்போற்றல்வணங்கலாகும்" என்றது, பிங்கலந்தை.(79)

72. சதையமின்கடவுளுஞ் சசிகுலத்துநல்
விதையெனமேதினி மீதுதோன்றினன்
துதையளிசெறிகுழற் றேகையாயினள்
இதையமுற்றுயர்நதியென்னுமின்னுமே.

(இ - ள்.) சதையம் மின் கடவுள்உம்-சதயமென்ற நட்சத்திரத்துக்கு உரிய கடவுளான வருணதேவனும், சசிகுலத்து - சந்திரகுலத்திலே, நல்விதை என-சிறந்த வித்துப்போல, மேதினிமீது-பூமியின்மேல், தோன்றினன்-பிறந்தான்; இதையம் உற்று - நன்மனம் பொருந்தி, உயர்-மேன்மைபெற்ற, நதி என்னும் - நதியென்கிற, மின்உம்-மின்னல்போன்ற பெண்ணும், துதை - நெருங்கிய, அளி - வண்டுகள், செறி - நெருங்கிய, குழல் - கூந்தலையுடைய, தோகை ஆயினள்-மானுடப்பெண்ணானாள்; (எ - று.)

இது, வருணன் பூமியில் குருகுலத்திற் பிறக்க, கங்கையாளும் மானுடமகளாதலைக் கூறும். பிரதீபமன்னனுக்குப் பிறந்தகுமாரருள் சந்தனு, இரண்டாமவனாயிருந்தும் முதல்வனான தேவாபி போல இளமையிலேயே கானகஞ்செல்லாது இல்லறத்தைப் பூண்டு ஒழுகியதனால் வீடுமன் முதலியோர் தோன்றிக் குருகுலம் பெருக்கியமையின், 'சசிகுலத்து நல்விதை யென' என்று கூறியதென்பர். சசி=சசீ: முயலை [முயல்போன்றகறையை] யுடையது: காரணப்பெயர். ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் ஒவ்வொரு தேவதையுண்டு: சதயநட்சத்திரத்திற்கு வருணன் தேவதை: ஆதலால், வருணனை 'சதையமின் கடவுள்' என்றார். மேதினி=மேதிநீ: மதுகைடபர்களின் மேதசினால் [உடற்கொழுப்பினால்] நனையப்பெற்றதென்று அவயவப்பொருள். வண்டுகள் மொய்த்தல் தேவமாதர்க்கன்றி, மானுடமகளுக்கே யுரியதாதலால், 'துதையளி செறிகுழல் தோகை' என்றதனால் மானிட மகளென்பது பெறப்படும். தோகை, மின்-ஆகுபெயர்கள். (80)

73. தவமுறக்குடதிசைத் தலைவன்றாரமாம்
அவள்வயிற்றுதித்தன ரந்தவெண்மரும்
உவகையிற்பெரும நீயுணர்ந்துகொள்கென
இவடிருக்கணவனு மின்னகூறுவான்.

(இ - ள்.) தவம் உற - நல்வினை பொருந்துதலால், குடதிசை தலைவன் தாரம் ஆம்-மேற்குத்திக்குக்குத் தலைவனான வருண தேவனுக்கு மனைவியான, அவள் வயிற்று-அந்தக் கங்காதேவியின் வயிற்றிலே, அந்த எண்மர்உம் உதித்தனர் - அந்த அஷ்ட வசுக்களும் (முறையே) பிறந்தார்கள்: பெரும - பெருமையுடையோனே! நீ—, உவகையின்-மகிழ்வோடு, உணர்ந்துகொள்க-(இச்செய்தியை) அறிந்துகொள்க, என-என்று (கங்கையாள்) கூறி நிற்க,—இவள் திரு கணவன்உம் - இந்தக்கங்கையாளின் சிறந்த கணவனான சந்தனுவும், இன்ன - இவ்வாறான வார்த்தைகளை, கூறுவான்-சொல்பவனானான்; (எ-று.)—கணவன் கூறுவன மேற் செய்யுளிற் காணப்படும்.

வருணன் மனைவியான கங்கையாளிடத்து வசுக்களெண்மரும் தோன்றினரென்று கங்கையாள் தான் கூறிய வரலாற்றினை

முடிக்க, பின்புசந்தனு கூறத்தொடங்கினனென்பதைத்தெரிவிப்பது. இது. கங்கையாள் தன் பழஞ் சரித்திரங் கூறிய முகத்தால், சந்தனுவை இன்னனென்றும், தன்னாற் கொல்லப்பட்ட குழந்தைகள் எழுவரும் வசுக்களென்றும், ஈற்று மகவு பிரபாசனென்ற வசு என்றும், மன்னவன் இத்துணைநாள்பெற்ற குழந்தைகளைக் கொன்றதற்கு இரங்காது இப்போது இரங்கித்தடுத்ததற்குக் காரணமும் கூறியவாறு காண்க. (81)

**74.—பிறப்பு உணர்த்தியமைக்குக் கொண்டாடி, சந்தனு கங்கையாளை இச்சிறுவன் செய்வதென்னென்று வினவுதல்.**

அறப்பயனென்னுமா றறிவிலாவெமைப்
பிறப்புணர்த்தினைமகப் பேறுசெய்துநீ
இறப்பவரெழுவரோ டேகலாவுயர்
சிறப்புடையினையவன் செய்வதென்னென்றான்.

(இ-ள்.) 'அறம்பயன் என்னும் ஆறு-தருமத்தின் பயனென்று கருதுமாறு (வந்து), நீ -, மகப்பேறு செய்து - புத்திரப்பேற்றை (எனக்கு) உண்டாக்கி, அறிவு இலா எமை - பிறப்புணர்ச்சியற்றிருந்த எங்களை, பிறப்பு உணர்த்தினை-(எங்கள்)பிறப்பையும்அறிவித்தாய்: இறப்பவர் எழுவரோடு - இறந்துபடுதலையுடையரான எழு வசுக்களுடனே, ஏகலா-(தன்பதவிக்குச்) செல்லுதற்கு உரியவனல்லாத, உயர் சிறப்பு உடை-மிக்க சிறப்பினையுடைய, இனையவன்-இந்தக் குமாரன், செய்வது-செய்யவேண்டுவது, என்-யாது?' என்றான் - என்று வினவினான்; (எ - று.)—புதல்வனையும் உளப்படுத்தி 'எமை' என்றது. (82)

**75.—கங்கையாள் எட்டாங்குழந்தையின் தன்மையைப்பற்றி மன்னவனிடங் கூறுதல்.**

முக்குலத்தரசினு முதன்மையாலுயர்
இக்குலத்திவனலா தில்லைமாமகார்
அக்குலத்தவமுனி யருளினாலிவன்
மெய்க்குலத்தந்தையாம் விழைவுமில்லென்றாள்.

(இ-ள்.)' முக்குலத்து அரசின்உம்-(சூரியன் சந்திரன் அக்கினி என்ற)மூன்று க்ஷத்திரியகுலங்களி னரசருள்ளும் முதன்மையால் உயர் -முதல் தரமான தன்மையைக்கொண்டுமேம்பாடுபெற்ற, இ குலத்து-இந்தக் குலத்திலேபிறந்த, இவன் அலாது-இவனையல்லாமல், மா மகார்-பெருமைபெற்ற புதல்வர், இல்லை-(வேறொருவரும்) இல்லை: அ - அந்த [பிரசித்தமான], குலம் - சிறப்புள்ள, தவம் முனி அருளினால்-தவத்தைக்கொண்ட வசிட்ட முனிவனது கருணையினால், இவன்-இந்தக் குமாரன், மெய் குலம் தந்தை ஆம் விழைவுஉம் - உண்மையையுடைய குலத்திலே தந்தையாதற்கு ஏற்ற விருப்பமும், இல்-உடையவனல்லான்,' என்றாள்-என்று (அந்தக் குமாரன் செய்தியைக் கங்கையாள்) தெரிவித்தாள்; (எ-று.)

தேனுவைக்கவர்ந்த பிரபாசனென்ற வசுவைப் பெண்ணின்ப மற்றிருக்கும்படி வசிட்டமுனிவன் சபித்தா னாதலால், 'தந்தை யாம் விழைவும் குலத்தவமுனியருளினால் இவனுக்கு இல்' என் ருள். சாபத்தை 'அருள்' என்றது-இங்ஙன்சாபம் தராவிடின் அந் தத் தீவினைப்பயனை வேறு வகையாக நுகரவேண்டி வருமாதலா லும், அங்ஙன் இல்லாதபடி செய்ததனாலுமாம். 'அக்குலத்தவ முனியருளினால்' என்றது - முன்னும் பின்னும் இயைதலால், மத்திமதீபம். 'தந்தையால்' எனவும்பாடம். (83)

**76.—'இன்னமொரு புதல்வனைப்பெற்றபின் விண்ணுலகுசேரலாம்' என்று மன்னவன் கங்கையாளிடம் கூறுதல்.**

**மன்னவர்தொழுகழன் மன்னன்மைந்தனோடு**
**இன்னமுமொருவனை யினிதளித்துநாம்**
**பன்னகநெடுமுடிப் பார்களிக்கவே**
**பொன்னகரிருவரும் போதுமென்னவே.**

மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) மன்னவர் தொழு கழல் மன்னன்-அரசர்கள் வந்து வணங்குகின்ற பாதங்களையுடைய சந்தனுராசன், 'மைந்தனோடு-இந்தப்புதல்வனுடனே, பன்னகம் நெடு முடி பார் களிக்க - ஆதி சேஷனுடைய நெடிய தலைமீதிருக்கும் பூமி களிக்கும்படி, இன்ன மும்-, ஒருவனை-ஒருபுத்திரனை, இனிது அளித்து - இனிது தந்து, (பிறகு), நாம்—, இருவரும்—, பொன் நகர் - தேவலோகத்துக்கு, போதும்-போவோம்,' என்ன - என்று (தன் கருத்தைத்) தெரி விக்க-(எ-று.) இச்செய்யுளில், என்ன என்பது மேல் 78 ஆம் கவி யில் வரும் 'எனா' என்பதனோடு இயைய, அது 'தழீஇ ஏகினாள்' என்று தொடர்ந்து முடியும்.

இப்போது பிறந்துள்ளபுதல்வன் பெண்ணின்பமற்று வைராக்கியசாலியாக இருத்தற்கு உரியவனாதலால், சந்ததி விருத்தி செய்பவனாய்ப் பூமியை யாளுதற்கு ஏற்ற மற்றொருபுதல் வனைப் பெற்றபின் இருவரும் விண்ணுலகஞ் செல்வோமென்று கங்கையாளிடம் சந்தனு தன் கருத்தினைத்தெரிவித்தானென்க. 'அளித்தும்' என்று எடுப்பின், தன்மைப்பன்மை வினைமுற்றாம். ஆதிசேஷன் உலகின் கீழிருந்து தாங்குகின்றானென்ற ஒருசார் நூற்கொள்கைபற்றி, 'பன்னகநெடுமுடிப்பார்' என்றது. (84)

**77.—கங்கையாள் சந்தனுவைநோக்கி 'பலவகைப்போகங்களையும் நுகர்ந்து அரசியலைநிறுத்திப் பின்பு மீளுக' எனல்.**

**போயிருந்தென்பயன் போகம்பலவகை**
**ஆயிருந்தனவெலா மருந்தியின்னமும்**
**மாயிருந்தரணியின் மன்னுசில்பகல்**
**நீயிருந்தரசிய னிறுத்திமீளுவாய்.**

(இ-ள்.) நீ—, போய்-(விரைவிலே விண்ணுலகத்திற்குச்) சென்று, இருந்து - அங்கேயிருந்து, என் பயன் - யாதுபயன்? [யாதொருபயனுமில்லை]: பல் வகை ஆய் இருந்தன போகம் எலாம் அருந்தி-பலவகையாயிருந்த போகங்களையெல்லாம் அநுபவித்து, இன்னமும்—,மா இரு தரணியில்-மிகப்பெரிய பூமியிலே, மன்னு சில் பகல் இருந்து-பொருந்திய சிலநாள் தங்கியிருந்து, அரசியல்நிறுத்தி-அரசாட்சியை நிலைநிறுத்தி, மீளுவாய்-(பின்பு) திரும்பிவருவாய்; (எ - று.)

இந்தச்சந்தனுவுக்கு இப்போதே இவ்வுலகத்தை விட்டிடும்படி மனத்தில் விழைவு அருமையால், 'போயிருந்தென்பயன்' என்றாள்: இதனால், தான் இப்போதே செல்வதைக் குறிப்பித்தாளாயிற்று. (85)

**78.—'காளைப்பருவம்வரையில் என்னுடனிருந்து பிறகு உன்னிடம் வரட்டும்' என்றுகங்கையாள் இறுதியிற்பெற்ற புதல்வனைத் தன்னுடன்கொண்டுமீளுதல்.**

இப்புதல் வனுமினி யென்னொ டேகியே
மெய்ப்படு காளையாம் பதத்து மீளநின்
கைப்படுத் துவலெனக் கணவ னைத்தழீஇ
அப்பெரும் புதல்வனோ டவளு மேகினாள்.

(இ-ள்.) இ புதல்வன்உம்-இந்தப்புத்திரனும்,இனி என்னொடு ஏகி-இப்போதுஎன்னுடன் வந்து, மெய்படு காளை ஆம் பதத்து-உடம்பிற் காணப்படுகின்ற காளைப்பருவத்தில், மீள-(உன்னிடம்) திரும்பி வருமாறு, நின் கை படுத்துவல்-உன் கையிற் சேரச்செய்வேன், என-என்று சொல்லி,—கணவனை தழீஇ-(தன்) கணவனைத் தழுவிக்கொண்டு, அ பெரு புதல்வனொடு-பெருமைபெற்ற அந்தப்புத்திரனோடு, அவள்உம்-அந்தக் கங்கையாளும், ஏகினாள்-சென்றாள்; (எ - று.) (86)

வே று.

**79.—சந்தனு கங்கையாளைப்பிரிந்த வருத்தத்தோடு நாள்கழித்தல்.**

அன்றுதொட் டிவனு மகன்றபூங் கொடியை யழகுற வெழுதிமுன் வைத்தும்
ஒன்றுபட்டுவமைப்பொருள்களாற்கண்டுமுரைத்தவையெடுத்தெடுத்துரைத்
மன்றலிற்றலைநாள்விழைவொடுமணந்த மடந்தையர்வதனமுநோக்கான்[]தும்
என்றினிக்கிடைப்பதென்றுளம்வருந்தியெண்ணுநாளெல்லையாண்டிருந்தான்.

(இ-ள்.) அன்று தொட்டு - அன்றுமுதல், இவன்உம்-இந்தச் சந்தனுவும், அகன்ற - (தான்) பிரிந்த, பூங் கொடியை - பூங்கொடி போன்ற கங்கையாளை, அழகு உற எழுதி-அழகுபொருந்த(ப்படத்திலே)எழுதி,முன்வைத்து உம்-(தன்)முன்னே வைத்துக்கொண்டு தரிசித்தும், ஒன்றுபட்டு - (மனம்) ஒருமித்து, உவமை பொருள்களால் - உபமானமாதற்கு உரிய பொருள்களாலே, கண்டுஉம்-(அவளை) ஒருவாறுகண்டும், உரைத்தவை - (அவள் தன்னுடன்) கூறியபேச்சுக்களை, எடுத்துஎடுத்து உரைத்துஉம் - பலமுறையெடுத்துச் சொல்லியும், தலைநாள் விழைவொடுஉம் மன்றலில்

மணந்த மடந்தையர் வதனம்உம் நோக்கான் - முற்காலத்திலே விரும்பிக் கலியாணஞ்செய்துகொண்டு மணந்த பெண்களின் முகத்தையும் கண்ணெடுத்துப் பாராதவனாய்,—என்று கிடைப்பது இனி என்று-'(அந்தக்கங்கையாளின் தரிசனம்)இனிக்கிடைப்பது எப்போதோ?' என்று நினைந்து,உளம் வருந்தி-மனம்வருத்தமடைந்து,எண்ணும்நாள் எல்லை-எண்ணுதற்குஉரியகாலவெல்லையிலே, ஆண்டு-அரசுபுரிந்து, (தன்நகரில்), இருந்தான்—; (எ-று.)

முன்மணந்த மடந்தையரைக் கண்ணெடுத்துப்பார்த்தலுஞ் செய்யாது, கங்கையாளின் எண்ணமே மனத்துநிற்கத் தன்நாளை வருத்தத்துடன் கழித்துவருவானாயினன் சந்தனுவென்க. உவமைப் பொருள்களால் காணுதல்-மின்னல் மயில் வஞ்சிக்கொடி என்று இன்னோரன்ன பொருளைக் கண்டு அந்தக்கங்கையாளைக் கண்டாற்போன்று சிறிதுமனந்தேறுதல். கங்கையாள்'காளையாம் பதத்து மீள நின் கைப்படுத்துவல்' என்று கூறிச் சென்றிட்டாளாதலால், அதையே மன்னவன் மனத்தில் எண்ணிக்கொண்டிருத்தலால், அந்தக்காலவெல்லையை 'எண்ணுநாளெல்லை' என்றது. இருபத்தாறி யாண்டுகள் சென்றபின், வீடுமனைக் கூடினனென்று பாலபாரதத்திற் கூறப்பட்டுள்ளது.

இது முதலிருபத்தெட்டுக்கவிகள்-இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிவந்த எழுசீராசிரியவிருத்தங்கள். (87)

**80.—மீண்டும் சந்தனு கானகத்தில் வேட்டையாடி முடித்துக் கங்கைக்கரையை யடைதல்.**

**பின்னொருதினத்திலமைச்சரும்பிறரும் பெரும்படைத்தலைவருஞ்சூழ**
**முன்னொருதினத்தின்வனத்துமாவேட்டைமுன்னினன்முயன்றுபோய்முற்றி**
**மின்னொருவடிவுகொண்டெனச்சிறந்த மெல்லியன்மீண்டுறைமறையுந்**
**தன்னொருமதலையாக்கமுங்கருதிச் சானவித்தடங்கரையடைந்தான்.**

(இ-ள்.) பின் ஒரு தினத்தில்-பின்பு ஒருநாள், அமைச்சர்உம் பெரும்படைத்தலைவர்உம் பிறர்உம் சூழ-மந்திரிமார்களும் சேனாபதிகளும் மற்றையோரும் சூழ்ந்துவர,முன் ஒரு தினத்தின்-முன்பு ஒரு தினத்தில் (வந்ததுபோல), வனத்து-காட்டில், மா வேட்டை-மிருகவேட்டையை, முன்னினன்-செய்யக் கருதியவனாய், (அதன் பொருட்டு), முயன்று போய்—,முற்றி-(வேட்டையை)முடித்திட்டு, (பிறகு):மின் ஒரு வடிவுகொண்டு என சிறந்த மெல்லியல்-மின்னல் ஒருவடிவத்தைக் கொண்டாற்போலச் சிறந்தமடவாளையும், மீண்டு-(தன்னிடத்தினின்று) நீங்கி,உறை மறையும்-நீரினுள்ளே மறைந்து சென்ற, தன் ஒரு மதலை-தன்னுடைய ஒப்பற்ற புதல்வனுடைய, ஆக்கம்உம்-வளர்ச்சியையும், கருதி-நினைந்து, சானவி தட கரை-கங்கையின் பெரிய கரையிலே, அடைந்தான் - போய்ச்சேர்ந்தான்; (எ - று.)

முன்பு ஒருமுறை வேட்டையாடச் சென்றதுபோலவே இப்போதும்அமைச்சர் முதலியோர் சூழ வேட்டையாடி அத்தொழிலை

முற்றிய சந்தனு தன்மனைவியையும், குமாரன் இப்போது எவ்வாறு வளர்ந்துள்ளான் என்பதையும் காணக்கருதி, மீண்டும் கங்கைக் கரையை அடைந்தனனென்க. 'கங்கைக்கரையைச் சேர்ந்தால் ஒருகால் கங்கையாளையும் வளர்ந்த தன் புதல்வனையும் காண நேருங்கொல்லோ?' என்று அங்கு மன்னவன் சென்றானென்றவாறு. சானவி-ஜாஹ்நவீயென்ற வடசொல்லின் திரிபு: பகிரதசக்கரவர்த்தியின் பின்னேசென்ற கங்கை வழியிடையே ஜஹ்நுமுனிவரின் வேள்வியை யழிக்க, அவர்பருகி அந்தப்பகிரதனது வேண்டுகோளினால் தமது காதின்வழியாக விட்டதனால், கங்கைக்குச் சானவியென்று பெயர். அமைச்சர்-அமாத்யரென்ற வடசொல்லின் திரிபென்பர். (88)

### 81.—முன்பு கங்கையாளைக் கண்ட சோலைமுதலியவற்றைக் கண்டு மன்னவன் மனமுருகுதல்.

**பண்டுதானவளையெதிர்ப்படுங்கனகம் பைங்கொடிப்பந்தர்வானிழலும்**
**வண்டருநறைப்பூஞ்சோலையுந்தடமு மருங்கலைமலயமாருதமும்**
**புண்டரீகமுஞ்செங்காவியுங்கமழும் புளினமும்புளினமென்றுறையும்**
**கண்டுகாரிகையையிம்மையிலின்னுங் காண்குமோவெனமனங்கசிந்தான்.**

(இ - ள்.) பண்டு-முன்பு, தான்—, அவளை-அந்தக் கங்கையாளை, எதிர்ப்படும்-எதிர்ப்பட்ட, கனகம் பைங்கொடி பந்தர் வான் நிழல் உம்-பொன்போலருமையான பசிய பூங்கொடிப் பந்தரின் சிறந்த நிழலும், வண்டு அரு நறை பூஞ் சோலைஉம் - வண்டுகள் நீங்காத வாசனையுள்ள பூஞ்சோலையும், தடம்உம்-கங்கைக்கரையும், மருங்கு அலை மலயமாருதம் உம்-பக்கத்திலே வீசுகின்ற தென்றற்காற்றும், புண்டரீகம்உம் செங் காவிஉம் கமழும் புளினம்உம் - தாமரையும் செந்நிறக்காவியும் நறுமணம்வீசுகின்ற மணற்குன்றும், புள் இனம் மெல் துறைஉம் - பறவைக்கூட்டங்கள் தங்குகின்ற மெல்லிய நீர்த்துறையும், கண்டு—, காரிகையை-பெண்ணை, இம்மையில்-இப்பிறப்பில், இன்னும் காண்கும் ஓ என-இன்னும் காண்போமா! என்று, மனம் கசிந்தான்-மனமுருகினான்; (எ-று.)

இதனால், மன்னவன் வேறொன்றிலும் மனஞ்செல்லாது கங்கையாளிடத்துத்தானே மனம்பற்றியிருந்தமை வெளியாம. மலயமாருதம்-மலய மலையினின்று வீசுங்காற்று: தென்றல். 'எதிர்ப்படும்' என்றது-இயல்பினால்வந்த காலவழுவமைதி. செங்காவி - செங்கழுநீர் மலர். (89)

### 82.—சந்தனு அங்குமனம்வாடிநின்றபோது, அவன்முன்னே கங்கையினின்று ஒருவீரன் வருதல்.

**பிரிந்தநாளெண்ணிப்பகீரதிப்பெருக்கைப் பேதுறுங்குறிப்பொடுநோக்கிக்**
**கரிந்தபாதவம்போனின்றவப்பொழுதிற் கால்பொரக்குனித்தகார்முகமும்**
**தெரிந்துமேன்மேலுந்தொடுத்தசாயகமுஞ்சிலம்பெனத்திரண்டதோளிணை**
**விரிந்தநூன்மார்புமாகிமுன்னடந்தான் விழிகளித்திடவொருவீரன். [யும்**

(இ - ள்.) பிரிந்த நாள் எண்ணி - (கங்கையாளைப்) பிரிந்த நாளைக் கணக்கிட்டு,—பகீரதி பெருக்கை - கங்கையின் வெள்ளத்தை, பேதுறும் குறிப்பொடு-கலக்கமுற்ற எண்ணத்தோடு, நோக்கி-பார்த்து, (சந்தனுமன்னவன்), கரிந்த பாதவம்போல்-தீய்ந்த மரம்போல, நின்ற-வாடிநின்ற, அ பொழுதில்—, —கால் பொர குனித்த கார்முகம்உம்-(இரண்டு) முனையும் பொருந்த வளைத்த வில்லும், தெரிந்து-ஆராய்ந்து எடுத்து, மேன்மேலும்—, தொடுத்த - பிரயோகித்த, சாயகம்உம் - அம்பும், சிலம்பு என திரண்ட தோள் இணைஉம்-மலைபோலத் திரண்டுள்ள தோள்கள் இரண்டும், விரிந்த-பரந்த, நூல் மார்புஉம்-பூணூலைப் பூண்ட மார்பும், ஆகி-உடையவனாகி, விழி களித்திட-(தன்) கண்கள் களிப்ப, ஒரு வீரன்—, முன் நடந்தான்-எதிரே வந்தான்; (எ-று.)

சந்தனு மனக்கலக்கத்தோடு அந்தக்கங்கைப்பெருக்கைப் பார்த்துக் கொண்டு வாட்டமுற்று நின்ற சமயத்தில், அங்கு ஒரு வீரன் அவ்வரசன் கண்களிக்கும்படி எதிரேவந்தனனென்க. பகீரதி=பாகீரதி: பகீரதனாற் பூமியிற் கொணரப்பட்டவள்: கார்முகம்-போர்த்தொழிலிற் சிறப்பது. பகீரதிநோக்கிப் பெருந்தகை பெருந்திகைப்பெய்தி என்றும் பாடம். (90)

83.—வந்த வீரனைக் கண்டு தன் புத்திரனென்று அறியாமல் அரசன் கொண்டாடுதல்.

வியந்திடவருமக்குரிசிலையிவனே விடையவன்குமரனென்றயிர்க்கும்
வயந்தனினுலவுமதன்கொலோவென்னும் வாசவன்மதலையென்றெண்ணும்
உயர்ந்தவரிவனின்வின்மையினில்லை யொருவருமுலகின்மேலென்னும்
பயந்ததன்வடிவின்படியெனத்திகழும்பான்மையைநினைந்திலன்பயந்தோன்.

(இ-ள்.) பயந்தோன்-(அந்தக் குமாரனைப்) பெற்ற மன்னவன், பயந்த-பெற்ற, தன்-தன்னுடைய, வடிவின்படி என-வடிவத்தின் மாதிரிவடிவம் என்று, திகழும்-விளங்குகின்ற, பான்மையை-தன்மையை, நினைந்திலன்-நினையாதவனாகி,—வியந்திட-கொண்டாடும்படி, வரும்-வருகின்ற, அ குரிசிலை-அந்த வீரனைப்பற்றி, 'இவன்—, விடையவன் குமரன் ஏ-விருஷபத்தை வாகனமாகவுடைய சிவபெருமானுடைய குமரன்தானோ?' என்று-, அயிர்க்கும்-சந்தேகிப்பான்: 'வயந்தனின் - வசந்த காலத்திலே, உலவும் - சஞ்சரிக்கின்ற, மதன் கொல்ஓ-மன்மதனோ?' என்னும்-என்பான்: வாசவன் மதலை (கொல்) என்று எண்ணும்-'இந்திரகுமாரன்தானோ?' என்று எண்ணுவான்: 'வின்மையின்-வில்தொழிலில், இவனின் உயர்ந்தவர்-இவனைக்காட்டிலும் மேம்பட்டவர், உலகின்மேல்-இவ்வுலகில், ஒருவரும்—, இல்லை—,' என்னும்-என்பான்; (எ - று.)

குமரன் = குமாரன்; மன்மதனையும் குற்சிதனாக [இழிந்தவனாக](த் தன்வடிவழகினால்) செய்பவனென்பது, உறுப்புப்பொருள்: இவ்வடசொல் - முதலில் முருகக்கடவுளுக்குஆகி, பிறகு அவன் போல் அழகுஆற்றல்களையுடையபுத்திரனைக்காட்டும். வயந்தன் = வஸந்தன். வயந்தம்-சித்திரை வைகாசிமாதங்கள். வயந்தனின்

உலவுமதன்கொலோஎன்பதற்கு - தென்றலாகிய தேரிலே யுலாவுகின்ற மன்மதனே? என்று பொருள்கொள்ளினுமாம்; இவ்வுரைக்கு,வயந்தன்-தென்றல். மதன்-மன்மதன்என்பதன் நாமைகதேசம்: இனி, மதன்-மதத்தை [காமக்களிப்பை]யுண்டாக்குபவனுமாம். வாசவன்-வசுக்களுக்குத் தலைவன்: இந்திரன்: வசு-ஒருதேவசாதி. இவன் விடையவன்குமரனே என்று ஏகாரத்தைமாற்றி வினைப்பொருளாக உரைக்க. (91)

**84.**—வந்தவீரன் ஒரு மோகனக்கணையைச் சந்தனுமன்னன் மார்பிலேவிப் புனலில்மறைந்திட, மன்னவன் பூமியில் வீழ்ந்திடுதல்.

**தந்தையென்றிவனையுணர்கிலாமதியாற் சராசனந்தழுவுறவளைத்து**
**மைந்தனுமொருபோர்மோகனக்கணையான் மறையுடன்மார்புறவெழுதி**
**இந்திரதனுவோடிந்திரனெழிலி யிடைமறைந்தனனெனப்புடையே**
**சிந்தியதிவலைச்சிந்துவின்மறைந்தா னரசனுமகிதலஞ்சேர்ந்தான்.**

(இ-ள்.) மைந்தன் உம்-அந்தக்குமாரனும்,—இவனை - இந்தச் சந்தனு மன்னவனை, தந்தைஎன்று-தகப்பனென்று, உணர்கிலா-அறியமாட்டாத, மதியால் - புத்தியினால் [மன்னவனைத் தன் தந்தையென அறியமாட்டாமையினால்], சராசனம்-வில்லை,தழுவுற-(இரண்டுமுனையும்) தழுவுதல்பொருந்த, வளைத்து—, ஒரு-ஒப்பற்ற,போர்-போருக்குஉரிய,மோகனம்கணையால்-மோகத்தையுண்டாக்கவல்ல அம்பை [மோகனாஸ்திரத்தினால்], மறையுடன்-(அதற்கு உரிய) மந்திரத்துடனே, மார்புஉற எழுதி-(அம்மன்னவனுடைய) மார்பிலே அழுந்தித்தைக்குமாறு தொடுத்து, (பிறகு), இந்திரதனுவோடு இந்திரன்எழிலியிடைமறைந்தனன்என்ன-இந்திரதனுசுடனே இந்திரன் மேகத்திலே மறைந்தனன்போலுமென்னும்படி, புடையே சிந்தியதிவலை - பக்கத்திற்சிந்துகின்ற நீர்த்திவலைகளையுடைய, சிந்துவின்-கங்காநதியிலே, மறைந்தான்—; அரசன்உம் - (மோகனக்கணையால்தீண்டப்பட்ட) அரசனும், மகிதலம் சேர்ந்தான் - பூமியிலே சேர்ந்தான் [மூர்ச்சொடுங்கித் தரையிலே விழுந்திட்டானென்றபடி]; (எ - று.)

மோகனக்கணையை மன்னவனது மார்பிலே யழுந்தித்தைக்க எய்திட்டு, அக்குமாரன் யாற்றுநீர்ப்பெருக்கிலே மறைந்தானாக, மன்னவன் தன்னிலை தப்பிப் பூமியில் விழுந்தன னென்க. (92)

**85.**—அரசன்நிலைகண்ட கங்கையாள் மனமுருகித் தன்மகனோடு நதியினின்றுவெளிவந்து அரசனைத் தன்கையா லெடுத்தல்.

**காதலனயர்வுந்திருமகன்புனலிற் கரந்ததுங்கண்டுளமுருகி**
**மேதகுவடிவுகொண்டுமற்றந்த வெஞ்சிலைவினோதனுந்தானும்**
**ஓதவெண்டிரையின்மதியுடனுதித்த வொண்மலர்க்கொடியெனவோடித்**
**தூதுளங்கனிவாய்மலர்ந்தினிதழைத்துச் சூடகச்செங்கையாலெடுத்தாள்.**

(இ-ள்.) காதலன் அயர்வு உம்-(தனது)அன்பிற்கு உரியனான சந்தனு மூர்ச்சித்திருத்தலையும், திருமகன் புனலில் கரந்தது உம்-சிறந்தபுத்திரன் தன் வெள்ள நீரிலே மறைந்ததையும், கண்டு-, (கங்கையாளும்),உளம் உருகி-மனங்கரைந்து, மற்று-பிறகு,மேதகு வடிவுகொண்டு - மேன்மைதக்க வடிவத்தையெடுத்துக்கொண்டு,

அந்த வெம் சிலை விநோதன்உம் - அந்தவெவ்விய சிலையைக் கொண்டு விளையாடுபவனாகிய புத்திரனும்,தான்உம்-,-ஓதம் வெள் திரையின் மதியுடன் உதித்த ஒள் மலர் கொடி என-பெருக்கைக் கொண்ட வெண்ணிறமுள்ள அலைகளையுடைய பாற்கடலினின்று சந்திரனுடனே யுதித்த அழகிய மலரைக்கொண்ட கொடிபோன்ற இலக்குமிபோல்,ஓடி-விரைந்துவந்து,தாதுளை கனி வாய் மலர்ந்து-தாதுளங்கனியையொத்த [செந்நிறமான] வாயைத் திறந்து, இனிது அழைத்து-இனிமையாகக் கூப்பிட்டு, (அந்தச்சந்தனுவை), சூடகம் செம் கையால்-சூடகமென்ற வளையலை யணிந்த (தன்னுடைய) அழகிய கைகளால், எடுத்தாள்—; (எ-று.)

ஓதவெண்டிரை-பாற்கடலுக்கு அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடர்;ஒண்மலர்க்கொடி யென்பதும்அவ்வாறே. வெண்ணிறமுள்ள கங்கைநீர்வெள்ளத்தினின்று கலைகள்நிரம்பிய புத்திரனுடனே கங்கையாள் வந்தது-பாற்கடலினின்று பதினாறுகலைகளும் நிரம்பிய சந்திரனுடனே இலக்குமி வெளிவந்ததுபோலு மென விரித்துப் பொருள் காணலாம். "நிதிநேவலக்ஷ்மி:" என்று பாலபாரதத்திலிருப்பதற்கு ஏற்ப, 'நிதியுடனுதித்த வொண்மலர்க்கொடி' எனப் பாடமிருப்பினுமாம். இனி, சிலைவிநோதனும் தானும் எடுத்தாள்-பால் விரவிச் சிறப்பினால் ஒருமுடிபைப் பெற்றது. (93)

**86.—கங்கையாள் மன்னவனைத் தழுவிப் புத்திரனைக் கொடுத்திட்டுப் பின்வருமாறு கூறலுறுதல்.**

**வாடியதருவின்மழைபொழிவதுபோன் மடவரல்கருணைநீர்பொழியக்**
**கூடியவுணர்வோடெழுந்தகாவலனைக் கொங்கைமார் புறத்தழீஇக்கொண்டு**
**நாடியகருமம்வாய்த்ததென்றுவகை நலம்பெறத்தந்தைபைங்கழற்கால்**
**சூடியமகவைக்கைக்கொடுத்தவளுந் தோன்றலோடிவையிவைசொன்னாள்.**

(இ - ள்.) வாடிய தருவில்-(வெயிலின் வெப்பத்தினால்)வாட்டமடைந்தமரத்தினிடத்து, மழைபொழிவதுபோல்—,(மூர்ச்சித்துக் கிடக்கும் மன்னவன்மீது), மடவரல் - கங்காதேவியாகிய பெண், கருணை நீர் பொழிய-(தான்) கருணைநீரைச்சொரிய, கூடிய-மீண்டு வந்து சேரப்பெற்ற, உணர்வோடு - உணர்ச்சியுடனே, எழுந்த—, காவலனை-அந்தச்சந்தனுமன்னவனை, கொங்கை மார்புற தழீஇக் கொண்டு - ஸ்தனங்களோடுகூடிய மார்பிலே கட்டி யணைத்துக் கொண்டு, 'நாடிய கருமம் வாய்த்தது-(நாம்) கருதிய காரியம் சித்தித்தது,' என்று-, உவகை-மகிழ்ச்சியோடு,நலம்பெற - அழகு பொருந்த, தந்தை பைங் கழல் கால் சூடிய மகவை - தந்தையின் பசும்பொன்னாலியன்ற வீரக்கழலையணிந்த பாதங்களைச்சூடிய அந்தவீரனாகிய புத்திரனை, கைக்கொடுத்து - (தந்தையின்) கையிலே ஒப்பித்துவிட்டு, இவள்உம் - இந்தக் கங்கையாளும், தோன்றலோடு-ஆண்களிற்சிறந்தோனாகிய சந்தனுமகாராசாவினிடத்தில், இவை இவை-இவ்விவ்வார்த்தைகளை, சொன்னாள்-: (எ - று.)—இவை யிவைஎன்று சுட்டியவற்றை, மேலிரண்டுகவிகளிற் காண்க. காவலனை என்றவிடத்துக் காதலனை என்றும் பாடம்.

82-ஆம் பாடலில், 'கரிந்தபாதவம்போல்' என்று கூறியதை யொட்டி, 'வாடியதருவில் மழைபொழிவதுபோல்' என்றார்: உவமையணி. புத்திரனைச் சேர்ப்பிக்கவேண்டுதலாகிய தான் நாடிய கருமம் மன்னவனைத் தேடிக்கொண்டு போகவேண்டிய பணியில்லாமல் அம்மன்னவனே தன்னருகு வந்ததனால், நாடியகருமம் வாய்த்தது என்று உவகையோடு மகவைக் கைக்கொடுத்தனள் கங்கையாள் என்க. இனி, 'கங்கையாளை இம்மையிற் காண்குமோ?' என்று நாடிய மன்னவனுக்கு அன்னாள் போந்து மகனைக் காட்டித்தந்ததனால், மன்னவன் தான் நாடியகருமம் வாய்த்ததென்று உவகை கொண்டு நலம்பெற்றிருந்தானென்று கூறினும் ஆம். தரு-தற்சம வடசொல். (94)

**87.**—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்: கணவன்கையிற் கொடுத்த பிள்ளையின் திறனை யெடுத்துக்கூறிப் பின் கங்கையாள் மன்னனைவாழ்த்தி நீரினுட் புகுந்தமை தெரிவிக்கும்.

**வேந்தகேளிவனுன்மதலையேதேவ விரதனென்றிவன்பெயர்பல்லோர்**
**ஆய்ந்தநூல்வெள்ளங்கடந்தனன்கரைகண் டருந்ததிபதிதிருவருளால்**
**பூந்துழாய்மாலைப்போர்மழுப்படையோன் பொன்னடிபொலிவுறவணங்கி**
**ஏந்துநீள்சிலையும்பலகணைமறையு மேனையபடைகளும்பயின்றான்.**

(இ-ள்.) வேந்த-அரசனே! கேள்-கேட்பாயாக: இவன்—; உன் மதலைஏ-உன்புத்திரனே: தேவவிரதன்என்று - தேவவிரதனென்பது, இவன்பெயர்—: அருந்ததிபதி திருஅருளால்-அருந்ததிக்குக் கணவரான வசிஷ்டமுனிவருடைய திருவருளினால், பல்லோர் ஆய்ந்த - பல பெரியோர்களும் ஆராய்ந்துள்ள, நூல் வெள்ளம் - நூல்களாகிய வெள்ளத்தின், கரைகண்டு - அக்கரையைக்கண்டு, கடந்தனன்-கடந்துள்ளான்: [சாஸ்திரங்களை யெல்லாம் முற்றக் கற்றுள்ளானென்றபடி]: (அன்றியும்), பூந் துழாய் மாலை - பூவையுடைய திருத்துழாய் மாலையைப் பூண்டவனும், போர் மழு படையோன்-போரில்வல்ல மழுப்படையைத் தாங்கியவனுமான பரசுராமனுடைய, பொன் அடி-அழகிய திருவடிகளை, பொலிவு உற-விளக்க முண்டாம்படி, வணங்கி-பணிந்து, ஏந்து நீள் சிலைஉம்-கையிலேந்திய நீண்டவில்வித்தையையும், பல கணை மறைஉம்-பலவகைப்பட்ட அஸ்திரங்களின் மந்திரங்களையும், ஏனைய படைகள்உம் - மற்றுமுள்ள ஆயுதங்களையும், பயின்றான் - கற்றுள்ளான்; (எ-று.)

தேவவ்ரதனென்ற பேர் இவனுக்குக் கங்கையாளிட்டது. பரசுராமன் திருமாலின் ஏழாமவதாரமாதலால், அன்னான் 'பூந்துழாய் மாலைப் போர்மழுப்படையோன்' எனப்பட்டான். பெரு வீரனைச் சிறப்படையும் வீடுமன்வீழ்ந்து வணங்குவதால் பரசுராமனுடைய பொன்னடி பொலிவுறுவதாயிற்று. (95)

**88.** **மகப்பெறுமவரிலொருவரும்பெறாத மகிழ்ச்சியும்வாழ்வுமெய்வலியும்**
**மிகப்பெறுந்தவநீபுரிந்தனைநின்னை வேறினிவெல்லவல்லவரார்**
**உகப்புறவிவனோடவனியாளுகவென் றோரடிக்கோரடிபுரிந்து**
**தகப்பெறுமயிலுந்தலைவன்மேலுள்ளந் தகைவுறத்தடம்புனல்புகுந்தாள்.**

(இ-ள்.) மக பெறுமவரில்-பிள்ளையைப் பெற்றாரில், ஒருவர் உம் பெறாத-எவரும் (இதுவரையிற்) பெற்றிராத, மகிழ்ச்சிஉம்-சந்தோஷமும், வாழ்வுஉம் - உயிர்வாழ்ச்சியும், மெய்வலிஉம் - உடல் வலிமையும், மிக பெறும் - மிகுதியாக அடைகின்ற, தவம் - தவத்தை, நீ புரிந்தனை-நீ செய்துள்ளாய்: இனி—, நின்னை வெல்ல வல்லவர்—, வேறுஆர்-வேறுயாவர்? உகப்பு உற-மனத்தி லுற்சாகம் மிக, இவனோடு-இவனுடனே, அவனி ஆளுக-(நீ) பூமியை யாட்சிபுரிவாய், என்று-என்று சொல்லி,—நகு பெறு மயில்உம்-நற்குணம்பெறுதலுள்ள மயில்போன்ற சாயலுடைய கங்கையாளும், ஓர் அடிக்கு ஓர் அடி புரிந்து-(பிரிவாற்றாமையால்) ஓரடிமீது ஓரடியை வைத்தல்செய்து [மெல்ல மெல்ல அடிவைத்து நடந்து], தலைவன்மேல் உள்ளம் தகைவுஉற - தலைவனான மன்னவன்மீது (தன் மனம்) தடைப்பட்டுநிற்க, தட புனல் புகுந்தாள்-பெரிய கங்கைநீர்வெள்ளத்திலே புகுந்து மறைந்தாள்; (எ-று.)—மயில் - உவமையாகுபெயர். (96)

### 89.—மன்னவன் தன்புதல்வனைத்தேரின்மேல்வைத்துக் கொண்டு ஊரார் கைதொழத் தன்நகரஞ்சேர்தல்.

**மனைவியைக்கண்டுமீளவும்பிரிந்த வருத்தமெய்த்திருத்தகுகேள்வித்**
**தனையனைக்கண்டமகிழ்ச்சியாலருக்கன் றன்னெதிரிருளெனத்தணப்ப**
**நினைவினிற்சிறந்ததேர்மிசைப்புதனு நிறைகலைமதியுமேநிகர்ப்பப்**
**புனைமணிக்கழலானவனொடுந்தனதுபுரமெதிர்கைதொழப்புகுந்தான்.**

(இ - ள்.) மனைவியை-, கண்டு-, மீளஉம்-மறுபடியும், பிரிந்த-பிரிந்ததனால் தோன்றிய, வருத்தம் - துன்பம், மெய் திரு தகு கேள்வி - உண்மையான சிறப்புக்கொண்டு விளங்குகின்ற நூற்கேள்வியையுடைய, தனையனை-புத்திரனை, கண்ட-காணப்பெற்றதனாலுண்டான, மகிழ்ச்சியால்—, அருக்கன் தன் எதிர் இருள் என-சூரியனுக்கு எதிரே இருட்டுப்போல, தணப்ப - (இருந்த அடையாளமும் தெரியாது) நீங்க, நினைவினில் சிறந்த தேர்மிசை-மனத்தினைக்காட்டிலுஞ் சிறந்த [மனோவேகத்தினும் விரைவாகச்செல்ல வல்ல] தேரின்மேல், புதன்உம்-புதனென்பவனையும், நிறை கலை மதிஉம் ஏ-நிறைந்த [பதினாறான] கிரணங்களையுடைய சந்திரனையுமே, நிகர்ப்ப-ஒப்பாகும்படி, மணி புனை கழலான்-மணிகளழுத்திய வீரக்கழலையணிந்த மன்னவன், அவனொடுஉம் - அந்தப்புத்திரனுடனே, தனது புரம்-தன்னுடைய பட்டணத்தில் [அஸ்தினாபுரியில்] உள்ளவர், எதிர் கைதொழ-எதிர்ந்து கைகூப்பி வணங்க, புகுந்தான்-பிரவேசித்தான்; (எ - று.)

தண்ணளிநிரம்பியிருத்தலால் மன்னவனுக்கு மதியையும் பல கலைகளையும் முற்றவுணர்ந்த புலவனாயிருத்தலால் மைந்தனுக்குப் புதனையும் உவமை கூறினார். மனைவியைப்பிரிந்த துயரம் மகனை யடைந்த மகிழ்ச்சியின்முன்னே தலையெடுக்காமற் போனதை, அருக்கன்றன்னெதிரிருளெனத் தணப்பஎன்று தொழிலுவமைகொண்டு விளக்கினார். (97)

**90.—இளவரசனுன தன்மகனை அரியாசனத்திருத்தி, சந்தனு ஒருகால் வேட்டைக்குச் செல்லல்.**

தானுமம்மகனுந்தரியலர்வணங்கத் தங்குநன்னுளிலங்கொருநாள்
தேனுறுந்தொடையலிளவரசனைத்தன் றிகழரியாசனத்திருத்திக்
கானுறுவிலங்கினுயிர்கவர்நசையாற் காற்றெனக்கூற்றெனநடந்து
பானுவின்மகளாங்காளிந்திநதியின் பாரமெய்தினன்விறற்படையோன்.

(இ-ள்.) தான் உம்-சந்தனுவும், அ மகன் உம்-(தேவவிரதனென்ற) அந்த (க் கங்கையின்) புத்திரனும், தரியலர் வணங்க-பகைவர்கள் (அஞ்சி) வணங்குமாறு, அங்கு - அந்நகரிலே, (பெருமதிப்போடு), தங்கும்-தங்கியிருக்கப் பெற்ற, நல் நாளில்-சிறந்த நாள்களுள், ஒருநாள்—, தேன் உறுந் தொடையல் இள அரசனை-தேன் பொருந்திய மாலையையணிந்த இளவரசனுகிய தேவவிரதனை, தன் திகழ் அரி ஆசனத்து இருத்தி-தன்னுடைய விளங்குகின்ற சிங்காசனத்திலிருக்கச்செய்து,—கான் உறு விலங்கின உயிர் கவர் நசையால்-காட்டில் தங்குகின்ற மிருகங்களின் உயிரைக் கவரவேணுமென்ற விருப்பினுல், விறல் படையோன்-வலிமையுள்ள (வேட்டைக்குரிய) பரிவாரங்களோடு கூடியவனுகி,—காற்று என கூற்று என நடந்து-(இவன்) காற்றும் யமனும் (போல்வான்) என்று சொல்லுமாறு (விரைவாகவும் கொடுமை தோன்றவும்) நடந்துபோய்,—பானுவின் மகள் ஆம் காளிந்தி நதியின்-சூரிய புத்திரியான யமுனுநதியின், பாரம்-கரையில், எய்தினன்-(அடைந்து அங்கு அமைத்த பாசறையிற்) சேர்ந்தான்; (எ - று.)—தங்குநாடன்னில், இளவரசென என்றும் பாடம்.

சந்தனு காளிந்திக்கரையில் அமைத்த பாசறையிற்சேர்ந்திருந்தமை, மேற்கவியிற் பெறப்படும். கானுறுவிலங்கினுயிர் கவர் நசை-வேட்டைவிருப்பம். காளிந்திநதிக்குஉரிய பெண்தெய்வம், சூரியனுடைய புத்திரியாவள். (98)

**91.—கானகத்தில் யோஜநகந்தியைக் கண்டு சந்தனுமன்னவன் காதல்கொண்டு வினவுதல்.**

பாசறைமுழுதுமொருபெருங்கடவுட் பரிமளமொல்லெனப்பரப்பி
யோசனையளவுங்கரையிருமருங்கு முயிர்க்குமெல்லுயிர்ப்பெதிரோடித்
தாசர்தங்குலத்துக்கதிபதியளித்த தையலைத்தரணிபர்க்கெல்லாம்
ஈசனுமுருகிக்கண்டுளங்களியா விலங்கிழையார்கொனீயென்றுன்.

(இ-ள்.) (அங்ஙன் கானகஞ்சேர்ந்து பாசறையில் தங்கியிருக்கையில்), பாசறை முழுதுஉம்-(தங்கியிருந்த) படைவீடுமுழுவதும், ஒரு பெருங் கடவுள் பரிமளம்-ஒப்பற்ற மிக்கதெய்வத்தன்மையுள்ள நறுமணத்தை, ஒல்லென பரப்பி - விரைவாகப் பரப்பிக்கொண்டு, யோசனை அளவுஉம்-யோசனைதூரமும், கரை இருமருங்குஉம்-(அந்த யமுனுநதியின்) கரையினிருபக்கங்களிலும், உயிர்க்கும்-வீசுகின்ற, மெல் உயிர்ப்பு-மெல்லியகாற்றுக்கு, எதிர் ஓடி-எதிர்

முகமாக விரைந்துசென்று,—தரணிபர்க்கு எல்லாம் ஈசன் உம்-அரசர்க்கு அதிபதியான அந்தச்சந்தனுமன்னவனும், தாசர் தம்குலத்துக்கு அதிபதி அளித்த தையலை-வலைஞர்குலத்துக்கு அதிபதியான வலைஞன் தந்த அந்தப்பெண்ணை, கண்டு-பார்த்து, உளம் உருகி களியா-மனம் நைந்துமகிழ்ந்து, (அவளை நோக்கி), 'இலங்கு இழை-விளங்குகின்ற ஆபரணங்களையணிந்துள்ள மாதராய்! நீ-, யார்கொல்-யாவள்?' என்ருன்-என்று வினவினன்; (எ - று)

தாசர்குலபதியின் மகளின்மேனி யோசனைதூரங் கமழுந் தன்மைய தாதலால், அவள்மேனியின் நறுமணம் கந்தவகனன காற்றின்மூலம் யோசனைதூரம் செலுத்தப்பெற, அந்த நறுமணக் காற்றுக்கு எதிராக ஓடி மன்னவன் அந்தயோசனகந்தியைக் கண்டனனென்க. தாசர் என்ற வடசொல், தாசர் என்று திரிந்தது. தாசர்தங் குலம்-வலைஞர்குலம்: இவன்பெயர் 'உச்சைச்ரவஸ்' என்று பாலபாரதத்தும் வியாசபாரதத்தும் கூறப்பட்டுள்ளது. இந்தத் தாசனுல் வளர்க்கப்பட்ட'கன்னிகை முதலில்மச்சகந்தியாயிருந்து பிறகு பராசரபகவானருளால்யோசனைதூரம் நறுமணம் வீசும் உடம்பைப் பெற்ருளாதலால், யோஜனகந்தி என்று பெயர் பெறுவாளானுள்: இவள் காளியென்றும், ஸத்யவதியென்றும், வாஸவியென்றும் வழங்கப்பட்டுள்ளாள். ஒல்லெனப் பரப்ப என்றும் பாடம். (99)

**92.**—யோசனகந்தியை வினவியறிந்த சந்தனு
அந்தமடந்தையின் தமப்பனைச்சேர, அவன் மன்னவனடிபணிதல்.

நிருபனதுரைகேட்டஞ்சினளொதுங்கி நின்றுநைநினைவுறக்குவியா
இருதுறைநெறியில்வருநரை நாவா யேற்றுவலெந்தையேவலினென்று
உரைசெயுமளவில்வேட்கையாலுள்ள முருகிமெய்ம்மெலிந்தொளிகருகி
அரிவையையளித்தோன் பக்கமதடைந்தா னவனும்வந்தடிமலர்பணிந்தான்.

(இ - ள்.) நிருபனது - சந்தனுவரசனுடைய, உரை-வார்த்தையை, கேட்டு—, அஞ்சினள்-அச்சங்கொண்டவளாய், ஒதுங்கி நின்று-, நினைவுஉற - (பெரியோரைக்கண்டால் வணங்கவேண்டுமென்ற) எண்ணந்தோன்ற,கைகுவியா-கைகூப்பிவணங்கி,—'இருதுறை நெறியில் வருநரை-பெரிய நீர்த்துறைநெறியைக் கடக்குங் கருத்தோடு இங்கு வருபவரை, எந்தை ஏவலின்—என் தந்தையாரின் கட்டளையினல், நாவாய் ஏற்றுவல்-மரக்கலத்திலேற்றுவேன்', என்று-, உரை செயும் அளவில்-சொல்லும்போது,—(மன்னவன்), வேட்கையால்-காமவிச்சையால், உள்ளம் உருகி—, மெய் மெலிந்து-உடல் தளர்ந்து, ஒளி கருகி—, அரிவையை அளித்தோன்-யோசனகந்தியென்ற அந்தமடந்தையைப்பெற்ற வலைஞனுடைய, பக்கம் அது-இருக்குமிடத்தை, அடைந்தான்—: அவன் உம்-அந்தவலைஞனும், வந்து—, அடிமலர் பணிந்தான்-(மன்னவனுடைய) திருவடித்தாமரையை வணங்கினன்; (எ - று.)

வேட்கையாலென்பது உள்ளமுருகுதற்கேயன்றி, மெய்ம் மெலிதலுக்கும் ஒளிகருகுதற்கும் ஏது ஆகும். பக்கமது, அது-பகுதிப்பொருள்விகுதி. (100)

93.—மன்னவனேவலின்படி தேர்ப்பாகன் அம்மன்னவன் கருத்தை வலைஞனிடம் தெரிவித்தல்.

**பாகனையரசன்குறிப்பினுலேவப் பாகனும்பரதவர்பதியை**
**ஓகையோடிருத்திநின்னுழைவதுவை யுலகுடைநாயகனயந்தான்**
**தோகைசெய்தவமோநின்பெருந்தவமோ தொல்குலத்தவர்புரிதவமோ**
**ஆகுமிவ்வாழ்வென்றுரைத்தனனவனு மாகுமாறவனுடனுரைப்பான்.**

(இ - ள்.) அரசன் - சந்தனு, பாகனை - (தன்னுடைய) தேர்ப் பாகனை, குறிப்பினுல் ஏவ - சாடைகாட்டி (மணம்பேசுமாறு) தூண்ட, பாகனும்—, பரதவர் பதியை-வலைஞர் தலைவனை, ஓகை யோடு-மிக்க மகிழ்ச்சியோடு, இருத்தி-இருக்கச்செய்து, -'உலகு உடைநாயகன்-உலகுக்குத் தலைவனாகிய சந்தனுராசன், நின் னுழை-உன்னிடத்து, வதுவைநயந்தான்-மணத்தை விரும்பி னுன் [உன்மகளைமணந்துகொள்ளுமாறு எம்முடைய சந்தனு மன்னவன் விரும்பியுள்ளான்]: இ வாழ்வு-இங்கனம் (அரசன் வதுவைவிரும்பிய) இந்த வாழ்ச்சி, தோகை செய் தவம் ஓ-(உன் னுடைய மகளான) மயில்போலுஞ் சாயலையுடையாள் செய்துள்ள தவப்பயனுலோ, நின் பெருந்தவம் ஓ-நீ செய்துள்ள மிக்கதவத்தி னுலோ, தொல் குலத்தவர் புரி தவம் ஓ-பழமையான பரதகுலத் தவர்செய்த தவத்தினுலோ, ஆகும்-உண்டானதாகும்,' என்று—, உரைத்தனன் - சொன்னுன்: அவன்உம்-அந்தப்பரதவர்பதியும், ஆகும் ஆறு-(அந்த அரசன்மனைவு) முற்றுதற்குரியவகையை, அவனுடன் - அந்தப்பாகனேடு, உரைப்பான் - சொல்பவனுனுன்: (எ - று.)

பரதவர்பதிகூறுவதை மேற்செய்யுளிற் காண்க. மன்னவன் பரதவர்பதியிடத்து மகளை நேரேகேட்கநாணிப் பாகன் மூலமாகக் கேட்டானென்க. (101)

94.—என்மகளிடம்பிறக்கும் புத்திரனுக்கு அரசுஅளிப்பதானுல் வதுவைக்குஇசைவேனென்று அந்தப்பரதவர்பதி குறிப்பினுலுணர்த்தல்.

**பூருவின்மரபிற்பிறந்தகோமகனென் புன்குலமகள்குயம்பொருந்தல்**
**மேருவுமணுவுநிறுக்குமாறெக்கு மேலினியிவைபுகன்றென்கொல்**
**பாருவகையினுலாளுதற்கிருந்தான் பகீரதிமகனிவள்பயந்த**
**சீருடைமகன்மற்றென்செய்வானிசைமின் செய்கைதான்றிருவுளங்குறித்தே.**

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) 'பூருவின் மரபில் - பூருவின்வமிசத்திலே, பிறந்த - தோன்றிய, கோமகன்-இராசகுமாரன், என் புன்குலம் மகள் குயம் பொருந்தல்-என்னுடைய தாழ்மையான குலத்திற்பிறந்தபெண் ணின் தனங்களைத் தழுவுதல் [என்பெண்ணை மணந்துகொள்ளு தல்], மேருஉம் அணுஉம் நிறுக்கும் ஆறுஒக்கும் - மேருவை ஒரு தட்டிலும் அணுவை மற்றெருதட்டிலும் வைத்து நிறுக்கின்ற தன்மைக்குச் சமானமாகும்: மேல் இனி இவை புகன்று என் கொல்-இப்போது இவற்றைப்பற்றிப் பேசி என்னபயன்? பகீரதி மகன்-கங்காதேவியின் புத்திரனை தேவவிரதன், பார்-(சந்தனு வின்) அரசை, உவகையினுல்-மனமகிழ்ச்சியோடு, ஆளுதற்கு-

ஆட்சி புரிதற்கு, இருந்தான் - சித்தனாக இருக்கிறான்: மற்று-பிறகு, இவள் பயந்த சீர் உடை மகன்-இந்த என்பெண் பெறப் போகின்ற சிறப்புள்ள புதல்வன், என்செய்வான்-என்னசெய்யக் கூடியவன்? செய்கை-(அவன் செய்யவேண்டிய) செயலை, திரு உளம் குறித்து-உம்முடைய மனத்தினால் ஆலோசித்து, இசைமின்-சொல்லுங்கள்,' (எ - று.)—"என்ன" என்று அடுத்த கவியோடு தொடரும்.

"பகீரதிமைந்த னானதற்கிருந்தான்; இவள் பயந்த சீருடை மகன் மற்றென்செய்வா னிசைமின் செய்கை திருவுளங்குறித்தே" என்று வலைஞர்பதிகூறிய பேச்சில், 'இவள்வயிற்றிற்பிறக்கும் மகனுக்கே அரசு தருவதாக உடன்பட்டால் இவளை வதுவைசெய்து கொடுக்க இசைவேன்' என்ற குறிப்புத் தோன்றுதல் காண்க. பயந்த-இயல்பினால் எதிர்காலம் இறந்தகாலமாயிற்று. (102)

95.—பரதவர்பதியின் மனத்தை யறிந்த மன்னவன் வருத்தத்தோடு அத்தினபுரியை யடைதல்.

என்னமுன்னிறைஞ்சியிவன்மொழிகொடுஞ்சொ லிறையவன்கேட்டலுமிரண்
கன்னமுமழற்கோல்வைத்ததொத்திதயங் கருகிவேறொன்றையுங்கழறான் [டு
முன்னமுன்மதத்தான்முனியிடுசாப முடிந்ததென்றாகுலமுற்றி
அன்னமுங்குயிலும்பயிலுநீள்படப்பை யத்தினபுரியைமீண்டடைந்தான்.

(இ - ள்.) என்ன - என்று, முன் - (தன்) முன்னிலையிலே, இறைஞ்சி-வணங்கி, இவன் மொழி கொடுஞ் சொல்-இந்தப்பரதவர்பதி சொல்லிய கொடுஞ்சொல்லை, இறையவன்-சந்தனுமன்னவன், கேட்டலும்-கேட்டவுடனே,—இரண்டு கன்னம் உம்-(தன்னுடைய) இரண்டுகாதிலும், அழல்கோல்-கொள்ளிக்கட்டை, வைத்தது-வைக்கப்பட்டதை, ஒத்து—, இதயம் கருகி-நெஞ்சு வெந்து, வேறு ஒன்றை உம் கழறான்-வேறொரு வார்த்தையுஞ் சொல்லாதவனாய்,—முன்னம்-முன்பு, உன்மதத்தால் - கோபமயக்கத்தினால், முனி-வசிட்டமுனிவன், இடு-இட்ட, சாபம்-சாபமே, முடிந்தது-பயனைவிளைக்க வந்திட்டதுபோலும், என்று—, ஆகுலம் முற்றி-வருத்தம்மிகுந்து, அன்னம்உம் குயில்உம் பயிலும் நீள்படப்பை அத்தினபுரியை-அன்னப்பறவையும் குயிற்பறவையும் பழகப்பெற்ற நீண்டசோலையையுடைய அத்தினபுரியென்ற (தன்) நகரை, மீண்டு-(அங்குநின்று) திரும்பி, அடைந்தான்-சேர்ந்தான்; (எ-று.)

வசிட்டமுனிவன்இட்ட சாபத்தின்பயனே இந்தவலைஞர்பதியை இவ்வாறு சொல்விப்பதுபோலும் என்று கருதி, ஆகுலமுற்றான் சந்தனுவென்க. (103)

96.—வேடர்பதியின்மகளிடத்து ஆதரத்தால் மன்னவன் உடல்மெலிய, சாரதியால் அச்செயலைத் தேவவிரத னறிதல்.

கங்கையாளிடத்திலாதரமெலிந்த காலையிற்களிந்தவெற்பளித்த
மங்கையாமென்னநின்றபூங்கொடிமேல் வைத்தபேராதரமலியப்
பங்கயானனந்தான்முறைமுறைகுறையும் பான்மதியெனவழகழிந்த
சங்கையான்மைந்தன்வினவலுநிகழ்ந்த தன்மையைச்சாரதிபுகன்றான்.

(இ-ள்.) கங்கையாளிடத்தில்—, ஆதரம்-விருப்பம்,மெலிந்த-குறைவுபட்ட, காலையில் - சமயத்திலே, களிந்தவெற்பு அளித்த மங்கை ஆம் என்ன நின்ற பூங் கொடிமேல்-களிந்தமலைபெற்ற யமுனாநதியின் பெண்தெய்வமாவாள்போலும் என்று கருதுமாறு (யமுனைக்கரையிலிருந்த) பூங்கொடிபோன்ற யோசனகந்தியினிடத்து, வைத்த—, பேர் ஆதரம்-மிக்கவிருப்பம், மலிய - மிக,—பங்கய ஆனனம் - தாமரைமலர்போன்ற (அரசன்) முகம், முறை முறை குறையும் பால் மதி என அழகு அழிந்த - நாடோறும் முறையே கலை தேயப்பெற்ற வெண்மை நிறமுள்ள சந்திரன்போல அழகுகெட்டதனுலான, சங்கையால் - சங்கையினுல், மைந்தன்-குமாரனுன தேவவிரதன், வினவலும்-('இங்ஙனம் என் தந்தை முகம் அழகுகெடக் காரணம் யாது?' என்று) வினவவே, சாரதி-, நிகழ்ந்த தன்மையை—, புகன்முன்-கூறினுன்; (எ-று.)

யமுனைக்கரையில் கருநிறமுடையவளாயிருந்த யோசனகந்தி யமுனையின் பெண்தெய்வமேபோல்வளென்று தற்குறிப்பேற்றவணி படக் கூறினுர். காலையில் வேலையிற் பிறந்த என்று பிரதிபேதம்.

97.—அறிந்த கங்கைமகன், வலைஞர்பதியிடஞ்சென்று, அரசைத் தன் இளையதாயின்புத்திரனுக்கு அளிப்பதாக உறுதிகூறி மணம்நேர வேண்டுதல்.

**கேட்ட்வக்கணத்திற்கடற்புறத்தரசைக் கேண்மையோடடைந்திளவரசும்**
**பாட்டனீயெனக்குப்பெற்றதாய்தானும் பகீரதியல்லணின்மகளே**
**நாட்டமின்றுனக்கியாததுநிலையிந்த ஞாலமுமெம்பியர்ஞாலம்**
**நீட்டமற்றின்றேதிருமணநேர்வாய் நீதிகூர்நிருபனுக்கென்றுன்.**

(இ-ள்.) கேட்ட—, அ கணத்தில்-அந்தக்ஷணத்தில் தானே, இள அரசு உம்-இளவரசனுன வீடுமனும்,—கடல்புறத்துஅரசை-கடலைச்சார்ந்த நெய்தல்நிலத்துக்கு உரியவனுன வலைஞர்பதியை, அடைந்து-சேர்ந்து, கேண்மையோடு - உறவுமுறைபாராட்டுதலுடனே, 'நீ எனக்கு பாட்டன்—: (எனக்கு), பெற்ற தாய்தான் உம்-, பகீரதி அல்லள்-கங்காதேவியல்லள்: நின் மகள் ஏ-உன்னுடைய புதல்வியே: இன்று-இப்போது, உனக்கு—, நாட்டம் யாது-விருப்பம் எதன்மீதோ,அது—,நிலை-நிச்சயமாகப்பெறக்கூடிய பொருளேயாகும்: இந்த ஞாலம்உம் - இந்தப்பூமியும், எம்பியர் ஞாலம்-என்னுடைய தம்பிமார் ஆட்சிபுரிதற்கு உரிய பூமியேயாகும்: நீட்டம் அற்று-தாமதித்தலில்லாமல், இன்று ஏ-இப்போதே, நீதி கூர் நிருபனுக்கு - நீதிமுறைமிக்க அரசனுகிய என்தந்தைக்கு, திருமணம் நேர்வாய்-(உன்மகளை) மணஞ்செய்துகொடுத்தற்கு இசைவாய்', என்றுன்—; (எ-று.)

கேண்மையோடு என்றுன் என இயையும். பாட்டனீயெனக்கு முதலியவற்றில், கேண்மைதோன்றுதல் காண்க. (105)

இங்ஙன் தேவவிரதன் கூறியதைக்கேட்ட வலைஞர்பதி வியப்புக்கொண்டு மீண்டும் கங்கையாள்மகனைநோக்கி 'செம்மலே! நீ உன் தந்தையினிடத்துஉறுதியான அன்பினுல்இராச்சியத்தைவிட்டிட்

டாய்: இந்த இராச்சியத்தை உன்புத்திரன் பெறற்குரியனுவனே அப்போதும் என்கருத்துப் பழுதுபடுமே!' என்று கருதக்கூடு மெனக்கொண்டு, வீடுமன் பின்வருமாறு கூறலுற்றுன்:—

### 98.—தேவவிரதன் செய்துகொண்ட விரதங்கள்.

**விரதமுற்றியவாறனைவருங்கேண்மின் மெய்யுயிர்வீடுமன்றளவுஞ்**
**சரதமுற்றியமெய்த்தாதுவுமூலத் தழலுடன்மீதெழுந்தகைத்தே**
**இரதமுற்றியசொன்மகப்பெருதவருக் கில்லையென்றியம்புநற்கதியும் [னுன்.**
**சுரதமுற்றியவென்றந்தைதன்பொருட்டாற் பெறுவலென்றின்னதுஞ்சொன்**

(இ - ள்.) '(யான்), விரதம்-நோன்பை, முற்றியஆறு-(இப் போது) தீர்மானித்துகொண்டவகையை, அனைவர்உம் கேண் மின்-யாவரும் கேளுங்கள்: மெய் உயிர் விடும் அன்று அளவுஉம்- உடலைவிட்டு உயிர்போகும்வரையில், சரதம்-திண்ணமாக, மெய் முற்றிய-(என்) உடம்பில் மிகுந்துள்ள, தாதுஉம் - சுக்கிலமும், மூலம் தழலுடன்-மூலாக்கினியுடனே, மீது எழும் தகைத்து-மேற் புறமாகநோக்கியிருக்கும் தன்மையையுடையது: இரதம் முற்றிய- இனிமைமிகுந்த, சொல்-குதலைச்சொற்களையுடைய, மக-குழந்தை களை, பெருதவருக்கு—, இல்லை—, என்று இயம்பு - சொல்லப்படு கின்ற, நல் கதிஉம்-, சுரதம் முற்றிய என் தந்தைதன் பொருட் டால் - புணர்ச்சியின்பம் முதிரப்பெற்ற என்தந்தையின் நிமித்த மாக [என்தந்தையை மணக்குமாறு செய்ததன் பயனுக], பெறு வல்-(யான்) அடைவேன்,' என்று—, இன்னதுஉம் - இந்தச் சொல்லையும், சொன்னுன்—; (எ - று.)

குய்யத்துக்கும் குதத்துக்கும் மத்தியில் நான்கிதழ்த் தாமரை போலிருக்கிற சக்கரம், மூலம் எனப்படும். தாது கீழ் நோக்காது மேலெழுந்தன்மையுடைய பெரியோர், ஊர்த்வரேதஸ்கர் எனப்படுவர். மூலாக்கினிமேலெழுந்தன்மையும் தவசியர்க்கே யுரியதென்ப. இரதம்=ரஸம். மகப்பெருதார் நற்கதியடையா ரென்றும்,புத்தென்றநரகத்திற் சேர்வரென்றும் நூல்கள் கூறும். தந்தைக்குமணஞ் செய்வித்ததன் பயனுகத் தனக்கு மகப்பெற் ருேர்பெறும் நற்கதியும் உண்டாகுமென்ருனென்க. (106)

### 99.—அவையிலிருந்தோர் முதலியோர் தேவவிரதனுக்கு வீடுமனென்றபெயரைச் சூட்டலும் பூமழைபொழிதலும்.

**இவன்மொழிநயந்துகேட்டுழியவையி னிருந்ததொன்மனிதரேயன்றித்**
**தவமுனிவருந்தேவருங்ககனந் தங்குமாமங்கையர்பலரும்**
**உவகையோடிவனுக்கேற்றபேருரைசெய் தொளிகெழுபூமழைபொழிந்தார்**
**அவனியினிருப ரெவருவருந்திறலா னரியசொற்பொருணிலையறிந்தே.**

(இ-ள்.) இவன்-இந்தத்தேவவிரதன், மொழி - (கூறிய) சபத வார்த்தையை, நயந்து கேட்டஉழி-விரும்பிச்செவியேற்றபோது, அவையின் இருந்த-சபையிலேயிருந்த, தொல் மனிதர்ஏ அன்றி- பழமையான மனிதரே யல்லாமல், தவம் முனிவரர்உம்-தவத்தை

யுடைய சிறந்த இருடியரும், தேவர்உம்-தேவர்களும், ககனம் தங்கும் மா கங்கையர் பலர்உம்-வானுலகத்தில் வாழ்கின்ற சிறந்த தேவமங்கையர் பலரும்,—அவனியில்-பூமியிலே, நிருபர் - அரசர், வெருவரும் - அஞ்சுகின்ற, திறலான் - மனவலிமைபற்றி வந்த, அரிய சொல் - அருமையான அந்தவீடுமனென்றசொல்லின், பொருள்நிலை-அர்த்தத்தின் நிலைமையை, அறிந்து-தெரிந்து,— உவகையோடு-மகிழ்ச்சியுடனே, இவனுக்கு ஏற்ற-இவனுக்குத் தக்க, பேர்-நாமதேயமாக, (வீடுமன் என்பதை), உரைசெய்து-சொல்லி, ஒளிகெழு-ஒளிபெறுதற்குக் காரணமான, பூமழை-மலர் மாரியையும், பொழிந்தார்—; (எ - று.)

நிருபர்வெருவருந்திறல்-தேகவலியேயன்றி மனவலியையும் காட்டும். வீடுமனென்ற சொல் இவனுக்குவந்தது மனத்திறலினாலாகுமென்பார் 'திறலானரியசொல்' என்றார்; இங்கே, ஆன் - மூன்றனுருபு. திறலான்-திறலையுடையவனென, ஆண்பால்விகுதியென்பாருமுளர். உரைசெய்த பேர், 'பீஷ்மன்' என்பது: இது-பயங்கரமானவனென்று பொருள்படும்: பயங்கரமான விரதத்தை மேற்கொண்ட மனவலிமைபற்றியது, இந்த வீடுமனென்ற பெயரென்க. இந்தவீடுமன் விரதங்கொண்டது தாசபூபதியின் முன்னிலையிலேயாகவும், அதனைக் கேள்வியுற்ற சபையோர் முதலியோர் வீடுமனென்ற பெயரை இவனுக்குத் தந்து மலர்மாரியும் பொழிந்தனரென்பதாம். (107)

**100.—வீடுமனென்றபேரைப்பெற்ற தேவவிரதன் தாசபூபதியை மகளுடனேயிட்டுக் கொண்டு, அரண்மனையையடைதல்.**

**மெய்ம்மகிழ்கடவுட்பூமழையுடனே வீடுமனெனும்பெயரெய்திக்**
**கைம்மகிழ்வரிவிற்ருசபூபதியுங் கன்னிகைகாளியுந்தானும்**
**மொய்ம்மணங்கமழுமன்றல்வேனிலின்வாய் முனிவருங்கிளைஞருஞ்சூழச்**
**செய்ம்மகிழ்பழனக்குருநிலமுடையான் றிருமனைவிரைவுடன்சேர்ந்தான்.** சந்தனு

(இ - ள்.) மெய் மகிழ்-உண்மையான மகிழ்ச்சியைக்கொண்ட, கடவுள்-தேவர்களின், பூமழையுடனே-, வீடுமன் எனும் பெயர்-வீடுமனென்ற பெயரையும், எய்தி-அடைந்து, (தேவவிரதன்),— மகிழ் வரிவில் கை தாசபூபதிஉம் கன்னிகை காளிஉம் தான்உம்-மகிழ்ச்சி யடைந்தவனுன கட்டமைந்த வில்லைக் கையிலேந்திய வலைஞர் தலைவனும் (அவனுடைய) கன்னிகையான காளியும் தானுமாக,—மொய் மணம் கமழும்மன்றல் வேனிலின்வாய்-நெருங்கியமணம்வீசப்பெற்ற மணஞ்செய்தற்குஉரிய வசந்தகாலத்தில், முனிவர்உம் கிளைஞர்உம்சூழ - முனிவர்களும் சுற்றத்தார்களும் சூழ்ந்துவர, செய் மகிழ் பழனம் குருநிலம் உடையான் திரு மனை-வயலைக்கண்டு மகிழ்வதற்குக் காரணமான நிலவள நீர்வளமுள்ள குருநிலத்தையுடையவனுன சந்தனு மன்னவனுடைய அழகிய இல்லத்தை, விரைவுடன் சேர்ந்தான்—; (எ-று.)

பூபதியும்காளியும் தானும்...சேர்ந்தான்-சிறப்பினால் உயர்திணை யாண்பாலான்முடிந்த பால்வழுவமைதி. விவாகத்துக்கு வசந்த ருதுவே சிறப்பாகக் கூறப்பட்டுள்ளதனுல், அதனை 'மன்

றல்வேனில்' என்றார். வலைஞர் பெண்ணாய் வளர்ந்த ஸத்யவதிக்குக் காளி என்ற பெயர் நிறம்பற்றிவந்தது போலும். மூன்றாமடியில் மெய்ம்மகிழ்கமழும் என்றும் பாடம். (108)

**101.—சந்தநு தன் மகனைக் கொண்டாடுதல்.**

**பரிமளவடிவப்பாவையையரசன் பாலளென்றொருபுடைநிறுத்தி**
**இருபதந்தொழுதுநின்றமாமகனை யிதயமோடிறுகுறத்தழுவித்**
**தருமணங்கமழுஞ்சென்னிமேல்வதனந் தாழ்ந்துமோந்துருகிமுன்றந்தைக்கு**
**உரியபேரிளமைகொடுத்தகோமகனு முனக்கெதிரல்லனென்றுரைத்தான்.**

(இ-ள்.) பரிமளம் வடிவம் பாவையை - பரிமளமே ஒருவடிவுபடைத்து வந்திருப்பதுபோன்ற அந்தக்காளியை, அரசன் பாலள் என்று ஒருபுடை நிறுத்தி-அரசனுக்கு உரியவளென்று ஒருபுறத்திலே நிறுத்தி, இரு பதம் தொழுதுநின்ற மா மகனை-இரண்டு பாதங்களையும் தொழுதுகொண்டுநின்ற (தன்) சிறந்த புதல்வனை, (சந்தனுமன்னவன்), இதயமோடு இறுகுற தழுவி-மார்போடுஅழுந்தக்கட்டிக்கொண்டு, தரு மணம் கமழும் சென்னி மேல்-கற்பகமலரின் நறுமணம் வீசுகின்ற (அந்தப்புதல்வனுடைய) சிரசின்மீது, வதனம் தாழ்ந்து மோந்து-(தன்) முகத்தைத் தாழ்ந்து (உச்சி) மோந்து, உருகி - (அன்பினால்) மனங்கசிந்து, 'முன் தந்தைக்கு உரிய பேர் இளமை கொடுத்த கோமகன்உம்-முன்பு (தன்) தந்தைக்கு (த் தனக்கு) உரிய மிக்க இளமையைக் கொடுத்த பூரு என்ற ராஜகுமாரனும், உனக்கு எதிர் அல்லன்—,' என்று—, உரைத்தான்-சொன்னான்; (எ - று.)

'தரு' என்ற மரப்பொதுப்பெயர் - சிறப்பாய்க் கற்பகத்தைக் காட்டி, முதலாகுபெயரால், அதன்மலரைக் காட்டிற்று. கீழ் வானவர்பூமழைபொழிந்தாரென்றதற்கு ஏற்ப, இங்கே 'தருமணங்கமழுஞ் சென்னி' என்றார். நான்காமடியில், உரியதன்னிளமை என்றும், அல்லவென்றுவந்தான் என்றும்பாடம். (109)

**102.—சந்தநு வீடுமனிடத்துக் கூறும் முகமன்.**

**தந்தையர்க்குதவுமுதவியினெனக்குச் சதமடங்குதவினையுனக்கு**
**மைந்தருக்குதவுமுதவியிற்சிறிது மாதவஞ்செய்திலேனுதவச்** [ன்
**சிந்தையிற்றுறக்கம்வேண்டுமென்றெண்ணிச்செல்லுமன்றல்லதுன்னுயிர்மே**
**முந்துறக்காலன்வரப்பெறுனென்றே முடிவிலாவொருவரமொழிந்தான்.**

(இ-ள்.) '(நீ),—எனக்கு—, தந்தையர்க்கு உதவும் உதவியின்-(பெற்ற மகன்) தன்னுடைய தந்தையார்திறத்தி லுதவுகின்ற உதவியைக்காட்டிலும், சதம் மடங்கு-நூறு மடங்கு (மிக), உதவினை-உதவிபுரிந்தாய்: உனக்கு—, மைந்தருக்கு உதவும் உதவியின்-(தந்தை தன்) புதல்வருக்கு உதவுகின்ற உதவியைப்போல,உதவ-உதவும்படி, சிறிதுஉம் - கொஞ்சமும், மா தவம் செய்திலேன் - சிறந்ததவத்தைச் செய்தேனில்லை: சிந்தையில்-(உன்) மனத்திலே, 'துறக்கம் வேண்டும்-சுவர்க்கத்துக்குப்போகவேண்டும்,' என்று—,

எண்ணி—, செல்லும் - (நீயே) போகின்ற, அன்று அல்லது-அன்றைக்கு அல்லாமல், உன் உயிர்மேல்—, காலன்-யமன், முந்துற-(நீ சுவர்க்கத்துக்குச் செல்லவேணுமென்றுகருதுவதற்கு முன்பாக, வரப்பெறுன்—,' என்று—, முடிவுஇலா-(விருப்பமின்றி) இறத்தலில்லாமையாகிய, ஒரு வரம் - ஒப்பற்றவரத்தையும், மொழிந்தான்-(சந்தனு விடுமன்பொருட்டு) வாய்விட்டுச் சொன்ஞன்: (எ - று.)

இங்ஙனம் வேண்டும்போது இறத்தல் 'ஸ்வச்சந்தமரணம்' எனப்படும். (*110*)

**103.—இதுமுதல் நான்குகவிகள்-வலைஞர்தலைவன் யோசனகந்தியை முன்நிறுத்திப் பணிவுடன் அவள்வரலாற்றினைத்தெரிவித்தலைக்கூறும்.**

அம்புவியரசன்மாமனுமரச னடிபணிந்தவயவத்தழகால் [தான்
உம்பரும்வியக்குங்கிளியைமுன்னிறுத்தி யொடுங்கினன்வாய்புதைத்துரைத்
எம்பெருமானீகேட்டருளுனக்கே யிசைந்தமெய்த்தவம்புரியிவளை
வம்பவிழ்மலர்மாதென்பதேயன்றி வலைஞர்மாமகளெனக்கருதேல்.

ஐந்துகவிகள்-ஒருதொடர்.

(இ - ள்.) அம்புவி அரசன் மாமன்உம் - அழகியபூமிக்குத் தலைவனான சந்தனுவுக்கு மாமனுராகிய வலைஞர் தலைவனும், அரசன் அடி பணிந்து - மன்னவனுடைய பாதங்களில் வணங்கி,— அவயவத்துஅழகால்-உடம்பினழகினால்,உம்பர்உம்-தேவர்களும், வியக்கும்-அதிசயிக்கின்ற, கிளியை-கிளிபோன்ற பெண்ணை,முன்-(அவ்வரசனுக்கு) முன்னே, நிறுத்தி-நிற்கவைத்து,—ஒடுங்கினன்-ஒடுக்கத்தைக் காட்டியவண்ணம், வாய்புதைத்து-வாயை(க் கையினால்) மூடிக்கொண்டு, உரைத்தான்-(பின்வருமாறு) சொல்பவனான்: எம்பெருமான் - எமது பெருமானே! நீ கேட்டருள் - நீ கேட்டருள்வாய்: உனக்கு ஏ இசைந்த மெய் தவம் புரி இவளை-உனக்கே (மனைவியாக) பொருந்திய உண்மைத்தவம்புரிந்துள்ள இந்தப் பெண்ணை,வம்பு அவிழ் மலர் மாது என்பது ஏ அன்றி-நறுமணம் வீசுகின்ற மலரில்தங்கும் திருமகள்போல்வா ளென்பதல்லாமல், வலைஞர் மா மகள் என-வலைஞர்குலத்துத் தோன்றிய சிறந்த பெண்ணென்று, கருதேல்-எண்ணுதே: (எ-று.)—இச் செய்யுளில் 'எம்பெருமான்' (*103*) என்பது தொடங்கி "காவலர்குலத்திடைக் கலந்தாள்" (*106*) என்பது வரையில், வலைஞர்தலைவனுரைத்த உரையாகும்.

அவயவம் அங்கம் என்பன பரியாய மாதலாலும், உடம்பை அங்கமென்று வழங்கியிருத்தலாலும், இங்கு உடம்பை அவயவமென்றார். (*111*)

**104.** வாசவனளித்தவிமானமீதொருவன் வசுவெனுஞ்சேதிமாமரபோன்
கேசரனெனப்பேரம்விசும்பிடைமனையாள் கிரிகையைநினைந்துடல்கெ
நேசமொடிதயமுருகுமக்கணத்தி னினைவறவிழுந்தவீரியமெய்த் [மும
தேசவனளித்தநதியிடைத்தரளத் திரளெனச்சிந்தியதொருபால்.

(இ-ள்.) வாசவன் அளித்த விமானமீது - இந்திரன்தந்த விமானத்தின்மேல், சேதி மா மரபோன் வசு எனும் ஒருவன்-சேதி

வமிசத்தில் தோன்றியவனுன வசுவென்ற ஒருவன்,கேசான் என-ஆகாசத்திற் சஞ்சரிக்கின்ற தேவசாதியான்போல,போம்-செல்லு கின்ற, விசும்பிடை - ஆகாயத்தினிடத்தே, மனையாள் கிரிகையை நினைந்து - மனையாளாகிய கிரிகையென்பாளை எண்ணி, உடல் கெழுமி-உடம்பிற் காமவிகாரங்கொண்டு, நேசமொடு-அன்புடனே, இதயம் உருகும் அ கணத்தில்-நெஞ்சம் உருகுகின்ற அந்தக்ஷணத் திலே,நினைவு-, அற-இன்றிக்கேயிருக்க,[தன்னடைவே], விழுந்த-, வீரியம் - சுக்கிலமானது, மெய் தேசவன்-தேஜோமயமான மேனி யைப்படைத்த சூரியன், அளித்த-தந்த, நதியிடை-யமுனாநதி யிலே, ஒருபால் - ஒருபுறத்திலே, திரள் தரளம் என-திரண்டவடி வுள்ள முத்துப்போல, சிந்தியது—; (எ - று.)

சேதிபனுன வசுவென்பவன் நோன்பால் வானத்திற்செல்ல வல்ல விமானத்தைத் தேவேந்திரனருளாற் பெற்றுன்: அன்னுன் வானத்திற் சஞ்சரிக்கையில் ஒருகால் தன்மனைவியை நினைந்து காமவிகாரங்கொண்டதனுற் சுக்கிலம்தோன்ற, அதனை ஒருமரத் தின் இலையிலேந்தி ஒரு சியேனமென்னும்பறவையை யழைத்துக் கொடுத்துக் கிரிகையினிடத்துச் சேர்ப்பிக்குமாறு சொன்னுன்: சொல்லவும், வேறெரு சியேனப்பறவை அதனை இரையென்று கருதிப்பொர, அந்தச்சுக்கிலம் யமுனைநதியின் புனலில் முத்தின் திரள்போல விழுந்திட்டதென விளக்கங் காண்க. மற்றெருமனை யாள் கிரீடையையென்றும் பாடம். (112)

105. ஒருமுனிமுனிவாலரமகளொருத்தி மீனமாயுற்பவித்துழல்வாள்
இரையெனவதனைவிழுங்குமுன்கருக்கொண் டீன்முதிர்காலையிலதனைப்
பரதவர்வலையினகப்படுத்தரியப் பாலகனெருவனுமிவளும்
இருவருமிந்தமீன்வயிற்றிருந்தார் யமுனையும்யமனுநேரெனவே.

(இ-ள்.) ஒருமுனி முனிவால்-ஒருமுனிவனுடைய வெகுளி யினுல், அரமகள் ஒருத்தி-ஒருதேவமாது, மீனம் ஆய் உற்பவித்து உழல்வாள் - மீனுகித்தோன்றி யலைபவளாய்,— அதனை - (யமுனை யின் ஒருபாற் சிந்திய) அந்த (வசுவின்) வீரியத்தை, இரை என-(தனக்கு உரிய) உணவென்று, விழுங்குமுன் - உட்கொள்வதற்கு முன்னமே[உட்கொண்டவுடனே யென்றபடி],கரு கொண்டு-கருப்ப மடைந்து, ஈன்முதிர் காலையில்-(அந்தக்கருப்பம் ஈனுமாறு முதிர்ச்சி யடைந்ததருணத்தில்,—அதனை-கருக்கொண்ட அந்த மீனை, பரதவர்-வலைஞர், வலையின் அகப்படுத்து-வலையில் அகப் படுமாறு செய்து,அரிய-அரிந்துபார்க்க,—பாலகன் ஒருவன் உம்-ஒரு குமாரனும், இவள் உம் - இந்தக்குமாரியும், இருவர் உம்-(ஆகிய) இருவர்களும், யமுனை உம் யமன் உம் நேர் என—, இந்த மீன் வயிற்று இருந்தார்—: (எ-று.)

சூரியபுத்திரியாகியயமுனைநதியின் மீன்வயிற்றிலேதோன்றிய குமார குமாரிகட்கு, சூரியனுக்குப் புதல்வனும் புதல்வியுமான யம னையும் யமுனையையும் உவமைகூறினுர். ப்ருஹ்மசாபத்தினுல்அத் திரிகையென்ற தேவமாது மீனமாயினுளென்று கூறப்படும்: ஆகவே, ஒருமுனி யென்றது-பிரமதேவனைக் காட்டும். (113)

**106.** மானவர் பதியாம் வசுவினுக் கிவரை மகிழ்வுறக் காட்ட்லு மகனை
மீனவனெனப்பேர்கொடுத்தனன் கொண்டுமெல்லியலிவளை மீண்டளித்தான்
யானுமின் றளவு மென்மக ளென்னு மியற்கையா லினிமையின் வளர்த்தேன்
கானமென் குயில்போல் வந்துமீ ளவுந்தன் காவலர் குலத்திடைக் கலந்தாள்.

(இ-ள்.) மானவர் பதி ஆம்-மானுடர்க்குத் தலைவனுகிய, வசுவினுக்கு—, இவரை-இந்த மக்களை, மகிழ்வு உற-மகிழ்ச்சிபொருந்த, காட்டலும் - (நான்) காட்டியபோது,—(அந்தவசுமன்னவன்), மகனை—, மீனவன் எனபேர்கொடுத்தனன் கொண்டு - மீனவனென்று பேரிட்டு(த் தன்னுடன்) வைத்துக்கொண்டு, மெல்லியல் இவளை-இந்தப்பெண்ணை, மீண்டு—, அளித்தான் - கொடுத்திட்டான்: யான் உம்—, இன்று அளவுஉம்-இன்றுவரையிலும், என் மகள் என்னும் இயற்கையால்-என்மகளென்று சொல்லக்கூடிய தன்மையினுல், இனிமையின் வளர்த்தேன் - இனிதாகவளர்த்து வந்தேன்: (இவள்), கானம் மெல் குயில்போல்-இன்னிசையையுடைய மெல்லிய குயில்போல், வந்து-வளர்ந்துவந்து, மீளஉம்-, தன்காவலர் குலத்திடை-தனக்குரிய அரசர்குலத்திலேயே, கலந்தாள்-சேர்ந்திட்டாள்; (எ - று.)

வலைஞர் தம் தலைவனிடத்து அந்தக்குழந்தைகளைத் தர, வலைஞர்தலைவனை அந்த உச்சைச்சிரவசு குழந்தைகளை வசுவுக்குக் காட்டினனென்க. காக்கையால் குஞ்சுபொரித்து வளர்க்கப்பெற்ற குயிலானது பிறகு தன்னினத்தையே சேர்ந்திடுமாதலால், பரதவரிடைவளர்ந்து மன்னவர்குலத்தைச் சேர்ந்த யோசனகந்திக்குக் குயில் ஏற்ற உவமையாம்: குயில் காக்கையால் முதலில் வளர்க்கப்படுவதுபற்றி, வடமொழியில் 'பரபுஷ்டம்' என்று ஒருபெயர் பெறும்: மீனவன்=மத்ஸ்ய: என்பதன் மொழிபெயர்ப்பு. (*114*)

வே று.

**107.**—வலைஞர்தலைவனது பேச்சைக் கேட்டபின், சந்தனு அம்மகளை மணத்தல்.

என்று கூறிவி டுத்தன னேந்தலும்
அன்ற வைக்க ணவன்மொழி கேட்டுவந்து
இன்று நற்றின மென்றிளந் தோகையை
மன்ற லெய்தினன் மாநிலம் வாழ்த்தவே.

(இ-ள்.) என்று கூறி விடுத்தனன்-என்றுசொல்லி (அந்தப் பெண்ணைக்) கொடுத்தான்: ஏந்தல்உம் - சந்தனுமன்னவனும்,— அன்று—, அவைக்கண்-சபையிலே (கூறிய), அவன் மொழி-அவ்வலைஞர்பதியின் வார்த்தையை, கேட்டு-, உவந்து-மனம்மகிழ்ந்து,- இன்று நல் தினம் என்று-'இந்நாள் மணஞ்செய்துகொள்ளுதற்கு ஏற்ற நன்னுளாகும்' என்றுசொல்லி, இளந்தோகையை-இளமயில் போலுஞ் சாயலையுடைய அந்தப்பெண்ணை, மா நிலம் வாழ்த்த-பெரியநிலவுலகத்தார் வாழ்த்துக்கூற, மன்றல் எய்தினன்-விவாகஞ் செய்துகொண்டான்; (எ-று.)

தான் விரும்பியவளைச் சிறப்புற்ற வசுவின் பெண்ணென்று அறிந்தமையால், சந்தனு உவந்தானென்க.

இதுமுதல்இருபத்துநான்கு கவிகள்-பெரும்பாலும்முதற்சீர் மாச்சீரும்,மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். ()

**108.—கவிக்கூற்று.**

காளிவந்து கலந்தனள்கங்கைவேய்த்
தோளியும்புயந் தோய்ந்தனண்முன்னமே
வாளிவெம்பரி மாநெடுந்தேருடை
மீளிதானும் விடையவனுதலால்.

(இ-ள்.) வாளி வெம் பரி மா நெடுந் தேர் உடை மீளி தான் உம்-நேரேசெல்லும் கதி வாய்ந்த வெவ்விய குதிரை பூண்ட நெடிய தேரையுடைய வீரனாகிய சந்தனுவும்,—விடையவன்ஆதலால்—, காளி வந்து கலந்தனள்-; கங்கை வேய் தோளிஉம்-கங்கையென்ற மூங்கில்போலுந் தோளையுடையாளும், முன்னமே-, புயம்தோய்ந்தனள்-(அந்தமன்னவனை) மணந்தாள்; (எ-று.)

விடையவன் - விடையைவாகனமாகவுடையவ னென்றும், விடைபோல்பவனென்றும் சிலேடைவகையால் இருபொருள்படும். விருஷபவாகனனாகிய சிவபிரானைக் காளி மணத்தலும்,கங்காதேவி கூடியிருத்தலும் இயல்பேயென்ற கருத்து இதில் விளங்குதல் காண்க. "ஸ்வீக்ருத்யகாளீம் கிரிஜாமிவேச:" என்றது, பாலபாரதம். காளியென்பது, யோஜநகந்திக்கு வழங்கும் பெயர்; இச்சொல் பார்வதியினமிசமான பத்திரகாளியையும் காட்டும். விடையவன் என்பது, இடபக்குறியையுடைய வருணனது அமிசமானவன் என்று சந்தனுவைக் காட்டுமென்றுரு முளர். (*116*)

**109.—சந்தனு காளியின் இன்பத்தில் மகிழ்தல்.**

கங்கையின்கரைக் கண்ணுறுகாரிகை
கொங்கையின்பங் குலைந்தபின்மற்றவள்
எங்கையென்ன யமுனையின்பால்வரும்
மங்கையின்ப மகிழ்ந்தனன்மன்னனே.

(இ - ள்.)கங்கையின் கரை-கங்கையின்கரையிலே,கண்ணுறு-காணப்பெற்ற காரிகை-கங்கையின்பெண்தெய்வத்தின்,கொங்கை இன்பம்-தனங்களைத்தழுவுவதனாலான இன்பம்,குலைந்தபின்-அழிவுற்ற பின்பு,—மற்றவள் எங்கை என்ன-அந்தக்கங்காதேவியின் தங்கையென்னுமாறு, யமுனையின்பால் வரும் மங்கை - யமுனாநதியின் கரையிலே வந்த பெண்ணின்,இன்பம்-இன்பத்தை,மன்னன்-சந்தனுராசன், மகிழ்ந்தனன்—; (எ - று.) (*117*)

**110.—இரண்டுகவிகள்-குளகம்: வீடுமன் அரசமுறையை நடாத்த, மன்னவன் அந்தக்காளியினிடத்துப் புதல்வரைப் பெறுதலைக்கூறும்.**

வீடுமன்கழல் வேந்தர்வணங்கிட்
நாடுநன்னெறி நாளுநடத்திட
நீடுமன்னனு நேரிழைமேன்மலர்த்
தோடுமன்னு சுரும்பெனவிழவே.

(இ - ள்.) வீடுமன்—,—கழல்வேந்தர் வணங்கிட-வீரக்கழலை யணிந்த மன்னவர் வணங்காநிற்க, நாடும் நல் நெறி - ஆராய்ந்து செய்தற்கு உரிய நல்ல செங்கோல் முறையை, நாள்உம் நடத்திட-நாடோறும் நடத்தாநிற்க,—நீடு மன்னன்உம்-பெருமைமிக்க சந்தனுவரசனும், நேரிழைமேல்-அழகிய ஆபரணங்களையணிந்த பெண்ணினிடத்து, மலர் தோடு மன்னு சுரும்புஎன வீழ-மலரிதழில் மொய்க்கின்ற வண்டுபோல விரும்பி வீழாநிற்க,—(எ-று.)—"செங்கண்ணி - மைந்தரிருவரையீன்றனள்" எனத் தொடரும்.

மன்னனுக்கு வண்டும், காளிக்கு மலரிதழும், போகத்துக்குத் தேனும் உவமையாம். இளவரசனாகிய வீடுமனிடத்து அரசப் பொறுப்பைச் சந்தனுமன்னன் ஒப்பித்துப் பெண்ணின்பத்தை விரும்பிநின்றானென்க. (118)

111.—அன்னநாளி லருக்கனுந்திங்களும்
என்னமைந்த ரிருவரையீன்றனள்
மன்னனாவி வடிவுகொண்டன்னமெய்க்
கன்னபூரங் கலந்தசெங்கண்ணியே.

(இ-ள்.) மன்னன் ஆவி வடிவு கொண்டு அன்ன மெய் கன்ன பூரம் கலந்த செங் கண்ணி - சந்தனுமன்னவனுடைய உயிரே ஒரு வடிவுபடைத்தாற்போன்ற உடலையுடையளாய்க் காதணிவரையில் நீண்ட செவ்வரிபரந்த கண்களையுடையளான காளியானவள், அன்ன நாளில்-அந்தக்காலத்திலே, அருக்கன்உம் திங்கள்உம் என்ன-சூரியனும் சந்திரனும் என்னும்படி, மைந்தர் இருவரை ஈன்றனள்-இரண்டு புத்திரரைப் பெற்றாள்; (எ - று.)

தேஜோவான்களென்பதை விளக்கச் சூரியசந்திரரை உவமை கூறியது. கன்னபூரம்=கர்ணபூரம்: காதைநிரப்புவதென்ற காரணம் பற்றிக் காதணியைக் காட்டும் வடசொல். (119)

112.—பிறந்தபுத்திரரை வீடுமன் உரியகாலத்திற் கல்விபயிற்றுவித்தல்.

சித்திராங்கதன் செப்புநலனுடை
மெய்த்தசீர்த்தி விசித்திரவீரியன்
இத்திறத்த ரிருவருந்தம்முனல்
ஒத்தகல்விய ராயினருண்மையே.

(இ - ள்) சித்திராங்கதன் - சித்திராங்கதனும், செப்பு நலன் உடை மெய்த்த சீர்த்தி - (யாவராலும்) பாராட்டிச்சொல்லுதற்கு உரிய அழகமைந்து உண்மையான மிகுபுகழைப் பெற்ற, விசித்திரவீரியன்-விசித்திரவீரியனும், இ திறத்தர் இருவர்உம்-இப்படிப்பட்டவரான இரண்டுமைந்தரும், தம்முனல் - தமது அண்ணனான வீடுமனால், ஒத்த கல்வியர் ஆயினர் - ஒத்தகல்விமான்களாயினர்: உண்மை ஏ—; (எ-று.)

இச்செய்யுள், சிலபிரதிகளில் "சித்திராங்கதன் சித்திரவீரனென், றித்த ராதிபன் மைந்தரிருவரும், தத்தமன்பொடுதம்முன் பதந்தழீஇ, யொத்த கல்வியராயினருண்மையால்" என்றுகாணப் படுகின்றதென்ப. சித்திராங்கதன் இறந்துபட, விசித்திரவீரியனே

இராசாங்கத்துக்கு உரியவனானதால், அவனுக்கு 'மெய்த்த சீர்த்தி' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (120)

**113.—சந்தனு விண்ணுலகடைய, வீடுமன் சித்திராங்கதனைச் சிங்காசனத்தேற்றுதல்.**

மதிநெடுங்குல மன்னனரையினால்
விதியனந்தரம் விண்ணுலகேற்றினன்
நதியின்மைந்தனு நம்புவிக்கெம்பியே
அதிபனென்றரி யாசனத்தேற்றினன்.

(இ-ள்.) அனந்தரம்-பின்பு, மதி நெடுங் குலம் மன்னன் - சந்திரனுடைய பெருமைபெற்ற குலத்துத் தோன்றிய அரசனை, விதி - ஊழ்வினைக்குரியகடவுள், நரையினால் - கிழத்தனத்தினால், விண் உலகு ஏற்றினன்-வானுலகமேறச் செய்தான்: நதியின் மைந்தன் உம்-கங்காநதிக்குப்புதல்வனாகிய வீடுமனும், 'நம் புவிக்கு-நம்முடைய பூமிக்கு, எம்பிஏ-என் தம்பியே, அதிபன்-தலைவனாவன்,' என்று-என்றுசொல்லி, அரி ஆசனத்து ஏற்றினான் - சிங்காதனத்திலேறச் செய்தான்; (எ - று.)

வயசுமுதிர்ந்ததனால் சந்தனுமன்னன் வானுலகடைய, சித்திராங்கதனை வீடுமன் அரசனாக்கினனென்பதாம். நரைகாரணமாக விதி சந்தனுவை வானுலகேற்ற, வீடுமனும் தம்பியை அரியாசனத்தேற்றினான் என்று சமத்காரமாகக்கூறினார். இங்கு 'மன்னனை நன்பினால்' என்றபாடம், பொருள் சிறவாமை காண்க; 'மன்னனரையினால்' என்பதைப்படிக்கத் தெரியாமையால் நேர்ந்த தவறாயிருக்கலாம்: "ததோவிநிர் விஸ்ரஸயோபகூடம்-நரேந்த்ரம் ஆரோஹய திஸ்ம நாகம்—பீஷ்மோபி சஸ்த்ராஸ்த்ரவிதம் குமாரம் - சித்ராங்கதம் பௌரவராஜ்யபீடம்" என்ற பாலபாரதமும் காண்க: இந்த ச்லோகத்தில், விஸ்ரஸயா-நரையினாலென்று பொருளாம். (121)

**114.—சித்திராங்கதன் அப்பெயர்கொண்ட கந்தருவனால் இறத்தல்.**

எங்கணும மிவன்கவர்ந்தானெனக்
கங்குல்வந்தொரு கந்தருவாதிபன்
தொங்கன்மாமுடி சூடியவேந்தனை
அங்கையான்மலைந் தாருயிர்கொள்ளவே.

இரண்டுகவிகள் - குளகம்.

(இ-ள்.) 'எங்கள் நாமம் - எம்முடையபேராகிய சித்திராங்கதனென்பதை, இவன் கவர்ந்தான் - இவன் திருடிக்கொண்டான்,' என-என்று வெகுண்டு, ஒரு கந்தருவ அதிபன் - (சித்திராங்கதனென்று பேர்பூண்ட) ஒரு கந்தருவராசன், கங்குல் வந்து-இராப்போதில் வந்து, தொங்கல் மா முடி சூடிய வேந்தனை-அரசாங்கத்துக்குரிய மாலையுடனே கிரீடமும் தரித்துள்ள அந்தச்சித்திராங்கதமன்னனை, அம் கையால் மலைந்து - (தன்னுடைய) அழகிய கையினாற் பொருது, ஆர் உயிர் கொள்ள-அருமையான உயிரைக் கவர்ந்துகொண்டிட, (எ-று.)—"முடிசூட்டினான்" (115) என்று இயையும்.

வீடுமனிடத்து அச்சத்தினுல் பகலில் வராமல் இரவில்வந்து கவர்ந்து சித்திராங்கதமன்னனைக் கொன்றிட்டனன், அப்பெயர் பூண்ட கந்தருவனென்க. பேரைக்கொண்டிருத்தலை, நாமம் கவர்ந்தனனென்றது. அஸந்நிதௌ ஸிந்துபுவ: ஸ்வநாம்நா கந்தர்வவர்யேண ரணே நிஜக்நே [கங்காபுத்திரரான வீடுமருடைய அஸந்நிதானத்தில் போரிலே தன்பேரைக்கொண்ட கந்தருவனுல் சித்திராங்கதன் கொல்லப்பட்டான்] என்று பாலபாரதத்திலுள்ளது. வியாசபாரதத்தில்'சித்திராங்கதன்தன் வீரத்தினுல்பூலோகத்து அரசர்களைவென்று அவர்களை ஒருபொருட்டாக நினையாமல் தேவர்களையும் எதிர்த்தானுக, பலவானுன சித்திராங்கதனென்ற கந்தருவன் 'நீ என்பேர் கொண்டிருப்பதை மாற்றி வேறொரு பெயராவது கொள்க: இல்லாவிடின் என்னேடாவது பொருக' என்ன, இந்த மன்னவன் அந்தக்கந்தருவனேடு பொருதற்கு இசைய, இருவர்க்கும் மூன்று வருஷங்கள் ஹிரண்யவதியென்ற நதியின்கரையில் போர்நடக்க, முடிவில் மிக்கமாயையில்வல்ல சித்திராங்கத கந்தருவன்இவனைக் கொன்றிட்டான்'' என்று உள்ளது. (122)

115.—தாயின் மனவருத்தம் நீங்க, விசித்திரவீரியனுக்கு வீடுமன் முடிசூட்டுதல்.

எம்முனன்றி யிறந்தனனென்றுதாய்
விம்முநெஞ்சின் மிகுதுனிமாறவே
தெம்முன்வல்ல விசித்திரவீரனைத்
வீடுமன் தம்முன்மீளத் தனிமுடிசூட்டினுன்.

(இ-ள்.) 'எம்முன் அன்றி - எம்முடைய கண்ணெதிரிலேயல்லாமல், இறந்தனன் - (சித்திராங்கதன்) இறந்திட்டான்,' என்று-, விம்மு-துயரப்படுகின்ற, தாய்-தாயின், நெஞ்சின்-மனத்திலுள்ள, மிகுதுனி-மிக்க வருத்தம், மாற-நீங்குமாறு,—தெம் முன் வல்ல-(தம்) பகைவர் முன்னிலையில் வல்லமைகாட்டற்குரியனுன, விசித்திர வீரனை-விசித்திரவீரியனென்பானை, தம்முன்-அண்ணனுகிய வீடுமன், மீள-மறுபடியும், தனி முடி சூட்டினுன்-ஒப்பற்ற முடியைத் தரிப்பித்தான்; (எ - று.)

சித்திராங்கதன் தம்பியாகிய விசித்திரவீரியனுக்கே வீடுமன் இராச்சிய பட்டாபிஷேகஞ்செய்தா னென்க. மூன்ருமடி, 112-ஆம் பாடலின் பாடபேதத்திற்கு ஏற்ப, "தெம்முன்வென்ற நற்சித்திர வீரனை'' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது. (123)

116.—விசித்திரவீரியன் அரசுபுரிதல்.

சிற்பொருள்பர மானபொருட்கெதிர்
உற்பவிக்கு முபாயமதென்னவே
விற்படைத்திறல் வீடுமன்வாய்மையால்
பொற்புறப்புவி பூபதியாளுநாள்.

இதுவும் அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்.) சித்பொருள்-சித்தாயிருக்கின்ற ஆன்மா, பரம் ஆன பொருட்கு - பரம்பொருளுக்கு, எதிர் - எதிரிலே, உற்பவிக்கும்-

தோன்றுகின்ற, உபாயம் அது என்ன-தன்மைபோல,—வில் படை திறல்-வில்லென்ற ஆயுதத்தின் வலிமையையுடைய, வீடுமன் - வீடுமனுடைய, வாய்மையால்-மொழியினால், பூபதி-விசித்திரவீரியராசன், பொற்புஉற-அழகுபொருந்த, புவி ஆளும் நாள் - அரசாட்சி புரியுங்காலத்தில்,—(எ - று.)—"ஆள்விட" என்று தொடரும்.

"அநேநஜீவேந "ஆத்மநாऽநுப்ரவிச்யநாமரூபேவ்யாகரவாணி [இந்த ஜீவன்மூலமாக நான் எதிலும் உட்புகுந்து நாமரூபங்களை யுண்டாக்கக் கடவேன்]" என்று பரம்பொருள் சங்கற்பித்துக் கொள்ள அதனால் இந்தச் சராசரம் தொழிற்படுதல் போலவே, வீடுமன் மொழிப்படியே விசித்திரவீரியன் புவியை அரசாட்சி புரிந்தா னென்பதாம். சிற்பொருட்பரமான பொருட்கு என்ற பாடத்தில், ஞானப்பொருளாகிய பரம்பொருளுக்கு என்று உரைத்து, உற்பவிக்கும் என்பதற்கு எழுவாய் வருவிக்க. (*124*)

**117.—காசிமன்னவனுடைய கன்னியரின் சுயம்வரத்துக்கு மன்னவர் திரளுதல்.**

காசிமன்னவன் கன்னியர்மூவரும்
தேசின்மிக்கவர்ச் சேர்வரென்றுள்விட்
மாசிறுெல்குல மன்னவரீண்டினர்
மூசிவண்டின மொய்ப்பதுபோலவே.

(இ - ள்.) காசிமன்னவன்—, 'கன்னியர் மூவர்உம்-(தன்) புத்திரியரான மூன்று கன்னிகைகளும், தேசில் மிக்கவர்ச்சேர்வர்-வலிமையினால் மேம்பட்டவரை(க் கணவராக) அடைவர்,' என்று-, ஆள்விட - தூதுவரை (எங்கும்) அனுப்ப,—வண்டு இனம் மூசி மொய்ப்பதுபோல - வண்டுகளின் கூட்டம் நெருங்கி மொய்த்துக் கொள்ளுவது போல, (அக்கன்னிகையரின் மணமாலையை வேண்டி), மாசுஇல் தொல் குலம் மன்னவர்-குற்றமற்ற பழமை யான குலத்துத் தோன்றிய அரசர்கள், ஈண்டினர்-(அந்தக் காசி நகரில்) நெருங்கினார்கள்; (எ - று.) (*125*)

**118.—அந்தக்கன்னியரைத் தன்தம்பிக்கு மணம்புரிவிக்குமாறு வீடுமன் ஆண்டுச் செல்லுதல்.**

வரித்தமன்னர் மறங்கெடவன்பினால்
திரித்துமெம்பியைச் சேர்த்துவல்யானெனுத்
தரித்தவில்லொடுந் தன்னிளவேந்தொடும்
விரித்தவெண்குடை வீடுமனேகினான்.

(இ-ள்.) 'யான்—,—வரித்த - (மங்கையரால்) விரும்பப்பட்ட, மன்னர்-அரசரின், மறம்-வலிமை, கெட-அழியுமாறு, வன்பினால்-(என்) வலிமையினால், திரித்துஉம்-(அவர்களை) ஓடச்செய்தாவது, எம்பியை-என்தம்பியை, சேர்த்துவல்-(அக்கன்னிகையரைச்) சேரு மாறு செய்வேன்,' எனா-என்று கருதி,—விரித்த வெண் குடை வீடுமன்-மலர்த்திய வெண்கொற்றக் குடையையுடைய வீடுமன்,—தரித்த வில்லொடுஉம்-தாங்கிய வில்லுடனும், தன் இளவேந் தொடுஉம்-தன் (தம்பியாகிய) இளைஞனை அரசனொடும்,ஏகினான்-சென்றான்; (எ - று.)

திரித்தும், உம்மை-உயர்வுசிறப்பு. தம்பியோடுசென்றதாகப் பாலபாரதத்திலாவது, வியாசபாரதத்திலாவது இல்லை. தம்பி யோடு சென்றதாகக் கூறுவதில், யாதொரு நயமும் காணப்பட வில்லை. இனி, தன்னிளவேந்தொடும்-தன்னிளவேந்தனிடத்தில், 'வரித்த மன்னர் மறங்கெட வன்பினால் திரித்தும் எம்பியைச் சேர்த்துவல்யான்' என்றுசொல்லி, தரித்தவில்லொடும் வீடும னேகி னான் என்று இங்குப் பொருள் கூறிவிடலாம்: ஆயினும், 120-ஆஞ் செய்யுளில் "வெஞ்சராசனவீரனும் தம்பியும், மஞ்சமேறி மணித்தவி சேறினர்" என்றும், 124-ஆஞ்செய்யுளில் "யானையென்ன விளவ லெர்டேகினன்" என்றும், 126-இல் 'மைந்தர்தங்கள் வளநகர் மன்னினர்" என்றும் வருவதனால், அங்ஙன் கூறமுடியவில்லை: இனி, அந்தச்செய்யுள்களில், "வெஞ்சராசன வீரனுமேகியே, மஞ்ச மேறிமணித்தவிசேறினன்," "யானையென்ன விரைவினோடே கினன்", "மைந்தன்றன்ன வளநகரெய்தினன்" என்றாற்போன்று பாடமிருப்பின் நலம். (126)

119.—இடைவழியில் வீடுமன் இளைப்பாறுதல்.

அரவமாநதி யன்னையுந்தன்மகன் கங்கை
வரவறிந்து வழியிளைப்பாற்றினள்
பரவிவந்து பனிமலர்த்தென்றலை
விரவுநுண்டுளி மீதெறியூதையால்.

(இ - ள்.) அரவம் மா நதி அன்னை உம் - பேரொலிபடைத்த சிறந்த நதியாகிய (கங்காநதியென்ற) தாயும்,—தன் மகன் வரவு அறிந்து- தன்புதல்வனாகிய வீடுமன்வருவதையறிந்து, - பரவி வந்து—, பனி மலர் தென்றலை விரவு-குளிர்ந்த மலர்மணத்தோடு வருகின்ற தென்றலோடு கலந்துள்ள, நுண் துளி - நுண்ணிய நீர்த்திவலையை, மீது எறி-மேலே வீசுகின்ற, ஊதையால்-காற்றி னால், வழி இளைப்பு-(அவ்வீடுமனது) வழிகடந்துவந்ததனாலான களைப்பை, ஆற்றினள் - போக்கினாள்; (எ - று.)

நறுமலர்மணங்கூடிய நீர்த்திவலைகள் கலக்கப்பெற்றுப் பரவி வந்து மீதெறிகின்ற தென்றற்காற்றின்மூலமாய்க் கங்கையாள் வீடுமனுடைய வழியிளைப்பை மாற்றினளென்க. தென்றலாய் என்றும் பாடம். (127)

120.—நிருபர்குழாம் நெஞ்சழிந்துதொழ,
வீடுமன் தம்பியோடு மஞ்சத்தின்மீது மணித்தவிசு ஏறுதல்.

கஞ்சவாவி கலைமதிகண்டென
நெஞ்சழிந்து நிருபர்குழாந்தொழ வீமன்
வெஞ்சராசன வீரனுந்தம்பியும்
மஞ்சமேறி மணித்தவிசேறினர்.

(இ - ள்.) கஞ்சம் வாவி-தாமரைத்தடாகம், கலை மதி-பதினாறு கலைகளையும்படைத்த சந்திரனை, கண்டுஎன-கண்டாற்போல [மதியைக்கண்டதடாகத்திலுள்ள கமலமலர்கள்போல],நிருபர்குழாம்- மன்னவரின் கூட்டம், நெஞ்சு அழிந்து - மனம்முரிந்து, தொழ -

வணங்காமிற்க,—வெம் சராசனம் வீரன்உம் தம்பிஉம்-கொடியவிற் படையில் வல்லவீரனுகிய வீடுமனும் (அவனது) தம்பியாகிய விசித்திரவீரியனும், மஞ்சம் ஏறி-(அரசர்கள் தங்குமாறு அமைக் கப்பட்டுள்ள) கட்டிலின்மீதுஏறி, மணி தவிசு ஏறினர் - (அம்மஞ் சத்திலிட்டிருந்த) அழகிய ஆசனத்தின்மேலே யேறினர்கள்; (எ - று.)—'மதிகண்டென' என்ற உவமைக்கேற்ப 'வெஞ்சராசன வீரனுமேகியே' என்றாற்போன்ற பாடமே சிறத்தல் காண்க. (128)

**121.**—வீடுமன் மஞ்சத்தவிசிலிருப்பது கண்டு, அரசக்காளையர் மனங் கன்றுதல்.

குருத்தலந்தனிற் கூறியவஞ்சினம்
ஒருத்தரன் றறிவாருலகோர்பலர்
விருத்தன்வந்தனன் மேலினியேதிவன் வீடுமன்
கருத்தெனுமனங் காளையர்கன்றினர்.

(இ - ள்.) குருத்தலந்தனில் - குருக்ஷேத்திரத்திலே, கூறிய - (வீடுமன்) சொன்ன, வஞ்சினம்-(தான் மணப்பதில்லையென்ற)சபத மொழியை, அறிவார்-அறிபவர், ஒருத்தர் அன்று-ஒருவர் அல் லர்: உலகோர் பலர்-உலகத்தவர் பலரும் (அறிபவரே): (அப்படி யிருக்கவும்), விருத்தன்-கிழவனுகிய வீடுமன், வந்தனன் - (மண மாலைபெறவேண்டி இவ்விடம்) வந்துள்ளான்: இனிமேல் இவன் கருத்துஏது - இனிமேலே இவன்எண்ணம் என்னவோ!, என - என்று, காளையர்-காளைப்பருவமுள்ள (வராய்ச் சுயம்வர மணமாலை பெறும் பொருட்டு வந்த) அரசகுமாரர்கள், மனம் கன்றினர் - மனம் வாட்டமுற்றார்கள்; (எ - று.)

'மணப்பதில்லையென்ற முன்னமே வஞ்சினங்கூறிக் கிழவனு மாய்விட்ட இவன் இப்போது கன்னியர் மணமாலைசூட்டும் இவ் விடத்தில் வந்ததன் நோக்கமென்னையோ?' என்று அவன் வந்த காரணந்தெரியாமையால் மனம்வாடினர் அரசகுமார ரென்பதாம். இதனுலும், தம்பியுடன் வீடுமன் சென்றில னென்பது குறிப்பிக் கப்படுதல் காண்க. யமுனைக்கரையில் வசித்த தாசபூபதியின் மனந் தெளிய அங்கு அவையத்தோர் கேட்குமாறு மணஞ்செய்வ தில்லை யென்று சபதஞ்செய்ததாகவந்துள்ளதனுலும், இங்கு 'குருத்தலந்தனிற் கூறியவஞ்சினம்' என்றுவருதலாலும் அவன் சபதஞ்செய்த அந்த இடமும் குருக்ஷேத்திரத்திற் சேர்ந்ததென்று கொள்ளவேணும். முதனூலில் "வீடுமன் மணமாலைபெறு மிடத்து வந்திருந்ததுகண்ட சபையிலுள்ள அரசகுமாரர் 'கங்கா நதியின் புத்திரனை இந்தக்கிழவன் பிரதிஜ்ஞைதவற இங்கு ஏன் வந்தான்?' என்று சொல்பவர்களாய்க் கைகொட்டிச்சிரித்தார் கள்" என்று உள்ளது. (129)

**122.**—கன்னியர்மூவரும் வர, செவிலியர் சுயம்வரமண்டபத்து வந்திருந்த மன்னவரைக் காட்டி இன்னரின்னரென்று அறிவித்தல்.

இருந்தமன்ன ரிவரிவரென்றுளம்
பொருந்தமற்றவர் பொற்புடைத்தேசெலாம்
திருந்தநின்று செவிலியர்கூறவே
முருந்தவாணகை மூவருந்தோன்றினர்.

(இ-ள்.) செவிலியர் - செவிலித்தாய்மார், நின்று - (எதிரே) நின்று,—இருந்த மன்னர்-(சுயம்வரத்தின்பொருட்டு அந்தமண்டபத்து) வந்திருந்த அரசர்களை, 'இவர் இவர்-இவ்வரசர் இத்தன்மையர்,' என்று—, உளம் பொருந்த - மனத்திற்படுமாறு, அவர் பொற்பு உடை தேசுஎலாம்-அம்மன்னவரின் அழகுபொருந்திய பராக்கிரமங்களையெல்லாம், திருந்த கூற-செவ்வனே கூறும்படி, முருந்தம் வாள் நகைமூவர்உம்-மயிலிறகினடிபோன்றஒளிபொருந்திய பற்களையுடைய அந்தக் காசிமன்னவன்கன்னியர்மூவரும், தோன்றினர்-(அம்மண்டபத்து) வந்தார்கள்; (எ-று.)

மணமாலைசூட்டவருங் கன்னிமார்க்கு அரசருடையசரித்திரங்களையுணர்ந்தமகளிர்இவர் இன்னரென்றுகூறுதல், மரபு. முருந்தம், அம்-சாரியை. முருந்து அ எனவும் பிரிக்கலாம். மற்று-அசை. (130)

**123.—மாலைசூட்டவந்தகன்னியர் வீடுமன்நிலையைக்கண்டு ஐயுறுதல்.**

**கையின்மாலை யிவற்கெனக்கன்னியர்**
**வெய்யநெஞ்சொடு மின்னெனவந்தவர்**
**வையமன்னன் வயநிலைநோக்கியே**
**ஐயமுற்றன ரன்புறுகாதலார்.**

(இ-ள்.) 'கையில் மாலை-கையிலுள்ளமாலையானது, இவற்கு-இந்த மன்னவனுக்கு(ச் சூட்டுவது), என-என்று, வெய்ய-விரும்பிய, நெஞ்சொடு-மனத்துடனே, மின் என வந்தவர் கன்னியர்-மின்னல்போல ஒல்கியொசியுந் தன்மையுடன் வந்த அந்தக் கன்னியர்,—அன்புஉறுகாதலார்-அன்புற்ற காதலையுடையராக (இருந்தும்), வையம் மன்னன் வயநிலை நோக்கி-உலகத்துக்கு அரசனாகிய வீடுமனது வயசின் நிலைமையைநோக்கி,ஐயம் உற்றனர்-(கிழவனாயிருக்கிற இவனுக்கு மாலைசூட்டுவது எப்படி? என்று) சங்கைகொண்டு பின்வாங்கினார்கள்; (எ- று.)

செவிலியர் மன்னரைப்பற்றிக் கூறியதுகேட்ட கன்னிமார், வீடுமனுக்கு மாலைசூட்டுவது என்று விரும்பிவந்தவராய், அவன் கிழவனாயிருப்பது கண்டு பின்வாங்கின ரென்றவாறு. 'ஆத்மாநம் ஆலோக்யஜராஸமேதம்-அந்யத்ர யாந்தீ:'' என்று பாலபாரதத்து வருவதுங் காண்க: வியாசபாரதத்தும் இவ்வாறே வருகின்றது. வயஸ் நிலை என்ற இரண்டுசொற்கள் சேர்ந்து வயநிலையென்று திரிந்துவந்த தென்க. இனி இதனைத் தென்மொழித் தொடராகக் கொண்டுவீரநிலையென்று பொருளுரைத்து, தாம் எவனோ ஒரு ராஜகுமாரனுக்கு மாலைசூட்டலாமென்று உத்தேசித்து விருப்புள்ள நெஞ்சோடுவந்த அக்கன்னிமார், இடையிலே வீரநிலையோடுநிற்கும் வீடுமனைக்கண்டு 'நாம் பிறனுக்கு மாலைசூட்டினால் இவன் என்ன செய்வானோ?' என்று ஐயமுற்றா ரென்று இச்செய்யுளுக்கு வலிந்து பொருள் கூறுவர், பலர். (131)

**124.—அப்போது மன்னவர்பார்த்துநிற்க, அந்தக்கன்னியரைத் தேர்மீது ஏற்றித் தம்பியோடு வீடுமன் தன்நகர்நோக்கிச் செல்லுதல்.**

**ஏனைவேந்த ரெதிரிவரைப்பெருந்**
**தானைசூழ்மணிச் சந்தனத்தேற்றியே**

சோனைமாமதஞ் சோருங்கடதட்
யானையென்ன விளவலொடேகினன்.

(இ-ள்.) (காசிராசன்கன்னியர் மனத்துச் சங்கைகொண்டு மாலை சூட்டப் பின்வாங்குகையில்), ஏனை வேந்தர் எதிர்-மற்றை யரசரெதிரில்தானே, இவரை-இந்தக்கன்னிமார்மூவரையும், பெருந் தானை சூழ்-பெருஞ் சேனையாற் சூழப்பெற்ற, மணி சந்தனத்து ஏற்றி-அழகிய தேரின்மீது ஏற்றிக்கொண்டு,—சோனை மா மதம் சோரும்--விடாப்பெருமழைபோல மிக்கமதம் பெருகப்பெற்ற, கட தடம்-மதம் பெருகும் கபோலத்தையுடைய, யானை என்ன-யானை போல, (வெகுவிரைவாக), இளவலொடு-தம்பியுடனே, ஏகினன்—.

125.—மன்னவர்திரண்டுபொர, கணையால் வீடுமன் அவர்களை ஓட்டுதல்.

முறையினலன்றி மொய்ம்பிற்கவர்வதெக்
குறையினலெனக் கோக்குலங்கூடிவந்து
இறைவனேடெதி ரெற்றவவ்வீரரைப்
பிறைமுகக்கணையாற் பிளந்தோட்டினன்.

(இ-ள்.) 'முறையினல்அன்றி - முறைமையினலல்லாமல், மொய்ம்பின்-வலிமையினல், கவர்வது - பறித்துக்கொண்டுசெல் வது, எ குறையினல்-(நம்மிடத்துள்ள) எந்தக்குறைவினல்?' என-என்று சொல்லிக்கொண்டு, கோகுலம்-அரசரின்திரள், கூடிவந்து-ஒன்று சேர்ந்துவந்து, இறைவனேடு - வீடுமனேடு, எதிர் எற்ற-எதிராகப் பொராநிற்க,-(அப்போதுவீடுமன்),—அ வீரரை-தன்னை யெதிர்த்த) வீரரான அம் மன்னவர்களை, பிறைமுகம் கணையால்-அர்த்தசந்திரபாணங்களால், பிளந்து-காயப்படுத்தி, ஓட்டினன்-ஓடச்செய்தான்; (எ-று.)

நாம் வலிமையாற் குறைவற்றவராக இருக்கையில் நம்முன் இக்கன்னியரைக் கவர்ந்துசெல்வது தக்கதன்று என்ற கருத்தி னல் 'மொய்ம்பிற்கவர்வதெக்குறையினல்' என்றனர். 'ஏற்றவவ் வீரரை, ஏற்றவில்வீரரை' என்றும் பாடம். (*133*)

126.—வீடுமன் வெற்றிபெற்றுக் கன்னிமாரை உடன்கொண்டு
தன் நகர் சார்தல்.

முந்துறப்பெறு மூவரொடாடமர்
விந்தைதன்னையும் வேந்தர்கொடுத்தலால்
சந்தனுப்பெயர்த் தார்முடிமன்னவன்
மைந்தர்தங்கள் வளநகர்மன்னினர்.

(இ-ள்.) முந்துற பெறும் - முன்னமே பெற்ற, மூவரொடு-(அந்தக்கன்னிமார்) மூவருடனே, ஆடு அமர் விந்தைதன்னைஉம்-(பகையைக்)கொல்லுதலையுடையபோர்க்குஉரியவீரலட்சுமியையும், வேந்தர்-(எதிர்த்த)மன்னவர், கொடுத்தலால்—,—சந்தனு பெயர் தார் முடி மன்னவன் மைந்தர்-சந்தனு வென்ற மாலையையும் கிரீடத்தையும் அணிந்தவனன மன்னவனுடைய புதல்வராகிய

வீடுமனும் விசித்திரவீரியனும், தங்கள் வளம் நகர் மன்னினர் - தங்களுடைய வளப்பமுள்ள நகரத்தைச் சேர்ந்தார்கள்: (எ-று.)

விந்தியமலையில் வசிப்பவளாதலால் வீரலட்சுமிக்கு 'விந்த்ய வாஸிநீ' என்று பெயர்: அச்சொல், விந்தையெனவரும். (*134*)

**127.—போரிற் சற்று முந்திய சாலுவனிடத்து மனஞ்சென்றதறிந்து, அம்பையை வீடுமன் அவனிடத்துப் போக்குதல்.**

**சமரின்முந்திய சாலுவன்மேன்மனம்**
**அமரநின்ற தறிந்துழியம்பையை**
**எமர்களுக்கிஃ தியற்கையன்றென்னவே**
**அமரழிந்த வவனுழைப்போக்கினன்.**

(இ-ள்.) சமரில்-(எதிர்த்துப்பொருதபோது) அந்தப்போரில், முந்திய-(சற்று) முற்பட்டவனான, சாலுவன்மேல்—, (அம்பை யென்பவள்,) மனம்-(தன்) நெஞ்சம், அமர நின்றது-பொருந்த நின் றதை, அறிந்த உழி-(வீடுமன்) அறிந்தபோது,—அம்பையை-(அந்த) அம்பையை (நோக்கி), 'எமர்களுக்கு-எம்மைச்சேர்ந்தோர்க்கு, இஃது-(பிறர்மீது மனஞ்செல்லுங்கன்னிகையைக் கொள்ளுகின்ற) இது, இயற்கைஅன்று - தகுதியன்று,' என்ன - என்று சொல்லி, அமர் அழிந்த அவனுழை போக்கினான்-போரில் தோற்ற அந்தச்சாலுவனிடமே (அவளை) அனுப்பினான்; (எ-று.)

சாலுவன்-சாலுவதேசத்து ராசன்: இவன்பெயர் பிரமதத்தனென்பது: இவன் வீடுமனுடன் எதிர்ப்போரில் வலிமையிற் சற்று முந்தினனென்க. (*135*)

**128.—அம்பிகை அம்பாலிகைகளைத் தன் தம்பிக்கு வீடுமன் மணம்புரிவித்தல்.**

**அம்பிகைக்கு மம்பாலிகைக்கும்பதி**
**எம்பியேயெழிலா லென்றிசைவுறத்**
**தம்பிதன்னைத் தனஞ்சயன்றன்னெதிர்**
**வம்பினன்மிகு மாமணஞ்சேர்த்தினன்.**

(இ-ள்.) 'எழிலால்-அழகினாலேற்ற, எம்பி ஏ-என்தம்பிவிசித்திரவீரியனே, அம்பிகைக்குஉம்—, அம்பாலிகைக்குஉம்—, பதி-கணவனாவான்,' என்று-என்றுசொல்லி, இசைவுஉற-(அவர்கள்) மனஞ்சம்மதிக்க, தம்பிதன்னை—, தனஞ்சயன் தன் எதிர்-அக்கினிக்கு எதிரே, வம்பினால் மிகு-நறுமணத்தினால்மிக்க, மா மணம்-சிறந்த கலியாணத்தை, சேர்த்தினன்-நடப்பித்தான்; (எ-று.) ()

**129.—சாலுவன் பகைஞன் கவர்ந்த உன்னைக் கொள்ளேனென்றிட, அம்பை மீண்டு வீடுமனைச் சார்தல்.**

**சென்றவம்பையைத் தீமதிச்சாலுவன்**
**வென்றுதெவ்வர் கவர்ந்தநின்மெய்தொடேன்**
**என்றிகப்ப விவனுழைமீளவும்**
**மன்றல்வேண்டினண் மன்றலங்கோதையாள்.** அம்பை

(இ-ள்.) சென்ற அம்பையை - (தன்னிடம்) வந்துசேர்ந்த அம்பை யென்பாளை, தீ மதி சாலுவன் - கெடுமதியையுடைய சாலுவனென்பவன், 'வென்று தெவ்வர் கவர்ந்த நின்-ஜயித்துப் பகைவர் கவர்ந்துபோன நினது, மெய்-உடலை, தொடேன் - தீண்டேன்,' என்று—, இகப்ப-(அங்கீகரியாது) புறக்கணிக்க,—இவனுழை-இந்த வீடுமனிடத்தே, மீளஉம்-மறுபடியும், மன்றல் அம் கோதையாள்-நறுமணமுள்ள அழகிய மாலையையணிந்த அந்த அம்பை, மன்றல் வேண்டினள்-மணஞ்செய்துகொள்ள இரந்தாள்; (எ - று.)—கற்பால் வந்தவளைக் கடிதலால் 'தீமதிச்சாலுவன்' என்றது. (137)

**130.—வீடுமன் மணம்மறுக்க, அம்பை சங்கையோடு தன்தந்தையைச் சார்தல்.**

கங்கை மைந்தன் கடிமணங் காதல்கூர்
மங்கை தன்னைமறுத்தபின் மங்கையும்
செங்க ணீரெழச் சிந்தைசெந் தீயெழச்
சங்கை யோடுதன் றாதையை நண்ணினாள்.

(இ - ள்.) காதல்கூர் - (விவாகஞ்செய்துகொள்ள வேணுமென்று) விருப்பம்மிகுந்த, மங்கைதன்னை-(அம்பையென்ற) பெண்ணைநோக்கி, கங்கைமைந்தன்-கங்கையின்புத்திரனான வீடுமன், கடி மணம் மறுத்த பின் - கடியென்று ஒருபேர்கொண்ட மணத்தை (உடன்படாது) மறுத்திட்டபின்பு,—மங்கைஉம்-அந்த அம்பையும்;-செங் கண் நீர் எழ-(வெகுளியாற்) சிவந்த (தன்) கண்களினின்று கண்ணீர்பெருகவும், சிந்தை செந் தீ எழ-(தன்)மனத்திலே வெகுளித்தீச் சொலிக்கவும், சங்கையோடு-(என்னசொல்லுவாரோ) என்ற சங்கையுடனே, தன் தாதையை-தன் தகப்பனை, நண்ணினாள்-சேர்ந்தாள்; (எ - று.)

'அம்பை வீடுமனால் நிராகரிக்கப்பட்டபின்பு தவத்தில் மனமூன்றியவளாய்க் காட்டிற்குச்சென்றாள்' என்ற இவ்வளவே பாலபாரதத்திலுள்ளது: அன்னாள் சிகண்டியான சரித்திரம் அங்கு இல்லை. (138)

வேறு.

**131.—அம்பை நிகழ்ந்தவற்றைத் தந்தையிடஞ் சொல்ல, அன்னான் மணந்துகொள்ளுமாறு வீடுமனிடத்துத் தூதரை யேவுதல்.**

தாதை தாளினில் விழுந்து சந்தனுவின் மைந்த னின்னலுரை தந்ததும்
கோதை யாலுறவு கொண்டு கைதரல் குறித்த கோமகன் மறுத்ததும்
பேதை கூறமன நொந்தி ரங்கியவன் மிக்க நண்பினெடு பின்னையும்
தூதை யேவிமண முற்றி ரந்தனன்வி சும்பு லாவுநதி சூதனையே.

(இ - ள்.) (நண்ணிய அம்பை),—தாதை தாளினில் விழுந்து-(தன்) தந்தையின் பாதங்களிலே விழுந்து, சந்தனுவின் மைந்தன்-சந்தனுவின் குமாரனான வீடுமன், இன்னல் உரை-துன்பந்தரும் வார்த்தைகளை, தந்தது உம்-சொன்னதையும், கோதையால்-மணமாலைமூலமாக, உறவுகொண்டு கைதரல் - சம்பந்தஞ்செய்துகொண்டு பாணிக்கிரகணஞ்செய்தலை, குறித்த-எண்ணிய, கோமகன்-சாலுவ மகாராசன், மறுத்ததுஉம் - மணஞ்செய்துகொள்ள

உடன்படாததையும், பேதை கூற-(தன்) பெண் சொல்ல,—(அது கேட்டு), மனம் நொந்து—, இரங்கியவன்-இரக்கங்கொண்டவனான அப்பெண்ணின் தந்தை, மிக்கநண்பினொடு-மிக்கசிநேகத்தோடு, பின்னேஉம்-பின்னும், தூதை ஏவி - தூதுவரை அனுப்பி, (அத்தூதன்மூலமாக), விசும்பு உலாவு நதி சுதனை-ஆகாயத்திலுலாவுகின்ற நதியாகிய கங்கையாளின் மகனாகிய வீடுமனை, உற்று-அடைந்து, மணம் இரந்தனன்-(தன் மகளை) மணஞ்செய்து கொள்ளுமாறு வேண்டினான்; (எ - று.)

கோதையால் - மணமாலைமூலமாக என்றபடி: கோதைபாலென்று பாடமாயின், தன்னைப் படர்க்கையாகக் கூறியதாகக் கொள்க. பின்னையும் என்ற உம்மை, முன்பு அம்பை சென்றமையையும் தழுவும்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினேழுகவிகள்-பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும் ஈற்றுச்சீரொன்று விளச்சீரும், மற்றைமூன்றும் காய்ச்சீருமாகிவந்த எழுசீராசிரியவிருத்தங்கள். (*139*)

**132.—தூதுவர் புகலவும் வீடுமன் மணம்மறுத்தல்.**

**போனதூதுவர்வணங்கியிம்மொழி புகன்றபோதுமொழிபொய்யுரு**
**மீனகேதனனைவென்றுதன்கொடிய விரதமேபுரியும்வீடுமன்**
**மானவேனிருபன்மகள்குறித்ததிரு மன்றல்வன்பொடுமறுத்தலான்**
**ஆனவாதரவொடாகுலம்பெருக வம்பைதந்தைதனதருளினல்.**

இதுமுதல் நான்குகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) போன தூதுவர்-(அங்குநின்று) சென்ற தூதர்கள், (வீடுமனை யடைந்து), வணங்கி—,இ மொழி புகன்ற போது-இந்த வார்த்தையைச் சொன்னபோது,—மொழி பொய் உரு-(தான்) சொன்ன சொல் தவறாமல், மீனகேதனனை வென்று தன் கொடிய விரதமே புரியும்-மன்மதனைச் செயித்துத் தன்னுடைய கொடிய விரதத்தையே நடத்துகின்ற, வீடுமன்—,—மானம் வேல் நிருபன் மகள் குறித்த திரு மன்றல்-பெருமைபெற்ற வேற்படையைக் கொண்ட காசிராசன்மகள் எண்ணிய சிறந்த விவாகத்தை, வன்பொடு மறுத்தலான்-கடுமையாகமறுத்திட்டதனால்,—அம்பை தந்தை-அந்த அம்பையின் தகப்பனான காசிராசன்,—ஆன ஆதரவொடு - (தன்மகள் திருமணத்தைப்பற்றிக்) கொண்ட விருப்புடனே, ஆகுலம் பெருக-துன்பம் மிக,—தனது அருளினால்—,—(எ - று.)—'என்று (கூறினான்)' என்று-மேல் 134-ஆங் கவியோடு இயையும். மீனகேதனனைவென்று - காமவிகாரமில்லாமல் என்றபடி. மீன கேதனன்-மீன்வடிவத்தைக் கொடியிலுடையவன்.(*140*)

**133.—'பரசுராமனைச்சாரின் உன்எண்ணம் முடிவுறலாகும்' என்று தந்தை மகளுக்கு உபாயங் கூறுதல்.**

**வரிசையாலுயரநேகமண்டல மகீபர்சொன்னசொன்மறுக்கினும்**
**பரசுராமனருண்மொழிமருனவன திருபதத்திடைபணிந்துநீ**
**உரைசெய்தாலவனுரைத்தசொல்லின்வழி யொழுகிவந்துநினையுவகையால்**
**விரைசெய்மாலைபுனையாதுவீடுமன் மறுத்துமீளவும்விளம்புமேல்.**

(இ-ள்.) வரிசையால்-சிறப்பினால், உயர்-மேம்பட்ட, அனேகம் மண்டலம் மகிபர்-பல மண்டலிகரான அரசர்கள், சொன்ன—, சொல்-சொல்லை,மறுக்கின்உம்-மறுத்தாலும்,பரசுராமன்-,அருள்-கூறுகின்ற, மொழி-பேச்சை, மருன்-(வீடுமன்) மறுக்கமாட்டான்: (ஆகையால்),—நீ—, அவனது இருபதத்திடை பணிந்து-அந்தப் பரசுராமனுடைய உபயபாதங்களிலே நமஸ்கரித்து, உரைசெய்தால்-(உன் குறையைச்) சொன்னால்,அவன் உரைத்த சொல்லின் வழி-அந்தப் பரசுராமன் கூறிய பேச்சின்வழியே, ஒழுகிவந்து-நடந்துவந்து, நினை-உன்னை, உவகையால்-மகிழ்ச்சியோடு, விரைசெய் மாலை புனையாது-நறுமணங்கமழ்கின்ற மணமாலை சூட்டாது, வீடுமன்—, மீளஉம்-மீண்டும், மறுத்து விளம்பும் ஏல்-மறுத்துக் கூறுவானானால்,—(எ - று.)—விளம்புமேல் என்பது, அடுத்த செய்யுளில் "பெருந்தவம் புரிதி" என்பதனோடு இயையும்.

குரு ஆதலால் பரசுராமன் மொழியை வீடுமன் மறுக்க மாட்டானென்று காசிராசன் கருதினான். (*141*)

**134.—அம்பை பரசுராமனிருக்குமிடத்தைச் சார்தல்.**

**பின்னையெண்ணியபெருந்தவம்புரிதி யென்றுகூறியபிதாவையும்**
**அன்னைதன்னையும்வணங்கிநீடுசது ரந்தயானமிசையம்புயப்**
**பொன்னைவென்றொளிகொள்சாயலாளிரு புறத்துமாதர்பலர்பொலிவுடன்**
**தன்னைவந்துபுடைசூழவேகியம தங்கிமைந்தனகர்சாரவே.**

(இ-ள்.) பின்னை-பிறகு, எண்ணிய-(நீ) நினைத்துள்ள, பெருந்தவம்-மிக்கதவத்தை, புரிதி-செய்வாய், என்று—, (கூறினான்); கூறிய-(அங்ஙனம்) சொன்ன, பிதாவைஉம்-தகப்பனையும்,அன்னை தன்னைஉம் - தாயையும், வணங்கி—, நீடு - நீண்டுள்ள, சதுரந்த யானம் மிசை-பல்லக்கின்மீது, அம்புயம் பொன்னை வென்று ஒளி கொள் சாயலாள்-தாமரைமலரில் வாழ்பவளான இலக்குமியைச் சயித்து ஒளியைக்கொண்ட மெல்லியலான அம்பை, மாதர்பலர்-பலமங்கைமார், தன்னை—, வந்து-அடைந்து, இருபுறத்துஉம்-, பொலிவுடன்-அழகாக, புடைசூழ-சூழ்ந்திருக்க, ஏகி-(அங்கு நின்றும்)போய், யமதங்கி மைந்தன்-சமதக்கினிமுனிவனுடைய குமாரனாகிய பரசுராமன், நகர்-இருக்குமிடத்தை, சார-போய்ச்சேர,—(எ - று.) 'புகல" (*135*) என இயையும்.

*132*-ஆம் கவியில்வந்த"தந்தை" என்பதற்கு முடிக்குஞ் சொல் வேண்டி, 'என்று' என்பதன்பின் 'கூறினான்' என்று வருவிக்கப்பட்டது. இங்ஙன் முடிக்காவிடின் இச்செய்யுளில் 'பிதாவை' என வருவதனால் அந்தச்செய்யுளில் நின்ற 'தந்தை' என்பது பயனின்றா யொழியும். யமதங்கி = ஜமதக்நி. (*142*)

**135.—அம்பை பரசுராமனை யடைந்து தன்குறையைத் தெரிவிக்க, அவனும் அவள்குறையை முடிப்பதாக உறுதிகூறல்.**

**காசிராசன்மகளென்றுவந்தனளோர் கன்னியென்றுகடைகாவலோர்**
**வாசநாறுதுளவோனுட்ன்புகல வருகவென்றபின்மடந்தைபோய்**
**ஆசினுளுரைவகுத்துமுற்செய லனைத்துமண்ணலடிதொழுதுபின்**
**பேசினளவனும்யாமுடிக்குவமி தென்றுமெய்ம்மையொடுபேசினன்.**

(இ - ள்.) கடை காவலோர்-வாயிற்காவலர், வாசம் நாறு துளவோனுடன் - நறுமணம் வீசுகின்ற திருத்துழாய்மாலையையணிந்த பரசுராமனிடத்து, காசிராசன் மகள் என்று ஓர் கன்னி வந்தனள் என்று புகல-காசிராசன் பெண்ணென்று ஒருகன்னிகை வந்துள்ளாளென்றுசொல்ல,—(அந்தப்பரசுராமன்),வருக என்ற பின்-'வருவாயாக' என்று சொன்ன பின்பு, மடந்தை-இந்தப் பெண், போய்-(பரசுராமனிருக்குமிடஞ்) சென்று, முன் ஆசினால் உரை வகுத்து-முதலில்வாழ்த்தினால் பேசி [வாழ்த்தி], பின்-பிறகு, அண்ணல் அடிதொழுது-பெருமையிற் சிறந்தோனாகிய அந்தப்பரசுராமனுடைய பாதங்களில் வணங்கி, செயல்அனைத்தும் பேசினாள்-(முன்னே) நிகழ்ந்தசெய்திகளையெல்லாஞ் சொன்னாள்: அவன்உம்-அந்தப்பரசுராமனும், இது-இந்தஉன்கருத்தை, யாம்—, முடிக்குவம்-நிறைவேற்றுவோம், என்று—, மெய்ம்மையொடு-உறுதியாக, பேசினான்-சொன்னான்; (எ-று.)

முன்நிகழ்ந்தது-மணமாலையைச் சாலுவனுக்குச் சூட்டக்கருதியது முதலியன. ஆசினால்-விரைவோடு என்பாருமுளர்-(143)

**136.—பரசுராமன் அம்பையுடன் வீடுமனதுநகரைச் சேர அன்னான் எதிர்கொண்டு அப்பரசுராமனை வணங்குதல்.**

வரதன்வீரமழுவாலநேககுல மன்னர்வேரறமலைந்தகோன்
இரதமீதவளுடன்கணப்பொழுதி னேறியையிருதினத்தினில்
விரதமாபரணமெனவணிந்ததிறல் வீடுமன்பதியின்மேவலும்
சரதமாகவெதிர்கொண்டவன்சிர மிவன்பதத்தினிடைசாத்தினான்.

(இ - ள்.) வரதன்-(வேண்டுவார்க்கு வேண்டிய) வரத்தைக் கொடுப்பவனும், வீரம் மழுவால் அனேக குலம் மன்னர் வேர்அற மலைந்த கோன்-வீரத்தோடுகூடிய மழுப்படையால் பலகுலத்தில் தோன்றிய அரசரும் வமிசநாசமாகுமாறு பொருத தலைவனுமாகிய அந்தப்பரசுராமன், கணம் பொழுதின்-ஒருகணப்போதிற்குள்ளே, இரதம்மீது - (தன்) தேரின்மீது, அவளுடன் - அந்த அம்பையுடனே, ஏறி—,— ஐ இரு தினத்தினில்-பத்துத்தினங்களில், விரதம் ஆபரணம் என அணிந்த திறல் வீடுமன்-விரதத்தையே ஆபரணமாகப்பூண்ட வலிமையுள்ள வீடுமனுடைய, பதியின்-பட்டணத்திலே [அஸ்திநாபுரியிலே], மேவலும்-சேர்ந்தவுடனே,—சரதம் ஆக-(மனத்தில்) அன்புதோன்ற, எதிர்கொண்டு—, அவன்-அவ்வீடுமன், சிரம்-(தன்)சிரசை, இவன் பதத்தினிடை-இந்தப் பரசுராமன் பாதத்திலே, சாத்தினான் - சேர்த்தினான்; (எ - று.)

சரதம்-உண்மையென்பாருமுளர்: முன்னையபொருளில், ஸரஸமென்ற வடசொல்லின் விகாரம். (144)

**137.—வீடுமன் பரசுராமனை யுபசரித்தபின், பரசுராமன் அம்பையை மணந்துகொள்ளுமாறு வீடுமனிடம் கூறுதல்.**

தனக்குவின்மைநிலையிட்டகோவையொரு தமனியத்தவிசில்வைத்துநீ
எனக்குநன்மைதரவந்தநற்றவ மிருந்தவாவெனவிருந்தபின்
கனக்கும்வெண்டரளவடமுலைப்பெரிய கரியகண்ணியிவள்காதலால்
உனக்குமன்றல்பெறவுரியளாகுகென வுவகையோடவனுரைக்கவே.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தனக்கு—, வின்மை - வில்லின்நிலைமையை, நிலையிட்ட-நிலையாகவுணர்த்திய, கோவை - உபாத்தியாயனான பரசுராமனை, ஒரு தமனியம் தவிசில் வைத்து-ஒரு பொற்பீடத்திலிருக்கச்சொல்லி, 'நீ—, எனக்கு—, நன்மை தர-மிக்க மேன்மையைத் தருமாறு, வந்த-(இங்கு) எழுந்தருளிய, நல் தவம்-(என்னுடைய) சிறந்த தவம், இருந்த ஆ-இருந்தவகை (என்னே!)', என-என்று (விடுமன்) முகமன்கூற, இருந்தபின்-(பரசுராமன் அந்தத்தமனியத்தவிசில்தங்கி) இருந்தபின்பு,—'வெள் தரளம் வடம் கனக்கும் முலை பெரிய கரிய கண்ணி இவள்-வெண்ணிறமுள்ள முத்துவடமணிந்த பருத்த தனங்களையும் பெரியனவும் கரியனவுமான கண்களையுமுடைய இந்த அம்பை யென்பவள், காதலால் - ஆசையோடு, உனக்கு—, மன்றல்பெற-மணந்துகொள்ளுதற்கு, உரியள் ஆகுக—,' என - என்று, உவகையோடு-மனமகிழ்ச்சியோடு, அவன்-அந்தப் பரசுராமன், உரைக்க-சொல்ல,—(எ-று.)—ஆகுகென-தொகுத்தல், பெரியகரியகண்-ஈரடை. (145)

138.—இதுவும் அடுத்தகவியும்-விடுமன் தன்விரதத்தைத் தெரிவித்துப் பரசுராமனிடம் அம்பையை மணந்துகொள்ள மறுத்ததைத்தெரிவிக்கும்.

இன்சொலாலவனிகொண்டவெந்தைமுத லின்பமன்றலினிதெய்தநான்
வன்சொலாலிரதமணமுறேனென மனத்தினல்விரதமன்னினேன்
நின்சொல்யாவருமறாரெனக்கருதி நீயுரைப்பினுநிகழ்ந்தவிப்
புன்சொலானதினிமாதவத்தின்மிகு புனிதவென்செவிபொறுக்குமோ.

(இ-ள்.) இன்சொலால்-இனிய சொல்லினால், அவனி-உலகத்தாரை, கொண்ட - (தன்)வசமாக்கிக்கொண்ட, எந்தை - என் தந்தை, முதல்-முன்பு, இன்பம் மன்றல் - இன்பத்தை யனுபவித்தற்குஉரிய விவாகத்தை, இனிது எய்த-இனிதுபெறுமாறு, வன்சொலால்-சபதவார்த்தைகளால், 'நான்—, இரதம் மணம்-இன்பமனுபவித்தற்குரிய விவாகத்தை, உறேன் - பெறுமலிருப்பேன்,' என-என்று, மனத்தினல்-மனப்பூர்வமாக, விரதம்-ஒருவிரதத்தை, மன்னினேன்-பொருந்தினேன்: நின்சொல் யாவர்உம் மறார் என கருதி நீ உரைப்பின்உம்-உன்னுடைய சொல்லை எவரும் மறுத்துச் சொல்லாரென்று கருதி நீ (என்னைமணந்துகொள்ளுமாறு) கூறினையானாலும், மாதவத்தின் மிகு புனித-பெருந்தவத்தினால் மிக்க பரிசுத்த மூர்த்தியே! நிகழ்ந்த இ புன்சொல் ஆனது-(உன்னிடத்தினின்று) வந்த இந்த அற்பமான சொல்லாகியதை, இனி-இப்போது, என் செவி பொறுக்கும் ஓ-என்செவி யேற்று நிற்குமோ? (எ - று.)

குருவின்மொழி தள்ளத்தகாததென்றாலும், விரதம்பூண்ட எனக்கு இது புன்மொழியாகுதலால், இதனைக் கேளேனென்றான். இரதம்=ரதம்: புணர்ச்சி. (146)

139. களம்புகுந்தவரைமீளவேகுதல் கொடாதகார்முகவினோதகேள்
உளம்புகுந்தினிதிருக்குநற்கட்வு ளுன்னையன்றியிலையுண்மையே
வளம்புனைந்தவநுராகபோகமிகு மாதர்மங்கையர்பொருட்டினுல்[வேன்.
விளம்புமிந்தமொழியொழிகவென்றனுயிர்வேண்டுமென்னினும்வழங்கு

(இ-ள்.) களம் புகுந்தவரை மீள ஏகுதல் கொடாத கார்முகம் விஞேத-போர்க்களத்திற் புகுந்தாரை மீண்டுபோகுமாறு இடங் கொடுக்காத [எதிர்த்தாரைக்கொன்றேதீர்க்கின்ற] விற்ரெழில் விஞேதனே! கேள்—: உளம் புகுந்து இனிது இருக்கும் நல் கடவுள்-(என்) மனத்திற்புகுந்து வாழுஞ் சிறந்த கடவுள், உன்னை அன்றி இலே—: உண்மை ஏ-(இது) சத்தியமேயாம்: வளம் புனைந்த அநுராகம் போகம் மிகு மாதர் மங்கையர்பொருட்டினுல்-வளப்பம்பொருந்திய [மிக்க] ஆசையினுல் நிகழும் இன்பநுகர்ச்சிக்கு உரிய சிறந்த அழகிய மகளிரின்பொருட்டாக, விளம்பும்-சொல்லுகின்ற, இந்தமொழி-இந்தப்பேச்சை, ஒழிக-தவிர்க: என்றன் உயிர் வேண்டும் என்னின்உம்-என்னுடைய உயிரே வேண்டுமென்று யெனினும், வழங்குவேன்-தந்திடுவேன்; (எ-று.)

குருபேச்சுத் தட்டக்கூடாது: எனினும், விரதமும் தவிரக் கூடாது: ஆதலால், விரதபங்கஞ் செய்யாமல் நான் இருக்க நீ எது கேட்டாலுந் தருவேனென்றனன் வீடுமனென்க. களம்...விஞேத-நீ போர்புரிவாயாறுலும் நான் அஞ்சி என்கொள்கையைவிடேனென்ற குறிப்பினது. மாதர்-அழகு. (147)

**140.—வீடுமன் மறுத்துப்பேசியது கேட்டு, பரசுராமன் பொருமாறு தேர்மீது ஏறுதல்.**

**மறுத்திவன்புகலவீரியன்புயமொ ராயிரந்துணிசெய்மழுவினன்**
**வெறுத்தனந்தரமெழுந்திருந்துகரை யழியும்வேலேநிகர்வெகுளியன்**
**கறுத்தநெஞ்சினன்வெளுத்தமேனிய னுறச்சிவந்தவிருகண்ணினன்**
**பொறுத்தவில்லினன்விரைந்துதேர்மிசைபுகுந்தனன்பெரிதுபோர்செய்வான்.**

(இ-ள்.) இவன்-இந்தவீடுமன், மறுத்து புகல-(குருவின் வாசகத்தை) மறுத்துச்சொல்ல, வீரியன் புயம் ஓர் ஆயிரம் துணி செய் மழுவினன் - கார்த்தவீரியனுடைய ஓராயிரம் புஜத்தைத் துண்டித்த மழுப்படையை யுடையனுன பரசுராமன், அனந்தரம்-பிறகு, வெறுத்து-(வீடுமனிடத்தில்) வெறுப்புக்கொண்டு, எழுந்திருந்து-, கரை அழியும் வேலே நிகர் வெகுளியன்-கரைமீறிச் செல்லுங் கடலேயொத்தசினத்தையுடையவனுகி,—கறுத்த நெஞ்சினன்-கோபங்கொண்ட நெஞ்சையுடையவனும், வெளுத்த மேனியன்-(அதனுல்) வெண்மையடைந்த உடலேயுடையவனும், உற சிவந்த இரு கண்ணினன்-மிகச் சிவந்த இரண்டு கண்களேயுடையவனும், பொறுத்த வில்லினன்-(கையிற்)கொண்ட வில்லேயுடையவனுமாகி,—பெரிது போர் செய்வான் - பெரும்போர் செய்யும் எண்ணங்கொண்டு, விரைந்து—, தேர்மிசை புகுந்தனன்-தேரின் மீது ஏறினுன்; (எ-று.)

கரையழியும் வேலேநிகர் வெகுளியன் - அளவிடமுடியாத கோபத்தை யடைந்தவன். வெகுளிச்சுவை இச்செய்யுளிற் காணத்தக்கது. வீரியன்-கார்த்தவீரிய னென்பதன் நாமைகதேசம். மூன்றுமடியில் முரண்தொடை காண்க. கார்த்தவீரியன் தன் பிதாவைக் கொன்றதனுல் அவனைப் பரசுராமன் கொன்றுனென்பது, சரிதம். (148)

**141.—'விரதந்தவறுவதைவிடக் குருவுடன்பொருதுமாண்டாலும் நன்று' என்று வீடுமனும் பொருமாறு தேரிலேறுதல்.**

**வெருவுடன்றொழுதுகங்கைமைந்தனடி வீழவுஞ்சினமிகுத்தலால்**
**உருவுடன்றனியிருக்குநீள்விரதம் வழுவிநானரகமுறுவதின்**
**குருவுடன்பொருதுமடிதனன்றென நினைந்துதாலமுயர்கொடியினன்**
**செருவுடன்றிடுதலுன்னியேறின னமைந்துநின்றதொருதேரின்மேல்.**

(இ-ள்.) கங்கைமைந்தன்-கங்காதேவியின்குமாரனான வீடுமன், வெருவுடன்-அச்சத்துடனே, தொழுது-வணங்கி, அடி வீழஉம்-(தன்) பாதத்தில் வீழ்ந்து வேண்டவும்,—(பரசுராமன்), சினம்-(தன்) வெகுளியை, மிகுத்தலால் - மிகுதியாகக் கொண்டிருந்ததனால்,—'உருவுடன்-(பிறருக்கு) அச்சந்தோன்றும் நிலையுடனே, தனி இருக்கும்-ஒப்பற்றுள்ள, நீள் - சிறந்த, விரதம் - நோன்பை, நான்-, வழுவி-தவறி, நரகம் உறுவதின்-நரகத்தை யடைவதைக் காட்டிலும், குருவுடன் பொருது மடிதல் நன்று-(என்) ஆசிரியனோடு போர்செய்து இறந்திடுதல் சிறந்ததாகும்,' என-என்று, தாலம் உயர் கொடியினன்- பனைமரத்தை யெடுத்து (த் தூக்கி)க் கட்டிய கொடியையுடையவனாகிய அந்த வீடுமன், நினைந்து—, செரு உடன்றிடுதல் உன்னி-போரினால் மாறுபடுதலைக் கருத்துட்கொண்டு, அமைந்து நின்றது ஒரு தேரின்மேல்-சித்தமாகஇருந்ததொரு தேரின்மேலே, ஏறினன்—; (எ - று.)—"உருவுட்காகும்" என்பது, தொல்காப்பியம். *(149)*

**142.—இதுவும் அடுத்த கவியும்-ஒரு தொடர்: பரசுராமனை வீடுமன் வென்றிட, அவ்விருவருந் தம்மிருப்பிடஞ்சேர்தலையும், அம்பை தவவனமடைந்தமையையும் கூறும்.**

**அவ்விராமனுமறுத்தமன்னவனு மையிரண்டுதினமிகலுடன்**
**வெவ்விராவுமொழியாதுவெஞ்சமர் விளைத்தகாலையடல்வீடுமன்**
**கைவிராயசிலையோடுமெய்வலி கவர்ந்துமுன்றளர்வுகண்டபோர்**
**அவ்விராமனிகரென்னுமாறிவனை யஞ்சிநின்றெதிரடர்க்கவே.**

(இ-ள்.) அ இராமன்உம்-(அம்பையை மணந்துகொள்ளுமாறு கூறிய) அந்தப்பரசுராமனும், மறுத்த மன்னவன்உம் - (அச்சொல்லை) மறுத்துக்கூறிய க்ஷத்திரியனான வீடுமனும், ஐ இரண்டு தினம்-பத்துநாள், இகலுடன்-மாறுபாட்டினுடனே, வெவ் இராஉம் ஒழியாது-கொடிய இரவிலுங்கூட நீங்காமல் [இரவும் பகலுமாக], வெம்சமர்-கொடியபோரை, விளைத்தகாலை—,—அடல் வீடுமன்-வலிமை பொருந்திய வீடுமன், முன்-முன்பு, கை விராய சிலையோடு-கையிற் பொருந்திய வில்லின்மூலமாக,மெய் வலி கவர்ந்து-(அந்தப் பரசுராமனுடைய) உடல்வலிமையைப் பறித்துக்கொண்டு, தளர்வுகண்ட-தளர்ச்சியையுண்டாக்கிய,போர்-போரில் வல்ல, அ இராமன் நிகர்-அந்தத்தசரதராமன் நிகராவான், என்னும் ஆறு-என்று (கண்டவர்) சொல்லுமாறு, (அப்பரசுராமன்

வலிமையைக் கவர்ந்திடப்பிறகு அவ்விராமன்),—இவனை-இந்த வீடுமனை, எதிர் அடர்க்க அஞ்சிநின்று-எதிர்த்துப் பொருதற்கு அச்சமடைந்து நின்று,—(எ-று.) "ஓடி...ஊர்புகுந்தனன்" (143) என்று தொடரும்.

தசரதராமன் சிவதனுசையொடித்துச் சீதையை மணந்து கொண்டு அயோத்திக்கு வரும் நெறியிலே பரசுராமன் எதிர்ப் பட்டு அவ்விராமபிரானை வலுவிற்போருக்கு அழைக்க, அவன் அந்தப் பரசுராமனை வில்லின்மூலமாக வலிமையைக்கவர்ந்து தளர்வுறச் செய்தமை இராமாயணத்திற் பிரசித்தம். (150)

**143.** ஓடிமீளமழுமேவுபாணிதன தூர்புகுந்தனனுவந்துபல்
கோடிபேரரசர்துதியெடுக்கநதி குமரனுந்தனகர்குறுகினன்
நாடிமாலையிடவந்தகாசிபதி நல்குமொல்குமிடைநவ்வியும்
வாடிவாடியினியமையுமென்றுதவ வனமடைந்தனண்மடங்கியே.

(இ - ள்.) ஓடி-(புறங்கொடுத்து) விரைந்துசென்று, மீள - மீண்டும், மழு மேவு பாணி - பரசுபொருந்தியகையையுடைய பரசு ராமன், தனது ஊர் புகுந்தனன்—: நதிகுமரன்உம்-கங்காநதியின் குமாரனாகிய வீடுமனும்,—பல் கோடி பேர் அரசர்—, உவந்து-மன மகிழ்ந்து, துதி எடுக்க-தோத்திரஞ் செய்ய, தன் நகர் குறுகினன்-தன் இருப்பிடஞ்சேர்ந்தான்: நாடி-விரும்பி, மாலை இட-மணமாலை யைச் சூட்டுமாறு, வந்த—, காசிபதி நல்கும் ஒல்கும் இடை நவ்வி உம்-காசியரசன்பெற்றதளர்ந்துமெலியும் இடையையுடைய மான் போன்றவளான அம்பையென்பவளும், வாடி வாடி-மிகவும் மனந் தளர்ந்து, இனி அமையும்-இனி (த் தவஞ்செய்தலே எனக்கு) அடுக்கும், என்று-, மடங்கி-(மணஞ்செய்துகொள்ளும் முயற்சியி னின்று) மீண்டு, தவ வனம் அடைந்தனள்-தபோவனத்தைச் சேர்ந்தாள்; (எ - று.)

அமையும்-மணஞ்செய்துகொள்ள முயல்வது போதும் எனி னுமாம். வாடிவாடி-மிகுதிப்பொருளது. மழுமேவுபாணி-அன் மொழித்தொகை. (151)

**144.—இந்தவீடுமனை வெல்லுஞ் சூரனுவேனென்று உறுதிகொண்டு அந்தஅம்பை பெருந்தவமியற்றுதல்.**

வெம்பையாட்ரவமாயவென்றிடு விகங்கராசனெனவீடுமன்
தும்பையாட்மரின்மாயவெல்லவல சூரனுகுவனியானென
வம்பைமோதுமுலைவம்பைவீசுகுழல் வம்பைமன்னுமெழில்வரிகொள்கூர்
அம்பைமானும்விழியம்பையென்பவளு மரியமாதவமியற்றினள்.

(இ - ள்.) வெம் பை ஆடு அரவம்-கொடியபடத்தையெடுத்து ஆடுகின்ற சர்ப்பம், மாய-ஒடுங்கும்படி, வென்றிடு - சயிக்கின்ற, விகங்கராசன் என-பட்சிகட்கு அரசனான கருடன்ஒப்புஆகுமாறு, தும்பை ஆடு அமரின் வீடுமன் மாய-தும்பைமாலைசூடிக்கொண்டு செய்யப்படுகின்ற போரிலே வீடுமன் உயிரிறக்கும்படி, வெல்ல வல-வெல்லும் வல்லமைபெற்ற, சூரன் ஆகுவன் யான்-சூரனு

வேன் யான், எனு-என்றுசொல்லி,—வம்பை மோதுமுலை-கச்சை மோதுகின்ற தனங்களையும், வம்பை வீசு குழல்-வாசனை வீசுகின்ற கூந்தலையும், வம்பை மன்னும் எழில்-புதுமைபொருந்திய அழகையும், வரிகொள் கூர் அம்பை மானும் விழி-செவ்வரிபரந்த கூரிய அம்பையொத்த கண்களையுமுடையவளான, அம்பை என்பவளும்—, அரிய மாதவம்-அருமையான பெருந்தவத்தை, இயற்றினாள்-செய்தாள்; (எ-று.)

விஹங்கராஜன்-வடசொற்றொடர். வம்புஎன்பது வெவ்வேறு பொருளில் வந்தது-சொற்பின்வருநிலை. அரவம்விடுமனுக்கும், விகங்கராசன் அம்பைக்கும் உவமை. தும்பை—பொரச்செல்வோர் தரிக்கும் மாலை. (152)

## 145.—அம்பையின் பெருந்தவம்.

**தாளிரண்டினிலோர்தாண்மடக்கியொரு தாளில்வைத்தமைசமைத்தபொன்**
**தோளிரண்டினையுமீதெடுத்துநனி தொழுதியக்கிதுணையடியிலே.**
**வாளிரண்டனையவிழிமலர்த்திநிறை வாவிநீரினிடைவானுளோர்**
**நாளிரண்டதனொடையிரண்டுமொரு நாளெனும்படிநடக்கவே.**

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) தாள் இரண்டினில்-இரண்டுபாதங்களுள், ஓர் தாள் மடக்கி-ஒருதாளைமடக்கி, ஒரு தாளில் வைத்து-மற்றொருதாளின் மேல் வைத்துக்கொண்டு, அமை சமைத்த பொன் தோள் இரண்டினைஉம்-மூங்கிலையொத்த அழகியதோள்கள் இரண்டையும், மீது எடுத்து-மேலே தூக்கியவண்ணம், நனி தொழுது-நன்குகுவித்து, இயக்கி துணை அடியிலே - தருமதேவதைபோன்றதன் இரண்டு பாதங்களிலே, வாள் இரண்டு அனைய விழி மலர்த்தி - இரண்டு வாட்படை போன்ற(தன்) இரண்டு கண்களையும் மலரவைத்து, நிறை வாவிநீரின் இடை-நிறைந்துள்ள வாவியின் நீரிலே, வான் உளோர் இரண்டு நாள் அதனொடு ஐ இரண்டுஉம்-தேவர்களின் பன்னிரண்டுநாள்கள் [பன்னிரண்டுவருஷங்கள்], ஒருநாள் எனும் படி நடக்க - ஒருநாள் போலக்கழிய,—(எ - று.)—"அருந்தவ முயன்றபின்" (146) என்று தொடரும்.

அம்பை பெருந்தவமுயன்ற தன்மை கூறியது, இது. மானிடவர்க்கு ஒருவருடம் தேவர்கட்கு ஒருநாளெனப்படும். இயக்கி - ஆகுபெயர். இயக்கி-தருமதேவதை அல்லது காளி என்பாருமுளர். இச்செய்யுளிலுள்ள வினையெச்சங்களுக்கெல்லாம் அடுத்த செய்யுளில் அம்பையைக் குறிக்குஞ் சொற்றொடர் எழுவாயாகும். (153)

## 146.—அம்பை சிகண்டியாதல்.

**முயலிலாமதிமுகத்தினுளொருவர் முயலருந்தவமுயன்றபின்**
**புயலிலாதமினலொத்தமெய்யிலெரி புரியியக்கிதனதருளினுன்**
**மயிலனுட்டனதுவடிவகற்றியிகல் யாகசேனனதுவயினிடைச்**
**செயலிலாறுமுகனிகரெனத்தகுசி கண்டியாயினள்சிறக்கவே.**

(இ-ள்.) ஒருவர் முயல் அருந் தவம்-ஒருத்தர் முயன்று செய்வதற்கு அருமையான பெருந்தவத்தை, முயன்றபின் - முயற்சியோடு செய்தபின்பு,-முயல் இலா மதிமுகத்தினாள்-முயற்கறையில்லாத சந்திரன் போன்ற முகத்தையுடைய, மயில் அனாள்-மயில்

போன்ற சாயலையுடைய அம்பை,—புயல் இலாத மினல் ஒத்த மெய்யில்-மேகத்திலிராத [தனிப்பட்டுள்ள] மின்னலையொத்த உடம்பில், ஒளி புரி-ஒளிமிக்க, இயக்கி தனது-தருமதேவதையின், அருளினுன்-கருணையினால், தனது வடிவு அகற்றி - தன்னுடைய அந்தவடிவத்தை யொழித்து, இகல் யாகசேனனது வயினிடை-வலிமையுடைய யாகசேனனுடைய இடத்திலே, செயலில்-(தன்னுடைய) வீரச்செய்கையினால், ஆறுமுகன் நிகர் என தகு-அறுமுகக்கடவுள் ஒப்பாவனென்று சொல்லத்தகுமாறு, சிறக்க-சிறப்புற்றிருக்க, சிகண்டி ஆயினள்-சிகண்டியானாள்; (எ - று.)

அம்பை தவஞ்செய்து அத்தவத்தின்பயனால் வீடுமனைக் கொல்லுமாறு அந்த வடிவத்தை நீங்கிச் சிகண்டி யென்றபேர் பெற்றுத் தேவசேனாபதியான அறுமுகக்கடவுளுக்கு ஒப்பான பராக்கிரமச் செயலுடனே துருபதனிடத்துத் தோன்றினளென்க. யாகசேனன்-துருபதன். முயல்-முயல்வடிவாகத் தோன்றுங் களங்கத்துக்கு, ஆகுபெயர். முயலிலாமதி, புயலிலாத மினல்-இல்பொருளுவமை. வீடுமன்பரசுராமனோடுபோர்புரிந்ததுமுதலியஇந்தச் சரித்திரம் பாலபாரதத்து இல்லை: வியாசபாரதத்திலும் உத்தியோக பருவத்தி லுள்ளது. மயலிலாடனது என்றும் பாடம். (154)

147.—விசித்திரவீரியன் இன்பமனுபவித்து, க்ஷயரோகத்தால் விண்ணுலகடைந்தமை.

மணிமு டிக்குரிய நிருப னுங்கடிகொண் மாதர் தங்களை மகிழ்ச்சியால்
அணிபெ றத்தழுவி யின்ப வேலையி னழுந்தி நாள்பல கழிந்தபின்
பிணிக ளுக்கரசெ னும்பெ ரும்பிணி பிணித்து வாழ்வினி நணித்தெனப்
பணிமு டிப்புவி யிரங்க வைகியொரு பற்றி லாதநெறி பற்றினன்.

(இ-ள்.) மணி முடிக்கு உரிய நிருபன்உம்-அழகிய கிரீடத்துக்கு உரியவனான விசித்திரவீரியனும், கடிகொள் - விவாகத்திற்கொண்ட, மாதர் தங்களை-(அம்பிகை அம்பாலிகை என்ற) மகளிரை, மகிழ்ச்சியால் - மனமகிழ்ச்சியோடு, அணி பெற தழுவி-அழகுபொருந்த ஆலிங்கனஞ் செய்துகொண்டு, இன்பம் வேலையின் அழுந்தி-இன்ப சமுத்திரத்திலே முழுகி, பலநாள் கழிந்தபின்-பல்நாள் நீங்கினபின், பிணிகளுக்கு அரசு எனும் - நோய்களுக்கு அரசனென்று சொல்லத்தக்க, பெரும் பிணி-கொடிய வியாதியினால், பிணித்து - கொள்ளப்பெற்று, இனி வாழ்வு நணித்துஎன-இனி மேலுலகவாழ்க்கை சமீபித்திட்டது என்று கருதி,பணி முடி புவி இரங்க-ஆதிசேஷனது சிரசிலேயுள்ள பூமியிலுள்ளார் இரக்கங்கொள்ள, வைகி-தங்கியிருந்து, ஒரு பற்று இலாத நெறி - பற்றைவிட்டு அடையப்படும் இடமான வானுலகத்தை, பற்றினன்-அடைந்திட்டான்; (எ - று.)

ராஜயக்ஷ்மா என்ற க்ஷயரோகம் மிகுபோகத்தால் விசித்திரவீரியனுக்குத் தோன்ற, அதனாலே யிறந்து வானுலகடைந்தனன் அந்த அரசனென்க. (155)

குருகுலச்சருக்கம் முற்றிற்று.

## இரண்டாவது
## சம்பவச்சருக்கம்

(கதாநாயகரான தருமன் முதலியோரின்) பிறவியைப்பற்றிக் கூறுஞ்சருக்கம் என்றுபொருள்படும். சம்பவம்=ஸம்பவம்: பிறத்தலென்று பொருள். இதில், விசித்திரவீரியனுடைய மனைவியரான அம்பிகை அம்பாலிகையர்பால் திருதராட்டிரனும் பாண்டுவும் தோன்றியதும், திருதராட்டிரன் மனைவியான காந்தாரியினிடத்தும் பாண்டுவின்மனைவியரான குந்திமாத்திரியரிடத்தும் துரியோதனன் முதலிய நூற்றுவரும் பஞ்சபாண்டவரும் தோன்றியதும், பாண்டு இறந்ததும், இம்மக்களின் வளர்ச்சியும் கூறப்படும்.

### 1.—கடவுள் வணக்கம்.

**அரிய கங்குலி னன்னைதன் வடிவுகொண் டலகையா கியநங்கை**
**பரிவு பொங்கவந் தெடுத்தணைத் துவந்துளம் பரிந்துடன் பாராட்ட**
**உருகு மாமுலைப் பாலுட னவளுயி ருண்டமு முருகார்மெய்**
**கரிய கோவலன் செய்யதாள் மலர்களென் கருத்தைவிட் டகலாவே.**

(இ-ள்.) அரிய கங்குலின்-(செறிந்த இருளால் இயங்குதற்கு) அருமையான இராப்போதில், அலகை ஆகிய நங்கை-(இயற்கையிற்) பேயான பெண், அன்னை தன் வடிவுகொண்டு-தாயின் வடிவைக்கொண்டு, பரிவு பொங்கவந்து-அன்பு பொங்கப்பெற்றவள் போன்று வந்து, எடுத்து—, அணைத்து-தழுவி,உவந்து-மகிழ்ந்து, உளம் பரிந்து-மனத்திலிரக்கங்கொண்டு, உடன் - அப்பரிவுடன், பாராட்ட-பாராட்டாநிற்க,—உருகும் மா முலைப்பாலுடன்-பெருகுகின்ற மிக்க முலைப்பாலுடனே, அவள் உயிர் உண்டு-அந்தப் பேய்ச்சியின் முலையையுண்டு,அமும்-அழுபவனான,முருகுஆர்-இளமை நிறைந்த, மெய்-உடல்படைத்த, கரிய - கருநிறமுள்ளவனான, கோவலன் - இடையனான ஸ்ரீகிருஷ்ணனுடைய, செய்ய தாள் மலர்கள்-செந்நிறமுள்ள தாமரைமலர்கள், என் கருத்தை விட்டு-, அகலா-(ஒருபோதும்) நீங்காது நிற்கும்; (எ - று.)

கோபாலனது திருவடித்தாமரை மலர்களையே அனவரதமுஞ் சிந்திப்பேனென்பதாம். பாலுண்பதென்ற வியாஜத்தினாற் பூதனையுயிரைத் திருமால் உண்டானென்க.

இதுமுதல் நாற்பத்திரண்டுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், ஈற்றுச்சீரொன்று காய்ச்சீரும், மற்றை நான்கும் விளச்சீருமாகிவந்த அறுசீராசிரியவிருத்தங்கள். (156)

### 2.—இறந்தமைந்தனுக்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்தபின், வீடுமன் வருந்துகையில், தாய் கூறத்தொடங்கல்.

**இறந்தமைந்தனுக்குரியதென் புலத்தவர்யாவருங்களிகூரச்**
**சிறந்தநான்மறைவிதியினு லுலகியல்செய்தபின்செமுந்திங்கள்**
**மறைந்தயாமினிநிகரெனக் குருகுலமன்மயக்குறுமெல்லை**
**அறந்தவாவகைதுறந்தவா னரசனுக்கன்னைமற்றிதுசொன்னுள்.**

(இ-ள்.) இறந்த-மைந்தனுக்கு-(க்ஷய ரோகத்தால்)இறந்திட்ட விசித்திரவீரியனுக்கு, உரிய - செய்யவேண்டிய சடங்குகளை,

தென்புலத்தவர் யாவர்உம் களி கூர-தென்திசையிலுள்ளவரான பிதிருதேவதைகள் எல்லாரும் மகிழ்ச்சிமிக, சிறந்த நான்மறை விதியினால்-சிறப்புற்ற வேதவிதிப்படி, உலகு இயல்-உலகில் நிகழும் இயல்பின்படியே, செய்தபின்—,—செழுந்திங்கள் மறைந்த யாமினி நிகர் என - விளங்குந்தன்மையுள்ள சந்திரன் மறையப்பெற்ற இரவு ஒப்புஎன்னுமாறு, குரு குலம் மன்-குருகுலத்தலைவனான வீடுமன், மயக்குஉறும் எல்லை-சோகமயக்கத்தை அடையும் போது,—அறம் தவா வகை-(பிதாவின் விருப்பத்தை நிறைவேற்றுதலென்ற) தருமம் தவறுதவாறு, துறந்த-(மண்பெண்ணாசைகளைத்) துறந்தவனான, வாள்-ஒளிபொருந்திய, அரசனுக்கு-வீடுமராசனுக்கு, அன்னை-சந்தனுவின் மனைவியான காளி, மற்று - பின்பு, இது-இவ்வார்த்தைகளை, சொன்னாள்—; (எ-று.)—அன்னை சொல்லியதை, மேலிருகவிகளிற் காண்க.

உரிய-பெயர்: பெயரெச்சமெனக்கொண்டு, உலகியல்-சடங்கு என்றுமாம். விசித்திரவீரியனிறந்த துயரினால் மயங்கும் வீடுமனுக்கு, சந்திரன் நீங்கியதனாலர்ன இருளினால் விளக்கமற்றிருக்கும் யாமினி உவமை. துறந்து வாழரசனுக்குஎன்றும்பாடம்.(157)

3.—இதுவும் அடுத்தகவியும் ஒருதொடர்: காளி கொழுந்தியரிடத்து மகவை யுண்டாக்குமாறு வீடுமனிடம் சொல்ல, வீடுமன் மறுத்துக்கூறலைத் தெரிவிக்கும்.

மைந்தகேட்டிநின்றுணைவன் வானடைந்தபின்மதிமுதலெனத்தக்க
இந்தமாமரபரும்பனிப் பகைச்சிரத்தெழிலியொத்ததுமன்னே
முந்தைநான்மறைமுதலிய நூல்களின்முறைமைநீயுணர்கிற்றி
எந்தநீர்மையினுய்வதென் றறிகிலேனிடரினுக்கிருப்பானேன்.

(இ-ள்.) மைந்த-குமாரனே! கேட்டி-கேட்பாய்: நின் துணைவன்-உனது உடன்பிறந்தான், வான் அடைந்தபின் - விண்ணுலகத்தை யடைந்தபின்பு, 'மதி முதல்-சந்திரனே குலமுதல்வன்', என தக்க-என்றுசொல்லுந் தகுதிபெற்ற, இந்த மா மரபு-இந்தச் சிறந்தவமிசமானது, (இடையருமைக்குக் காரணமான புதல்வரையில்லாமையால்), எழிலி சிரத்து-முகிலின்மேல், [மேகத்தினால் மறைக்கப்பட்ட என்றபடி],அரும் பனிபகை-சூரியனை, ஒத்தது—: நீ-, முந்தை நான்மறை முதலிய நூல்களின் முறைமைஉணர்கிற்றி-பழமையான நான்குவேதம் முதலிய நூல்களின் முறைமையையுணரவல்லாய்: எந்த நீர்மையின் உய்வது-எந்தமுறைமையினால்(இந்தக்குலம்)அழியாமல் நிற்கவல்லது?என்று-என்பதைப்பற்றி, அறிகிலேன்-அறியும்வல்லமையில்லேன்: (அதனால்), இடரினுக்கு-துன்பத்திற்கு, இருப்பு ஆனேன்-இருப்பிடமானேன்; (எ - று.)—மன்ஓ - அசை.

சூரியன் மேகத்தினால் மறைப்புண்டு மழுங்கிக்கிடப்பது போல, உன்தம்பி யிறந்தபின் இந்தச்சந்திரகுலம் மழுங்கிக்கிடக்கின்றதென்பது, முதலிரண்டடியின்பொருள். "அரும்பனியச் சிரத்து" என்ற பாடத்துக்கு-பனியைக்கொண்ட முன்பனிக்காலத்து, எழிலி [மேகத்தை] யொத்தது என்க: முன்பனிக்காலம் பனியால்மூடி மழுங்கியிருக்கு மென்க. அச்சிரம் - முன்பனிக்காலம். (158)

4. ஈண்டுதேவரநீதியிற் கொழுந்தியரெழின்மகப்பெறநின்னல்
வேண்டுமாலிதுதாயர்சொற் புரிதலின்விரதமுங்கெடாதென்ன
மூண்டுவானுருமெறிந்தபே ரரவெனமுரிந்திருசெவிபொத்தி
மீண்டுமாநதிவயின்மிசைப் புரியினெனென்விரதமுந்தபுமென்ருன்.

(இ - ள்.) '(இந்த எனது துன்பம்நீங்க), ஈண்டு - இப்போது, தேவரநீதியின்-தேவரனுல்[கணவனுடன்பிறந்தவனுல்]சந்ததியை வளர்த்தலாகிற ஓர் முறைமைப்படியே, நின்னல்—, கொழுந்தியர்-உடன்பிறந்தானுடையமனைவிமார், எழில் மக பெறவேண்டும்-அழகிய புத்திரரைப் பெறவேண்டும்: இது-இச்செயல், தாயர் சொல் புரிதலின்-தாய்சொல்லியதைச் செய்யுஞ்செயலாதலால், விரதம்உம் கெடாது-(பெண்களைமணவாமையாகிய) உன்னுடைய நோன்பும் கெட்டிடாது,' என்ன-என்றுகூற,—வான் உருமு-மேகத்தினின்று தோன்றும் இடி, மூண்டு—, எறிந்த-எறியப் பட்ட, பேர் அரவுஎன - பெரியசருப்பம்போல, முரிந்து-மனம் கெட்டு, இரு செவி பொத்தி-(தனது) இரண்டுகாதுகளையும் (கைகளால்) மூடிக்கொண்டு, மீண்டு மா நதி வயின்மிசை-மறுபடியும் சிறந்தநதியாகிய கங்கையின் வயிற்றிலே, புரியின்-விரும்பிச் சென்று பிறப்பதானுல், (அப்போது), என் விரதம்உம் தபும்-இந்த என்விரதமும் ஒழியும், என்ருன்-என்றுகூறினன், (வீடுமன்); (எ - று.)—ஆல்-அசை.

பூமியிற்சென்று பெண்ணின்பமற்றிருக்குமாறு சாபம்பெற்ற நான் பெண்ணின்ப மடைந்தால், இந்தப்பிறவியால் சாபத்தின் பயனை நுகராமையால், சாபத்தின்பயனைப் பெறுமாறு மீண்டும் பிறக்கவேண்டுவதே யென்றனன் வீடும னென்க. நெருப்பு தன் வெம்மையை விடுமானுல் அப்போது கங்கை மகன் தன்பிரதிஜ்ஞையைவிடுவான் என்று கூறியதாகப் பாலபாரதத்திலுள்ளது. தேவரநீதியென்பது-கணவனையிழந்து மகப்பெருத கைம்பெண்ணானவள் சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தேவரனேடு [தேவரன்-கணவனுடன் பிறந்தவன்] சேர்ந்து மகப்பெறலா மென்ற முறைமை. (*159*)

5.—பரசுராமனுல் க்ஷத்திரியகுலம் அற்றுப்போவதாயிருந்த நிலையில் முனிவரால் அரசமாதர் மகவைப்பெற்ருற்போற் செய்விப்பதே முறையென்று வீடுமன் தெரிவித்தல்.

மழுவெனும்படையிராமனுன் மனுகுலமடிந்துழியவர்தத்தம்
பழுதின்மங்கையர்முனிவர ரருளினுற்பயந்தனர்மகவென்பர்
எழுதுநன்னெறிமுறைமையின் விளைப்பதேயியற்கையென்றிருகையால்
தொழுதுசொன்னபின்மனந்தெளிந் தன்னையுந்தோன்றலுக்குரைசெய்வாள்.

(இ-ள்.) மழு எனும் படை இராமனுல் - மழுவெனப்படுகின்ற படைக்கலத்தையுடைய பரசுராமனுல், மனு குலம் மடிந்தஉழி - மனுவினிடத்துநின்றுதோன்றிய குலம் அழிந்திட்டபோது, அவர் தத்தம் பழுதுஇல் மங்கையர்-அந்தமனுக்குலத்தைச்சேர்ந்த மன்னவருடைய குற்றமற்ற மனைவிமார், முனிவரர் அருளினுல்-முனிச்

சிரேஷ்டரின் கருணையினால், மகவு பயந்தனர் என்பர் - மகவைப் பெற்றுக்கொண்டனரென்றுகூறுவர்: எழுது - (ஸ்மிருதிகளில்) எழுதியுள்ள, நல் நெறி முறைமையின்-நல்லவழியின் முறைமையினால், விளைப்பதுவ-(சந்ததியைக்)கிளைக்கச்செய்வதே, இயற்கை-இயற்கையானசெயலாம்: என்று—,இருகையால் தொழுது-(தன்) இரண்டுகைகளாலும் (தாயை) வணங்கி, சொன்னபின்-சொன்ன பிறகு,—மனம் தெளிந்து - மனந்தெளியப்பெற்று, அன்னை உம்-தாயும், தோன்றலுக்கு-விளங்குபவனான வீடுமனுக்கு, உரைசெய்வாள் - பின்வருமாறு சொல்பவளானாள்; (எ - று.)—அன்னை சொல்வதை, மேல் நான்குகவிகளிற் காண்க.

இருபத்தொருகால் அரசகுலத்தைக் கருவறுத்தபரசுராமனால் மனுகுலம் மடிவதாயிருந்த நிலையில், முனிவரரைக்கொண்டு அந்தக் குலத்தை அழிவுறாதவாறு மகவை அரசமகளிர் பெற்றதுபோலக் குலத்தையுண்டாக்குவதே முறையென்று வீடுமன் சொன்னாக, காளியும் மனந்தெளிந்து வீடுமனிடம் தான் கருதியதைக் கூறலாயினளென்க: க்ஷத்திரியமகளிர் காமவிச்சையினாலன்றிக் குல விருத்திக்காக முனிவரைச்சேர்ந்தது சாஸ்திரசம்மதமாதலால் கற்புக்கிழுக்காகாது ஆதலால், அவரை 'பழுதின் மங்கையர்' என்றது. (160)

**6.**—மூன்றுகவிகளால், காளி தன் பாலியசரிதைசொல்லி வியாசனாற் குலத்தையுண்டாக்கிக்கொள்ளக் கருதியமை கூறுகின்றாள் :—

பரிதிதந்தமாநதிமருங் கொருபகற்பராசரன்மகப்பேறு
கருதிவந்துகண்டென்னையு மெனதுமெய்க்கமழ்புலவையுமாற்றிச்
சுருதிவாய்மையின்யோசனைப் பரப்பெழுசுகந்தமுமெனக்கீந்து
வருதிநீயெனப்பனியினுன் மறைத்தொருவண்டுறைக்குறைசேர்ந்தான்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பரிதி தந்த மா நதி மருங்கு - சூரியன்பெற்ற சிறந்த நதியாகிய யமுனையினருகே, ஒருபகல்-ஒருநாள், பராசரன்-பராசரனென்றமுனிவன், மக பேறு கருதி - ஒருமகனைப்பெறுதலையெண்ணி, வந்து—, என்னை உம் கண்டு-என்னைப்பார்த்து, எனது மெய் கமழ் புலவைஉம் மாற்றி-எனது உடம்பிலிருந்து வீசுகின்ற புலால் நாற்றத்தையும் போக்கி, சுருதி வாய்மையின் - வேதம் போன்ற (தனது) உண்மைவாக்கினால், யோசனை பரப்பு எழு சுகந்தம்உம்-யோசனை யகலம் வீசுகின்ற நறுமணமும், எனக்குஈந்து-எனக்குக்கொடுத்து, நீ வருதி என-நீஇங்குவருக என்று (என்னைத்தன்னருகு) அழைத்து, பனியினால் மறைத்து-பனியினால் (பிறருக்குத் தெரியாதவாறு) மறையும்படிசெய்து, ஒரு வள் துறை குறை-ஒருவளப்பமுள்ள நீர்இறங்குதுறையோடுகூடிய திட்டில், சேர்ந்தான்-(என்னுடன்) கலந்தான்; (எ - று.)

மச்சத்தின்வயிற்றிற் பிறந்ததனால் மச்சகந்தியாயிருந்த என்னைப் பராசரன் யோசனகந்தியாக்கி, என்னை யமுனைத்திட்டிற் கூடினனென்பதாம். அத்தீவு கருநிறமுள்ளது ஆதலால், 'க்ருஷ்ணத்வீபம்' எனப்படும்: அந்தத்தீவில் தோன்றியதனால், வியாசர் 'க்ருஷ்ணத்வைபாயனர்' எனப்படுவர். (161)

7. முரணிறைந்தமெய்க்கேள்வியோ னருளினுன்முஞ்சியும்புரிநூலும்
இரணியஞ்செழுங்கொழுந்துவிட் டனவெனவிலங்குவேணியுந்தானும்
தரணியெங்கணும்வியாதனென் றுரைகெழுதபோதனமுனியப்போது
அரணியின்புறத்தனலென வென்வயினவதரித்தனனம்மா.

(இ-ள்.) முரண் நிறைந்த-வலிமை மிகுந்த, மெய் கேள்வியோன்-உண்மையான நூற்கேள்வியையுடையவனான அந்தப்பராசரனது, அருளினால்-கருணையினால், முஞ்சிஉம்-இடையிற்கட்டிய முஞ்சிப்புல்லினாலாகிய நாணும், புரி நூல்உம்-வெண்புரி நூலும், இரணியம் செழு கொழுந்து விட்டன என இலங்கு வேணிஉம்-சுவர்ணம் செழுமையோடு கொழுந்துவிட்டெரிகின்றன என்று சொல்லும்படி விளங்குகின்ற ஜடையும், (ஆகிய இவற்றுடனே), தான்உம்-தானுமாக, தரணி எங்கண்உம்-பூமிமுழுவதிலும், வியாதன் என்று-வ்யாஸனென்று பேர்சொல்லப்பட்டு, உரை கெழு-கீர்த்தி விளங்கிய, தபோதனமுனி-தவத்தையேசெல்வமாகக் கொள்ளும் முனிவன், அப்போது—, அரணியின் புறத்து அனல் என-அரணிக் கட்டையின்வெளியிலே (அதனிடத்தினின்று) அனல்தோன்றுவது போல, என் வயின்-என்னிடத்தினின்று, அவதரித்தனன்-; (எ-று.)

காளிவயிற்றினின்று வெளிப்பிறந்த வியாசனுக்கு, அரணிக் கட்டையினின்றுதோன்றிய அனல் உவமையாகும். அரணி-தீக்கடைகோல். அம்மா-வியப்பிடைச்சொல்: பிறக்கும்போதே பிரமசாரியர்க்குரிய வேஷத்துடனே அத்துணைவளர்ந்த புதல்வனாகத் தோன்றியமைபற்றி வியந்தவாறு. (162)

8. சென்னியாலெனைவணங்கியா தொருபகற்சிந்திநீசிந்திக்கும்
முன்னியானருகுறுவலென் றுரைசெயமுனிமகன்முனிமீளக்
கன்னியாகெனவிதித்துடன் கரந்தனன்கையறுகனிட்டன்றன்
பன்னியானவரிடத்தினி லவன்வரிற்பலித்திடுநினைவன்றே.

(இ-ள்.) முனிமகன்-அந்தப்பிறந்த ரிஷிகுமாரன், சென்னியால்-(தனது) சிரசினால், எனை வணங்கி-என்னைப்பணிந்திட்டு, 'யாது ஒருபகல் சிந்தி-(நான் வரவேணுமென்று) ஏதேனும் ஒரு பகலிலே (நீ என்னைக்) கருதுவாய்: நீ சிந்திக்கும் முன்-நீ கருதுவதற்கு முன்னம், யான் அருகு உறுவல்-நான் (உன்) சமீபத்திலே வந்து சேர்வேன்,' என்று-, உரைசெய-சொல்ல, முனி-பராசர முனிவன், 'மீள-மறுபடியும், கன்னி ஆக-கன்னிகையே யாகுவாய்,' என—, விதித்து-கட்டளையிட்டு, உடன்-மகனுடனே, கரந்தனன்-மறைந்திட்டான்: கை அறு-(கணவனையிழந்ததனாலான சோகத்தினால்) செயலற்ற, கனிட்டன் தன் பன்னி ஆனவரிடத்தினில்-(உன்) இளையோனுடைய பத்தினிமாரானவர்களிடத்தில், அவன் வரில்-அந்த வியாசன் வருவனேயானால், நினைவு-(என்) எண்ணம், பலித்திடும்-பயன் விளைத்திடும்: (எ-று.)—அன்றே-தேற்றம். அன்றேபலித்திடும்-அன்றைக்கே பலிக்குமெனினுமாம். (163)

**9.—தன் நினைவைக்கூறிய காளி வீடுமனதுஉடன்பாட்டைப்பெற்று வியாதனைச் சிந்தித்து வரச்செய்தல்.**

**எனக்குமைந்தகேணினைவிதுன் றுணைவனென்னேவலுமருனிவ்வாறு**
**உனக்குநெஞ்சுறவருங்கொலோ வறிகிலேனுண்மைநீயுரையென்ன**
**மனக்கிசைந்ததென்றவன்வியந் தேகலும்வழுவறமனஞ்செய்யக்**
**கனக்கருங்குழன்மகிழ்வுற முதற்பெறுகாதன்மைந்தனும்வந்தான்.**

(இ-ள்.) மைந்த - மைந்தனே! கேள் - கேட்பாயாக: எனக்கு நினைவு இது-எனக்கு எண்ணம் இங்ஙன்செய்வது:உன் துணைவன்-உன் சகோதரனாகிய அந்தவியாசன், என் ஏவல்உம் மருன்-என் கட்டளையையும் மறுத்துக்கூறான்: இ ஆறு-இந்தவழி, உனக்கு நெஞ்சுஉற வரும்கொல்ஓ-உன் மனத்துக்கு ஏற்றதாகத்தோன்றுகின்றதோ? இல்லையோ? அறிகிலேன்-(அதனை) யான் அறியேன்: நீ உண்மை உரை-நீ (உன்கருத்தை) மெய்ம்மையாகக் கூறுவாய், என்ன-என்று(அந்தக்காளி) வினவ,—'மனக்கு-(என்)கருத்துக்கு, இசைந்தது - (நீஇப்போதுகூறியது) உடன்பாடானதேயாகும்,' என்று—, அவன் - அவ்வீடுமன், வியந்து-(தாய்வார்த்தையை உடன்பட்டுக்) கொண்டாடி, ஏகலும் - சென்றவுடனே,—கனம் கருங் குழல்-மேகம்போன்ற கரிய கூந்தலையுடைய அந்தக்காளி, வழு அற-குற்றமில்லாமல், மனம் செய்ய-(அந்தவியாசனை) மனத்தினால்நினைக்க,—மகிழ்வுஉற - (அன்னாள்) மகிழ்ச்சியடையும்படி, முதல் பெறு காதல் மைந்தன்உம்-முன்னமேபெற்ற அன்பிற்கு உரிய புதல்வனாகிய வியாசனும், வந்தான்—; (எ - று.) (*164*)

**10.—வந்தவியாதன் தன்தாயை வணங்கிநிற்க, தாய் 'குருகுலத்தை யுண்டாக்குவாய்' என்ன, அவனும் இசைதல்.**

**தொழுதுநெற்றியில்விபூதியா லன்னைதன்றுணையடித்துகணீக்கி**
**விழுதுடைத்தனியாலென விருந்ததொல்வியாதனைமுகநோக்கிப்**
**பழுதுபட்டிக்குருகுல மீளநின்பார்வையாற்கடன்ஞாலம்**
**முழுதுமுய்த்திடும்மகவருளெனப் பெருமுனியுமக்குறைநேர்ந்தான்.**

(இ-ள்.) தொழுது-வணங்கி, நெற்றியில் விபூதியால் - (தன்) நெற்றியிலணிந்துள்ள விபூதியினாலே, அன்னை தன்-தாயினுடைய, துணை அடி துகள் நீக்கி-உபயபாதங்களிற் படிந்துள்ள தூளியைப் போக்கி, விழுது உடை தனி ஆல் என இருந்த தொல் வியாதனை - (தன்னுடைய தொங்குகின்ற சடைமுடியினால்) விழுதைக் கொண்ட ஒப்பற்ற ஆலமரம்போல இருந்த பழமையான வியாச முனிவனை, முகம் நோக்கி-முகத்தைப்பார்த்து, 'இ குருகுலம் பழுதுபட்டது-இந்தக் குருகுலமானது கேடு அடைந்திட்டது: மீள-அந்தப் பழுதுநீங்கும்படி, நின் பார்வையால் - உன்னுடைய (கருணை கொண்ட) பார்வையினாலே,கடல் ஞாலம் முழுதும் உய்த்திடும்-கடலாற் சூழப்பட்ட பூமிமுழுவதையும் தாங்கவல்ல, மகவு-குமாரனை, அருள்—தந்தருள்வாய்,'என-என்று(தன்கருத்தை அந்தக்காளி) தெரிவிக்க,—பெரு முனிஉம்-பெருமைபெற்ற முனிவனாகிய அந்த வியாசனும், அ குறை நேர்ந்தான்-அந்த வேண்டுகோளை நிறைவேற்றுமாறு ஒப்புக்கொண்டான்; (எ-று.)

"ப்ரணமலக்நேந லலாட பஸ்மநா-ப்ருசம் பவித்ரீக்ருத பாத பங்கஜா" என்று பாலபாரதத்தில்வருதற்குஏற்ப, 'நெற்றியில்விபூதி யால் அன்னை தன்றுணையடித்துகளீக்கி' என்றார்: நெற்றிவிபூதி யால் அன்னையின் பாதத்தைப் பரிசுத்தமாக்கினன் வியாசனென் பது, துணையடித்துகளீக்கி என்பதன் பொருள். (165)

**11.—காளி தன்மருமகளிரை வியாசமுனிவனுற் சந்ததிவளர்க்க இசைவித்தல்.**

அழைத்தமாமகனப்பொழு தவருழையணுகுவமெனப்போகத்
தழைத்தநெஞ்சினளனந்தர மிழந்தபொற்றாலிமாதரைத்தேற்றி
உழைத்ததுன்பமுமுன்னுளோர் பலருலகியற்கையுமுறக்காட்டி
இழைத்தபாவையினிருந்தவர்க் கந்நினைவிசையுமாறிசைவித்தாள்.

(இ-ள்.) அழைத்த மாமகன்-(தன் தாயினால்) அழைக்கப்பட்ட சிறப்புற்ற குமாரனான அந்த வியாசன், அப்பொழுது—, 'அவருழை அணுகுவம்-(உரிய பருவத்தில்) அந்த நங்கைமாருடன் சேருவோம்,' என-என்று சொல்லி, போக-போய்விட,—அனந்தரம்-பிறகு, தழைத்தநெஞ்சினள்-மகிழ்ச்சியால்மலர்ந்த மனத்தை யுடைய காளி,—இழந்த பொன் தாலி மாதரை - பொற்றாலியை யிழந்த மருமகளிரான அம்பிகை அம்பாலிகைகளை, தேற்றி-சமாதானப்படுத்தி, - உழைத்த துன்பம்உம்-(அப்போது) நேரிட்டுள்ள துன்பத்தையும், முன் உளோர் பலர் உலகு இயற்கைஉம்-முன்னுளோர்பலர் நிகழ்த்திய உலகோரியற்கையையும், உற-(அவர்கள் மனத்திற்) பதியும்படி, காட்டி - எடுத்துச்சொல்லி, இழைத்த பாவையின் இருந்தவர்க்கு - செய்யப்பட்டுள்ள பாவை போன்று நிச்சலமாக இருந்தவரான அந்த மகளிர்க்கு,அ நினைவு-(தான் கருதிய) அந்த எண்ணத்தை, இசையும் ஆறு-உடன்படும் படி, இசைவித்தாள்-செய்தாள்: (எ - று.)

கருத் தரிப்பதற்கு ருதுகாலமே ஏற்றதாகையால் அக் காலத்து வருவேனென்பதுபட வியாசமுனிவன் கூறினனென் பது 'அவருழையணுகுவ மெனப்போக' என்ற இடத்துப் பெறப் படும். (166)

**12.—அம்பிகை அச்சத்தினல் கண்மூடியவண்ணம் வியாசனைச் சேர்தல்.**

கனையுநீடிருளணைமிசை யிருவருங்கணவனைமறவாது
நினையுநெஞ்சினர்பயின்றுழிப் புன்மணநிறைந்தொளிகுறைந்தொல்கப்
புனையுமெய்யொடும்பொழுதொடும் புரிதவன்போதலுமிகவஞ்சி
அனையகாலையிலம்பிகை மலர்ந்திலளம்பகமொருக்காலும்.

(இ-ள்.) கனையும் நீடு இருள்-செறிந்த மிக்க இருட்போதிலே, அணைமிசை - படுக்கையின்மீது, இருவர்உம் - (அம்பிகை அம் பாலிகை என்ற) இரண்டு மாதரும், கணவனை—,மறவாது-;நினை யும் நெஞ்சினர்-நினைக்கின்ற நெஞ்சமுடையவராய், பயின்ற உழி-தங்கியபோது,—பொழுதொடு உம்-உரியசமயத்திலே, புல் மணம் நிறைந்து-புல்லின் மணம்மிக்கு, ஒளி குறைந்து ஒல்க புனையும் மெய்யொடு உம்-ஒளிகுறைந்து சுருங்கப் பூண்ட சரீரத்துடனே, புரி தவன்-தவம் புரிபவனாகிய வியாசமுனிவன், போதலும்-வரு தலும்,—மிக அஞ்சி-மிகவும் அச்சங்கொண்டு, அனைய காலையில்-

அப்போது, அம்பிகை-, அம்பகம்-(தன்) கண்கள், ஒருக்காலும்-சிறிதும், மலர்ந்திலள்-திறந்தாளில்லை; (எ-று.)

வியாசமுனிவன் வந்து சேரும்போது அம்பிகை அச்சத்தால் தன் கண்களை மூடியவண்ணமே யிருந்தனளென்பதாம். புன் மணம் நிறைந்து என்பதற்கு-கலவைச்சந்தனம் முதலியவற்றின் நன்மணமில்லாமல் என்றுகருத்துக்காணலாம்: "அஹ்ருத்யகந்தம்" என்று பாலபாரதத்திலுள்ளது. ஒளிகுறைந்தொல்கப் புனையுமெய் என்றது-உடம்பு விளக்கமுறாதவாறு மீசை தாடி உடல்மயிர் முதலியவற்றோடு கூடியவனாய் என்றவாறு. பொழுது-ருதுஸ்நாநம்செய்த பின் பன்னிரண்டுநாள்களுக்கு உட்பட்ட கருக்கொள்ளுதற்கு உரிய காலம். (167)

**13.—கருத்தோற்றுவித்து, வியாசன் விழிப்புலனில்லாமகவு உதிக்குமென்று தாயினிடம் தெரிவித்தல்.**

**பராசரன்றருமுனிநினைவொடு கருப்பதித்துமீளவுஞ்சென்று**
**நிராசைநெஞ்சினனவசரத் தவளிடைநிகழ்ந்தமெய்க்குறிதன்னால்**
**கராசலம்பதினுயிரம் பெறுவலிக்காயமொன்றினிற்பெற்றுஓர்**
**இராசகுஞ்சரம்பிறந்திடும் விழிப்புலனில்லைமற்றதற்கென்றான்.**

(இ-ள்.) பராசரன் தரு முனி-பராசரமுனிவன் பெற்ற புதல்வனான வியாசன், நிராசை நெஞ்சினன்-ஆசையற்ற மனமுடையவனாய், நினைவொடு-கருத்தோடு, கரு பதித்து-கருப்பத்தைப் பதியச் செய்து, மீள உம் சென்று-மீண்டும் தாயினிடம்போய், அவசரத்து-(தான்) சென்றபோது, அவளிடை-அந்த அம்பிகையினிடத்திலே, நிகழ்ந்த—, மெய் குறி தன்னால்-உடலினடையாளத்தினால், 'காயம் ஒன்றினில்-தன்னொருடம்பில், கராசலம் பதினாயிரம் பெறு வலி-பதினாயிரம் யானை கொண்டுள்ள பலத்தை, பெற்று-அடைந்து, ஓர் இராசகுஞ்சரம்-ஒரு ராஜசிரேஷ்டன், பிறந்திடும்-பிறப்பான்: அதற்கு - அந்த அரசமகவுக்கு, விழி புலன் இல்லை-கண்ணாகியபொறி இருக்கமாட்டாது,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

நிராசைநெஞ்சினன் என்றது - தாய்மொழியின்படி நடக்க வேணுமென்பதனால் அம்பிகையைச் சேர்ந்தானேயன்றிக் காம வசத்தனாய்ச் சேர்ந்தவனல்ல னென்பதைக் குறிப்பிக்கும். நிகழ்ந்த மெய்க்குறிதன்னால் என்றானென்க. இராசகுஞ்சரம் என்பதற்கு ஏற்ப அதற்கு என்று அஃறிணையாற் கூறினார். கராசலம்-கைம் மலை யென்பது பொருள்: அசலமென்பது கரமென்ற அடைமொழியின் குறிப்பால், யானை யென்று பொருள்படும். அவஸரம்-வேளையென்று பொருளுள்ள வடசொல்: பொற்றோ ளிராசகுஞ்சரம் எனவும் பாடம். (168)

**14.—அம்பாலிகையினிடம் பூமியைக்காக்கவல்ல ஒருபுதல்வனைத் தருமாறு வேண்டுதல்.**

**மீளவுந்தலைப்புதல்வனை நோக்கியேமிகமகிழ்வுருவன்னை**
**தூளவண்சடைத்தோன்றலம் பாலிகைசுதனொருவனை நல்க**
**நாளபங்கயப்பதியென மதியெனநலந்திகழ்கவிகைக்கீழ்**
**ஆளவம்புவியவனென நினைந்தினியளிக்கவென்றருள்செய்தாள்.**

(இ-ள்.) தலை புதல்வனை-(தனது) முதற்புதல்வனாகிய வியாச முனிவனை, மீளஉம் நோக்கி-மறுபடியும் பார்த்து, மிகமகிழ்வுஉரு-(பிறவிக்குருடனும் புதல்வன் பிறப்பானென்ற மொழியைக்கேட்டதனால்) மிக்க மகிழ்ச்சியடையாத, அன்னை-தாயான காளி,— 'தூள வள் சடை தோன்றல்-தூளியைக்கொண்ட வளப்பமுள்ள சடையையுடைய குமாரனே! அம்பாலிகை—, சுதன் ஒருவனை நல்க-ஒரு புத்திரனைப் பெறட்டும்: நாளம் பங்கயம் பதி என-(நீண்ட) தண்டையுடைய தாமரைக்குக் கணவனான சூரியன் போலவும், மதிஎன-சந்திரன் போலவும் (விளக்கமுடையவனாகித் தோன்றுகின்ற),—அவன் - அப்புதல்வன், அம்புவி - அழகிய பூமியை, நலம் திகழ்-அழகுவிளங்குகின்ற, கவிகைக்கீழ்-வெண்கொற்றக் குடையின் கீழ், ஆள-ஆட்சிசெய்க, என-என்று, நினைந்து—, இனி அளிக்க-இனி அளித்தருள்வாய்,' என்று—, அருள்செய்தாள்-கூறினாள்; (எ - று.)

இங்குப் பாலபாரதத்தில் "குமாரமுத்பாதய தத்ர தாத்ருசம்-விஜேஷ்யதே பூவலயம் புஜேந ய: [தன்தோள்வலியால் பூமண்டலத்தை வெற்றிகொள்ள வல்ல அப்படிப்பட்ட புதல்வனை அந்த அம்பாலிகையினிடம் உண்டாக்குக]" என்றுகூறியிருப்பது காண்க. தூள்-விபூதியுமாம். தூள-குறிப்புப்பெயரெச்சம். நல்க, ஆள-செயவெனெச்சமாகக் கொண்டு கூறினுமாம். (169)

**15.—தாய்சொற்படியே வியாசன் அம்பாலிகை மனை சேர அவள் அம்முனிவனைக் கண்டு கருத்தோன்றுமுன் நாணத்தாலும் அச்சத்தாலும் உடல் வெளுத்தல்.**

**கிளைத்திடுந்துகிர்க்கொடிநிகர் சடையவன்கேட்டுநுண்ணிடையேபோல்**
**இளைத்திடுங்கவின்மெய்யுடை யவள்மனையெய்தலுமிவனைக்கண்டு**
**உளைத்திடுங்கருத்துடன்வெரீஇ வருபயனொன்றையுநினையாது**
**விளைத்திடுங்கருவிளையுமுன் மடவரன்மெய்யெலாம்விளர்த்திட்டாள்.**

(இ - ள்.) கிளைத்திடும்-பலபிரிவுகொண்டு விடுகின்ற, துகிர்கொடி நிகர்-பவழக்கொடியையொத்த, சடையவன் - சடையையுடைய வியாசன், கேட்டு-(தாய்கூறியதைக்) கேட்டு; நுண் இடை ஏ போல் இளைத்திடும் கவின் மெய் உடையவள் - நுண்ணிய இடையேபோல இளைத்துள்ள அழகிய உடம்பைக்கொண்டவளான அம்பாலிகையின், மனை-வீட்டை, எய்தலும்-அடைந்தவுடனே,—இவனை-இந்த முனிவனை, கண்டு—, உளைத்திடும் கருத்துடன்-(நாணத்தினால்) வருந்திய மனத்துடனே, வெரீஇ-அச்சங்கொண்டு, வரு பயன் ஒன்றை உம் நினையாது-தன்க்கு நேரக்கூடிய பயனொன்றையும் எண்ணாமல், விளைத்திடும்-(அம்முனிவன்) உண்டாக்கப்போகின்ற, கரு-கருப்பம், விளையும் முன்-பலிப்பதற்குமுன்னமே, மடவரல்-அந்த அம்பாலிகையென்ற பெண், மெய்எலாம் விளர்த்திட்டாள்-உடம்புமுழுவதும் வெளுத்திட்டாள்; (எ-று.)

இங்குப் பாலபாரதத்தில் "விலோக்ய ஸாசைந முவாஹலஜ்ஜிதா-விபாண்டரத்வம் புரஏவ தௌஹ்ருதாத் [அந்த அம்பாலிகையும் இவனைப் பார்த்து நாணமுற்றுக் கருக்கொள்ளுமுன்னமே வெண்ணிறமுடைமையை மேற்கொண்டாள்]" என்று கூறியிருப்பது காண்க. (170)

**16.—அம்பாலிகையிடம் கருவளித்து வியாசன் தாயினிடத்துச் சென்று அருந்திறற்குமாரன் வெண்ணிறத்தோடு பிறப்பானென்றுதெரிவித்தல்.**

**அருந்தபோநிதியவளிடத் தினுங்கருவருளியக்கணத்தேகி**
**இருந்தவாறுதனன்னையோ டினிதுரைத்திமையவனெனச்சென்ருன்**
**பெருந்தராதலந்திறலினு லொருதனிபெறுமுறையவன்பெற்ற**
**முருந்தவாணகைமருட்சியால் விளர்த்திடுமுழுவதுமுட லென்றே.**

(இ-ள்.) அருந் தபோநிதி-அரியதவத்திற்கு உறைவிடமான அந்த வியாசன், அவளிடத்தின்உம்-அந்த அம்பாலிகையினிடத்திலும்,கரு அருளி-கருப்பத்தை யுண்டாக்கியருளி,—அ கணத்து-அந்த நொடியிலேயே, ஏகி-(தன்தாயிருந்த இடத்துச்) சென்று, 'பெருந் தரா தலம் - பெரியபூமியை, திறலினுல்-(தன்) வல்லமையினுல், ஒரு தனி பெறும் - தன்னந்தனியே பெற்று ஆளவல்ல, முறையவன் - முறைமையையுடைய குமாரன், பெற்ற முருந்தம் வாள்நகை-(தன்னை)ஈன்ற மயிலிறகினடிபோன்ற ஒளிபொருந்திய பற்களையுடையவளான தாயின், மருட்சியால் - மருண்டு உடல் விளர்த்த தன்மையால், உடல்முழுவதும் விளர்த்திடும் - உடல் முழுவதும் வெளுத்திருப்பான்,' என்றே—, இருந்த ஆறு (தான் சென்றபோது அம்பாலிகை) இருந்த வகையை, தன் அன்னையோடு-தன் தாயினிடம், இனிது உரைத்து-இனிதாகச்சொல்லிவிட்டு, இமையவன் என சென்ருன் - தேவன்போல மறைந்திட்டான்; (எ - று.) (171)

**17.—திருதராட்டிரனும் பாண்டுவும் பிறக்க, அவர்களைச் சத்தியவதி காணுதல்.**

**வேதபுங்கவன்கன்றுழி வலியுடைவிழியின்மைந்தனும்யாரும்**
**பாதபங்கயந்தொழத்தகுந் திறலுடைப்பாண்டுவென்பவன்ருனும்**
**பூதலம்பெருங்களிப்புறக் குருகுலம்பொற்புறப்பொழுதுற்றுச்**
**சாதராயினரவ்விரு மகவையுஞ்சத்தியவதிகண்டாள்.**

(இ-ள்.) வேதபுங்கவன்-வேதம்வல்ல அந்தவியாசன், அகன்ற உழி-சென்றிட்டபின், வலி உடை-(பதினுயிரம்யானை) வலியுள்ள, விழி இல் மைந்தன்உம்-கண்ணில்லாத குமாரனுகிய திருதராஷ்டிரனும், யார்உம் பாதபங்கயம் தொழ தகும்-எப்படிப்பட்ட பகைவரும் (தன்) பாததாமரையை வணங்கத்தக்க, திறல்உடை - வலிமையையுடைய, பாண்டு என்பவன் தான்உம்-பாண்டுவென்பவனும்,—பூதலம் பெருங் களிப்பு உற-பூமி பெருமகிழ்ச்சியடையவும், குருகுலம் பொற்புஉற - குருகுலம் அழகுறவும், பொழுது உற்று-(ஈனுங்) காலம் வரவே, சாதர் ஆயினர்-தோன்றினவரானுர்கள்: அ இருமகவைஉம்-அந்த இரண்டுபுத்திரரையும்,சத்தியவதி (அப்புத்திரரின் பாட்டியான) சத்தியவதியென்பவள், கண்டாள்-பார்த்தாள்; (எ-று.)

சத்தியவதியென்பதும்,சந்தனுவின் இரண்டாம்மனைவியாகிய யோசனகந்தியான காளிக்குஒருபெயர். புங்கவன்-புருஷசிரேஷ்டன். ஜாதர் - வடசொல். (172)

**18.—மீண்டும் காளி வியாசனை நினைத்து, வந்த அவனிடத்துத் தன் கருத்தைச்சொல்ல, அந்தரிஷியைக்கண்டு அஞ்சிய அம்பிகை தோழியை அணையிற்செல்ல ஏவுதல்.**

**காணலும்பெரிதுவகையற் றின்னமுங்கருதுதுமெனவெண்ணச்**
**சேணடைந்தமாமுனிவரன் வருதலுஞ்சிந்தனையுறச்சொல்ல**
**நாணலந்திகழம்பிகை யிடத்திவனண்ணலுமவளஞ்சிப்**
**பூணலம்பெறுதோழிமற் றொருத்தியைப்பூவணையணைவித்தாள்.**

(இ-ள்.) காணலும்-(அக்குழந்தைகளைக்) கண்டபின்பு, பெரிது உவகை அற்று-மிக்கமகிழ்ச்சியின்றி, 'இன்னமும்—, கருதுதும்-(நம்முதற் புதல்வனாகிய வியாசனை) நினைப்போம்', என-என்று (மனத்திற்) கருதி, எண்ண-(அவ்வாறே) நினைக்க, சேண் அடைந்த மா முனிவரன்-வெகுதூரத்துச்சென்றிருந்த சிறந்த முனிச்சிரேஷ்டன் [வியாசன்], வருதலும்-(தன்முன்) வந்தவுடனே, (அந்தக் காளி), சிந்தனை-(தன்) கருத்தை, உற சொல்ல-நன்குதெரிவிக்க,—(தன் தாயின் சொற்படியே), இவன்-இந்த வியாசமுனிவன், நாண் நலம் திகழ் அம்பிகையிடத்து-நாணின் நன்மை விளங்குகின்ற அம்பிகையென்பாளைச் சேரவேண்டுமிடத்திலே, நண்ணலும்-கிட்டவும்,—அவள்-அந்த அம்பிகை, அஞ்சி-அச்சங்கொண்டு, பூண் நலம் பெறு தோழி மற்று ஒருத்தியை-ஆபரணங்களினாலழகு பெற்ற (தன்னினும்) வேறான ஒரு தோழியை, பூ அணை அணைவித்தாள்-பூப்போன்ற மெல்லிய படுக்கையிலே சேருமாறு செய்தாள்; (எ-று.)

பூணலம்பெறு தோழி என்றதனால், அந்தப்பரிசாரிகைப் பெண் தன்னை யினிதாக அலங்கரித்துச் சென்றாளென்பது பெறப்படும்: பாலபாரதத்தில் "விதக்தனைபத்யவதீ ததந்திகம் யயௌ" என்று உள்ளது. (*173*)

**19.—அவளோடு இன்பந்துய்த்தபின் வியாசமுனி தாயினிடம் வருதல்.**

**வந்தகாலையின்மனங்கலந் தநங்கநூன்மரபின்மெய்யுறத்தோய்ந்து**
**சந்தனகருப்பரிமளத் தனதடந்தயங்குமார்பினின்மூழ்க**
**இந்திராதிபர்போகமுற் றிசைதலுமின்பமுற்றியபின்னர்**
**அந்தணாளனவ்விரவிடை மீளவந்தன்னையோடுரைசெய்வான்.**

(இ-ள்.) வந்த காலையில்-(அம்பிகையின்தோழி) வந்தபோது, மனம் கலந்து-மனம் (அவளிடம்) பொருந்தப்பெற்று, அநங்க நூல் மரபின்-காமசாஸ்திரத்திற்கூறிய முறைப்படி, மெய் - (அவளுடைய) உடலை, உற தோய்ந்து-நன்கு கலந்து,—சந்தன அகரு பரிமளம் தன தடம்-சந்தனக்குழம்பு அகில்தேய்வை இவற்றின் நறுமணம் பொருந்திய (அவளுடைய) கொங்கைத்தலம், தயங்கு மார்பினில்-விளங்குகின்ற(தன்) மார்பிலே, மூழ்க-அழுந்த, இந்திராதிபர் போகம் - தேவேந்திரராகிய தலைவர் நுகரும் காமவின்பத்தை, உற்று-அடைந்து, அந்தணாளன்-வியாசன், இசைதலும்-மனம் பொருந்தியிருத்தலும், இன்பம் முற்றியபின்னர்-அவ்வின்பம் பூர்த்தியாயினபின்பு, அ இரவிடை-அந்த இரவில், மீள வந்து-மீளவும் வந்து, அன்னையோடு-தாயுடனே, உரை செய்வான்—; (எ - று.)

முதன் மூன்றடிகள்-தோழிப்பெண் அந்தமுனிவன் மனத்தைக் கவர, அவன் பரவசனுகி இன்பமனுபவித்த தன்மையை விவரிக்கும்: 'கீதத்தினுல் மான் வசப்படுவதுபோல அந்தப்பரிசாரிகைப் பெண்ணுல் ஐம்புலனை வென்ற அந்த மஹர்ஷி வசீகரிக்கப்பட்டான்'' என்று பாலபாரதம் கூறும். (174)

**20.—நிகழ்ந்தசெய்தியைத்தாய்க்குச்சொல்லி, 'யமனமிசமாகப்பிறக்கும் இம்மகப்பெயர் விதுரன்' என்றும் 'இனிப்புத்திரர்பொருட்டு என்னைநினையற்க' என்றும்கூறி வியாசன் செல்லுதல்.**

**அம்பிகைக்கொடிதோழியைவிடுத்தன ளவள்புரிதவந்தன்னுல்**
**உம்பரிற்பெறுவரத்தினுற்றருமன் வந்துதித்திடும்பதம்பெற்ருள்**
**வெம்படைத்தொழில்விதுரனென்றவன் பெயர்மேலினிமகவாசை**
**எம்புணர்ப்பினுனெழிகெனவனநெறி யேகினன்விடைகொண்டே.**

(இ - ள்.) 'அம்பிகை கொடி - அம்பிகையென்ற பெண், தோழியை விடுத்தனள்-(என்னேடு சேரும்படி தன்) தோழியையனுப்பினுள்; அவள்—, புரி-(முன்) செய்துள்ள, தவந்தன்னுல்- தவத்தினுலும், உம்பரில் பெறு வரத்தினுல் - தேவர்களிடத்துப் பெற்ற வரத்தினுலும், தருமன் வந்து உதித்திடும் பதம் பெற்ருள்-(தன்வயிற்றிலே) அறக்கடவுளான யமன் வந்துதோன்றும் பதவியைப் பெற்ருள்: அவன்பெயர்—,—வெம் படை தொழில் - கொடிய படைக்கலத்தொழிலிலேவல்ல, விதுரன் என்று-விதுரனென்பது: இனிமேல்-, எம் புணர்ப்பினுன்-எம்முடைய சம்பந்தத்தினுல், மகவு ஆசை-குழந்தையைப்பெறுதலில் ஆசையை, ஒழிக-,' என-என்று சொல்லி, விடைகொண்டு-(தாயிடம்) விடைபெற்றுக்கொண்டு, (அந்தவியாசன்), வனம் நெறி ஏகினன் - காட்டுவழியே சென்ருன்; (எ - று.)

ஆணிமாண்டவ்யமுனிவனதுசாபத்திற்கு விஷயமான யமன், விதுரனென்று இந்தப்பரிசாரிகைப் பெண்ணுக்குப் பிறக்கப் போகிருனென்று வியாசமுனிவன் கூறியதாகப் பாலபாரதத்து உள்ளது. (175)

**21.—மூன்றுபுத்திரரும் பலகலைகளையும் வீடுமனிடம் கற்றல்.**

**மருவருங்குழற்ருசிபெற்றெடுத்தவிம் மைந்தனுமுதற்பெற்ற** தோழி
**இருவருங்குருகுலப்பெருங்கிரிமிசை யிலங்குமுக்குவடென்னப்**
**பொருவருந்திறற்படைகளுங்களிறுதேர் புரவியும்புவிவேந்தர்**
**வெருவரும்படிபலகலைவிதங்களும் வீடுமனிடங்கற்ருர்.**

(இ - ள்.) மரு வரும் குழல் - நறுமணம்பொருந்திய கூந்தலையுடைய, தாசி-பரிசாரிகைப்பெண், பெற்று எடுத்த—, இ மைந்தன்உம்-(விதுரனென்ற) இந்தப்புதல்வனும், முதல் பெற்ற இருவர்உம்-முன்னமே அம்பிகை அம்பாலிகைகளாற் (பெறப்பட்ட) திருதராட்டிரன் பாண்டு என்ற இரண்டு புத்திரரும், குருகுலம் பெருங்கிரிமிசை-குருகுலமாகிய பெரிய மலைமீது, இலங்கும் முக்குவடுஎன்ன-விளங்குகின்ற மூன்றுசிகரம்போல(த்தோன்றியவண்ணம்),—பொரு அரு திறல் படைகள்உம் - ஒப்பற்றவலிமையையுடைய [வலிமைகொண்டு பயன்படுத்தக்கூடிய] படைக்கலங்களையும், களிறு தேர் புரவிஉம்-யானை இரதம் குதிரை என்ற இவைகளையும், புவிவேந்தர் வெருவரும்படி-பூமிக்குத்தலைவரான அரசர்

அஞ்சும்படி, பலவிதம் கலைகள்உம்—, வீடுமனிடம்—, கற்ருர்—; (எ-று.) (176)

**22.—வீடுமன் நல்லநாளில் திருதராட்டிரனுக்கு முடிசூட்டி, பாண்டுவைச் சேனுபதியும் விதுரனை அமைச்சனுமாக வைத்தல்.**

**ஆனதிக்கிருநாலும்வந்தடிதொழ வம்பிகைமகன்றன்னை**
**வானதித்திருமகனெருதினத்தினின் மங்கலமுடிசூட்டிப்**
**பானிறத்திறற்பாண்டுவேசேனையின் பதிமுழுமதிமிக்க**
**கானிறத்தொடைவிதுரனேயமைச்சனிக் காவலற்கெனவைத்தான்.**

(இ - ள்.) வான் நதி திரு மகன் - கங்காநதியின் புத்திரனுகிய வீடுமன்,— ஒரு தினத்தினில்-ஒப்பற்ற சிறந்த நாளிலே, ஆன-பொருந்திய, திக்கு இரு நால்உம் - எட்டுத்திக்கிலுள்ளவரும், வந்து—, அடி தொழ-அடிதொழுமாறு, அம்பிகை மகன் தன்னை-அம்பிகையின் குமாரனுன திருதராட்டிரனை, மங்கலம் முடி சூட்டி-மங்களமாகிய ராஜகிரீடத்தைக் கவித்து, 'இ காவலற்கு-இந்தத் திருதராட்டிரமகாராஜனுக்கு,—பால் நிறம் திறல் பாண்டுஏ-பால் போன்ற வெண்ணிறத்தையும் பராக்கிரமத்தையுமுடைய பாண்டு வென்பானே, சேனையின் பதி-சேனுபதியாவன்: முழு மதி மிக்க - நிரம்பிய புத்தியினுல் மேம்பட்ட, கான் நிறம் தொடை விதுரன்ஏ-நறுமணத்தையும் (கண்கவரும்) நிறத்தையுமுடைய மாலைசூடிய விதுரனென்பானே, அமைச்சன்-,' என-என்று, வைத்தான்-ஏற்படுத்தினுன்; (எ - று.)

திருதராட்டிரன் முடிசூட்டப்பட்டானுயினும், கண்ணில்லாதவனுதலால், சேனுபதியான பாண்டுவே ராஜாவாக ஆண்டனனென்று, வியாசபாரதம் கூறும். (177)

**23.—வீடுமனேவலினுல் தூதர்போய்க் காந்தாரபதியைக்கண்டு எமது அரசனுக்கு நின்கன்னியைத் தருகென, அவனும் இசைதல்.**

**நதியளித்தவனேவலிற்றூதர்போய் நயந்துடன்காந்தார**
**பதியளித்தமெய்க்கன்னியைத்தருகபூ பதிக்கெனமணநேர்ந்தார்**
**மதியளித்ததொல்குலத்தவன்விழியிலா மகனெனத்தமர்சொல்ல**
**விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள்வட மீனெனத்தகுங்கற்பாள்.**

(இ-ள்.) நதி அளித்தவன் - கங்காநதி பெற்ற புதல்வனுன வீடுமனுடைய, ஏவலின்-கட்டளையினுல், தூதர்—, உடன் - உடனே, போய் - (காந்தாரதேசத்தை) அடைந்து, 'காந்தாரபதி அளித்த மெய் கன்னியை-காந்தார தேசத்துக்குத் தலைவனுன சுபலன்பெற்ற நல்ல வடிவையுடைய காந்தாரியை, பூபதிக்கு தருக-(எமது) அரசனுக்குத் தருக,' என-என்று, நயந்து-இனிது பேசி, மணம் நேர்ந்தார்-(தம்மரசன் அன்னுளை) மணஞ்செய்து கொள்ள உடன்பட்டிருப்பதைத் தெரிவித்தனர்: 'மதி அளித்த தொல் குலத்தவன்-சந்திரன் தோற்றுவித்த பழையகுலத்திலே தோன்றின திருதராட்டிரன், விழி இலா மகன்-கண்ணில்லாதமகனுவான்', என-என்று, தமர்-சுற்றத்தார், சொல்ல—,—'விதி-கடவுள், அளித்தது-கொடுத்ததாகும் (இந்தவரன்)', என்று—, வட மீன் என தகும் கற்பாள்-(வானத்து) வடக்கின்கண் நட்சத்திர வடிவமாக (க் கணவனைப் பிரியாது) நிற்கும் அருந்ததியைப்

போன்ற கற்பினையுடையளான அந்தக்காந்தாரி, உளம் மகிழ்ந்தனள்—; (எ - று.)

'மணநேர்ந்தான்' என்று பாடமாயின், காந்தாரபதி என எழுவாய் வருவிக்க. பெருங்கற்பினளாதலால், கண்ணிலானென்று சொல்லியும் உளம் வருந்தாது மகிழ்ந்தனள் காந்தாரியென்க.

**24.—இனி யாஞெருவரையும் கண்ணுற்கானேனென்று காந்தாரி தன் கண்ணைப் பட்டத்தாற் புதைக்க, தந்தை முதலியோர் அவளைத் திருதராட்டிரனுக்கு மணஞ்செய்வித்தல்.**

**இமைத்தகண்ணிணைமலர்ந்தினிநோக்கலேன் யாஞெருவரையென்று**
**சமைத்தபட்டமொன்றினிற்பொதிபெதும்பையைத் தந்தையுந்தனயோரும்**
**அமைத்தருங்குலமுனிவருமறைமுறை யருங்கடிவிளைத்திட்டார்**
**சுமைத்தராபதிமதியிவளுரோகிணி யென்னவேதொழத்தக்காள்.** காந்தாரி

(இ-ள்.) 'யான்-,இனி-,இமைத்த கண் இணை மலர்ந்து-இமைக்குந்தன்மையுள்ள (என்) இரண்டுகண்களை மலரவிழித்து, ஒருவரை-வேறொரு புருஷரை, நோக்கலேன்-பாரேன்,' என்று-என்று கருதி, சமைத்த-செய்வித்த, பட்டம் ஒன்றினில் - பொற்பட்டத்தால், பொதி-மறைத்த, பெதும்பையை - பெதும்பைப்பருவத்தளான காந்தாரியை, தந்தைஉம் - அவள் தந்தையான சுபலனென்ற காந்தாரபதியும், தனயோர்உம்-(அவனது புத்திரராகிய) சகுனி முதலியோரும், அருங்குலம்முனிவர்உம் - சிறந்தகுலத்தில் பிறந்தவரான இருடியரும், அமைத்து-(கலியாணத்துக்கு) வேண்டும்பொருளைச் சித்தஞ்செய்துகொண்டு,— மறை முறை - வேத விதிப்படி, அருங் கடி - அருமையான விவாகத்தை, விளைத்திட்டார்-செய்துமுடித்தார்: சுமை-(பூமியைத்) தாங்குதலையுடைய தராபதி மதி - அரசனாகிய சந்திரனுக்கு, இவள்-, உரோகிணி என்ன தொழ தக்காள்-உரோகிணிபோலக் கொண்டாடத்தக்கவளானாள்; (எ - று.)

சந்திரனுக்கு அசுவினிமுதலிய மற்றைப் பல நட்சத்திரங்களும் மனைவியராக இருப்பினும் உரோகிணி சிறத்தல்போல, திருதராட்டிரனுக்குப் பல மனைவிமாரிருப்பினும் காந்தாரியே யாவரினும் மிக்கவளானாளென்க. "அகச்சத் அந்த: புரிகாஸ-முக்கியதாம்'' என்று பாலபாரதத்து வருவதும் காண்க. (179)

**25.—இனிக் குந்தியைப்பற்றிய சரிதை:—**

**சூரன்மகளாகிய குந்தி, குந்திபோசரில்லத்து வளர்தல்.**

**புந்தியாலருங்கலைமகள்பொற்பினற் பூந்திருபுனைகற்பால்**
**அந்திவாயருந்ததிபெரும்பொறையின லவனிமானிகரென்னக்**
**குந்திபோசரிற்சூரனென்பவன்மகள் குருகுலந்தழைத்தோங்க**
**வந்தியாவரும்பிரதையென்றடிதொழ மதியெனவளர்கின்றாள்.**

(இ - ள்.) 'சூரன் என்பவன் மகள் - சூரனென்று ஒருபேரையுடைய யதுகுலத்தரசனுடைய மகள்,—புந்தியால் அருங்கலைமகள்-புத்தியினால் அருமையான கலைக்குரிய மகளான சரசுவதியும், பொற்பினால் பூ திரு-அழகினால் மலரில்உறைபவளாகிய இலக்குமியும், புனை கற்பால் - அலங்காரத்தையுண்டாக்குகின்ற கற்

பினால், அந்திவாய் அருந்ததி-இராக்காலத்துத் தோன்றும் வடமீனாகிய அருந்ததியும், பெரும் பொறையினால் - மிக்க பொறுமையினால், அவனிமான்-பூமிதேவியும், நிகர்-ஒப்பாவள்,' என்ன-என்று (பலரும்) சொல்லிக் கொண்டாடவும், குருகுலம் தழைத்து ஓங்க-குருகுலம் செழித்து வளரவும், குந்திபோசர் இல் வந்து-குந்திபோசனென்பானுடைய இல்லத்திலே (அவனுக்கு ஸ்வீகார புத்திரியாக) வந்து, பிரதை என்று யாவர்உம் அடி தொழ-பிரதையென்றுபாராட்டி யாவரும் வணங்கித்தொழ, மதி என-பிறைச்சந்திரன்போல, வளர்கின்றாள்-வளர்பவளானாள்; (எ - று.)

அத்தைகுமாரனை குந்திபோசனுக்கு மகவில்லாக்குறையைப் போக்க, யதுகுலத்துத்தோன்றலான சூரனென்பவன் தன் பெண்ணான பிரதை யென்பவளை வளர்க்குமாறு கொடுத்தான்: அவளே குந்திபோசனால் வளர்க்கப்பட்டதுபற்றி, குந்தியென்று வழங்கப்படுவாளாயினாள். (180)

**26.—குந்தி அங்கு அரண்மனைவந்த துருவாசமுனிவனுக்கு வளர்ப்புத்தந்தையின் சொற்படி குற்றேவல்புரிதல்.**

அந்தமாதிளமடமயிலெனவிளை யாடுமெல்லையிலென்றும்
முந்தமாதவம்புரிதுருவாசமா முனியுமவ்வழிவந்தான்
வந்தமாதவனடிபணிந்திவனை நீ வழிபடுகெனத்தந்தை
இந்தமாதவன்மொழிப்படிபுரிந்துகுற் றேவலின்வழிநின்றாள்.

(இ-ள்.) அந்த மாது-அந்தப்பிரதையென்பவள், இள மடம் மயில் என-இளமையையுடைய மடப்பங்கொண்ட மயில்போல, விளையாடும் எல்லையில்-விளையாடுகின்ற காலத்தில்,—என்றுஉம் முந்த மாதவம் புரி-எப்போதும் (யாவரினும்) மேற்படச் சிறந்த தவத்தைச் செய்பவனான, துருவாசமாமுனிஉம் - துருவாசமுனிவனும், அ வழி-அவ்விடத்து, வந்தான்—; தந்தை-குந்திபோசன், வந்த-(அங்ஙனம்) வந்த, மா தவன்-பெருந்தவத்தனான துருவாசமுனிவனுடைய, அடி-பாதங்களை, பணிந்து-வணங்கி, 'நீ இவனை வழிபடுக-நீ இவனை உபசரிப்பாயாக', என-என்று (பிரதையென்பாளைநோக்கிச்) சொல்ல,—இந்த மாதவன் மொழி படி-இந்தத் துருவாசமாமுனிவன் கூறுகின்ற மொழியின்வழியே, புரிந்து-பணிவிடை செய்துகொண்டு, குறு ஏவலின்வழி-(அவனுடைய)சிறிய ஏவலின்வழியிலேயே, நின்றாள்-நடந்துகொண்டாள்; (எ-று.)(181)

**27.—முனிவனுடைய குற்றேவலில் மனம்பதிந்த பிரதை, தன் இளமையாடலை மறத்தல்.**

கழங்குகந்துகமம்மனையாடலுங் கனகமென்கொடியூசல்
வழங்குதண்புனலாடலுந்துறைவரி வண்டலாடலுமாறி
முழங்குசங்கினந்தவழ்தருபனிநிலா முன்றிலுஞ்செய்குன்றும்
தழங்குசெஞ்சுரும்பெழுமலர்ச்சோலையுந் தனித்தனிமறந்திட்டாள்.

(இ-ள்.) கழங்கு கந்துகம் அம்மனை ஆடல்உம் - கழற்சிக்காய் பந்து அம்மானை என்ற இவற்றை யாடுவதையும், கனகம் மெல் கொடி ஊசல்-பொன்மயமான மெல்லியகொடிகளாலியன்ற ஊஞ்சலிலாடுவதையும், வழங்கு தண்புனல் ஆடல் உம்-இடைவிடாது

செல்கின்ற குளிர்ந்தநீரிலே விளையாடுதலையும்,—துறை வரி வண்டல் ஆடல் உம்-நீர்த்துறைகளிலே அழகிய மணலைக்கொண்டு (சிற்றிலிழைத்தல்முதலிய) ஆடல்புரிதலையும், மாறி-நீங்கி,— முழங்கு சங்குஇனம் தவழ்தரு பனி நிலா முன்றில்உம்-ஒலிக்கின்ற சங்குகளின் கூட்டம் தவழப்பெற்ற குளிர்ந்த நிலாவைக் கொண்ட வீட்டின் முன்னிடமும், செய்குன்றுஉம்-(விநோதார்த்தமாகச் சமைத்த) கட்டுமலைகளும், தழங்கு செம் சுரும்பு எழு மலர் சோலைஉம்-ஒலிக்கின்ற அழகிய சுரும்பினம் மொய்த்தெழப்பெற்ற பூஞ்சோலையும், தனித்தனி-, மறந்திட்டாள்—; (எ-று.)

வேற்றிடத்து மனஞ்செல்லாமல் திருந்திக் கடவுள்முனிவரின் பூசனையிலேயே கருத்தாயிருந்தனள் குந்திபோசன்புதல்வியென்க. (182)

28.—துருவாசன் மகிழ்வுற, பிரதை பன்னிரண்டுமாதம் பணிவிடைபுரிதல்.

தொழுதுதாளிணைச்செய்யபஞ்செழுதினுந் தோளிணைச் செழுந்தொய்யில்
எழுதினும்பொருவிளமையண்முதுக்குறைந் தியாதியாதுரைசெய்தான்
முழுதுநெஞ்சுறுகோபமேமிகமிகு முனிவரன்மகிழ்வெய்தப் துருவாசனை
பழுதிலன்புடனியற்றினளொன்றுபோற் பன்னிருமதிசேர.

(இ-ள்.) (தோழிமார்), தொழுது-வணங்கி, தாளிணை-பாதங்களில், செய்ய பஞ்சு எழுதின்உம்-செம்பஞ்சுக்குழம்பை யெழுதினாலும், தோளிணை-தோளில், செழுந் தொய்யில் எழுதின்உம்-அழகிய தொய்யிலை யெழுதினாலும், பொரு-தாங்கமாட்டாத, இளமையள்-இளமையை யுடையவளாகிய அந்தப்பிரதை,—நெஞ்சு முழுதுஉம் உறு கோபம்ஏ மிக மிகு முனிவரன்-நெஞ்சுமுழுதும் மிக்ககோபமே மிகுந்துள்ள ரிஷித்தலைவனாகிய துருவாசன், யாது யாது உரைசெய்தான் - எதைஎதைச்சொன்னானோ, (அவற்றையெல்லாம்), மகிழ்வு எய்த-(அம்முனிவரன்) மகிழ்ச்சியடையும்படி, முதுக்குறைந்து-பேரறிவுமிகுந்து, பழுது இல் அன்புடன்-குற்றமில்லாத அன்புடனே, ஒன்றுபோல் - ஒரேவகையாக, சேர - பொருந்த, பன்னிருமதி-பன்னிரண்டுமாதம், இயற்றினள்-செய்தாள்; (எ - று.)

யாதுயாதுஉரைசெய்தான் என்றதனால், அவனேவியசெயல் செய்தற்கரியது என்பது பெறப்படும்: "ஸ யத்யத் ஆஜ்ஞாபயதிஸ்ம துஷ்கரம்" என்று பாலபாரதத்தில் வருவதும், மேற்செய்யுளில் "எனதேவ லரிதெனுது" என்று வருவதும் காண்க. (183)

29, 30.—இரண்டுகவிகள்-பிரதையின் பணிவிடையால் மனமுவந்த துருவாசன் ஒருமந்திரத்தையுபதேசித்துச் செல்ல, பிரதையும் தன்மனைசேர்தலைத் தெரிவிக்கும்.

பிரதைதன்னையத்தபோநிதிவருகெனப் பெரிதுவந்தெனதேவல் துருவாசன்
அரிதெனுதுநீயியற்றினைநெடுங்கட லவனிமேல்யார்வல்லார்
தெரிவைகேளெனச்செவிப்படுத்தொருமறை தேவரில்யார்யாரைக்
கருதிநீவரவழைத்தனையவரவர் கணத்துநின்கரஞ்சேர்வார்.

தம்மையொப்பதோர்மகவையுந்தருகுவர் தவப்பயனெனப்பெற்ற
இம்மறைப்பயனிம்மையிலுனக்குவந் தெய்தியதெனக்கூறி
அம்முனிப்பெருங்கடவுளுந்தபோவன மடைந்தனனவளுந்தான்
செம்மனத்தொடுபயின்றரமகளெனச் செல்வமாமனைசேர்ந்தாள்.

(இ-ள்.) (29) அ தபோநிதி-அந்த முனிவன், பெரிது உவந்து-(பன்னிருமாதம் பிரதைசெய்த பணிவிடையால்) மிகவுஞ் சந்தோஷித்து, வருக என-வருவாயாக என்றுசொல்லி, பிரதை தன்னை-அந்தக் குந்தியைநோக்கி, 'எனது ஏவல்-என்னுடைய கட்டளையை, அரிது எனாது—, நீ—, இயற்றினை-செய்தாய்: நெடுங் கடல் அவனிமேல் யார் வல்லார்-(உன்னைப்போற் பணிவிடை செய்யப்) பெரிய கடலினாற் சூழப்பட்ட இந்தப்பூமியில் யாவர்வல்லார்? தெரிவை-பெண்ணே! கேள்—,' என-என்று, ஒரு மறை-ஒருவேதமந்திரத்தை, செவிப்படுத்து-(அந்தப் பிரதையின்) காதிலேயோதி, தேவரில்-தேவர்கட்குள்ளே, யார் யாரை—, கருதி—, நீ—, வர அழைத்தனை-(இந்த மந்திரத்தைச்சொல்லி) வருமாறு கூப்பிடுவாயோ, அவர் அவர்-அந்தந்தத் தேவர், கணத்து-ஒருகணப்போதில், நின் கரம் சேர்வார்-உன்கையைச் சேர்வார்கள் [உன்வசமாவார்கள்]; (30) (அன்றியும்) தம்மை ஒப்பது-தம்மையொத்துள்ளானாகிய, ஒர் மகவை உம்-ஒருபுத்திரனையும், தருகுவர்—: (யான்), தவம் பயன்என பெற்ற-தவத்தின்பயனாகு மென்னுமாறு அரிதிலடைந்த, இ-இந்த, மறை-வேதத்தின், பயன்—, இம்மையில்-இப்பிறவியில்தானே, உனக்கு வந்து எய்தியது-உனக்கு வந்துசேர்ந்தது,' என கூறி-என்றுசொல்லி,— அ கடவுள் பெரு முனி உம்-அந்தத் தெய்வத் தன்மையுள்ள பெருமுனிவரும், தபோவனம்-(தான்) தவம்புரியும் வனத்தை, அடைந்தனன்—: அவள்உம்-அந்தப்பிரதையும், தான்—, செம் மனத்தொடு-நல்ல மனத்தோடு, பயின்று-பொருந்தி, அரமகள் என-தெய்வமாதுபோல, செல்வம் மா மனை-(தனக்குரிய) செல்வமுள்ள சிறந்தமனையிலே, சேர்ந்தாள்—; (எ - று.)

தந்தையின் மனையில் துருவாசமுனிவரை யுபசரித்து அம்முனிவராலே பெற்ற குந்தி தனக்கென்றுள்ள செல்வமனையைச் சேர்ந்தாளென்க. (184, 185)

31.—மறைப்பயனைக் காணக் கன்னிகைக் குந்தி நிலாமுற்றத்திலே அம்மந்திரத்தைச் சூரியனைக்கருதி யுச்சரிக்க, அன்னான் அங்குவருதல்.

ததையும்வண்டிமிர்கருங்குழற்கன்னியத் தனிமறைப்பயன்காண்பான்
சுதைநிலாவெழுமாளிகைத்தலத்திடைத் தூநிலாவெழுமுன்றில்
இதையமாமலர்களிக்கநின்றன்பினே டியம்பலுமெதிரோடி
உதையபானுவுமலர்மிசையளியென வொருகணந்தனில்வந்தான்.

(இ-ள்.) ததையும்-நெருங்கிய, வண்டு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, கருங்குழல்-கரிய கூந்தலையுடைய, கன்னி-, அ தனி மறை பயன் காண்பான்-அந்த ஒப்பற்ற வேதமந்திரத்தின் பயனையறிய வேண்டி, சுதை நிலா எழு-(பூசிய) சுண்ணாம்பினால் வெண்ணிலாத் தோன்றுகின்ற, மாளிகை தலத்திடை-

மாளிகையில், தூ நிலா எழு முன்றில் - பரிசுத்தமான நிலாத் தோன்றுகின்ற முற்றத்திலே [மேன்மாடத்திலே], இதையம் மாமலர் களிக்கநின்று-இதயமாகியசிறந்தமலர்மகிழுமாறுஇருந்து கொண்டு, (சூரியனைக்கருதி), அன்பினோடு—, இயம்பலும்-(அந்த மந்திரத்தை) உச்சரித்தவுடனே, எதிர் ஓடி-(அந்தப்பிரதைக்கு) எதிராகவிரைந்துவந்து, உதையம்பானுஉம்-உதயகாலத்துச்சூரிய னும், மலர்மிசை அளி என-மலரில்வண்டுமொய்ப்பதுபோல, ஒரு கணந்தனில்-ஒருகணப்போதில், வந்தான்—; (எ - று.)

மேன்மாடத்திலே நிலாமுற்றத்திலிருந்து பிரதை துருவாச முனிவ னுபதேசித்த வேதமந்திரத்தை யுச்சரித்து உதித்த சூரியனை நினைக்க உடனே அங்கு அவன் தோன்றினு னென்க.

32.—வந்த சூரியன் அந்தப்பிரதையை அணைத்தல்.

**செம்பொனுடையுங்கவசகுண்டலங்களுந் திகழ்மணிமுடியாரம்**
**பைம்பொனங்கதம்புனையவயவங்களும் பவளமேனியுமாகி**
**வம்பருதமெய்ப்பதுமினியெனச்செழு மறைநுவன்மடப்பாவை**
**அம்புயானனமலர்வுறக்கரங்களா லணைத்தனனழகெய்த.**

(இ - ள்.) செம் பொன் ஆடைஉம்-செந்நிறமுள்ள பொற்பட் டாடையும் [பீதாம்பரமும்],கவசம் குண்டலங்கள்உம்—, திகழ்மணி முடி-விளங்குகின்ற இரத்தினகிரீடமும், ஆரம்-ஆரமும், பைம் பொன் அங்கதம் புனை அவயவங்கள்உம் - பசும்பொன்னாலியன்ற தோள்வளையலையணிந்த புயங்களும், பவளம் மேனி உம் - பவழம் போன்ற செந்நிறத்திருமேனியும், ஆகி - பெற்றுவந்து,—வம்பு அருத மெய் பதுமினி என-நறுமணம் நீங்காத உடல் படைத்த பதுமினியைப்போல, செழு மறை நுவல் மடம் பாவை-பயன் விளைக்குந் தன்மையுள்ள வேதமந்திரத்தைக் கூறிய அந்த மடந்தையின், அம்புயம் ஆனனம்-தாமரைபோன்ற முகம், மலர்வு உற-மலர்ச்சியடைய, கரங்களால்—,அழகுஎய்த-அழகு பொருந்த, அணைத்தனன்—; (எ - று.)

சூரியன் தனதுகிரணங்களால் நறுமணம்நீங்காத தாமரை யோடையின் தாமரை முகம்மலரத் தழுவுவதுபோல,தன்னுடலில் நறுமணம்நீங்காத பதுமினியென்னும் உத்தமசாதிமாதரான குந்தியின் தாமரைபோன்றமுகம் மலர்ச்சியடையத் தன்கைகளா லணைத்தன னென்பதாம். சிலேடையையும் உருவகத்தையும் அங்க மாகக் கொண்டுவந்த உவமையணி. மாதராரில், பதுமினி சித்ரிணி அத்தினி சங்கினி என்று நான்குசாதியுள்ளன என்பதை,வாத்ஸ் யாயனம் முதலிய நூல்களா லறியலாம். பதுமினிசாதிமாதின் உடல் நறுமணம் வீசு மென்பது, நூற்கொள்கை. (187)

33.—'மடந்தையரின் கற்பை யறிபவனுன நீ என்னைத் தொடாதே' என்று பிரதை கூற, சூரியன் கோபித்துக் கூறலுறுதல்.

**கன்னிகன்னியென்கைதொடேன்மடந்தையர் கற்புநீயறிகிற்றி**
**என்னமெய்குலைந்தலமரநாணினு லிதயமும்வெருகி**
**அன்னமென்னடையஞ்சினளரற்றலு மருகுருன்விடப்போய்நின்று**
**உன்னியென்னைநீயழைத்ததென்பெறவெனவுருத்தனனுரைசெய்வான்.**

(இ-ள்.) அன்னம் மெல் நடை-அன்னப்பறவையின் நடை போன்ற மெல்லியநடையையுடையபிரதை,-மெய்குலைந்துஅலமர-உடம்பு நடுங்கிக் குலைய,—நாணினாள்-நாணங்கொண்டு, இதயம் உம்வேறு ஆகி-,-அஞ்சினள் - அச்சங்கொண்டவளாய், 'கன்னி கன்னி-(நான்) கன்னிகையாவேன் கன்னிகையாவேன்: என் கை தொடேல்-என்கையைத் தீண்டாதே:மடந்தையர் கற்பு-மடந்தை மாரின் கற்பை, நீ—,அறிகிற்றி-அறிவாயன்றோ!' என்ன-என்று, அரற்றலும்-கதறவும்,—(சூரியன்), அருகு உறான்-(அவளுடைய) சமீபத்தை யடையாதவனாய், விட போய் நின்று-சற்று விலகிப் போயிருந்து, (அந்தப்பிரதையைநோக்கி),—'உன்னி - நினைத்து' என்னை—, நீ—, அழைத்தது—, என் பெற-என்னபயனைப் பெறும் பொருட்டு?' என-என்று, உருத்தனன்-கோபித்தவனாய்,—உரை செய்வான்-(பின்னுஞ்) சொல்பவனானான்; (எ-று.) (188)

34.—இரண்டுகவிகள்-சூரியன் பின்னுங்கூறியன தெரிவிக்கும்.

உருக்கொள்சாயையுமுழையுமங்கறிவுறு தொளித்துநான்வரவேநீ
வெருக்கொளாவெனைமறுத்தனையுனக்குமுன் மெய்ம்மறையுரைசெய்த
குருக்கபளன்படாரென்படாதரிவைநின் குலமெனக்கொடித்திண்டேர்
அருக்கன்மெய்யினுமன மிகக்கொதித்தன னுயிரமடங்காக.

(இ-ள்.) 'உரு கொள் சாயைஉம் - உருவத்தைக்கொண்ட சாயாதேவியும், உழை உம்-உஷாதேவியும், அங்கு-வானில், அறிவுறுது-அறியாதபடி, ஒளித்து—, நான்—,வரஏ-வந்திருக்கவும்—, நீ—, வெருக்கொளா-அஞ்சி, எனை - என்னை, மறுத்தனை - (உடன் சேரவொட்டாமல்) மறுத்திட்டாய்: உனக்கு - (இப்படிப்பட்ட) உனக்கு, முன்-முன்பு,மெய் மறை-தவறுமற்பலிக்குந்தன்மையுள்ள வேதமந்திரத்தை, உரைசெய்த - சொல்லிய, குருக்கள்-குருமார், என்படார்-என்னபாடு படமாட்டார்? [நீ இப்போது மறுத்ததன் பயனாக உனக்கு உபதேசித்த குருமாரைச் சபித்திடுவேன் என்ற படி]: அரிவை-பெண்ணே! நின் குலம்-நீபிறந்தகுலம், என்படாது-என்ன தீங்கையடைந்திடாது [என்சாபத்தினால் நின்குலமே யழிந்திடும் என்றபடி]', என-என்று,கொடி திண்தேர் அருக்கன்-கொடி கட்டிய வலிய தேரையுடைய சூரியன்,மெய்யின்உம்-தன்னுடம்பை விட, ஆயிரம் மடங்கு ஆக—, மிக-மிகவும், மனம் கொதித்தனன்-.

உஷை சாயையென்பவர் சூரியனுடைய மனைவிமாராவர். சாயை யென்பது-நிழலென்னும்பொருளையு முடைய தாதலால், அதனினும் வேறுபாடு தோன்ற, 'உருக்கொள் சாயை' என்றது. "கரோமியாவத் தவ மந்த்ரதாயிநம்-மதிய சாபோரகவேஷ்டிதம் முகிம்" என்று பாலபாரதத்தில் வருதற்கு ஏற்ப,'மறையுரை செய்தகுருக்களென்படார்'என்பதற்குச் சாபத்தினாலழிவரென்று உரைக்கப்பட்டது. (189)

35. உனையளித்தவன்முனியுமென்றஞ்சனீ யுடன்படுமுணர்வானல்
வினையளித்ததென்றணைதியேலின்பமும் விழைவுறும்படிதுய்த்தி
எனையளித்ததொல்லதிதியினுனக்கிசை யெய்துமாறிகன்மைந்தன்
தனையளித்திமற்றென்னினுமிருநிலந் தாடொழத்தக்கோனே.

(இ-ள்.) உனை அளித்தவன்-உன்னைப்பெற்றவன், முனியும்-சினப்பான், என்று—, அஞ்சல்-பயப்படாதே: நீ—, உடன்படும்-சம்மதிக்கின்ற, உணர்வால்-உணர்ச்சியோடு, நல் வினை அளித்தது என்று-நல்வினை (இவனைத்) தந்ததென்றுகருதி, அணைதி ஏல்-(என்னைச்)சேர்வையானால், இன்பம்உம்—, விழைவுஉறும்படி-(மனத்தில்) விருப்பமுண்டாகும்படி, துய்த்தி-நுகர்வாய்: எனை அளித்த தொல் அதிதியின்-என்னைப்பெற்ற பழமையான அதிதி போல, உனக்கு—, இசை-புகழ், எய்தும் ஆறு-உண்டாகும்படி, இகல் மைந்தன் தனைஉம்-வலிமையுள்ள மைந்தனையும், அளித்தி-உண்டாக்குவாய்: மற்று-மேலும், (அந்தப்புதல்வன்), என்னின் உம்-என்னைக்காட்டிலும், இரு நிலம்-பெருவுலகத்தாரால், தாள் தொழ தக்கோன்-தாளில் விழுதற்குரிய மேன்மையுடையவனுவன், (என்றும் கூறினன்); (எ - று.)

'உனை யளித்தவன் முனியுமென்றஞ்சல்' என்பதற்கு - நீ இப்போதிருப்பதுபோலவே கன்னிகையேயாய்விடுவாய் என்று கருத்துக் காணலாம்: "ந கந்யகாபாவம் இமஞ்ச ஹாஸ்யஸி" என்று பாலபாரதத்தில் வருவது காண்க: "சூரனதருளினாற் றுலங்கு கன்னிகையாகி" என்று இவரே பின்னர்க் கூறுவர். *(190)*

**36.—சூரியனது புகழ்ச்சியுரைகேட்டுப் பிரதை மலரணைசேர்தல்.**

ஆயிரங்கரத்ததிபதிபுகழ்ந்துநா ருயிரமுகமாகப் சூரியன்
போயிரந்திவையுரைத்தபின்மதர்விழிப் புரிவுமூரலுநல்கி
வேயிருந்தடந்தோளிடந்துடித்திட மெல்லியன்மதன்வேதப்
பாயிரங்கொலென்றையுறவவனெடும் பனிமலரணைசேர்ந்தாள்.

(இ-ள்.)ஆயிரம் கரத்து அதிபதி-ஆயிரங்கிரணங்களையுடைய (ஒளிகட்கெல்லாம்) அதிபதியான சூரியன், நூறு ஆயிரம் முகம் ஆக புகழ்ந்து-பலபடியாகப் புகழ்ந்துகூறி, போய் இரந்து-மிகவும் இரந்து, இவை உரைத்தபின்-இவ்வார்த்தைகளைக் கூறியபின்,—மெல்லியல்-அந்தப்பிரதை, மதர் விழி புரிவுஉம் - மதர்த்தகண்ணின் மூலமாக(த்தன்) விருப்பத்தையும், மூரல்உம்-புன்சிரிப்பையும், நல்கி-தந்து,—வேய் இருந் தட தோள் இடம் துடித்திட-மூங்கில்போன்ற மிகப்பெரியதோள் இடப்புறந் துடிக்க,—'மதன் வேதம் பாயிரம் கொல்-மன்மதவேதத்தின் பாயிரமோ (இது)?' என்று—, ஐயுற-ஐயம் மனத்திலுண்டாக, அவனொடுஉம்-அந்தச் சூரியனோடும், பனி மலர் அணை-குளிர்ந்த புஷ்பசயனத்திலே, சேர்ந்தாள்—; (எ - று.)

பாயிரமென்பது-நூற்குப் புறம்பானது; நூலுக்குத்தோற்றுவாயாவது. மதனவேதம் என்பது இங்கேயிலக்கணையால், காமசாஸ்திரத்திலுணர்த்தப்படும் கரணங்களுக்கு ஆகுபெயர். இடந்துடித்தது-இனி விரைவிற் புணர்வு நிகழுமென்பதைக் குறிப்பிப்பதாதலால், அது மதனவேதத்தின் பாயிரமென ஐயுறத்தக்கதாயிற்று. *(191)*

**37.—புணர்ச்சியில் அவசமாகிய பிரதை பின் தன்வசமாக, சூரியன் கரத்தலும் அவள் கருக்கொள்ளுதலும்.**

தினகரன்சுடர்வடிவமுமமிர்தெழு திங்களின்வடிவாகத்
தனதடந்திருமார்புறத்தழீஇயபின் றையறன்னினைவெய்த

மனமகிழ்ந்ததும்வந்ததுமணந்ததும் வரங்கொடுத்ததுமெல்லாம்
கனவெனும்படிகரந்தனன்பெருந்தகை கன்னியுங்கருக்கொண்டாள்.

(இ-ள்.) தினகரன்-சூரியன், சுடர் வடிவம்உம்-(தன்) தேஜோமயமான வடிவமும், அமிர்து எழு திங்களின் வடிவுஆக-அமிருதம் தோன்றப்பெற்ற சந்திரனுடைய வடிவுபோன்றிருக்க,—தன தடம் திரு மார்பு உற-(அந்தப்பிரதையின்) கொங்கைத்தலம் (தன்) அழகியமார்பிலே பொருந்த, தழீஇயபின்-தழுவிப் புணர்ச்சி நிகழ்த்திய பின்,—தையல்-அந்தப்பிரதை, தன் நினைவு எய்த-தன்வசத்தையடைய,—மனம் மகிழ்ந்ததுஉம்-(தன்இசைவால் அந்தச்சூரியன்) மனமகிழ்ச்சியடைந்ததும், வந்ததுஉம் மணந்ததுஉம்-வந்து (தன்னை அச்சூரியன்) கூடியதும், வரம் கொடுத்ததுஉம்-(அந்தச் சூரியன் கன்னிகையாவாயென்று) வரங் கொடுத்ததும், எல்லாம்—,கனவு எனும்படி—, பெருந்தகை-பெருமைக்குணமுள்ள அந்தச் சூரியன், கரந்தனன்-மறைந்தான்: கன்னிஉம்-அந்தக்கன்னிகையான பிரதையும், கருக்கொண்டாள்-கருப்பமடைந்தாள்; (எ-று.)

தன-தன்னுடைய, தட திருமார்பு-விசாலமான அழகிய மார்பு என்றுமாம். வரம்-துருவாசன் உபதேசித்த சிறந்த மந்திரம் என்பாருமுளர். பெருந்தகை-அன்மொழித்தொகை: பெருந்தகைக் கன்னி எனின், கன்னிக்கு விசேடணம். (192)

38.—குந்தி மைந்தனொருவனைப் பெறல்.

அந்தியாரழலெனப்பரிதியினொளி யடைந்தபினணிமாடக்
குந்திபோசன்மாமடமகளெழினலங் கொண்டகொள்கையளாகி
இந்திராதியரவரவர்முகமலர்ந் திரந்தனதரத்தக்க
மைந்தனானவனொருவனைப்பயந்தனள் மாசிலாமணியென்ன.

(இ-ள்.) பரிதியின் ஒளி-சூரியனுடைய ஒளிமயமாகிய கருப்பம், அடைந்த பின்-(தன்வயிற்றைச்) சேர்ந்தபிறகு, அணிமாடம் குந்தி போசன் மா மடம் மகள்-அழகிய மாடத்திலிருந்த குந்திபோசனுடைய சிறந்த மடப்பத்தையுடைய மகளாகிய அந்தக் குந்தி,—அந்தி ஆர் அழல் என-அந்திக்காலத்து(ச் சிகை) நிரம்பிய அக்கினிபோல, எழில் நலம் கொண்ட-அழகின்சோபையைப் பெற்ற, கொள்கையள் ஆகி-தன்மையை யுடையவளாய்,—இந்திர ஆதியர் அவர் அவர் இரந்தன முகம்மலர்ந்து தரத்தக்க-இந்திரன் முதலிய அந்த அந்த இரப்பாளர் இரந்தவற்றை முகம் மலர்ந்து கொடுத்தற்குஉரிய, மைந்தன் ஆனவன் ஒருவனை-ஒப்பற்ற ஒரு மைந்தனை, மாசு இலா மணி என்ன-(சமுத்திரக்கரை) சிந்தாமணியைப் பெற்றதுபோல, பயந்தனள்-பெற்றாள்:(எ-று.)—அமருண்கட்குந்தி என்றும் பாடம்.

"அநுப்ரவேசாத்அயம் ஆத்மதேஜஸ:-சிகாமிவாக்நேரதிகோஜ்ஜ்வலாக்ருதிம்......அதேப்ஸிதார்த்த ப்ரதிபாதநார்ஹதாம்-உபேயிவாம்ஸம் ஸுர பர்த்து ரர்த்திந: | அஸூதசிந்தாமணி மூடதேஜஸம்-ஸமுத்ரவேலேவ ந்ருபாத்மஜாஸுதம்" என்ற பாலபாரதத்தால், இங்குக்கூறிய உரையைத் தெளிக. இந்தக்

கர்ணன் இந்திரனிரக்கத் தன் கவசகுண்டலங்களைக் கொடுத்த வரலாற்றை உத்தியோகபருவத்திற் காணலாம். மாலைக்காலத்துச் சூரியனொளியை அக்கினி பெறுகிறுனென்ப. (193)

**39.—சூரன்பெண்ணாகிய குந்தி மகப்பெற்று அப்புதல்வனை உலகப் பழிப்புக்கு அஞ்சி ஒருபெட்டியில் வைத்து நதிப்பெருக்கிலே விட்டிடுதல்.**

சூரன்மாமகள்சூரனதருளினுற் றுலங்குகன்னிகையாகி
வாரமாமணிக்கவசகுண்டலத்துடன் வருமகன்முகநோக்கிப்
பாரமாமரபினிற்பிறந்தவர்மொழி பழுதினுக்கழுதஞ்சிப்
பூரமாநதிப்பேடகத்திடைநனி பொதிந்தொழுக்கினளன்றே.

(இ - ள்.) சூரன் மா மகள்-சூரனுடைய சிறந்த பெண்ணாய்ப் பிறந்த பிரதை, சூரனது அருளினுல் - சூரியனுடைய கருணையினுல், துலங்கு கன்னிகைஆகி-விளங்குகின்றகன்னிப்பருவத்தையடைந்து, வாரம்-(தன்) அன்பிற்குரிய, மா மணி கவசகுண்டலத்துடன் வரும் மகன் - சிறந்தமணிகளழுத்திய கவசகுண்டலத்துடன் தோன்றிய மைந்தனுடைய, முகம் - முகத்தை, நோக்கி—, பாரம் மா மரபினில் பிறந்தவர் மொழி பழுதினுக்கு-பெருமை பெற்ற சிறந்தவமிசத்திலே பிறந்தவர் கூறும் பழிமொழிக்கு, அஞ்சி-பயந்து, அழுது—, பேடகத்திடை நனி பொதிந்து-பெட்டியிலே வைத்து நன்குமூடி, மா நதி பூரம்-சிறந்த நதியின் பெருக்கில், ஒழுக்கினள்-(தனக்கு அந்தரங்கரான தோழியர்மூலமாகச்) செலுத்தினுள்; (எ - று.)

"ஸு-ரஸ்ரவந்த்யாம் அபவாதசங்கிதா-ஸகீபி ராப்தாபி ரஸாவமோசயத்'' என்று கங்கைப்பெருக்கில்விட்டதாகப் பாலபாரதமும், அசுவநதியிலே விட, அது சர்மண்வதி நதியிலும், அது யமுனையிலும், அதுகங்கையிலும் சேர்ப்பித்தனவாக வியாசபாரதமும் கூறும். (194)

**40.—பாகீரதி அந்தப்பெட்டியைத் தலைமைச்சாரதியின் நகரிற்சேர்ப்பித்தல்.**

குஞ்சரத்திளங்கன்றெனச்சாபவெங் கோளரியெனப்பைம்பொற்
பஞ்சரத்திடைவருதிருமதலையைப் பகீரதியெனுமன்னை
அஞ்சரத்திரைக்கரங்களாலெடுத்தெடுத் தசையவேதாலாட்டி
வெஞ்சரச்சிலைச்சூதநாயகன்பதி மேவுவித்தனளன்றே.

(இ - ள்.) குஞ்சரத்து இள கன்று என-யானையின் இளங்கன்று போலவும், பைம் பொன் பஞ்சரத்திடை வரு சாபம் வெம் கோள் அரி என-பைம்பொன்மயமான கூட்டினிடையே வருகின்ற குட்டியான கொடிய கொல்லுந்தன்மையுள்ள சிங்கம்போலவும், (பெட்டியிலிருந்தபடியே வந்த), திருமதலையை-சிறந்த அந்தக்குழந்தையை, பகீரதி எனும் அன்னை-பாகீரதி யென்கிற தாய், அம் சரம் திரை கரங்களால்-அழகிய சலிக்குந்தன்மையுள்ள அலையாகிறகைகளால், எடுத்துஎடுத்து—, அசைய (ஊஞ்சலிலாடுவது போல்) அசையுமாறு, தாலாட்டி—, அன்றுஏ - (ஆற்றில்விட்ட) அந்தத்தினத்திலேயே, வெம் சரம் சிலை சூத நாயகன் - கொடுஞ்சரங்களைக்கொண்ட வில்லையேந்திய தேர்ப்பாகர் தலைவனான அதிரதனென்பானுடைய, பதி-நகரத்தில், மேவுவித்தனள்-சேர்ப்பித்தாள்; (எ - று.)

பெட்டியிலிருக்கும் மதலைக்குக் கூட்டிலிருக்கும் சிங்கக்குட்டியுவமை: "க்ரமேணமஞ்ஜூஷிகயா த்ருதம்தயா - சிசும் ஹரே: பஞ்சரவர்த்திநம்யதா | தரங்கடோலாந்தரலாலிதம் சநை: - நிநாய தம்ஸூதபுராந்திகம் நதீ" என்ற பாலபாரதம் காண்க. சஞ்சரத்திரை என்றும் பாடம். அன்றே-அசையுமாம். (195)

**41.—கரைமருங்கையடைந்த சாரதியும் அவன்மனைவியும் நதிப்பெருக்கில் வந்தபெட்டியிற் குமரனைக்கண்டு பெருமகிழ்ச்சியடைதல்.**

**கோடகப்படவரும்புனல்விழைவினுற் குளிர்துறைமருங்குற்றோர்**
**பேடகத்திடையொழுகியதினபதி பெருங்குமரனைக்கண்டு**
**சூடகக்கையம்புயமலரிராதையுஞ் சூதபுங்கவன்றானும்**
**ஆடகக்குலமடைந்ததொத்தரும்பெற லாதரத்தொடுகொண்டார்.**

(இ-ள்.) கோடு அகம்பட-இரு கரையும் தன்னுட்பொருந்த, வரும்-வந்த, புனல் - நீர்ப்பெருக்கைக்காண்பதில், விழைவினால்-விருப்பினால், குளிர் துறை மருங்கு-குளிர்ந்தநீர்த்துறையினருகே, உற்றோர்-அடைந்தவராகிய, சூடகம் கை அம்புயம் மலர் இராதை உம் சூதபுங்கவன் தான்உம்-சூடகமணிந்த கையாகிய தாமரை மலரையுடைய இராதையென்பவளும் பாகர்தலைவனாகிய அதிரதனென்பானும், ஒழுகிய - (நதிப்பெருக்கிலே) அடித்துக்கொண்டு வரப்பெற்ற, பேடகத்திடை-பெட்டியிலே, தினபதி பெருங் குமரனை கண்டு-சூரியனுடைய சிறந்தகுமாரனைப் பார்த்து, ஆடகம் குலம் அடைந்தது ஒத்து - (வறியோர்) பொற்குவியலைப்பெற்றாற் போன்று, அரும்பெறல் ஆதரத்தொடு-பெறுதற்கு அரிய பிரீதியோடு, கொண்டார்-(அந்தப்புதல்வனையெடுத்து வளர்க்குமாறு) கொண்டார்கள்; (எ - று.)

இராதை-அதிரதன்மனைவி. பெட்டியில் குழந்தையுடனே ரத்னங்களையும் வைத்து நதிப்பெருக்கிற் குந்திதேவி விட,அதிரதன் அந்தப் பெட்டியை எடுத்தபோது இரத்தினங்களுடனே பெற்றானதலால், அந்தப்புதல்வனுக்கு வஸுஷேணன் [சம்பத்தின் தொகுதியையுடையவன்] என்று பெயரிட்டான். குண்டலக்காதனாய்த் தோன்றியதனால், கர்ணனென்று பெயர். இப்பெயர் சூரியன் அசரீரிவாணியாய் வழங்கியதென்பர், மேல் கிருட்டிணன் தூது சருக்கம் செய்யுள் 154-இல். (196)

**42.—அதிரதன்மனையில் வளர்ந்த கர்ணன் பரசுராமனிடம் வில்முதலியன கற்று விளங்குதல்.**

**அதிர தன்றிரு மனையினில் விழைவுட னரும்பிய பனிக்கற்றை**
**மதியெ னும்படி வளர்ந்துதின் டிறல்புனை மழுவுடை வரராமன்**
**பதயு கந்தொழூஉ வரிசிலை முதலிய பலபடை களுங்கற்றுக்**
**கதிர வன்றரு கன்னனென் றுலகெலாங் கைதொழுங் கவின்பெற்றான்.**

(இ-ள்.) அதிரதன் திரு மனையினில்-அதிரதனுடைய சிறந்த வீட்டிலே, விழைவுடன்-விருப்போடு, அரும்பிய பனி கற்றை மதி எனும்படி-தோன்றிய குளிர்ச்சியின் தொகுதியையுடைய பிறைச் சந்திரனென்னுமாறு, வளர்ந்து—,திண் திறல் புனை-மிக்கவலிமை

பூண்ட, மழு உடை-மழுப்படையையுடைய, வர ராமன்-சிறந்த பரசுராமனது, பத யுகம் தொழூஉ-இருதாள்களிலும் வணங்கி, வரிசிலை முதலிய பல படைகள்உம் கற்று-கட்டமைந்த வில் முதலிய பல படைக்கலங்களையும் பயின்று, கதிரவன் தரு-சூரிய பகவான்பெற்ற, கன்னன் என்று-கர்ணனென்று, உலகு எலாம் கை தொழும் கவின்-உலகத்தாரெல்லாராலுங் கைகுவிக்கத்தக்க அழகை, பெற்றான்—; (எ-று.)

இந்தக்கர்ணன் அந்தணவடிவங்கொண்டு பரசுராமனைத் தொழுது அஸ்திர சஸ்திரங்களிற் பயின்றானென்ப. பலபடைகளும் என்ற இடத்து உம்மையை முற்றுப்பொருளாகவன்றி எச்சப் பொருளதாகக்கொண்டு, ஏனைக்கலைகளுங் கற்று என்ப. (197)

வேறு.

**43.—அந்தப்பிரதைக்குச் சுயம்வரம் ஏற்படுத்தவே, மன்னவர் திரளுதல்.**

கன்னற் பயந்த கதிர்வெம்முலைக் கன்னி தன்னை
முன்னர்ப் பயந்தோன் முகவோலை யுவகை யோடு
மன்னர்க் கெழுத் மடப்பாவை வரிக்கு மென்று
சென்னற் படைவேன் முடிமன்னவர் சென்று சேர்ந்தார்.

(இ-ள்.) கன்னன் பயந்த-கன்னனைப்பெற்ற, கதிர் வெம் முலை கன்னி தன்னை-ஒளிபொருந்திய விரும்பத்தக்க முலையையுடைய கன்னிகையை [பிரதையென்பாளை], முன்னர் பயந்தோன்-முன்பு பெற்றவன், முகம் ஓலை-[சுயம்வரத்தைப்பற்றிய] திருமுக வோலையை, உவகையோடு-மகிழ்ச்சியோடு, மன்னர்க்கு எழுத—, —'மடம் பாவை-மடமைக்குணமுள்ள பாவைபோன்ற அந்தப் பிரதை, வரிக்கும்-(நம்மை) விரும்பி மாலைசூட்டுவாள்,' என்று—, செல் நல் வேல்படை முடி மன்னவர்-(போரிற்) செல்லவல்ல சிறந்த வேற்படையையேந்திய முடிசூடிய அரசர், (அந்தச் சுயம் வரத்தின்பொருட்டு), சென்று சேர்ந்தார்—; (எ-று.)—சென்னற்படிவேல் என்றும் பாடம்.

இதுமுதல் இருபத்துநான்கு கவிகள்-பெரும்பாலும் மூன்றாஞ் சீரொன்று காய்ச்சீர் அல்லது கனிச்சீரும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிவந்த கலிநிலைத்துறைகள். இந்தப் பகுப்பில் அடிக்குப் பதினன்கெழுத்துக்கள் அல்லது பதினைந்தெழுத்துக்களைக் கொண்டு செய்யுள்கள் உள்ளன. (198)

**44.—குந்தி பலமன்னரிடையே மணமாலையைப் பாண்டுவுக்கே சூட்டுதல்.**

உருவஞ்சிறந்துபலகோளு முதிக்குமேனும்
மருவுங்குமுத மதிகண்டு மலருமாபோல்
பருவஞ்செய்பைம்பொற்கொடியன்னவள் பாண்டுவென்னும்
நிருபன்றனக்கேமணங்கூர் பெருநேயமுற்றாள்.

(இ-ள்.) உருவம் சிறந்து-வடிவத்தினால் மேம்பட்டு, பல கோள்உம்-பலகிரகங்களும், உதிக்கும் ஏன்உம்-தோன்றுமானாலும்,—மருவும்-(நீர்நிலையிற்) பொருந்திய, குமுதம்-ஆம்பல், மதி கண்டு-சந்திரனைக் கண்டு, மலரும் ஆபோல்-மலரும் விதம் போல,—பருவம்செய்-யௌவன பருவத்தையடைந்த, பைம்

பொன் கொடி அன்னவள்-பசும்பொற்கொடி போன்றவளான அந்தக்குந்தி, பாண்டு என்னும் - பாண்டு என்கிற, நிருபன் தனக்குஎ-அரசன்திறத்தில்தானே, மணம்-விவாகஞ் செய்து கொள்ளுதற்கு, கூர்-மிக்க, பெருநேயம்-பெருத்த அன்பை, உற்ருள்-பொருந்தினுள்; (எ-று.) (199)

45.—மத்திரராசன் தன்புதல்வியைத் தானே தர, அவளையும் பாண்டு மணத்தல்.

தானேயுவந்துதனித்தார்புனை தையல்வென்றி
ஆனேறனையானுயிர்க்கா ரமிர்தானபின்னர்
யானேதருவன்னெனமத்திர ராசனல்க
மானேயனையவிழியாளை வதுவைசெய்தான்.

(இ-ள்.) தான்எ-சுயமாகவே, உவந்து-மனமகிழ்ந்து, தனி தார் புனை-ஒப்பற்ற சுயம்வரமாலையைச் சூட்டிய, தையல்-பெண்ணுகிய குந்தி, வென்றி ஆன்எறு அனையான்-வெற்றிபொருந்திய இடபத்தை யொத்தவனுகிய பாண்டுவின், உயிர்க்கு—, ஆர் அமிர்து ஆன பின்னர்-அருமையான அமிர்தம்போலான பிறகு,—மத்திரராசன்—, யானே தருவன் என நல்க-நானே (என்மகளை இந்தப் பாண்டுவுக்கு மனைவியாகத்) தருவேன் என்று சொல்லிக் கொடுக்க,- மான்எ அனையவிழியாளை-மானையேயொத்த கண்ணையுடையவளான மாத்திரியையும், வதுவைசெய்தான்-(அந்தப் பாண்டு) மணந்தான்; (எ - று.)

இந்த மாத்திரி மத்திரதேசாதிபதியான ருதாயன னென்பவனுக்கு மகள்: சல்லியனுக்குத் தங்கை. பாலபாரதத்தில், வீடுமன் தன்வில்வலியாற் கவர்ந்து கொண்டுவந்து மாத்திரியைப்பாண்டுவுக்கு மனைவியாக்கினு னென்று உள்ளது. வியாசபாரதத்தில் வீடுமன் சென்று மாத்திரியைப் பாண்டுவுக்குத் தருமாறுகேட்க, மத்திரபதி இசைந்தானென்று உள்ளது. (200)

46.—பாண்டுமன்னவன் வேட்டையாடுமாறு இவ்விருமங்கையரோடும் இமயமலைப்புறத்தைச் சார்தல்.

எண்ணுற்றசூரனிகன்மத்திர ராசனென்ன
மண்ணுற்றசீர்த்திவயமன்னர் மகளிரோடும்
கண்ணுற்றகானில்விளையாட்ல் கருதியம்பொன்
விண்ணுற்றசாரலிமயப்புற மேவினுனே.

(இ-ள்.) கண்உற்ற-எதிர்ப்பட்ட, கானில்-காட்டிலே, விளையாடல்-வேட்டையாடுவதை, கருதி-எண்ணி,—(பாண்டுமன்னன்),— எண் உற்ற-நல்ல மதிப்புப் பொருந்திய, சூரன்-சூரனும், இகல்மத்திரராசன்-பராக்கிரமமுடைய மத்திரராசனும், என்ன - என்று, மண் உற்ற சீர்த்தி வயமன்னர்-பூமியிலே பொருந்திய கீர்த்தியையுடையவலிமைபொருந்திய அரசரின், மகளிரோடும்—, அம் பொன்-அழகிய பொன்னைக்கொண்ட, விண் உற்ற சாரல் - வானத்தையளாவிய தாழ்வரையோடுகூடிய, இமயம்-இமயமலையின், புறம்-பக்கத்தை, மேவினுன்-அடைந்தான்; (எ-று.)

மகளிரோடும் விளையாடல் கருதி இமயமலைப்புறத்தை யடைந்தானென்று கூறலாமெனினும், "ஆகேடவிஹாரகௌதுகீ -

ஸபோஜ மத்ராதிபகந்யகாஸக:—யயௌ வநம் ஹைமவதம் மஹாரத:'' என்று பாலபாரதத்தில் வருவதனாலும், கலைமானினம் முதலியவற்றை வேட்டையாடினனென்று மேற்பாடலில் வருவதனாலும் இங்ஙன்பொருள் கூறப்பட்டது. கண்ணுற்ற-இடமகன்ற எனினுமாம். (201)

47.—பலமிருகங்களையும் பாண்டு வேட்டையாடுதல்.

கானத்திலுள்ளகலைமானினங் காட்சியாமா
ஏனத்திரள்வெம்புலியெண்குடன் யாளிசிங்கம்
தானப்பகடுமுதலாய சனங்களெல்லாம்
மானச்சரத்தாற்கொலைசெய்தனன் வாகைவில்லான்.

(இ - ள்.) வாகைவில்லான்-வெற்றிமாலைசூடிய வில்லையேந்தியவனாகிய பாண்டு;—கானத்தில் உள்ள-காட்டிலிருக்கின்ற, கலைமான் இனம்-கலைமானின் கூட்டமும், காட்சி-(கண்ணுக்கு) அழகிய, ஆ மா-காட்டுப்பசுவும், ஏனம் திரள்-பன்றியின்கூட்டமும், வெம் புலி-கொடியபுலிகளும் எண்குடன்-கரடியுடனே, யாளி-யாளியும், சிங்கம் - சிங்கமும், தானம் பகடு-மதசலத்தையுடைய களிறும், முதல் ஆய-முதலாகிய, சனங்கள் எல்லாம்-(விலங்கின்) திரள்களையெல்லாம், மானம் சரத்தால் - பெருமைபொருந்திய அம்பினால், கொலைசெய்தனன் - வேட்டையாடினான்: (எ - று.)—கற்கியாமா என்று பிரதிபேதம். கூட்டமென்ற பொருளில், சனம் என்றார். (202)

48.—வேட்டையிளைப்பை இமவானினின்றுதோன்றிய வாயுபகவான் போக்குதல்.

மெய்யிற்றெறித்தகுருதித்துளி மேருவில்லி
சையத்தலர்ந்தகமழ்குங்குமத் தாதுமானக்
கையிற்சிலையோடுலவுங் கழற்காளைகேதம்
பையத்தணித்தானிமநாக பவனனென்பான்.

(இ-ள்.) (வேட்டையாடுகையில்), மெய்யில் - உடம்பிலே, தெறித்த—, குருதி துளி-இரத்தப்பொட்டு, மேருவில்லி சையத்து அலர்ந்த கமழ் குங்குமம் தாது மான-மேருவைவில்லாகக் கொண்ட சிவபிரானுடைய கைலாசமலையிலே மலர்ந்த நறுமணம் வீசுகின்ற குங்குமப்பூவின் இதழையொத்துத் தோன்ற,—கையில் சிலையோடு உலவும் கழல் காளை-கையிலே வில்லுடனே உலாவுகின்ற வீரக் கழலையணிந்த காளைப்பருவத்தானாகிய அந்தப் பாண்டுவின், கேதம் - (வேட்டையாடியதனாலுண்டாகிய) இளைப்பை, இமநாகம் பவனன் என்பான்-இமயமலையினின்று தோன்றிய வாயுபகவான், பைய-மெல்ல, தணித்தான்-; (எ - று.)

வெண்ணிறவுடம்பிற் செந்நிறக்குருதித்துளி சிந்தியது-வெள்ளிமயமான கைலாஸமலையிற் குங்குமப்பூவின் தாது சிந்தியதை யொக்கும்: பவனனென்பான், என்பான்-முதல்வேற்றுமைச் சொல்லுருபு. பவனன் என்பதற்கு ஏற்ப, தணித்தானென ஆண்பாற் பயனிலை வந்தது. சையம்-சைலமென்பதன் திரிபு: ஸஹ்யமென்பதன் திரிபு என்றால், சிறப்புப்பெயர் பொதுப் பொருளில் வந்ததென்க. (203)

**49.—மானுருவங்கொண்டு கிரீடித்த கிந்தமனென்ற முனிவனைப் பாண்டுமன்னன் அம்பினால் விழுத்தல்.**

பொன்னங்கழலானெதிரவ்விடைப் போகம்வேட்டு
மன்னுங்கலையும்பிணைமானு மகிழ்ச்சிகூர
மின்னுங்கணையாலிவனெய்திட விழ்ந்தபோதின்
முன்னின்றதந்தவுயிர்வந்தொர் முனிவனாகி.

(இ-ள்.) அ இடை-அவ்விடத்து,அம் பொன் கழலான் எதிர்-அழகிய பொற்கழலைப்பூண்டவனான அந்தப்பாண்டுவின்எதிரிலே, போகம் வேட்டு-புணர்ச்சியை விரும்பி, மன்னும் - வேடம்பூண்ட, கலைஉம்-ஆண்மானும்,பிணையான்உம்-பெண்மானும், மகிழ்ச்சிகூர-மகிழ்ச்சி மிகாநிற்க,—இவன்-இந்தப்பாண்டு,மின்னும் கணையால்-ஒளிவிடுகின்ற அம்பினாலே, எய்திட-(கலைமான்மீது) தொடுத்து விட, (அதனால்), வீழ்ந்த போதில் - விழுந்தபொழுதில், அந்த உயிர்-இறந்திடும் அந்தப்பிராணி, ஒர் முனிவன் ஆகிவந்து முன் நின்றது—; (எ - று.)

'போகம்வேட்டு மகிழ்ச்சிகூர' என்றமையால், அவ்விரண்டும் புணர்ச்சியின்பத்தி லாழ்ந்திருந்த தென்பதும், வீழ்ந்தபோது முனிவனாகி முன்னின்ற தென்றமையால், இந்தப் பாண்டுவின் அம்புபட்டது கலைமானின்மே லென்பதும் பெறப்படும். (204)

**50.—இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்: மானுடவடிவம் ஆன முனிவன் தன் வரலாறுகூறி மன்னவனைச் சபித்தமைதெரிவிக்கும்.**

நாரிக்கொருகூறரனார்முத னல்கவெய்த
வேரிக்கணையான்மிகநொந்துழி வேடமாறிப்
பூரித்தகாமநலமெய்தும் பொழுதுநின்கைச்
சோரிக்கணையாலறையுண்டுயிர் சோர்ந்துவிழ்ந்தேன்.

(இ-ள்.) நாரிக்கு ஒரு கூறு அரனார்-உமாதேவிக்கு(த் தமது) வாமபாகத்தைக் கொடுத்தவரான சிவபிரான், முதல்-முற்காலத்திலே,நல்க-(நெற்றிவிழிக்கனலால் எரிப்புண்ட மன்மதனை)அருள் செய்து பிழைப்பிக்கவே, (அந்தமன்மதன்), எய்த—, வேரி கணையால்- தேனைக்கொண்ட மலரம்புகளினால், மிகநொந்த உழி-மிகவும் (உடல்) நொந்ததனால், (நான்), வேடம் மாறி-மானுஷவேஷம்மாறி, (மான் வேஷத்தைக்கொண்டு), பூரித்த காமம் நலம்-மிக்க காம சுகத்தை, எய்தும் பொழுது-அடைந்தபோது, நின் கை சோரி கணையால்-உன்கையிலுள்ள இரத்தக்கறையுள்ள அம்பினாலே, அறையுண்டு - மோதப்பட்டு, உயிர்சோர்ந்து - உயிர்தளர்ந்து [இறந்து], வீழ்ந்தேன்-வீழ்ந்திட்டேன்; (எ-று.)

நாரிக்கொருகூறரனார் முதனல்கவெய்தவேரிக்கணை யென்றதனால், கடவுளரையும் மயக்கவல்லது அந்தமன்மத பாணமென்க.

**51.** என்போலவின்பத்திடைநீயு மிறத்தியென்னு
அன்போடிறந்தான் முதற்கிந்தம னானபேரோன்
தன்போன்மகிழ்நனுடனே செந்தழலினெய்திப்
பின்போயினண்மென்பிணையானவப் பேதைதானும்.

(இ-ள்.) என்போல-என்போலவே, இன்பத்திடை-காமவின்பத்தை யனுபவிக்கும்போதில்தானே, நீ உம்—, இறத்தி-இறந்திடுவாய், என்று-என்று, அன்போடு-காதலோடு, கிந்தமன் ஆன பேரோன்-கிந்தமனென்று பேரையுடைய அம்முனிவன், இறந்தான்-; மெல்பிணை ஆன அ பேதை தான்உம்-(ஆண்மானான அந்தக் கிந்தமனோடு கிரீடிக்கும்பொருட்டு) மெல்லியபெண்மானான அந்த அவன் மனைவியும், தன்போல் மகிழ்நனுடனே-தனக்கு ஒத்த கணவனுடனே, செம் தழலின் எய்தி-செந்நிறத்தீயிற் சேர்ந்து, பின்-(அவனைத்) தொடர்ந்தே, போயினள்—; (எ-று.)

கிந்தமமுனிவன் பாண்டுவுக்குச் சாபங்கொடுத்து இறந்தபின் அவன் மனைவி சிதையடுக்கி அதில் அவனுடம்பையேற்றி நெருப்பு வைத்து அத்தழலில் தன்னுடம்பை நீத்தாளென்க. கணவனுடன் தீப்பாய்ந்தவர், அவன்புக்க உலகம் புகுவரென்பது இங்கு அறியத்தக்கது. (206)

52.—இதுவும் அடுத்தகவியும்-பிறகு பாண்டு பத்தினிமாரோடு தபோவனஞ்சேர்ந்து அருந்தவஞ் செய்தமை கூறும்.

நினைவற்றசாபநிலைபெற்றபி னெஞ்சின்வேறோர்
இனைவற்றுநன்மையிதுவேயினி யென்றுதேறி
மனைவைத்தகாதன்மடவாருடன் மன்றல்வேந்தன் பாண்டு
முனைவைத்தவாய்மைமுனிக்கான முயன்றுசேர்ந்தான்.

(இ-ள்.) நினைவு அற்ற - நினைவு நீங்கிய [புத்திபூர்வகமாக வல்லாமற் செய்த செயலின் பயனாகநேர்ந்த], சாபம் நிலை-சாபத்தின் நிலைமையை, பெற்ற பின்-அடைந்தபின்,—நெஞ்சின் - (தன்) மனத்திலே, வேறு ஓர் இனைவு அற்று-வேறொரு வருந்தத்தக்க விஷயத்தை யெண்ணுதலைத் தவிர்ந்து, இனி நன்மை இது ஏ என்று தேறி-இனி (நமக்கு) நன்மை தருவது இந்தத்தவநெறியே யென்று தெளிந்து,—காதல் வைத்த மனை மடவாருடன்-(தன்னாற்) காதலிக்கப்பெற்ற மனைவிமாருடனே, மன்றல் வேந்தன்-(அவர்களை) மணஞ்செய்துகொண்டவனான பாண்டுராசன், முனை வைத்த வாய்மை-(நல்லவற்றுள்) முதன்மையாக்கணிக்கப்பட்ட மெய்ம்மையையுடைய, முனி-இருடிக்குரிய, கானம்-காட்டை, முயன்று-(தவத்தில்) முயற்சியெடுத்துக்கொண்டு, சேர்ந்தான்—;

நன்மைபெறுதற்குரியமார்க்கம் தவமே யென்ற காரணத்தால், நன்மை யிதுவேயினியென்றுதேறினான். "யாமெய்யாக் கண்டவற்றுளில்லையெனைத்தொன்றும், வாய்மையினல்லபிற" என்ப ஆதலால், 'முனைவைத்தவாய்மை'. என்றாரென்னலாம். "நிராசா பரமம் ஸுகம்" என்றபடி ஆசையையொழிக்கவே துன்பம் நீங்கி இன்பமுண்டாகுமாதலால், ஆசையையொழித்து என்ற பொருளில், 'நெஞ்சின்வேறோரினைவற்று' என்றது. மனைவிமாரைத்துறந்து தவஞ்செய்யவிரும்பிய பாண்டுமன்னன்-அம்மனைவியரின் வேண்டுகோளினால் அன்னாருடன் தவஞ்செய்யச் செல்லலாயினனென்று வியாசபாரதத்தாற் பெறப்படும். வனைவற்றகாதல், முனைவற்ற வாய்மை என்பன பாடாந்தரங்கள். (207)

53. காண்டற்கரியமணிப்பைம்பொற் கலனொடாடை
வேண்டற்கரியவிடயங்களின் வேடமாற்றித்
தீண்டற்கரியதிருமேனியன் றேவராலும்
பூண்டற்கரியபெருமாதவம் பூண்டுகொண்டான்.

(இ - ள்.) தீண்டற்கு அரிய திரு மேனியன்-(பிறரால்) பெறுதற்கரிய ஒளியை(த் தன்) உடம்பிற்கொண்டவனாயிருந்த அந்தப் பாண்டு,—காண்டற்கு அரிய-காண்பதற்கு அருமையான [அருமைப்பட்டுத் தேடியடைதற்குரிய], மணி-இரத்தினங்களினாலும், பைம் பொன்-பசும்பொன்னினாலுமியன்ற, கலனொடு-அணிகலன்களுடனே, ஆடை-பொற்பட்டாடையும், வேண்டற்கு அரிய-வேண்டிப்பெறுதற்கு அருமையான, விடயங்களின்-ஐம்புலன்களினொடு, வேடம்-(தன் அரசக்) கோலத்தையும், மாற்றி-ஒழித்திட்டு,—தேவராலும்—, பூண்டற்கு அரிய-மேற்கொள்ளுதற்கு அருமையான, பெரு மா தவம்-பெருமைபெற்ற சிறந்த தவத்தை, பூண்டு கொண்டான்—; (எ - று.)

அணிகலன்களை அணிதலை யொழித்துச் சடைமுடி மரவுரி முதலிய தவக்கோலத்தைப்பூண்டு, பாண்டு தவஞ்செய்யலாயினனென்பதாம். பாண்டு சதச்ருங்கபர்வதத்தில் தவம்புரிந்தானென்று நூல்கள் கூறும். (208)

54.—பாண்டு ஞானமுனியாதல்.

உற்றுப்புறத்துப்பகையாடி யுடன்றவெல்லாம்
செற்றுப்புவியிற்றனியாழி செலுத்துநீரான்
பற்றற்றயோகப்படையாலுட் பகைகளாறும்
முற்றத்துறந்துபெருஞான முதல்வனானான்.

(இ - ள்.) புறத்து - வெளியிலே, பகை உற்று-பகையாகப் பொருந்தி, ஆடி-(எதிரிலே) சஞ்சரித்து, உடன்ற எல்லாம்-மாறுபட்ட எல்லாரையும், செற்று-அழித்து, புவியில்-பூமியிலே, தனி ஆழி-ஒப்பற்ற ஆஜ்ஞாசக்கரத்தை, செலுத்தும்-நடத்திய, நீரான்-தன்மையனாயிருந்த பாண்டு மகாராசன்,—பற்று அற்ற-நசையென்பதை நீக்குவதனாற் பெறுகின்ற, யோகம் படையால்-யோகமென்று சொல்லப்படுகின்ற ஆயுதத்தால், உட்பகைகள் ஆறு உம்-காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மாற்சரியம் என்னும் ஆறுபகைகளையும், முற்ற-முழுவதும், துறந்து-ஒழித்து, பெரு ஞானம் முதல்வன்-பெருத்தஞானத்தைப்பெற்ற முதல்வனாக, ஆனான்—; (எ-று.)

புறப்பகையைவென்று ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்திய தலைவனான பாண்டு, இப்போது அப்பகையையொழித்து ஞானத்தைச்செலுத்தும் முதல்வனானனென்க: ஒருவனிடத்து மாறான இருநிலைதோன்றியனவெனக் கூறியது-முறையிற்படர்ச்சியணி எனப்படும் பரியாயவணியாம். காமம்முதலியவற்றைப் பகையென்றதற்கு ஏற்ப, யோகத்தைப் படையென்றார்: இயைபுருவகம். (209)

**55.—இரண்டுகவிகள்-பாண்டுவின் தவநிலைமை கூறும்.**

**ஆரக்குழம்பிலலைந்தார மணிந்துவிம்மும்**
**பாரக்குசங்கள்பலதைவரும் பான்மைநீங்கி**
**நாரக்கமலகரசோதி நகங்கண்மீள**
**ஈரக்குசங்கள்கிழிக்குந்தொழிற் கேற்றவாலோ.**

(இ-ள்.) ஆரம் குழம்பில் - சந்தனக்குழம்பிலே, அலைந்து-துழாவி, ஆரம் அணிந்து-முக்தாஹாரத்தை யணிந்து, விம்மும்-பருக்குந் தன்மையுள்ள, பாரம் குசங்கள் பல-பலவான பாரமாகிய கொங்கைகளை, தைவரும்-திளைக்கிற,பான்மை-தன்மையை,நீங்கி-, நாரம் கமலம் கரம் சோதி நகங்கள்-நீரிலுள்ள தாமரைபோற் பொலிகின்ற கையிலேயுள்ள சோதியுள்ள நகங்கள்,மீள-மீண்டும், ஈரம் குசங்கள் கிழிக்கும் - ஈரமுள்ள தருப்பைப்புற்களைப் பறிக்கின்ற, தொழிற்கு—, ஏற்ற-ஏற்பனவாயின; (எ-று.)-ஆல்-வியப்பைக்குறிக்கும் இடைச்சொல்: நிலைமாறியது குறித்து வியந்தபடி. இதுவும், கீழ்ச்செய்யுளிலுள்ள அணியே. குசம்-தருப்பை. (210)

**56. நாமக்கலவிநலங்கூர நயந்துநாளும்**
**காமக்கனலைவளர்க்கின்ற கருத்துமாற்றித்**
**தாமக்குழலாரிருவோரொடு தானுமொன்றி**
**ஓமக்கனலேவளர்த்தா னுணர்வுண்மைகண்டான்.**

(இ - ள்.) நாமம்-பிரசித்தமான, கலவி நலம் - கலவியின்பம், கூர-மிக,—நயந்து-விரும்பி, நாள்உம்-நாடோறும், காமம் கனலை-காமாக்கினியை, வளர்க்கின்ற—, கருத்து-எண்ணத்தை, மாற்றி-நீக்கி,—தாமம் குழலார் இருவோரொடு-மாலையையணிந்த கூந்தலையுடையரான (குந்தி மாத்திரி என்ற) இருமனைவிமாருடனே, தான் உம்—, ஒன்றி-கூடியிருந்து, ஓமம் கனல்ஏ வளர்த்தான் - ஓமஞ் செய்தற்குரிய அக்கினியையே வளர்த்தவனாய்,உண்மை உணர்வு-தத்துவஞானத்தை, கண்டான்-பெற்றிருந்தான்; (எ - று.)

கனலைவளர்த்தது-அதனிடையிலிருந்து தவஞ்செய்ய என்னலாம்: இனி, யோகத்துக்கு அங்கமாகச் செய்யப்படுஞ் சடங்குக்கு என்பாரு முளர். (211)

**57.—இங்ஙன் தவம்புரிந்துவருகையில், ஒருகால் குந்தியைநோக்கிப் பாண்டுமன்னவன் கூறத்தொடங்குதல்.**

**இவ்வாறரியதவநாடோறு மேறுமெல்லைக்**
**கைவாளொழிந்துசமித்தேந்திய காவன்மன்னன்**
**மைவாணெடுங்கண்வரசூரன் மகளைநோக்கிச்**
**செவ்வாய்மலர்வான்புவிமேலுறை தெய்வமன்னான்.**

(இ-ள்.) புவிமேல் உறை தெய்வம் அன்னான் - பூமிமீதுவாழ கின்ற தெய்வத்தை யொப்பவனான, கை வாள் ஒழிந்து சமித்து ஏந்திய-கையிலே வாட்படையை நீங்கிச் சமித்தைத் தாங்கிய, காவல் மன்னன்-காத்தற்றொழிலை யுடைய பாண்டுராசன்,—இ ஆறு-இவ்விதமாக, அரிய தவம்-அருமையான தவம், நாள்

தொறும் ஏறும் எல்லே - தினந்தோறும் ஏறிவருதற்கு இடமான பொழுது,—(ஒருகால்),—மை வாள் நெடுங் கண் - மைதீட்டியதும் வாள்போன்ற வடிவினதுமாகிய நீண்டகண்ணைப்படைத்த, வர சூரன் மகளை நோக்கி - சிறந்தவனான சூரனுக்குப்புத்திரியான குந்தியைநோக்கி, செவ் வாய் மலர்வான்-(தன்னுடைய) சிவந்த வாயைத் திறந்து பேசுபவனானான்; (எ - று.)

பாண்டுமன்னவன் சதசிருங்கபருவதத்திற் கடுந்தவம் புரியா நிற்கையில், ஆங்குள்ள முனிவரோடும் நட்புக்கொண்டிருந்தான். ஒருகாலத்துச் சில இருடியர் பிரமலோகத்துக்குத் திரண்டு போக லானார்கள்: அதுகண்ட பாண்டு 'மகப்பேறில்லாதவனாயினும் நான் செய்யும் பெருந்தவத்தாற் பிரமலோகம் புகுவேன்' என்று ஆக, அங்கிருந்த இருடியர் 'உனக்கு மகவுண்டாகும் என்பதை நாங்கள் ஞானக்கண்ணா லறிந்துள்ளோம்' என்று கூறிச் சென்ற னர்: பிறகு 'முனிவனது சாபத்தைப்பெற்ற எனக்கு மகவு எப்படி யுண்டாகும்?' என்று பாண்டுமன்னவன் சிந்தையிலாழ்ந்திருந் தான்: அக்காலத்து வியாசமுனிவரைப் பூசித்ததன் பயனால் காந் தாரி கருக்கொண்டாள்: அதை யறிந்து பாண்டு மிக்க வருத்தங் கொண்டு, பிறகு, புத்திரரைப் பெறவேணுமென்று விருப்பம்மிக, பத்தினிமாரை நோக்கிச்சொல்லலானானெனக் கதாசந்தர்ப்பம் காண்க. (212)

58.—இதுமுதல் மூன்றுகவிகள் - பாண்டுமன்னவன் குந்திதேவியினிடம் மகப்பேற்றின் சிறப்பைச் சொல்லுதலைக்கூறும்.

பூந்தார்வியாதமுனிதாளிணை போற்றியன்பு
கூர்ந்தார்வமுற்றியவன்பால்வரங் கோடலெய்திக்
காந்தாரிநூறுமகவான கருப்பமொன்று
வேந்தாதரிக்கத்தரித்தாள் வடமீனொடொப்பாள்.

ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்) பூந் தார் வியாதமுனி தாள் இணை போற்றி-அழகிய தாமரைமாலையை யணிந்த வியாசமுனிவனுடைய உபய பாதங் களைத் துதித்து, அன்பு கூர்ந்து-அன்பு மிக்கு, ஆர்வம் முற்றி- பக்திமிகுந்து, அவன் பால்-அந்தமுனிவனிடத்தில்,வரம் கோடல் எய்தி-வரம் பெறுதலை யடைந்து, வடமீனொடு ஒப்பாள்—அருந் ததி போல்பவளாகிய,காந்தாரி-,-(அவ்வரத்தின்பயனாக),—நூறு மகவு ஆன கருப்பம் ஒன்று-நூறுமகவைக்கொண்டதான ஒரு கருப்பத்தை,வேந்து ஆதரிக்க-திருதராட்டிரன் ஆதரம்பொருந்த, தரித்தாள்-தாங்குபவளானாள்; (எ-று.)

நீயும் அந்தக்காந்தாரிபோலவே கருப்பத்தைத் தாங்கவேணு மென்று மேலே குறிக்கப்போவதனால், இங்கு இச்செய்தி கூறப் பட்ட தென்னலாம். (213)

59. கல்லாமழலைக்கனியூறல் கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியமுதோடித் தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில்விளையாடு மகிழ்ச்சிமைந்தர்
இல்லாதவர்க்குமணவாழ்வி னினிமையென்னும்.

(இ - ள்.) கல்லா-கற்காத [இயற்கையாய்த் தோன்றுகின்ற], மழலை-குதலைச்சொல்லை, கனி ஊறல் - கொவ்வைக்கனிபோன்ற வாயினின்று ஊறும்சொள்ளோடு, கலந்து - சேர்த்து, கொஞ்சும்-கொஞ்சிப்பேசுகின்ற, சொல்லால்-சொல்லினால், உருக்கி - (கேட்போரை) உருகச்செய்து, (எங்கேனும் பெற்றோர் சென்றால் அவர்களை), அழுது தொடர்ந்து ஓடி-அழுதுகொண்டே விரைந்து பின்சென்று, பற்றி-பிடித்துக்கொண்டு, மல் ஆர் புயத்தில் - வலிமை பொருந்திய தோளிலே, விளையாடும்-விளையாடுவதனாலான, மகிழ்ச்சி-சந்தோஷத்தைவிளைக்கின்ற, மைந்தர்-புதல்வரை, இல்லாதவர்க்கு-பெறாதவர்க்கு, மனை வாழ்வின் இனிமை-இல்லற வாழ்க்கையினினிமை, என் ஆம்-யாது ஆகும்? (எ-று.)

புத்திரரைப்பெறாதோரால் இல்வாழ்வினினிமை பெறமுடியாதென்பதாம். கல்லாமழலை-கற்கமுடியாத மழலை யெனினுமாம். தன்மைநவிற்சியணி. (214)

60. மெய்தானம்வண்மைவிரதந்தழல் வேள்விநாளும்
செய்தாலுஞாலத்தவர்நற்கதி சென்றுசேரார்
மைதாழ்தடங்கண்மகவின்முக மன்னுபார்வை
எய்தாதொழியிற்பெறுமின்ப மிவணுமில்லை.

(இ-ள்.) மெய்-உண்மையே பேசுதலும், தானம்-(சற்பாத்திரத்தில்) கொடுத்தலும், வண்மை விரதம்-வளப்பமுள்ள பலவகை விரதத்தை மேற்கொள்ளுதலும், தழல் வேள்வி - அக்கினியில் யாகம்புரிதலும், (ஆகியசெயல்களை), நாள்உம் செய்தால்உம்-நாடோறும் செய்துவந்தாரேயாயினும்,—ஞாலத்தவர்-இவ்வுலகத்துப்பிறந்தவர்,—மை தாழ்-அஞ்சனம் பெருகுகின்ற, தட கண்-விசாலமான கண்களையுடைய, மகவின்-குழந்தையின்,முகம்-முகத்திலே, மன்னு-பொருந்திய, பார்வை-கண்ணின்பார்வையை, எய்தாது ஒழியின்-அடையாமற் போவாரேயானால், (அன்னார்),நற்கதி சென்று சேரார்—; இவண் பெறும் இன்பம்உம்-இவ்வுலகத்திற் பெறுகின்ற இன்பமும், இல்லை - (அவர்கட்கு) உண்டாகாது;
மகப்பெறாதோர் இம்மைமறுமைகளை யிழப்ப ரென்றவாறு.

61.—இரண்டுகவிகள்-பாண்டு குந்தியினிடம் 'நீ புத்திரப்பேறு உண்டாக்கிக்கொள்ள அருள்புரிக' என்றதைத் தெரிவிக்கும்.

மென்பாலகரைப்பயவாதவர் மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம்பசித்தீநனி தீர்க்கமாட்டார்
என்பானிகழ்ந்தவினையாலிட ரெய்திநின்றேன்
நின்பாலருளுண்டெனினுய்வ னெடுங்கணல்லாய்.

(இ-ள்.) நெடுங் கண் நல்லாய் - நீண்டகண்களையுடைய பெண்ணே! மெல் பாலகரை-மெல்லிய குழந்தைகளை,பயவாதவர்-பெறாதவர், மெய்ம்மை ஆக-உண்மையாக, தென்பாலவர் தம்-தெற்கேயுள்ளவரான பிதிரர்களின், பசி தீ-பசியாகிய தீயை,நனி-மிகவும், தீர்க்கமாட்டார் - போக்கும் வல்லமையில்லாதவராவர்: என்பால் நிகழ்ந்த வினையால்-என்னிடம் தோன்றிய தீவினையால்,

இடர்-(மகப்பெருமையாகிய) துன்பத்தை,எய்தினின்றேன்-அடைந் துள்ளேன்: நின்பால் அருள் உண்டுஎனின் - உன்னிடம் கருணை யுண்டாகுமானால், உய்வன்-(நான்) ஈடேறுவேன்; (எ - று.)

என்பால் நிகழ்ந்தவினை என்றது - கிந்தம முனிவரின் சாபத்தை. நான் சாபவசத்தினனாதலால், என் அனுமதியினால், முனிவர் மூலமாகவோ தேவர்மூலமாகவோ நீ சந்ததியை யுண் டாக்கிக்கொள்க என்றவாறு. (216)

62. இல்வாழ்பவர்க்குமடவாரல தியாவரின்ப
நல்வாழ்வுதேசுபுகழ்யாவு நடத்துகிற்பார்
தொல்வானவரின்மறையோரிற் றுறக்கபூமி
செல்வார்பெறும்பேறினிநீயருள் செய்தியென்றான்.

(இ-ள்.) இல் வாழ்பவர்க்கு-கிருகஸ்தராயிருப்பவர்க்கு, மட வார் அலது-(அவர்களுடைய) மனைவிமாரேயல்லாமல், இன்பம்- இன்பமும், நல் வாழ்வு-நல்லவாழ்க்கையும், தேசு-ஒளியும், புகழ்- புகழும், யாவும்-(ஆகிய) எல்லாவற்றையும், நடத்துகிற்பார்-உண் டாக்கக்கூடியவர், யாவர்-வேறுயாவர்? இனி—, நீ—, தொல் வானவரின் - பழமையான தேவர்களாலோ, (அல்லது), மறை யோரின் - வேதம்வல்லோரான அந்தணராலோ, துறக்கம் பூமி செல்வார் பெறும் பேறு அருள்செய்தி - சுவர்க்கலோகத்தை யடைபவர் பெறுகின்ற பேற்றை (நான்) அடையும்படி செய்வாய், என்றான்—; (எ - று.)

தேவர்மூலமாகவோ வேதியர்மூலமாகவோ நீ மகப்பெறின், அதனால் யான் தீக்கதிசேராது நற்கதிசேர்வே னாதலால், அவ் வாறு நிகழ்த்த மனம்புரியவேண்டுமென்று பாண்டுவேண்டிய வாறு. (217)

63.—குந்தி மறுத்துக் கூறுதல்.

பொற்பாவைகேள்வன்மொழிகேட்டலும் பொன்றநாணிச்
சொற்பாலவல்லாப்பழிகூருரை சொல்வதென்னே
வெற்பார்நதிகள்சிறுபுன்குழி மேவினன்றே
இற்பாலவர்க்குப்பிறர்மேன்மன மேற்பதென்றாள்.

(இ-ள்.) பொன் பாவை - பொன்னாலியன்ற பிரதிமைபோல் பவளான குந்தி,—கேள்வன் மொழி-(தன்)கணவனுடையசொல்லை, கேட்டலும் - கேட்டவுடனே, பொன்ற நாணி - உயிரழிந்தாற் போன்று நாணங்கொண்டு, 'சொல் பால அல்லா-சொல்லுதற்கு ஏற்றனவல்லாத, பழி கூர் உரை-பழி மிக்க வார்த்தையை,சொல் வது-(நீ) சொல்லுகின்ற இது, என்னே-என்னோ? வெற்புஆர் நதிகள்-மலையிற்றோன்றுதல் பொருந்தியஆறுகள், சிறு புன்குழி- மிகச் சிறிய குட்டையில்,மேவின் அன்றே-பாய்ந்து நின்றாலன்றோ, இல்பாலவர்க்கு - வீட்டிலிருந்து தொழில்பார்ப்பவரான மனைவி மார்க்கு, பிறர்மேல்-(தன்கணவர் தவிர)மற்றையோர்மேல், மனம்- ஏற்பது-சென்றிருப்பதாம்,' என்றாள்-என்று கூறினாள்; (எ-று.)

நதிக்குக் கடலிற்புகுதலே பெரும்பாலும் இயற்கையாதல் காண்க. (218)

**64.**—பின்னும் வற்புறுத்திப் பிறர்செயலையும் பாண்டு காட்ட, மறுக்க மாட்டாமல் குந்தி, துருவாசரிடம் பெற்ற மந்திரமேன்மை தெரிவித்தல்

பின்னும்பலகால்வருட்டிப் பிறர்பெற்றிகாட்டி
மன்னன்புகல மடமாதுமறுக்கமாட்டாள்
கன்னன்பிறந்ததொழியச் செழுங்கன்னியாகி
முன்னம்பெருமாமறைமேன்மை மொழிந்திட்டாளே.

(இ-ள்.) பின்னும்—, பலகால்-பலமுறை, வருட்டி - வசப்படுமாறு சொல்லி, பிறர் பெற்றி காட்டி-அயலாருடைய தன்மையையும் எடுத்துக் காட்டி, மன்னன்-பாண்டுராசன், புகல-சொல்ல,—மடம் மாது-மடப்பமுள்ள அந்தக்குந்தி, மறுக்கமாட்டாள்-மறுத்துச்சொல்ல முடியாதவளாய்,—கன்னன் பிறந்தது ஒழிய-கர்ணனென்பவன் (தனக்குப்புத்திரனாக விவாகம் நிகழ்வதற்கு முன்னமே) பிறந்ததைத் தவிர்த்து, செழு கன்னி ஆகி முன்னம் பெரு மாமறை மேன்மை-சிறந்தகன்னிகையாயிருந்து முன்புபெற்ற சிறந்த மந்திரத்தின் மேன்மையை, மொழிந்திட்டாள்-சொன்னாள்; (எ - று.)

ஸௌதாஸன் மதயந்தியென்ற தன்மனைவியிடம் வசிஷ்ட முனிவர் மூலமாய் அச்மகனென்ற புத்திரனைப்பெற்றதையும், திருதராஷ்டிரன் முதலிய தாங்களும் வியாசர்மூலமாகப் பிறந்ததையும் பாண்டுமன்னன் குந்திதேவிக்கு நிதரிசனமாக எடுத்துக்காட்டினனென விவரங் காண்க. 'பலகால்வருந்தி' என்றும் பாடம். 'மொழிந்திட்டாளே' என்பது இன்னோசையாயிராமையால், இங்கு 'மொழிந்து நின்றாள்' என்றாற்போன்றுபாடமிருக்கலாம். (*219*)

**65.**—அதுகேட்டு மந்திரத்தால் மகப்பெறுமாறு பாண்டு அநுமதிதரவே, தருமராசனை மந்திரத்தால் குந்திதேவியழைக்க அவனுன் வருதல்.

மருமாலைவல்லியுரைகேட்டு மகிழ்ச்சிகூரும்
பெருமாதவத்தோன்பணித்தேவிய பின்னர்முன்னர்த்
தருமாதிபனைக்கருத்தான் மடத்தையலுன்னி
அருமாமறையாலழைத்தாண்மற் றவனும்வந்தான்.

(இ-ள்.) மருமாலை வல்லி-மணம்பொருந்திய மாலையையணிந்த கொடிபோன்ற குந்திதேவியின், உரை-வார்த்தையை, கேட்டு—, மகிழ்ச்சிகூரும்-மகிழ்ச்சிமிக்க, பெரு மா தவத்தோன்-மிக்கசிறந்த தவமுடையவனாகிய பாண்டுராசன், பணித்து-(தன்உடன்பாட்டைச்) சொல்லி, ஏவிய பின்னர்-(மகப்பெற்றுக்கொள்ளக்)கட்டளையிட்டபின்பு,-முன்னர்-முதலில், மடம் தையல்-மடமைக்குணத்தைக் கொண்ட பெண்ணாகிய குந்திதேவி, தருமாதிபனை கருத்தால் உன்னி-யமதருமராசனை மனத்தினாலெண்ணி, அரு மா மறையால் அழைத்தாள்-(துருவாசமுனிவனுபதேசித்த) அரிய சிறந்த வேதமந்திரத்தாற் கூப்பிட்டாள்: அவனும் வந்தான்—; (எ - று.) (*220*)

**66.**—வந்த யமதருமராசனோடு சேர்ந்து குந்திதேவி அழகுமிக்காளாதல்.

வந்தித்த தெய்வ மெதிர்வந்துழி மன்னு கேள்வற்
சிந்தித்த சிந்தை யினளாய்மலர்ச் சேக்கை சேர்ந்து

குந்தித் தெரிவை நிறைமாமதிக் கூட்டமுற்ற
அந்தித் தெரிவை நிகரென்ன வழகின் மிக்காள்.

(இ - ள்.) வந்தித்த-(தான் மந்திரத்தினால்) வணங்கிய, தெய்வம்—, எதிர் வந்தஉழி-எதிரேவந்தபோது, குந்தி தெரிவை-குந்தியென்ற பெண்,—மன்னு-பொருந்திய, கேள்வன்-(தன்) கணவனை, சிந்தித்த - எண்ணிய, சிந்தையினள் ஆய் - எண்ணமுடையவளாய்,— மலர் சேக்கை சேர்ந்து - மலர்ப்படுக்கையிற் சேர்ந்திருந்து,—நிறை மா மதி கூட்டம் உற்ற-பதினாறுகலைகளும் நிரம்பிய சிறந்த சந்திரனோடு சேர்தலைப்பொருந்திய, அந்தி தெரிவை நிகர் என்ன-மாலைச் சந்தியாகிய பெண்ணுக்கு உவமையாவளென்னும்படி, அழகில் மிக்காள் - அழகினால் மேம்பட்டவளானாள்; (எ - று.) (221)

வேறு.

67.—தருமபுத்திரன் பிறத்தல்.

சிவமுற முகூர்த்தம் வாரந் தினந்திதி கரணம் யோகம்
நவமென வழங்கு கோளு நன்னிலை நின்ற போதில்
அவனியை யொருகோ லோச்சி யாளுமென் றறிவின் மிக்க
தவநெறி முனிவர் கூறப் பிறந்தனன் றருமன் மைந்தன்.

(இ-ள்.) முகூர்த்தம்-முகூர்த்தமும், வாரம்-வாரமும், தினம் - நட்சத்திரமும், திதி-திதியும், கரணம்-கரணமும், யோகம்-யோகமும், (ஆகிய இவை), சிவம் உற-மங்களகரமாகப்பொருந்த,—நவம் என வழங்கும்-ஒன்பது என்று சொல்லப்படுகின்ற, கோள்உம்-கிரகங்களும், நல் நிலை நின்ற போதில்-நன்மையைத்தரக்கூடிய இடத்திலிருக்கையில்,—அவனியை ஒரு கோல் ஒச்சி ஆளும் என்று அறிவின் மிக்க தவம் நெறி முனிவர் கூற-இந்தப்பூமியை (த் தன்) ஒப்பற்ற செங்கோலைச் செலுத்தி ஆள்வான் என்று அறிவினால் மிக்க தவநெறியையுடைய முனிவர் சொல்ல,—தருமன் மைந்தன் பிறந்தனன்-தருமபுத்திரன் பிறந்தான்; (எ - று.)

பாவஞ்செய்வாரை நரகத்திற்செலுத்தித் தருமத்தை நிலைநிறுத்தலால், யமன் தருமன் எனப்படுவான்; இந்த மகன் அந்தத் தருமனுடைய அருளாற் பிறந்தவனாதலால், இவனைத் தருமபுத்திரனென்றே உலகோர் வழங்குவர்: இவன் பெயர், யுதிஷ்டிரன்: இவன், ஐப்பசி மாதத்தில் வளர்பிறையில் பஞ்சமியன்று கேட்டை நட்சத்திரத்தில் அபிசித்திற் பிறந்தானென்று முதனூல்.

இனி முப்பத்துமூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைய மாச்சீர்களுமாகிய அறுசீராசிரிய விருத்தங்கள். (222)

68.—யுதிஷ்டிரன் பிறந்தபோது நன்னிமித்தம் தோன்றுதல்.

உதிட்டிரன்பிறந்தகாலை யுலகினிலுயர்ந்தோர்யாரும்
வதிட்டனைமுதலாவெண்ணு முனிவரும்வானுளோரும்
நிதிப்பயன்பெற்றூர்போல நேயமோடுவகைகூர்ந்தார்
மதித்தநன்னிமித்தம்யாவு மங்கலநிகழ்ந்தவன்றே.

(இ-ள்.) உதிட்டிரன் பிறந்த காலை-யுதிஷ்டிரன் பிறந்தபோது, உலகினில்—, உயர்ந்தோர் யார்உம்-உயர்ந்தவர்யாவரும், வதிட்டனை முதல் ஆ எண்ணும் முனிவர்உம்-வசிட்டனை முதல்வனாகக் கொண்டு எண்ணப்படுகிற இருடியரும், வான்உளோர்உம்-தேவர்களும், நிதி பயன் பெற்றார்போல-நிதியாகிய பயனை யடைந்தவர்போல, நேயமோடு-சிநேகத்தோடு, உவகை கூர்ந்தார்-மகிழ்ச்சி மிக்கவரானார்கள்: மதித்த-சிறந்தனவாக எண்ணப்பட்ட, நல் நிமித்தம் யாஉம்-நல்லநிமித்தங்களெல்லாம், மங்கலம் நிகழ்ந்த-மங்கலமாக நேர்பட்டன; (எ-று.)—அன்றே-ஈற்றசை: தேற்றமுமாம்.

உதிட்டிரன் = யுதிஷ்டிரன்: போரில் நிலையாக நிற்பவன்என்று காரணப்பொருள்படும். உயர்ந்தோரென்றது-சாமானியமாய் உலகத்து மேன்மையுற்றோரை. (223)

69.—பாண்டு, மைந்தன்முகம்நோக்கி மகிழ்தல்.

தண்பிறையெழுச்சிகண்ட சலநிதியெனவேமைந்தன்
பண்புடைவதனநோக்கிப் பார்த்திவன்பாண்டுவென்பான்
கண்பனிதுளிப்பநெஞ்சங் கனிந்தினிதுருகமேனி
வண்புளகரும்பமேன்மேல் வரம்பிலாமகிழ்ச்சிகூர்ந்தான்.

(இ-ள்.) தண் பிறை எழுச்சி கண்ட-குளிர்ந்த பிறைச்சந்திரனது தோற்றத்தைக் கண்ட, சலநிதி என-சமுத்திரம்போல, மைந்தன் பண்பு உடை வதனம் நோக்கி-குழந்தையின் நல்லிலக்கணமமைந்த முகத்தைநோக்கி, பார்த்திவன் பாண்டுஎன்பான்-அரசனாகிய பாண்டு என்பவன், கண் பனி துளிப்ப-(தன்) கண்கள் ஆனந்தக்கண்ணீர் சொரியவும், நெஞ்சம் இனிது கனிந்து உருக-மனம் நன்கு கசிந்துருகவும், மேனி வள் புளகு அரும்ப-தன் உடலில் மிக்கமயிர்க்கூச்சுதோன்றவும், வரம்பு இலா மகிழ்ச்சி-எல்லையில்லாத மகிழ்ச்சியை, மேன்மேல் கூர்ந்தான்-மேன்மேல் மிகப்பெற்றான்; (எ - று.)

சலநிதி = ஜலநிதி: வடசொல். மதிகண்ட கடல் பொங்குதல் இயல்பு. பிறையை யுவமை கூறியதால், வளருந்தன்மையனாதல் பெறப்படும். (224)

70.—குந்தி மகப்பெற்றதைக் கேள்வியுற்ற காந்தாரி பொறாமைகொண்டு வயிறு உள்ளேகுழம்புமாறு கல்லால் மோதிக்கொள்ளுதல்.

அற்றனடுயரமெல்லா மருந்தவப்பயனான்மைந்தற்
பெற்றனள்குந்தியென்னும் பேருரைகேட்டவன்றே
உற்றனள்பொறாமைகல்லா லுதரமுட்குழம்புமாறு
செற்றனட்டனதுகேடு மாக்கமுஞ்சிந்தியாதாள்.

(இ-ள்.) 'குந்தி—,—அரு தவம் பயனால்-அருமையான தவத்தின் பயனால், மைந்தன் பெற்றனள்-மைந்தனைப் பெற்றாள்: (அதனால்), துயரம் எல்லாம் அற்றனள்-துன்பமெல்லாம் நீங்கினாள்,' என்னும்-என்கிற, பேர் உரை-எங்கும் பயின்ற வார்த்தையை, கேட்ட அன்றே-கேட்ட அப்போதே,—(காந்தாரி),-பொறாமை உற்றனள்-பொறாமை யடைந்தவளாய், தனது கேடுஉம் ஆக்கம்உம் சிந்தியாதாள்-(தான் செய்யப்போகிற செயலால்) தனக்குக் கெடுதி

நேரிடுமா அல்லது நன்மை நேரிடுமா என்பதையும் கருதாதவளாய்,—உதரம் உள் குழம்பும் ஆறு கல்லால் செற்றனள்-(தன்) வயிறு உள்ளேகுழம்பும்வகை(அவ்வயிற்றைக்)கல்லால் மோதினாள்; (எ-று.)

நூறுமகவைக்கொண்ட கருப்பமாதலால் அப்பிண்டம் இரண்டுயாண்டு சென்றும் கெட்டியாயிருக்கவே. குந்தி மகவைப் பெற்றதிற் பொறாமை கொண்டு காந்தாரி கல்லால் வயிற்றை மோதிக்கொண்டனளென்க. (225)

**71.—காந்தாரியின்கரு பையோடு குருதிபொங்கப்பூமியில்விழ, வியாசன் சென்று அதனைக் காணுதல்.**

மையறுசுபலன்கன்னி வயினிடைக்கருப்பஞ்சேரப்
பையொடுகுருதிபொங்கப் பார்மிசைவிழுந்ததாகச்
செய்யவன்விழுந்ததிக்கிற் செக்கர்வானென்னச்சென்று
மெய்யுடையரியகேள்வி வேள்விகூர்வியாதன்கண்டான்.

(இ-ள்.) மை அறு சுபலன் கன்னி-குற்றமற்ற (காந்தாரதேசத்ததிபனான) சுபல னென்பானுடைய பெண்ணின், வயினிடை-வயிற்றிலேயுள்ள, கருப்பம்—, செய்யவன் விழுந்த திக்கில் செக்கர்வான் என்ன-சூரியன் அஸ்தமித்த திக்கிலே செவ்வானந்தோன்றுவது போல, பையொடு-கருப்பப்பையுடனே, குருதி பொங்க-இரத்தம்மேல்வழிய, பார்மிசை-பூமியின்மீது, சேர விழுந்தது ஆக-ஒருசேரவிழுந்திட,—சென்று-(கருப்பம் விழுந்த இடத்திலே) சென்று, மெய்உடை அரிய கேள்வி வேள்வி கூர்-உண்மையையுடையவனும் அருமையான கேள்வியையுடையவனுமாகி வேள்வியினால் மிக்கவனான, வியாதன்-வியாசமுனிவன், கண்டான்—; (எ - று.)

குருதிபொங்கவிழுந்த பைக்குச் செக்கர்வானம் உவமை; இவ்வுவமை பாலபாரதத்திலும் வந்துள்ளது. இனி, செய்யவன்-சூரியனானவன், விழுந்த-(தான்) விரும்பிய, திக்கில்-திக்கிலே, செக்கர்வான் என்ன-செக்கர்வானைக் காண்பதுபோல, வியாதன் விழுந்த கருப்பையைக் கண்டான் என்றலும் ஒன்று. (226)

**72.—வியாசன் கோசத்தசையை நூறுகூறுசெய்து நெய்ந்நிரம்பிய நூறு கும்பங்களிலிட்டு, மிச்சமான மாமிசப்பகுதியை ஒருகலசப்பானையி லிட்டு வைத்தல்.**

சஞ்சலமானகோசத் தசையினைத்தாழிதோறும்
எஞ்சலவாகநூறு கூறுசெய்திழுதிலேற்றி
நெஞ்சலர்கருணையாள னின்றவக்குறையுஞ்சேர்த்தி
அஞ்சில்வார்குழலியாகென் றுங்கொருகடத்தில்வைத்தான்.

(இ-ள்.) நெஞ்சு அலர் கருணை ஆளன்-நெஞ்சிலே நிரம்பிய கருணையையுடைய வியாசன்,—சஞ்சலம்ஆன - குழம்பிப்போய்விட்ட, கோசம் தசையினை-கருப்பையிலேயிருந்த மாமிசத்தை, எஞ்சல ஆக-குறைதலில்லாதனவாக, நூறு கூறு செய்து-நூறு பாகமாகச் செய்து, தாழிதோறும்-தாழிகளிலெல்லாமுள்ள, இழுதில்-நெய்யிலே, ஏற்றி-,-நின்ற அ குறைஉம்-எஞ்சிநின்ற அந்தக் குறையும், அம் சில் வார் குழலி ஆக என்று-அழகிய சில்

லென்னும் அணியை யணிதற்குரிய நீண்ட கூந்தலைக்கொண்ட கன்னியாகுக என்று, ஆங்கு-அங்குத்தானே, ஒருகடத்தில்-ஒரு பானையிலே, சேர்த்தி வைத்தான்-இட்டுவைத்தான்; (எ - று.)

இதனால், இழுதைக் கொண்ட நூறு தாழியிலும் அந்தக் கோசத்தசையினை யிட்டமை பெறப்படும். (227)

**73.—வியாசன் காந்தாரியைநோக்கி 'என்வரந்தால்தசைகள் உருவுபெற்று நிரம்பும்வரையிற்சேமித்துவை' என்று சொல்லிப்போதல்.**

கருவுறுதாயைநோக்கிக் கையறுமென்றுகன்றி
வெருவுறல்கற்பின்மிக்காய் வேறுசெய்தசைகள்யாவும்
உருவுறநிரம்பித்தாமே யுற்பவிப்பளவுங்கையால்
மருவுறல்வழுவுருதென் வரமெனவரதன்போனன்.

(இ-ள்.) கரு உறு தாயை நோக்கி-கருவுற்ற தாயைப் பார்த்து, 'கற்பின்மிக்காய்—! கையறும்-(நம்முடைய கருப்பம்) அழிந்திடும், என்று—, கன்றி-மனம்வாடி, வெருவுறல்-அஞ்சாதே: வேறு செய் தசைகள் யாஉம்-நூறுகூறுசெய்த தசைகளெல்லாம், உரு உற-ரூபத்தைப் பொருந்த, நிரம்பி-பூர்ணமாகவளர்ந்து, தாமே உற்பவிப்பு அளவுஉம்-தாமே தோற்றுங்காலம் வரையிலும், கையால் மருவு உறல்-கையால் (அத்தசைக் கூற்றைத்) தொடாதே: என்வரம் வழுஉருது - என்னுடையவரம் பழுதுபடாது,' என-என்று சொல்லிவிட்டு, வரதன்-வரத்தைக் கொடுத்தவனான வியாசன், போனன்—; (எ - று.)

தாழியிற்பெய்த தசைகள் உறுப்புநிரம்பித் தாமே அந்தத் தாழியைப் பிளந்துகொண்டு வெளிவரும் வரையிற் பாதுகாப்பாயென்று சொல்லிச் சென்றனன் வியாசனென்க. தாய்-காந்தாரி.

**74.—காந்தாரி தாழிகளிலிட்ட தசைக்கூறுகளைப் பாதுகாத்து உற்பவிக்கும் பருவத்தை நோக்கியிருத்தல்.**

காம்பெனநிறத்ததோளாள் கருவயிற்றிருப்பதொப்பத்
தேம்பயினறுநெய்பெய்த கலங்களைச்சேமமாக
ஆம்பரிவுடனேயாற்றி யீற்றளையடைந்துவைகும்
பாம்பெனப்பருவநோக்கி யிருந்தனள்பழுதிலாதாள்.

(இ-ள்.) பழுது இலாதாள்-குற்றமற்றவளான, காம்பு என நிறத்த தோளாள்-பசியமூங்கில்போலவுள்ள நிறத்தையுடைய தோளையுடையவளான காந்தாரி, கரு-கருப்பம், வயிறு இருப்பது ஒப்ப-(தன்) வயிற்றில்தானே இருப்பதையொப்ப, தேம் பயில் நறு நெய் பெய்த கலங்களை-இனிமை பொருந்திய நறுமணமுள்ளநெய் யூற்றிய கலங்களை, சேமம் ஆக-பத்திரமாக, ஆம் பரிவுடன் ஆற்றி-பொருந்திய மனப்பரிவோடு பாதுகாத்து,-ஈற்று அளை அடைந்து வைகும் - ஈன்றமுட்டையைக்கொண்ட புற்றையடைந்து தங்குகின்ற, பாம்பு என-பாம்புபோல, பருவம் நோக்கி இருந்தனள்—; (எ - று.)

உவமையாற் கொடுமை தொனிக்கும். ஈற்று:- ஈனப்பட்டது: செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்டுத் திரிந்த பெயர்.

**75.—அதனையறிந்தபாண்டு குந்தியைமீண்டுபலமுறை இரந்துவேண்ட, அன்னாள்மீண்டும் மந்திரத்தால் வாயுதேவனை வரவழைத்துக்கூடுதல்.**

ஈண்டுறுநிகழ்ச்சிகேட்டே யாதவன்மகளைநோக்கிப்
பாண்டுமனிரந்துபல்காற் பணித்தலும்பவனன்றன்னை
மீண்டுமம்மறையாலுன்னி யழைத்தனள்விரைவினோடி
ஆண்டுவந்தவனும்பூத்த கொடியனாளாகந்தோய்ந்தான்.

(இ-ள்.) ஈண்டு-இங்கே [காந்தாரியிடத்தில்], உறு - நடந்த, நிகழ்ச்சி-செய்தியை, கேட்டு-கேள்வியுற்று,—பாண்டு மன்-பாண்டு ராசன்,—யாதவன் மகளை நோக்கி - யதுகுலத்தில் தோன்றிய [சூரன் மகளான] குந்தியைப்பார்த்து, பல் கால் இரந்து பணித்தலும்-பலமுறை வேண்டி(த் தன் கருத்தை)ச் சொல்லுதலும்,— (குந்திதேவி),—பவனன் தன்னை - வாயுதேவனை, மீண்டும்—, அ மறையால் - (முன்பு தருமராசனையழைத்த) அந்தமந்திரத்தினால், உன்னி-நினைத்து, அழைத்தனள்—: ஆண்டு - அப்போது அங்கே, அவன்உம்-அந்தவாயுதேவனும், விரைவின் ஓடி வந்து-, பூத்த கொடி அனாள் - பூத்தகொடிபோன்றவளான குந்தியின், ஆகம்-மார்பில், தோய்ந்தான்-படிந்தான்; (எ-று.) (230)

**76.—நல்லமுகூர்த்தத்தில் வீமனைப் பெறுதல்.**

நெஞ்சுறமணந்துமீள நெடுங்கலைவாகனேகச் வாயு
செஞ்சுடருச்சியெய்திச் சிறந்ததோர்முகூர்த்தந்தன்னில்
அஞ்சனையளித்தபொற்றோ ளனுமனேயுவமையென்ன
வெஞ்சினவிமன்றன்னைப் பயந்தனள்விரதமிக்காள்.

(இ-ள்.) நெஞ்சு உற-மனம்பொருந்த, மணந்து-(அந்தக் குந்திதேவியைக்) கூடி, நெடுங் கலை வாகன் - பெருமைபெற்ற ஆண்மானை வாகனமாகவுடைய அந்தவாயுதேவன், மீள ஏக-மீண்டு செல்ல,—விரதம் மிக்காள்-சிறந்தநோன்பினை நோற்றிருப்பவளான குந்திதேவி,—செஞ் சுடர் உச்சி எய்தி சிறந்தது ஓர் முகூர்த்தம் தன்னில்-செவ்வியசுடரையுடைய சூரிய தேவன் உச்சியையடைந்ததனாற் சிறந்த ஒரு முகூர்த்தத்தில், அஞ்சனை அளித்த பொன்தோள் அனுமன்ஏ உவமை என்ன - அஞ்சனாதேவி பெற்ற அழகிய தோள்வலிமையையுடைய அனுமனே உவமையாவனென்று (உலகோர்) சொல்லுமாறு, (பெருவலி படைத்த), வெம் சினம் வீமன் தன்னை-கொடிய சினத்தையுடைய வீமசேனனை, பயந்தனள்-பெற்றாள்; (எ - று.)

செஞ்சுடருச்சி யெய்திச்சிறந்த முகூர்த்தம்-'அபிஜித்' எனப்படும்: "அபிஜித் ஸர்வதோஷக்ந:" என்ற மேற்கோள் இங்குக் காணத்தக்கது. அஞ்சனை-கேசரியென்னும் வானரராசன்மனைவி: அந்த அஞ்சனையோடு வாயுதேவன் கலந்துபெற்ற வானரப்புதல்வன் அனுமான். இவன் பிறந்தபோது பசியால் இளஞ்சூரியனைக் கனியென்று கருதிப் பாய்ந்து இந்திரனால் தாக்கப்பட்டு முறிந்த கவுளையுடையவனாதலால், 'அனுமான்' எனப்பட்டான். (231

77.—அப்போது நன்னிமித்தந் தோன்றுதல்.

தண்பரிமளமென்சாயற் றந்தையுந்திசைகடோறும்
எண்பெறுமுயிர்கட்கெல்லா மிதமுறுபொலிவின்வீச
நண்புடையனலன்றானு நலமிகுநண்புதோன்றப்
பண்புறவலம்வந்தோங்கிப் பரிவுடன்விளக்கஞ்செய்தான்.

(இ - ள்.) தண் பரிமளம் மெல் சாயல்-குளிர்ந்த நறுமணத்தையும் மெல்லிய பரிசத்தையுமுடைய, தந்தைஉம்-வாயுதேவனும், திசைகள் தோறுஉம் - திக்குக்கள்தோறும், எண் பெறும் உயிர்கட்கு எல்லாம்-(மதியாற்றலுடையனவாக) மதிக்கப்படுகிற பிராணிகட்கெல்லாம் [மனிதர்கட்கெல்லாம்], இதம் உறு பொலிவின் வீச-இனிமையாகத் தோன்றுமாறு நன்குவீச,—நண்பு உடை அனலன் தான்உம்-(அந்தவாயுதேவனோடு) நட்பையுடைய அக்கினிதேவனும், நலம் மிகு நண்பு தோன்ற-நன்மைமிகுந்த நட்புத் தோன்றும்படி, பண்புஉற-நல்லநிமித்தமாக, வலம்வந்து ஓங்கி-வலப்புறமாகச்சுழலும் சுவாலையுடன்கிளர்ந்து, (ஆங்காங்கு ஓமஞ்செய்பவர் மனையில்), பரிவுடன் - அன்போடு, விளக்கம்செய்தான்-விளங்குதலைப் பொருந்தினான்; (எ - று.)

இனிதுகாற்றுவீசுதலும், அக்கினிவலப்புறமாகச்சுழலும் சுவாலையைப்பெற்றிருத்தலும் நன்னிமித்தங்களாம். 'வலந்திரியாப் பொங்கி' (200) என்றது புறப்பொருள் வெண்பா மாலை. (232)

78.—வீமசேனன்தோன்றியதற்கு முன்னாளில் இழுதுதாழியிலிட்ட தசை முற்றித் துரியோதனன் தோன்றுதல்.

அன்னநாளனிலன்மைந்தன் பிறந்தனனாகவற்றை
முன்னைநாள ருக்கன்வேலை முழுகியமுகூர்த்தந்தன்னில்
இன்னநாளுருவமுற்றி யெழில்பெறுமென்றுமுன்னோன்
சொன்னநாள்வழுவுருமற் சுயோதனன்றோன்றினானே.

(இ - ள்.) அன்ன நாள்-அந்த [ச்சிறந்த] நாளில், அனிலன் மைந்தன் பிறந்தனன் ஆக-வாயுதேவனுடையபுத்திரன் பிறந்தானாக,—அற்றை முன்னை நாள்-அன்றைக்கு முன்னாளில், அருக்கன் வேலை முழுகிய முகூர்த்தந்தன்னில்-சூரியன் கடலிலே முழுகின [அஸ்தமித்த] முகூர்த்தத்தில், இன்ன நாள் உருவம் முற்றி எழில் பெறும் என்று முன்னோன் சொன்ன நாள் வழுஉருமல்-இந்தநாளிலே உருவம் முற்றுப்பெற்று அழகிய குழந்தையாகுமென்று வியாசமுனிவன் சொன்னநாள் தவறாதபடி, சுயோதனன்-, தோன்றினான்—; (எ - று.)

இதனால், தருமபுத்திரனுக்குப்பின் வீமசேனனுக்குமுன் தோன்றியவன், துரியோதன னென்க. ஸுயோதநன் என்ற வடசொல்-நன்கு [வெற்றியுண்டாகப்] பொருபவ னென்று பொருள் படும். (233)

79.—துரியோதனன் தோன்றியபோது தீநிமித்தங்கள் தோன்றுதல்.

வாரியினதிர்ந்துவிம்மு மங்கலமுழவமேன்மேல்
ஓரியின்குரலாலோதை யொடுங்கினவிடங்கடோறும்
பாரியகுலத்தோர்கண்ணி னுவகைநீர்பனிக்குமுன்னே
சோரியந்தரத்தினின்றுஞ் சொரிந்ததுசோனைமேகம்.

(இ - ள்.) வாரியின்-கடல்போல, அதிர்ந்து விம்மும் - அதிர்ந்துஒலிக்கின்ற, மங்கலம்முழவம்-மங்கலமுரசு, மேன்மேல்-, ஓரியின் குரலால்-நரியின் ஊளையிடுங்குரலினால், ஓதைஒடுங்கின-ஓசையடங்கின: இடங்கள்தோறும்-(அஸ்தினபுரியின்) பலஇடங்களிலும், பாரிய குலத்தோர் கண்ணின்-பெருமைபெற்ற குலத்தவரின் கண்களிலே, உவகை நீர் பனிக்கும் முன்னே - ஆனந்தக் கண்ணீர் துளிக்கும் முன்னே, சோண மேகம்-(உற்பாதமாகத் தோன்றி) இடைவிடாமற் பொழியும் மேகமானது, அந்தரத்தில் நின்றும் சோரி சொரிந்தது-ஆகாசத்திலிருந்து இரத்தத்தைப் பொழிந்தது, (எ-று.)

பாரிய-'பருமை' என்றபண்பின்மேல் வந்த குறிப்புப்பெயரெச்சம். 'ஓதையடங்கின' எனவும் பாடம். (234)

**80.—மற்றும் துரியோதனன்தம்பியரும் துச்சளையும் தோன்றுதல்.**

**கோள்களினிலையாற்றீமை கொண்டனமுகூர்த்தந்தன்னில்**
**தேள்களிற்கொடியமற்றைச் சிறுவருஞ்சேரவோரோர்**
**நாள்களிற்பிறந்தபின்னர் நங்கையுமொருத்திவந்தாள்**
**தோள்களிற்கழையைவென்ற துச்சளையென்னும்பேராள்.**

(இ-ள்.) கோள்களின் நிலையால்-கிரகங்கள் நிற்கின்ற நிலைமையினால், தீமை கொண்டன-தீங்கைக்கொண்டனவான, முகூர்த்தந்தன்னில்-முகூர்த்தங்களிலே,—தேள்களின் கொடிய மற்றை சிறுவர்உம்-தேளைக்காட்டிலும் கொடுமையையுடைய மற்றைத்தம்பிமாரும், சேர-அடுத்து, ஓர் ஓர்நாள்களில் பிறந்த பின்னர் - ஒவ்வொருநாளிற் பிறந்தபின்பு, தோள்களின் கழையை வென்ற துச்சளை என்னும் பேராள் நங்கை ஒருத்திஉம்-தோள்களினால் மூங்கிலை வென்ற துச்சளையென்னும் பேரையுடைய ஒருபெண்ணும், வந்தாள்-தோன்றினாள்; (எ - று.)

இதனால், துரியோதனன் தம்பிமாரெல்லாம் வீமசேனனுக்குப் பின் பிறந்தவராவரென்பதை யறியலாம். துரியோதனன் பிறந்த நாளுக்கு அடுத்தநாள் துச்சாதனன் அடுத்தநாள் மற்றொருவன் என இவ்வாறாகத் துரியோதனன்தம்பிமார் தொண்ணூற்றொன்பதின்மரும் தோன்றினரென்க. (235)

**81.—காந்தாரி பெருமகிழ்ச்சிகொண்டு விளங்குதல்.**

**பின்னியபுதல்வராலும் பிறந்தமென்புதல்வியாலும்**
**துன்னியமகிழ்நனாலுந் துலங்கியசுபலன்பாவை**
**தன்னிகர்பரிதியாலுஞ் சதவிதழாலுஞ்செம்பொற்**
**கன்னிகையாலுஞ்சோதி கலந்தசெங்கமலம்போன்றாள்.**

(இ-ள்.) பின்னிய புதல்வரால்உம் - நெருங்கிய பலபுத்திராலும், பிறந்த மெல் புதல்வியால்உம்-பிறந்த மென்மையான புத்திரியாலும், துன்னிய மகிழ்நனால்உம்-நெருங்கியகணவனாலும், துலங்கிய-விளங்கிய, சுபலன் பாவை-சுபலனுடைய பெண்ணாகிய காந்தாரி,. தன் நிகர் பரிதியால்உம் - தனக்குத்தானே ஒப்பான

சூரியனாலும், சதம் இதழாலும்-(தான் பெற்றுள்ள) நூறு இதழ் களாலும், செம் பொன் கன்னிகையால்உம்-செம்பொன்னிறமான பொகுட்டாலும், சேர்தி கலந்த-ஒளிபொருந்திய, செம் கமலம் - செந்தாமரையை, போன்றுள்-ஒத்தாள்; (எ - று.)

சதவிதழ் புதல்வர்க்கும், கன்னிகை புதல்விக்கும், பரிதி மகிழ்நனுக்கும், கமலக்கொடி காந்தாரிக்கும் உவமை யெனக் காண்க. கன்னிகை-கர்ணிகா: தாமரைப்பூவினிடையிலுள்ள பொகுட்டு எனப்படும் உறுப்பு. பாலபாரதத்தில் "ஸ—பலஸ்ய கந்யகா | ஆமுக்த பார்ச்வஸ்திதி ராத்மஜைர்பபௌ-சதோநபத்ரை ரிவபத்மகர்ணிகா" என்று காந்தாரிக்குக் கர்ணிகையும், புதல்வர் கட்கு இதழ்களுமே உவமையாகக் கூறப்பட்டுள்ளன. (236)

82.—மீண்டும் பாண்டுவின் ஏவற்படி மந்திரத்தாற் குந்தி இந்திரனை யெண்ண, அவன் அவளைக் கூடுதல்.

பான்மொழிக்குந்திமீண்டும் பாண்டுவினேவல்பெற்று
வான்மொழிமறையாலுன்னி வானவர்க்கரசைநோக்க
மேன்மொழிவதுமற்றென்கொல் விடுவனோவிரைவின்வந்து
தேன்மொழித்தெரிவைமெய்யுஞ் சிந்தையுங்களிக்கச்சேர்ந்தான்.

(இ-ள்.) பால் மொழி குந்தி-பால்போலினிய பேச்சையுடைய குந்தி யென்பாள், மீண்டுஉம் - மறுபடியும், பாண்டுவின் ஏவல் பெற்று-பாண்டுமன்னவனுடைய ஏவலையடைந்து, வான் மறை மொழியால்-சிறந்த வேதமந்திரச் சொல்லால், வானவர்க்கு அரசை உன்னி நோக்க-தேவேந்திரனை (மனத்தினாற்) சிந்தித்துப் பார்க்க,— மற்று-இனி, மேல் மொழிவது என்கொல்-(நாம்) மேலே நிகழ்ந்ததைச் சொல்லவேண்டுமோ? விடுவன்ஓ-(மறைமொழி யாற்சிந்தித்து நோக்கியபின் அந்தத்தேவேந்திரன் வாராது) விடு வனோ? விரைவின் வந்து—, தேன் மொழி தெரிவை - தேன் போன்ற பேச்சையுடைய அந்தப்பெண்ணின், மெய்உம்சிந்தைஉம் களிக்க—, சேர்ந்தான்—; (எ - று.)—'வந்தத்தேன்மொழி' என வும் பாடம். (237)

83.—பங்குனியுத்தரத்தில் அருச்சுனன் பிறத்தல்.

எங்குநன்னிமித்தஞ்செல்ல விருநிலமகிழ்ச்சிகூரப்
பங்குனிநிறைந்ததிங்க ளாதபன்பயிலுநாளில்
வெங்குனிவரிவில்வாகை விசயனும்பிறந்தான்வென்றிப்
பங்குனனென்னுநாமம் பகுதியாற்படைத்திட்டானே.

(இ-ள்.) எங்குஉம்-எல்லாவிடத்திலும், நல் நிமித்தம் செல்ல- நல்ல நிமித்தங்கள்தோன்றவும், இரு நிலம் மகிழ்ச்சிகூர-பெரிய நிலவுலகத்திலிருப்பவர் மகிழ்ச்சி மிகவும், பங்குனி-பங்குனிமாதத் தில், நிறைந்த திங்கள்-பதினாறுகலைகளோடும் நிரம்பிய சந்திர னைக்கொண்ட, ஆதபன் பயிலும் நாளில் - சூரியன் தோன்றிய நாளில், [பங்குனியுத்தரநாளில்], வெம் குனி வரி வில் வாகை விச யன்உம்-கொடிய வளையுந்தன்மையுடைய கட்டமைந்த வில்லை யேந்திய வாகைப்பூமாலையைச் சூடிய அருச்சுனனும், பிறந் தான்—: வென்றி பங்குனன் என்னும் நாமம்-வெற்றியையுடைய

பல்குனன் என்னும் பேரை, பகுதியால்-(பிறந்ததினத்தின்) தன்மையால், படைத்திட்டான்-(பிறந்த அக்குமரன்) பெற்றான்;(எ-று.)

பங்குனியுத்தரத்திற் பிறந்ததனால், பிறந்த அக்குமாரனுக்குப் பல்குநன் என்று பேராயிற்று: பல்குநன் என்ற இச்சொல், பங்குனன் என்று திரிந்து வரும்: உத்தரத்துக்குச் சூரியன் தேவதையாதலால், அந்நாளை 'ஆதபன் பயிலுநாள்' என்றார். 'வரிவில் வாழ்க்கை' எனவும் பாடம். (238)

**84.—அப்போது பல நன்னிமித்தங்கள் தோன்றுதல்.**

**கற்பகமலர்கள்சிந்திக் கடவுளர் கணங்களாட**
**வெற்பகமுனிவரீண்டி மங்கலவேதம்பாடப்**
**பொற்பகமுழவுவிம்மப் புரிவளைமுழங்கியார்ப்ப**
**நற்பகலிதுவென்றெல்லா வுலகமுநயந்தவன்றே.**

(இ - ள்.) கடவுளர் கணங்கள்-தேவர்களின் திரள், கற்பகம் மலர்கள் சிந்தி—, ஆட-ஆனந்தக்கூத்தாடவும்,—வெற்பு அகம் முனிவர் ஈண்டி-(அருச்சுனன்பிறந்த) மலையினிடத்தே இருடியர் திரண்டு, மங்கலம் வேதம்பாட-மங்கலமானவேதங்களைப்பாடவும்,— பொற்புஅகம் முழவு விம்ம-அழகைத் தம்மிடத்துக் கொண்ட முரசங்கள் ஒலிக்கவும், புரி வளை முழங்கி ஆர்ப்ப-உட்சுழிவுள்ள சங்கவாச்சியங்கள் பேரொலிசெய்து ஒலிக்கவும், இது நல் பகல் என்று-இது நல்ல பகற்காலமென்று, எல்லாம் உலகம் உம்-உலகத்தவரெல்லாம், நயந்த - (அந்நாளை) விரும்பிக்கொண்டாடினர்; (எ - று.)

வேதத்தில் மங்களமான பகுதி,ஸ்வஸ்திவாசனம் போல்வன, பாண்டு தவஞ்செய்த சதச்ருங்கமலையில்தானே இந்தப் பாண்டு புத்திரர் தோன்றினரென அறிக. அன்றே-ஈற்றசை; தேற்றமுமாம். (239)

**85.—மன்னன் கட்டளைப்படி குந்தி அந்த மந்திரத்தை மாத்திரிக்கு உபதேசிக்க, அவள் வேண்டியபடி அசுவினிதேவர்கள் வருதல்.**

**இறைவனுமகிழ்ந்துபின்னும் யாதவிக்குரைப்பவந்த**
**மறையினைமுறையிற்பெற்ற மத்திரராசன்கன்னி**
**குறைவறவிருவர்வேண்டுங் குமரரென்றுன்னிநின்றாள்**
**நிறையுடையிரவிமைந்த ரிருவருநினைவின்வந்தார்.**

அசுவினி தேவர்

(இ - ள்.) இறைவன்உம்-பாண்டுராசனும், மகிழ்ந்து-மகிழ்ச்சிகொண்டு, பின்னும்-மேலும், யாதவிக்கு உரைப்ப - குந்திதேவியினிடம் (அந்த மந்திரத்தை மாத்திரிக்கு உபதேசிக்குமாறு) சொல்ல,—அந்த மறையினை-அந்த வேதமந்திரத்தை, முறையில் பெற்ற-முறைமையாக அடைந்த, மத்திரராசன் கன்னி - மத்திரராசனுடைய பெண்ணான மாத்திரி, 'குறைவு அற-குறைநீங்க, குமரர்இருவர் வேண்டும்-இரண்டு குமாரர்வேண்டும்', என்று—, உன்னி நின்றாள்-(அசுவினிதேவர்களை) நினைத்து நின்றாள்: நிறை உடை-(நற்குணங்கள்) நிறைதலையுடைய, இரவி மைந்தர் இருவர் உம்-சூரியகுமாரரான அசுவினிதேவதைகளிரண்டுபேரும், நினைவின் வந்தார்-(அந்த மாத்திரியின்) நினைவின்படியே வந்தார்கள்; (எ - று.)—அசுவினிதேவர்கள், இரட்டையரானவர். (240)

86.—மாத்திரிக்கு இரண்டுபுத்திரர் ஒருசேரப் பிறத்தல்.

மருவருங்குழலியாயு மறையினல்வரிசைபெற்ற
இருவருமொருவர்போல வின்புறமணந்தபோதில்
பருவரலியாதுமில்லாப் பாலகரிருவர்சேரக்
கருவிளைந்துதித்தார்யாருங் கண்ணெனக்காணுநீரார்.

(இ-ள்.) மரு வரும் குழலி-நறுமணம் பொருந்திய கூந்தலையுடையளான மாத்திரி, ஆயும் மறையினல்-தியானித்துக் கூறிய வேதமந்திரத்தினல், வரிசை பெற்ற இருவர்உம்-சிறப்புப்பொருந்திய(தேவவைத்தியர்களாகிய) அசுவினீதேவ ரிரண்டுபேரும்,ஒருவர்போல-ஒருத்தர்போல (வந்து), இன்புறமணந்த போதில்-(மாத்திரி) இன்பமடைய (அவளைச்) சேர்ந்தசமயத்தில், பருவரல் யாதுஉம் இல்லா - துன்பமென்பது சிறிதுமில்லாமல், பாலகர் இருவர்சேர கருவிளைந்துஉதித்தார்-இரண்டு குழந்தைகள் ஒருசேரக் கருப்பத்திலே முதிர்ந்து வெளிப்பட்டார்கள்:யார்உம்கண் என காணும் நீரார்-(அந்தக் குழந்தைகள்) யாவராலும் கண்ணெனக் கருதும்படியான நற்குணமுள்ளவர்; (எ-று.) (241)

87.—ஐந்துமைந்தரால் பாண்டு மகிழ்ச்சியடைந்து வாழ்தல்.

சசிகுலநகுலனென்றுந் தம்பிசாதேவனென்றும்
விசயனேடெண்ணும்விமன் மேதகுதருமனென்றும்
அசைவறுசிங்கசாபமனையவரைவராலும்
வசையறுதவத்தின்மிக்கான் மகிழ்ச்சியால்வாழ்வுபெற்றுன்.

(இ-ள்.) சசிகுலம்-சந்திரகுலத்துத்தோன்றிய,நகுலன் என்றுஉம்—, தம்பி சாதேவன் என்றுஉம்-(அவன்) தம்பியாகிய சகதேவனென்றும், விசயனேடு - அருச்சுனனுடனே, எண்ணும்-(யாவராலும்) மதிக்கப்படுகின்ற, வீமன்-வீமனும், மேதகு தருமன் என்றுஉம்-மேன்மைபெற்ற தருமபுத்திரனும் என்றும், அசைவு அறு சிங்கசாபம் அனையவர் ஐவரால்உம்-சோர்தலில்லாதசிங்கக்குட்டியை யொத்தவரான ஐந்துகுமாரர்களாலும், வசை அறு தவத்தின் மிக்கான்-குற்றமற்ற தவத்தினல் மிக்கவனுன பாண்டு, மகிழ்ச்சியால்-மகிழ்ச்சிகொண்டு, வாழ்வு பெற்றுன்—; (எ - று.)

88.—குமாரர்கள் விளையாடுதல்.

தாதியர்மருங்குந்தந்தை தடமணிமார்பும்பெற்ற
பேதையர்கரமுநீங்காப் பெற்றியின்வளர்ந்தபின்னர்ப்
போதகமடங்கல்புல்வாய் புலிமுதல்விலங்கோடோடி
வேதியர்முன்றிருேறும் விழைவிளையாட்டுற்ருர்.

(இ-ள்.) (சிலகாலத்தில்), தாதியர் மருங்குஉம் - செவிலித்தாயரின் இடுப்பையும், (சிலகாலத்தில்),தந்தை தட மணி மார்புஉம்-தந்தையாகிய பாண்டுவின் விசாலமான அழகியமார்பையும், (சிலகாலத்தில்), பெற்ற பேதையர் கரம்உம்-(தம்மைப்) பெற்ற பேதைமைக்குணமுடையவரான தாய்மாரின்கையையும், நீங்கா-நீங்காத, பெற்றியின்-தன்மையோடு, வளர்ந்தபின்னர் - வளர்ந்த பின்பு,—போதகம்-யானைக்கன்றும், மடங்கல்-சிங்கமும், புல்வாய்-

மானும், புலி - புலியும், முதல்-முதலிய, விலங்கொடு-மிருகங்களு டனே, ஓடி-(தொடர்ந்து) விரைந்து சென்று, வேதியர் முன்றில் தோறும் - பிராமணருடைய வீட்டின் முன்னிடங்கடோறும், விழை-(கண்டவர்) விரும்புகின்ற, விளையாடல் - விளையாடலை(ச் செய்தற்கு), உற்றார்-(அக்குமாரர்) தொடங்கினார்கள்; (எ - று.)

குழந்தைகள் நடக்கும் பருவத்திற்கு முன்னே வளர்ந்த மையை முன்னிரண்டடிகள் தெரிவிக்கும்: நடக்கும்பருவத்தில் தானே அக்குழந்தைகள் மிக்கவீரமும் சுறுசுறுப்பும் பெற்றிருந்த மையைப் பின்னிரண்டடிகள் தெரிவிக்கும். மருங்கு-இடை, இடுப்பு; "எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும்" என்றதும் காண்க. இனி, மருங்கு-சமீபம் எனினுமாம். (243)

**89.—அக்குமாரர்கள் பூணூல்பூண்டு விச்சைபயின்று யௌவன பருவத்தை யடைதல்.**

**செய்தவமுனிவர்தம்மாற் சிகையுடன்புரிநூல்சாத்திக்**
**கைதவமின்றியெண்ணெண் கலைக்கடற்கரையுங்கண்டு**
**மெய்தவம்விளங்கவேழ வில்லியும் விழைந்துநோக்க**
**மைதவழ்சிகரியன்ன வளர்ச்சியின்வனப்பின்மிக்கார்.**

(இ - ள்.) செய் தவம் முனிவர் தம்மால் - செய்த தவத்தை யுடைய முனிவரால், சிகையுடன்-குடுமிவைக்குஞ் சடங்குடனே, புரிநூல் சாத்தி-வெண்புரிநூலும் அணிவிக்கப்பெற்று, (அக் குமாரர்கள்), கைதவம் இன்றி - வஞ்சனையில்லாமல், எண் எண் கலை கடல்கரைஉம்-அறுபத்துநான்கு கலைகளாகிய கடலின் கரை களையும், கண்டு-, மெய்தவம் விளங்க-உண்மையான தவம் விளங்க, வேழம் வில்லிஉம் விழைந்து நோக்க-கரும்பைவில்லாகவுடைய மன்மதனும் விரும்பிப்பார்க்க,—மை தவழ் சிகரி அன்ன வளர்ச்சி யின்-மேகந்தவழ்கின்ற மலையையொத்த வளர்ச்சியோடு, வனப் பின் மிக்கார்-அழகில் மிக்கவரானார்கள்; (எ - று.)

முற்பிறவியிற்செய்த நல்வினையினாலேயே இப்பிறவியில் கல்வி முதலியன கைகூடு மாதலால் 'கலைக்கடற்கரையுங்கண்டு மெய்தவம் விளங்க' என்றது. செய்யுணோக்கி, 'மெய்தவம்' என்றது இயல்பாயிற்று. மலைபோன்ற பெருந்தோற்ற முடையவராய் வளர்ந்து யௌவனப்பருவம் வந்ததனால் அழகினால் மிக்கவ ரானார், அந்தப்பாண்டு புத்திரர்க ளென்க. "க்ரமேணதேஷாம்-ப்ரஸாதயாமாஸவபூம்ஷி யௌவநம்" என்றது,பாலபாரதம். (244)

**90.—ஐம்புதல்வரிடத்தும் தோன்றிய நற்பண்புகள்.**

**மார்பினுமகன்றகல்வி வனப்பினுநிறைந்தசீர்த்தி**
**போர்வருதெரியன்மாலைப் புயத்தினுமுயர்ந்தகொற்றம்**
**சீர்தருவாய்மைமிக்க கண்ணினுஞ் செங்கைவண்மை**
**பார்வளஞ்சுரக்குஞ்செல்வப் பரப்பினும்பரந்தவன்றே.**

(இ-ள்.) கல்வி - (அந்தப்பாண்டு புத்திரர்களுடைய) கல்வி யானது, மார்பின்உம் - (அவர்களுடைய) மார்பைக்காட்டிலும், அகன்ற-; சீர்த்தி-சீர்த்தியானது,வனப்பின்உம்-(அவர்களுடைய) அழகைக்காட்டிலும், நிறைந்த-நிறைந்தன: போர் வரு தெரியல்

மாலை புயத்தின்உம்-போரிற் பூணப்படுகின்ற விளங்குதலையுடைய வெற்றிமாலையையணிந்த புயத்தைக்காட்டிலும், கொற்றம் உயர்ந்த-(அவர்களது)வெற்றி மிக்கன: சீர் தரு வாய்மை-சிறப்புப் பொருந்திய சத்தியமானது, கண்ணின்உம் மிக்க - (அவர்களின்) கண்ணைக் காட்டிலும் மிக்கன: செங் கை வண்மை - (அன்னாரின்) செவ்விய கையினாற்செய்யப்படும் தானம், பார் வளம் சுரக்கும் செல்வம் பரப்பின்உம்-பூமியிலே செழிப்பினாலுண்டாகின்ற செல்வப்பரப்பைக் காட்டிலும், பரந்த-மிக்கன; (எ-று.)

அகன்றமுதலியவை-பலவின்பால் முற்றுக்கள்: ஐவர்மாட்டும் உளவாதற்கேற்ப வந்தன. "சீர்த்திமிகு புகழ்." கண்ணின் மிகுதல்-அருமைகொண்டு பாராட்டுதல். (245)

### 91.—வசந்தகாலம் வருதல்.

ஆரமுமாரச்சேறு மரும்பனிநீரும்பூவும்
ஈரவெண்மதிநிலாவு மிதம்பெறுதென்றற்காலும்
ஒருயிரிரண்டுமெய்யா யுருகுவாருருகும்வண்ணம்
மாரணைமகுடஞ்சூட்ட வந்ததுவசந்தகாலம்.

(இ-ள்.) ஆரம் உம் - முக்தாஹாரமும், ஆரம் சேறுஉம்-சந்தனக்குழம்பும், அரும்பனி நீர்உம்-அருமையான பனிநீரும், பூஉம்-புஷ்பங்களும், ஈரம் வெள் மதி நிலாஉம்-குளிர்ச்சிபொருந்திய வெண்ணிறமுள்ள சந்திரனுடைய நிலவும், இதம் பெறு தென்றல் கால்உம்-இதமாக வீசுதல் பொருந்திய தென்றற்காற்றும், ஓர் உயிர் இரண்டு மெய் ஆய் உருகுவார்-ஒருயிரும் இரண்டுமெய்யுமாகி(க் காதலுடையராய்க் கூடாது பிரிந்து) மனங்கசிந்துநிற்பவர், உருகும் வண்ணம் - பின்னும் உருகும்படி, மாரனை மகுடம் சூட்ட-மன்மதனை மகுடஞ்சூட்டுமாறு, வசந்தகாலம் வந்தது—;

பிரிந்திருப்போர் மிகவும் மனம்உருக வசந்தகாலம் வந்தது; வசந்தகாலம் வரவே, மன்மதன் முடிசூடித் தன்செங்கோலைச் செலுத்தலாயினன். மூன்றுமடிக்கு-ஒருயிர் இரண்டு சரீரத்திலும் பொருந்த உருகுகின்ற ஆடவர்களும் மகளிரும் கலவிவேட்டுருகும்படி என்று உரைத்தலும் ஒன்று. (246)

### 92.—மூன்றுகவிகள்-வசந்தகாலத்துச் சோலைவருணனை.

விதுநலம்பெறுகாவெங்கு மெய்சிவப்பேறவண்டு
புதுமையின்முரன்றுமொய்ப்பப் புதுமணம்பரந்துலாவக்
கதுமெனத்தலைநடுங்கக் காறடுமாறிற்றம்மா
மதுவயர்ந்தவரில்யாவர் மண்ணின்மேன்மயக்குறாதார்.

(இ-ள்.) விது - சந்திரனால், நலம் பெறு-நன்மைபெற்ற, கா-சோலை, எங்குஉம் மெய்சிவப்புஏற-எல்லாவிடத்திலும் தன்னுடலில் (புதுத்தளிர் வெடித்தலால்) செந்நிறம்மிகவும், வண்டு-வண்டென்னும்பறவை, புதுமையின் முரன்று மொய்ப்ப-புதுமையினாலொலித்து மொய்க்கவும், புது மணம் பரந்துஉலாவ-புதுமையான மணம் பரவி யுலர்வவும், கதுமென தலைநடுங்க-விரைவாகமேலிடம் நடுங்கவும், கால் தடுமாறிற்று-கால் தடுமாறலாயிற்று; மண்ணின் மேல்-பூமியின்மீது, மது அயர்ந்தவரில் - கள்ளைப்பருகியவரில், மயக்குறுதார் யாவர்—? (எ-று.)—அம்மா-வியப்புக்குறிக்கும்,

காவினிடத்துக் கள்ளுண்டவரின் தன்மை ஏற்றிக் கூறப் பட்டது. மதுவயர்நல்-வேனிற்பருவத்தைப் பெறுதலும், கட்பருகு தலும்: தலைநடுங்குதல் - மேலிடம் நடுங்குதலும், தலையென்ற உறுப்பு நடுங்குதலும்: கால்தடுமாறல்-காற்றுவீசுதலும்,காலென்னும் உறுப்புத் தடுமாறலும். கட்பருகுவோர்க்கு உடலில் சிவப்பு நிறந் தோன்றுதலும், கள்ளின் புதுமணத்திற்காக வண்டு மொய்த்தலும், புதுமணம் உலாவுதலும், தலைநடுங்குதலும், கால் தடுமாறுதலும் நிகழ்வதுபோல, வேனிற்பருவத்தைப்பெற்ற காவுக்குப் புதுத்தளிரால் மெய்சிவப்பேறுதலும், புதுத்தேன் பொருட்டு வண்டுமொய்த்தலும், புத்தரும்புகள் அலர்வதால் புதுமணம்பரந்துலாவுதலும், மேற்புறம் அசைதலும், கால்தடுமாறலும் [காற்றுத்தடுமாறுதலும்] தோன்றினவென்க. இச் செய்யுள் - சிலேடையை யங்கமாகக்கொண்டுவந்த வேற்றுப்பொருள் வைப்பணியாகும். (247)

**93.** பைந்தடந்தாளான்முன்னம் பருகியபுனலைமீளச்
செந்தழலாக்கியந்தண் சினைதொறுங்காட்டுஞ்சீரான்
முந்தியவசோகுசூத முதலியதருக்களெல்லாம்
இந்திரசாலம்வல்லோ ரியற்கையினியற்றுமாலோ.

(இ-ள்.) பைந் தட தாளால் முன்னம் பருகிய புனலை மீள செந்தழல் ஆக்கி-பசிய பெரிய தாளினால் முன்பு உட்கொண்ட நீரை மீளவும் செந்நிறத்தழலாகச்செய்து, அம் தண் சினை தொறு உம் காட்டும் சீரால்-அழகிய குளிர்ந்த கிளைதோறும் காட்டுகின்ற சீர்மையினால்,முந்திய அசோகு சூதம் முதலிய தருக்கள் எல்லாம்- (சோலையில்) முற்பட்டுள்ள அசோகு மா முதலிய விருட்சங்கள் யாவும், இந்திரசாலம்வல்லோர் இயற்கையின்-இந்திரசால வித்தையில் வல்லவர்கள்செய்யும் தன்மைபோல, இயற்றும்-தொழிலைச் செய்வனவாம்:(எ-று.)—ஆல்ஓ-வியப்பைக் குறிக்கும்இடைச் சொற்கள்.

தாளாலுண்டபுனலைக் கிளைதோறும் செந்தழலாக்கிக்காட்டுவதால், இந்திரசாலம்வல்லோர்செய்கைபோலும் இத்தருக்களின் செய்கையென்றார். இந்திரசாலம்-மாயவித்தை. கிளைதோறும் செந்நிறத்தளிர்கள் தோன்றியதைச் செந்தழலாக்கிக்காட்டுஞ்சீர் என்றது-தற்குறிப்பேற்றவணி.'மீள' என்றசொல்லாற்றலால்,'அக்நேராப:' [தீயிலிருந்து நீர்] என்ற காரணகாரியமுறைமாறியமைதொனி.

**94.** பரந்தெழுசூதபுட்ப பராகநல்லிராகமிஞ்ச
முரண்படுசிலைவேள்விட்ட மோகனச்சுண்ணம்போன்ற
புரிந்ததொல்யோகமாக்கள் புந்திநின்றுருகத்தொட்ட
அருந்தழற்கணைகள்போல வலர்ந்தனவசோகசாலம்.

(இ - ள்.) பரந்து எழு-பரவியெழுகின்ற, சூதபுட்ப பராகம்-மாம்பூவின் தூளிகள், நல் இராகம் மிஞ்ச-சிறந்த காதல் விஞ்சும் படி, முரண் படு சிலை வேள்-மாறுபட்ட வில்லையேந்திய மன்மதன், விட்ட-(யௌவனப் பருவத்தையுடையார்மேல்) எய்த, மோகனம் சுண்ணம்போன்ற - மோகனாஸ்திரத்தின் பொறியைப்போலும்: அசோகசாலம் - அசோகமலர்த்திரள்,—புரிந்த தொல் யோகம் மாக்கள்-செய்த சிறந்த பழமையான யோகத்தையுடைய மானுடர், புந்தி நின்று உருக - அறிவு குன்றியுருகும்படி,

தொட்ட-(மன்மதன்) தொடுத்துவிட்ட, அரு தழல் கணைகள் போல-அரிய ஆக்நேயாஸ்திரத்தைப்போல, அலர்ந்தன - மலர்ந்தன; (எ - று.)

மோகனச்சுண்ணம்-மேலேபட்டமாத்திரத்தில் மோகத்தையுண்டாக்குஞ் சூர்ணமெனினுமாம். அசோகம் யோகிகட்கும் காமத்தையுண்டாக்கிற்றென்பது பின்னடிகளின் பொருள். இனி, யோகம் என்பதை வியோகமென்பதன் முதற்குறை எனக்கொண்டு, பிரிவு என்று உரைப்பினுமாம்: பாலபாரதத்தில் "புஷ்பம்அசோகசாகிந: | ப்ரஸ-ுநபாணோ ருஷா வியோகிஷு-ப்ரயுக்தம் ஆக்நேய மிவாஸ்த்ரம்ஆபபௌ" என்றது காண்க. யோகம்-புணர்ச்சியென்பாருமுளர். இதுவும்-தன்மைத்தற்குறிப்பேற்றவணியே.

**95.—அப்போது மாத்திரியினிடந்துப் பாண்டு காதல்பூணுதல்.**

**வேனிலின்விளைவினுலும் வேனிலான்விழவினுலும்**
**மாநலந்திகழுமூரன் மாத்திரிவனப்பினுலும்**
**தானலமுறுதலெண்ணிச் சாபமுமறந்துமற்றப்**
**பானலங்கண்ணுளோடும் பாண்டுவும்பரிவுகூர்ந்தான்.**

(இ-ள்.) வேனிலின் விளைவினுல்உம் - இளவேனிற்காலந் தோன்றியதனுலும், வேனிலான் விழவினுலும்-மன்மதன் காதல் நோயை விளைத்தலாலும், மா நலம் திகழும் மூரல் மாத்திரி வனப்பினுல்உம்-மிக்க அழகினுல் விளங்குகின்ற புன்சிரிப்பையுடைய மாத்திரியின் அழகினுலும்,—தான் நலம் உறுதல் எண்ணி-தான் காமவின்பத்தை யடையவெண்ணி,— சாபம்உம் மறந்து-(கிந்தம முனிவன்) சாபத்தையும் மறந்து, மற்று-பின்னும், அ பானல் அம் கண்ணுளோடுஉம்-கருங்குவளைமலர்போன்ற அழகிய கண்களையுடையவளான அந்த மாத்திரியினிடம், பாண்டுவும்-, பரிவு கூர்ந்தான் - காதல்மிகுந்தான்; (எ - று.)—பாண்டுவும் என்ற உம்மை-உயர்வுசிறப்போடு எச்சப்பொருளுமுடையது. (250)

**96.—சோலையில் பாண்டுவும்மாத்திரியும்மாதவிப்பந்தர்சேர்தல்.**

**அருந்தளிர்நயந்துநல்கி யலகுடனலகுசேரப்**
**பொருந்துமுன்னவசமாகிப் போகமென்குயிலும்பேடும்**
**இருந்துமெய்யுருகுங்காவி லிரதியுமதனுமென்ன**
**வருந்தியகாதலோடுமாதவிப்பந்தர்சேர்ந்தார்.**

(இ - ள்.) அருந் தளிர்-அருமையான தளிரை, நயந்து நல்கி-விரும்பி (த்தன்) பேடைக்குக் கொடுத்து, அலகுடன் அலகுசேர-(பெட்டையின்) அலகுடனே (ஆண்பறவையின்) அலகுசேராநிற்க, பொருந்து முன்-கூடும் முன்னே, [கூடியவுடனேயென்றபடி], அவசம் ஆகி-பரவசமாகி, போகம் மெல் குயில்உம் பேடு உம்-போகத்தினுல் இளகிய ஆண்குயிலும் அதன் பேடையும், இருந்து—, மெய் உருகும்-உடலுருகுகின்ற, காவில்-சோலையிலே, இரதிஉம் மதன்உம் என்ன-ரதிதேவியும் மன்மதனும்போல, வருந்திய காதலோடு-வருத்தமுறுதற்குக்காரணமான காமவிச்சையுடனே, மாதவிபந்தர்-குருக்கத்திக்கொடி பந்தர்போற் படர்ந்திருந்த இடத்தை, சேர்ந்தார்-(பாண்டுவும் மாத்திரியும்) அடைந்தார்கள்; (எ - று.)

இவர்கள் கொண்ட காதல் பின் வருத்தமுறுதற்கு ஏதுவாதல் காண்க. (251)

97.—அங்கேஇருவரும் இன்பமனுபவித்தல்.

பஞ்சின்மெல்லடியினளுங் கணவனும்பழங்கணேட்டம்
நெஞ்சினை நலியமேன்மே னேயமுற்றுருகியாங்கண்
எஞ்சியகாலமெல்லா மென்செய்தேமென்றென்றெண்ணி
வெஞ்சிலையநங்கவேத முறைமையான்மேவினரே.

(இ-ள்.) பஞ்சின் மெல் அடியினாள்உம் - பஞ்சுபோல்மெல்லிய பாதங்களையுடையவளான மாத்திரியும், கணவன்உம்—, (தாம் கொண்டிருந்த), பழங்கணேட்டம்-பழமையான [நெடுநாளாக வுள்ள] இச்சை, நெஞ்சினை-மனத்தை, நலிய-வருத்த,—மேல்மேல் நேயம் உற்று-மேலும்மேலும் அன்பு பூண்டு, உருகி—, ஆங்கண்-அந்த வனத்திலே, 'எஞ்சிய-ஒழிகழிந்திட்ட, காலம் எல்லாம்—, என்செய்தேம்-என்னசெய்திட்டோம்! [இவ்வாறு இன்பமனுபவியாது வாளாகழித்திட்டோமே!],' என்று என்று எண்ணி-என்று பலமுறையெண்ணமிட்டு, வெம் சிலை அநங்கவேதம் - கொடிய வில்லையுடையவனான மன்மதனுடைய வேதத்திற்சொல்லிய கரணங்களை, முறைமையால்—, மேவினர்-நுகரலானார்கள்; (எ-று.)

வேதம்-வேதத்திற்கூறிய கரணங்களுக்கு இலக்கணை. கண்ணேட்டமென்பது-இங்கே, விருப்பமென்றபொருளது. அநங்கவேதம்-காமசாஸ்திரம். (252)

98.—மாத்திரி அவசையாகிப் பாண்டுவின்மார்பிலே வீழ்தல்.

பூவியலமளிபொங்கப் புணர்முலைபுளகமேற
மேவியகலவியின்ப மெய்யுறுமகிழ்ச்சிமுற்றிக்
காவியங்கண்ணிகேள்வன் கமழ்வரைமார்பினன்போடு
ஓவியமென்னவுள்ள முருகினளயர்ந்துவிழ்ந்தாள்.

(இ-ள்.) பூ இயல் அமளி பொங்க - பூவினாலியன்ற படுக்கை பொலிவு பெறவும், புணர் முலை புளகம் ஏற - நெருங்கியுள்ள கொங்கைகளிலே மயிர்க்கூச்சு மிகவும், மேவிய-நுகர்ந்த, கலவி இன்பம்-புணர்ச்சியின்பத்தினால், மெய் உறு மகிழ்ச்சி முற்றி - உடம்பிலே பொருந்திய மகிழ்ச்சி முதிர்ந்து,—காவி அம் கண்ணி-கருங்குவளைமலர்போன்ற அழகியகண்களையுடையாளான மாத்திரி, கேள்வன்-(தன்) கணவனாகிய பாண்டுவின், கமழ் வரை மார்பின்-(கலவைச்சாந்தின்நறுமணங்) கமழ்கின்ற மார்பிலே, அன்போடு-அன்புடனே, ஓவியம் என்ன-சித்திரப்பதுமைபோல, உள்ளம் உருகினள்-மனமுருகி, அயர்ந்து-பரவசையாகி, வீழ்ந்தாள்—; (எ - று.) (253)

99.—பாண்டு சாபத்தினால் உயிர்சோர்ந்துவிழுதல்.

அரும்பிய விழியுந் தொண்டை யமுதுறு பவள வாயும்
விரும்பிய சுரத போக மேவரு குறிப்பு மாகிப்
பொரும்படை மதன னம்பாற் பொன்றினன் போல மன்றல்
சுரும்பின மிரங்கி யார்ப்பத் தோன்றலுஞ் சோர்ந்து வீழ்ந்தான்.

(இ - ள்.) அரும்பிய விழிஉம்-சிறிதுமலர்ந்த கண்ணும், தொண்டை அமுது உறு பவளம் வாய்உம் - தொண்டையி

லுள்ள நீர் வெளியேயூறுகின்ற பவழம்போன்ற வாயும்,விரும்பிய சுரதம் போகம் மேவரு குறிப்புஉம்-(தான்) விரும்பின புணர்ச்சி பற்றிச் செல்லுகின்ற எண்ணம் புலப்படுகின்ற முகக்குறிப்பும், ஆகி-உடையவனாகி,—பொரும் படை மதனன் அம்பால் பொன்றினன்போல-போர்செய்கின்ற மன்மதனுடைய அம்பினால் உயிர் நீங்கினவன்போல, மன்றல் சுரும்பு இனம் இரங்கி ஆர்ப்ப-மணத்திற்செல்லும் வண்டுகளின்கூட்டம் இரக்கங்கொண்டு ஒலிப்பது போல் ஒலிக்க,—தோன்றல்உம்-பாண்டுராசனும், சோர்ந்து-உயிரொடுங்கி, வீழ்ந்தான்—; (எ-று.)

இறந்தபோதைய பாண்டுவின்நிலை, இங்கு இனிது கூறப்பட்டிருத்தல் காண்க. புணர்ச்சியே இந்தப்பாண்டுவின் உயிரொழிவுக்குக் காரணமாதலால், 'பொரும்படைமதனனம்பாற் பொன்றினன்போல' என்றது: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. (254)

வேறு.

**100.**—பாண்டு காமவின்பத்தாலிறந்ததுபற்றிய கவிக்கூற்று.

கொஞ்சுகிளி யன்னமொழி குமுதவித ழமுதால்
எஞ்சின னராதிபதி யீதென வியப்போ
அஞ்சுதரு தீவினையி னாரமுது நஞ்சாம்
நஞ்சுமமு தாமுரிய நல்வினையின் மாதோ.

(இ-ள்.) கொஞ்சு கிளி அன்ன மொழி-கொஞ்சுகின்ற கிளியையொத்த மொழியையுடையளான மாத்திரியின், குமுதம் இதழ் அமுதால் - ஆம்பல்மலர்போன்ற வாயிதழினின்றுதோன்றிய அமிருதத்தினால், நர அதிபதி-பாண்டுமகாராசன், எஞ்சினன்-உயிரொடுங்கினான்: ஈது என வியப்புஓ-இது என்ன ஆச்சரியமோதான்! அஞ்சு தரு தீவினையின்-அஞ்சத்தக்க தீவினையினால், ஆர் அமுதுஉம் நஞ்சு ஆம்-அருமையான அமிருதமும் விஷமாகும்: உரிய நல்வினையின் - உரிமையாகக்கொள்ளத்தக்க நல்வினையினாலே, நஞ்சுஉம் அமுது ஆம்-நஞ்சமும் அமிருதமாகும்;(எ-று.)

முன்னிரண்டடியை மூன்றுமடி சமர்த்தித்துநின்றது:சிறப்புப்பொருளைப் பொதுப்பொருளாற் சமர்த்தித்துநின்ற வேற்றுப்பொருள்வைப்பணி. தீவினையால் அமுதமும் நஞ்சாம்என்று கூறவந்தவர், நான்காமடியால் அதன் மறுதலைப்பொருளையும் உடன்கூறினார். நரஅதிபதி-மனிதர்க்குத்தலைவன். மாதோ-ஈற்றசை.

இதுமுதற் பதினொருகவிகள் பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் காய்ச்சீர்களுமாகிவந்த கலிவிருத்தங்கள், (255)

**101.**—மாத்திரி பாண்டுநித்திரையிலிருப்பதாகவே நினைத்தல்.

சித்திரைவசந்தன்வரு செவ்வியுடன்மகிழா
மத்திரியெனுங்கொடிய வாட்கண்விடமன்னுள்
முத்திரையுணர்ந்திலண் முயக்கமுறுமின்ப
நித்திரைகொலாமென நினைந்தருகிருந்தாள்.

(இ-ள்.) சித்திரை-சித்திரைமாதத்தில், வசந்தன்-வசந்தருதுவினால், வரு-தோன்றுகின்ற, செவ்வியுடன்-அழகோடு, மகிழா-

(கணவனுடன்) மகிழ்ந்து, மத்திரிஎனும் - மாத்திரியென்கிற, கொடியவாள் கண் விடம் அன்னாள்-கொடியவாள்போன்ற கண்களையுடைய விடத்தையொத்தவள், முத்திரை உணர்ந்திலள்-(பாண்டுவுக்கு) இறப்புக்குறிதோன்றியதை யறியாதவளாய், (இந்நிலை), முயக்கம் உறும் இன்பம் நித்திரை கொல் ஆம்-தழுவுதலாலுண்டான இன்பவசத்தால் தோன்றிய நித்திரைபோலும், என-என்று, நினைந்து—, அருகு இருந்தாள் - சமிபத்திலேயிருந்தாள்; (எ - று.)

மத்திரி-குறுக்கல். மன்னவனிறப்புக்குக் காரணமானதனால், 'விடமன்னாள்' என்றது. (256)

**102.—பின்புகணவன் இறந்தான்போலுமென்று மாத்திரி அரற்றுதல்.**

செயிர்த்தவரையாவிகவர் தீயுமிழும்வேலான்
உயிர்த்திலன்விழித்தில னுணர்ந்துமிலனென்னு
அயிர்த்தனளழைத்தன ளரற்றினளிரங்கா
வயிர்த்தனணிலத்தினுயர் வானமினிதென்பாள்.

(இ-ள்.) 'செயிர்த்தவரை-பகைவரை, ஆவி கவர்-உயிரைக் கவர்கின்ற, தீ உமிழும் வேலான் - நெருப்பைக்கக்குகின்ற வேற்படையையுடையவனை பாண்டுராசன், (இத்துணைநேரமாயும்), உயிர்த்திலன் - மூச்சுவிட்டானில்லை: விழித்திலன் - கண்களைத் திறந்தானில்லை: உணர்ந்துஉம் இலன் - உணர்ச்சிபெற்றானுமில்லை, என்னு-என்றுகருதி, அயிர்த்தனள்-(உயிரொழிந்தானோ என்று) சந்தேகித்தாள்: அழைத்தனள் அரற்றினள் - கூவியழுதாள்: இரங்கா - இரக்கமிக்கு, நிலத்தின் உயர் வானம் இனிது என்பாள்-மண்ணுலகில் தான்இருப்பதைவிட மேலிடத்துள்ள வானத்திற்செல்வதைஇனிதெனக்கருதுபவளாகி, வயிர்த்தனள்-(இறப்பதாகத்) தீர்மானங்கொண்டாள்; (எ-று.)

மாத்திரி ரிஷியின் சாபத்தை நினைந்து தடுக்கவும், வலியக்கூடிப் பாண்டு உயிரிழந்தானாக, உணர்ந்த மாத்திரி கோவென்று கதறி யழுததாகப் பாலபாரதம் கூறும். (257)

**103.—அரற்றொலிகேட்டகுந்தி புத்திரருடன் அங்குவருதல்.**

புந்தியிலண்மன்றல்பெறு பூவைகுரல்கேளா
முந்தியகடும்பழி முடிந்ததுகொலென்னுக்
குந்தியும்விரைந்துதன் குமாரரொடுபுக்காள்
அந்தியரவிந்தமென வணிகுலைமுகத்தாள்.

(இ-ள்.) புந்தி இலள்-(சாபத்தைப்பற்றிய) அறிவு இல்லாதவளாய், மன்றல் பெறு - (கணவனோடு) சேர்க்கையைப்பெற்ற, பூவை-நாகணவாய்ப் பறவைபோன்ற மாத்திரியின், குரல்-குரலை, கேளா-கேட்டு,—'முந்திய-முற்பட்டுநேர்ந்துள்ள,கடும்பழி-கொடிய சாபம், முடிந்தது கொல் - (இன்று) பயனைவிளைத்திட்டதோ?' என்னு - என்று சங்கைகொண்டு,—குந்திஉம் - குந்திதேவியும், விரைந்து—, தன் குமாரரொடு-தன்புத்திரருடனே, அந்தி அரவிந்தம் என அணிகுலை முகத்தாள் - மாலைக்காலத்துத்தாமரைபோல அழகுகுறைந்த முகத்தையுடையவளாய், புக்காள்-(அங்கு வந்து) சேர்ந்தாள்; (எ-று.) (258)

**104.—குந்தியென்பாள் அழும்போது நற்றவரும் உருகிஉளம்நெகிழ்தல்.**

உற்றதுமருங்கொழுந னுயிருறுநலத்தால்
இற்றதுமுணர்த்திவ ளிரங்கியழுமெல்லைக்
குற்றமகலும்படி குணங்களைநிறுத்தும்
நற்றவர்புகுந்துருகி நைந்துளநெகிழ்ந்தார்.

(இ-ள்.) உற்றதுஉம் - (தனக்கு) நேர்ந்ததாகிய கைம்மையையும், அருங் கொழுநன்உயிர்-(தன்னுடைய) அரிய கணவனுயிர், உறும் நலத்தால்-(தான்) அனுபவித்தஇன்பத்தினால், இற்றதுஉம்-அழிந்ததையும், உணர்ந்து—, இரங்கி—, இவள்-இந்தக் குந்தி, அழும் எல்லை-அழும்போது,— குற்றம் அகலும்படி-குற்றம்நீரும்படி (நோற்று), குணங்களை நிறுத்தும்-குணங்களை(த் தம்மிடத்து) நிலைநாட்டும், நல் தவர்-சிறந்த தவத்தையுடைய முனிவர், புகுந்து-(அங்கு) வந்து, உளம்-மனம், நைந்து—, உருகி—, நெகிழ்ந்தார்-இளகப்பெற்றார்; (எ-று.) (259)

**105.—புதல்வரைக்கொண்டு முனிவர் அந்திமக்கடனை நடத்தலும், மாத்திரி சிதையனலிற் குளித்தலும்.**

அழுகுரல்விலக்கியபி னைம்மகவையுங்கொண்டு
எழுகடனிலத்தரசை யீமவிதிசெய்யப்
புழுகுகமழ்மைக்குழலி பொற்புடைமுகத்தாள்
முழுகினளனற்புனலின் மொய்ம்பனைவிடாதாள்.

(இ - ள்.) (வந்தமுனிவர்), அழு குரல்-அழுகுரலை, விலக்கிய பின்-தவிர்த்தபிறகு, ஐ மகவைஉம் கொண்டு-ஐந்துபுத்திரரையுங் கொண்டு, எழு கடல் நிலத்து அரசை - ஏழுகடலைக்கொண்ட பூமிக்கு அரசனான பாண்டுமன்னவனுக்கு, ஈமம் விதி - அந்திமக் கடனை, செய்ய—,— புழுகு கமழ் மை குழலி-புழுகுமணம்வீசுகின்ற கறுத்த கூந்தலை யுடையவளும், பொற்பு உடை முகத்தாள்-அழகையுடைய முகத்தையுடையவளுமான மாத்திரி, மொய்ம்பனை விடாதாள்-(தன்) கணவனைப் பிரிந்திருக்கமாட்டாதவளாய், அனல் புனலின் முழுகினள்-சிதையனலாகிய நீரிலே முழுகினாள்;

நீர்க்கயத்துமுழுகுவதுபோல் மனமகிழ்ச்சியோடுதீயிற்குளித்திட்டாள் மாத்திரி யென்க. "காதலன்வீயக்கடுந்துயரெய்திப், போதல் செய்யா வுயிரொடு புலந்து, நளியிரும்பொய்கையாடுநர் போல, முளியெரிபுகூஉம்முதுக்குடிப்பெண்டிர்," "பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற, வள்ளிதழவிழ்ந்ததாமரை, நள்ளிரும்பொய்கையுந்தீயுமோரற்றே" என்பன காண்க. தன்பிழையால் கணவன் இறந்திட்டதுபற்றி, மாத்திரி, தன் புதல்வரையும் காக்குந் தொழிலைமேற்கொண்டு இருக்குமாறும் தான் அனலிற் குளிக்குமாறும் குந்திதேவியிடம் அநுமதிவேண்டிப்பெற்று, புதல்வரைத் தழுவி உச்சிமோந்து அந்தக்குந்தியின் கையிலொப்பித்து மகிழ்வோடு தீப்பாய்ந்தன ளென்று பாலபாரதம் கூறும். செய்ய=செய்விக்க: பிறவினையில்வந்த தன்வினை. (260)

**106.—மாத்திரிசுவர்க்கம்புக, குந்தி கணவனதுஈமக்கடனை முடித்தல்.**

**தங்கையவள்வானுலகு தலைவனுடனெய்திக்**
**கங்கைவனமூழ்கியுயர் கற்பவனம்வைகப்**
**பங்கயநெடுந்துறை படிந்துதன்மகாரான்**
**மங்கையிவளுங்கடன் முடித்தனள்வனத்தே.**

(இ - ள்.) தங்கையவள்-தனக்குப்பின் கணவனுக்கு வாழ்க்கைப்பட்டவளான மாத்திரி, வான் உலகு-சுவர்க்கலோகத்தை, தலைவனுடன்-கணவனுடனே, எய்தி-அடைந்து, கங்கை வனம் மூழ்கி-ஆகாசகங்கையின் நீரிலே முழுகி, உயர் கற்பவனம் வைக-சிறந்த (வானுலகத்துக்) கற்பகவனத்து நிழலிலே தங்கினளாக,- மங்கை இவள் உம்-குந்தியென்கிற இந்த மடந்தையும், பங்கயம் நெடுந் துறைபடிந்து-தாமரையையுடைய பெரிய நீர்த்துறையிலே மூழ்கி, தன் மகாரால்-தன் புத்திரரைக்கொண்டு, வனத்தே-அந்தக்காட்டில், கடன்-(தன்கணவனுடைய) ஈமக்கடனை, முடித்தனள்-நிறைவேற்றினாள்; (எ - று.)

மாத்திரி கங்கைநீரில்மூழ்கிக் கற்பகவனத்தே தங்க, குந்தியும் பங்கயத்துறைநீரில் மூழ்கி வனத்தே தங்கினாளென ஒரு நயந்தோன்றக் கூறியவாறு. (261)

**107.—சதசிருங்கமுனிவர்கள் குந்தியை மக்களோடு அஸ்தினபுரியிற் சேர்த்தல்.**

**காசிபன்முதற்கடவுள் வேதியர்கருத்தால்**
**ஆசிபெறுமப்புதல்வ ரைவரொடுமன்றே**
**ஏசில்பிரதைக்கொடியை யிறைநகரினுய்த்தார்**
**தேசிகரின்முற்றொழு தகுஞ்சதசிருங்கர்.**

(இ-ள்.) தேசிகரின்-ஆசிரியரைப்போல, முன் தொழுதகும் - முதலில்தொழத்தக்க, சதசிருங்கர்-சதசிருங்கபருவதத்தில் வசிப்பவரான, காசிபன் முதல் கடவுள் வேதியர்-காசிபன் முதலாகிய கடவுளர்போன்ற அந்தணர்,—கருத்தால்-(தம்) மனப் பூர்வமாகக் கூறும், ஆசி-வாழ்த்தை, பெறும்-பெற்ற, அ புதல்வர் ஐவரொடு உம்-அந்த ஐந்துபுத்திரரோடும்,—ஏசு இல் பிரதைகொடியை-குற்றமற்ற கொடிபோன்ற பிரதையென்பாளை, இறை நகரின்-அரசனுடைய அஸ்தினபுரியிலே, உய்த்தார் - கொண்டுசேர்த்தார்:

சதசிருங்கரென்பார் புத்திரரோடு பிரதையை வேதியர்கருத்தால் அத்தினபுரியில் உய்த்தாரென்று இச்செய்யுளுக்குப் பொருள் கூறுதல் முதனூலுக்குப்பொருந்தாது. அன்றே-ஈற்றசை: பாண்டுவின் அந்திமக்கடன் முடிந்த அன்றைக்கே எனினுமாம். பாண்டவர் அத்தினபுரியைச் சேர்ந்தபோது தருமபுத்திரனுக்கு வயசு பதினாறு, வீமனுக்குப் பதினைந்து, அருச்சுனனுக்குப் பதினான்கு, இரட்டையர்க்குப் பதின்மூன்று என்றும், பாண்டுவின் தகன ஸம்ஸ்காரமே சதசிருங்கபர்வதத்தில் நடந்ததாக மற்றை உத்தரகிரியைகள் அஸ்தினபுரத்திலே திருதராஷ்டிரன் முதலியோரால் செய்விக்கப்பட்டன வென்றும் வியாசபாரதத்தால் விளங்கும். (262)

**108.—திருதராஷ்டிரன் வணங்கிய புத்திரரையெடுத்துத்தழுவிமகிழ்தல்.**

இறந்ததுணைவற்குள மிரங்குநிலமன்னன்
சிறந்தசரணத்தில்விழு சிறுவரையெடுத்துப்
புறந்தழுவியப்பொழுது புண்ணியநலத்தால்
பிறந்தபொழுதொத்துமகிழ் பெற்றியினனானன்.

(இ-ள்.) இறந்த-உயிர்நீங்கிய, துணைவற்கு-தம்பியான பாண்டு வின் பொருட்டு, உளம் இரங்கும்-மனத்தில் இரக்கங்கொண்ட, நிலம் மன்னன் - நிலத்துக்குஉரியமன்னனான திருதராட்டிரன்,— சிறந்த சரணத்தில்-(தன்னுடைய)சிறப்புற்ற பாதங்களிலே, விழு- வீழ்ந்துவணங்கிய, சிறுவரை-புதல்வரை, எடுத்து-, அப்பொழுது —, புறம் தழுவி-(அவர்களுடைய) முதுகைத் தடவி, புண்ணியம் நலத்தால் பிறந்த-புண்ணியப்பயனால்அவர்கள் பிறந்த, பொழுது- வேளையை, ஒத்து - ஒப்ப, மகிழ் பெற்றியினன் ஆனான்-மகிழ்ச்சி யுற்ற தன்மையனானான்; (எ - று.)

தம்பியின்மரணத்தால் வருந்துகின்ற அந்தத்திருதராஷ் டிரன், அத்தம்பியினுடைய குமாரர் தன்பாதங்களில் விழ, அவர் களை யெடுத்து அணைத்து அவர்கள் பிறந்தபோது பெற்றோர் அடைந்த மகிழ்ச்சியொப்ப மகிழ்ச்சி யடையலாயின னென்பது தாம். மகிழ்-முதனிலைத் தொழிற்பெயர். (263)

**109.—வீடுமன் முதலியோர் பாண்டுவையும் அவன்மக்களையும் நினைந்து இருவகைக்கண்ணீரைச் சொரிதல்.**

வியனதிமகன்சிலைவல் விதுரன்முதலுள்ளோர்
பயனுடைவிசும்புபயில் பாண்டுவைநினைந்தும்
சயநிலைபெறுந்தகைய தனயரையுகந்தும்
நயனமிருபைம்புனலு நல்கினர்நயந்தார்.

(இ-ள்.) வியன் நதி மகன்-கங்கைநதியின் மகனாகிய வீடுமன், சிலை வல் விதுரன்-வில்லில்வல்ல வலியவிதுரன், முதல்-முதலாக, உள்ளோர்—,—பயன் உடை விசும்பு - புண்ணியப்பயனாக அடை தலை யுடைய சுவர்க்கத்தில், பயில்-சென்ற, பாண்டுவை நினைந்து உம்-பாண்டுவைச் சிந்தித்தும், சயம் நிலைபெறும் தகைய தன யரை உகந்துஉம்-வெற்றிநிலைபெறுந் தன்மையையுடைய(அந்தப் பாண்டுவின்) புதல்வரைக்கண்டு மகிழ்ந்தும், நயனம்-(தம்) கண் களில், இரு பைம்புனல்உம் நல்கினர்-(சோகக்கண்ணீர் ஆனந்தக் கண்ணீர் என்ற) இருவகையான புதிய கண்ணீர்களையும் விட்ட வராய், நயந்தார்-(தம்முடைய) விருப்பத்தைக் காட்டினார்; (எ-று.)

ஆகாசம் என்று பொருளுள்ள வியத் என்பது வியன் என்று திரிந்தது: வியன்+நதி=வியனதி: வானதி: கங்கை. வியன்- பெருமையெனக்கூறித் தமிழ்ச்சொ லென்றலும் ஒன்று. (264)

**110.—பாண்டுபுத்திரரும் திருதராட்டிரன் புத்திரரும் ஓரிடத்துவளர்தல்.**

அனுசநிரு பன்புதல்வ ரைவரு மகீபன்
தனயரொரு நூற்றுவரு மன்பினொடு தழுவிக்
கனகுல முகந்துபெய் கருங்கய நெருங்கும்
வனசமல ருங்குமுத மலருமென வளர்வார்.

(இ-ள்.) அநுசங்ருபன் புதல்வர் ஐவர்உம்-(திருதராட்டிர னுடைய) தம்பியான பாண்டுமன்னவனுடைய புத்திரர் ஐந்து பேரும்,மகீபன் தனயர் ஒரு நூற்றுவர்உம்-திருதராட்டிர மன்னவ னுடைய புத்திரர் நூறுபேரும்,—அன்பினொடு தழுவி-அன்போடு தழுவிக்கொண்டு,—கன குலம் முகந்து பெய்-மேகக்கூட்டம் (கட லில்) முகந்துகொண்டு பெய்வதனால் நிறைகின்ற, கருங் கயம்-பெரிய நீர்நிலையிலே, நெருங்கும்-நெருங்கியுள்ள, வனச மலர்உம் குமுதமலர்உம் என-தாமரைமலரும் ஆம்பல்மலரும்போல, வளர் வார்-வளர்பவராயினர்; (எ - று.)

சிறந்துதோன்றும் தாமரைமலர் பாண்டவர்க்கும், குமுத மலர் துரியோதனாதியர்க்கும் உவமை. (265)

வேறு.

**111.**—இதுவும் அடுத்தகவியும்-ஒருதொடர்: வசுதேவன் முதலியோர் அத்தினபுரிக்கு வருதலைத் தெரிவிக்கும்.

**இன்னணம் வளருங் காலை யெறிகட லுடுத்த வல்குல்**
**மின்னெனு மருங்குல் கொங்கை வெற்புடை வேய்கொண் மென்றோள்**
**பொன்னெனு நிறத்தி னேடும் பொற்பழி யாகு லத்தாள்**
**தன்னெண முடிப்பான் வந்த தலைவனைத் தந்த கோமான்.**

(இ-ள்.) இன்னணம்-இவ்வாறு, வளரும் காலை-(பாண்டவரும் துரியோதனாதியரும்) வளராநிற்கையில்,—எறி கடல் உடுத்த அல் குல்-அலைவீசுகின்ற கடலை உடையாகச் சுற்றியுள்ள நிதம்பதேசத் தையும், மின் எனும் மருங்குல்-மின்னலென்னும் இடையையும், வெற்பு கொங்கை - வெற்பாகிய கொங்கையையும், வேய்கொள் மெல்தோள்-மூங்கிலினுற்கொண்ட மெல்லியதோளையும், உடை-உடைய, பொன் எனும் நிறத்தினேடு பொற்புஉம் அழி - பொன் னெனத்தக்க நிறத்தினேடு தன் அழகும் அழிந்ததனால்,ஆகுலத் தாள் தன்-துன்பமடைந்தவளான பூமிதேவியினுடைய, எ(ண்) ணம்-(பாரந்தீர்க்கவேண்டுமென்று கருதிய) எண்ணத்தை, முடிப் பான்-முடிப்பதன்பொருட்டே, வந்த-(பூமியிலே) அவதரித்தவனு கிய, தலைவனை - தலைவனாகிய ஸ்ரீக்ருஷ்ணனை, தந்த - பெற்ற, கோமான்-தலைவனாகிய வசுதேவனும்,—(எ-று.)—இச்செய்யுளில் 'வளருங்காலை' என்பது, அடுத்தசெய்யுளில் 'அத்தினபுரிவந்துற் றார்' என்பதனேடு இயையும்.

இதுமுதல் எட்டுக்கவிகள்-இச்சருக்கத்து 67-ஆங் கவி போன்ற அறுசீராசிரிய விருத்தங்கள். (266)

**112.** **குந்திபோசன்றன்றெய்வக் குலத்துளோர்களுமநேக**
**விந்திரரவனிதன்னி லெய்தினராகுமென்னக்**
**கந்தவான்கொன்றைதோயுங் கங்கையாள்குமரன்வைகும்**
**அந்தமில்சுவர்க்கமன்ன வத்தினபுரிவந்துற்றார்.**

(இ-ள்.) குந்திபோசன் தன் தெய்வம் குலத்துஉளோர்கள் உம்-குந்திபோசனும் அவனுடையசிறப்புற்ற குலத்துத்தோன்றி யவர்களும், அனேக இந்திரர்-அனேக இந்திரர்கள், அவனிதன் னில்-பூமியிலே, எய்தினர்-வந்துள்ளார், என்ன-என்று சொல்லு

மாறு, கந்தம் வான் கொன்றை தோயும் கங்கையாள் குமரன்-நறு மணமுள்ள சிறந்த கொன்றைமலரிற் படிந்த கங்காதேவியின் குமாரனான வீடுமன், வைகும்-தங்கியுள்ள, அந்தம் இல் சுவர்க் கம் அன்ன-அழிதலில்லாத சுவர்க்கலோகத்தையொத்த, அத் தினபுரி-அத்தினபுரியை, வந்துஉற்றார்-வந்துசேர்ந்தார்;(எ-று.)- ஆகும்-அசை.

பாண்டுஇறக்க, குந்தியும் அவளுடைய புத்திரரும் அவனு டைய அந்திம கருமங்களைச் செய்துமுடித்திட்டுக் காட்டிலிருந்து நாட்டில் இப்போதுதான் வந்து சேர்ந்தன ராதலால், உறவின் முறையாரான வசுதேவன் முதலியோர் அவர்களைக் காணுமாறு வந்தனரென்க. (267)

**113.—கிருஷ்ணன் முதலியோரும் குந்தியைக்கண்டு புண்ணியநலனை யெண்ணிப் பூமியாளும்முறையையும் ஆலோசித்தல்.**

**வெண்ணிறமதியமன்ன விடலையுங்கரியமேக**
**வண்ணனும்வள்ளறன்னைத் திருவயிற்றுயிர்த்தமாதும்**
**எண்ணிலாவுவகையோடுங் குந்தியையெய்தியெல்லாப்**
**புண்ணியநலமுமெண்ணிப் பூமியாண்முறையுங்கோத்தார்.**

(இ-ள்.) வெள் நிறம் மதியம் அன்ன விடலைஉம்-வெண்ணிற முடைய சந்திரனையொத்த ஆண்களிற் சிறந்தோனாகிய பலராம னும், கரிய மேகம் வண்ணன்உம்-கருநிறமுள்ள மேகநிறத்தனாகிய க்ருஷ்ணனும், வள்ளல்தன்னை திரு வயிறு உயிர்த்த மாதுஉம் - அந்த ஸ்ரீகிருஷ்ணனை (த் தன்) திருவயிற்றிலேதோன்றுமாறு செய்த பெண்ணாகிய தேவகியும், எண் இலா உவகையோடுஉம்- அளவில்லாத மகிழ்ச்சியுடனே, குந்தியை எய்தி - குந்தியை யடைந்து, புண்ணியம் நலம்எல்லாம்உம் எண்ணி - புண்ணியத்தி னால் விளைந்த நன்மைகளையெல்லாம் கருதிப்பார்த்து, பூமி ஆள் முறைஉம்-(இனிப்)பூமியையாள வேண்டியமுறையையும், கோத் தார்-கருதினார்கள்; (எ - று.)

பாண்டு சாபவசத்தனானபின்பும் அவனுடைய சந்ததியற் றுப் போகாமல் தேவர்களருளால் முளைத்தது புண்ணியத்தினால் விளைந்த நன்மையாதல் காண்க. பூமிபாரம் தீர்ப்பதற்கே திருவவ தரித்த க்ருஷ்ணன், பூமியாள் முறையை உடனிருந்துகருதியமை ஏற்றதாதல் காண்க. (268)

**114.—தருமபுத்திரனைநோக்கி ஸ்ரீக்ருஷ்ணன் கூறியது.**

**எம்பிரானாதிமூல மிந்திரன்முதலோர்க்கெல்லாந்**
**தம்பிரான்பாண்டுவீன்ற தருமதேவதையைநோக்கி**
**அம்புராசிகளுட்பட்ட வவனிகளனைத்துநாமே**
**இம்பர்நோயகற்றியெல்லா வெண்ணமுமுடித்துமென்றான்.**

(இ - ள்) எம்பிரான் - எமதுசுவாமியும், ஆதிமூலம் - மூலப் பொருள்கட்கும்மூலமானவனும், இந்திரன் முதலோர்க்கு எல் லாம் தம்பிரான்-இந்திராதியர்க்கும் சுவாமியுமான ஸ்ரீக்ருஷ்ணன், பாண்டு ஈன்ற-பாண்டுமகாராசனுக்குப் புத்திரனாகப்பிறந்த, தரும தேவதையை நோக்கி - தருமதேவதையான யுதிஷ்டிரனைப்

பார்த்து,—அம்புராசிகள் உட்பட்ட அவனிகள் அனைத்துஉம் - சமுத்திரத்துக்கு உட்பட்ட பூமிமுழுவதையும்பற்றி, இம்பர் நோய்-இங்குவரக்கூடிய துன்பத்தை, அகற்றி-போக்கி, எல்லாம்எண்ணம்உம் - எல்லாவெண்ணத்தையும், நாம்ஏ முடித்தும் - நாமே தீர்த்துவைப்போம், என்றான்—; (எ-று.)

எல்லாவெண்ணமும்என்றது-பூபாரந் தீர்க்கவேணுமென்று தான் கருதியிருப்பதும், பாண்டவர்க்கு ஞாதியரால் நேரக்கூடியனவாகக்கருதும் பலவகையிடையூறுகளும் ஆகிய பலவற்றையும் காட்டும். தர்மிஷ்டனாதலால் தருமபுத்திரனை, 'தருமதேவதை' என்றார். இம்பரேயகற்றி யென்றும் பாடம். (269)

**115.—திருதராஷ்டிரன் முதலியோர் வந்தவரோடு அளவளாவுதல்.**

முகுரவானனனும்வேந்து முனிவனுமனஞ்சொற்காயம்
பகிர்விலாவிதுரன்றானும் பாந்தளேறுயர்த்தகோவும்
நிகரிலாத்துணைவர்தாமு நீரொடுநீர்சேர்ந்தென்னத்
தகைவிலாவன்பினோடுந் தழுவினர்கெழுமினரே.

(இ-ள்.) முகுரவானனன் உம்-திருதராட்டிரனும், வேந்து முனிவன்உம்-அரசனாயிருந்தே முனிவனாயிருக்கும் வீடுமனும், மனம் சொல் காயம் பகிர்வு இலா விதுரன் தான்உம்-மனசு வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும் வேறுபடுதலில்லாத [ஒன்றுபட்டுள்ள] விதுரனும், பாந்தள் ஏறு உயர்த்த கோஉம்-சர்ப்பத்தை உயரக் [கொடியிற்] கொண்டவனாகிய துரியோதனனும், நிகர் இலா துணைவர் தாம்உம்-ஒப்பற்றவரான அவனுடைய தம்பிமாரும், நீரொடு நீர் சேர்ந்துஎன்ன-நீரோடு நீர் சேர்ந்தாற்போல (வேறுபாடின்றி ஒரு தன்மையராய்), தகைவு இலா அன்பினோடுஉம் - தடைப்படுதலில்லாத அன்புடனே, தழுவினர்-(வந்த அந்தவசுதேவன் முதலியோரைத்) தழுவினவராய், கெழுமினர் - உரிமை பாராட்டினார்கள்; (எ - று.)

முகுரவானனன் என்றபெயர்க்கு - கண்ணாடிபோன்ற முகமுடையவனென்று பொருள்: முகுரம்-கண்ணாடி: ஆனனம்-முகம்: கண்ணாடி தான் பிறராற்காணப்பட்டுப் பிறரைத் தான் காணும் உணர்ச்சியில்லாததுபோல, தான்பிறராற் காணப்பட்டுப் பிறரைத் தான் காணாத பிறவிக்குருடான முகத்தை யுடையவனென்றவாறு: இனி, கண்ணாடிபோல விளக்கமுடைய முகமுடையவனென்றுமாம்: "வயக்குறுமண்டிலம் வடமொழிப்பெயர்பெற்ற, முகத்தவன்" என்றார், கலித்தொகையிலும். 'நீரொடுபால்சேர்ந்தென்ன' என்றும் பாடம். (270)

**116.—வந்தவர்க்கு வீடுமன் முதலியோர் விருந்துசெய்தல்.**

தன்பதிவந்தோர்தம்மைத் தாதைதன்றாதையான
முன்புடைக்கங்கைமைந்தன் முதலியமுதல்வரெல்லாம்
அன்பொடுகண்டுகண்டு கண்களித்தார்வம்விஞ்சி
மன்பதைமகிழ்ச்சிகூர வரம்பிலாவிருந்துசெய்தார்.

(இ-ள்.) தன் பதி வந்தோர் தம்மை-தருமபுத்திரனுடைய நகராகிய அத்தினபுரத்தை வந்தடைந்தவராகிய வசுதேவர்முதலியோரை, தாதை தன் தாதைஆன-பாட்டன் முறையாகுபவனான,

முன்பு உடை கங்கை மைந்தன் முதலிய-வலிமையையுடைய கங்கா புத்திரன் [வீடுமன்] முதலான, முதல்வர் எல்லாம்-முதன்மைபெற்றவரெல்லாம், அன்பொடு - அன்போடு, கண்டு கண்டு-பார்த்துப் பார்த்து, கண்களித்து - கண்கள் மகிழ்வுறப் பெற்று, ஆர்வம் விஞ்சி-பிரீதிமிகுந்து,—மன்பதை மகிழ்ச்சி கூர - (செய்யும் உபசாரத்தைக்கண்ட) மனிதர்திரள் மகிழ்ச்சிமிக, வரம்பு இலா விருந்துசெய்தார்-மிக அதிகமாக விருந்தினர்க்குச் செய்யும் உபசாரத்தைச் செய்தார்கள்; (எ - று.) (271)

**117.—வீடுமன்முதலியோர் வந்த அவர்களிடம் கூறிய முகமன்.**

நூற்றுவரைவரென்னு நுதியுடைச்சமரவைவேற்
கூற்றுவரனையோர்க்கியாருங் கொடுங்கடும்போரிலாற்ருர்
ஆற்றுவரேனுமுங்க ளுதவியுண்டருளுமுண்டு
தோற்றமுமுண்டுநுங்கள் சுமையிவர்சுமையுமென்ருர்.

(இ-ள்.) 'நூற்றுவர் ஐவர் என்னும் - நூற்றுவரும் ஐவரும் என்று சொல்லப்படுகின்ற, சமரம் வை நுதி உடை வேல் கூற்றுவர் அனையோர்க்கு-போர்க்குரிய கூரியநுனியைக்கொண்ட வேற்படையையுடைய யமனை யொத்தவர்கட்குமுன்னே, யார்உம்—, கொடும் கடும் போரில் ஆற்ருர்-கொடிய கடியபோரைச்செய்யும் வல்லமையுள்ளவரல்லர்: ஆற்றுவர் ஏன்உம்-(எவரேனும்துணிவு கொண்டு) போர்செய்வாரேனும், உங்கள் உதவி உண்டு - உங்களுடைய உதவி (இவர்கட்கு) உண்டு: அருள்உம்உண்டு-அருளும் இருக்கின்றது:தோற்றம்உம் உண்டு-(உங்கள்சம்பந்தத்தினலான) மேன்மையும் உண்டு: இவர் சுமைஉம்-இவர்களுடைய பாரமும், நுங்கள் சுமை - உங்கள்பாரமே,' என்ருர் - என்று முகமனுரை கூறினர்கள்; (எ-று.)

'கங்கைமைந்தன் முதலிய முதல்வரெல்லாம்' என்று கீழ்ச் செய்யுளில் வந்ததே, இச்செய்யுளில் 'என்ருர்' என்பதற்கு எழுவாய். ((272)

**118.—வந்தவரை வீடுமன் முதலியோர் உபசரித்து விடைகொடுத்தனுப்புதல்.**

இனிமையின் பலவு மாற்றம் யாவர்க்கு மியாவுஞ்சொல்லித்
தினகரற் றெழுத பின்னர்த் தேர்பரி கரிக டோறும்
மனனுறத் தக்கசெல்வம் வகைதொறும் வழங்கி யன்றே
தனதனைப் போல்வார் தம்மைத் தம்பதி யடைவித் தாரே.

(இ - ள்.) யாவர்க்குஉம்-வந்தவர் எல்லோர்க்கும், இனிமையின்-இனிமையாக, பல மாற்றம்உம் யாஉம்-பலவார்த்தைகளையும் மற்றுஞ் சொல்லவேண்டுவனவற்றையும், சொல்லி—,—தினகரன் தொழுத பின்னர்-சூரியனை நமஸ்கரித்தபின்பு,—தேர் பரி கரிகள் தோறுஉம்-இரதம் குதிரை யானை என்னும் இவைகளிலெல்லாம், மனன் உற தக்க செல்வம் - மனசு விரும்பத்தக்க செல்வத்தை, வகை தொறும்-பலவகையிலும், வழங்கி - கொடுத்து, தனதனை போல்வார்தம்மை-குபேரனைப்போலப் பெருஞ்செல்வரான அந்த

வசுதேவன்முதலியோரை, தம் பதி அடைவித்தார்-தமது ஊருக்குச் செல்லுமாறு விடைகொடுத்து அனுப்பினார்கள்; (எ - று.)

பலவும், உம்-அசையென்னலாம். மனனுறத்தக்கசெல்வம்-தேர்பரிகரி முதலியவை இரத்தினம் முதலியவை யென்று கொள்ளலும் ஆம். தினகரற்றெழுதல்-சூரியோபஸ்தாநம் என்னலாம். (273)

வேறு.

**119.—துரியோதனாதியரும் பாண்டவரும் சிறுவராய் விளையாடுகையில், வீமசேனன் துரியோதனாதியரோடு மனவொற்றுமையின்றி யிருத்தல்.**

**எயினலம்புனை கோபுர மாபுரத் தெழுதுமாளிகைதோறும்**
**வெயினிலாவுமிழ் கனகநீள் வீதியில் விலாசமுற் றிடுநாளிற்**
**பயினன்மேல்வருகல்லெனச்செறிந்தமெய்ப் பவனன்மைந் தனுமொத்தான்**
**வயினதேயனைக் காத்திரவேயரை மன்னன்மைந் தருமொத்தார்.**

(இ-ள்.) நலம் எயில் புனை - அழகிய மதிளால் அலங்கரிக்கப்பெற்ற, கோபுரம்-கோபுரங்களையுடைய, மா புரத்து-பெரிய அந்த அத்தினபுரியிலே, எழுது-கட்டப்பட்டுள்ள, மாளிகைதோறுஉம்-, வெயில் நிலா உமிழ்-(பதித்துள்ள மணிகளினொளியால்) வெயில் போன்ற ஒளியையும் நிலாப்போன்ற ஒளியையும் வெளிப்படுத்துகின்ற, கனகம் நீள் வீதியில்-பொன்மயமான அல்லது பொன்னணிகளைக்கொண்ட நீண்டவீதியிலே, விலாசம் உற்றிடும் நாளில் - (பாண்டவரும் துரியோதனாதியரும்) விளையாடல்களைச் செய்துவரும் நாளிலே,—பை இனன் மேல் வரு கல்என செறிந்த மெய் பவனன் மைந்தன்உம்-படங்களின் திரள் (தன்மீது) வரப்பெற்ற (மேருஎன்ற)மலைபோல அழுத்தமுள்ள உடலைப்படைத்த வாயுகுமாரனான வீமனும், வயினதேயனை-கருடனை, ஒத்தான்—: மன்னன் மைந்தர்உம்-திருதராட்டிரனுடைய குமாரரான துரியோதனாதியரும்,காத்திரவேயரை-கத்துருவின்புத்திரரான நாகங்களை, ஒத்தார்—; (எ - று.)

உவமையால், வீமனுக்கும் துரியோதனாதியர்க்கும் பகைமை தோன்றினமையும், துரியோதனாதியர் வீமனைவெல்லும் ஆற்றலில ரென்பதும் பெறப்படும். வயினதேயன்=வைநதேயன்: விநதையின் புதல்வனான கருடன்: காத்திரவேயர்=காத்ரவேயர்: கத்துருவின்புத்திரரானநாகர்கள்:இவையிரண்டும்தத்திதாந்தம்: பை-படம். கல்-மலைக்கு, இலக்கணை. ப[பை]யினன்மேல்வருகல்-பசுமையான [இளைய] சூரியன் தன்மேல் உதயமாகிவரப்பெற்ற உதயமலை யென்றலும் ஒன்று.

காசிபமுனிவருடைய மனைவிமாருள் விநதையென்பாளுக்கும் கத்துருவென்பாளுக்கும் வானத்துச்சென்ற உச்சைச்சிரவமென்னும் குதிரையின்நிறத்தைப்பற்றி விவாதமுண்டாக,கத்துரு தன் புத்திரரான கருநாகங்களை அந்த உச்சைச்சிரவமென்னும் குதிரையின் உடலைச் சுற்றிக்கொள்ளுமாறு ஏவி அதனால் அந்த விநதையையும் விநதைகுமாரனையும் அடிமையாக்கிக்கொள்ள,

அந்த அடிமைத் தன்மையினின்று தம்மை விடுவித்துக்கொள்ளு மாறு கருடன் அந்நாகங்களின் மொழிப்படியே அமிருதத்தைக் கொணர்ந்ததோடு, அந்நாகங்களை யுண்ணுமாறும் தேவேந்திரனிடம் வரம்பெற்று வந்து அடிமையினின்று நீங்கி, அந்நாகங்களை அமிருதத்தை யுண்ணும் பொருட்டு நீரில்மூழ்கிவருமாறு தந்திரமாகச்சொல்ல, அவ்வேளையில் தேவேந்திரன் அமிருதத்தைக் கவர்ந்து சென்றான்: பிறகு அமிருதகலசம் வைத்திருந்த தர்ப்பையை நக்கியதனால் அந்நாகங்களின் நாக்குப் பிளவுண்டன என்ற சரித்திரமும்: ஒருகால் வாயுபகவானுக்கும் ஆதிசேஷனுக்கும் தம்முள் யார் பலசாலியென்று விவாதமுண்டாக, அப்போது தனது ஆயிரம்படங்களாலும் ஆதிசேஷன் மேருவின் ஆயிரங் கொடுமுடிகளையும் கவிந்துகொண்டு நிற்க, வாயுபகவான் அந்த மேருவின் ஆயிரஞ்சிகரங்களுள் மூன்று சிகரங்களைப் பறித்திட்டான் என்பதும் இங்கு அறியத்தக்கன.

இச்செய்யுள் - முதற்சீர் மாச்சீரும் ஈற்றுச்சீர் காய்ச்சீரும் மற்றைநான்குமவிளச்சீர்களுமாகிவந்த அறுசீராசிரியவிருத்தம். (274)

சம்பவச்சருக்கம் முற்றிற்று.

---

மூன்றாவது

# வாரணாவதச் சருக்கம்.

வாரணாவத மென்ற ஊரில் நடந்த செய்தியைக் கூறுகின்ற சருக்கமென்று பொருள். இச்சருக்கத்தின் முதல் நூற்றெட்டுப்பாடல்கள் வரையில் பாண்டவ துரியோதனாதியர்களது இளம் பருவத்து நிகழ்ச்சிகள் பலவற்றை எடுத்துக்கூறி, அதன்பின், துரியோதனாதியர் பாண்டவரை வாரணாவதநகரத்துக்குச் செலுத்தின செய்தியைக் கூறுகின்றார்: அதனால், இப்பெயர் தலைமைபற்றி வந்ததென்க.

1.—தெய்வவணக்கம்.

அருமறை முதல்வனை யாழி மாயனைக்
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமக டலைவனைத் தேவ தேவனை
இருபத முளரிக ளிறைஞ்சி யேத்துவாம்.

(இ-ள்.) அரு மறை முதல்வனை - அறிதற்கு அரிய வேதங்களின் முதலாகவுள்ளவனும், ஆழி மாயனை-சக்கராயுதத்தையேந்திய மாயவனும், கரு முகில் வண்ணனை-காளமேகம்போன்ற திருநிறமுடையவனும், கமலம் கண்ணனை-செந்தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடையவனும், திருமகள் தலைவனை-இலக்குமிக்கு நாயகனும், தேவ தேவனை-தேவர்களுக்கெல்லாம் ஆதி தேவனுமான திருமாலை, இரு பதம் முளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்-உபய திருவடித்தாமரைமலர்களை வணங்கித் துதிப்போம்;(எ-று.)

வேதங்களிற்கூறப்பட்ட முதற்பொருளாகுபவனும், வேதங்களை முதலில் வெளியிட்டவனும் இவனேயென்பது, 'மறைமுதல்வன்' என்பதன் கருத்து. மாயன்-மாயையையுடையவன்; மாயை

யாவது-பிறராற்செய்தற்கு அரிய காரியங்களை எளிதிற்செய்து முடிக்குந் திறம்; ஆச்சரியகரமான குணங்களுஞ் செயல்களும் எனினுமாம். இதற்கு-மாயை போலக் கருநிறமுடையானென்று பொருள்கூறுவாருமுளர். முளரிகளை இறைஞ்சியென இரண்டனுருபுவிரித்தால், இரண்டு செயப்படுபொருள் வந்த வினையாம். தேவதேவனையென முதற்பெயரில் இரண்டனுருபு வந்ததனால், பதமுளரிகளில் என்று சினைப்பெயரில் ஏழனுருபு விரித்தல் தமிழ்முறை: "முதலை ஐஉறிற் சினையைக் கண உறும்" என்பது காண்க.

இதுமுதல் முப்பத்தொரு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ் சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். இவற்றில் நான்காஞ்சீர் கூவிளச்சீராகவே நிற்கும். (275)

**2.—துரியோதனன் கர்ணனைத் தனக்கு உற்றதுணையாகக் கொள்ளுதல்.**

ஆங்கவரம்முறை யயருமாயிடைத்
தீங்கொருவடிவமாந் திறற்சுயோதனன்
பாங்கிவனமக்கெனப் பரிதிமைந்தனை
வாங்குபுதழீஇயினன் வலிமைகூரவே.

(இ-ள்.) ஆங்கு-அவ்விடத்தில் [அஸ்தினாபுரியில்], அவர் - அவர்கள் [பாண்டவர்களும் துரியோதனுதியர்களும்], அ முறை- அவ்வாறு, அயரும்-விளையாடுகிற, அ இடை-அப்பொழுது,— தீங்கு ஒரு வடிவம் ஆம் திறல் சுயோதனன்-தீக்குணமே ஒரு மனித வடிவங்கொண்டாற் போன்ற [மிகக்கொடிய] வலிமையையுடைய துரியோதனன், வலிமைகூர-(தனக்கு) வலிமை மிகும்படி, பரிதி மைந்தனை-சூரியனுடைய மகனான கர்ணனை, இவன் நமக்கு பாங்கு என-இவன் நமக்கு உரியநண்பனென்று கருதி, வாங்குபு தழீஇயினன் - அழைத்துச் சேர்த்துக்கொண்டான்; (எ - று.)

வீமனுடைய வலிமைக்கு:ஆற்றாத துரியோதனன், தங்களுக்குப் பக்கபலம் மிகுதற்பொருட்டு, பலபராக்கிரமங்களிற்சிறந்த கர்ணனை வரவழைத்துத் தனக்கு ஏற்றதுணைவனாக்கிக்கொண்டனன் என்பதாம். வாங்குபு-செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (276)

**3.—பாண்டவரும் துரியோதனுதியரும் கங்கையில் நீர்விளையாட்டு நிகழ்த்தல்.**

ஒருபகனிலமக ளுய்யமங்குலின்
வருபகீரதிநதி வாசநீர்படிந்து
இருதிறப்புதல்வரு மியைந்தகேண்மையால்
கரையடைந்தனரிளங் கடவுளோரனர்.

(இ-ள்.) இளங் கடவுளோர் அனர்-தேவகுமாரர்கள் போன்றவர்களாகிய, இரு திறம் புதல்வர்உம்-(பாண்டு திருதராஷ்டிரன் என்பவர்களின்) புத்திரர்களான இரண்டுவகுப்பினர்களும்,— இயைந்த கேண்மையால்-பொருந்திய நண்புடனே,—ஒருபகல் -

ஒருநாள்,—நிலமகள் உய்ய மங்குலின் வரு பகீரதி நதி - பூமிதேவி வாழ்வுபெறும்படி ஆகாயத்தினின்றுவந்த கங்காநதியினது, வாசம் நீர் - நறுமணமுடைய தீர்த்தத்திலே, படிந்து-தோய்ந்து விளையாடி, கரை அடைந்தனர்-(பின்பு அந்நதியின்) கரையை அடைந்தார்கள்; (எ-று.)

கங்கைக்கு 'நிலமகளுய்யவரு' என்ற அடைமொழிகொடுத்தது, பூலோகத்தவர்கள் தன்னில் நீராடி அருவினைதீர்ந்து உயர்கதி பெறும்படி வந்தது என்ற கருத்தது. கங்காநதியின்நீர் பற்பல திவ்வியமலர்களை அடித்துக்கொண்டு வருதலால், அதன் நீர் 'வாசநீர்' எனப்பட்டது: "பத்மகந்திநி" என்றது,பாலபாரதம். வாஸம்-வடமொழி. குருகுலகுமரர்க்குத் தேவகுமாரருவமை சிறப்பிற்கும் ஒளிக்கும் இன்பத்திற்கு மென்க. (277)

4.—பாண்டவ கௌரவரது உண்டாட்டு.

தைவருநவமணிச் சயிலமென்னவே
ஐவகைநிறங்களு மமைத்தியற்றிய
தெய்வவாடகமனைச் செல்வப்போனகம்
கைவரநுகர்ந்தபின் கண்ணுந்துஞ்சினர்.

(இ-ள்.) (அன்றியும்), தைவரு-(மாசுதீரத்) துடைக்கப்பட்ட, நவமணி - ஒன்பதுவகை யிரத்தினங்களையுடையதொரு, சயிலம் என்னவே-மலை யென்று(கண்டவர்)சொல்லும்படியாகவே,ஐவகை நிறங்கள்உம் அமைத்து இயற்றிய-ஐந்துவகை நிறங்களையும் பொருத்திச் செய்யப்பட்ட, தெய்வம் ஆடகம் மனை-தெய்வத்தன்மையையுடைய [மிகச்சிறந்த] பொன்னின்மயமான மாளிகையிலே, (இருதிறப்புதல்வர்களும்), செல்வம் போனகம்-செல்வச்சிறப்புக்கு உரிய சிறந்த உணவை, கைவர நுகர்ந்த பின்-கையார உண்ட பின்பு, கண்உம் துஞ்சினர்-நித்திரையையுஞ்செய்தார்கள்; (எ-று.)

நவமணி-கோமேதகம், நீலம், பவழம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. ஐவகைநிறம்-பஞ்சவர்ணம்; அவை-கருமை, செம்மை, பசுமை, பொன்மை, வெண்மை. ஐவகை நிறங்களும் அமைத்தியற்றிய ஆடகம்மனை-ஐந்துவகை நிறங்களையுடைய ஆடைகளாலமைத்துப் பொன்னணியணியப்பெற்ற மாளிகையெனினுமாம். சயிலம்-முதற்போலி: சைலமென்பது - சிலாமயமான தெனக் காரணப்பொருள்படும்: சிலா-கல். போனகம்=போஜநம். (278)

5.—தூங்குகிற வீமனைத் துரியோதனுதியர் கொடிகளாற் கட்டுதல்.

கண்படைக்கங்குலிற் கன்னசௌபலர் கர்ணன் சகுனி
துரியோதனன் எண்படைக்குமரனே டெண்ணிப்பாவகன்
நண்பன்மெய்ப்புதல்வனை நார்கொள்வல்லியால்
திண்பதத்தொடுபுயஞ் சிக்கயாத்தபின்.

இதுவும், அடுத்த கவியும்-குளகம்.

(இ-ள்.) கண் படை கங்குலில்-நித்திரைசெய்கின்ற இரவிலே, கன்ன சௌபலர்-கர்ணனும் சகுனியும், எண் படை குமரனேடு எண்ணி-எண்ணங்களின் தொகுதியையுடைய இராசகுமாரனை

துரியோதனனோடு ஆலோசித்து, (பிறகு), பாவகன் நண்பன் மெய் புதல்வனை-அக்கினியின் தோழனான வாயுவினது மெய்யன் புக்கு உரிய மகனாகிய வீமனை, நார்கொள் வல்லியால் - கயிற்றின் தன்மையைக்கொண்ட நீண்டகொடிகளால், திண் பதத்தொடு புயம் சிக்க யாத்தபின் - வலிய கால்களும் கைகளும் இறுகும்படி கட்டிய பின்பு—(எ-று.)—'பெருநதியூடு வீழ்த்தினான்' என வருங் கவியோடு முடியும்.

கண்படை-கண்படுதல், கண்மூடியுறங்குதல். எண்படைக் குமரன் என்பதற்கு - எண்ணத்தக்க தம்பிமாரின் தொகுதியை யுடைய துரியோதனனென்று உரைத்தலுமொன்று. நெருப்புப் பற்றியெரிதற்குக் காற்று உதவியாதல்பற்றி, காற்றுக்கு அக் கினிசகாய னென்று ஒருபெயர் வழங்கும். சிக்க-திசைச்சொல். 'ஆர்த்தபின்' என்றும் பாடமுண்டு. (279)

6.—துரியோதனன் வீமனைக் கங்கையில் எறிதல்.

அரவினிற்பிணித்தெழு மரவம்பொங்கிட
உரனுடைப்பொருப்பையன் றும்பர்நாயகன்
பரவையிற்செறித்தெனப் பயனில்செய்கையான்
விரவுமப்பெருநதி யூடுவீழ்த்தினான்.

(இ - ள்.) உம்பர் நாயகன்-தேவர்களுக்கெல்லாந் தலைவனான திருமால், அன்று-முன்னொருகாலத்தில், உரன் உடை பொருப்பை-வலிமையையுடைய மந்தரமலையை, அரவினில் பிணித்து-(வாசுகி யென்னும்) பாம்பினாற் கட்டி, எழும் அரவம் பொங்கிட-மிக்க ஓசை யுண்டாம்படி, பரவையில் செறித்து என-(பாற்) கடலில் இட்டாற்போல,—(வீமனை), பயன் இல் செய்கையான்-பிரயோசன மற்ற செயலையுடைய துரியோதனன், விரவும் அ பெருநதியூடு வீழ்த்தினான்-பொருந்திய அந்தப் பெரிய கங்கை நதியின் நடுவிற் போகட்டான்; (எ-று.)

"ஆயதாபிரஹிதம் ஸுயோதந: - தம்ஸுஷுப்தமவபத்யவல்லிபி: | போகிபத்தமிவ மந்தரம் ஹரி:-ஸிந்துகர்ப்பபயஸிந்யபாதயத்" என்றதற்கு ஏற்ப, உம்பர்நாயகன்-திருமால் எனப்பட்டது. மேல் வீமன் தனது வலிமையால் தப்பியெழுதலின்'பயனில் செய்கையான் வீழ்த்தினான்' என்றாரென்னலாம். 'ஆர்வம்பொங்கிட' 'பயனில்செய்கையால்,' 'வீழ்த்தினர்' என்றும் பாடம். (280)

7.—வீமன் கட்டு விடுவித்துக் கரையேறுதல்.

விழ்ந்தவனந்தர நிமிர்ந்துமெய்யுறச்
சூழ்ந்தனபிணிகளைத் துணிகளாக்கியே
ஆழ்ந்திலனேறிமீண் டவசத்தோட்வண்
தாழ்ந்தனனிராகவன் றம்பிபோன்றுளான்.

(இ-ள்.) இராகவன் தம்பி போன்று உளான்-இராமனது தம்பியான இலக்குமணனையொத்துள்ளவனாகிய, வீழ்ந்தவன்-(கங்கைப் பெருக்கில்) விழுந்தவீமன்,-அந்தரம் நிமிர்ந்து-மேலெழுந்து, மெய் உற சூழ்ந்தன பிணிகளை துணிகள் ஆக்கி-(தன்) உடம்பை அழுந் தச்சுற்றியுள்ள கட்டுக்களை(த் தன் உடல்வலியால்) துண்டுக

ளாக்கிவிட்டு, ஆழ்ந்திலன்-(அந்தநீர்ப்பெருக்கில்) ஆழாமலே, ஏறி-கரையேறி, மீண்டு-திரும்பி, அவசத்தோடு-(துயில்மிகுதியாலாகிய) பரவசத்துடனே, அவண் தாழ்ந்தனன்-அங்குத்தானே படுத்தான்; (எ-று.)

இராமராவண யுத்தத்தில் இந்திரசித்தினது நாகபாசபந்தத்தினின்று விடுபட்டு எழுந்த இலக்குமணன்போல, இப்பாசபந்தத்தினின்று விடுபட்டு வீமன் பிழைத்தெழுந்தனனென்னுங் கருத்துப்பட, இவ்வுவமை கூறினரென்னலாம். ராகவன் என்ற வடசொல்லுக்கு ரகுவென்னும் அரசனது குலத்திற் பிறந்தவனென்று பொருள்; தத்திதாந்தநாமம். 'அனந்தர நிமிர்ந்து' என்றும், 'தாழ்ந்திலன்' என்றும், 'இராவணன் றம்பி' என்றும்பாடமுண்டு. (281)

8.—பின்பு துரியோதனன் வீமன்மேற் பாம்புகளைக் கடிக்கவிடுதல்.

வாளிரவியையொளி மறைக்கும்வெஞ்சினக்
கோளரவினையன கொடியநெஞ்சினன்
நீளரவினங்களா னித்திராலுவை
மீளவுங்கொல்லுவான் வீரனேவினான்.

(இ-ள்.) வாள் இரவியை ஒளி மறைக்கும்-ஒளியை [கிரணங்களை]யுடைய சூரியனது ஒளியை மறைக்கின்ற, வெம்சினம் கோள் அரவினை-கொடியகோபத்தையுடைய கிரகமாகிய (இராகு கேது என்னும்) பாம்பை, அன - ஒத்த, கொடிய நெஞ்சினன் - கொடுமனத்தையுடையவனாகிய, வீரன் - துரியோதனன்,—நித்திராலுவை-தூங்கிக்கொண்டிருக்கிற வீமனை, நீள் அரவு இனங்களால்-நீண்ட பாம்புகளின் கூட்டத்தைக்கொண்டு, மீளஉம் கொல்லுவான்-மீண்டுங் கொல்லத்துணிபவனாய், ஏவினான் - (அவன்மேல் அவற்றை) ஏவினான்; (எ - று.)

வீமன்மீது பாம்புகளைக் கடிக்கவிட்டு அவனைக் கொல்லுமாறு பிடாரர்களை ஏவினானென்பது கருத்து. பாம்புவடிவமான இராகு கேதுவென்னுங் கிரகத்தின் வாய்ப்பட்ட சூரியன் விரைவில் அத்துயரொழிந்து எளிதில்வெளிப்படுதல்போல, பாம்பின்வாய்ப்பட்ட வீமன் உடனே அத்துயரொழிந்து அழிவின்றி இனிதுஎழுந்தனனென்னுங் கருத்துப்படவந்தது, இவ்வுவமை. வீரத்தாலன்றி வஞ்சனையால் வீமனைக் கொல்லத்துணிந்தவனை, 'வீரன்' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு. ரவி, நித்ராலு, வீரன்-வடசொற்கள். 'கோளரவனையன கொடியநஞ்சின' என்றும் பாடம். (282)

9.—பாம்புகளை அழித்திட்டு வீமன் உயிர்பிழைத்தல்.

கடித்தனபன்னக நகங்கொள்கைகளால்
துடித்திடமற்றுணத் தொகுதிபோற்பிசைந்து
இடித்திடுமுகிலென வெழுந்துமாநகர்
வடித்தவேற்றுணைவரோ டெய்திமன்னினான்.

(இ - ள்.) கடித்தன பன்னகம் - (அவ்வேவலின்படி தன்னைக்) கடித்திட்ட பாம்புகளை, (வீமன்), நகம் கொள் கைகளால்-(கூரிய) நகங்களைக்கொண்ட (தன்) கைகளால், துடித்திட-துடிக்கும்படி,

மற்குணம் தொகுதிபோல் பிசைந்து-மூட்டுப்பூச்சிக்கூட்டங்களைப் போல (எளிதிலே) பிசைந்தொழித்துக்கொண்டே, இடித்திடும் முகில் என எழுந்து-இடியிடிக்கிற மேகம்போல (முழக்கஞ்செய்து கொண்டு)எழுந்து, வடித்த வேல் துணைவரோடு எய்தி - கூரிய வேலாயுதத்தையுடைய அந்த உடன்பிறந்தவர்களுடனே கூடி, மா நகர் மன்னினன்-பெரிய அஸ்திநாபுரியைச் சேர்ந்தான்;

தூங்கும்போது கடிக்கும் மூட்டுப்பூச்சிகளைப் பிசைந்திடுவது போலப் பாம்புகளை வீமன் பிசைந்தானென்க. பந்நகம் என்ற வடமொழி-பத் நகம் எனப்பிரிந்து, கால்களால் நடவாதது [மார்பினாற்செல்வது]என்றும், பந்நம் கம் எனப்பிரிந்து, வளைந்து வளைந்து செல்வதென்றும் அவயவப்பொருள்படும். மற்குணம், மா, நகர்-மத்குணம், மஹா, நகரம் என்ற வடசொற்களின் திரிபு. வடித்தல்-நெருப்பிலிட்டுக்காய்ச்சி யடித்துக் கூராக்குதல். (283)

**10.—துரியோதனன் வீமனைக் கழுவில்விழுத்த அவன் அறிந்துஉய்தல்.**

> **வேறொருபகற்கழு நிரைத்துவீமனோடு**
> **ஆறுபாய்ந்திருவரு மாடும்வேலையில்**
> **தேறலான்வஞ்சகந் தேறிவண்டினால்**
> **ஏறினன்கடந்தரி யேறுபோன்றுளான்.**

(இ-ள்.) வேறு ஒரு பகல்-மற்றொருநாளில், தேறலான்-பகைவனான துரியோதனன், கழு நிரைத்து-(வெளித்தெரியாதபடி நீரினுள்ளே) கழுக்களை வரிசையாக நாட்டி, வீமனோடு-வீமனுடனே, ஆறு பாய்ந்து-கங்காநதியிலே குதித்து, இருவர்உம் ஆடும் வேலையில்-இவ்விருவரும் விளையாடும்பொழுதில்,—அரி ஏறு போன்றுளான்-ஆண்சிங்கத்தை யொத்துள்ளவனான வீமன்,— வஞ்சகம் வண்டினால் தேறி-(அவன்செய்த) வஞ்சனையை(க் கழுமுனையில் தங்கிய) வண்டுகளினால் அறிந்து, கடந்து-(அக்கழுவைக்) கடந்து குதித்து, ஏறினன்-கரையேறினன்; (எ - று.)

மற்றொருநாள் துரியோதனன் கங்கைத்துறையில் இரும்பினாலும் செம்மரத்தாலும் கூரிய கழுக்களை நீரின்மேல்தோன்றாதபடி உள்நாட்டச்செய்து வீமனை 'நீரில்விளையாடலாம் வா' என்று வஞ்சனையாக அழைத்துப்போய் 'இங்கிருந்து நீ நீரில் குதிக்கிறாயா பார்ப்போம்' என்ன, அப்பொழுது கண்ணன் கருவண்டினுருவங்கொண்டு கழுமுனைதோறும் உட்கார்ந்திருக்க, வீமன் அதனை நோக்கி 'இதுஎன்ன நீரோட்டத்தில் வண்டுகள் உட்கார்ந்திருக்கின்றனவே!' என்று உற்றுப்பார்க்கும்போது அவற்றின்கீழ் வசிகள் நாட்டியிருக்கக்கண்டு, தன்சங்கேதப்படி அவைநாட்டியிராத இடம் பார்த்துக் குதித்துக் கரையேறி மீண்டானென்பது, இங்குக் குறித்த வரலாறு. இந்தவிடத்து இவ்வரலாறு மகாபாரதத்திலாவது பாலபாரதத்திலாவது காணப்படவில்லை. பாய்ந்து ஆடுதலாகிய வினை துரியோதனனுக்கும்உள்ளதனால், 'நிரைத்து' என்ற செய்தெனெச்சத்தைத் தன்கருத்தாவின் வினைகொண்டதென்னலாம். 'கடகரியேறு' என்றும் பாடம். (284)

11.—மற்றொருநாள் துரியோதனன் வீமனுக்கு விஷமூட்டுதல்.

பின்னருமொருபகற் பெற்றம்பெற்றவன்
தன்னையம்மகீபதி தனயனாதரித்து
இன்னமுதருத்துவான் போலயாவையும்
துன்னியவிடங்களாற் றுய்ப்பித்தானரோ.

(இ-ள்.) பின்னர்உம்-பின்பும், ஒரு பகல்-ஒருநாள், அ மகீபதி தனயன்-திருதராட்டிரமகாராசனுக்குக்குமாரனான அத்துரியோதனன், பெற்றம் பெற்றவன் தன்னை-வாயுதேவனாற் பெறப்பட்ட குமாரனான வீமனை, ஆதரித்து இன் அமுது அருத்துவான்போல-அன்புகொண்டு இனியநல்லுணவை உண்பிப்பவன்போல, துன்னிய விடங்களால் யாவைஉம் துய்ப்பித்தான்-செறிந்த நஞ்சுகளோடு எல்லாவுணவுகளையும் உண்பித்தான்; (எ-று.)

உண்பன தின்பன பருகுவன நக்குவன எனப் பலவகைப்படுகிற சோறு கறி பாயசம்முதலிய உணவுகளிலெல்லாம் வீமனுக்குத் தெரியாதபடி மிக்க விஷங்கலந்து உண்பித்தனனென்பார், 'யாவையுந் துன்னியவிடங்களால் துய்ப்பித்தான்' என்றார். கருப்பம் ஆடவர்வயிற்றில் இரண்டுமாதம் தங்கிப் பின்னர் பெண்டிர் வயிற்றிற் சேர்கிறதென்னும் நூல்வழக்குப்பற்றியும், ஒருவனது மனைவியின் வயிற்றில்தோன்றியவரை அவன்வயிற்றில் தோன்றியவரென்னும் வழக்குப்பற்றியும் 'பெற்றம்பெற்றவன்' என்றார். அரோ-ஈற்றசை. (285)

12.—துரியோதனன் வீமனைக்கயிற்றாற்கட்டிக் கங்கையில் அமிழ்த்துதல்.

விடத்திலேயழிந்தறி வொழிந்தவீமனை
வடத்திலேபிணித்தனன் கங்கைவாரியின்
இடத்திலேயமிழ்த்தின னிதயமொத்தவர்
திடத்திலேமுதிர்ந்தகிங் கரர்திறங்களால்.

(இ-ள்.) விடத்தில் அழிந்து அறிவு ஒழிந்த வீமனை-நஞ்சுண்டதனால் நிலைகுலைந்து அறிவழிந்த வீமசேனனை, (துரியோதனன்),—இதயம் ஒத்தவர்-(தன்) கருத்துக்கு ஒத்தகருத்துடையவர்களான, திடத்தில் முதிர்ந்த கிங்கரர் திறங்களால்-வலிமையில் மிக்க வேலைக்காரர்களுடைய கூட்டங்களைக்கொண்டு, வடத்தில் பிணித்தனன் - கயிற்றாற்கட்டி, கங்கைவாரியின் இடத்தில் அமிழ்த்தினன்-கங்கை நீரிலே அமிழப்பண்ணினான்; (எ - று.)

துரியோதனன் நூற்றுக்கணக்கான சூலங்களைநாட்டிய கங்கையின் நீரிலே விஷவேகத்தால் மயங்கியுள்ள வீமனைக் கயிற்றாற்கட்டிக் கிங்கரரைக்கொண்டு வீழ்த்தினனாக, ஊழ்வினையின் வலியால் சூலமுனையாற் புண்படாமல் பாதாளஞ்சேர்ந்தானென்று பாலபாரதத்திலுள்ளது: வியாசபாரதமும் இங்ஙனே கூறும். தனது அந்தரங்கமான செயல்களைப் பிறர்க்கு வெளியிடாதவரென்பது, 'இதயமொத்தவர்' என்பதனாற் பெறப்படும். 'திடத்திலே முதிர்ந்த' என்ற அடைமொழி, உடல்வலிமைமிகுதியோடு நெஞ்சுறுதியின் மிகுதியையுங் காட்டும். (286)

13.—பாதாளஞ்சென்ற வீமனை அங்குள்ள நாகங்கள் கடித்தல்.

ஓதவான்கடலிடை யொளித்தவெற்பெனப்
பாதலந்தனில்விழு பவனதூனுவை
வேதனைப்படுத்தினர் விடங்கொள்கூரெயிற்று
ஆதவப்பணமணி யரவினஞ்சிறுர்.

(இ-ள்.) ஓதம் வான் கடலிடை ஒளித்த வெற்பு என-அலைகளையுடைய பெரியகடலிலே மறைந்த மலைபோல, பாதலந்தனில் விழு-(கங்காநதியிலுள்ள பிலத்துவாரத்தின் வழியாய்) பாதாளலோகத்திற் போய்விழுந்த, பவன சூனுவை - வாயுகுமாரனுன வீமனை,—(அங்குள்ள), விடம்கொள் கூர் எயிறு-விஷம்பொருந்திய கூரிய பற்களையும், ஆதவம் பணம் மணி-சூரியகாந்திபோல விளங்குகிற படத்திலுள்ள மாணிக்கத்தையுமுடைய, அரவின் அம்சிறுர்-நாகர்களின் அழகிய பிள்ளைகள் [பாம்புக்குட்டிகள்], வேதனைப்படுத்தினர்-கடித்துவருத்திஞர்கள்; (எ-று.)

ஆதவம் = ஆதபம்; வெயில். நாகராவார்-படமும் வாலுமுடையராய் மனிதவடிவமுந் தெய்வப்பிறப்புமானதொரு சர்ப்பசாதியார். (287)

14.—அப்பாம்புகளின் விஷத்தால் முந்தின விஷம் நீங்குதல்.

முற்படுகொடுவிட முனையெயிற்றுகும்
பிற்படுவிடத்தினுற் பெயர்ந்துபோதலின்
மற்படுபுயகிரி வடப்பிணிப்புமற்று
அற்படுமிருள்புல ரலரியாயினுன்.

(இ-ள்.) முன் படு கொடு விடம்-(வீமனுடம்பில்) முன்பு பொருந்திய கொடிய (உணவின்) விஷம், முனை எயிறு உகும் பின் படு விடத்தினல் - (சிறுநாகங்களின்) முனைத்த பற்களினின்று சொரிந்த பிந்தின விஷத்தால், பெயர்ந்து போதலின் - நீங்கிப் போனதனுல்,—(வீமன்),—மல் படு புயம் கிரி வடம் பிணிப்புஉம் அற்று-வலிமை மிக்க மலைகள்போன்ற (தனது) தோள்களிற் கயிற்ருற்கட்டிய கட்டும் (தனது உடல்வலிமையால்) துணிபடப் பெற்று, அல் படும் இருள் புலர் அலரி ஆயினுன்-இரவில் உண்டாகும் இருளைக்கெடச்செய்த சூரியன் போன்ருன்; (எ-று.)

கொடுவிடமும் கடும்பிணிப்பும் அற விளங்கிய வீமனுக்கு, இருளறவிளங்கிய சூரியனை உவமைகூறினர். ஸ்தாவரவிஷமான நஞ்சுணவிற்குச் சங்கம விஷமான அரவினங்கடித்துஏற்றிய விஷம் மாற்ருயிற்றென்க. புயகிரி-முன்பின்னுகத்தொக்க உவமத்தொகை. 'முனையெயிற்று' என்றும் பாடம். (288)

15.—வீமனுக்கு வாசுகி அன்போடு அமிருதமூட்டுதல்.

வாசுகிதனக்கிவன் வரவுணர்த்தலும்
ஆசுகன்மதலையென் றறிந்துமற்றவன்
தேசுறுபொற்குடந் தெரிந்துபத்தினுல்
ஏசறுமமுதெலா மினிதினுட்டினுன்.

(இ-ள்.) வாசுகிதனக்கு இவன் வரவு உணர்த்தலும்-(நாக ராசனான) வாசுகிக்கு இந்த வீமனது வருகையை (நாகங்கள்) அறிவித்தவுடனே,—அவன் - அந்த வாசுகி, ஆசுகன் மதலை என்று அறிந்து - (இவனை) வாயுவின் குமாரனென்று அறிந்துகொண்டு, தேசு உறு பொன்குடம் தெரிந்து-ஒளிமிக்க பொன்மயமான (அமிருத) கலசங்களைத் தேர்ந்தெடுத்து, பத்தினால் - அக்குடங்கள் பத்திலேயுள்ள, ஏசு அறும் அமுது எலாம்-குற்றமில்லாத அமிருதம் முழுவதையும், இனிதின் ஊட்டினான்-இனிமையாக உண்பித்தான்; (எ-று.)

குந்தியின் தாய்மரபினரோடு வாசுகிக்கு உறவுமுறைமை உள்ளதனால், ஆர்யகனென்ற நாகமாதாமகனான அரசன் மொழிப்படி, வாசுகி வீமனுக்கு ஆயிரம்யானைவலிமைதரவல்ல திவ்ய ரசத்தைப் பானஞ்செய்வித்தனனென்று வியாசபாரதத்திற் கூறியுள்ளது. தன்சாதியாகிய பாம்புகளுக்கு உணவாய் அவற்றை வளர்க்கிற வாயுவின் மகனென்ற சம்பந்தத்தாலும்,பல நாகங்கள் கடித்தும் விஷம் உறைக்காத அவனது உடல் வலிமையைக் கண்டதனாலாகிய ஆச்சரியத்தாலும், வீமனுக்கு வாசுகி அமிழ்து ஊட்டினனென்பாருமுளர். 'பற்றினால்' என்றும் பாடம். (289)

16.—அமிருதமுண்டதனால் வீமனது உடல் எழிலுறுதல்.

வெங்கனல்கொளுந்தலின் வெந்தவான்புலம்
மங்குல்பெய்மாரியால் வயங்குமாறுபோல்
அங்கெரிவிடநுகர்ந் தழிந்தபேருடல்
இங்கமுதருத்தலா லெழில்புரிந்ததே.

(இ-ள்.) வெம் கனல் கொளுந்தலின் வெந்த-வெவ்வியநெருப்புப் பற்றுதலால் எரிந்துபோன, வான் புலம்-பெரிய காடு,மங்குல் பெய் மாரியால்-மேகம்பொழிந்த மழையால்,வயங்கும் ஆறுபோல்-தழைத்து விளங்குந்தன்மைபோல,—அங்கு எரி விடம் நுகர்ந்து அழிந்த பேர் உடல்-அவ்விடத்தில் [துரியோதனனிடத்தில்] கொடியவிஷத்தை யுண்டதனால் தன் நிலைகுலைந்த (வீமனது) பெரிய உடம்பு, இங்கு அமுது அருத்தலால் எழில் புரிந்தது-இவ்விடத்தில் அமிருதம் உண்பிக்கப்பெற்றதனால் அழகுசெய்தது; (எ - று.)

முதலிரண்டடிக்கு-உஷ்ணமான நெருப்புப்போன்ற சூரியகிரணஞ் சுடுதலால்தீந்துபோன பெரியபயிர்நிலம் மழையால் தழைத்துச் செழித்தல்போல என்றுமாம். 'கொளுத்தலின்' எனவும் பாடம். (290)

17.—வீமன் வாசுகியின் மாளிகையில் எட்டுநாள் தங்கியிருத்தல்.

ஆயிரம்பதின்மடங் கரசுவாக்களின்
மாயிருந்திறல்வலி மலிந்தமேனியான்
ஏயிருந்தவப்பய னென்னவெண்பகல்
மேயிருந்தனன்பணி வேந்தன்கோயிலே.

(இ-ள்.) ஆயிரம் பதின் மடங்கு அரசு உவாக்களின் - பதினாயிரம் அரசயானைகளினுடைய, மா இரு திறல் வலி-மிகவும் அதிகமானபெரிய வலிமை, மலிந்த-பொருந்திய, மேனியான் - உடம்பை

யுடையவனான வீமன், எய்இரு தவம் பயன் என்ன - பொருந்திய மிக்க தவத்தின் பயனின்றற்போல, பணிவேந்தன் கோயில் - நாக ராசனான வாசுகியினது சிறந்தமாளிகையிலே, எண்பகல் மேய் இருந்தனன்-எட்டுநாள் தங்கியிருந்தான்; (எ - று.)

இன்பத்திற்சிறந்த நாகலோகத்தில் மனிதவுடம்போடு சென்றுசிலநாள் தங்குதல்அரிதிற்செய்த பெரியதவயோகத்தின் சித்தியினாலன்றி இயலாதாதலால், 'எயிருந்தவப்பயனென்ன' என்றார். அரசுஉவா-சிறந்தயானை; சிறந்ததை அரசென்றல்,மரபு. உவா-யுவா என்ற வடசொல் விகாரப்பட்டது. அரசுவாவின் இலக்கணம் - நான்குகால்களும் துதிக்கையும் கோசமும் வாலு மாகிய எழுறுப்பு நிலத்தில்தோய்ந்து, பாலையும் சங்கையும் போன்ற வெண்ணிறம் வாய்ந்த கால்நகமுடையதாய், நான்கு கால்கள் துதிக்கை உடம்பு வால் தந்தம் இரண்டு ஆகிய ஒன்பது உறுப்புக்களாலுங் கொல்லவல்லதாய், எழுமுழம் உயர்ந்து ஒன்பதுமுழம் நீண்டு பதின்மூன்று முழச்சுற்றளவுடையதாகி, தீயுமிழுஞ் சிறிய கண்களையும் சிவந்தபுள்ளிகளையுமுடைத்தாய், முன்பக்கம் உயர்ந்து பின்பக்கம் தாழ்ந்திருப்பதாம். மாயிரு-உரிச் சொற்புணர்ச்சி. திறல்வலி-ஒரு பொருட் பன்மொழி. (291)

18.—வீமனின்றித் துரியோதனன்மாத்திரம் நகர் சேர்தல்.

இவனையந்நதியிடை யிட்டபாவியும்
தவனனையுததியிற் சாய்த்தமாலைபோல்
அவனிபனகரியி னரசவெள்வளைத்
துவனிசெந்தழல்விளக் கெடுப்பத்துன்னவே.



இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இவனை அ நதியிடை இட்டபாவிஉம்-வீமனை அக் கங்கா நதியின் நடுவிலே போகட்ட தீவினையுடையவனான துரியோ தனனும்,—தவனனை உததியில் சாய்த்த மாலை போல்-சூரியனைக் கடலில்வீழ்த்திய மாலைக்காலம்போல,—அரசர் வெள் வளை துவனி-அரசர்களுக்குரிய வெண்மையான சங்கத்தின் முழக்கத் தோடு, செம் தழல் விளக்கு எடுப்ப-சிவந்த அக்கினியினாலாகிய தீபத்தை (நகரத்தவர்) எடுக்காநிற்க,—அவனிபன் நகரியின் துன்ன-திருதராட்டிர மகாராசனுடைய நகரத்தில் [அத்தினபுரி யில்] சேர்ந்திடவே,—(எ-று.)—குந்தி கண்டிலள் விண்டிலளென வருங் கவியோடு முடியும்.

துரியோதனன் மாலைப்பொழுதில் அத்தினபுரிக்கு வந்தா னென்பது, இதன் கருத்து. செந்நிறமுடைய சூரியன் கடலில் மறைந்திடுதற்குக் காரணமான கரியஇருட்பொழுதாகியமாலையை, செம்மையுடைய வீமன் கங்கைப்பெருக்கில் மூழ்கியிடுதற்குத் தூண்டுகோலான கறுத்த களங்க சித்தமுடைய துரியோதன னுக்குஉவமைகூறினமை நன்குபொருந்தும்.அன்றியும்,சூரியனைக் கடலிற்சாய்த்த மாலைஅவன்அழியாதுநிற்கச் சிறிதுபொழுதிலே தான் அழிதல்போல, வீமனை நதியில் ஆழ்த்திய துரியோதன னும் அவன் இறவாதுநிற்கத் தானே விரைவில் அழிந்திடு தலையும் நோக்குக. காலை மாலையாகிய இரண்டு சந்தியிலும்

இராசநகரியிற் சங்கொலித்தலும், மாலையில் விளக்கு எடுத்தலும் இயல்பு. இராசகுமாரனான துரியோதனன் நகர்க்கு மீளுகையில் அங்குள்ளார் அவனுக்கு மரியாதையாக மங்களசங்கத்தை முழக்குதலும், அஷ்டமங்கலத்துள் ஒன்றான விளக்கை ஏந்துதலும் இயல்பே. (292)

19.—வீமனைக் காணாது குந்தி மிகவருந்துதல்.

கண்டிலளுதிட்டிரன் கனிட்டற்கண்ணுற
உண்டிலடரித்தில ளோரிராவினும்
கொண்டிலடுயிலிளங் குமரர்தம்மொடும்
விண்டிலளுரையுளம் விம்முகுந்தியே.

(இ-ள்.) உதிட்டிரன் கனிட்டன்-தருமபுத்திரனது தம்பியான வீமனை, கண் உற கண்டிலள்-(தன்) எதிரில்வரக் காணாதவளாய், உளம் விம்மு - மனம் ஏங்குகிற, குந்தி - குந்திதேவியானவள்,— உண்டிலள்-உணவுநுகர்ந்திலள்; தரித்திலள்-(மகப்பிரிவினாலான துன்பத்தைச்) சிறிதும் பொறுக்கமாட்டிற்றிலள்; ஓர் இராவின் உம் - (அவனைக்காணாத தினங்களுள்) ஓரிரவிலாயினும், துயில் கொண்டிலள்-நித்திரைகொண்டிலள்; இள குமரர் தம்மொடு உம் உரை விண்டிலள்-இளமைப்பருவமுடைய (தனது மற்றைக்) குமாரர்களுடனும் யாதொருபேச்சும் பேசிற்றிலள்; (எ - று.) (293)

20.—தருமன் முதலிய நால்வரும் வீமனைத் தேடிக் காணாது வருந்துதல்.

வீடினனுமெனத் துணைவர்வேறுவேறு
ஓடினர்கானதி யோடையெங்கணும்
தேடினர்காண்கிலஞ் செய்வதென்னென
நாடினர்நடுங்கினர் நடுக்கில்சிந்தையார்.

(இ - ள்) நடுக்கு இல் சிந்தையார்-கலக்கமற்ற மனத்தையுடையவர்களான, துணைவர்-(யுதிட்டிரன் முதலிய) உடன்பிறந்த நால்வரும், வேறு வேறு ஓடினர்-வெவ்வேறாய் ஓடிச்சென்று, கான் நதி ஓடை எங்கண்உம் தேடினர்-காடு நதி ஓடைஆகிய எவ்விடங்களிலுந் தேடி, காண்கிலம் செய்வது என் என நாடினர்- '(எங்குங்)காண்கின்றிலோம்: இனிச்செய்யக்கடவது என்ன!' என்று சிந்தித்து, வீடினன் ஆம் என-(வீமன்) இறந்தான்போலுமென்று சங்கித்து, நடுங்கினர்-மிகவும் அஞ்சினார்கள்; (எ-று.)

"கானநேஷு ஸரஸீஷு ஸிந்துஷு" என்று பாலபாரதத்தில் வருதற்கு ஏற்ப, கான்-காட்டில் எனப்பட்டது. (294)

21.—தருமன் முதலியோர் சிந்தைப்படும் விதம்.

கூற்றனசுயோதன குமரனேயிவன்
ஆற்றலின்வெரீஇயழுக் கற்றசிந்தையான்
ஏற்றதையுணர்கில மென்றுதந்தையாம்
காற்றினுமலமருங் கருத்தராயினர்.

(இ-ள்.) 'கூற்று அன-யமனையொத்த, சுயோதன குமரனே - துரியோதனனாகிய இராசகுமாரனே, இவன் ஆற்றலின் வெரீஇ -

இவ்வீமனுடைய வலிமையினின்று அஞ்சி, அழுக்கற்ற-(இவனிடம்) பொறாமைப்பட்ட, சிந்தையான்-மனத்தையுடையவன்: (இவ்வளவேயன்றி), ஏற்றதை உணர்கிலம் - (வீமனுக்கு) நேர்ந்த நிலையை அறியோம்', என்று-என்று எண்ணி, தந்தை ஆம் காற்றின் உம் அலமரும் கருத்தர் ஆயினர்-(தருமன்முதலிய நால்வரும் அவ்வீமனது) தந்தையாகிய காற்றைக்காட்டிலும் விரைந்து சுழலுகின்ற மனத்தையுடையவரானார்கள்; (எ-று.)—இக்கவிக்கு எழுவாய், கீழ்க்கவியில் வந்த 'துணைவர்' என்பதே.

துரியோதனனே இவன்மேற் பொறாமையுடையவனாதலால், அவன் இவனை யாதுசெய்தனனோ என்று சங்கித்தன ரென்பதாம். சிறிதேனும் ஒருநிலை நில்லாமல் எப்பொழுதுஞ் சஞ்சரிக்குந் தன்மையையுடைய காற்றினும் மிகுதியாக மனஞ்சலித்தன ரென்பது, ஈற்றடியின் கருத்து. பிராணிகளின் உடம்பையும் உயிரையும் வெவ்வேறுகூறாகப் பிரித்தலால், யமனுக்குக் கூற்று என்று பெயர்; இதற்கு - பொதுப்படச்செல்லுங்காலத்தைப் பிராணிகளுக்கு ஏற்பக் கூறுபடுத்துபவனென்று காரணப்பொருளுரைத்தலும் உண்டு. அழுக்கறுத்தல்-பிறராக்கம் பொறாமை. அழுக்கறு என்பது-ஒருசொல்; இனி, அழுக்கு அறுஎனப் பிரிந்து, குற்றம் நீங்குதலென்று பொருள்படும் இது, குற்றமுடைமையாகிய பொறாமைக்கு எதிர்மறையிலக்கணையாய் வழங்கியதென்றலும் ஒன்று. இது முதனிலைதிரிந்த தொழிற்பெயராய் அழுக்காறு என நிற்கும். (295)

22.—மக்களுடன் வருந்திய குந்திக்கு விடுமன் தேறுதல்கூறல்.

ஊதையில்பூதமொத் துள்ளம்வெம்பிய
தாதையில்சிறுவரைத் தாதைதாதைபால்
கோதையில்குழலினள் கொண்டுசேறலும்
வாதையின்றவற்கென வருத்தமாற்றினன்.

(இ-ள்.) ஊதை இல் பூதம் ஒத்து-வாயுவையொழிந்த மற்றை நான்கு பூதங்கள் போன்று, உள்ளம் வெம்பிய-(வீமனைக்காணாது) மனந் தவித்த, தாதை இல் சிறுவரை-தந்தையை யிழந்த மைந்தரான (தருமன் முதலிய) நால்வரையும், கோதை இல் குழலினள்-(அமங்கலியாதலால்) மாலையில்லாத கூந்தலையுடைய குந்திதேவியானவள், தாதை தாதைபால்-(அக்குமாரர்களின்) தந்தையான பாண்டுவினது (பெரிய) தந்தையாகிய விடுமனிடத்தில், கொண்டு சேறலும் - அழைத்துக்கொண்டு போனவளவிலே,—(அவ்வீடுமன்), அவற்கு வாதை இன்று என-அவ்வீமனுக்கு வருத்தமொன்று மில்லையென்று (தன் ஞானக்கண்ணால் உணர்ந்து) கூறி, வருத்தம் மாற்றினன்-(அவர்களுடைய) துன்பத்தை நீக்கினான்;

ஒன்றற்கொன்று தொடர்புடைய ஐம்பெரும்பூதங்கள் தம்மில் ஒன்றாகிய வாயு ஒழிந்தால் தமது நிறைவு குறைந்து நான்காய் நிற்றல்போல, உள்ளும் புறமும் ஒத்த உடன்பிறந்தவரான பஞ்சபாண்டவர்கள் தம்மில் ஒருவனான வீமனை யிழத்தலால் குறைகொண்டு நின்றன ரென்பது, 'ஊதையில் பூதமொத்த சிறுவர்' என்பதன் கருத்து. இங்கே, பூதம் - நிலம், நீர், தீ, வானம். வாயுகுமாரனுக்கு அவ்வாயுவையே உவமை கூறினர்.

இனி, ஊதையில் பூதமொத்த சிறுவர்-உயிர்ப்பில்லாத பிராணிகள் போன்று வீமனை யிழத்தலால் அழிவடைந்த மற்றைநால்வரென்றலும் ஒன்று. 'தாதைதாதைபால் சிறுவரைக் கொண்டு சேறலும்' என்றமையால், வீமனில்லாக் குறையைத் தெரிவித்தமை பெறப்படும். (296)

23.—பலருந் தேற்றவும் குந்தி தேருதுநிற்றல்.

தருமமன்னனுநகர்ச் சனங்கள்யாவையும்
தெருமரறேற்றவுந் தெய்வங்கூறவும்
பெருமிதநிமித்தங்கள் பெற்றிபேசவும்
வரும்வருமெனமனம் மறுகிவைகினுள்.

(இ-ள்.) வரும் வரும் என-(வீமன்)வருவான் வருவானென்று கூறி, தருமமன்னன்உம்-யமதருமராசனது அமிசமான விதுரராசனும், நகர் சனங்கள் யாவைஉம்-பட்டணத்துச் சனங்களெவையும், தெருமரல் தேற்றஉம்-மனக்கலக்கத்தைத் தெளிவிக்கவும், தெய்வம்-தெய்வங்கள், கூறஉம் - ஆவேசப்பட்டுச் சொல்லவும், பெருமிதம் நிமித்தங்கள் - நல்ல சகுனங்கள், பெற்றி பேசஉம் - (அவன் வருவதற்கு உரிய) அடையாளங்களைக் கூறவும், (குந்திதேவி), மனம் மறுகி வைகினுள்-(தேருமல்)மனங்கலங்கியே இருந்தாள்; (எ - று.)

விதுரன் யமதருமராசனது அமிசமாதலைக் கீழ்ச் சம்பவச் சருக்கத்தில் வந்ததனால் அறிக. சனமென்றது-பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் இருதிணைக்கும் பொதுவாதலால், 'சனங்கள் யாவையும்' என அஃறிணைப்பாற்படுத்துக் கூறினார். பெரும் இதம் நிமித்தங்கள் எனப்பிரித்து-மிக்க நன்மைக்கு உரிய சகுனங்களெனினுமாம். பேச-உணர்த்த என்றபடி: இது-ஒருவகை உபசாரவழக்கு. வரும்வரும் என்ற அடுக்கு-துணிவையும் விரைவையும் விளக்குவது. 'வைகுநாள்', 'வைகினர்' என்றும் பாடம். (297)

24.—வீமனை நாகங்கள் சுமந்து கங்கைக்கரையிற்கொண்டுசேர்தல்.

இருந்திளைப்பகன்றபி னிவனைமற்றைநாள்
அருந்திறற்போகிக ளரசனேவலால்
வருந்தியுற்றெடுத்துமுன் வந்தநீர்வழிப்
பொருந்திரைக்கங்கையின் கரையிற்போக்கவே.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) இருந்து-(வீமன் வாசுகியின் மாளிகையில்எட்டுநாள்) தங்கியிருந்து, இளைப்பு அகன்றபின்-இளைப்பாறியபின்பு, மற்றைநாள்-அடுத்தநாளில், அரு திறல் போகிகள்-(பிறவுயிர்க்கு) அரிய வலிமையையுடையநாகங்கள், அரசன் ஏவலால்-(தங்கள்) அரசனை வாசுகியினது கட்டளையினல், இவனை வருந்தி உற்று எடுத்து - இவ்வீமனை வருந்திச் சுமந்தெடுத்து, முன் வந்த நீர் வழி-முன்பு (இவன்) வந்த நீரின் வழியாய்க் (கொண்டுவந்து), பொரும் திரை கங்கையின் கரையில் போக்க-மோதுகின்ற அலைகளையுடைய கங்கா நதியின்கரையிலே செலுத்திவிட,—(எ-று.)— "மேனியான் [வீமன்] ஆயினன்" என 26-ஆங் கவியோடுமுடியும்.

இக்கவி, கீழ்ப்பதினேழாங்கவியோடு தொடர்புடையது. வீமன் பதினாயிரம் அரசயானைகளின் வலிமையுடையவனாதலால், அருந்திறற்போகிகள் வருந்தியுற்று எடுத்தனவென்க. போகி என்ற வடசொல் - போகத்தையுடையதென்று பொருள்படும்; போகமென்று பாம்பினுடலுக்குப் பெயர். (298)

25.—கவிக்கூற்று: வீமனைச் சுமக்கும் ஆற்றல் நாகங்கட்கு உண்டுஎன்றல்.

பாழியம்புயகிரிப் பாண்டவன்றனைச்
சூழிகற்பணிக்குலஞ் சுமக்கவல்லவோ
வாழியக்குலங்களின் மன்னனல்லனோ
ஏழிருபுவனமு மினிதினேந்துவான்.

(இ-ள்.) பாழி-வலிமையையுடைய, அம்-அழகிய, புய கிரி-மலைகள் போன்ற தோள்களையுடைய, பாண்டவன் தனை-வீமனை, சூழ் இகல் பணிகுலம்-மண்டலமிடுந்தன்மையுள்ள வலிமையையுடைய பாம்புகளின் கூட்டங்கள், சுமக்க வல்ல ஓ-சுமத்தற்கு வல்லமையுடையனவோ? (எனின்),—ஏழ் இரு புவனம் உம் இனிதின் ஏந்துவான்-பதினான்கு உலகங்களையும் எளிதாகச் சுமப்பவனான ஆதிசேடன், அ குலங்களின் மன்னன் அல்லன் ஓ-அப்பாம்புக்கூட்டங்களின் அரசனல்லனோ? (எ - று.)—ஆதலால், அவைகளும் இவனைத் தாங்கவல்லன என்பதாம். வாழி-அசை.

வீமனைச்சுமக்கவல்ல வலிமை நாகங்கட்கு உள்ளது என்ற கருத்தைக் கவி தாமே தடைவிடைகளால் விளக்கினர். பாண்டவன்-பாண்டுவின் மகன்; வடமொழித்தத்திதாந்தநாமம். இப்பொதுப்பெயர்-சிறப்பாய், இங்கே வீமனை யுணர்த்திற்று. ஏழிரு புவனம்-பூலோகம் புவர்லோகம் சுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் சத்தியலோகம் என்ற மேலேழுலகங்களும், அதலம் விதலம் சுதலம் தராதலம் ரஸாதலம் மஹாதலம் பாதாளம் என்ற கீழேழுலகங்களும். சர்ப்பராசனான ஆதிசேஷன் உலகங்களின் கீழிருந்து அவற்றைத் தாங்குகின்றனனென்பது,நூற்கொள்கை. கீழ்ச்செய்யுளில், 'இவனைப் போகிகள் எடுத்து' என வந்ததன்கண் உண்டான ஐயத்தை அகற்றுதலால், இச்செய்யுள் - இடைப்பிறவரலாய், குளகச்செய்யுள்களின் நடுவில் நின்றதென்று உணர்க. 'பாண்டுமைந்தனை' எனவும்பாடம். (299)

26.—வீமன் முன்னினும் மிகவிளங்குதல்.

விதியினாலொளித்தலி னுயங்கிமீளவும்
நதியினால்வருதலி னலங்கொண்மேனியான்
பதியினால்விளங்குமென் பங்கயங்களும்
மதியினாற்குளிர்நெடு வானுமாயினான்.

(இ-ள்.) விதியினால்-(முற்பிறப்பிற்செய்த) வினையின் பயனால், ஒளித்தலின்-(யாற்றில் தள்ளப்பட்டு) அழுந்தியதனால், உயங்கி-வாட்டமுற்று, மீளஉம் நதியினால் வருதலின் நலம் கொள்-பின்பு அந்நதியின்வழியால் மீண்டுவந்ததனால் நல்லவிளக்கத்தைக் கொண்ட, மேனியான்-உடம்பையுடையவனான வீமன்,-பதியினால்

விளங்கும் மெல் பங்கயங்கள்உம் - (தனது) தலைவனான சூரியன் (மறைதலாற் குவிந்து அவன்) உதித்தலால் மலர்ந்த மெல்லிய தாமரைமலர்களும், மதியினால் குளிர் நெடு வான்உம் ஆயினான் - (சூரியனால் வெப்பமடைந்து) சந்திரனாற் குளிர்ச்சியடைந்த பெரிய ஆகாயமும் போல்ஆனான்; (எ-று.)—பங்கயங்கள் என்ற பன்மைக்குப்பயன் இல்லை.

சூரியனைக்கண்டபொழுது தாமரை மலர்தலும் காணாதபொழுது குவிதலுமாகிய இயல்புபற்றி, தாமரையாகிய பெண்ணுக்குச்சூரியனைக்கணவனென்ப. நலங்கொள்மேனியாள்...வானுமாயினாள் என்றும் பாடம். (300)

27.—வீமன் உற்றார்க்கு மகிழ்ச்சியையும் உறுதார்க்கு அச்சத்தையும் விளைத்தல்.

வேதியர்குரவர்வில் விதுரன்வீடுமன்
ஆதியர்துணைவரந் நகருளார்களென்று
ஓதியசனங்களுக் குவகைநல்கினான்
ஞாதியர்கிளைக்கெலா நடுக்கநல்கியே.

(இ - ள்.) (இத்தன்மையனான வீமன்),—ஞாதியர்கிளைக்கு எலாம் நடுக்கம் நல்கி-பங்காளிகளாகிய துரியோதனாதியரது கூட்டத்துக்கெல்லாம் மிக்க அச்சத்தைக்கொடுத்து,—வேதியர்-பிராமணர்களும், குரவர்-(தாயும் தமையனும்முதலிய) பெரியோர்களும், வில் விதுரன் வீடுமன்ஆதியர்-வில்வித்தையில் தேர்ந்த விதுரன் பீஷ்மன் முதலானவர்களும், துணைவர்-(தனது) தம்பிமாராகிய (அருச்சுனன்முதலிய) மூவரும், அ நகர் உளார்கள்-மற்றும் அந்நகரத்தி லுள்ளவர்களும், என்று ஓதிய-என்று சொல்லப்பட்ட, சனங்களுக்கு-சனங்களுக்கெல்லாம், உவகை நல்கினான்-மகிழ்ச்சியைக் கொடுத்தான்; (எ - று.)

குரவர் என்பதற்கு - ஐம்பெருங்குரவரிற்சேர்ந்த தாயும் தமையனும் குலகுருவும் கொள்க. உவகைநல்கினான் நடுக்க நல்கி-தொடைமுரண். (301)

28.—வீமன் அத்தினாபுரிசேர்ந்து தாயைத் தேற்றி வாழ்தல்.

குந்தியைமகிழுரை கூறிக்கற்பினால்
அந்திமீனனையவ ளருளின்வாழ்த்தவே
செந்திருமகளுறை செல்வமாநகர்
வந்திவன்முன்புபோல் வளருநாளிலே.

இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) இவன்-இந்த வீமன்,—செம் திருமகள் உறை செல்வம் மாநகர் வந்து-செம்மையுடைய இலக்குமி வசிக்கின்ற செல்வங்கள் நிறைந்த பெரிய அத்தினாபுரிக்கு வந்து, குந்தியை மகிழ் உரை கூறி - (தனது தாயாகிய) குந்தியைநோக்கி (அவளுக்கு) மகிழ்ச்சியைத்தரும் இனியவார்த்தைகளைச் சொல்லி, கற்பினால்

அந்திமீன் அனையவள் அருளின் வாழ்த்த - பதிவிரதா தருமத்தால் அருந்ததியையொத்த அக்குந்திதேவி அருளோடு (தன்னை) வாழ்த்த, முன்பு போல் வளரும் நாளில் - முன்போல வளர்கின்ற காலத்திலே, — (எ-று.) — "கிருபனென்றுளான் (29) "இவன் குருகுலகுமாரரை சிலையும் வேலும் வாளமும் பயிற்றினான்" (30) என முடியும். (303)

29.—கிருபாசார்யனது வரலாறு.

கோதமன்மகன்மகன் குனிவிலாதியாம்
மேதகுபடைக்கலம் யாவும்வீறுடன்
மாதவன்வயிற்பயில் வரதன்வன்றிறல்
கேதமில்சிந்தையான் கிருபனென்றுளான்.

(இ-ள்.) கோதமன் மகன் மகன் - கோதமமுனிவனது குமாரனாகிய சரத்துவான் என்னும் முனிவனதுபுத்திரன், — குனிவில் ஆதி ஆம் - வளைக்கப்படுகின்ற வில் முதலாகிய, மேதகு படைக்கலம் யாவும் - மேன்மைமிக்க ஆயுதங்களையெல்லாம், வீறுடு - மிக்க சிறப்போடு, அ மாதவன்வயின் பயில் - பெருந்தவமுடைய அச்சரத்துவந்த முனிவனிடத்துக் கற்றுத்தேர்ந்த, வரதன் - (தன்னை வேண்டினார்க்கு) வரம் அருளத்தக்க சிறப்புடையவனும், வல் திறல் - மிக்க வலிமையையும், கேதம் இல் சிந்தையான் - களங்கமில்லாதமனத்தையுமுடையவனும் ஆகிய, கிருபன் என்று - கிருபாசாரியனென்று பெயர் கூறப்பட்டு, உளான் - (ஓர் அந்தணன்) உள்ளான்; (எ-று.)

கோதமனென்னும் முனிவனது குமாரனும், தான்பிறந்தபொழுது அம்புகளுடனே பிறந்ததனால் 'சரத்வாந்' என்று பெயர் பெற்றவனுமான (சரம்-அம்பு) முனிவன் இளமையில் வேதமோதுதலினும் வில்வித்தைதேர்தலில் மிக்க விருப்புற்று அதில் நன்குதேர்ந்து பின்பு பெருந்தவஞ்செய்துவருகையில், தனது தவத்தைக் கெடுத்தற்பொருட்டு இந்திரனா லேவப்பட்டுவந்த ஜாநபதீயென்னும் தேவகன்னிகையைக் கண்டு காமுற்றதனால், அவன்விருப்பத்திற்கு ஏற்ப அருகிலுள்ள நாணற்கட்டையில் ஓராண்மகவும் ஒருபெண்மகவும் உண்டாயின. தனது தவநிலை குலைந்ததற்குக்கழிவிரக்கங்கொண்ட அம்முனிவன் உடனே அக்குழந்தைகளையும் தனதுவில் அம்புகளையும் அங்கே விட்டிட்டு அப்பாற்சென்றான். பின்பு வேட்டைக்குச் சென்ற சந்தனுமகாராஜன் கதியற்றிருந்த அக்குழந்தைகளைக் கிருபையோடு எடுத்துவந்து வளர்த்ததனால், அவர்கட்கு முறையே கிருபனென்றும் கிருபியென்றும் பெயர்கள் உண்டாயின. பிறகு ஒருகால் அந்தச் சரத்வானென்ற முனிவன் அத்தினபுரிக்குவந்து தன் மகனான கிருபனுக்கு வில்வித்தை முழுவதையும் கற்பித்துக் கொடுத்துச் சென்றானதலால், கிருபன் சிறந்த வில்லாசிரியனாய் அங்கு விளங்கினனென வரலாறு அறிக.

கௌதமகுலத்தார் ஆதியில் க்ஷத்திரியசம்பந்தமுடையராதலால், க்ஷத்திரியத் தன்மையோடு கூடின பிராமணர்களாயிருந்தார்களாதலின், வில்முதலிய படைக்கலங்கட்கு உரியராயினரென அறிக. (303)

**30.—கிருபன் கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் வில்வித்தை பயிற்றல்.**

மற்றிவன்சந்தனு மைந்தனேவலால்
கொற்றவரருள்குரு குலகுமாரரை
வெற்றிகொள்சிலையும்வெவ் வேலும்வாளமும்
பற்றலர்வெருவரும் படிபயிற்றினன்.

(இ-ள்.) இவன்-இந்தக்கிருபன்,—சந்தனுமைந்தன் ஏவலால்-சந்தனுவென்னும் அரசனது குமாரனான வீடுமனது கட்டளையால்,-கொற்றவர் அருள் குருகுல குமாரரை-வெற்றியையுடைய (திருதராட்டிரன் பாண்டு என்ற) அரசர்கள் பெற்ற குருகுலத்துக்கு உரிய மக்களாகிய நூற்றைவரையும், வெற்றிகொள் சிலை உம் வெம்வேல் உம் வாளம்உம்-சயத்தைக் கொள்ளுகிற விற்படையையும் கொடிய வேற்படையையும் வாட்படையையும்,பற்றலர் வெருவரும்படி பயிற்றினன்-பகைவர்கள் அஞ்சும்படி கற்பித்தான்; (எ - று.) (304)

**31.—வீடுமன் கிருபனினுஞ் சிறந்த ஒரு குருவை நாடுதல்.**

பரிவுட னிவன்படை பயிற்றப் பின்னருங்
குருபதி வேறொரு குருவைத் தேடினன்
இருளற மதிநில வெறித்த தாயினும்
பரிதியை நயக்குமிப் பரவை ஞாலமே.

(இ-ள்.) இவன்-இந்தக்கிருபன்,பரிவுடன்-அன்புடனே, படை பயிற்ற-ஆயுதவித்தையைக் கற்றுக் கொடுத்துவரவும், பின்னர் உம்-பின்பும், குருபதி-குருகுலத்துக்குத் தலைவனான வீடுமன், வேறு ஒரு குருவை தேடினன்-(இவனினுஞ் சிறந்த) வேறோராசிரியனைத் தேடுபவனானான்; மதி-சந்திரன், இருள் அற நிலவு எறித்தது ஆயின்உம்-இருளொழியும்படி (தனது) ஒளியை வீசி வந்ததாயினும், இ பரவை ஞாலம்-கடல்சூழ்ந்த இந்நிலவுலகம், பரிதியை நயக்கும்-(அச்சந்திரனினும் மிக்க வொளியையுடைய) சூரியனை விரும்புமன்றோ!(எ-று.)—இச்செய்யுள்-எடுத்துக்காட்டுவமை.

வே று.

**32.—இதுவும், அடுத்த கவியும் - துரோணன்வரலாறு.**

பரத நாத வேத பரத்து வாச னென்பான்
விரத வேள்வி தன்னின் மேன கையா லான
சுரத தாது வீழ்ந்த துரோண கும்பந் தன்னில்
வரத னொருவன் வந்தான் வசிட்ட முனியை யொப்பான்.

(இ-ள்.) பரதம்-தாளவகையோடு சம்பந்தமுடைய, நாதம்-இசையோடுபொருந்திய, வேதம்-வேதங்களைவல்ல,பரத்துவாசன் என்பான்-பரத்துவாச னென்னும் முனிவன், விரதம் வேள்விதன்னில்-விரதானுட்டானத்தோடு கூடிய யாகஞ் செய்துகொண்டிருக்கையில், மேனகையால்-மேனகையென்னும் தேவமாதைக்கண்டு காமுற்றதனால், ஆன-ஆகிய, சுரத தாது-இன்பமயமான வீரியம், வீழ்ந்த - விழப்பெற்ற, துரோணகும்பந்தன்னில் - பதக்களவு கொண்டதொரு பாத்திரத்தினின்று, வசிட்டமுனியை ஒப்பான்

வரதன் ஒருவன் வந்தான்-வசிஷ்டமகாமுனியைப் போன்ற ஒரு முனிவன் தோன்றினன்; (எ - று.)

அங்கிரஸ் என்னும் முனிவனது குலத்தில் தோன்றிய பரத்துவாசமகாருஷி கங்கைத்தலைப்பில் யாகஞ்செய்துகொண்டிருக்கையில் அங்கு நீராடவந்த ஒருதேவமாதின் கட்டழகைக் கண்டு காதல்கொண்டு நெகிழ்ந்து உருக, அவனது விருப்பத்தால் ஒருதுரோண கலசத்திலிருந்து ஒருகுமாரன் பிறந்தான்; அவனுக்குத் துரோணனென்று பெயராயிற்று என்று அறிக. அந்தத் தேவமாதின் பெயர் கிருதாசி என்று வடநூல்கூறும். பரதநாதவேத பரத்வாஜன், வ்ரதம், மேநகா, ஸுரதநாது, த்ரோணகும்பம், வரதன், வசிஷ்டமுநி-வடசொற்கள். பரதமென்ற நாட்டியசாஸ்திரத்தின் பெயர்-இங்கே இலக்கணையாய், நாட்டியத்தின் அங்கமான தாளத்தைக் குறித்தது. வேதம்-உதாத்தம் முதலிய நால்வகை சுவரத்தோடு கூடியிருத்தலேயன்றி 'வேதகீதம்' 'ஸாமகாநம்' என்றபடி மற்றும் இசை வகைக்கும் உரியதாய் நிற்றலால், 'நாதவேதம்' எனப்பட்டது. பரத்வாஜன்என்ற பெயருக்கு - பிரசைகளைப் பாதுகாப்பவ னென்று பொருள் கூறுவர்; பரத்-பரிப்பவன், வாஜம்-ஜனம். துரோணம் - இரண்டு மரக்கால். வசிஷ்டன் என்பதற்கு-(இந்திரியங்களை) வசப்படுத்தியவ னென்பது உற்பத்தி யருத்தம். முநி-மநநசிலன்: எப்பொழுதுங் கடவுளைத் தியானஞ் செய்பவன். மேனகையான் மெலிந்து என்றும் பாடம்.

இதுமுதற் பதினாறு கவிகள்-எல்லாச்சீரும் மாச்சீர்களாய் வந்த கழிநெடிலடிநான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (306)

33. ஈரேழ்விஞ்சைத்திறனு மீன்றோன்றன்பாலெய்தி
நீரேழென்னயாவு நிறைந்தகேள்விநெஞ்சன்
பாரேழெண்ணும்படைகள் பரசுராமன்றன்பால்
ஓரேழ்பகலினுலகுக் கொருவனென்னக்கற்றான்.

(இ-ள்.) (அந்தத்துரோணன்),—ஈர் ஏழ் விஞ்சை திறன்உம்-பதினான்கு வித்தைகளின் வகைகளையும், ஈன்றோன் தன்பால் எய்தி - (தனது) தந்தையான பரத்துவாச முனிவரிடத்திலே பெற்று [கற்றறிந்து], நீர் ஏழ்என்ன கேள்வி யாஉம் நிறைந்த நெஞ்சன் - ஏழுகடல்போல நூற்கேள்விக ளெல்லாம் நிரம்பின மனத்தையுடையவனாய்,-பரசுராமன் தன்பால் - பரசுராமனிடத்தில், பார் ஏழ் எண்ணும் படைகள்-ஏழுலகத்தாரும் மதிக்கத்தக்க அஸ்திரங்களை, ஓர் ஏழ் பகலின்-ஏழுநாளிலே, உலகுக்கு ஒருவன் என்ன கற்றான்-உலகத்திற்கு (இவன்) ஒருவனே யென்று சொல்லும்படி பயின்று தேர்ந்தான்; (எ - று.)

இந்தத்துரோணன் அக்கிவேசனென்னும் முனிவனிடத்தும் படைக்கலந் தேர்ந்தன னென்பது, மேல் 38-ஆங் கவியில் விளங்கும். ("இடையிருவகையோ ரல்லது நாடிற், படைவகை பெறூஅ ரென்மனார்புலவர்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தின் உரையில் 'நாடின் என்பதனான் ஒருசார் அந்தணரும் படைக்கு உரியரென்பது கொள்க: அவர் இயமதங்கியாரும்; துரோணனும், கிருபனும்

முதலாயினரெனக் கொள்க' என்றது காண்க. பதினான்கு வித்தைகள்-ருக் யசுஸ் சாமம் அதர்வணம் என்ற வேதம் நான்கு, சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் சோதிடம் கல்பம் என்ற வேதாங்கம் ஆறு, மீமாம்சை தர்க்கம் புராணம் தர்மசாஸ்திரம் என்ற உபாங்கம் நான்கு என இவை. விஞ்சை=வித்யா: வடசொல். பரசுராமன்-கோடாலியை ஆயுதமாகவுடைய இராமன். ராமனென்ற வடமொழி-(தனது குணஞ் செயல்களால் உலகத்தைக்) களிப்பிப்பவனென்று காரணப்பொருள்படும். வில்லையும் கலப்பையையும் ஆயுதமாகவுடைய தசரதராம பலராமர்களினும் வேறுபாடு விளங்கப் பரசுராமனென்று பெயர்பெற்ற இவன், விஷ்ணுவின் ஆறும் அவதாரம்; ஜமதக்னி முனிவனது குமாரன்; மூவுலகையும் வென்ற இராவணனைச் சயித்திட்ட கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்றவன்; உலகத்துச் செருக்குக்கொண்ட அரசர்பலரையும் அழித்தொழித்தவன். (307)

### 34.—வீடுமன் துரோணனை வரவழைத்தல்.

வெற்பின்வலியதிண்டோள் வேந்தனேவுந்தூதால்
அற்பின்மிக்கசிந்தை யறஞ்சான்மொழியவ்வாசான்
கற்பின்பன்னியோடுங் கையின்மதலையோடும்
பொற்பினமராவதியே போலுநகரிபுக்கான்.

(இ-ள்.) அற்பின் மிக்க சிந்தை - அன்பினால் நிறைந்த மனத்தையும், அறம் சால் மொழி - தருமம்நிறைந்த சொல்லையுமுடைய, அ ஆசான்-அந்தத் துரோணாசாரியன்,-வெற்பின்வலிய திண் தோள் வேந்தன் ஏவும் தூதால் - மலையினும் மிகவலிய தோள்களையுடைய வீடுமராசன் அனுப்பின தூதனால்,—கற்பின் பன்னியோடுஉம்-கற்பையுடைய தன் மனைவியுடனும், கையின் மதலையோடுஉம்-சிறுமையையுடைய குழந்தையோடும், பொற்பின் அமராவதிஏ போலும் நகரி புக்கான்-அழகினால் அமராவதி நகரத்தையே போன்ற அஸ்தினாபுரியை அடைந்தான்; (எ - று.)

இச்செய்யுள், கீழ் முப்பத்தோராஞ்செய்யுளோடு கதைத் தொடர்புடையதாதலால் இங்கே 'வேந்தன்' என்ற பொதுப் பெயர்-வீடுமனைக்குறித்தது. துரோணன்மனைவி கிருபி; மதலை அசுவத்தாமன். கை-சிறுமை மேலது: கையின் மதலை-சிறுவன்: மேல் 42, 59-ஆம் பாடல்களையூன்றிப்பார்த்தால், கையின் மதலை-கைக்குழந்தையென்றல் பொருந்தாமை புலப்படும். குருகுலகுமாரர்களைப்பின்னும் பயிற்றுவித்தற்பொருட்டுத் துரோணனை வீடுமன் வரவழைக்கவேணுமென்று விரும்பியபோது, அந்தத்துரோணன் தானே அத்தினாபுரியைச்சேர்ந்தானென்று பிறநூல்கள் கூறும். ஆசான், பன்னி=ஆசார்யன், பத்நீ: வடசொற்கள். பொற்பு-பொன் பு எனப் பகுதியும் விகுதியுமாகப் பிரிந்து, பொனின் தன்மையெனக் காரணப்பொருள்படும். அமராவதீ என்பதற்கு-தேவர்களைத் தன்னிடத்தில் உடையதென்பது ஏதுப் பொருள்; இது, சுவர்க்கலோகத்து இராசதானி. (308)

35.—வீடுமன் துரோணனை எதிர்கொண்டு உபசரித்தல்.

துரோணன் வந்தான்வரதனெனலு மந்தாகினியாண்மைந்தன் (வீடுமன்)
பைந்தாரசையவெதிர்போய்ப் பணிந்துபூசைபண்ணிச்
சிந்தாசனத்தோடொக்குஞ் சிங்காசனத்தினேற்றி
எந்தாய்வரநீயடியே னென்னதவத்தேனென்ருன்.

(இ-ள்.) வரதன் வந்தான் எனலும்-துரோணாசாரியன் வந்தானென்று (தூதர்) சொல்ல அறிந்தவுடனே,—மந்தாகினியாள் மைந்தன்-கங்காதேவியினது குமாரனான வீடுமன், பைந் தார் அசைய எதிர்போய்-பசுமையான (தனது) பூமாலை அசைய எதிர்கொண்டு சென்று, பணிந்து-வணங்கி, சிந்தாசனத்தோடு ஒக்கும் சிங்காசனத்தின் ஏற்றி-(தனது) மனமாகிய ஆசனத்தோடு ஒத்ததொரு சிங்காசனத்திலே (அவனை) எழுந்தருளப்பண்ணி, பூசை பண்ணி-பூசித்து,—'எந்தாய்-சுவாமி! நீ வர - நீ (இங்கே) எழுந்தருளுதற்கு, அடியேன் என்ன தவத்தேன்-நான் என்ன தவஞ் செய்திருந்தேனோ!' என்ருன்-என்று (உபசாரமொழி)கூறினான்;(எ-று.)

வீடுமன் துரோணனை வில்வித்தையில் மிகச்சிறந்தவனென்று நன்கு மதித்து எப்பொழுதுந் தனதுமனத்தில் நீங்காது வைத்திருந்தனன் என்பதுபற்றி, அவ்வீடுமன் துரோணனுக்குச் சமர்ப்பித்த சிங்காதனத்துக்கு அவன் மனமாகிய ஆசனத்தை உவமைகூறினர். இதுவரையிலும் தன்மனத்தில் வைத்திருந்ததுபோல, அப்பொழுது சிங்காசனத்தில் வைத்தன னென்க. தேவலோகத்திலுள்ள கங்கைக்கு மந்தாகினியென்றும், பூலோகத்தில் வந்ததற்குக் கங்கையென்றும், கீழுலகத்திற் பாய்வதற்குப் போகவதி யென்றும் பெயரென அறிக. (309)

36.—துரோணன் வீடுமனுக்கு வாழ்த்துக் கூறல்.

மூசிவண்டுமொய்க்கும் முருகார்செவ்விமாலை
வாசிமான்றேர்வெம்போர் மன்னர்மன்னன்றன்னை
ஏசில்கடவுள்வாய்மை யிருக்காலெண்ணில்கோடி
ஆசியன்பாலோதி யருள்செய்திருந்தபின்னர்.

இதுவும், அடுத்த கவியும்-குளகம்.

(இ-ள்.) வண்டு மூசி மொய்க்கும்-வண்டுகள் நெருங்கி மொய்க்கப்பெற்ற, முருகு ஆர் செவ்வி மாலை - தேன்நிறைந்த அழகிய பூமாலையைத்தரித்த, வாசி மான் தேர் வெம் போர் மன்னர்மன்னன் தன்னை-குதிரையாகிய விலங்குபூண்ட தேரையுடையவனும் கொடிய போரைச் செய்யவல்லவனும் அரசர்கட்கு அரசனுமாகிய வீடுமனை, ஏசு இல் கடவுள் வாய்மை இருக்கால் - குற்றமில்லாத தெய்வத் தன்மையையுடைய சத்தியமானவேதமந்திரங்களைக் கொண்டு, எண் இல் கோடி ஆசி அன்பால் ஓதி அருள் செய்து-அளவற்ற கோடிக்கணக்கான ஆசிர்வாதங்களை அன்போடு சொல்லி அனுக்கிரகித்து, இருந்தபின்னர்-வீற்றிருந்தபின்பு,—(எ - று.)—"வேதமுனிவன்...புன்மை மொழியொன்றுரைப்பான்" என வருங் கவியோடு முடியும்.

வாஜிஎன்ற வடசொல் திரிந்துவந்தது. வாசிமான்-இருபெயரொட்டு. ஆசிஸ் என்ற வடசொல், ஆசியென விகாரப்பட்டது. (310)

**37.—இதுமுதல் ஒன்பது கவிகள்-ஒருதொடர்: துருபதன் செய்தியைத் துரோணன் வீடுமனுக்குக் கூறல்.**

வேதமுனிவனிருந்த வேந்துமுனியைநோக்கிப்
பூதந்தன்னினிகழ்ந்த புன்மைமொழியொன்றுரைப்பான்
ஏதமெய்பெற்றனைய யாகசேனனென்பான்
போதமில்லானென்பாற் பூட்டுநண்புபூண்டான்.

(இ - ள்.) வேதம் முனிவன் - வேதம்வல்ல அந்தணனாகிய துரோணன், இருந்த வேந்து முனியை நோக்கி - (தனது) அருகிலிருந்த ராசருஷியான வீடுமனைநோக்கி, பூதந்தன்னில் நிகழ்ந்த புன்மை மொழி ஒன்று உரைப்பான்-கழிந்தகாலத்தில் நடந்த எளிமையைப் புலப்படுத்தும் ஒருசொல்லைச் சொல்பவனானான்:—ஏதம் மெய் பெற்று அனைய - தீமைதானே ஒருவடிவ மெடுத்தாற் போன்ற, யாகசேனன் என்பான்-யாகசேன னென்னும் பெயரினனான, போதம் இல்லான்-அறிவில்லாதவன், என்பால்-என்னிடத்தில், பூட்டும் நண்பு பூண்டான்-தொடர்பையுண்டாக்கும் நட்பைப் பொருந்தினான்; (எ-று.)

யாகசேனன்-பாஞ்சாலதேசத்து அரசன்: துருபதனென்னும் மறுபெயருடையவன்; சோமகனது மகனான பிருஷதனென்பவனது குமாரன். பரத்துவாச மகாமுனிவனும் பிருஷதமகாராஜனும் ஒருவர்க்கொருவர் மனங்கலந்த நண்பராதலால், பரத்துவாசகுமாரனான துரோணனிடத்துப் பிருஷத குமாரனான துருபதன் இளமையில் நண்புகொண்டிருந்தானென அறிக. (311)

38. யானுமவனுமுறையா லிளையோமானவெல்லைப்
பானுநிகர்தொல்லங்கி வேசன்பாதம்பணிந்து
வானுமண்ணும்வியக்க மறவெம்படைகள்கற்றுத்
தானும்வல்லனாகித் தன்போலென்னைவைத்தான்.

(இ-ள்.) யான்உம் அவன்உம்-நானும் அந்த யாகசேனனும், இளையோம் ஆன எல்லை-இளமைப்பருவமுடையோமா யிருந்த காலத்தில், பானு நிகர் தொல் அங்கிவேசன் பாதம் பணிந்து - (பிரமதேஜசினால்) சூரியன்போல் விளங்குகின்ற பழைய அக்கினிவேசனென்னும் முனிவனது திருவடிகளை வணங்கி, வான்உம் மண்உம் வியக்க - விண்ணுலகத்தோரும் மண்ணுலகத்தோரும் கண்டு அதிசயிக்கும்படி, மறம் வெம் படைகள் - வலிமையையுடைய கொடிய படைக்கலங்களை, முறையால் - முறைமைப்படி, கற்று-பயின்றுவர,- (அவ்யாகசேனன்), தான்உம் வல்லன் ஆகி - (என்னைப்போலவே) தானும் வல்லவனாய், தன்போல் என்னை வைத்தான் - (இராசகுமாரனாகிய) தன்னைப்போலவே (எளியவனாகிய) என்னையும் பாவித்தான்; (எ - று.)

அங்கிவேசன்-வடமொழித்திரிபு; இவன் அக்கினியினின்று பிறந்தவ னென்றும், பரத்துவாச முனிவனிடமிருந்து ஆக்நேயாஸ்திரம் பெற்றுப் பின்பு அந்த அஸ்திரத்தைத் துரோணனுக்குக் கொடுத்தன னென்றும் வடநூலால் விளங்கும். 'சொல்லங்கிவேசன்', 'மறைவெம்படைகள்' என்றும் பாடம். (312)

39. பின்னையிரவும்பகலும் பிரியேமாகித்திரியத்
தன்னையடைந்தநண்பின் றகவான்மிகவாதரியா
என்னைவானமெய்தி யானேயிறைவனுனல்
உன்னையாளவைப்பே னுலகிற்பாதியென்றுன்.

(இ - ள்) பின்னை-பின்பு, இரவுஉம் பகல்உம் - எப்பொழுதும், பிரியேம் ஆகி திரிய - (நாங்கள் ஒருவரையொருவர்) பிரியாதவர்களாய் ஒழுக,—(அவ்யாகசேனன்), தன்னை அடைந்த நண்பின் தகவால்-தன்னை (நான்) அடைந்த சிநேகத்தின் விசேடத்தால், மிக ஆதரியா-(என்னிடத்து) மிகவும் அன்புகொண்டு, (என்னை நோக்கி), 'என் ஐ வானம்எய்தி - என்தந்தை சுவர்க்கமடைய [இறந்த பின்பு], யான்ஏ இறைவன் ஆனுல்-நானே அரசனுனல், (அப்பொழுது), உலகில் பாதி ஆள உன்னை வைப்பேன்-(எனது) நாட்டிற் பாதியை (நீ) அரசாளும்படி உன்னை அரசனுக்கிவைப்பேன்', என்றுன்-என்று சொன்னுன்; (எ-று.) (313)

40. நன்றுநன்றுன்வாய்மை நன்றுநண்புக்கினியாய்
என்றுபோந்துநானு மியன்றதவத்தினிருந்தேன்
வென்றுகொண்டபுவியை வேந்தன்மகவுக்களித்துச்
சென்றுவானம்புகுந்தான் சிறுவன்றலைவனுனுன்.

(இ-ள்.) (அப்பொழுது), நானும்—, (அவனைநோக்கி), 'நன்று ஆம் நண்புக்கு இனியாய்-நல்லதான சினேகத்திற்கு இனியவனே! உன் வாய்மை நன்று நன்று - உன்வார்த்தை நல்லது நல்லது!' என்று-என்று (உபசாரமொழி) கூறி, (பின்பு), போந்து-(குருவினிடத்தை விட்டுத் தனியே) சென்று, இயன்ற தவத்தின் இருந்தேன்-(எனதுசாதிக்குப்) பொருந்தின தவத்தைச் செய்தலில் இருந்து விட்டேன்: வேந்தன்-(யாகசேனனுடைய தந்தையான) பிருஷதமகாராசன், வென்று கொண்ட புவியை - (பகைவரை) வென்று அரசாண்டுவந்த இராச்சியத்தை, மகவுக்கு அளித்து-(தன்) மகனுக்குக் கொடுத்து, சென்று வானம் புகுந்தான்-இறந்து சுவர்க்கத்தை யடைந்தான்: (ஆகவே), சிறுவன் தலைவன் ஆனுன்-யாகசேனன் அரசனுனுன்; (எ - று.)—சிறுவனென்றது, அவனது இளமையோடு இழிகுணத்தையும் உணர்த்தும். (314)

41. தனத்திலாசையின்றித் தவமேதனமென்றெண்ணி
வனத்திலுண்டிகொண்டே மகிழ்வுற்றொருசார்வைகிச்
சனத்திலருளாலில்வாழ் தருமந்தவருவண்ணம்
இனத்தின்மிக்ககிருபற் கிளையாளிவளைவேட்டேன்.

(இ-ள்.) தனத்தில் ஆசை இன்றி-செல்வத்தினிடத்துஆசை இல்லாமல், தவம்ஏ தனம் என்று எண்ணி-தவத்தையே செல்வமென்று நினைத்து, வனத்தில் உண்டி கொண்டே-காட்டிற்கிடைக்கிற உணவுகளை உட்கொண்டே, மகிழ்வு உற்று-திருப்தியடைந்து, ஒருசார் வைகி - (அக்காட்டில்) ஓரிடத்திலிருந்து, சனத்தில் அருளால்-சனங்களிடத்தில் நிகழ்ந்த கருணையினுல், இல் வாழ் தருமம் தவருு வண்ணம் - இல்லறவாழ்க்கை தவருதபடி,

இனத்தில் மிக்க கிருபற்கு இளையாள் இவளை வேட்டேன்-குலத்திற்சிறந்த கிருபனது தங்கையாகிய இவளை விவாகஞ் செய்து கொண்டேன்; (எ-று.)

பிரமசாரி வாநப்பிரஸ்தன் ஸந்யாஸீ என்ற மற்றை மூன்று ஆச்சிரமத்தார்க்கும், கதியற்றவர் ஏழைகள் முதலானவர்களுக்கும் உணவு இடம் முதலிய வேண்டுவன கொடுத்து உதவுதற்கு உரிமை கிருகத்தாச்சிரமத்தினர்க்கே இருக்கின்றமையைக்கருதி அதனிமித்தம் இல்வாழ்க்கை பூண்டேனென்பான், 'சனத்திலருளால்' என்றான். "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல், மற்றையவர்கள் தவம்" என்ற குறளை நோக்குக. (315)

42. கந்தமகவையீன்ற காளகண்டனருளால்
வந்தமகவிம்மகவும் வறுமைவளரவளர்ந்தான்
இந்தமகவுமையாண் டிளமையறியாதெனலால்
தந்தமகவைநோக்கித் தாயும்பெருகத்தளர்ந்தாள்.

(இ-ள்.) இ மகவுஉம் - இந்தக் குழந்தையும், கந்தன் மகவை ஈன்ற காள கண்டன் அருளால் வந்த மகவு - முருகக்கடவுளாகிய மைந்தனைப் பெற்ற சிவபிரானது கருணையினாற் பிறந்த குழந்தை: இந்த மகவுஉம்-இக்குமாரனும், வறுமை வளர-தரித்திரம் அதிகப்பட, ஐ ஆண்டு-ஐந்து பிராயமளவும், இளமை அறியாது-இளமைப் பருவத்துக்கு உரிய யாதோரின்பத்தையும் அறியாமலே, வளர்ந்தான்—: எனலால் - இக்காரணத்தால், தந்த மகவை நோக்கி தாய்உம் பெருக தளர்ந்தாள்-(தான்) வளர்த்துவந்த பிள்ளையைப் பார்த்துத் தாயும்மிகவருந்தினாள்; (எ-று.)

குழந்தைப்பருவத்துக்கு இன்றியமையாத பசுவின்பால் முதலிய நுகர்ச்சியொன்றையும் அறியானென்பதுபட 'இளமையறியாது வளர்ந்தான்' என்றது. இளமை-அப்பருவத்து நுகர்ச்சிக்குப் பண்பாகுபெயர். காளகண்டன் - வடசொல்: (விடமுண்டதனாற்) கறுத்த கழுத்தையுடையவன். மூன்றாமடியில் 'இன்மையறியாது' என்றும் பாடம்.

துரோணன் மனைவியாகிய கிருபியின் கட்டழகைக்கேட்டும் ஒருகால் கண்டும் அவளிடம் மிகக்காமுற்ற சிவபிரானது அருளினால் ஒரு குதிரையினிடமாக ஒருஆண்குழந்தை தோன்றிற்றென்றும், அதன்பெயர் அசுவத்தாமனென்றும் அறிக. துரோணனுக்குக் கிருபியினிடம் சிவாமிசமாகப்பிறந்த பிள்ளை அசுவத்தாமனென்றும் நூற்கொள்கை உண்டு. கந்தன்+மகவு=கந்தமகவு: "சிலவிகாரமா முயர்திணை." கந்தன்-ஸ்கந்தனென்ற வடசொல்லின் திரிபு: இதற்கு-(பகைக்கடலை) வற்றச்செய்பவனென்றும், உமாதேவியினாற் சேர்க்கப்பட்டவனென்றும்,பிறவாறும் பொருள் உரைக்கப்படும்: சூரபதுமன் முதலிய அசுரர்கள் செய்துவந்த உபத்திரவங்களைப் பொறுக்கமாட்டாத தேவர்கள்முதலியோரது வேண்டுகோளால் அவ்வசுரர்களை அழிக்கும்பொருட்டுச் சிவபிரான் தனது அமிசமாகக் குமாரக்கடவுளைத் தோற்றுவித்தனனென அறிக. தருதல்-வளர்த்தற்பொருளதாயிற்று. (316)

43. மாவின்பாலேயன்றி மரபுக்குரியமைந்தன்
ஆவின்பால்கண்டறியா னதனுல்வருந்தியந்தக்

கோவின்பாலெய்துதலுங் கோமான்யார்நீயென்ன
நாவின்பாலானடுங்கி நானுன்னண்பனென்றேன்.

(இ-ள்.) மரபுக்கு உரிய மைந்தன்-(எனது) வமிசத்துக்குஉரிய அப்புதல்வன், மாவின் பாலே அன்றி - மாப்பாலேயே யல்லாமல், ஆவின் பால் கண்டு அறியான்-பசுவின்பாலைக் கண்டும்அறியான்: அதனால்-அந்தக்காரணத்தால், (நான்), வருந்தி - மனம்வருந்தி, அந்த கோவின்பால் எய்துதலும் - (ஒருபசுப்பெற்றுவரக்கருதி) அந்த யாகசேனராசனிடத்திற் சென்றவளவிலே, கோமான்-அவ் வரசன், யார் நீ என்ன-'நீ யார்?' என்று (முகமறியாதவன்போல என்னை) வினவ,—(அதுகேட்டவுடனே),நடுங்கி-மிகக்கூசி,நாவின் பாலால் நான் உன் நண்பன் என்றேன்-(எனது) வாயால் 'நான் உன் சிநேகிதன்' என்று சொன்னேன்; (எ - று.)

மாவின்பால் - மாவைக் கரைத்துக் காய்ச்சிப் பால்போலச் செய்த உணவு; ஒருவகைக் கஞ்சி: முதனூலிலும் 'பிஷ்டரஸம்' என்றே கூறப்பட்டிருக்கின்றது. 'நாவின்பாலால்' எனவேண்டாது கூறியது, என் நா இங்ஙன் எளிமை கூறுதற்கு உரியதன் றெனற்கு: இனி, நாவின்பாலால் நடுங்கி எனஎடுத்து, இங்ஙன் பேசின அவனது நாவின் செயலால் யான் நடுங்கி யெனவுமாம்.

44. மன்னன்யானீமுனிவன் மரபாலெனக்குமுனக்கும்
என்னநண்புண்டென்ன வேசிநகைசெய்திகழ்ந்தான்
அன்னதுருபன்றன்னை யவையிலரசர்கேட்பச்
சொன்னவாய்மைநீயே சோர்ந்தாயானேசோரேன்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) (அதுகேட்டு அந்தயாகசேனன் என்னை நோக்கி), 'மரபால்-சாதியினால், மன்னன் யான்-(நானே அரசன்: நீமுனிவன்-நீயோ அந்தணன்: எனக்குஉம் உனக்குஉம் என்ன நண்புஉண்டு-எனக்கும் உனக்கும் என்ன சிநேகம் இருக்கிறது?' என்ன-என்று சொல்லி, ஏசி-பழித்து,நகை செய்து-சிரித்துப் பரிகாசம் பண்ணி, இகழ்ந்தான்-அலட்சியஞ் செய்தான்: அன்ன துருபன்தன்னை-அந்தத் துருபதராசனை நோக்கி,(நான்),அவையில் அரசர் கேட்ப-அவன் சபையிலுள்ள அரசர்களெல்லாங் கேட்கும்படி,'சொன்ன வாய்மை நீஏ சோர்ந்தாய் - சொன்னவார்த்தையை நீயே தவறினாய்: யான்ஓ சோரேன்-நானோ தவறேன்;(எ-று.)—இச்செய்யுளில் 'துருபன்தன்னை' என்பதும், 'கேட்ப' என்பதும், அடுத்த செய்யுளில் வரும் 'என்றேன்' என்னும் முற்றைக் கொள்ளும்.

நீ முன்பு எனக்குப் பாதியரசுகொடுப்பதாக வாக்குத்தத்தஞ் செய்ததைத் தவறினையே யாயினும், நான் இப்பொழுது உன் விஷயமாகச் சொல்லும் சபதத்தைத் தவறாது நிறைவேற்று வேன் என்பது, ஈற்றடியின் கருத்து: துருபதனென்பது, யாக சேனனுக்கு வழங்கும் வேறொருபெயர். துருபன்=துருபதன்: விகாரம். ஏ-பிரிநிலை. ஓ-தெரிநிலை. 'அன்ன திருபன்' எனவும் பாடம். (318)

**45.** புகன்றபடிநீயாளும் புவியும்பாதிகொள்வேன்
இகன்றசமரிலுன்னை யிரதத்துடனேகவர்வேன்
அகன்றமெய்ம்மையுடையா யறிதியென்றேனென்று
சுகன்றன்ஞானம்பெற்ற துரோணன்சொல்லக்கேட்டான்.

(இ-ள்.) அகன்ற மெய்ம்மை உடையாய்-நீங்கின உண்மையுடையவனே! புகன்ற படி-(நீ முன்பு எனக்குச்) சொன்னபடி, நீ ஆளும் புவிஉம் பாதி கொள்வேன்-நீஅரசாளும் நாட்டிலும் பாதியைக் கைக்கொள்வேன்: (அன்றியும்), இகன்ற சமரில் - பகைமை கொண்டுசெய்யும் போரில், உன்னை இரதத்துடனே கவர்வேன்-உன்னைத் தேர்க்காலுடனே கட்டிக் கைக்கொள்வேன்; அறிதி-(இதனை) அறிவாய், என்றேன்-என்று சொல்லிச் சபதஞ்செய்தேன், என்று—,சுகன் தன் ஞானம் பெற்ற துரோணன் சொல்ல-சுகமுனிவனுக்குஉள்ள தத்துவஞானம் போன்ற தத்துவஞானத்தைப்பெற்றவனான துரோணாசாரியன் சொல்ல, கேட்டான்—;

அகன்றமெய்ம்மையுடையாய் என்றது, வடமொழிநடை; சத்தியத்தை விட்டவனே யென்று கருத்து. துரோணன் தன் வரலாறு கூறும்முகத்தால்,தான் அங்கரியிலிருக்க உடன்பட்டதைக் குறிப்பித்தானென்க. சுகன்-வியாசமுனிவனது புத்திரன்; அவ்வியாசபகவானினும்மேம்பட்ட வைராக்கியத்தையும்உண்மையுணர்வையும் உடையவன்; பகவானது அமிசமானவன்; பரம பாகவதர்களில் ஒருவன்; சுகப்பிரஹ்மமென்று சிறப்பித்துக் கூறப்படுபவன். "சுகனிகர் துரோணனொடு" என்பர், மேற் பதின் மூன்றும்போர்ச் சருக்கத்திலும். (319)

**46.**—கௌரவ பாண்டவரை வீடுமன் துரோணனிடம் ஒப்பித்தல்.

கேட்டவரசனழைக்கக் கிருபனுடன்வந்திறைஞ்சும்
பூட்டுவரிவிற்றடக்கைப் புதல்வர்புதல்வர்தம்மைக்
காட்டிநீயேயிவரைக் கடிதிற்படைமைக்கல்வி
மூட்டிநின்வஞ்சினமு முடித்தியென்றுமொழிந்தான்.

(இ - ள்.) கேட்ட-(இங்ஙனந் துரோணன் சொல்லக்) கேட்ட, அரசன்-வீடுமன், அழைக்க - வரவழைத்ததனால், கிருபனுடன் வந்து இறைஞ்சும்-(ஆசிரியனாகிய) கிருபாசாரியனுடனே வந்து வணங்கின, பூட்டு வரி வில் தட கை புதல்வர் புதல்வர்தம்மை-நாணேற்றிய கட்டமைந்த வில்லையேந்திய பெரிய கையையுடைய தனதுபேரப்பிள்ளைகளை, காட்டி-(அவ்வீடுமன் துரோணனுக்குக்) காண்பித்து, 'நீயேஇவரை கடிதில் படைமை கல்வி மூட்டி-(இனி) நீயே இவர்களுக்கு விரைவில் ஆயுதவித்தையைக் கற்றுக்கொடுத்து, நின் வஞ்சினம்உம் முடித்தி - (இவர்களைக்கொண்டு) உன்சபதத்தையும் முடித்துக்கொள்வாய்,' என்று மொழிந்தான்-என்று சொன்னான்; (எ-று.)

புதல்வர் புதல்வர்-தன் தம்பியாகிய விசித்திரவீரியனது குமாரர்களாகிய திருதராட்டிரன் பாண்டுஎன்பவரது புத்திரர்கள். படைமை, 'மை'-பகுதிப்பொருள் விகுதியாம். வஞ்சினம்-துருபதனரசிற் பாதிகொள்ளலும், அவனை உயிரோடு கட்டிக்கொணர்தலும். (320)

**47.—அரசர்க்கு உரிய வரிசைகளை வீடுமன் துரோணனுக்கு அளித்தல்.**

**முனிநீ யையா விதற்கு முன்ன மின்றுமுதலா**
**இனியிவ் வுலகுக் கரசா யெம்மி லொருவ னுகிக்**
**குனிவில் வலியா லமருங் கோடி யென்று கொடுத்தான்**
**பனிவெண் குடையு நிருபற் குரிய வரிசை பலவும்.**

(இ - ள்.) 'ஐயா-சுவாமீ! இதற்கு முன்னம் முனி நீ - இதற்கு முன்பு நீ அந்தணன்: இன்று முதல் ஆ-இன்றைத்தினம் முதற்கொண்டு, இனி-இனிமேல், (நீ), இ உலகுக்கு அரசு ஆய் - இந்த இராச்சியத்துக்குத் தலைவனாய், எம்மில் ஒருவன் ஆகி-எங்களில் ஒருத்தனாய், குனி வில் வலியால் அமர்உம் கோடி - வளைந்தவில்லின் வலிமையாற் போர்செய்தலையும் மேற்கொள்வாய்,' என்று-என்று சொல்லி, (வீடுமன் துரோணனுக்கு), பனி வெள்குடைஉம்-குளிர்ச்சி தரும் வெண்கொற்றக் குடையையும், நிருபற்கு உரிய வரிசை பலஉம்-(மற்றும்) அரசர்க்கு உரிய பல சிறப்புச் சின்னங்களையும், கொடுத்தான்—; (எ - று.)

'மாணாக்கரது உடைமை யெல்லாம் குருவுக்கு உரியன' என்ற கருத்தால், 'இவ்வுலகுக்கு அரசாய்' என்றான். 'குருகுலத்தவர்க்கு இராச்சியம் முதலிய செல்வம் எவ்வளவு உண்டோ அவ்வளவுக்கும் நீயே அரசன்' என்று வீடுமன் துரோணனுக்கு உபசார மொழி கூறினதாக முதனூல் கூறுவதையும் உணர்க. வரிசை பல-தேர், கொடி, விருது, கழல் முதலியன. "படையுங்கொடியும் குடையும் முரசும், நடை நவில் புரவியும் களிறும் தேரும், தாரும் முடியும் நேர்வன பிறவும்...செங்கோலரசர்க்குஉரிய" என்றது காண்க. (321)

வேறு.

**48.—கௌரவபாண்டவர் அன்றுமுதல் துரோணனிடம் கல்விதேர்தல்.**

**அன்றுமுத லாகவரி வெஞ்சிலைமு தற்படைக ளானவையனைத்துமடைவே[ம்]**
**தொன்றுபடுநான்முறையின்மறையினெ டுதிட்டிரசுயோதனர்களாதியெவரு**
**ஒன்றியது ரோணனரு ளாலும்வலி யாலுமுய ருணர்வுடைமை யாலு முதலே**
**நின்றகுறையாலுமொருவர்க்கொருவர் கல்வியினிரம்பினர் வரம்பினிதியோர்.**

(இ-ள்.) வரம்பு இல் நிதியோர்-எல்லையில்லாத செல்வங்களையுடையவர்களான, உதிட்டிர சுயோதனர்கள் ஆதி எவர்உம்-தருமபுத்திரனும் துரியோதனனும் முதலிய ஐவரும் நூற்றுவரும்,—அன்று முதல் ஆக-அந்த நாள் முதலாக, ஒன்றிய துரோணன் அருளால்உம்-(தங்களிடத்துப்)பொருந்திய துரோணாசாரியனது கருணையினாலும், வலியால்உம்-(தங்கள்) உடல் வலிமையாலும், உயர் உணர்வு உடைமையால் உம் - (தாங்கள்) சிறந்த இயற்கையறிவையுடைமையாலும், முதலே நின்ற குறையால்உம் - முற்பிறப்பிலே கற்றுநின்ற சேஷத்தாலும்,—வரி வெம்சிலைமுதல் படைகளானவை அனைத்துஉம்-கட்டமைந்த பயங்கரமான வில் முதலிய ஆயுதங்களெல்லாவற்றிலும், கல்வியின் - (அவற்றின்) சாஸ்திரத்திலும், தொன்று படு நூல் முறையின்-பழமைபொருந்

திய நூல்களிற்கூறிய முறைப்படியே, மறையினொடு - (அஸ்திரங்களுக்கு உரிய) மந்திரங்களோடு, அடைவே-முறைமையாக, ஒருவர்க்கு ஒருவர் நிரம்பினர்-ஒருத்தர் போலவே அனைவரும் தேர்ச்சியுற்றார்கள்; (எ-று.)

பிரயத்தின பூர்வமாக மறைக்கத்தக்கதாதலால், மந்திரம், மறையென்று பெயர்பெறும்; செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டது. 'முயலுணர்வு' என்று பாடமோதி, ஊக்கம் விளக்கும் அறிவென்று உரைப்பாருமுளர். கல்விமுற்றக்கற்றல் முற்பிறப்பிற் பரிசயமுடையார்க்கன்றிமுடியாதாதலால் 'முதலே நின்ற குறையாலும்' என்றார்; இனி, இதற்கு-முதலிற் கிருபாசாரியனிடத்துக் கற்றுநின்ற சேஷத்தாலும் என்று உரைத்தலும் ஒன்று, 'கல்வியு நிரம்பினர்' என்ற பாடத்துக்கு-இயல்பிலே பொருட்செல்வம் நிறைந்தவர் இப்பொழுது கல்விச்செல்வமும் நிறைந்தனரென்க.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள்-பெரும்பாலும் முதலைந்து சீர்கள் விளங்காய்ச்சீர்களும், மற்றையவை மாச்சீர்களுமாகிய எழுசீராசிரியவிருத்தங்கள். (322)

49.—அவர்களில் அருச்சுனன் சிறந்து குருவுக்குப்பிரியனானது.

வெஞ்சிலையினுலிவனிராகவனையொக்குமென விசயன்விசயத்தின்மிகவே[ல்
எஞ்சியகுமாரர்கள்பொருமையின்மிகுந்தனர்களிரவியெதிர்மின்மினிகள்போ
அஞ்சொன்முனிதானுமிவன்மேலெவரினும்பெருக வன்புடையனாகியகலான்
நெஞ்சுறவருங்கலைகள்கற்குமவர்தம்மளவி னேயநிகழாதவர்கள்யார்.

(இ-ள்.) விசயன் - அருச்சுனன்,—வெம் சிலையினால் இவன் இராகவனை ஒக்கும் என-கொடிய வில்லின் தேர்ச்சியால் இவன் (பகைவர்க்கு) இராமபிரானைப்போல்வா னென்று (அனைவரும்) சொல்லும்படி,விசயத்தில் மிகவே-கல்வித்தேர்ச்சியில்மேம்படவே, —(அதுகண்டு), எஞ்சிய குமாரர்கள்-ஒழிந்த துரியோதனாதியர்கள், இரவி எதிர் மின்மினிகள்போல்-சூரியனெதிரில் மின்மினிப்பூச்சிகள் போலாகி, பொருமையில் மிகுந்தனர்கள் - (இவனிடத்துப்) பொருமைகொள்ளுதலில் மேம்பட்டார்கள்: அம் சொல் முனி தான்உம்-அழகிய சொற்களையுடைய துரோணாசாரியனும், எவரின் உம்பெருக இவன்மேல் அன்பு உடையன் ஆகி-மற்றை மாணக்க ரெல்லோரிடத்தினும்பார்க்க இவ்வருச்சுனனிடத்தில் மிக அன்புடையவனாய், அகலான்-(அந்த அன்பினின்று என்றும்) நீங்காதவனானான்; அரு கலைகள் நெஞ்சு உற கற்குமவர்தம் அளவில் - அரியகல்விகளை மனத்தில் ஊன்றப் படிக்குமவரிடத்து,நேயம்நிகழாதவர்கள்-அன்புகொள்ளப்பெறாத ஆசிரியர், யார்-யாவர்? (எ - று.)

மற்றையோரினுங் கல்வியில் நன்கு தேர்ந்தஅருச்சுனனிடம் துரோணன் மற்றையோரிடத்தினும் மிக்க அன்பு வைத்தானென்ற சிறப்புப் பொருளை, நன்றாகக் கல்விதேர்பவரிடம் அன்பு கொள்ளுதல் ஆசிரியர்க்கு இயல்பேயென்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியதனால், வேற்றுப்பொருள்வைப்பணி. விசயன்

தனக்கு உரிய விசயத்தில் மிக, துரியோதனுதியர் தமக்குஉரிய பொருமையில் மிக்கார்கள் என அவரவரியல்பு தோன்ற வேறு பாடு எடுத்துக் காட்டியவாறு. ஏற்புழிக்கோடலென்ற உத்தி யால், 'எஞ்சியகுமாரர்கள்' என்றது, துரியோதனுதியரையே குறிக் கும். 'இரவியெதிர் மின்மினிகள்போல் பொருமையில் மிகுந் தனர்கள்' என்றது, தமக்கும் அவனுக்கும் சிறிதும் ஒப்புமை யில்லாமல் மிக்கவேறுபாடு இருக்கையிலும் பொருமையுற்ற தன் மையை உணர்த்தியபடி. விஜயன் - விசேஷமானவெற்றியை யுடையவன் என்று காரணப்பொருள்படும். மின்மினி-காரணப் பெயர். விசயன்வினயத்தின்மிகவே என்று பிரதிபேதம். (323)

## 50.—ஏகலவ்ய னென்ற வேடனது செய்தி.

ஏகலைவனென்றெருகிராதன்முனியைத்தனி யிறைஞ்சியிவனேவலின்வழான்
ஆகலையடைந்துமிகுபத்தியொடுநாடொறு மருச்சுனனையொத்துவருவான்
மேகலைநெடுங்கடல்வளைந்ததரணிக்கணெருவில்லியெனவின்மையுடையா
மாகலைநிறைந்துகுருதக்கிணைவலக்கையினில் வல்விரல்வழங்கியுளனல்.[ன்

(இ-ள்.) ஏகலைவன் என்ற ஒரு கிராதன் - ஏகலவ்யனென்ற பெயரையுடைய ஒருவேடன், முனியை தனி இறைஞ்சி-துரோணு சாரியனைத் தனியே வணங்கி,மிகு பத்தியொடு-மிக்கபக்தியுடனே, இவன் ஏவலின் வழான் ஆகலை அடைந்து - இத்துரோணனது கட்டளையினின்று தவருதவனுயிருத்தலை அடைந்து, (அவ்வழி பாட்டின் பயனுல்),நாள்தொறுஉம்அருச்சுனனை ஒத்துவருவான்- தினந்தோறும் (கல்வித்தேர்ச்சியில்) அருச்சுனனை ஒத்துவருப வனுய், மேகலை நெடு கடல் வளைந்த தரணிக்கண் ஒரு வில்லி என வின்மை உடையான்-மேகலையென்னும் இடையணியர்கப் பெரிய கடலாற் சூழப்பட்ட பூமியிலே ஒப்பற்ற தனி வில்வீரனென்று (அனைவரும் தன்னைச்) சொல்லும்படியே விற்ருெழிலில் வன்மை யுடையவனுகி,மா கலை நிறைந்து-பெரிய தநுர்வித்தை முழுவதும் நிரம்பப்பெற்று, (பின்பு), குரு தக்கிணை-அந்தக்குருவுக்குத் தக்ஷி ணையாக, வலக்கையினில் வல் விரல்-(தனது) வலக்கைப் பெரு விரலை, வழங்கி உளன்-கொடுத்திட்டான்; (எ-று.)-ஆல்-ஈற்றசை.

கீழ்க்கூறியபடி துரோணன் அருச்சுனனிடத்து மிக்க அன்பு கொண்டு அவனைநோக்கி 'உன்னினும் மேம்பட்டமாணுக்கர் எனக்கு எவரும் இல்லை' என்றுகூறி அனைவர்க்கும் கல்விகற்றுக் கொடுத்து வருகையில் இரணியதநுஸ் என்ற வேடர் தலைவனது குமாரனை ஏகலவ்யனென்பவன் துரோணனையடுத்து 'எனக்கு வில்வித்தை கற்றுக்கொடுக்கவேண்டும்' என்றுகேட்க, அக்குரு இவ்வேட்டுவக்குமரனைக் கற்பித்தால் இவன் மாணுக்கரெவரினும் மேம்படுவனென்று அவனுக்குக் கற்பிக்க விரும்பாமல், 'பயிற்சி யில் மேம்படும் நீ என்மாணுக்கனே: உனக்கு அனுமதிகொடுத் தேன்: போகலாம்' என்றுசொல்ல, அவன்வணங்கி விடைபெற் றுத் தான்இருக்கும் வனத்திற்சென்று தன்குடிசையில்துரோண னைப்போல் ஒரு பிரதிமை செய்துவைத்து அவ்வுருவையே

துரோணனாகப் பாவித்துக் குருவாகக்கொண்டு மிகுந்தபக்தி யோடு அவ்விக்கிரகத்துக்குப் பூசைபண்ணி அப்பூஜையின்பல னால் அஸ்திர சஸ்திரப் பயிற்சி வகையனைத்தும் தன் மனத்தில் தானே தோன்றப்பெற்றுத் துரோணனுக்குத் தெரியாமலே வில் வித்தையில் அருச்சுனனினும் தேர்ந்துவந்தான்; இங்ஙனம் இருக்கையில், துரோணன் கட்டளைப்படி வேட்டைக்குச்சென்ற குருகுலகுமாரர்கள் தம்முடன்சென்ற ஒரு நாயின்வாயில் குரைக்க முடியாதபடி ஒருவனால் ஒருங்கே ஏழம்புகள் பிரயோகிக்கப்பட்ட மையைக் கண்டு வியந்து நாணி அங்ஙனம் பிரயோகித்தவனை நாடிக் கண்டு விசாரித்துத் துரோண சிஷ்யனென்று அறிந்து மீண்டும் நகருக்குவந்து நிகழ்ந்தசெய்தியனைத்தையுங் குருவினி டம் கூறினர்; பின்பு அருச்சுனன் ஏகலவ்யனையே சிந்தித்தவனாய் ஏகாந்தத்தில் துரோணனையடுத்து 'என்னினும் மேம்பட்ட சிஷ் யன் இருக்காமல் என்னைக்கற்பிப்பதாக முன்பு நீர் சொல்லி யிருக்க, இங்ஙனம் ஒருவன் உளனே' என்று குறைகூற, துரோ ணன் சிறிதுசிந்தித்துத்தேர்ந்து அருச்சுனனை அழைத்துக் கொண்டு ஏகலவ்யனிடம் வந்து, தன்னைவணங்கி யுபசரித்த அவனை நோக்கி 'சிஷ்யனாகிய நீ குருவாகிய எனக்குத் தக்ஷிணை கொடுக்கக்கடவாய்' என்ன, அதற்கு அவன் 'என்ன வேண்டும்? கட்டளையிட்டது எதுவாயினும் கொடுப்பேன்' என்றவளவிலே, துரோணன் 'உன் வலக்கைக் கட்டைவிரலைக் கொடுப்பாய்' என்று கூற, ஏகலவ்யனும் வாக்குத்தவறாமல் மகிழ்ச்சியோடு அவ்விர லைத் துணித்துக் குருதக்ஷிணை கொடுத்தனன்; பின்பு அவன் மற் றையவிரல்களால் அம்புதொடுக்கலானானாயினும் முன்போலச் சிறப்புறானாயினான்; அதனால் அருச்சுனன் மகிழத் துரோணனும் அருச்சுனனுக்கு முன்புசொன்னசொல் தவறாதவனாயினன் என வரலாறு அறிக.

அருச்சுன னென்பதற்கு - வெண்ணிறமுடையவ னென்று பொருள்; இது-முதலில், இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராச னுக்குப் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌரியதைரி யங்களையுடைய இப்பார்த்தனுக்கு இட்டுவழங்கப்பட்டது: பார்த் தன் கருநிறமுடையவ னாதலால், அவனுக்கு அருச்சுனனென் பது நிறம்பற்றிவந்த இயற்பெயரென்றல் பொருந்தாது. இனி, அருச்சுனன் என்பதற்கு-பசுமைநிறமுடையோனென்று பொருள் கூறுவாருமுளர். அன்றியும், பார்த்தன், (பார்வதிபோலப்) பிறந்தபொழுது வெண்ணிறமுடையவனாயிருந்து பின்பு கருநிற மடைந்தா னென்று கூறலும் உண்டு. கடலை, பூமியாகிய பெண் அணியும் மேகலையணி யெனக் கூறுதல், கவிமரபு. (324)

51.—அருச்சுனனது வில்திறத்தின் சிறப்பு.

அங்குலிகமோன்றுபுனலாழ்தருகிணற்றில்விழ வந்தமுனிதேடுமினெனப்
புங்கமொடுபுங்கமுறவெய்திவனெடுத்தமை புகன்றருகுநின்றவரைநீர்
இங்கிதனிலைத்தொகைகள்யாவுமுருவப்பகழி யேவுமினெனாமுன்விசயன்[ல்.
துங்கவில்வளைத்தொருகணத்தினில்வடத்திலைதுளைத்தனனிலக்கிரேட்டையா

(இ-ள்.) அங்குலிகம்ஒன்று-மோதிரமொன்று, புனல் ஆழ்தரு கிணற்றில்-ஆழ்ந்தநீரையுடையதொரு கிணற்றிலே, விழ-விழுந்திட,—அந்தமுனி-துரோணாசாரியன், தேடுமின் என-(குருகுல குமாரரை நோக்கி அதனை நீங்கள்) தேடியெடுங்களென்றுசொல்ல,—(மற்றையோரால் இயலாமற்போகவே), இவன் புங்கமொடு புங்கம் உற எய்து எடுத்தமை-அருச்சுனன் அம்புடனே அம்பு பொருந்தும்படி பாணப்பிரயோகஞ்செய்து (அதனால் இம்மோதிரத்தை) எடுத்தமைக்கு, புகன்று-மகிழ்ந்து,-(துரோணன் பின்பு), அருகு நின்றவரை-பக்கத்தில்நின்ற அம்மாணாக்கரனைவரையும் நோக்கி, 'நீர்-நீங்கள், இங்கு-இங்குஉள்ள, இதன்-இந்த ஆலமரத்தினது, இலை தொகைகள் யாவும்-இலைகளையெல்லாம், உருவ-ஊடுருவித் துளைக்கும்படி, பகழி ஏவுமின்-அம்புதொடுங்கள்', எனாமுன்-என்று கட்டளையிடும்முன்னே [கட்டளையிட்டவுடனே, விரைவில் என்றபடி], (மற்றையோரால் ஆகாமற்போகவே), விசயன்-அருச்சுனன், துங்கம் வில் வளைத்து-சிறந்த (தனது) வில்லை வளைத்து, இலக்கு இல் தொடையால்-எதிரில்லாத அம்பை எய்து அதனால், ஒரு கணத்தினில் வடத்து இலை துளைத்தனன்-ஒருகணப்பொழுதிலே அவ்வாலமரத்தின் இலைகளெல்லாவற்றையும் துளைப்படுத்தினான்; (எ - று.)

பாஞ்சாலனோடு மாறுபட்ட துரோணாசாரியன் அத்தினபுரியில் பிறரா லறியப்படாது வசிக்கையில், ஒருகால் விளையாடச்சென்ற குருகுலக்குமரர் கிணற்றில் விழ்ந்திட்ட மோதிரம் பந்து இவைகளை யெடுக்கத் தெரியாமல் விழிக்க, அருகு இருந்த இந்தத்துரோணன் தான் கற்ற இஷீகாஸ்திரத்தின் வல்லமையால் அவற்றையெடுக்க, அவர்கள் வியப்புற்றுப் பணிந்து அவரை இன்னாரென்று அறிந்து வீடுமனிடம் தெரிவிக்க, பின்பு ஆசிரியரானாரென்பதும்: மாணாக்கர்க்குப் பயிற்சிமுற்றியபின் ஒருகால் ஒருமரத்தில் பாஸமென்ற பட்சியையமைத்து அந்தக் குருகுலக்குமரரை யெய்யுமாறு துரோணாசார்யர் கட்டளையிட, எய்யவேண்டிய நிலையில் மற்றையோர் மரத்தையும் குருவையும் உடன்காண்பதாக ஆசிரியரிடஞ்சொல்லி ஆசிரியரால் அவமதிப்புப்பெற, அருச்சுனன்மாத்திரம் எய்யும் நிலையில் பாஸபட்சியின் சிரசையே காண்பதாகக்கூறி ஆசிரியரின் கட்டளைப்படி இலட்சியத்தை வீழ்த்தினானென்பதும் வியாசபாரதத்திலுள்ளவை: இப்பாடலிற் குறித்தவை பாலபாரதத்திலில்லை.

அங்குலீகம்-அங்குலியக மென்றவடசொல்லின் திரிபு; விரலில் அணியப்படுவ தென்பது அவயவப்பொருள்: அங்குலி-விரல். புங்கம், துங்கம், வடம்-வடசொற்கள். (325)

### 52.—அருச்சுனன் துரோணனை முதலையினின்று உய்வித்தல்.

முத்திமுனிதாளிணையை நீர்படிதடந்துறையின் முதலைகவர்வுற்றதெனலுஞ், சித்திரவில்வீரர்பலருந் தமவெறுங்கையொடுசென்றருகுநின்று விடவே, பத்தியின்விரைந்து பொதுவேயிபமழைக்கவொரு பறவைமிசை வந்தநெடுமால், கைத்திகிரிபோற்கணையின் விசயனதனைப்பழையகார் முதலையிற்றுணிசெய்தான்.

(இ-ள்.) முத்தி முனி-வீடுபெறுதற்குஉரிய [ஞானவொழுக்கங்களிற் சிறந்த] துரோணாசாரியன், நீர் படி தட துறையில்-நீராடுகிற பெரிய நீர்த்துறையிலே, தாள் இணையை-(தனது)கால்களிரண்டையும். முதலை கவர்வுற்றது - ஒருமுதலை பிடித்துக்கொண்டது, எனலும் - என்று சொன்ன வளவிலே,—சித்திரம் வில் வீரர் பலர்உம்-அழகிய வில்லை யேந்திய வீரர்களான குருகுல குமாரர்கள் எல்லோரும், தம வெறு கையொடு - தங்கள் வெறுங்கைகளுடனே, அருகுசென்று-பக்கத்திற் போய் நின்று, விட-(திகைத்துச்) சும்மாநின்றுவிட, விசயன் - அருச்சுனன்,—இபம்-ஒருயானை [கஜேந்திராழ்வான்], பத்தியின் - பக்தியோடு, விரைந்து-விரைவாக, பொதுவே அழைக்க-(ஆதிமூலமேயென்று) பொதுவாகக் கூப்பிட, (அதனைப் பாதுகாக்கும்பொருட்டு), ஒரு பறவைமிசை வந்த-ஒப்பற்ற கருடவாகனத்தின்மேல் ஏறிவந்த, நெடு மால்-பெருமைக்குணமுடைய திருமாலினது, கை-கையினால் எறியப்பட்ட, திகிரி-சக்கராயுதத்தை, போல்-ஒத்த, கணையின்-ஒருபாணத்தால்,—அதனை-அம்முதலையை, பழைய கார் முதலையின்-(அச்சக்கரம் பிளந்த) பழைய கரிய முதலையைப்போல, துணி செய்தான்-பிளந்து தள்ளினான்; (எ - று.)

ஒருநாள் துரோணன் மாணாக்கர்களுடனே சென்று கங்கைத் துறையில் நீராடுகையில் வலியதொருமுதலை அவனது பாதங்களை முழங்காலளவும் பிடித்துக்கொள்ள, அவன் அதனை விடுவித்துக்கொள்ள வல்லவனாயினும், சிஷ்யர்களைப் பரீட்சிக்கும் பொருட்டு அவர் அனைவரையும் நோக்கி 'முதலையைக்கொன்று என்னை விடுவியுங்கள்' என்று விரைந்துகூற, மற்றையாவரும் இன்னது செய்வதென்று அறியாமல் திகைத்துநிற்க, உடனே அருச்சுனன் கூரிய சிறந்த அம்பு தொடுத்து முதலையைக் கொன்று குருவைக் காத்தனனென அறிக. முதலைவாய்ப்பட்ட காலுக்கு யாதொரூறுபாடுஞ் செய்யாது அதனைப் பற்றிய முதலையின் வாயையே துணித்துக் குறிக்கொண்டு காத்த திறத்தை வியந்து 'மால்கைத்திகிரிபோல் கணை' என்று கூறினர். (326)

53.—துரோணன் அருச்சுனனுக்கு ஒருசிறந்த அஸ்திரம் அளித்தல்.

**ஒருதனுவினாலிதயமகிழ்குருவினுக்கிவனு முயிருதவினானுதவலும்**
**குருவுமிவனுக்குநிலையாலுமறையாலும்வலிகூர்பகழியொன்றுதவினான்**
**இருவருநயந்தருளும்வினயமுமிகுந்தனர்க ளின்னுயிருமனமுமெனமேல்**
**மருவிவருநல்வினைவயத்தின்வழிவந்தபயன் மற்றொருவருக்குவருமோ.**

(இ-ள்.) இவன்உம்-இந்த அருச்சுனனும், இதயம் மகிழ் குருவினுக்கு-(தன்னிடத்து) மனமகிழ்ச்சிகொண்ட குருவாகிய துரோணனுக்கு, ஒருதனுவினால் - ஒப்பற்ற வில்லின் திறத்தைக் கொண்டு, உயிர் உதவினான்-(இவ்வாறு) உயிரைப் பாதுகாத்தான்: உதவலும்-(இங்ஙனம்) உயிர்கொடுத்தவளவிலே, குருஉம்-(மிகமகிழ்ச்சிகொண்ட) துரோணனும், இவனுக்கு - அருச்சுனனுக்கு, நிலையால்உம் மறையால்உம் வலி கூர் பகழி ஒன்றுஉதவி

ஞன்-நிலையினாலும் மந்திரத்தினாலும் வலிமைமிக்க ஓர் அஸ்திரத்தைக் கொடுத்தருளினான்: (இப்படி ஒருவர்க்கொருவர் சிறந்த பொருளைக்கொடுத்து), இருவர் உம்-(துரோணனும் அருச்சுனனுமாகிய) இவ்விருவரும், இன் உயிர்உம் மனம்உம் என-இனிய உயிரும் மனமும்போல, (ஒற்றுமைப்படக்கலந்து), நயந்து-(ஒருவரையொருவர்) விரும்பி, அருள்உம் வினயம்உம் மிகுந்தனர்கள்-கருணையிலும் வணக்கத்திலும் மிகுந்தார்கள்: மேல் மருவி வரும்-முற்பிறப்பிற் செய்யப்பட்டுத் தொடர்ந்துவருகிற, நல்வினை வயத்தின்-புண்ணியவசத்தால், வழி வந்த-பிற்பிறப்பில் நேர்ந்த, பயன்-பிரயோசனம், மற்று ஒருவருக்கு வருமஓ-(இவர்க்குப்போல) வேறெவர்க்கேனும் சித்திக்குமோ? (எ - று.)

மாணாக்கர்க்கு நல்லாசிரியர் கிடைத்தல்போலவே ஆசிரியர்க்கு நன்மாணாக்கர் கிடைத்தலும் முன்னை நல்வினைப்பயனே யென்பது, இதனால் விளங்கும். அருச்சுனன்போலக் குருவின் உயிரைப்பாதுகாக்கும் சிஷ்யனும், துரோணன்போல அச்சிஷ்யனுக்குச் சிறந்த அஸ்திரத்தைப் பரிசளிக்குங் குருவும் வேறு எவரும் இலரென்று வியந்து 'மற்றொருவருக்கு வருமோ' என்றார். இங்கு அருச்சுனனுக்கு அளிக்கப்பட்ட அஸ்திரம் பிரமசிரஸ் என்று முதனூலால் விளங்கும்; அது-தடுக்கவொண்ணாதது, ஒப்புயர்வற்றது. (327)

**54.—துரோணன் மாணுக்கர்கல்வியை அனைவர்க்குங் காட்டலுறல்.**

சிலைக்குருவிறற்குருகுலக்குமரருக்குவரு சிரமநிலைகாண்மினெனவே
அலைத்தலைநிலாவெழுசரிற்புதல்வனுக்குநல் லறக்கடவுளுக்குமுரையா
நிலைப்படுவிசாலமணியணிதிகழரங்கின்மிசைநிகழ்பலிகொடுத்தரியுடன்
கலைப்புரவியூர்திருவையுந்தொழுதுபுக்கன னகத்துணர்வுமிக்ககலையோன்.

(இ-ள்.) அகத்து உணர்வு மிக்க-மனத்தில் அறிவுமிகுந்த, கலையோன்-எல்லாக்கல்வியையு முணர்ந்தவனாகிய, சிலை குரு-வில்லாசிரியனான துரோணன்,—'விறல் குருகுலம் குமாருக்கு வரு - வலிமையையுடைய குருகுல குமாரர்களுக்குக் கைவந்த, சிரமம் நிலை-ஆயுதப் பயிற்சியின் நிலைமையை, காண்மின்-பாருங்கள்', என-என்று, அலை தலை நிலா எழு சரித் புதல்வனுக்குஉம் - அலைகள் ஒருநிலையில் நில்லாமல் (மேன்மேல் மிக்கு) எழப்பெற்ற கங்காநதியினது குமாரனான வீடுமனுக்கும், நல் அறம் கடவுளுக்குஉம்-சிறந்த யமதருமராசனது அமிசமான விதுரனுக்கும், உரையா-சொல்லி,—நிலைப்படு விசாலம் மணி அணி திகழ் அரங்கின்மிசை-நிலையாகப்பதிக்கப்பட்ட பெரிய இரத்தினங்கள் அழகுவிளங்கப் பெற்ற யுத்தரங்கத்திலே,—நிகழ் பலி கொடுத்து - கொடுத்தற்கு உரிய பலியைக் கொடுத்து,—அரியுடன் கலை புரவி ஊர் திருவை உம் தொழுது-சிங்கத்துடனே கலைமானாகிய வாகனத்தை ஏறி நடத்துகிற துர்க்கையைவணங்குதலுஞ் செய்து, புக்கனன் - பிரவேசித்தான்; (எ - று.)

அரங்கு-ரங்க மென்ற வடசொல்லின் திரிபு: இது - படைக்கலத் திறங் காட்டுதற்கு நிருமிக்கப்பட்ட இடம். துர்க்கை படைக்கலங்கட்கும் போருக்கும் உரிய தலைவி யாதலால், யுத்தரங்க

பூமியிற்புகும்போது வேண்டிய பலி கொடுத்துத் துர்க்கையை வணங்கிச் செல்லுதல், மரபு. பலிகொடுத்துத் துர்க்கையை வணங்கியதாக இங்குக் கூறியது, பாரதங்களிலில்லை. துர்க்கைக் குச் சிங்கமும் கலைமானும் வாகனமாம். 'மகளிர்யாவரும் இலக்குமி யின் சொரூபம்' என்ற சித்தாந்தத்தைத் தழுவி, துர்க்கையை 'திரு' என்றார்: திரு என்ற பெயர் மகளென்றமாத்திரமாய் நின்ற தென்றுங் கொள்ளலாம்: அன்றியும், துர்க்கைக்கு வீரலக்ஷ்மி யென்று ஒருபெயரும் உண்டு. 'அலைக்கலை நிலாவெழு கதிர்ப் புதல்வருக்கும்' என்ற பாடத்துக்கு - (தனக்கு உரிய பதினாறு) கலைகளோடும்(தனது) ஒளியாகிய நிலாவினுடனும் கடலினின்று உதிக்கிற சந்திரனென்னுஞ் சுடரினது குலத்திற் பிறந்த குமாரர் களான வீடுமனுக்கும் திருதராட்டிரனுக்கும் எனப் பொருளாம்.

**55.—அந்த யுத்தரங்கபூமியில் அனைவரும் வந்துசேர்தல்.**

**புரியிலறிவோர்சனபதத்திலறிவோர்புவிபு ரக்குமவர்தம்மிலறிவோர்**
**வரிபடவயங்குகொடிமஞ்சவிதமெங்கணும் வனப்புறவிருந்தபொழுதில்**
**தெரிவுறுவிமானமணைதோறுமுறைதேவர்பலர் சித்தர்முதலோர்பலரொடும்**
**கரியநெடுமால்பிரமனிந்திரன்முதற்பலர் கலந்தவகல்வானிகருமே.**

(இ-ள்.) புரியில் அறிவோர்-நகரத்திலுள்ள அறிஞர்களும், சனபதத்தில் அறிவோர்-நாட்டிலுள்ள அறிஞர்களும்,புவி புரக்கு மவர் தம்மில் அறிவோர்-பூமியை ஆளும் அரசர்களில் அறிஞர் களாயுள்ளவர்களும், (ஆகிய அனைவரும்), வரி பட வயங்கு கொடி மஞ்சம் விதம் எங்கண் உம்-(அந்தரங்கபூமியில் அமைக்கப் பட்டு) வரிசைப்பட விளங்குகிற ஒழுங்கான ஆசனங்களின் வகை களிலெல்லாம், வனப்பு உற இருந்த பொழுதில்-அழகுபொருந்த வீற்றிருந்த சமயத்தில்,-(அச்சபையானது),—தெரிவுறு விமானம் மணைதோறுஉம் - விளங்குகிற விமானங்களாகிய மாளிகைகளில், உறை-வசிக்கிற, தேவர் பலர்-தேவர்கள்பலரோடும், சித்தர் முத லோர் பலரொடுஉம்-சித்தர்கள் முதலிய தேவகணத்தவர் பல ரோடும், கரிய நெடுமால் பிரமன் இந்திரன் முதல் பலர் - கருமை நிறமும் பெருமைக்குணமு முடைய திருமாலும் பிரமனும் இந்திர னும் முதலிய பல சிறந்த தேவர்கள், கலந்த-வந்து செறியப் பெற்ற, அகல் வான்-பரந்த ஆகாயத்தை, நிகரும்-ஒக்கும்;(எ-று.)

ஜனபதம்-வடசொல்; சனங்கள் வசிக்குமிட மென்று பொருள் படும். 'அறிவோர்' என்றது, இங்கு, யானை குதிரை தேர் படைக் கலம் என்றவற்றின் நூல்களை யறிந்தவரைக் குறிக்கும். சித்தர்- அணிமாமுதலிய யோக சித்திகளைப் பெற்றவர். 'புரிவிலறிவோர்' என்றும், 'இயங்குகொடி' என்றும் பாடம். 'பலரொடும்' என்ற விடத்து, 'பரரொடும்' என்று பிரதிபேதம். (329)

**56.—யுதிட்டிரன் முதலியோர் தம்தமது வில்திறங் காட்டுதல்.**

**ஆற்றின்வழுவாமனுமுறைத்தருமன்மைந்தன்முத லாகியகுமாரரடைவே**
**போற்றியபடலாசிரியரிருவரையுமன்பினுயர் பூசைபலசெய்துபுரிநாண்**
**ஏற்றியசராசனம்வணக்கிவடிவாளியினிலக்கமவைநாலும்வகையான் [யே.**
**மாற்றினர்பிளந்துபெருவண்மைசிறுநுண்மைசலநிச்சலமெனச்சொல்வகை**

(இ - ள்.) ஆற்றின் வழுவா-நல்நெறியில் தவறாத,மனுமுறை-மநுதர்ம சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட நீதியையுணர்ந்த,தருமன் மைந்தன்-தருமபுத்திரன், முதல் ஆகிய-முதலான, குமாரர் - குரு குல குமாரர்கள், அடைவே-முறையே,—அடல் ஆசிரியர் இருவரைஉம் - வலிமையையுடைய (கிருபன் துரோணன் என்னும் தமது) ஆசிரியர் இருவரையும், போற்றி-வணங்கி,அன்பின்-அன்போடு, உயர் பூசை பல செய்து-சிறந்த பூசைகள் பலவற்றைச் செய்து, புரி நாண் ஏற்றிய சராசனம் வணக்கி-முறுக்குள்ள நாணியை ஏற்றும்படி வில்லை வளைத்து, வடி வாளியின் - கூரிய அம்புகளைக்கொண்டு,பெருவண்மை சிறு நுண்மை சலம் நிச்சலம் என சொல் வகை இலக்கம் அவை நால்உம்-பெருவண்மையும்சிறு நுண்மையும் சலமும் நிச்சலமும் என்று சொல்லப்பட்ட நான்கு வகை லக்ஷியங்களை யெல்லாம், வகையால் பிளந்து மாற்றினர்-(அதற்குஉரிய) வகைப்படி பிளந்து தள்ளினார்கள்; (எ - று.)

பெருவண்மை-மிகப்பெரிய இலக்கு. சிறுநுண்மை-மிகச்சிறிய இலக்கு.சலம்-அசையும்இலக்கு.நிச்சலம்-அசையாதஇலக்கு. அம்பைக் கையாளும்வகை-எடுத்தல் தொடுத்தல் விடுத்தல் மீட்டல் என நான்கு: இனி, மேனோக்கியெய்தல் நேரேயெய்தல் எனச் சில வகைகளும் கூறுப. 'நாலுவகையான்' என்று பிரதிபேதம். (330)

**57.—மற்றும் படைக்கலத்திறமும், யானைதேர்குதிரை நடத்துந் திறமுங் காட்டுதல்.**

ஆயுதமநேகவிதமானவையெனைப்பலவு மழகுறவியற்றியுமதம்
பாயுமிபமாவிரதம்வாசியொருவர்க்கொருவர் பலகதிவரக்கடவியும்
சேயுயருமாடநிலைதெற்றியினிருந்தவர் தெளிந்துளமகிழ்ந்துநவைதீர்
வாயுகதியல்லதுமனித்தர்கதியல்லவென வல்லனபுரிந்தனரரோ.

(இ-ள்.) எனை அநேகவிதம் ஆனவை-மற்றும் பலவகைப்பட்டவையான, ஆயுதம் பலஉம்-படைக்கலங்களை யெல்லாம், அழகு உற இயற்றிஉம்-அழகாக உபயோகித்தும்,—சேய் உயரும்-மிகவும் உயர்ந்துள்ள, மாடம் நிலை-மாளிகைகளின் உபரிகைகளிலும், தெற்றியின்-மண்டபங்களிலும், இருந்தவர்-(இக்காட்சி காண்டற்கென்று) வந்திருந்தவர்கள், தெளிந்து-கண்டு, உளம் மகிழ்ந்து-, நவை தீர் வாயு கதி அல்லது மனித்தர் கதி அல்ல என-(இக்கதி விசேடங்கள்) குற்றமற்ற வாயுவுக்குஉரிய கதிகளே யல்லது மனிதர்களுக்குஉரிய கதிகளல்லவென்று சொல்லும்படி,—மதம்பாயும் இபம்-மதசலம் பெருகப்பெற்ற யானைகளையும், மா இரதம்-பெரிய தேர்களையும், வாசி-குதிரைகளையும், ஒருவர்க்கு ஒருவர்-ஒருவரினும் ஒருவர் மிகுதியாக, பல கதி வர-அநேகவிதமான நடை விகற்பங்கள் உண்டாக, கடவிஉம்-செலுத்தியும்,—வல்லன புரிந்தனர்-(தாம்) தேர்ந்த கல்வித்திறங்களைச் செய்து காட்டினார்கள்; (எ-று.)—அரோ - ஈற்றசை.

எனை-ஏனை யென்னும் இடைச்சொல்லின் குறுக்கல். கீழ்க்கவியில் கூறியதனால், மற்றையபடைக்கலங்களைக் குறித்தற்கு 'ஏனை' என்றார். 'மாடநிலைதோரணவையிருந்தவர்' என்ற பாடத்

துக்கு-மாடங்களினிடந்தோறும் கூடியிருந்த பெரியோர்களென்க. மனித்தர் = மநுஜர்: வடசொல். தெற்றி-சித்திரகூடமுமாம். (331)

### 58.—துரியோதனனும் வீமனும் கதைப்போர் தொடங்குதல்.

ஒத்தவலியோர்வலியுமொத்ததிறலோர்திறலுமொத்தவினையோர்வினையும்வன்
சித்தமனன்மூளமுகவம்புயமலர்ந்தரசன்மகனுமனிலன்சிறுவனும்
கைத்தலமமர்ந்தகதைகொண்டெதிர்நடந்தனர் களிப்புடனிரண்டுதறுகண்
மத்தகயம்வேரொடுமராமரமெடுத்தமர்மலைந்தனையகோலமறவோர்.

(இ-ள்.) வலிஉம்-உடல்வலிமையைக்குறித்து நோக்கினாலும், ஒத்த வலியோர்-(ஒருவர்க்கொருவர்) சமமான தேகபலமுடையவர்களும், திறல்உம் - பராக்கிரமத்தைக்குறித்து நோக்கினாலும், ஒத்த திறலோர்-சமமான பராக்கிரமத்தை யுடையவர்களும்,வினைஉம்-படைக்கலத் தொழில்வகைகளைக் குறித்து நோக்கினாலும், ஒத்த வினையோர்-சமமான தொழில்திறமுடையவர்களும் ஆகிய, அரசன் மகன்உம் அனிலன் சிறுவன்உம்-திருதராட்டிர மகாராசனது புத்திரனான துரியோதனனும் வாயுகுமாரனான வீமனும், தறுகண் மத்தகயம் இரண்டு-அஞ்சாமையையுடைய மதம்பிடித்த யானைகள் இரண்டு, களிப்புடன்-அம்மதக்களிப்புடனே, மராமரம் வேரொடு எடுத்து-மராமரங்களை வேருடனே (துதிக்கையாற்) பெயர்த்து எடுத்துக்கொண்டு, அமர் மலைந்து அனைய-(ஒன்றோடொன்று) போர்செய்தாற்போன்ற, கோலம் மறவோர்-காட்சியையும் யுத்தாவேசத்தையுமுடையவர்களாய்,— வல் சித்தம் அனல் மூள-வலிய தங்கள் மனத்திலே கோபாக்கினி எழுந்துபொங்க, முக அம்புயம் மலர்ந்து-(தங்கள்) முகமாகிய தாமரைமலர்கள் மலரப்பெற்று, கைத்தலம் அமர்ந்த கதைகொண்டு எதிர்நடந்தனர்-கைகளிற் பொருந்திய கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு (ஒருவரையொருவர்) எதிர்த்துச் சென்றார்கள்; (எ - று.)

இருவரும் பதினாயிரம் யானைபலம்கொண்டவராதலால்,'ஒத்த வலியோர்' எனப்பட்டனர்: (துரியோதனன், வீமன், கீசகன், சராசந்தன், பகாசுரன் என்ற இவ்வைவரும் சமபலமுடையவரென்பதை அறிக.) கதாயுதத்தைக்கொண்டு நிற்கும் இவ்விருவர்க்கு, ஸாலவ்ருட்சத்தைக்கொண்டுநிற்கும்மதக்களிறுகள்உவமை.(332)

### 59.—அவர்கள் போரில்மிகுதலை அசுவத்தாமன் விலக்குதல்.

தண்டின்முனையொன்றினுடனொன்றுருமெறிந்தனையதன்மையொடுடற்
றவிலகு, மண்டலவிதங்களும்வியப்புறநடந்தபின் மறத்தொடுசெயிர்த்து
வயிரம், கொண்டிருவரும்பொருதலுன்னுபொழுதத்தவர்குறிப்பினையிமைப்
பளவையிற், கண்டுகுருவின்சிறுவன்வன்பொடுவிலக்கினன்மெய் கல்வி
கரைகண்டபெரியோன்.

(இ-ள்.) தண்டின் முனை ஒன்றினுடன் ஒன்று-கதையின் நுனி ஒன்றோடொன்று, உரும் எறிந்து அனைய தன்மையொடு உடற்ற-இடியிடித்தாற் போன்ற தன்மையோடு தாக்க, விலகு மண்டல விதங்கள்உம்-(அக்கதைகள் தம்மேல் தாக்காதபடி) விலகுகிற மண்டலகதிவகைகளும், வியப்புற நடந்தபின்-(காண்பவர்) அதிசயிக்கும்படி நிகழ்ந்தபின்பு, இருவர்உம்-(துரியோதனன் வீமனென்னும்) இரண்டுபேரும், மறத்தொடு செயிர்த்து வயிரம் கொண்டு-வீரத்தோடு கோபித்து உட்பகைமைகொண்டு, பொருதல் உன்னு பொழுதத்து-போர்செய்யக்கருதியபொழுது,—அவர் குறிப்பினை-அவர்களுடைய உட்கருத்தை, இமைப்பு அளவையில் கண்டு-ஒரு மாத்திரைப்பொழுதிலே அறிந்து,—மெய் கல்வி கரை கண்ட பெரியோன் குருவின் சிறுவன்-உண்மையான கல்விகளை முழுவதும் அறிந்த பெருமையுடையவனாகிய குருபுத்திரனான அசுவத்தாமன், வன்பொடு விலக்கினன்-வலிமையோடு விலக்கினான்; (எ - று.)

மண்டலவிதம்-வலசாரி, இடசாரி, மண்டலம், பவுரி என்பன. செய்யுளோசையின்பம் நோக்கி, மெய்கல்வி' என வலியியல்பாய் நின்றது: இனி, மெய்யுங் கல்வியுமாகியவற்றைக் கரைகண்ட என்றும் உரைக்கலாம். 'அன்பொடுவிலக்கினன்' என்றும் பாடம். (333)

60.—அருச்சுனன் தனது வில்லின் திறமையைக் காட்டுதல்.

**மீளிமகவான் மதலை யாயுதபு ரோகிதன்வி லோசனமு ணர்ந்தவன்மலர்த்**
**தாளின்முடி வைத்தெதிர்த ரித்தனனி டங்கைவரி சாபகவ சத்தி னனிபம்**
**யாளியர வங்கருடன் வன்னிசலிலந்திமிர மிரவியிவையேகடவுளாம்**
**வாளியின்வி னோதமுற வெய்தனனி ருந்தமுடி மன்னவர்ம திக்கும் வகையே.**

(இ-ள்.) மீளி-வீரத்திற் சிறந்தவனான, மகவான் மதலை-இந்திர குமாரனாகிய அருச்சுனன்,—ஆயுத புரோகிதன் விலோசனம் உணர்ந்து-ஆயுதவித்தைக்குக் குருவான துரோணாசாரியனது கண்ணின்குறிப்பை யறிந்து, அவன் மலர் தாளில் முடிவைத்து-அவனுடைய தாமரை மலர்போன்ற திருவடிகளிலே தனது தலையை வைத்து [சாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டு],எதிர்-அவனெதிரிலே, இடம் கை வரி சாபம் தரித்தனன்-இடக்கையில் கட்டமைந்த வில்லை ஏந்தியவனாய், கவசத்தினன்-(உடம்பில் தரித்த) கவசத்தையுமுடையவனாய், இபம் யாளி அரவம் கருடன் வன்னி சலிலம் திமிரம் இரவி இவை ஏ கடவுள் ஆம் வாளியின்-யானையும் (அதற்குப்பகையான) சிங்கமும் பாம்பும் (அதற்குப் பகையான) கருடனும் அக்கினியும் (அதற்குமாறான) ஜலமும் இருளும் (அதற்குமாறான) சூரியனும் ஆகிய இவற்றின் விதமான தெய்வத்தன்மையுள்ள அம்புகளினால் [ஒன்றற்கொன்று பகையாகிய பல திவ்விய அஸ்திரங்களால்], வினோதம்உற-(காண்பவர்க்கு) வியப்புஉண்டாக, இருந்த முடிமன்னவர் மதிக்கும் வகை-(அவ்வரங்கத்தில்) இருந்த கிரீடதாரிகளான அரசர்கள் (தன்னை) நன்குமதிக்க, எய்தனன்—; (எ - று.)

முன்பு தானே ஓர் அஸ்திரத்தை எய்து அதன்திறத்தை வெளிக்காட்டி வியப்பு உண்டாக்கி உடனே அதற்குப் பகையான அஸ்திரத்தைக் கொண்டு தணித்து இங்ஙனமே மிக்கவிநோதக்

காட்சிகளைவிளைத்தனனென்க. மகவான் என்ற வடசொல்-யாகங்களை யுடையவனென்று பொருள்படும்; நூறு அசுவமேதயாகங்களைச் செய்து இந்திர பதவிபெறுதலால் அவனுக்கு இப்பெயர்.

வேறு.

**61.—அப்பொழுது கர்ணன் எழுந்து சிங்கநாதஞ் செய்தல்.**

மங்குல் சூழ்வி மான முன்றின் மஞ்ச கோடி திகழவே
அங்கண் வான மீன மென்ன வவையி ருந்த வரசர்முன்
சிங்க மென்னு மாறெ ழுந்து சிங்க நாத முஞ்செய்தான்
பங்க சாத பரிம ளங்கொள் பானு ராச சூனுவே.

(இ-ள்.) மங்குல் சூழ் விமானம் முன்றில் - மேகங்கள் படியப்பெற்ற(மேல்நிலையையுடைய) மண்டபத்தின் முன்னிடத்திலுள்ள, மஞ்சம் கோடி-மஞ்சங்களின் வரிசை, திகழ-(தாம்வீற்றிருத்தலால்) விளங்கும்படி, (அந்த மஞ்சங்களில்), அம் கண் வானம் மீனம் என்ன-அழகிய இடத்தையுடைய வானத்திற்பொருந்திய நக்ஷத்திரங்கள்போல, அவை இருந்த-சபையாகத் திரண்டு வீற்றிருந்த, அரசர்முன்-அரசர்களுடைய முன்னிலையிலே,—பங்கசாதபரிமளம் கொள் பானுராச சூனு - தாமரைமலர்களை மலர்த்துந்தன்மையுள்ள சூரியனாகிய தலைவனது மகனான கர்ணன்,—சிங்கம் என்னும் ஆறு எழுந்து-சிங்கம்(தனக்கு உவமை) என்று சொல்லும் படி (கம்பீரமாக) எழுந்து, சிங்கநாதம்உம் செய்தான்-சிங்கநாதத்தையுஞ் செய்தான்; (எ-று.)

இங்கே, விமானம்-மண்டபத்தின் மேல்நிலையையும், முன்றிலென்றது-வடமொழியில் ப்ரேக்ஷாகார மெனப்படும் காட்சிச்சாலையின் முன்னிடத்தையும் காட்டும். அலர்த்தலாகிய காரணம், பரிமளங்கொள்ளுதலாகிய காரியமாக உபசரிக்கப்பட்டது. பரிமளங்கொள் பாநு - தாமரைகள் மலர்ந்து வாசனைவீசுதற்குக் காரணமாகுஞ் சூரியனென்க. ஓர் உத்தமபுருஷன் உயர்ந்த பதுமினி சாதிஸ்திரீயின் மேனிநறுமணத்தை மோந்து உட்கொள்ளல்போல, சூரியனாகிய தலைவன் தனது தலைவியாகிய தாமரையின் மணத்தைக் கொள்ளுகின்றனனென்பது தொனிக்கும். கோடி, ஸிம்ஹநாதம், பங்கஜாத பரிமளம், பாநுராஜஸூநு-வடமொழித் தொடர்கள். 'விசாலமுன்றில்' என்றும் பாடம்.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள்-பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்று விளச்சீரும், மற்றையாறும் மாச்சீர்களுமாகிய எழுசீராசிரியவிருத்தங்கள். இவற்றை, முதல் ஆறு சீர்களையும் மூன்று பெருஞ் சீராகப் பிரித்துக் கலிவிருத்த மென்னவேண்டுமென்பது, ஒருசாரார் கொள்கை. (335)

**62.—அருச்சுனனினும் சிறப்பாகக் கர்ணன் தனது வில்திறங் காட்டுதல்.**

சிந்தையன்புடன்பணிந்து தேசிகேசனருளினல்
வந்துவெஞ்சராசனம் வணக்கிவீரவாளியால்
இந்திரன்குமாரன்முன் னியாதியாதியற்றினன்
அந்தவந்தநிலையுமேவு மவனின்விஞ்சலாயினன்.

(இ - ள்.) தேசிக ஈசன் அருளினால் வந்து-(அவ்வரங்கிற்குத் தலைவனாக விளங்கும்) குருசிரேஷ்டனான அந்தத் துரோணனது அநுமதிபெற்று (அதனால்) வந்து, சிந்தை அன்புடன் பணிந்து-(அவனை) மனப்பூர்வமான பக்தியோடு வணங்கி, வெம் சராசனம் வணக்கி-கொடிய வில்லை வளைத்து,—இந்திரன்குமாரன் முன் வீர வாளியால் யாது யாது இயற்றினான் அந்த அந்த நிலைஉம் ஏஉம் அவனின் விஞ்சல் ஆயினான்-இந்திரனது மகனான அருச்சுனன் முன்பு திறமையுடைய அம்புகளால் எந்தெந்தவகைத்தொழிலைச் செய்தானோ அததற்குஉரிய நிலையிலும் அந்தந்த அம்பைச் செலுத்துதலிலும் அவ்வருச்சுனனினும் மேம்படுதலை உடையவனானான்; (எ - று.)

"அர்ச்சிதேதந குருணாநுமோதிதோ-தாரயந் தநு ரதிஜ்யதாம் கதம் | அத்புதம் வ்யநித யத்யத் அர்ஜுந:-தத்த தப்யதிகம் ஆத தாந ஸ:" என்ற பாலபாரதத்தை யொட்டி இப்போது கூறிய பொருளே யேற்றதாதலறிக. தேசிகன்-பரசுராமனென்பாருமுளர்.

63.—அதுகண்டு அனைவரும் வியக்கத் துரியோதனன்களிக்க அருச்சுனன் நாணுதல்.

கணைகள்போயிலக்கடைந்தவுறுதிகண்டுகண்களித்து
இணையில்வீரனென்றதன்றிருந்தராசமண்டலம்
பிணையன்மாலைவிசயனண்ணல்பெற்றிபற்றிநாணினான்
துணைவரோடுவரிகழற்சு யோதனன்களிக்கவே.

(இ-ள்.) கணைகள்-(கர்ணனுடைய)பாணங்கள், போய்-சென்று, இலக்கு அடைந்த - (குறித்த) இலக்கில் தவறுதுபட்ட, உறுதி-திறத்தை, கண்டு-பார்த்து,—அன்று இருந்த ராசமண்டலம்-அப்பொழுது(அச்சபையில்)இருந்த அரசர்களதுதிரள், கண்களித்து-கண்கள் களிக்கப்பெற்று, இணை இல் வீரன் என்றது - (அவனை) ஒப்பற்றவீரனென்று கொண்டாடிற்று: (அதனால்), வரி கழல் சுயோதனன்-கட்டிய வீரக்கழலையுடைய துரியோதனன், துணைவரோடு-(தனது) தம்பிமார்களுடனே, களிக்க-களிப்படைய,—பிணையல் மாலை விசயன்-பின்னல்மாலையைத் தரித்தஅருச்சுனன், அண்ணல் பெற்றி பற்றி நாணினான்-பெருமையிற்சிறந்தவனான அக்கர்ணனது திறமையைக்குறித்து வெட்கமடைந்தான்; (எ-று.)

"தம்மினுங், கற்றாரைநோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம், எற்றேயிவர்க்கு நாமென்று" என்றபடி, வில்திறத்தில் தேர்ந்த அருச்சுனன் தன்னினும் மேம்பட்ட கர்ணனதுதிறத்தைக் கண்டு நாணங்கொண்டன னென்க. இலக்கு=லக்ஷ்யம். அண்ணல்-(தனது) தமையன் எனக்கொள்ளினுமாம். (337)

64.—கர்ணன் அருச்சுனனைத்தன்னோடுநேர்ந்தயுத்தஞ்செய்ய அழைத்தல்.

மருவநின்றருக்கன்மைந்தன்வானநாடன்மகனைநாம்
இருவருந்தனுக்கொள்போரியற்றவம்மினென்றலும்
குருகுலந்தழைக்கவந்தகுமரனன்புகூரவே
உருகிநன்றெனத்தழீஇயுகந்துளந்தருக்கினன்.

(இ-ள்.) அருக்கன் மைந்தன் - சூரியபுத்திரனுன கர்ணன், மருவநின்று-சமீபமாக வந்துநின்று, வானநாடன் மகனை - தேவலோகத்துக்குத் தலைவனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனனை நோக்கி, நாம் இருவர்உம் தனுகொள் போர் இயற்ற வம்மின் என்றலும்-'நாம் இரண்டுபேரும் விற்போர்செய்யுமாறு (நீர்) வருக' என்று கூப்பிட்டவளவிலே,—குருகுலம் தழைக்க வந்த குமரன்-குருவென்னும் அரசனது குலம் செழிக்கும்படி பிறந்த மகனான துரியோதனன், அன்பு கூர-அன்புமிக, உருகி-(அந்தக்கர்ணன் விஷயத்தில்) மனவுருக்கங்கொண்டு, நன்று என-இது நல்லதென்று (அவன்செயலைக்) கொண்டாடி, தழீஇ - (அவனைத்) தழுவியணைத்து, உளம் உகந்து-மனமகிழ்ந்து, தருக்கினான் - பெருமை பாராட்டினான்; (எ - று.)

துரியோதனனை 'குருகுலந்தழைக்கவந்த குமரன்' என்றது, நூற்றுவரெனத் தொகையால் மிக்கதனாலேயே யென்க. (338)

**65.—அருச்சுனனுக்கும் கர்ணனுக்கும் நிகழும் வீரவார்த்தை.**

அனந்தரம்பொரற்குநீகொலந்தரம்மெனக்கெனுத்
தனஞ்சயன்செயிர்த்தல்கண்டுதபனன்மைந்தன்மீளவும்
முனைந்தபோரின்முடிதுணித்துன்முகசரோருகத்தினால்
சினந்தணிந்தரங்கபூசைசெய்வனென்றுசீறினான்.

(இ - ள்.) அனந்தரம்-பின்பு, தனஞ்சயன்-அருச்சுனன், (கர்ணனைநோக்கி), 'பொரற்கு-போர்செய்தற்கு, நீ கொல் எனக்கு அந்தரம்-நீயாஎனக்கு எதிர்?' எனா-என்றுசொல்லி, செயிர்த்தல்-கோபித்தலை, கண்டு-பார்த்து,—தபனன் மைந்தன்-சூரியபுத்திரனான கர்ணன்,—மீளஉம்-பின்பும், 'முனைந்த போரில்-பகைத்துச் செய்யும் போரிலே, முடி துணித்து-(உன்) தலையை வெட்டி, சினம் தணிந்து-(அதனால் எனது) கோபமாறி, உன் முக சரோருகத்தினால்-உனது முகமாகிய தாமரைமலரைக்கொண்டு, அரங்கபூசை செய்வன்-யுத்தரங்கத்துக்குப் பூசைசெய்வேன்', என்று - என்று சொல்லி, சீறினான்-மிகவுங் கோபித்தான்; (எ - று.)

தருமபுத்திரன் இராசசூயயாகஞ் செய்யவேண்டியபொழுதில், அருச்சுனன் வடக்கிற்சென்று பல அரசர்களைச் சயித்து அவர்கள் செல்வத்தைத் திறைகொணர்தலால், அவனுக்குத் தனஞ்சயனென்று ஒருபெயர்; இனி, இப்பெயர்க்கு - வெற்றியைச் செல்வமாகவுடையவனென்றும் ஒருபொருள் கொள்ளலாம். ஸரஸ்+ருஹம்=ஸரோருஹம்; குளத்தில் முளைப்பது: தாமரைக்குக்காரணவிடுகுறி. (339)

**66.—அதுகண்டு அனைவருந் திகைக்கக் கிருபன் நீதிகூறத் தொடங்குதல்.**

அதிருகின்றவெழிலிபோலருச்சுனன்றனைக்குறித்து
எதிருகின்றவின்மைகண்டியாவருந்திகைக்கவே
முதிருகின்றமெய்யனுகிமுன்னிருந்தகௌதமன்
உதிருகின்றவமுதவிந்துவொக்குமென்னவுரைசெய்வான்.

(இ-ள்.) அதிருகின்ற எழிலி போல்-இடிமுழங்குகின்ற மேகம் போல, அருச்சுனன்தனை குறித்து எதிருகின்ற - அருச்சுனனைக்

குறித்து (க் கர்ணன்) எதிர்த்து நிற்கிற, வின்மை-வில்வலிமையை, கண்டு-பார்த்து, யாவர்உம்-எல்லோரும், திகைக்க - பிரமித்து நிற்க,—முதிருகின்ற மெய்யன் ஆகி முன் இருந்த கௌதமன்-முப்படைந்த உடம்பையுடையவனாய் (அச்சபையில்)முன்னேவீற்றிருந்த கிருபாசாரியன், உதிருகின்ற அமுத விந்து ஒக்கும் என்ன உரைசெய்வான் - சிந்துகிற அமிருதத்துளிகள்போலுமென்னும்படி சொல்பவனானான்; (எ-று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க. (340)

இப்பொழுது கிருபன் பேசும்பேச்சு, துரியோதனன் முதலிய சில தீயோர்க்கு வருத்தம் விளைப்பினும், நீதிமுறைமையுணர்ந்த நல்லோர்பலர்க்கும் இன்பத்தை விளைத்தல்பற்றி, அச்சொற்களுக்கு அமிருதத்துளிஉவமை. வன்மைகண்டு என்றும் பாடம். (340)

**67.—கிருபன் நீதிகூறத் துரியோதனன் அதனை மறுக்கத்தொடங்குதல்.**

கர்ணன் சூதன்மைந்தன்வேலையேழு சூழுமேதினிக்கெலாம்
நாதன்மைந்தனுடன்வெகுண்டு நவிலுதற்குநண்ணுமோ
ஏதமுண்டுசாலவென்ன ராசராசனிகலியக்
கிருபன் கோதமன்றனக்குளங் கொதிக்குமாறுகூறுவான்.

(இ-ள்.) 'சூதன் மைந்தன்-தேர்ப்பாகனது மகன், வேலை ஏழு சூழும் மேதினிக்கு எலாம் நாதன் மைந்தனுடன்-ஏழுகடல்கள் சூழ்ந்த பூமி முழுதுக்கும் அரசனது குமாரனோடு, வெகுண்டு நவிலுதற்கு நண்ணும் ஓ - கோபித்து வீரவாதம் பேசுதற்குத் தகுமோ? [தகாது என்றபடி]: சால ஏதம் உண்டு-(இங்ஙனம் பேசுதல்) மிகவுங்குற்றமுடைத்து,' என்ன-என்று (கிருபன்)சொல்ல,—ராச ராசன்-அரசர்க்கரசனாகிய துரியோதனன்,—இகலி - மாறுபட்டு,—அ கோதமன் தனக்கு உளம் கொதிக்கும் ஆறு கூறுவான்-அந்தக்கிருபாசாரியனுக்கு மனம் கொதிக்கும்படி (மறுமொழி) கூறுபவனானான்; (எ-று.)—அவற்றை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

நவிலுதற்கு என்ற குகரவீற்று வினையெச்சம், தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு 'நண்ணும்' என்ற முற்றுக்கு எழுவாயாய் நிற்கும். கோதமன் என்றது, கௌதம னென்ற வடசொல்லின் விகாரம். (341)

**68.—துரியோதனன் மறுமொழி: இன்னாரின்னார்க்குச் சாதிபேதம் கருதத்தக்கதன் றென்றல்.**

கற்றவர்க்குநலனிறைந்த கன்னியர்க்கும்வண்மைகை
உற்றவர்க்கும்வீரரென்றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையான கோதின்ஞானசரிதராம்
நற்றவர்க்குமொன்றுசாதி நன்மைதீமையில்லையால்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) கற்றவர்க்குஉம்-படித்தவர்களுக்கும், நலன் நிறைந்த கன்னியர்க்குஉம்-அழகுநிறைந்த கன்னிகைகளுக்கும், வண்மை கை உற்றவர்க்குஉம்-ஈகைக்குணம் கைவந்தவர்களுக்கும், வீரர் என்று உயர்ந்தவர்க்குஉம்-வீரர்களென்று சிறப்பாக மதிக்கப்பட்டவர்களுக்கும், வாழ்வு உடை கொற்றவர்க்குஉம் - செல்வவாழ்க்

கையையுடைய அரசாட்சி பூண்டவர்களுக்கும், உண்மை ஆன கோது இல் ஞானசரிதர் ஆம் நல் தவர்க்குஉம்-உண்மையான குற்றமற்ற தத்துவ ஞானத்தையும் (அதற்குஏற்ற) ஒழுக்கத்தையும் உடையவர்களாகிய நல்ல தவஞ்செய்யும் முனிவர்களுக்கும், ஒன்று சாதி-சாதி ஒன்றே; நன்மை தீமை இல்லை-(அதில்)உயர்வு தாழ்வு என்னும் பகுப்பு இல்லை; (எ-று.)—ஆல்-ஈற்றசை; தேற்றமுமாம்.

எந்தச்சாதியிற்பிறந்திருப்பினும் கற்றவர் முதலியோர் மேன்மைபெறக் கல்லாதவர் முதலியோர் கீழ்மையுறுவராதலால் இவர்கட்குச் சாதிவேற்றுமை குறிக்கத்தக்க தன்றென்பது இதன் கருத்து. (342)

**69.—இதுவும் அது: பிறப்பினுல் இழிவின்மைக்குச் சில உதாரணம்.**

அரிபிறந்ததன்றுதூணி லரனும்வேயிலாயினன்
பரவையுண்டமுனியுமிப் பரத்துவாசன்மைந்தனும்
ஒருவயின்கண்முன்பிறந்த தொண்சரத்தினல்லவோ
அரியவென்றிமுருகவேளு மடிகளும்பிறந்ததே.

(இ-ள்.) அன்று - முற்காலத்தில், அரி பிறந்தது - திருமால் அவதரித்தது, தூணில்-தூணினிடத்தேயாம்; அரன்உம்-சிவபிரானும், வேயில் ஆயினன்-மூங்கிலில் தோன்றினன்; பரவை உண்ட முனிஉம் - கடலைப்பருகிய அகத்தியமகாமுனிவனும், இ பரத்துவாசன் மைந்தன்உம்-பரத்துவாசமுனிவனது குமாரனான இந்தத்துரோணாசாரியனும், முன் பிறந்தது-முன்பு தோன்றினது, ஒருவயின்கண்-(கும்பமாகிய) ஓரிடத்திலேயாம்; அரிய வென்றி முருகவேள்உம்-(பிறரால்வெல்லுதற்கு) அரிய வெற்றியையுடைய முருகக்கடவுளும், அடிகள்உம்-தேவரீரும், பிறந்தது-தோன்றினது, ஒள் சரத்தின் அல்லஓ-விளங்குகின்ற நாணலிலே யன்றோ?

மேன்மையுடைய திருமால் முதலியோர் பிறந்த இடங்காரணமாக இழிக்கப்படாமை போலவே, இக்கர்ணனும் சாதிபற்றி இழித்தற்கு உரியனல்ல னென்க. திருமால் தூணில்தோன்றினது, நரசிங்காவதாரகாலத்தில்.

சிவபிரான் மூங்கிலில் தோன்றிய கதை:—எல்லாம் அழியும் பிரளய காலத்தில் தமக்கும் அழிவுநேரிடுமென்று கவலையுற்று வேதங்கள் பலநாள் சிவனைக்குறித்துத் தவம்புரிந்து அப்பிரானது தரிசனத்தைப்பெற்று 'பிரளய காலத்தில் நீ தாமிரசபையில் நின்று செய்யுந் திருநடனத்தை நாங்கள் தரிசிக்கவேண்டும்; பிரளயத்திலும் அழிவில்லாத அத்தலத்தில் நாங்கள் மூங்கிலாய் நின்று எப்போதும் நிழலைச் செய்ய, நீ எங்களிடம் முத்தாய்த்தோன்றி எங்களுக்குப் பிள்ளையுமாகவேண்டும்' என்று வரங்கேட்க, சிவபிரான் அதற்கு இணங்கித் திருநெல்வேலியில் வேணுவனத்தில் மூங்கில்முத்தாகி அம்மூங்கிலின்கீழ் எழுந்தருளியிருக்கின்றன னென்பதாம், இதனுல், அத்தலத்துச் சிவபிரானுக்கு வேணுவனநாதனென்று திருநாமம்.

ஏககாலத்தில் ஊர்வசியைக்கண்டு அவளிடங் காதல் கொண்ட மித்திரன் வருணன் என்னுந் தேவர் இருவரது விருப்

பத்தால் அருகிலிருந்ததொரு குடத்தினின்று பிறந்தவர் அகஸ்தியரென அறிக. (அதனால், கும்பசம்பவர், கலசயோநி என்ற பெயர்கள் அவர்க்கு வழங்கும்.) துரோணர் துரோணகும்பத்திற் பிறந்து அது காரணமாகப் பெயர்பெற்றமை, கீழ்க்கூறப்பட்டது. (கும்பசம்பவர், கலசயோநி என்று துரோணரை வழங்குதலும் உண்டு.) தேவர்கள் வேண்டியபடி சூரபதுமன் முதலிய கொடிய அசுரர்களை அழித்தற்பொருட்டு ஒரு குமாரனை யுண்டாக்கக் கருதிய சிவபிரானது திருமேனியினின்று வெளிப்பட்ட திவ்விய தேஜஸை அக்கினியும் வாயுவும் கங்கையிற் செலுத்த, அதனது ஒரு மடுவாய் நாணற்காட்டை யடுத்துள்ள சரவணப்பொய்கையினின்று சுப்பிரமணியமூர்த்தி தோன்றினனென வரலாறு அறிக. கிருபர் நாணற்கட்டையிற் பிறந்தமை, முன்கூறப்பட்டது. நாணலிற் பிறந்ததனால், முருகனுக்கும் கிருபனுக்கும் 'சரஜந்மா' என்று பெயர். உயர்ந்தோரை 'அடிகள்' என்றல், மரபு.

அகத்தியர் கடல் குடித்த கதை:—இந்திரன் முதலிய தேவர்கள் தம் பகைவனாகிய விருத்திராசுரன் மற்றும்பல அசுரர்களுடனே கடலிற்புக்கு ஒளித்துக்கொண்டபோது, அகத்தியமகாமுனிவனை யடைந்து பிரார்த்திக்க, அவன் அக்கடல்நீரைத் தனது ஒரு கையால் முற்றும் முகந்து பருகியருளி, உடனே ஒளித்திருந்த அவ்வசுரனை இந்திரன் கொன்றபின், தேவர்கள் வேண்டுகோளின்படி நீர்முழுவதையும் உமிழ்ந்தன னென்பதாம். (343)

**70.—துரியோதனன் கர்ணனை அங்கதேசத்துக்கு அரசனாக்குதல்.**

என்றுநல்லவுரையெடுத் தியம்பியேனையிழிவினோடு
ஒன்றிநின்றவாடகத்தை யோடவைக்குமாறுபோல்
அன்றுசூதன்மதலைதன்னை யங்கராசனாக்கினான்
மின்றயங்குமுடிகவித்து வேந்தெலாம்வியக்கவே.

(இ-ள்.) என்று நல்ல உரை எடுத்து இயம்பி-என்று இவ்வாறு நல்ல வார்த்தைகளை எடுத்துச்சொல்லி,—(துரியோதனன்),—ஏனை இழிவினோடு ஒன்றி நின்ற ஆடகத்தை ஓட வைக்கும் ஆறு போல்-மற்றையிழிந்தலோகம் முதலியவற்றோடு கலந்து நின்ற பொன்னைப் புடமிட்டுச் சுத்தமாக்குந் தன்மை போல,—அன்று-அப்பொழுது, சூதன் மதலைதன்னை-தேர்ப்பாகன் மகனான கர்ணனை,—வேந்து எலாம் வியக்க-அரசர்களெல்லாருங் கொண்டாடும்படி, மின் தயங்குமுடி கவித்து-ஒளிவிளங்குகின்ற கிரீடத்தைச் சூட்டி, அங்கராசன் - அங்கதேசாதிபதியாக, ஆக்கினான்—; (எ-று.)

'அருச்சுனன் அரசனுடனேயே போர்செய்தற்கு உரியானென்று கருதுகின்றதனால், அதன்பொருட்டு, கர்ணனை இக்கணத்திலேயே அரசனாக்குகிறேன்' என்று சொல்லித் துரியோதனன், மாசுநீங்கித் தூயதாய் ஒளிமிகும்படி பொன்னைப்புடமிடுதல்போல, தேர்ப்பாகன் மகனான கர்ணனை அவ்விழிவு தீர்ந்து பெருமையுறுமாறு முடிசூட்டினன். நல்லவுரை - கர்ணனுக்கும் தனக்கும் அனுகூலமான நீதிவார்த்தை. சிவபிரானால் எரிக்கப்பட்ட மன்மதனது அங்கம் விழுந்த இடம், அங்கதேசமாயிற்று. இழிவு-ஆகுபெயர். (344)

**71.—துரியோதனன் கர்ணனுக்கு அர்த்தாசனங் கொடுத்தல்.**

தானிருந்தவரிமுகஞ்செய் தாள்சுமந்ததவிசின்மேல்
ஊனிருந்தபடையினனை யுடனிருத்திவண்டுசூழ்
தேனிருந்தமாலைவாகு சிகரமீதுதெண்டிரைக்
கானிருந்தமண்டலங் கருத்தினாலிருத்தினான்.

(இ-ள்.) (துரியோதனன்),—தான் இருந்த-தான் வீற்றிருந்த, அரிமுகம் செய் தாள் சுமந்த தவிசின்மேல் - சிங்கத்தின் வடிவந் தோன்றச் சித்திரித்துச்செய்யப்பட்ட கால்கள் சுமந்த பீடத்தின் மேல் [சிங்காதனத்தின்மீது], ஊன் இருந்த படையினனை-(பகைவரது) தசைதோய்தற்குஉரிய (வேல் முதலிய) ஆயுதங்களையுடைய கர்ணனை, உடன் இருத்தி-தன்னுடன் ஒருங்கு வீற்றிருக்க வைத்து,—வண்டு சூழ் தேன் இருந்த மாலை வாகு சிகரம்மீது - வண்டுகள் சூழுந் தேன்பொருந்திய மாலையை யணிந்த (அவனுடைய) தோள்களாகிய மலையின்மேல், தெள் திரை கான் இருந்த மண்டலம்-தெளிவான அலைகளின்தொகுதியையுடைய கடலின் நடுவிலேயுள்ளதான பூமியின் பாரத்தை, கருத்தினால் - (தன்) மனக்கருத்தோடு, இருத்தினான்—; (எ - று.)

தன் ஆசனத்தில் அர்த்தாசனமளித்து அதில் தன்னுடன் இருத்துதல், அரசர்செய்யும் ஒருபெருமரியாதை. தோள்வலிமையால் பெரிய இராச்சியத்தை அரசாள வைத்தனனென்பது, பின்னிரண்டடியின் கருத்து. துரியோதனன் கர்ணனுதவியைக் கொண்டு பின்பு பாண்டவரைவென்று தனியரசாட்சிசெய்யலாமெனக் கருதினனென்பது விளங்க 'கருத்தினா லிருத்தினான்' என்றார். இனி, இச்செய்யுளுக்கு-(துரியோதனன்) தானிருந்த தவிசில் கர்ணனை உடன் இருத்திக் கௌரவித்து (அதனால்) கடல்சூழ்ந்த நிலவுலகத்து அரசாட்சிமுழுவதையும் தன்தோளில் இருப்பதாகக் கருதினான் என்று பதவுரைகூறினும் அமையும். பாஹுசிகரம் - வடமொழித்தொடர். 'தெண்டிரைக்கான்' - அன்மொழித்தொகையாய், கடலைக் குறித்தது. (345)

**72.—கர்ணனும் துரியோதனனுங் கூடிச் செருக்குறுதல்.**

தவனன்மைந்தனுஞ்சுயோத னனுமிசைந்துதனதனும்
சிவனுமென்னநண்புகொண்டு திறலுடன்சிறந்துளார்
பவனனும்பர்நாயகன் பயந்தவீரரஞ்சவே
அவனியெங்குநமதெனக்கொள் பெருமிதத்தராயினர்.

(இ - ள்.) தவனன் மைந்தன்உம்-சூரியன்மகனான கர்ணனும், சுயோதனன்உம்- துரியோதனனும்,—இசைந்து-கலந்து, தனதன் உம் சிவன்உம்என்ன நண்புகொண்டு - குபேரனும் சிவபிரானும் போலச் சினேகங்கொண்டு, திறலுடன் சிறந்துளார்-வலிமையிற் சிறந்தவர்களாய்,—பவனன் உம்பர்நாயகன் பயந்த வீரர் அஞ்ச- வாயுவும் தேவேந்திரனும் பெற்ற வீரர்களாகிய வீமசேனனும் அருச்சுனனும் அஞ்ச, அவனி எங்குஉம் நமது என கொள் பெருமிதத்தர் ஆயினர்-பூமிமுழுவதும் இனி நம்முடையதேயென்று எண்ணிய செருக்கை யுடையவராயினர்கள்; (எ-று.)

குபேரன் முன்னொருகாலத்தில் கைலாசகிரியின் ஒருசாரலி லிருந்து பெருந்தவஞ்செய்து சிவதரிசனம்பெற்று அப்பிரானரு ளால்: அவனுக்கு நண்பனாயினன். கொடையாளியாகுங்கர்ண னுக்கு-தனதனாகியகுபேரனும், கர்ணனுக்கு அரசு அளித்த ராச ராசனான துரியோதனனுக்கு-குபேரனுக்கு வரமளித்த தலைவனான வெபிரானும் உவமை. முறைநிரனிறைப்பொருள்கோள். (346)

**73.—கௌரவ பாண்டவர்களது திறங்கண்டு துரோணன் மகிழ்தல்.**

**ஆனகாலையெண்ணுகின்ற வாயுதங்கள்யாவையும்**
**யானைவாசியிரதமான யானமுள்ளயாவையும்**
**சேனையோடுதெவ்வரைச் செருக்கவல்லவீரமும்**
**மானவீரர்வல்லரென்று மறைவலாளன்மகிழ்வுரு.**

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ-ள்.) ஆனகாலை-(இவையெல்லாம்) நிகழ்ந்த அப்பொழுது, —மறைவலாளன்-வேதம்வல்லவனான துரோணாசாரியன்,-எண்ணு கின்ற ஆயுதங்கள் யாவைஉம் - எண்ணப்படுகிற படைக்கலங்க ளெல்லாவற்றிலும், யானை வாசி இரதம் ஆன யானம் உள்ள யாவைஉம்-யானை குதிரை தேர் ஆகிய வாகனங்களாயுள்ளவை எல்லாவற்றிலும், சேனையோடு தெவ்வரை செருக்கவல்ல வீரம் உம்-சேனையுடனே பகைவர்களை யழிக்கவல்ல வீரத்திலும், மானம் வீரர் - மானத்தையுடைய இந்தவீரர்கள், வல்லர் - தேர்ந்தவர், என்று—, மகிழ்வு உரு-மகிழ்ச்சியடைந்து,—(எ - று.)—'இயம்ப' (75) என்ற எச்சத்தைக் கொள்ளும்.

ஆயுதங்கள்என்றது-அவற்றை உபயோகித்தலையும், யான மென்றது - அவற்றைச் செலுத்துதலையுங் குறிக்கும்: இலக் கணை. (347)

**74.—துரோணன் அவர்களிடம் தனக்குஉரிய குருதட்சிணை இன்னதெனல்.**

**வம்மினாதிகுருகுலந் தழைக்கவந்தமைந்தர்காள்**
**தம்மினாளையேயெமக் களிக்கநின்றதக்கிணை**
**எம்மினொருத்தன்வேறி யாகசேனனென்றுளான்**
**நும்மினாடியவனையிம்பர் நோதல்செய்துகொணர்மினே.**

(இ-ள்.) ஆதி குருகுலம் தழைக்கவந்த மைந்தர்காள் - முதன்மை பெற்ற குருகுலம் செழிப்படையும்படி வந்துதோன்றிய குமாரர்களே!—வம்மின்-வாருங்கள்: எமக்கு அளிக்க நின்ற தக் கிணை-எமக்கு (நீங்கள்) கொடுக்கும்படியுள்ள குருதட்சிணையை, நாளைஏ தம்மின்-நாளைக்கே தாருங்கள்: (அத்தக்கிணை), வேறு - வேறு வகைத்து; (அது என்னவெனின்),—யாகசேனன் என்று எம் இனுள் ஒருத்தன் உளான் - யாகசேனனென்று எம்பகைவ னொருவன் இருக்கிறான்; அவனை—, நும்மில் நாடி - உங்களுள் (யாவரேனும்) சென்று, நோதல் செய்து-(கொல்லாமல்) வருத்தி [போரில் உயிருடனே தேரோடு பிணித்து], இம்பர் கொணர்மின்- இவ்விடத்திற்குக் கொண்டுவாருங்கள்: (இவ்வளவே); (எ-று.)— 'என்றுஇயம்ப' என அடுத்த கவியோடு தொடரும்.

தக்கிணை = தக்ஷிணா: வடசொல். இனன் = இன்னன்: இனியவனல்லாதவனென்று பொருள். நாளையே என்றது, விரைவு குறித்தற்கு. (348)

**75.**—அதனை முடித்தற்கு அக்குமாரர்கள் பாஞ்சாலநாடுசெல்லுதல்.

என்றுதஞ்சிலைப்புரோகிதன்கனன்றியம்பவே
அன்றவன்பதம்பணிந் தளித்தசொற்றலைக்கொளா
வென்றிநீடுபடைகளோடும் விரவுமங்கநாலொடும்
சென்றுதங்களுடகன்று தெவ்வுநாடுகுறுகினர்.

(இ - ள்.) என்று—, தம் சிலை புரோகிதன் - தங்கள் வில்லாசிரியனாகிய துரோணன், கனன்று இயம்ப - (யாகசேனன்மீது) கோபங்கொண்டு சொல்ல,—(அக்குருகுல குமாரரனைவரும்), அன்று-அப்பொழுது, அவன் பதம் பணிந்து-அத்துரோணனது பாதங்களை வணங்கி [விடைபெற்று], அளித்த சொல் தலைக்கொளா-(அவன்) கட்டளையிட்டருளிய வார்த்தையைத் தலைமேற்கொண்டு [மிகவும் நன்குமதித்து], வென்றி நீடு படைகளோடுஉம்-வெற்றி மிக்க ஆயுதங்களோடும், விரவும் அங்கம் நாலொடுஉம் - பொருந்திய சதுரங்க சேனையோடும், சென்று-புறப்பட்டு, தங்கள் நாடு அகன்று-தங்களுடையகுருநாட்டை நீங்கி, தெவ்வு நாடு குறுகினர்-(தமது குருவுக்குப்பகைவனாதலால் தமக்கும்) பகைவனான யாகசேனனது பாஞ்சாலதேசத்தைச்சமீபித்தார்கள்;(எ-று.) —அங்கம் நால்-யானை தேர் குதிரை காலாள். தங்கள்நாடு-குருநாடு. 'தெவ்வனாடு' என்றும் பாடம். (349)

**76.**—அக்குமாரர்கள் பாஞ்சாலனரண்மனையை முற்றுகைசெய்தல்.

ஆளிமொய்ம்பரம்முனைக்க ணனபோதனீகினித்
தூளிகண்புதைத்தசென்று செவிபுதைத்ததுவனிபோய்
ஒளிகொண்டசெம்பொன்வெற்பி னுடல்புதைத்தவெழிலிபோல்
வாளிகொண்டவிருதர்மா மதிற்புறம்புதைக்கவே.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) ஆளி மொய்ம்பர்-சிங்கம்போலும் வலிமையுடையவர்களாகிய அக்குமாரர்கள், அ முனைக்கண் ஆன போது-போர்செய்தற்குரிய அவ்விடத்திலே சென்று சேர்ந்தபொழுது,—அனீகினி தூளி-(அவர்களுடைய) சேனையால் மேலெழுப்பப்பட்ட (பூமியின்) துகள், சென்று-முன்சென்று, கண் புதைத்த-(யாகசேனனது) கண்களை மறைத்தன: துவனி-(சேனையின்) பேராரவாரங்கள், போய்-முன்சென்று, செவி புதைத்த - (அவனது) காதுகளை அடைத்தன; (பின்பு), செம் பொன் வெற்பின் உடல் புதைத்த-சிவந்த பொன்மயமான மேருமலையின் வடிவை மூடிய, ஒளி கொண்ட எழிலிபோல்-வரிசைப்பட்ட மேகங்கள்போல, வாளி கொண்ட விருதர்-அம்பு கைக்கொண்ட (அக்குருசேனை) வீரர்கள், மா மதில் புறம் புதைக்க-(அவ் யாகசேன நகரத்தின்) பெரிய மதிலின் வெளியிடத்தை நெருங்கிச் சூழ்ந்திட,—(எ - று.)— "வளைத்த" என வருங்கவியோடு தொடரும்.

இவர்கள் செல்லுமுன்னே இவர்கள் சம்பந்தமான தூளியும் தொனியும் சென்று அவனுக்குஇடர்விளைத்தன எனச் சமத்காரந் தோன்றக் கூறினர். ஒளி-ஒழுங்கு; இனி, நீட்டல் விகாரமாக, ஒளியெனினுமாம். (350)

**77.—அதனையுணர்ந்து யாகசேனன் போருக்கு வருதல்.**

**வளைத்தசேனையானைவாசி வாயினின்றுகுமுறவே**
**உளைத்தெழுந்துமுழையைவிட் டுடன்றசிங்கவேறுபோல்**
**திளைத்ததன்பதாதியோடு மோகயாகசேனனும்**
**இளைத்தநெஞ்சனன்றிநீடு புரிசைவாயிலெய்தினன்.**

(இ-ள்.) வளைத்த-(இங்ஙனம் மதிற்புறத்து) முற்றுகைசெய்த, சேனை-குருசேனையிலுள்ள, யானை வாசி-யானைகளும் குதிரைகளும், வாயில் நின்று-(யாகசேனநகரத்து) வெளிவாயிலில்நின்று, குமுற - ஆரவாரஞ்செய்ய,— உளைத்து - கர்ச்சித்துக்கொண்டு, முழையை விட்டு எழுந்து உடன்ற-(தான் இருக்கிற) மலைக்குகையை விட்டுப் புறப்பட்டுக் கோபித்துவருகிற, சிங்கம் ஏறு போல்-ஆண்சிங்கம்போல, மோக யாகசேனன்உம் - மிக்க ஆசையையுடைய துருபதராசனும், இளைத்த நெஞ்சன் அன்றி - சோர்வடைந்த மனத்தை யுடையவனாகாமல், திளைத்த தன் பதாதியோடு-நெருங்கிய தனது சேனையோடு, நீடு புரிசை வாயில் எய்தினன்-உயர்ந்த மதில்வாயிலை அடைந்தான்; (எ-று.)

பதாதி - காலாட்படை; இங்கே, சேனையென்றமாத்திரமாய் நின்றது. கொடுப்பதாகச்சொன்ன அர்த்தராச்சியத்தைக்கொடாமல் அதில் ஆசை கொண்டதனால், 'மோகயாகசேனன்' என்றார். (351)

**78.—சோமகரோடு கௌரவர்க்கும், யாகசேனனோடு அருச்சுனனுக்கும் போர் நிகழ்தல்.**

**சோமகர்க்குமுடுகுசேனை சூழவந்தகுருகுலக்**
**கோமகர்க்கும்வெஞ்சமர் விளைந்ததான்மைகூரவே**
**பூமகற்குமிக்கமா முனிக்குவாய்மைபொய்த்தவம்**
**மாமகற்கும்விசயனுக்கு மன்னுபோர்வயங்கவே.**

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) சோமகர்க்குஉம்-சோமகுலத்து அரசர்களுக்கும், முடுகுசேனை சூழவந்த குருகுலம் கோ மகர்க்குஉம் - விரைந்து நெருங்கிய சேனைகள் சூழ வந்த குருகுலவரசகுமாரர்களுக்கும், ஆண்மை கூர-வலிமைமிக, வெம் சமர் விளைந்தது-கொடிய போர் உண்டாயிற்று; பூமகற்குஉம் மிக்க மாமுனிக்கு-பிரமதேவனினும் மேம்பட்ட பெருமையையுடைய துரோணாசாரியனுக்கு, வாய்மை பொய்த்த-சொன்ன வாக்குத் தவறின, அ மா மகற்குஉம்-அந்தச் செல்வ மகனான யாகசேனனுக்கும், விசயனுக்குஉம் - அருச்சுனனுக்கும், மன்னு போர் வயங்க-பெரும்போர் மிக,—(எ-று.)—'குமரர் நகரி நோக்கினர்' என வருங்கவியோடு முடியும்.

பாஞ்சாலராசர்கள், சோமகனென்னும் அரசனது குலத்தவராதலால், சோமகரெனப்பட்டனர்; சோமகன் - துருபதனது பாட்டன். (352)

**79.—துரியோதனாதியர் பின்னிட அருச்சுனன்துருபதனை அகப்படுத்தல்.**

**தூறுகொண்டுகணைபொழிந்து சோமகேசர்பொருதலால்**
**நூறுகொண்டகுமரர்தங்க ணகரிமீளநோக்கினர்**
**மாறுகொண்டுவிசயன்வீசு வண்ணவாளிவலையினால்**
**வீறுகொண்டெதிர்ந்தமன் விலங்கரீடுபட்டதே.**

(இ-ள்.) சோமக ஈசர் - சோமக குலத் தலைவர்கள், தூறு கொண்டு - கூட்டமாகத் திரண்டு, கணை பொழிந்து-அம்புமழையைச் சொரிந்து, பொருதலால் - போர்செய்ததனால்,—நூறு கொண்ட குமரர் - நூறு என்னும் எண்ணைக் கொண்ட குருகுல குமாரர்களான துரியோதனாதியர், தங்கள் நகரி மீள நோக்கினர்-(தோற்று முதுகுகொடுத்துத்) தங்கள் நகரத்துக்குத் திரும்பிப் போனார்கள்; மாறு கொண்டு விசயன் வீசு-பகைமைகொண்டு அருச்சுனன் வீசிய, வண்ணம்வாளி வலையினால்-மேன்மைபெற்ற அம்புகளாகிய வலையினால், வீறுகொண்டு எதிர்ந்த மன் விலங்கர்-மிக்கபெருமிதங்கொண்டு வந்து எதிர்த்த யாகசேனராசனாகிய சிங்கம், ஈடுபட்டது-அகப்பட்டுக்கொண்டது; (எ-று.)

எண்ணில் மிக்கிருப்பினும் ஆற்றலில் மிக்கிலர் என்ற இகழ்ச்சி விளங்க, 'நூறுகொண்டகுமரர் தங்கள்நகரி மீள நோக்கினர்' என்றார். ஈடுபட்டது என்பதற்கு - வலியழிந்தது என்ற பொருளும் உண்டு. வாளிவலையினால் மன்விலங்கர் ஈடுபட்டது-உருவகவணி. விலங்கு-விலங்கர் என, மென்றொடர்க் குற்றியலுகரத்துக்கு 'அர்' வந்தது. (353)

**80.—அருச்சுனன் யாகசேனனைக் கட்டிக் குருவின்முன் கொணர்தல்.**

**தகப்படுஞ்சராசனத் தனஞ்சயன்கைவாள்வெரீஇ**
**அகப்படுந்தராதிபன்ற னற்றவில்லினாணினால்**
**மிகப்படுந்தடங்கொடேர் மிசைப்பிணித்துவிசையுடன்**
**நகப்படுஞ்செயற்கைசெய்து குருவின்முன்னர்நணுகினான்.**

(இ-ள்.) தக படும் சராசனம் - தகுதியாகப் பொருந்திய [பெருமைபொருந்திய] வில்லையுடைய, தனஞ்சயன்-அருச்சுனன்,- கை வாள் வெரீஇ-(தனது) கையிற்கொண்ட படைக்கு அஞ்சி, அகப்படும்-அகப்பட்டுக்கொண்ட, தரா அதிபன் தன் - யாகசேன ராசனது, அற்ற வில்லின் நாணினால்-(தனது அம்புகளால்) துணிபட்ட வில்லின் நாணியைக் கொண்டே, மிக படும் தட கொள் தேர்மிசை பிணித்து - மிகுதியாகப்பொருந்திய பெருமையைக் கொண்ட (தனது) தேரிலே கட்டி, நகப்படும் செயற்கை செய்து-(பலராலும் அவமதித்துச்) சிரிக்கப்படுஞ் செய்கையைச் செய்து, விசையுடன்-வேகத்தோடு, குருவின் முன்னர் நணுகினான்-துரோணன் முன்னிலையில் வந்தான்; (எ - று.)

அவன்கையில்நாணைக்கொண்டே அவனைக் கட்டினனென, அருச்சுனனது திறத்தை எடுத்துக் கூறினார். வாள் - இங்கு ஆயுதமென்றபொருளது. இனி, 'தராதிபன்றனைத் தன்வில்லினாணினால்' என்றும் பாடமுண்டு. (354)

81.—துரோணன் யாகசேனனைப் பரிகசித்தல்.

முறுவல்கொண்டுகண்டசாப முனியுநாணவெம்மைநீ
உறுவதொன்றுமுணர்கலா துரைத்தபுன்சொலறிதியே
மறுவிலந்தணாளன்யானு மன்னவீயும்வாசவன்
சிறுவன்வென்றுனைப்பிணித்த சிறுமையென்னபெருமையோ.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) கண்ட சாபம் முனிஉம்-(அருச்சுனன் துருபதனைக் கட்டிக்கொணர்ந்ததைக்)கண்ட வில்லாசிரியனான துரோணாசாரியனும், முறுவல் கொண்டு-இகழ்ச்சிச்சிரிப்புக் கொண்டு, (அவனை நோக்கி), 'நீ—, உறுவது ஒன்றுஉம் உணர்கலாது - பின்புநேரும் பயனைச் சிறிதும் அறியாமல், நாண எம்மை உரைத்த - வெட்கப் படும்படி எம்மை அவமதித்துப்பேசிய,புல் சொல்-இழிமொழியை, அறிதி ஏ - அறிவாயன்றோ? யான்உம் மறு இல் அந்தணாளன்-நானும் குற்றமற்ற பிராமணன்: நீ உம் மன்னன்-நீயும் க்ஷத்திரியன்: வாசவன் சிறுவன் வென்று உனை பிணித்த சிறுமை - இந்திரனது மகன்[அருச்சுனன்],உன்னைச் சயித்துக் கட்டினஎளிமை, என்ன பெருமை ஓ-(உனக்கு)என்னபெருமையோ! (எ-று.)—'முறுவல் கொண்டு' என்றது, அடுத்த கவியில் வரும் 'என்ன உயிரும் வாழ்வும் உதவினான்' என்பதைக் கொண்டு முடியும்.

'மறுவிலந்தணாளன் யானும் மன்னனீயும்' என்றது-க்ஷத்திரியனென்று பெருமைபாராட்டிய உன்னை அந்தணனென்று உன்னால் இகழப்பட்ட யான் மாணாக்கனைக்கொண்டு வென்று கவர்ந்து சபதத்தை நிறைவேற்றிக் குறைவற்றவனான திறத்தைப் பார் என்று அவன்மனத்தில் உறைக்க ஏசியவாறும். தனக்கு அடைமொழி கொடுத்துக்கூறி, அவனுக்கு 'மன்னன் நீயும்' என்று வாளாகூறினதில், நீ சொன்ன வாய்மைதவறி இங்ஙனந் தோல்வியுமுற்று க்ஷத்திரியாதமனாயினையென்ற இகழ்ச்சிதோன்றும். (355)

82.—துரோணன் நுருபதனுக்கு உயிர்வாழ்க்கையோடு பாதியரசும் அளித்தல்.

அன்றெனக்கு நீயிசைந்த வவனி பாதி யமையுமற்று
இன்றுனக்கு நின்ற பாதி யான்வரைந்து தருகுவன்
குன்றெனக்கு விந்திலங்கு கொற்றவாகு வீரனே
உன்றனக்கு வேண்டுமென்ன வுயிரும் வாழ்வு முதவினான்.

(இ-ள்.) 'குன்று என குவிந்து இலங்கு-மலைபோலத் திரண்டு விளங்குகிற, கொற்றம் வாகு - வெற்றிபொருந்திய தோள்களையுடைய, வீரனே—! நீ அன்று எனக்கு இசைந்த-நீ முன்பு எனக்குத் தருவதாக உடன்பட்ட, அவனி பாதி-பாதியிராச்சியம், அமையும்-(எனக்குப்) போதும்: மற்று நின்ற பாதி-(எஞ்சிநின்ற) மற்றொரு பாதி யிராச்சியத்தை, இன்று—, உனக்கு—, யான்—, வரைந்து தருகுவன்-பங்கிட்டுக் கொடுப்பேன்; (அன்றியும்),உயிர் உம் வாழ்வுஉம் உன் தனக்கு வேண்டும்-உன் உயிரும் வாழ்க்கையும் உனக்கு இருக்கவேண்டும்,' என்ன-என்றுசொல்லி, உதவினான்-(அம்மூன்றையும் துரோணன் அவனுக்குக்) கொடுத்தான்; (எ - று.)

இப்பொழுது என் மாணாக்கனைக்கொண்டு வென்றதனால், உன் இராச்சியமுழுவதும் எனக்கு உரியதே யாய்விடினும், "சொன்னவாய்மை நீயே சோர்ந்தா யானோ சோரேன்", "புகன்ற படி நீ யாளும் புவியும் பாதி கொள்வேன்" என்று நான் சபதங் கூறியதனால், அந்த வாக்குத்தவறாமல் ஒருபாதியையே கொண்டு மற்றப்பாதியை உனக்கே பிரித்துக் கொடுத்திடுவேன் என்பது, முன்இரண்டடியின் கருத்து. பாஞ்சாலதேசத்தில் கங்காநதியின் தெற்கிலுள்ளபகுதியைத் துருபதனுக்குக்கொடுத்து வடக்கிலுள்ள பகுதியைத் துரோணன் தனக்கு உரியதாகக் கொண்டனனென முதனூலால் அறிக. அன்று-அங்கிவேசமுனிவனிடத்துக் கல்வி கற்றகாலத்து. 'கொற்ற வாகுவீரனே'—இகழ்ச்சி. வாகு வீரவேகு எனவும் பாடம். (356)

வேறு.

83.—யாகசேனன் விடுபட்டு அவமானத்தோடு ஊர்சேர்தல்.

**புயங்கம் பருகி யுமிழ்மதியம் போல்வான் மீண்டு பூசுரன்றன்**
**வயங்குஞ் சுருதி வாய்மையினுன் மன்னுங் குருக்கள் பதிநீங்கத்**
**தயங்குஞ் சிலைக்கை வாள்விசயன் சயமும் பிறர்முன் றானகப்பட்**
**டுயங்குஞ் செயலு நினைந்துநினைந் துள்ளஞ் சுடப்போ யூர்சேர்ந்தான்.**

(இ-ள்.) புயங்கம் - (இராகு கேது வென்னும்) பாம்பினால், பருகி - விழுங்கி, உமிழ் - (உடனே மீண்டும்) வெளியுமிழப்பட்ட, மதியம் - சந்திரனை, போல்வான் - ஒப்பவனாய், (யாகசேனன்),— பூசுரன்தன்- துரோணாசாரியனது, வயங்கும் சுருதி வாய்மையினால்- விளங்குகிற வேதம்போன்ற தவறாத வாய்மொழியினால், மன்னும் குருக்கள் பதி நீங்கி - நிலைபெற்ற குருகுலத்தாரது நகரத்தை [அஸ்தினபுரியை] விட்டு நீங்கி,—தயங்கும் சிலை கை வாள் விசயன் சயம்உம்-விளங்குகின்ற வில்லையேந்திய கையையும் ஒளியையுமுடைய அருச்சுனனது வெற்றியையும், பிறர் முன் தான் அகப்பட்டு உயங்கும் செயல்உம்-பிறர் முன்னிலையிலே தான் (அவனிடத்து) அகப்பட்டுக்கொண்டு வருந்திய செய்கையையும், நினைந்து நினைந்து-நினைத்துநினைத்துக்கொண்டே, உள்ளம் சுட - (அந்நினைவு) தன் மனத்தைத் தபிக்க, மீண்டுபோய் ஊர் சேர்ந்தான்—; (எ - று.)

அருச்சுனனாற்கட்டுண்டு பின்பு அதுநீங்கியமைபற்றி, புயங்கம் பருகி உமிழ்மதி, யாகசேனனுக்கு உவமையாயிற்று. பருகி- இங்கே 'உண்டு' என்ற பொருளது. வில்லைக்கொண்டுவென்று வாளைக்கொண்டு அச்சுறுத்திக் கைப்பற்றியமைபற்றி, 'தயங்குஞ் சிலைக் கை வாள் விசயன் சயம்' என்றதென்பாருமுளர்.

இதுமுதற்பன்னிரண்டுகவிகள்-பெரும்பாலும்மூன்று ஆறுஞ் சீர்கள் காய்ச்சீர்களும், மற்றையவை மாச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தங்கள். (357)

**84.—துரோணனைக்கொல்ல ஒருமகனையும், அருச்சுனனை மணக்க ஒருமகளையும் துருபதன் வேண்டுதல்.**

**மறுகிற்பணிலந்தவழ்பழன வளநாடுடையானெதிர்வணங்கி**
**முறுகிப்புரிவெங்கலைக்கோட்டு முனியேபோலுமுனிவரரைத்**
**தறுகட்குருவின் றலைதுணிக்கத் தகவோர் மகவுந் தனஞ்சயன்றோள்**
**உறுகைக்கொருபூங்கன்னியையும் பெறுவான்வேண்டியுற்றிரந்தான்.**

(இ-ள்.) மறுகில்-வீதிகளிலே, பணிலம் தவழ் - சங்குகள் தவழும்படியான, பழனம் வளம் - கழனிகளின் நீர்வளத்தை யுடைய, நாடு - பாஞ்சாலதேசத்தை, உடையான்-உடையவனான யாகசேனன்,—தறுகண் குருவின் தலை துணிக்க தக-வன்கண் மையையுடைய துரோணாசாரியனது தலையை வெட்டுதற்குத் தகுதியாக, ஓர்மகவும்-ஓர் ஆண்பிள்ளையையும், தனஞ்சயன்தோள் உறுகைக்கு (தக)-அருச்சுனன் தோள்களை அணைதற்குத் தகுதி யாக, ஒரு பூ கன்னியையும்-அழகிய ஒரு பெண்ணையும், பெறுவான்-பெற, வேண்டி-விரும்பி,—முறுகி புரி வெம் கலைக்கோட்டு முனியே போலும் முனிவரரை-மிகவும் முறுக்குள்ள அழகிய கலை மானினது கொம்புபோன்ற ஒரு கொம்பைத் தலையிலுடைய ரிசிய சிருங்கமுனிவனையே யொத்த சிறந்தமுனிவர்களை, உற்று - நாடி யடைந்து, எதிர்வணங்கி - (அவர்களை) எதிரிலே நமஸ்கரித்து, இரந்தான்-பிரார்த்தித்தான்; (எ-று.)

தனது முகத்தின்மேலே மான்கொம்பு போன்ற கொம்பொன் றையுடைய ஒருமுனிவர்க்கு, அக்காரணத்தால், வடமொழியில் ரிச்யச்ருங்கரென்றும், தமிழிற் கலைக்கோட்டுமுனி யென்றும் பெயர்; அவர் - காசியபமுனிவனது குமாரர்களுள் ஒருவராகிய விபாண்டகரென்பவரது குமாரர்; கல்விகேள்விகளிலும் தவ வொழுக்கத்திலும் வைராக்கியத்திலும் மிகச்சிறந்தவர்: கோசல தேசத்தில் அயோத்தியாநகரத்தில் அறுபதினாயிரம் வருஷம் அரசாண்ட தசரதசக்கரவர்த்தி புத்திரபாக்கியமின்றி வருந்திய பொழுது, தனதுகுலகுருவாகிய வசிஷ்டர் சொன்னபடி அக்கலைக் கோட்டு முனிவரைக் கொண்டு அசுவமேதயாகமும் புத்திரகாம யாகமுஞ் செய்விக்க, அம்முனிவரருளால் சக்கரவர்த்திக்கு இராம பிரான் முதலிய சிறந்த குமாரர் நால்வர்தோன்றின ரென்ற வர லாறு, இராமாயணத்திற் பிரசித்தம். அம்முனிவர்போலவே உயர்ந்த மக்களை யாகமூலமாக உண்டாக்கவல்ல மகாமுனிவர்களை நாடி வேண்டின னென்பார், 'கலைக்கோட்டுமுனியேபோலுமுனி வரரை யுற்றிரந்தான்' என்றார்; அம்முனிவர்கள் பெயர், அடுத்த கவியில் விளங்கும். 'மறுகிற் பனிநித்திலந்தவழும் வளநாடு' என்றும் பாடம். (358)

**85.—உபயாசனும் யாசனும் துருபதனுக்காக வேள்விசெய்தல்.**

**ஆறுமுகனைப்பயந்தநதி யலையாற்குளிர்வதொருகானில்**
**ஈறிறவத்தோருபயாசன் யாசனெனும்பேரிருவோரும்**
**கூறுமுறையிற்சடங்கியற்றிக் கோவின்வழக்கப்பெருவேள்வி**
**நூறுமகத்தோனிகரரசை நோன்மைக்கிசையப்புரிவித்தார்.**

(இ - ள்.) ஆறுமுகனை பயந்த நதி - ஆறுமுகங்களையுடைய சுப்பிரமணிய மூர்த்தியைப் பெற்ற கங்காநதியினது, அலையால் -

அலைகளினால், குளிர்வது-குளிர்ச்சிபெறுவதான, ஒருகானில்-ஒரு காட்டில், ஈறுஇல் தவத்தோர்-எல்லையில்லாத தவத்தைச் செய்ப வர்களான, உபயாசன் யாசன் எனும்பேர் இருவோர்உம்-உபயாச னென்றும் யாசனென்றும் பெயரையுடைய இரண்டுமுனிவர் களும், கூறும் முறையின் சடங்கு இயற்றி-(வேதசாஸ்திரங்களிற்) கூறப்பட்ட விதி முறைப்படிஉரிய சடங்குகளைச் செய்து,கோவின் வழக்கம் பெரு வேள்வி-அரசர்க்குஉரிய வழக்கமாகிய பெரிய புத்திர காமயாகத்தை, நூறு மகத்தோன் நிகர் அரசை-நூறு அசுவமேதயாகங்களைச் செய்தவனான தேவேந்திரனைப் போன்ற யாகசேனராசனை, நோன்மைக்கு இசைய புரிவித்தார்-அவன் பெருமைக்குத் தக்கபடி [மிகச் சிறப்பாகச்] செய்வித்தார்கள்;

கங்காதீரத்திலுள்ள அந்தணர் பலர் வசிக்கும் இடத்தில் யாஜன் உபயாஜன் என்ற இரண்டு பிரமவிருடிகள் தவவொழுக் கத்திற் சிறந்து இருந்தனரென்றும், அவர்களுள் மூத்தவனான யாஜன் தலைவனாய் நின்று, இளையவனான உபயாஜனைப் புரோகித னாகக் கொண்டு, யாகஞ்செய்வித்தன னென்றும் முதனூலலால் விளங்கும். சடங்கு என்பது-ஷடங்க மென்னும் வடசொல்லின் விகார மென்றும், (வேதத்தின்) ஆறு அங்கங்களிற்கூறிய முறைக்கு ஏற்பச் செய்யப்படுந் தொழிலென்று ஏதுப்பொருள் படுமென்றுங் கூறுவர். (359)

**86.—உபயாசன் புத்திரகாமயாகத்தை முடித்தல்.**

**புரிந்தமகப்பேற்றழல்வேள்விப் பொன்றுவோமப்பொருண்மிச்சில்**
**பரிந்துவிபுதரமுதேய்ப்பப் பைம்பொற்கலத்தினிறைத்தாங்குத்**
**தெரிந்தமணிப்பூணவன்றேவிக் களிக்கத்தீண்டாளாகியபின்**
**சொரிந்துகனலினுபயாச னிமைப்பிற்சுதனைத்தோற்றுவித்தான்.**

(இ-ள்.) புரிந்த-இவ்வாறுசெய்த, மகப்பேறு வேள்வி-புத்திர காம யாகத்தில், அழல் ஓமம்-அக்கினியில் ஓமஞ்செய்த, பொன்று பொருள்-குறைபாடில்லாத பொருளினது[ஹவிஸ் என்னும் தேவ ருணவினது], மிச்சில்-சேஷத்தை, விபுதர் அமுது ஏய்ப்ப-தேவா மிருதத்தைப்போல, பைம்பொன் கலத்தின் நிறைத்து-பசிய பொன்னினாலாகிய பாத்திரத்திலேவைத்து,ஆங்கு-அப்பொழுது, தெரிந்த மணி பூணவன் தேவிக்கு பரிந்து அளிக்க-தேர்ந்தெடுத்த இரத்தினாபரணங்களை யணிந்த அவ்யாகசேனராசனது மனை யாளுக்கு அன்போடு கொடுக்கப்புக, தீண்டாள் ஆகிய பின்- (அவள் அதனைச் செருக்கினால்) வாங்கிக்கொள்ளாதவளாக அதன்பின்பு, உபயாசன்—, கனலின் சொரிந்து-(சேடித்த அந்த ஹவிஸையும்) அக்கினியிலே ஆகுதிசெய்து, (அதனால்), இமைப் பில்-ஒருநொடிப்பொழுதிலே, சுதனை தோற்றுவித்தான் - புத்திர னைப் பிறப்பித்தான்; (எ - று.)

ஓமசேடத்தைக் கொடுக்குஞ்சமயத்தில்அரசன்மனைவி செருக் குக்கொண்டு அதனை வாங்கியுண்ணுதற்கு மறுக்க, முனிவன் மந் திரசுத்தமான அந்த ஹவிசை அனலிற்பெய்து அங்குநின்று மகனை யுண்டாக்கலானா னென்க. முதனூலிற்குஏற்ப, இவ்வாறு பொருள்கொள்ளப்பட்டது. பாலபாரதத்தும்இவ்வாறேஉள்ளது. இச்செயலை யாஜன்செய்ததாகமுதனூல்கூறுகின்றது. தீண்டாள்

ஆகியபின் என்பதற்கு - பூப்படைந்தாளாக அதன்பின் என்று கூறுவாருமுளர். விபுதர்-விசேஷ புத்திமான்களென்று காரணப் பெயர். (360)

87.—திருஷ்டத்யும்நன் தோன்றுதல்.

வலயம்பிறழமுடிதயங்க மணிக்குண்டலம்பேரழகெறிப்பச்
சிலையுங்கையுமெய்யும்வயந் திகழ்போர்வயிரக்கவசமுமாய்க்
கொலைவெஞ்சிங்கக்குருளைபொலங் குன்றின்புறத்துக்குதிப்பதுபோல்
தலைவன்களிக்கத்தடந்தேர்மேற் றனயனொருவன்றலைப்பட்டான்.

(இ-ள்.) வலயம் பிறழ - தோள்வளைகள் விளங்கவும், முடி தயங்க-கிரீடம் பிரகாசிக்கவும், மணி குண்டலம் பேர் அழகு எறிப்ப-இரத்தின குண்டலங்கள் மிக்க அழகைச் செய்யவும், சிலை உம் கையும்-வில்லும் கையுமாய், மெய்உம் வயம் திகழ் போர் வயிரம் கவசம்உம் ஆய்-உடம்பும் வீரம் விளங்கும் போருக்குஉரிய வச்சிரகவசமும் பொருந்தி, பொலம் குன்றின் புறத்து குதிப்பது கொலை வெம் சிங்கம் குருளை போல்-பொன்மயமான மேருமலையின் மீது குதிப்பதொரு கொலைத்தொழிலில்வல்ல கொடிய சிங்கக் குட்டிபோல, தட தேர்மேல் தனயன் ஒருவன்-பெரிய தேரின்மீது ஒரு குமாரன், தலைவன் களிக்க தலைப்பட்டான் - யாகசேனராசன் களிப்பை யடையுமாறு (ஓமாக்கினியினின்று) வெளிப்பட்டான்;

கையில் வில்லேந்திக் கவசந்தரித்த உடம்புடன் என்பது, இரண்டாமடியின் பொருள். பொற்றேராதலால், பொன்மலை உவமை. (361)

88.—அதுகண்டு அனைவருங் களித்தல்.

தேரோட்டருக்கனருணமணிச் சிமயத்துதிப்பச்செவ்வியுடன்
நீரோடையிற்செந்தாமரைக ணிறம்பெற்றலர்ந்துநின்றனபோல்
வீரோதயன்வந்துதிப்பளவின் மேன்மேன்மகிழ்ந்துமெய்களித்துப்
பாரோர்கண்கள்களித்தனவாற் பார்க்குந்தோறும்பரிவுற்றே.

(இ-ள்.) அருக்கன்-சூரியன், தேரோடு-தேருடனே, அருணம் மணி சிமயத்து-சிவந்த அழகிய உதயகிரியில், உதிப்ப-உதிக்க, (அதனால்), நீர்ஓடையில்-நீர்நிலைகளிலே, செம் தாமரைகள்-செந் தாமரைமலர்கள், செவ்வியுடன் நிறம் பெற்று அலர்ந்து நின்றன போல்-அழகுடனே நிறத்தையும் பெற்று மலர்ந்துநிற்பனபோல,- வீர உதயன் வந்து உதிப்பு அளவில்-வீரத்தன்மை உதித்தற்கு இடமாயுள்ள அக்குமாரன்(தேரோடு சிவந்த ஓமாக்கினியினின்று மேலெழுந்து)வந்து தோன்றியவளவிலே,—பாரோர்-பூமியிலுள்ள வர்கள், பார்க்கும் தோறுஉம் பரிவு உற்று-(அக்குமாரனைப்) பார்க் குந்தோறும் அன்புமிக்கு, மேல் மேல் மகிழ்ந்து-மிகவும் அதிக மாக மகிழ்ச்சிகொண்டு, மெய் களித்து - மனம்களிக்க, கண்கள் களித்தன - (அவர்கள்) கண்கள் களிப்புத்தோன்ற மலர்ந்தன; (எ - று.)

மெய்களித்து-உடல்பூரித்து என்றுமாம்; அப்பொழுது,களித் தல்-காரியத்தைக் காரணத்தாற் கூறிய உபசாரவழக்கு; மெய் சிலிர்த்து என்றுங்கூறலாம். ஆல்-ஈற்றசை: தேற்றமுமாம்.(362)

89.—நாடெங்கும் விழாக்கொண்டாடுதலும், திசைவிளங்குதலும்.

சங்கச்சங்கமிகமுழங்கச் சாந்தும்புழுகுமெறிந்தார்த்துத்
துங்கக்கொடியுந்தோரணமுந் தொடையும்பரப்பிச்சோமகனாடு
அங்கட்சயந்தனவதரித்த வமராவதிபோலார்வமெழத்
திங்கட்குழவியுற்பவித்த திசைபோன்றனவெண்டிசையெல்லாம்.

(இ-ள்.) சோமகன் நாடு-சோமககுலத்தானை யாகசேனனது பாஞ்சாலதேசம்,— சங்கம் சங்கம் மிக முழங்க-சங்குக்கூட்டங்கள் மிகுதியாகஒலிக்க, சாந்துஉம் புழுகுஉம் எறிந்து ஆர்த்து - சந்தனக் குழம்பையும் புழுகெண்ணெயையும் (ஒருவர்மேல் ஒருவர்) வீசி ஆரவாரித்து, துங்கம் கொடிஉம் தோரணம்உம் தொடைஉம் பரப்பி-உயர்ந்த துவசங்களையும் தோரணங்களையும் மாலைகளையும் மிகுதியாக அமைத்து (அலங்கரித்து), அம் கண் சயந்தன் அவதரித்த அமராவதிபோல்-அழகிய கண்களையுடைய சயந்தன் [தேவேந்திர குமாரன்] அவதரிக்கப்பெற்ற அமராவதிநகரம் போல, ஆர்வம் எழ-அன்பு மிக,—எண் திசை எல்லாம்-எட்டுத் திக்குக்கள்முழுதும், திங்கள் குழவி உற்பவித்த திசை போன்றன-இளம்பிறை உதிக்கப்பெற்ற திக்குக்கள்போலத் தாமாக விளங்கின; (எ - று.)

இந்திரகுமரன் பிறந்தபொழுது அமராவதிநகரத்தில் தேவர்கள் களிப்புற்று விழாக்கொண்டாடியதுபோல, துருபதகுமாரன் தோன்றியபொழுது பாஞ்சாலநகரத்துச்சனங்கள் மகிழ்ச்சிமிக்கு விழாக்கொண்டாடினரென்பது மூன்றுமடியின்கருத்து. சாந்தும் புழுகும்போல்வனவற்றை மகிழ்ச்சிக்களிப்பால் ஒருவர்மேல் ஒருவர் தூவி உத்ஸவங் கொண்டாடுதல் இயல்பு. சங்கம் என்பது-சங்கைக் குறிக்கும்போது சங்கமென்றவடசொல் திரிந்ததும், கூட்டத்தைக் குறிக்கும்போது ஸங்க மென்ற வடசொல் திரிந்ததுமாம். (363)

90.—பின்பு திரௌபதி தோன்றுதல்.

பின்னுங்கடவுளுபயாசன் பெருந்தீப்புறத்துச்சுருவையினல்
மன்னுங்கடலாரமுதென்ன வழங்குசுருதியவிநலத்தான்
மின்னுங்கொடியுநிகர்மருங்குல் வேய்த்தோண்முல்லைவெண்முறுவல்
பொன்னும்பிறந்தாள்கோகனகப் பூமீதெழுந்தபொன்போல்வாள்.

(இ - ள்) பின்னும் - அதன்பின்பும், கடவுள் உபயாசன் - தெய்வத்தன்மையையுடைய உபயாசனென்னும் அம்முனிவன், பெருந் தீப்புறத்து - பெரிய யாகாக்கினியிலே, சுருவையினல் - சுருவை யென்னும் ஒமத்துடுப்புக்கருவியைக்கொண்டு, மன்னும் கடல் ஆர் அமுது என்ன வழங்கு-பெருமைபொருந்திய பாற்கடலில் தோன்றிய அருமையான அமிருதம்போல ஆகுதிசெய்த [மிகஇனியதேவருணவாகிய], சுருதி அவி-வேதமுறைமை தவருத அவிர்ப்பாகத்தினது, நலத்தால் - நற்பயனல்,—மின்உம் கொடிஉம் நிகர் மருங்குல்-மின்னலையும் பூங்கொடியையும் போன்ற இடையையும், வேய் தோள்-மூங்கில்போன்ற தோள்களையும், முல்லை வெள் முறுவல்-முல்லையரும்புபோன்ற வெண்மையான பற்களையுமுடைய, பொன்உம்-பொன்போல் அருமையான அழ

கிய ஓர் பெண்ணும், கோகனகம்பூமீது எழுந்த பொன்போல்வாள்-செந்தாமரைமலரினின்று மேலெழுந்த திருமகளை யொப்பவளாய், பிறந்தாள்-தோன்றினாள்; (எ-று.)

கோகநதமென்ற வடசொல் திரிந்தது; கோகம்-சக்கரவாகப் பறவைகள், நதம் - கூவியொலித்தற்கு இடமானது என்று பொருள் படும். செல்வத்துக்குரிய தலைவியாதலாலும், பொன் னிறமுடைமையாலும், பெறுதற்கருமையாலும், பொன் என்று திருமகளுக்கு ஒரு பெயர். சுருவையினால் வழங்கு என்றும்,நலத் தாற் பிறந்தாளென்றும் இயையும். (364)

**91.—அப்பொழுது ஆகாயத்திலெழுந்த ஓர் அசரீரிவாக்கு.**

**மண்மேலொருத்தியரக்கர்குலம் மாளப்பிறந்தாள்வாமனுதல்**
**கண்மேலின்றுமிவள்பிறந்தாள் கழற்காவலர்தங்குலமுடிப்பான்**
**எண்மேலென்கொலினியென்றுங் கெவருங்கேட்பவொருவார்த்தை**
**விண்மேலெழுந்ததவன்புரிந்த வேள்விக்களத்தினிடையம்மா.**

(இ-ள்.) 'ஒருத்தி - ஒருபெண், அரக்கர் குலம் மாள - இராக் கதர்குலம் அழியும்படி, மண்மேல் பிறந்தாள்-(முன்பு) பூமியி னின்று தோன்றினாள்: இன்றுஉம்-இப்பொழுதும், இவள் - இப் பெண், கழல் காவலர்தம் குலம் முடிப்பான் - வீரக்கழலையணிந்த அரசர்களுடைய குலத்தை அழிக்கும்பொருட்டு, வாமன் நுதல் கண்மேல்-சிவபிரானது நெற்றிக்கண்ணாகிய அக்கினியினின்றும், பிறந்தாள்-; இனி மேல் எண் என்கொல்-இனிமேல் ஆலோசனை யாதுஉளது? என்று—, ஒரு வார்த்தை - ஓர் அசரீரிவாக்கு, ஆங்கு-அப்பொழுது, அவன் வேள்வி புரிந்த களத்தினிடை எவ ரும் கேட்ப-அந்தயாகசேனன் யாகஞ்செய்த சாலையிலுள்ள எல் லோரும் கேட்க, விண்மேல் எழுந்தது - ஆகாயத்தில் உண்டா யிற்று: அம்மா-ஆச்சரியம்! (எ-று.)

சனகமகாராசா யாகஞ்செய்தற்பொருட்டுச் சாலையமைத்தற் காகக் கலப்பையைக்கொண்டு பூமியை உழுதபொழுது அவ்வுழு படைச்சாலினின்று பூமியில் தோன்றிய பெண்ணான சீதையால் ராக்ஷசகுலம் முழுதும் நாசமாயிற்றென்பது, இராமாயணத்தில் பிரசித்தம். அங்ஙனமே, யாகாக்கினியில் தோன்றிய இந்தத் திரௌபதி ஒருசமயத்தில் துரியோதனனைப் பரிகசித்து இகழ்ச்சி தோன்றச் சிரித்ததனால் அவன்மனத்திற் பெருஞ்சினத்தை மூட்டி அதுகாரணமாக அவனால் சபையில் மானபங்கப்படுத்தப் பட்டுப் பின்பு அதுநிமித்தமாகப் பாரதயுத்தத்தில் பல அரசர் களும் பந்துமித்திரபரிவாரங்களுடன் இறத்தற்கு மூலமாய் நிற் றல், பாரதத்தில் பிரசித்தம். 'இனிமேல் எண் என்கொல்' என் றது, இந்நிகழ்ச்சி எவராலும் தடுத்தற்கரியதெனத் தேற்றக் கருத்தை விளக்கும். அம்மா-வியப்பிடைச்சொல். வாமன்-அழ கியவனென்று பொருள்படும். வலக்கண் சூரியனும், இடக்கண் சந்திரனும், நெற்றிக்கண் அக்கினியுமாக இறைவனுக்குக் கண் மூன்றும் முச்சுடராதலால், நெருப்பை, 'வாமனுதற்கண்' என் றது. 'கண்மேனின்றும்' என்றும் பாடம். (365)

**92.—மகனையும் மகளையும்பெற்றதனால் துருபதன் மனமகிழ்தல்.**

**முற்றோன்றியதன்குலமுதலான் முரட்போர்முனிக்குமுடிவுமவன்**
**பிற்றோற்றியவக்கன்னிகையால் விசயன்றனக்குப்பெருநலமும்**
**உற்றோர்ந்துள்ளமிகத்தருக்கி யுவந்தாங்கமைந்தானுயர்மகத்தால்**
**பெற்றோன்பெற்றபேறுமகப் பெற்றோர்தம்மிற்பெற்றோர்யார்.**

(இ-ள்.) உயர் மகத்தால் பெற்றோன்-சிறந்த யாகஞ்செய்ததனால் (இப்படிப்பட்ட பிள்ளைகளைப்) பெற்ற யாகசேனன்,—முன் தோன்றிய தன்குலம்முதலால்-முதலிற்பிறந்த தனது குமாரனால், முரண் போர் முனிக்கு முடிவுஉம்-வலிய போரையுடைய துரோணாசாரியனுக்கு அழிவுஉண்டாதலையும், அவன் பின் தோன்றிய அ கன்னிகையால்-அவனுக்குப்பின்புபிறந்தஅப்பெண்ணால், விசயன் தனக்கு பெரு நலம்உம்-அருச்சுனனுக்குச் சிறந்த இன்பமுண்டாதலையும், உற்று ஓர்ந்து-(கருத்தில்) ஊன்றி ஆராய்ந்து, ஆங்கு-அதனால், உள்ளம் மிக தருக்கி-மனம் மிகக்களித்து, உவந்து அமைந்தான்-மகிழ்ந்து நிரம்பிநின்றான் [திருப்திபெற்றான்]: பெற்றபேறு-(அவன்) பெற்ற பாக்கியத்தை, மக பெற்றோர் தம்மில் பெற்றோர் யார் - பிள்ளைகளைப் பெற்றவர்களுள் அடைந்தவர் எவர்? (எ - று.)

துருபதன் தான் கருதியபடி பகைவெல்லுதற்கு மகனையும் மணம் முடித்தற்கு மகளையும் தகுதியாகப்பெற்றான் என்ற பொருளை, 'பெற்றபேறு மகப்பெற்றோர் தம்மிற்பெற்றோர் யார்' என்று விளக்கினார். (366)

**93.—திட்டத்துய்மனுக்குத் துரோணன் வில்வித்தை முற்றக் கற்பித்தல்.**

**கரணமறுவற்றிலங்குதிறற் கலசோற்பவன்பாற்கனல்பயந்தோன்**
**சரணமலர்தன்றலைக்கொண்டு தனுநூலெனக்குத்தருகென்றான்**
**மரணமிவனாற்றனக்கென்ப துணர்ந்துங்குருவுமருதளித்தான்**
**அரணியிடத்திற்செறிந்தன்றோ வதனைச்செகுப்பதழலம்மா.**

(இ-ள்.) கனல் பயந்தோன்-அக்கினியிற் பெறப்பட்டவனான அக்குமாரன்,—கரணம் மறு அற்று இலங்கு - அந்தக்கரணமான மனத்தில் களங்கமில்லாது தூய்மையுடையவனாய் விளங்குகிற, திறல்-வல்லமையிற் சிறந்த, கலச உற்பவன்பால்-கலசத்தினின்று தோன்றியவனான துரோணாசாரியனிடத்தில் (சென்று), சரணம் மலர் தன் தலைக் கொண்டு-(அவனது) திருவடித் தாமரை மலர்களைத் தன் தலையின்மேற்கொண்டு [காலில் விழுந்து வணங்கி], எனக்கு தனுநூல் தருக என்றான்-'எனக்கு வில்வித்தையைக் கற்பித்துக் கொடுப்பாயாக' என்று வேண்டினான்; (வேண்ட), குரு உம்-அந்தத் துரோணாசாரியனும், இவனால் தனக்கு மரணம் என்பது உணர்ந்துஉம்-இவனால் தனக்கு மரணம் நிகழுமென்பதை யறிந்தும், மருது அளித்தான்-மறுக்காமல் (தனுர்வித்தையைக்) கற்பித்துக் கொடுத்தருளினான்; அழல் அரணியிடத்தில் செறிந்து அன்றுஓ அதனைசெகுப்பது-நெருப்பு அரணிக்கட்டையினின்று பிறந்தன்றோ அதனை அழிப்பது! அம்மா - ஆச்சரியம்!

அரணி-தீக்கடைகோல்; அத்திக்கட்டை முதலிய சில. 'நெருப்பு அரணியினின்றுதோன்றியே அவ்வரணியை அழிக் கின்றதன்றோ?' என்ற உபமானம், திட்டத்துய்மன் துரோண னிடத்தி னின்று வில்வித்தை கற்றே பின்பு அவனை அழிப்பவ னாகிருன் என்ற உபமேயக் கருத்தை விளக்குதலால், பிறிதுமொழித லென்னும் அணி. சிறப்புப் பொருளைப் பொதுப்பொருள் சமர்த் திப்பதாக இல்லாமையால், இது, வேற்றுப்பொருள்வைப்பணி யாகாது. துரோணன் தனக்குத் திட்டத்துய்மனால்மரண மென்று தெரிந்தும், விதிப்பயன தவருதென்பதை நோக்கியும், அவனுக் குத் தான் கல்விகற்பித்துக் கொடுக்கமாட்டே னென்றால் அவ னுக்கு அஞ்சினு னென்ற பழிமாத்திரமே மிஞ்சுமென்று கருதியும் மனத்திற்களங்கமின்றி அவனுக்கு வில்வித்தை முழுவதையுங் கற்பித்தன னென்க. 'கலைசொல்பவன்பால்' என்றும் பாடம்.

94.—திருதராட்டிரனும் விதுரனும் தருமனை இளவரசுக்கு உரியனெனமதித்தல்.

இவ்வா றமைந்தாங் கைவருட னீரைம் பதின்மர் நனிவளர
மைவான் மீனிற் பல்கோடி மன்வந் திறைஞ்சிப் புடைசூழத்
தெவ்வா றியவெம் பெருஞ்சேனைத் திருதராட் டிரனுந் தம்பியுமற்
றெவ்வா ரிவற்கென் றுதிட்டிரனை யொழுக்கத் தழகா லுட்கொண்டார்.

(இ-ள்.) இ ஆறு அமைந்து-(யாகசேனனுடைய செயல்கள்) இங்ஙனம் நிகழ,—ஆங்கு-அவ்விடத்தில் [அஸ்திநபுரியில்], ஐவருடன் ஈர் ஐம் பதின்மர்-பஞ்சபாண்டவர்களும் துரியோதனாதியர் நூற்றுவரும், நனி வளர-நன்றாய்ச் செழித்து வளர்ந்துவர,—மைவான் மீனின்-கருநிறமுள்ள வானத்திற் காணப்படும் நக்ஷத்திரங் கள்போல, பல்கோடி மன்-அநேக கோடிக்கணக்கான அரசர்கள், வந்து இறைஞ்சி புடை சூழ-திரளாகவந்து வணங்கிப் பக்கங் களிற் சூழ்ந்து நிற்க,தெவ் ஆறிய வெம் பெரு சேனை-பகைவர்கள் அடங்குதற்குக்காரணமான கொடிய பெரிய சேனையையுடைய, திருதராட்டிரனும்—,தம்பிஉம் - அவன் தம்பியான விதுரனும், இவற்கு மற்று ஒவ்வார்என்று-இவனுக்கு வேறு எவரும் ஒப்பாக மாட்டாரென்று, உதிட்டிரனை - தருமபுத்திரனை, ஒழுக்கத்து அழகால் உள்கொண்டார்-(அவனது) நல்லொழுக்கத்தின் அழகினால் மதித்தார்; (எ-று.)

அமைந்து - அமைய: எச்சத்திரிபு. ஐவர், ஈரைம்பதின்மர்- தொகைக்குறிப்பு. 'தெவ்வாற்றிய', 'திதராட்டிரனுந்தந்தையும்' என்று பிரதிபேதம். (368)

வேறு.

95.—விடுமன் தருமபுத்திரனை மதித்தல்.

பூதிந லந்திகழ் பூரு குலத்திற்
காதிப னுகி யனங்கனை வென்றோன்
நீதியி னுலு நிறைந்தன னுண்ணூல்
ஓதிய கேள்வி யுதிட்டிர னென்னு.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) பூதி நலம் திகழ் - செல்வமும் மற்றைநன்மையும் விளங்கப்பெற்ற, பூரு - பூருவென்னும் அரசனது, குலத்திற்கு - வமிசத்திற்கு, ஆதிபன் ஆகி - தலைவனாய், அனங்கனை வென்றோன் - (பெண்ணாசையை ஒழித்ததனால்) மன்மதனை வென்றவனான விடுமன், நுண் நூல் ஓதிய - நுட்பமாகச் சாஸ்திரங்களைக் கற்றறிந்த, கேள்வி - நூற்கேள்விகளையுமுடைய, உதிட்டிரன் - தருமபுத்திரன், நீதியினாலும் நிறைந்தனன் - நீதியாலும் நிறைந்தவன், என்னா - என்று எண்ணி,—(எ-று.)—'அளித்தான்' என வருங் கவியில் முடியும்.

பூதி - ஐசுவரியம்: வடசொல். தன் தந்தை மகிழ்ந்து அளித்த வரத்தின்படி அரசாட்சிச்செல்வத்துக்குத் தலைமைபூண்டதனால், பூரு, 'பூதி நலந்திகழ் பூரு' எனப்பட்டான்.

இதுமுதல் பதினான்கு கவிகள் - பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலி விருத்தங்கள். (369)

**96.—விடுமன் தருமபுத்திரனுக்கு இளவரசு முடி சூட்டுதல்.**

மைந்தருடன்செயல் வழுவறவெண்ணிக்
குந்திபயந்தருள் குரிசிலையிவனே
இந்தநிலக்கினி யிளவரசென்றாங்கு
அந்தண்மதிக்குடை முடியொடளித்தான்.

(இ-ள்.) மைந்தருடன் - (உடன்பிறந்தவனது) மக்களாகிய திருதராட்டிரன் விதுரன் என்பவர்களோடு, செயல் வழு அற எண்ணி - செய்யவேண்டிய காரியத்தைத் தவறில்லாதபடி ஆலோசித்து,—குந்தி பயந்தருள் குரிசிலை - குந்தி அன்போடுபெற்ற தலைப்பிள்ளையான தருமனை (நோக்கி), இவன் ஏ இனி இந்த நிலக்கு இளவரசு என்று—, ஆங்கு - அப்பொழுது, அம் தண் மதி குடை முடியொடு அளித்தான் - அழகியகுளிர்ந்த பூரணசந்திரன்போன்ற வெண்கொற்றக்குடையையும் கிரீடத்தையும் கொடுத்தான்; (எ-று.)—ஆங்கு - அசையுமாம். நிலக்கு என்றதில், அத்துச் சாரியை தொக்கது. (370)

**97.—தருமபுத்திரன் குடையும் முடியும் பெற்று விளங்குதல்.**

சந்தனுவின்றிரு மரபுதயங்கச்
செந்திருமேவரு சிறுவனுமப்போது
இந்துவொடாதப னிருவருமன்பால்
வந்துதழீஇமெய் வயங்கினனொத்தான்.

(இ-ள்.) சந்தனுவின் திரு மரபு தயங்க - சந்தனுவினது மேன்மையான குலம் விளங்க, செந் திரு மேவரு - செந்நிறமுடைய திருமகளோடு [இளவரசாட்சிச்செல்வத்தோடு] கூடிய, சிறுவன் உம் - இராசகுமாரனான தருமபுத்திரனும்,—அப்போது—, இந்துவொடு ஆதபன் இருவர் உம் அன்பால் வந்து தழீஇ மெய் வயங்கினன் ஒத்தான் - (குடையையும் முடியையும் பெற்றதனால்) சந்திரனும் சூரியனுமாகிய இருவராலும் அன்போடு வந்து தழுவப்பெற்று மேனி விளங்குபவன் போன்றான்; (எ-று.)

சந்தனுவமிசம் அநீதியுடைய துரியோதனனால் விளங்காது, நீதிநெறியுடைய தருமனாலேயே விளங்குவது பற்றி, 'சந்தனுவின் திருமரபு தயங்கச் செந்திருமேவருசிறுவன்' என்றார். தழீஇ- காரணப்பொருட்டு. (371)

**98.—அதுகண்டு துரியோதனன் மிகப் பொருமைகொள்ளுதல்.**

துன்மதியான சுயோதனன்மாழ்கித்
தன்மதியாலரு டந்தையையெய்திப்
புன்மதியாமுரை சிற்சில்புகன்றான்
மன்மதியாது மதித்தலிலாதான்.

(இ-ள்.) துன்மதி ஆன - துர்ப்புத்தியைக்கொண்ட, சுயோதனன்—, மாழ்கி - (தருமனது யுவராச பட்டாபிஷேகத்தைக் கண்டு) வருந்தி, மன் மதி யாதும் மதித்தல் இலாதான் - இராசநீதியைச் சிறிதும் ஆலோசியாதவனாய், அருள் தந்தையைஎய்தி- (தன்னைப்) பெற்ற தந்தையான திருதராட்டிரனை அடைந்து, தன் மதியால்-தனது எண்ணத்திற்கு ஏற்ப, புல்மதி ஆம் உரை சிற்சில் புகன்றான்-அற்பபுத்தியைக் காட்டுகிற சிலசில வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ-று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க. துர்மதி-வடசொல். மதி-நீதிக்கு, ஆகுபெயர். (372)

**99.—துரியோதனனது பொருமைவார்த்தை.**

உன்பதம்யாவு முதிட்டிரனுக்கே
மன்பதையோடு வழங்கினையெந்தாய்
அன்பதிலாவவ னனுசர்மதத்தால்
என்பதமம்ம விறந்ததையின்றே.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) எந்தாய்-எமது தந்தையே! உன் பதம் யாவும்-உனது அரசாட்சி யுரிமைமெல்லாவற்றையும், உதிட்டிரனுக்கே - தருமபுத்திரனுக்கே, மன்பதையோடு - மக்கட்பரப்புடனே, வழங்கினை- கொடுத்திட்டாய்: அவன் அன்பு அது இலா அனுசர் மதத்தால்- அவனுடைய அன்பு இல்லாத தம்பியரின் செருக்கினால், என் பதம் இன்றே அம்ம இறந்தது-எனது நிலைமை இன்றைக்கே அந்தோ அழிந்திட்டது! (எ - று.)—"என்றலும்" என அடுத்த கவியோடு தொடரும்.

இன்றே யிறந்தது - விரைவுந்துணிவும்பற்றிய காலவழுவமைதி. ஏ - பிரிநிலை. அம்ம-இரக்கக்குறிப்பு. ஐ - அசை. (373)

**100.—இரண்டுகவிகள்-அதற்குத் திருதராட்டிரன் கூறும் சமாதானம்.**

என்றலுமைந்தனை யிந்துகுலத்தோய்
நின்றிலையான்மனு நீதியிலையா
பொன்றியவெம்பி பதம்புதல்வர்க்கே
அன்றிநுமக்கர சாளுதலாமோ.

(இ-ள்.) என்றலும் - என்று (துரியோதனன்) சொன்ன வளவிலே,—மைந்தனை-(தன்) மகனான அவனை நோக்கி,—(திருத

ராட்டிரன்), 'இந்து குலத்தோய்-சந்திரகுலத்தவனே! ஐயா—!மனு நீதியில் நின்றிலை - மனு தர்மசாஸ்திரத்திற்கூறப்பட்ட நீதி முறைமையில் நீ நின்றாயில்லை; பொன்றிய எம்பி பதம் - இறந்து போன எமது தம்பியான பாண்டுவுக்கு உரியதாயிருந்த இராச்சியத்தை, அரசு ஆளுதல்—, புதல்வர்க்குஅ அன்றி-அவன்பிள்ளைகளான பாண்டவர்க்கே யல்லாமல், நுமக்கு-(என்மக்களான) உங்கட்கு, ஆம்ஓ - தகுமோ? (எ - று.)—இக்கவியில், 'என்றலும்', 'மைந்தனை' என்றவை 'என்றான்' (101) என்றமுற்றைக் கொள்ளும். ஆல்-ஈற்றசை.

தான் பாண்டுவினும் மூத்தவனாயினும் 'மூத்தவன் அங்கவீனம் முதலிய குறைபாடுடையவனா யிருந்தால் அரசுரிமை அவனைவிட்டு அவன் தம்பியைச் சாரும்' என்ற நீதிநூல் முறைமைப்படி, அரசாட்சி பிறவிக்குருடனான தனக்கு உரியதன்றித் தன் தம்பியான பாண்டுவுக்கே உரியதானதனால், திருதராட்டிரன் 'பொன்றியவெம்பி பதம்' என்றான். தொன்றுதொட்டு உலகத்தில் மிகப்பிரசித்தமான சந்திரகுலத்திற் பிறந்திருந்தும் இராசாங்கநீதிமுறையில் நீ நிலைநின்று பேசினாயில்லை யென்ற இழிவு விளங்க, 'இந்துகுலத்தோய்! மனுநீதியில் நின்றிலை' என்றான். ()

**101.** நீதியிலாநெறி யெண்ணினைநீயிங்கு
ஓதியவாய்மையி னுறுபொருளின்றால்
ஆதிபராயவ ரைவருநீரும்
மேதினியாளுதல் வேத்தியல்பென்றான்.

(இ-ள்.) நீ—, நீதி இலா நெறி-நியாயமில்லாத வழியை, எண்ணினை - நினைத்தாய்: இங்கு ஓதிய வாய்மையின் - (அவ்வாறு எண்ணி) இப்பொழுது (நீ) சொன்ன வார்த்தையில், உறு பொருள் இன்று-பொருந்திய சாரமொன்றும் இல்லை; (ஆகவே, இனி), ஆதிபர் ஆயவர் ஐவர்உம் - (அரசாட்சிக்குத்) தலைவர்களான அப்பஞ்சபாண்டவர்களும், நீர்உம்-நீங்களும், (ஒற்றுமைப்பட்டு), மேதினி ஆளுதல்-பூமியை ஆளுதலே, வேந்து இயல்பு-இராசநீதிமுறைமை,' என்றான்-என்று கூறினான்; (எ-று.)—வேத்தியல்பு-மென்றொடர் வன்றொடராயிற்று. (375)

**102.—அதனை மறுத்துத் துரியோதனன் கூறுதல்.**

இகன்மிகுகன்னனு மென்னிளையோரும்
சகுனியுமுண்டு தகுந்துணைநெஞ்சில்
உகவையிலாரொ டுறேனினியென்றே
முகமுகுரம்புரை முதலொடுசொன்னான்.

(இ-ள்.) இகல் மிகு-வலிமைமிக்க, கன்னன்உம் - கர்ணனும், என் இளையோர்உம்-எனது தம்பிமார்களும், சகுனிஉம்-(என்மாமனான) சகுனியும் ஆகிய, தகும் துணை - தக்க துணை, உண்டு - (எனக்கு) உண்டு; (ஆதலால், யான்), நெஞ்சில் உகவை இலாரொடு இனி உறேன்-மனத்தில் (என்பக்கல்) நண்பில்லாத அப்பாண்டவர்களோடு இனிச் சேரமாட்டேன், என்று—, முகம் முகுரம் புரை முதலொடு சொன்னான் - முகம் கண்ணாடியையொத்த தனது தந்தையான திருதராட்டிரனுடனே (துரியோதனன்) கூறினான்; (எ-று.)

பகையொழிக்கக் கர்ணனும், கூடிக்குலாவி இன்புறத் தம்பியரும், சமயத்துக்கு ஏற்ற புத்தியுக்திகளைத் தந்திரமாகக்கூறச் சகுனியும் தக்கதுணையாயுண்டு என்றனனென்க. ஏ-தேற்றம். நான்காமடி-'மகன்முதிரம்பிகைமகனொடு சொன்னான்' என்று சில ஏடுகளிற் காணப்படுகின்றது. முதல்=முதல்வன். (376)

**103.—திருதராட்டிரன் மனம் மாறுபடுதல்.**

பாதகனன்று பகர்ந்தமொழிக்கே
பேதகனன பிதாமருளெய்தா
மேதகவாழ்வுறு வில்விதுரற்கும்
நாதகுநல்லுரை நதிமகனுக்கும்.

இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்.

(இ-ள்.) பாதகன்-பாவியான துரியோதனன், அன்றுபகர்ந்த-அப்பொழுது சொன்ன, மொழிக்கே - சொல்லினாலே, பேதகன் ஆன-(மனம்) மாறுபட்டவனாய்விட்ட, பிதா - அவன் தந்தையான திருதராட்டிரன்,—மருள் எய்தா-(இன்னது செய்வதென்று அறியாமல்) திகைப்படைந்து,—மேதக வாழ்வுறு வில் விதுரற்கும்-மேன்மைமிக வாழுகின்ற வில்வித்தையில்தேர்ந்த விதுரனுக்கும், நா தகு நல் உரை நதிமகனுக்கும்-நாவில் தக்க நல்வார்த்தைகளையே யுடைய கங்காபுத்திரனான வீடுமனுக்கும்,—(எ - று.)—106-ஆங் கவியில் வரும் 'கூறலும்' என்றதைக் கொள்ளும்.

இங்கிருந்து 125-ஆம் பாடல்வரையில் பாலபாரதத்துக்கும் இதற்கும் வேறுபாடு காண்கின்றது: புரோசனனோடு ஆலோசித்த விவரமும், தபதி கூறிய செய்தியும் அதிற் குறிக்கப்படவில்லை. இவ்விடம், வியாசபாரதத்தைப் பெரும்பாலும் ஒட்டிக்கூறப்பட்டுள்ளது. மேதகு என்றும் பாடம். (377)

**104.—இரண்டுகவிகள் - திருதராட்டிரன் விதுரனிடத்தும் வீடுமனிடத்தும் கூறும் வார்த்தை.**

ஈண்டினியென்செய்வ தெண்ணுமினிங்கன்
பாண்டவரோடு பயின்றுறையாது
தூண்டுபரித்துரி யோதனன்முதலோர்
பூண்டனர்வெம்பகை வாழ்வுபொறாதார்.

(இ-ள்.) தூண்டு பரி துரியோதனன் முதலோர்-விரைவாகச் செலுத்தப்படுங் குதிரையையுடைய துரியோதனன் முதலிய என் பிள்ளைகள், இங்கன்-இங்கே, பாண்டவரோடு பயின்று உறையாது-பாண்டுகுமாரர்களோடு கலந்திராமல், வாழ்வு பொறாதார்-(அவர்களுடைய) செல்வவாழ்க்கையைப் பொறுக்கமாட்டாதவர்களாய், வெம் பகை பூண்டனர்-(அவர்களிடத்துக்) கொடிய பகைமையைக் கொண்டார்கள்; ஈண்டு இனி செய்வது என் - இங்கே இப்பொழுது (நாம்) செய்யவேண்டுவது யாது?: எண்ணுமின் - ஆலோசனை செய்யுங்கள்; (எ - று.)—வாழ்வு-பாண்டவரில் மூத்தவன் இளவரசனானமை, (378)

**105.** ஒருதிறனிந்நக ருறைதரினொன்ருது
இருதிறன்மைந்தரு மிகலுவர்மேன்மேல்
அருகணுகாவகை யகலவிருந்தால்
மருவுறுநண்பு வளர்ந்திடுமென்றே.

(இ - ள்.) இரு திறன் மைந்தர்உம் - (துரியோதனாதியரும் பாண்டவருமாகிய) இரண்டு வகைப் புதல்வர்களும், இ நகர் - இந்த நகரத்தில், ஒரு திறன் உறைதரின்-ஒருசேர வசித்தால், ஒன்ருது-ஒற்றுமைப்படாமல், மேல்மேல் இகலுவர் - மேலும் மேலும் பகைமை கொள்வார்கள்; அருகு அணுகாவகை - (ஒரு திறத்தாரோடு மற்றொருதிறத்தார்) சமீபத்தில் நெருங்காதபடி, அகல இருந்தால்-(இருதிறத்தாரும்) தூரத்தில் வெவ்வேறாக இருந்தால், மருவுறும் நண்பு வளர்ந்திடும்-மனங்கலக்கிற சினேகம் (அவர்கட்குள்) வளரும், என்று—,—(எ-று.)—'கூறலும்' என வருங்கவியோடு தொடரும்.

'சேரவிருப்பிற் செடியும்பகை', 'அகலவிருக்கிற் பகையும் உறவாம்' என்பன-பழமொழிகள். ஒருதிறலென்றும் பாடம். (379)

**106.**—அதற்கு அவர்கள் கூறும் விடை.

இம்மொழிகூறலு மிருவருமெண்ணித்
தெம்முறையாயினர் சிறுபருவத்தே
எம்முரைகொள்கல ரினியவர்மதியேது
அம்மதியேமதி யாகுவதென்ருர்.

(இ-ள்.) இ மொழி கூறலும்-இந்த வார்த்தையை (த் திருதராட்டிரன்) சொன்னவளவிலே,—இருவர்உம்-(விதுரன் வீடுமன் என்ற) இரண்டுபேரும், எண்ணி-ஆலோசித்து,—'சிறு பருவத்து ஏ தெவ் முறை ஆயினர்-(துரியோதனாதியர்கள்) இளம் பிராயத்திலேயே பகைத்தன்மை கொண்டிட்டார்கள்; எம் உரை கொள்கலர்-எங்கள் வார்த்தையைக்கேட்டு நடக்கமாட்டார்கள்: இனி-இனிமேல், அவர் மதி ஏது அ மதிஏ மதி ஆகுவது-அவர்களறிவு எதுவோ அந்த அறிவே (அவர்கட்கு உரிய) அறிவாவது', என்ருர்—; (எ - று.)

'எம்முறைகேளார்' என்ற பாடத்துக்கு-நாங்கள் சொல்லும் நீதிமுறைகளைக் கேட்கமாட்டார்களென்று பொருளாம். தெவ்+முறை=தெம்முறை: "தெவ்வென்மொழியே தொழிற்பெயரற்றே, மவ்வரின் வஃகான் மவ்வுமாகும்." அவர்மதிஏது அம்மதியே ஆகுவது: (இதனை நீ) மதி என்றுமாம். (380)

**107.**—பின்பு திருதராட்டிரன் புரோசனனென்னும் மந்திரியை வருவித்தல்.

விதுரனும்வார்கழல் விடுமனுந்தம்
இதயநிகழ்ந்த தியம்பியபின்னர்ப்
பொதுமையிலாத புரோசனனென்னும்
மதியுடைமந்திரி வருகெனவந்தான்.

(இ-ள்.) விதுரனும்—, வார் கழல்-நீண்ட வீரக்கழலையுடைய, வீடுமனும்—, தம் இதயம் நிகழ்ந்தது இயம்பிய பின்னர்-தங்கள் மனத்தில் தோன்றிய கருத்தைச்சொன்னபின்பு,- (திருதராட்டிரன்),—பொதுமை இலாத புரோசனன் என்னும் மதி உடை மந்

திரி-நடுவுநிலைமையில்லாத புரோசநனென்னும் பேருள்ள அறிவுடைய மந்திரியை, வருக என-வருவாயாகவென்று அழைக்க, வந்தான்-(அவன் அருகில்வந்து) சேர்ந்தான்; (எ - று.)

பொதுமை-பகைவர் நண்பர் அயலார் என்னும் முத்திறத்தாரிடத்தும் தருமத்தின் வழுவாமல் ஒப்பநிற்கும் நிலைமை. 'மதியுடைமந்திரி' என்றது, வஞ்சனையாகத்தொழில் செய்தற்குஉரிய தந்திரங்களை அறிந்தவனென்றவாறு. (381)

**108.—திருதராட்டிர துரியோதனர் புரோசனனுடன் சதியாலோசனை செய்தல்.**

வந்த வமைச்சனு மைந்தனு மற்றத்
தந்தையு மங்கொரு தனிவயி னெய்திச்
சிந்தனை செய்தனர் தீமை மனத்தோர்
குந்தி மகாருயிர் கோடல் புரிந்தே.

(இ - ள்.) வந்த அமைச்சன்உம் - வந்த மந்திரியான புரோசனனும், மைந்தன்உம் - இராசகுமாரனான துரியோதனனும், அ தந்தைஉம்-அவன் தந்தையான திருதராட்டிரனும், தீமைமனத்தோர்-கொடிய மனத்தை யுடையவர்களாய், அங்கு ஒரு தனிவயின் எய்தி-அவ்விடத்தில் [அரண்மனையில்] ஏகாந்தமான ஓரிடத்தை யடைந்து, குந்தி மகார் உயிர் கோடல்புரிந்து-பாண்டவர்களுடைய உயிரைக் கொள்ளவிரும்பி, சிந்தனைசெய்தனர்—;

நகுலசகதேவர்களையும் சேர்த்து 'குந்திமகார்' என்றது குந்தி மாத்திரிக்குச் சொல்லிக்கொடுத்த மந்திரத்தின் பலத்தினாலேயே அவ்விருவரும் பிறந்தன ராதலாலும், குந்தியேவளர்த்து வந்தன ராதலாலுமாம். மற்று-அசை. (382)

**வேறு.**

**109.—இரண்டுகவிகள் - குளகம். அவர்கள் செய்த துராலோசனை முடிவு.**

ஆர ணாதிப ராரும் புகழ்வது
நார ணாதியர் நண்ணுஞ் சிறப்பது
தோர ணாதி துலங்குபொற் கோபுர
வார ணாவத மாநக ரங்கணே.

(இ-ள்.) ஆரண அதிபர் ஆர்உம் புகழ்வது - வேதங்கட்குத் தலைவர்களான அந்தணர்களெல்லோராலும் புகழப்படுவதும், நாரண ஆதியர் நண்ணும் சிறப்பது-திருமால் முதலிய தேவர்கள் எழுந்தருளிவாழும் மகிமையையுடையதும், தோரண ஆதி துலங்கு-தோரணம் முதலியவை விளங்கப்பெற்றதும், பொன் கோபுரம்-பொன்னாலாகிய கோபுரத்தையுடையதுமான, வாரணாவதம் மாநகர் அங்கண்ஏ-வாரணாவதமென்னும் பெரிய நகரத்தினிடத்திலே,—(எ - று.)—'சென்றிருக்கத் திருவாய்மலர்க' என அடுத்தகவியோடு தொடரும். வாரணாவதம்-காசியென்பர.

இதுமுதல் ஒன்பதுகவிகள்-பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றவை விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (383)

110\. சென்றிருக்கத் திருவாய்மலர்கென
ஒன்றுபட்டு மகன்றொழுதோதினன்
அன்றுதொட்டுயி ரன்னவமைச்சனல்
நன்றுபட்டதந் நன்னகரெங்குமே.

(இ-ள்.) சென்று இருக்க-போய் வசித்திருக்கும்படி, திருவாய் மலர்க-(பாண்டவர்க்குக்)கட்டளை கூறியருள்வாயாக, என-என்று, மகன்-துரியோதனன், தொழுது ஓதினன்-(தன் தந்தையான திருத ராட்டிரனை) வணங்கிச் சொன்னான்; ஒன்றுபட்டு-(அதற்கு அவன்) உடன்பட, அன்றுதொட்டு-அன்றைத்தினம்முதல், அ நல் நகர் எங்குஉம்-சிறந்த அந்த வாரணுவதநகரமுழுவதும், உயிர் அன்ன அமைச்சனல்-(திருதராட்டிரனுக்கும் துரியோதனனுக்கும்) உயிர் போன்ற மந்திரியான அப்புரோசனனால், நன்றுபட்டது-நன்றாகப் புதுப்பிக்கப்பட்டது; (எ - று.) (384)

111\.—வாரணுவதநகரம் விசேஷமாக அலங்கரிக்கப்பட்டமை.

சிற்பநூலிற் றிருந்தியமாக்களாற்
பொற்பமைந்து பொலிந்ததப்பொன்னகர்
கற்பகாடவி யல்லதுகண்டவர்
அற்பமென்ன வமராவதியையே.

(இ-ள்.) கண்டவர்-பார்த்தவர்கள், கற்பக அடவி அல்லது-கற்பகச்சோலையொன்றினை லல்லாமல், (மற்றையவற்றால்), அமரா வதியை அற்பம் என்ன-(தேவலோகத்து) அமராவதிநகரத்தை (இந்நகரத்தினும்) இழிவானது என்று சொல்லும்படி,—அ பொன் நகர்-(இயல்பிலேயே) அழகுடைய அவ்வாரணுவதநகரமானது,— சிற்பம் நூலில் திருந்திய மாக்களால் - சிற்பசாஸ்திரத்திற் கை தேர்ந்த மனிதர்களால், பொற்பு அமைந்து பொலிந்தது-(புதுப் பிக்கப்பட்டுச்) செயற்கையழகு பொருந்தி விளங்கிற்று; (எ-று.)

கற்பகச்சோலையையுடைமை ஒன்றே யன்றி மற்றைப்படி செல்வவளம் முதலிய எவற்றாலும் அமராவதி வாரணுவதத்தி னுந் தாழ்ந்ததே யென்று கண்டவர் சொல்லும்படி அப்பொழுது அந்நகரம் புதுப்பிக்கப்பட்ட தென்பதாம். இக்கவி - உயர்வுநவிற்சி யணி. (385)

112\.—திருதராட்டிரன் பாண்டவரை வாரணுவதஞ் செல்லச்சொல்லுதல்.

அறத்தின்மைந்தனுக் காங்கொருநாளவைப்
புறத்திருந்து புகன்றனன்காவலன்
திறத்துநின்னிளை யோரொடுஞ்சென்றுதோள்
மறத்தினுற்றனி வாழுதியென்னவே.

(இ-ள்.) ஆங்கு-அதன்பின்பு, ஒரு நாள்-ஒருதினத்தில், காவ லன்-திருதராட்டிர மகாராசன்,—அவைப்புறத்து இருந்து-சபை யில் வீற்றிருந்து, அறத்தின் மைந்தனுக்கு - தருமபுத்திரனை நோக்கி, 'திறத்து நின் இளையோரொடும்-வல்லமையுடைய உன் தம்பிமார்களுடனே, சென்று - போய், தோள் மறத்தினல் - புய வலிமையினல், தனி வாழுதி - தனித்து (வாரணுவதநகரத்தில்) வாழ்வாயாக,' என்ன-என்று, புகன்றனன்-சொன்னான்; (எ-று.)

உனக்குத் தம்பியர்வலிமையும் தோள்வலிமையும் மிக்கிருத்தலால் அவையேபோதும், வேறுசேனைமுதலியனவும் மிகுதியாக வேண்டா என்பது, உட்கோள். தருமத்தினின்று தவறினவர்களுக்குத் தக்கதண்டனை செய்து தருமத்தைக் காத்தலால், யமனுக்கு 'தருமன்' என்று பெயர்: அப்பெயரே இங்கு அறமெனக் குறிக்கப்பட்டது; 'தேவர்களை இருதிணையாலுங் கூறலாம்' ஆதலால், இங்கு அஃறிணையாற் கூறினர். (386)

**113.—திருதராட்டிரன் புரோசனனைத் தருமனுக்கு மந்திரியாக்குதல்.**

புகன்றகேள்விப் புரோசனன்றன்னையிம்
மகன்றனக்குநீ மந்திரியாகியே
இகன்றவர்ச்செற் றினியோர்க்கினிமைசெய்து
அகன்றஞாலமிவன் வழியாக்குவாய்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) (இங்ஙனம் சொன்னபின்பு திருதராட்டிரன்), புகன்ற கேள்வி புரோசனன் தன்னை - சிறப்பித்துச்சொல்லப்பட்ட நூற்கேள்வியையுடைய புரோசனனை நோக்கி,—'நீ—, இம்மகன் தனக்கு மந்திரி ஆகி-(இனி) இத்தருமபுத்திரனுக்கு மந்திரியாய், இகன்றவர் செற்று - (இவனது) பகைவர்களை அழித்து, இனியோர்க்கு இனிமை செய்து-(இவனது)நண்பர்களுக்கு நன்மையைச் செய்து, அகன்ற ஞாலம் இவன் வழி ஆக்குவாய் - பரந்த நிலவுலகத்தை இவன்வழிப்படுத்துவாய்', —(எ-று.)—'என்ன' என வருங் கவியோடு இயையும்.

இனி, பின்னிரண்டடிகளுக்கு வேறொருபொருள் வருமாறு:— இகன்றவர்ச் செற்று - பகைவர்களான அப்பாண்டவர்களை அழித்து, இனியோர்க்கு இனிமைசெய்து - வேண்டியவர்களான துரியோதனாதியர்க்கு நன்மைசெய்து, அகன்ற ஞாலம் - பரந்த இராச்சியம் முழுவதையும், இவன்வழி ஆக்குவாய் - இத்துரியோதனனுக்கு உரியதாம்படி செய்திடுவாய் என்பதாம். இங்ஙன் இருபொருள்படக்கூறினன் திருதராட்டிரனென்க. (387)

**114.—புரோசனன் பாண்டவருடன் வாரணாவதஞ் செல்லுதல்.**

என்னவாங்க ணிறைஞ்சியனந்தரம்
சொன்னசொற்படி சூழ்படைவேண்டுவ
என்னவுங்கொண் டிளவரசோடுமப்
பொன்னகர்க்கொடு போயினனென்பவே.

(இ-ள்.) என்ன - என்றுசொல்ல,—(புரோசனன்), ஆங்கண்- அப்பொழுது, இறைஞ்சி-(அத்திருதராட்டிரனை) வணங்கி, அனந்தரம் சொன்ன சொல்படி சூழ்படை வேண்டுவ என்னஉம் கொண்டு-பின்பு (அத்திருதராட்டிரன்) சொன்ன சொல்லின்படி சூழ்ச்சிசெய்தற்குரிய ஆயுதங்களிலும் சேனை முதலிய பரிவாரங்களிலும் வேண்டியவை யெல்லாவற்றையும் உடன்கொண்டு,— இளவரசோடுஉம்-இளவரசனான தருமனுடனே, (மற்றை நால்வரையுங் குந்தியையும்), அ பொன் நகர் கொடு போயினன் - அழகிய அந்த வாரணாவதநகரத்துக்கு அழைத்துக்கொண்டு சென்றான்; (எ - று.)

என்ப- அசை. மூன்றாமடியிலுள்ள 'என்ன' என்பது-எவன் என்ற அஃறிணைப்பொதுவினைப்பெயரின் விகாரம்: அது இங்கே எஞ்சாமை யுணர்த்தும். தலைமைபற்றி இளவரசைக் கூறினும் மற்றையோரையுங் குறிக்கும். (388)

**115.—பாண்டவரும் குந்தியும் புரோசனனுடன் வாரணாவதஞ் சென்று சிவதரிசனஞ் செய்தல்.**

**ஆரமார்புடை யைவருங்குந்தியும்**
**பூரஞான புரோசனநாமனும்**
**சேரவெண்பிறைச் செஞ்சடைவானவன்**
**வாரணாவதஞ் சென்றுவணங்கினர்.**

(இ-ள்.) ஆரம் மார்பு உடை ஐவர்உம் - மாலையையணிந்த மார்பையுடைய பஞ்சபாண்டவரும், குந்தியும்—, பூரம் ஞானம் புரோசனன் நாமன்உம் - நிறைந்த அறிவையுடைய புரோசன னென்னும் பெயருள்ள அம்மந்திரியும், சேர-ஒருசேர, வெண் பிறை செம் சடை வானவன் வாரணாவதம் சென்று - வெண்மை யான கலை குறைந்த சந்திரனை யணிந்த சிவந்த சடையையுடைய தேவனான சிவபிரான் எழுந்தருளியிருக்கிற வாரணாவதநகரத்திற் போய், வணங்கினர்-(அக்கடவுளைத்) தொழுதார்கள்; (எ-று.)

வாரணாவதநகரத்தில் பிரசித்தமாகக் கோயில்கொண்டு எழுந் தருளியிருக்கிற சிவபிரானது திருவிழாவைத் தரிசிக்கவேண்டு மென்ற ஒருவிருப்பம் தருமபுத்திரன்மனத்தி லுண்டாம்படி துரி யோதனன் சில மந்திரிகளைக்கொண்டு தூண்ட, அங்ஙனமே தருமன் அங்குச்செல்ல விருப்பங்கொண்டதுவே வியாஜமாகத் திருதராட்டிரன் பாண்டவரை வாரணாவதத்துக்குச் செலுத்தின னென்ப. ஆரம்-பதக்கம்: சந்தனமுமாம். 'ஆரவெண்குடை' என்றும் பாடம். (389)

**116.—பாண்டவர் வாரணாவதத்திற் கிருகப்பிரவேசஞ் செய்தல்.**

**அங்கவன்ற னருள்பெற்றமைச்சனங்கு**
**இங்கிதத்தொ டியற்றியநீள்கொடி**
**மங்குரேய்மணி மாளிகையெய்தினர்**
**சங்கம்விம்ம முரசந்தழங்கவே.**

(இ-ள்.) அங்கு அவன்தன் அருள் பெற்று-அவ்வாரணாவத நகரத்திலெழுந்தருளியுள்ள அச்சிவபிரானது கருணையைப் பெற்று, அமைச்சன் அங்கு இங்கிதத்தொடு இயற்றிய-புரோ சனன் அவ்விடத்தில் (தங்களைக் கொல்லவேண்டு மென்னும்) குறிப்போடு கட்டியமைத்துவைத்த, நீள் கொடி மங்குல் தோய் மணி மாளிகை-உயர்ந்த துவசங்களில் மேகங்கள்படியப்பெற்ற இரத்தினங்கள் பதித்த மாளிகையை,—சங்கம் விம்ம முரசம் தழங்க எய்தினர்-சங்குகள் ஒலிக்கப் பேரிகைகள் ஆரவாரிக்க(ப் பாண்டவர்கள்) அடைந்தார்கள்; (எ - று.)—அருள்பெற்றழகுற என்று பிரதிபேதம். (390)

117.—பாண்டவர் அங்கு அரசுவிற்றிருத்தல்.

ஆவி யன்ன வமைச்சன் மொழிப்படி
மேவி யத்திசை வேந்தர் குழாந்தொழக்
கோவி னாணைந டத்திக் குவலயத்
தேவி மெய்களிக் கச்சிறந் தாரரோ.

(இ-ள்.) ஆவி அன்ன அமைச்சன் மொழி படி - உயிரை யொத்த (புரோசன னென்னும்) அந்த மந்திரியின் சொற்படி, மேவி-(அம்மாளிகையிற்) சேர்ந்து,—அ திசை வேந்தர் குழாம் தொழ-அந்தத்திக்கிலுள்ள அரசர்களுடைய கூட்டம் (தம்மை) வணங்க, கோவின் ஆணை நடத்தி-அரசாட்சிக்கு உரிய கட்டளை யைச் செலுத்திக் கொண்டு, குவலயம் தேவி மெய் களிக்க சிறந் தார்-பூமிதேவி உடம்புகளிப்படையும்படி (பாண்டவர்கள்) சிறப் புற்றிருந்தார்கள்; (எ-று.)

பாண்டவர் தன்னை மிக இனியனென்று கருதும்படி தந்திர மாக நடந்தமைபற்றி, 'ஆவியன்னவமைச்சன்' என்றார். அரோ-ஈற்றசை. (391)

வேறு.

118.—மூன்றுகவிகள்.குளகம்: பாண்டவர் அரக்குமாளிகையைக் கவனித்துப் புரோசனன்மீது சங்கைகொள்ளுதலைக் கூறும்.

மன்ன ரைவரும் வாரணா வதந்தனின் மருவித்
துன்ன லார்தொழத் தொன்னிலம் புரந்திடு நாளில்
பின்ன நெஞ்சுடைப் புரோசனன் பேதுறு மதியான்
முன்ன மேயினி தமைத்திடு மனைச்செயன் முன்னா.

(இ-ள்.) மன்னர் ஐவர்உம் - பாண்டவராசர் ஐந்துபேரும்,— வாரணாவதந்தனில் மருவி-அவ்வாரணாவதநகரத்தில் வசித்து, துன்னலார் தொழ-பகைவர்கள் வணங்க,தொல் நிலம் புரந்திடும் நாளில்,—தொன்றுதொட்டு வந்த இராச்சியத்தை அரசாளும் நாளில்,–பின்னம் நெஞ்சு உடை புரோசனன்-மாறுபட்டமனத்தை யுடைய புரோசனன், பேது உறு மதியால் - மாறுபாடுகொண்ட (தன்) அறிவினால்,முன்னமே இனிது அமைத்திடு-(தாங்கள் அந் நகரத்துக்கு வரும்) முன்னமே (தங்களுக்கென்று) அழகிதாகக் கட்டியமைத்துவைத்த, மனை - அரக்குமாளிகையின், செயல் அமைப்பை, முன்னா-கருதி,—(எ-று.)—"என்றார்" என 120-ஆங் கவியோடு முடியும்.

பாண்டவர்கள் அரக்குமாளிகை யமைப்பை நுட்பமாக ஊகித்து உணர்ந்து அதனால் புரோசனன்வஞ்சனையை அறிய லானாரென்க. பிந்நம்-வடசொல். பின்னநெஞ்சு - புறமாகிய சொற் செயல்களோடு ஒற்றுமைப்படாத அகம். அமைத்த மன் என்று பிரதிபேதம்.

இதுமுதல் இச்சருக்கமுடியுமளவும் - பெரும்பாலும் முதற் சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றவை விளச்சீர்களுமாகிய கலிநிலைத்துறைகள். (392)

119. மெழுகினானமைக் காலயம்வகுத்ததும்விரகே
ஒழுகின்றதன் னொழுக்கமும்வஞ்சனையொழுக்கே
எழுகடற்படை யாவையுமிவன்வழியனவே
தொழுதகையுளும் படையுளசூழ்ச்சியும்பெரிதால்.

(இள்.) மெழுகினால் நமக்கு ஆலயம் வகுத்ததுஉம் வஞ்சனை- நமக்கு (இவன்) மெழுகினால் சிறந்தமாளிகையை அமைத்து வைத்ததும் வஞ்சனையேயாம்; ஒழுகுகின்ற தன் ஒழுக்கம்உம் வஞ்சனை ஒழுக்கு உள-(இனியவன்போல) ஒழுகுகிற இவனுடைய ஒழுக்கமும் வஞ்சகமான நடத்தையேயாம்: எழுகடல் படை யாவைஉம் இவன் வழியன எ - ஏழுசமுத்திரம்போன்ற [மிகவும் அதிகமான] சேனைகளெல்லாம் இவன் வசத்திலுள்ளனவே: தொழுத கையுள் உம் படை உள-(பகைவர்களுடைய) குவித்து அஞ்சலிசெய்கிற கைகளினுள்ளும் ஆயுதங்கள் இருக்குமன்றோ! சூழ்ச்சிஉம் பெரிது - (அவர்களுடைய) சதியாலோசனையும் மிக்கதேயாம்;

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா ரழுதகண் ணீரு மனைத்து" என்ற திருக்குறளும், 'பகைவர் தம் மென்மை காட்டித் தொழினும் அழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்க வென்பதாம்' என்ற பரிமேலழகருரையும், "தொழுததங் கையினுள்ளுந் துறுமுடியகத்துஞ் சோர, அழுதகண்ணீரி னுள்ளு மணிகலத்தகத்தும் ஆய்ந்து, பழுதுகண் ணரிந்து கொல்லும்படையுடனொடுங்கும் பற்றா, தொழிக யார்கண்ணுந் தேற்றந் தெளிகுற்றார் விளிகுற்றாரே" என்ற சீவகசிந்தாமணியும் உணரத்தக்கன. ஆல்-அசை. (393)

**120.** சங்கையுண்டினியுண்டியுஞ் சாந்தமும்பூணும்
பொங்குநுண்ணிழைத்துகிலுமந் தாமமும்பூவும்
இங்கிவன்பரிந்தியற்றிய கோடலமென்றார்
கங்கைநீர்தவழ்கழனிசூழ் பழனநாடுடையார்.

(இ - ள்.) 'சங்கை உண்டு - (இவனிடத்து நமக்குச்) சந்தேகமுள்ளது: இனி-இனிமேல், இங்கு இவன் பரிந்து இயற்றிய-இவ்விடத்தில் இவன் (நம்பக்கல்) அன்புடையான்போன்று அமைக்கின்றனவான, உண்டிஉம்-உணவுகளையும், சாந்தம்உம்-சந்தனத்தையும், பூண்உம் - ஆபரணங்களையும், பொங்கு நுண் இழை துகில்உம் - சிறந்து விளங்குகின்ற நுண்ணிய நூலினாலாகிய ஆடைகளையும், அம் தாமம்உம் - அழகிய மாலைகளையும், பூஉம்- மலர்களையும், கோடலம்-(ஆராயாது) கொள்ளோம்,' என்றார்- என்று (தமக்குள்) நிச்சயித்தார்கள்: (யாவரெனில்),—கங்கை நீர் தவழ் கழனி சூழ் பழனம் நாடு உடையார்-கங்காநதியின்நீர் பாய்கிற கழனிகள் சூழ்ந்த மருதநிலத்தையுடைய குருநாட்டுக்கு உரியவர்களான பாண்டவர்கள்; (எ - று.)

அடிசில் நீர்முதலிய உண்ணப்படும் பொருள்களில், தீங்கு வாராமற் காத்தற்கு அவற்றைக் கருங்குரங்கிற்கு இட்டு ஆராய வேண்டுமென்றும், சந்தனம் முதலியவற்றை அரசவன்னப் பறவையின் கண்ணிலும் சக்கரவாகப்பறவையின் முகத்திலும் உறுத்தித் தூய்மைகண்டல்லது கைக்கொள்ளலாகாதென்றும், நஞ்சுகலந்திருப்பின் குரங்கு உண்ணாது,அன்னம் கண்களினின்று இரத்தஞ்சொரியும், சக்கரவாகம் முகங்கடுக்கும் என்றும், இன்னும் இதுபோலவும் சிந்தாமணி முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ள விஷயம் இங்கு அறியத்தக்கது. ("பூந்துகில் மாலை சாந்தம் புனைகலம் பஞ்சவாசம், ஆய்ந்தளந் தியற்றப்பட்டவடிசில்நீ ரின்ன

வெல்லாம்,மாந்தரின் மடங்க லாற்றற் பதுமுகன் காக்கவென்றுங், கேந்துபூண்மார்ப னேவ வின்னண மியற்றி ஞனே" என்ற சீவக சிந்தாமணிச் செய்யுள், இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. (394)

**121.—சிற்பியொருவன் வீமனிடம் வந்து ஒரு செய்தி சொல்லத்தொடங்கல்.**

ஐயமுற்றிவரிருப்புழி மயனினுமதிகன்
சையமொத்ததோள்வலனுடைத் தபதியனொருவன்
வையமுற்றுடைவிமனை யொருதனிவணங்கி
ஐயபட்டதையறிந்தருளாமுறையென்றான்.

(இ-ள்.) இவர்-இந்தப் பாண்டவர்கள், ஐயம் உற்று இருப்பு உழி-(இவ்வாறு புரோசனனிடத்திற்) சந்தேகங் கொண்டிருக்கும் பொழுது,—மயனின்உம் அதிகன்-(சிற்பத்தில் அசுரத்தச்சனான) மயனைக்காட்டிலும் மேம்பட்டவனான, சையம் ஒத்த தோள் வலன் உடை தபதியன் ஒருவன்-மலைபோன்ற தோள்களின் வலிமையை யுடைய சிற்பியொருத்தன், வையம் முற்று உடை வீமனை ஒரு தனி வணங்கி-பூமிமுழுவதையும் ஆளுதற்கு உரியவனான வீமனை ஏகாந்தமான இடத்தில்(தான்) தனியனாய்வந்து கண்டு வணங்கி, —'ஐய-தலைவனே! பட்டதை-நடந்ததொருசெய்தியை,ஆம்முறை-நடந்தபடியே, அறிந்தருள்-(நான் சொல்லக்கேட்டு) அறிந்தருள் வாயாக,' என்றான் - என்று சொன்னான்; (எ-று.)—அச்செய்தி, அடுத்த மூன்றுகவிகளில் விவரமாகக் கூறப்படும்.

ஸ்தபதி யென்ற வடசொல், தபதியென விகாரப்பட்டது; அதன்மேல் அன்-ஆண்பால்விகுதி. பாண்டவர்க்கு அனுகூல மாக விதுரனிட்ட கட்டளையைப் பிறர் அறியாமல் நிறைவேற்றிய வல்லமையுடைய சிற்பியாதலின், இவனை, 'மயனினுமதிகன்' என்று விசேடித்துக்கூறினார். 'வையமுற்றுடை' என்று வீம னுக்குக்கொடுத்த அடைமொழியால், ஆற்றலிற் சிறந்த அவனே பாண்டவரைவரையுங் காக்கும் உபாயத்தைக் கூறக்கேட்டற்கு உரியவ னென்பது தோன்றும். (395)

**122.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: அச்சிற்பிகூறும் விவரம்.**

நுந்தையேவலிற்கம்மியர் நூதனமாக
இந்தமாநகர்த்திருமனை யியற்றிடுநாளின்
வந்தமந்திரிவஞ்சனை யறிந்தறன்வடிவாந்
தந்தையென்னையுமேவினன் றன்மையினுணர்ந்தே.

(இ-ள்.) நுந்தை-உமது பெரியதந்தையாகிய திருதராட்டிர னது, ஏவலின்-கட்டளையினால், கம்மியர்-சிற்பிகள், நூதனம் ஆக-புதுமையாக, இந்த மா நகர் திரு மனை இயற்றிடு நாளின் - பெரிய இந்த வாரணாவதநகரத்திலே அழகிய இந்த மாளிகையைச்செய்த பொழுது,அறன் வடிவு ஆம் தந்தை- தருமசொரூபியாகிய(உமது) சிறியதந்தையான விதுரன், வந்த மந்திரி வஞ்சனை அறிந்து- (மாளிகைகட்டுவித்தற்கு) வந்த புரோசனனென்னும் மந்திரி யினது வஞ்சனையை அறிந்து,என்னைஉம் தன்மையின் உணர்ந்து ஏவினன் - என்னையும் என்குணத்தால் நம்பத்தக்கவனென்று அறிந்து (இம்மாளிகையமைக்குஞ் சிற்பிகளுள் ஒருவனாயிருந்து தொழில் செய்யும்படி) கட்டளையிட்டனுப்பினான்: (எ - று.)

'அறன்வடிவாம்' என்றது-யமனது அமிசமானவனென்ற கருத்தையும் விளக்கும். கர்மம்-சிற்பம் முதலிய தொழில்: அதனை யுடையவன், கர்மீ: இது திரிந்து பலர்பாவில் கம்மியரென வந்தது. (396)

**123.** அடியனேனுமற்றவருட னரக்குமாளிகையிப்
படியினுலியற்றியதொழிற் பயனெலாங்குறித்து
நெடியகானகத்தளவுநீ ணிலவறைநெறிபோய்
முடியுமாறொருமண்டபங் கோட்டினேன்முறைபோல்.

(இ-ள்.) அடியனேன் உம்-(உங்கட்கு) அடியவனான நானும், மற்றவருடன்-மற்றைய சிற்பிகளுடனிருந்து, அரக்கு மாளிகை இபடியினுல் இயற்றிய தொழில்பயன் எலாம் குறித்து-அரக்கினுல் ஒரு மாளிகையை இவ்வாறு செய்த தொழிலினுல் இனிநிகழும் பயன்களை யெல்லாம் ஆலோசித்து, நீள் நிலவறை நெறி முறைபோல் போய் நெடிய கானகத்து அளவு முடியும் ஆறு-நீண்ட நிலவறையின் வழி மலைக்குகைபோலச் சென்று நீண்ட காட்டினிடம் வரையில் முடியும்படி, ஒரு மண்டபம் கோட்டினேன்-(இந்தமாளிகையில்) ஒருமண்டபத்தைச் செய்தேன்; (எ - று.)

நிலவறைநெறி-பிறர் அறியாதபடி தரையினுள் அமைந்த சுரங்கவழி. இம்மாளிகையில் பாண்டவர்களை நம்பிக்கையுடன் இனிது வீற்றிருக்கச்செய்து பின்பு தீப்பற்றவைத்து அழிக்கக் கருதிய கருத்தை அறிந்தேனென்பான், 'தொழிற்பயனெலாங் குறித்து' என்றான். (397)

**124.** வேறொருத்தருமறிவுரு விரகினுலொருதூண்
மாறுபட்டுநீபறிக்கலாம் வகைவழிவகுத்தேன்
தேறுதற்கிதுதகுமெனத் திருவுளத்தடக்கி
ஊறுபட்டபோதெழுந்தருள் கெனப்பணிந்துரைத்தான்.

(இ-ள்.) வேறு ஒருத்தர்உம் அறிவுரு விரகினுல்-மற்று ஒருவரும் அறியாத உபாயத்தால், ஒரு தூண்-(அம்மண்டபத்தில்) ஒரு தூணை, நீ மாறுபட்டு பறிக்கல் ஆம் வகை-நீ வலிமைகொண்டு பெயர்த்தெடுத்து விடும்படி, வழிவகுத்தேன்-அந்நிலவறைவழியைச் சார அமைத்துவைத்துள்ளேன்; இது தேறுதற்கு தகும் என திரு உளத்து அடக்கி-இச்செய்தி நம்பத்தக்கதென்று (உனது) திருவுள்ளத்திலே கொண்டு, ஊறுபட்டபோது எழுந்தருள்க-தீங்கு நிகழ்ந்தபொழுது (அவ்வழியாகத் தப்பியுய்ந்து) சென்றருள்வாயாக, என-என்று, பணிந்துஉரைத்தான் - வணங்கிச்சொன்னான், (அந்தச்சிற்பி); (எ-று.)

மூன்றாம்அடியால், எளிய இந்த எனதுவார்த்தை இகழத்தக்கதன்றென்றும், இவ்வுபாயம் அலட்சியஞ்செய்தற்கு உரியதன்றென்றும், இதனைப் பிறர் அறியாதபடி இரகசியமாக வைத்திட வேண்டுமென்றுங் கூறியவாறும். (398)

**125.—வீமன் அவனுக்குப் பரிசளித்துப் பின் ஜாக்கிரதையுடையனுயிருத்தல்.**

தச்சரிற்பெருந்தலைவனுக் குரிமையிற்றனங்கள்
பிச்சரிற்கொடுத்தவன்விடை கொண்டதன்பின்னர்
அச்சமற்றிவனம்மனைக் கம்மனைவழங்கும்
நிச்சமின்றுகொலென்றுகொலென நினைந்திருந்தான்.

(இ-ள்.) (வீமன்), தச்சரில் பெருந் தலைவனுக்கு-(இவ்வாறு உய்யும்வழி கூறிய) சிறந்த அச்சிற்பிக்கு, உரிமையின்-தகுதியினால், தனங்கள்-செல்வங்களை, பிச்சரின் கொடுத்து - பித்தர் போலத் தலைதெரியாது (மிகுதியாகக்) கொடுத்து,—அவன் விடை கொண்டதன் பின்னர்-அச்சிற்பி விடைபெற்றுக்கொண்டு சென்றபின்பு,—அச்சம் அற்று-பயம் ஒழிந்து,—'இவன்-இப்புரோசனன், நம் மனைக்கு அம்மனை வழங்கும்-நாம் வசிக்கும் இந்த மாளிகையில் அக்கினியை வைப்பான்: நிச்சம்-(இது) நிச்சயம்: இன்று கொல் என்று கொல்-(அது செய்யும் நாள்) இன்றைக்கோ என்றைக்கோ?' எனா நினைந்து இருந்தான்-என்று எண்ணிக்கொண்டு கவனிப்புடன் இருந்தான்; (எ-று.)

தச்சர்-இச்சிறப்புப்பெயர், சிற்பிகளென்ற பொருளில் வந்தது. அம் மனைக்கு-நெருப்பிற்கு, அ மனை-அந்த மாளிகையை வழங்கும்-ஒப்பிப்பான் என்று கூறுதலும் ஒன்று. அம்மனை யென்பது-(அம்-நீர், மனை-இடம்) நீர் பிறத்தற்குக் காரணமாயுள்ளதென்ற பொருளால், நெருப்பிற்குவந்ததோர் ஏதுப்பெயராம்; நெருப்பினின்று நீர் தோன்றியதென வேதமுங் கூறும். ()

**126.—பாண்டவர் பகலில் வேட்டையாடி இரவில் விழிப்புடன் இருத்தல்.**

விடவிவன்சினைநெடுங்கொடி தழுவலின்மிடைந்த
அடவியெங்கணும்வேட்டையாற் றங்கள்பேராண்மை
நடவிநன்பகலிரவுகண் டுயிலலர்நடந்தார்
புடவிதங்கள்வெண்குடைநிழற் குளிருமாபுரப்போர்.

(இ-ள்.) தங்கள் வெள் குடை நிழல்-தங்கள் வெண்கொற்றக் குடையின் நிழலினால், புடவி குளிரும் ஆ-பூமிமுழுவதுங்குளிர்ச்சியடையும்படி, புரப்போர்-பாதுகாக்கவல்லவரான பாண்டவர்கள்,— நல் பகல்-நல்ல பகற் காலத்தில், விடவி வல் சினை நெடு கொடி தழுவலின் மிடைந்த அடவி எங்கண் உம்-மரங்களின்வலிய கிளைகளிலே நீண்டகொடிகள் தழுவிப்படர்தலால் அடர்ந்துள்ள காடு முழுவதிலும், வேட்டையால்-வேட்டையாடுதலால், தங்கள் பேர் ஆண்மை நடவி-தங்களுடைய சிறந்த ஆண்தன்மையை [பல பராக்கிரமங்களை]ப் பரவச்செய்து, இரவு-இராத்திரியில், கண் துயிலலர் நடந்தார்-கண்மூடி யுறங்காதவர்களாய் ஒழுகினார்கள்;

வேட்டையென்ற வியாஜத்தினாற் பகலையும், கண்விழிப்பினால் இரவையும் போக்கினர் பாண்டவரென்க: இங்ஙன் இவர் செய்தது, எக்காலத்துப் புரோசனனால் தீங்குவிளையுமோ என்ற அச்சத்தினாலாகும். விடவி=விடபீ: விடபம்-கிளை: அதனையுடையது விடபீ. பெண்பாலாகிய கொடி ஆண்பாலாகிய மரத்தின் கிளையைக் கொள்கொம்பாகக் கொண்டு தழுவும் இயல்பை முதலடிவிளக்கும். 'துயிலற' என்றும் பாடம் உண்டு. (400)

**127.—சிலகாலம் புரோசனனுடன் பாண்டவர் வசித்தல்.**

பாந்தளோரொருமனைவயிற் பயில்பவர்போல
வேந்தரைவருமந்திர வலியினுன்மிக்கோர்
காந்துநெஞ்சுடையமைச்சனைக் கைவிடாரனுகித்
தாந்தமெய்யெனவுயிரெனத் தனித்தனிசார்ந்தார்.

(இ-ள்.) மந்திரம் வலியினால் மிக்கோர்-ஆலோசனை வலிமையினால் மேம்பட்டவர்களாகிய, வேந்தர் ஐவர்உம்-பாண்டவராசர் ஐந்துபேரும்,—பாந்தளோடு ஒரு மனைவயின் பயில்பவர் போல-பாம்புடன் ஒருவீட்டில் வசிப்பவர்போல, காந்தும் நெஞ்சு உடை அமைச்சனை கைவிடார் அணுகி - கொதிக்கிற மனத்தையுடைய அந்தமந்திரியை விலக்கிவிடாமல் அருகிற்கொண்டு, தாம் தம் மெய்என உயிர்என தனி தனி சார்ந்தார்-தங்களில் தாங்கள் உடம்பும் உயிரும்போல ஒருவரோடொருவர் கலந்திருந்தார்கள்;

ஒருவர்க்கொருவர் இன்றியமையாத அன்பின ரென்பது நான்காமடியின் கருத்து. மந்திரவலிமிக்கவர், பாம்போடு ஒருமனையிற் பயிலக்கூடு மென்க. "உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருள் பாம்போ டுடனுறைந் தற்று" என்ற குறள் கருத்து, முதலடியிற் காணத்தக்கது. (401)

**128.—பாண்டவர் ஒருநாளிரவிற் புரோசனனை அருகிற் படுக்க வைத்தல்.**

ஆங்கொர்கங்குலினழைத்துநீ டரசியலுசாவி
ஈங்குநீதுயில்வைகுதி யெம்முடனென்னப்
பாங்கர்மெல்லணைப்பள்ளியும் பரிவுறவழங்கித்
தாங்களும்பொலஞ்சேக்கையிற் றங்கினரன்றே.

(இ-ள்.) ஆங்கு - அங்ஙனம்நிகழும் நாள்களுள், (பாண்டவர்கள்),—ஓர் கங்குலின் - ஓர் இரவில், அழைத்து - (புரோசனனை) அழைத்து, நீடு அரசு இயல் உசாவி-பெரிய அரசாட்சிமுறைமையைக் குறித்து (வெகுநேரம் அவனுடன்) ஆராய்ந்து, (பின்பு), நீ ஈங்கு எம்முடன் துயில் வைகுதி என்ன-'நீ இவ்விடத்தில் எங்களோடு நித்திரை செய்வாய்' என்றுசொல்லி,—பாங்கர் - (தங்கள்) பக்கத்தில், மெல் அணை பள்ளிஉம் பரிவு உற வழங்கி - மெல்லிய மெத்தைப்படுக்கையையும் அன்புமிகக்கொடுத்து, தாங்களும்—, பொலம் சேக்கையில் தங்கினர் - அழகிய படுக்கையிற் படுத்தார்கள்; (எ-று.)

காரணமின்றி யழைத்து 'எம் அருகிற் பள்ளிகொள்க' என்று கூறின் ஐயமுறுவா னென்றுகருதி, அரசியலுசாவுவார் போன்று அழைத்து நெடும்பொழுது உசாவிப் பின்பு அங்ஙன் கூறினரென்க. (402)

**129.—வீமன் அரக்குமாளிகையில் தீப்பற்றவைத்தல்.**

உணர்வறத்துயிலுற்றபோ தற்றமங்குணராத்
துணைவரைத்திருத்தாய்பதந் தொழுகெனச்சொல்லி
அணிகொள்கோயிலைத்தாதைநண் பனுக்கிரையளித்தான்
இணையிலாவமுதுரகர்கோ னிடைநுகர்ந்திருந்தான்.

(இ-ள்.) உணர்வு அற துயில் உற்ற போது-(புரோசனன்) உணர்ச்சி நீங்க நித்திரை செய்தபொழுது,—இணை இலா அமுது உரகர் கோனிடை நுகர்ந்து இருந்தான்-ஒப்பற்ற அமிருதத்தைச் சர்ப்பராசனான வாசுகியினிடத்தில் (பெற்று) உண்டு (அவன்நகரத்திற் சிலநாள்) இருந்தவனான வீமசேனன்,—அங்கு அற்றம் உணரா-அப்பொழுது சமயமென்று அறிந்து,—துணைவரை திரு தாய்பதம் தொழுக என சொல்லி-(தனது) உடன்பிறந்தவர்களைச் சிறந்த தாயாகிய குந்தியினது பாதங்களை வணங்குவீராக

வென்று சொல்லி,-அணிகொள் கோயிலை - அழகுபொருந்திய அந்த மாளிகையை, தாதை நண்பனுக்கு இரை அளித்தான் - தனது பிதாவாகிய வாயுவினது சிநேகிதனான அக்கினிதேவனுக்கு உணவாகக் கொடுத்தான்; (எ-று.)

எரித்தானென்றபொருளை 'தாதைநண்பனுக்கு இரையளித்தான்' என வேறு வாய்பாட்டாற் கூறினது, பிறிதினவிற்சியணி. தனது தந்தையின் ஒருநண்பனான வாசுகியினிடத்து அமிருதம் பெற்று உண்ட வீமன் அத்தகைய கடப்பாடுவழுவாமல் தனது தந்தையின் மற்றொரு நண்பனுக்கு உணவளித்தனனென ஒரு வகைச் சமத்காரம் நிகழக் கூறுவார், 'தாதைநண்பனுக் கிரையளித்தான் இணையிலா வமுது உரகர்கோனிடை நுகர்ந்திருந்தான்' என்றார். தனது உடன்பிறந்தவர் நால்வரையும் தாயையும் ஒருங்கே உடன்கொண்டு வெளிச்செல்லக் கருதினனாதலின், தனித்தனி படுத்திருந்த அவர்களை ஒருங்கே தாயிருக்குமிடத்திற் சேர்த்தற்கு, 'தாய்பதந்தொழுக' என்று சொல்லினான். (403)

130.—அரக்குமாளிகை எரிந்தொழிதல்.

முடியுடைத்தடங்கிரியினை முளிகழைதொறுமுற்று
அடிநிலத்துறச்சூழ்வரு மாறுபோலழலோன்
கொடிநிரைத்தபொற்கோபுரப் புரிசைசூழ்கோயில்
இடியிடித்தெனவெடிபடச் சிரித்தெழுந்தெரித்தான்.

(இ-ள்.) அழலோன்-அக்கினிதேவன்,—முடி உடை தட கிரியினை-சிகரத்தையுடைய பெரியமலையை, முளி கழைதொறும் உற்று-(அதிலுள்ள) உலர்ந்த மூங்கில்களி லெங்கும்பொருந்தி, அடி நிலத்து உற-அடிப்பரப்பிலே பொருந்த, சூழ்வரும் ஆறு போல்-சூழ்ந்திடும் விதம்போல,—கொடி நிரைத்த பொன் கோபுரம் புரிசை சூழ் கோயில்-கொடிகள் வரிசையாகக் கட்டப்பட்ட அழகிய கோபுரத்தையுடைய மதில்சூழ்ந்த அந்த இராசகிருகத்தை, இடி இடித்து என வெடி பட சிரித்து எழுந்து எரித்தான்-இடியிடித்தாற்போலப் பேரொலியுண்டாக நகைத்து எழுந்து எரித்திட்டான்; (எ - று.)

மலையின் தாழ்வரையில் சுற்றிலுமுள்ள காய்ந்த மூங்கிற்காட்டில் தீப்பற்றி யெரிதல்போல, உயர்ந்த அம்மாளிகையைச் சுற்றிலுமுள்ள கொடிகள் கட்டிய மதில்களி லெங்கும் தீப் பற்றி யெழுந்து அம்மாளிகையை எரித்ததென்க. அங்ஙனம் எரிக்கையில் உண்டாகிற பேரொலியையே வீரத்தெழுந்த வெகுளிநகையாகக் கற்பித்து வருணிப்பார், 'இடியிடித்தென வெடிபடச் சிரித்தெழுந்தெரித்தான்' என்றார்; தற்குறிப்பேற்றம். (404)

131.—வீமன் துணைவரையுந் தாயையும் உடன்கொண்டு செல்லல்.

அக்கணந்திடையன்னையி லனுகியாங்கவரைத்
தொக்கசித்திரத்தூணடித் துவாரமேவழியாப்
பொக்கெனக்கொடுபோயகல் வனத்திடைப் புகுந்தான்
முக்கணற்புதன்முனிந்தலூர் மூவரோடொப்பான்.

(இ-ள்.) முக்கண் அற்புதன் முனிந்த ஊர் மூவரோடு ஒப்பான்-மூன்று திருக்கண்களையுடைய விசித்திரசக்தியுடையவனான சிவபிரான் கோபித்து எரித்த திரிபுரத்தில் (எரியாது தப்பிய) மூன்று அசுரர்களோடு ஒப்பவனாகிற வீமசேனன், அ கணத்திடை-அந்தக் கணப்பொழுதிலே, அன்னையில் அணுகி-தாயினிடஞ்சென்று, ஆங்கு அவரை-அவ்விடத்திலுள்ள அவரெல்லோரையும், பொக்கென கொடு-விரைவாக உடன்கொண்டு, தொக்க சித்திரம் தூண் அடி துவாரம்ஏ வழி ஆ போய்-மிக்க சித்திரங்களையுடைய ஒரு தூணின் கீழுள்ள சுரங்கமே வழியாகச் சென்று, அகல் வனத்திடை புகுந்தான்-பரந்த இடிம்பவனத்திற் சேர்ந்தான்; (எ - று.)

அவரைக் கொடுபோய் அகல்வனத்திடைப் புகுந்த விவரம், அடுத்த சருக்கத்தின் இரண்டாங்கவியில் விளங்கும். சிவபிரான் திரிபுரசங்காரஞ் செய்தபொழுது மற்றை யசுரர்கள்போலச் சினனது உபதேசத்தாலும் புத்தனது போதனையாலும் சிவத்துவேஷிகளாகாமல் சிவபக்திமுதிர்ந்திருந்ததனால் சுதர்மன் சுசீலன் சுபுத்தி என்ற மூன்று அசுரர்கள் அந்நகைத்தீக்கு இலக்காகாமல் தப்பிப் பிழைத்துச் சிவபிரானை வேண்டி அக்கடவுளருளால் அவனது கோயில்வாயில் காக்கும் பணியைப் பெற்றன ரென்று அறிக. "முப்புரங்களை முக்கணன் முனிந்தநாள் மூவரம்முழுத்தீயில், தப்பினருளர்" என்பர், மேல் காண்டவதகனச்சருக்கத்தும். அம்மூவர் திரிபுரத் தெரியினின்று தப்பியுய்ந்தமை போல, வீமன் அரக்குமாளிகைத்தீயினின்று தப்பியுய்தலால், 'முக்கணற்புதன் முனிந்தவூர்மூவரோடொப்பான்' என்றார். (405)

**132.—கண்டவர் பாண்டவரும் குந்தியும் எரிந்தன ரென்றல்.**

**புரிந்ததீயினைக் கண்ணினீரவித்திடப்புகுந்து**
**பரிந்தநெஞ்சினைமீண்டு மப்பாவகன்சுடவே**
**கரிந்தகோயிலிற் காரிருள்புலர்ந்தபின்கண்டோர்**
**எரிந்துவிழ்ந்தனரைவரும்யாயு மீண்டென்றார்.**

(இ - ள்.) கார் இருள் புலர்ந்த பின்-கரிய இருள் நீங்கிப் பொழுதுவிடிந்தபின்பு,—புரிந்த தீயினை கண்ணின் நீர் அவித்திட-பற்றிய நெருப்பை(த் தங்கள்) கண்களினின்று பெருகும் சோகநீர் தணிக்கும்படி, கரிந்தகோயிலில் புகுந்து - தீந்துபோன அம்மாளிகையினுள்ளே பிரவேசித்து,—மீண்டுஉம் - அங்ஙனம் அவிந்தபின்பும், அ பாவகன்-அந்த அரக்குமாளிகை நெருப்பு, பரிந்த நெஞ்சினை-(பாண்டவர்பக்கல்) அன்புகொண்ட (தங்கள்) மனத்தை, சுட-வருத்த, கண்டோர்-பார்த்தவர்களெல்லோரும்,— ஐவர்உம் யாய்உம் ஈண்டு எரிந்து வீழ்ந்தனர் என்றார் - 'பஞ்சபாண்டவர்களும் அவர்கள் தாயான குந்தியும் இங்கு எரிந்தொழிந்தனர்' என்றே சிந்தித்தார்கள்; (எ - று.)

பொழுதுவிடிந்தபோது எரிந்துபோன மாளிகையை வந்து பார்க்கையில், ஊரவர்களின் கண்களினின்று பெருகிய நீரினால் அந் நெருப்பு அவிந்தது என்ற உயர்வுநவிற்சியணியால், பாண்டவர்கள் பக்கல் மிக்க அன்பு கொண்ட அந்நகரத்துச் சனங்களது

சோகக்கண்ணீர்ப்பெருக்கின் மிகுதியைக்கூறியவாறு. வேடர் ஐவரும் அவர்கள் தாயும் எரிந்துகிடந்ததைக்கண்டு பாண்டவரைவரும் குந்தியும் எரிந்து கிடந்தனரென்று கருதினரென்க; அத்தன்மை, அடுத்த கவியில் விளங்கும். இறந்தனரென்ற பொருளில் 'வீழ்ந்தனர்' என்றது, மங்கலவழக்கு. இரண்டாம் அடிக்கு-நெருப்பு மாளிகையைச் சுட்டதன்றி, மீண்டும் இரங்கிய தம்மனத்தைச் சுட என்றுநயந்தோன்றக்கூறினர். (406)

133.—இச்செய்தியறிந்து அரசர்கள்பலரும் வருந்துதல்.

விருந்தராய்விடமிடச்செலேவேட்ருந்தாயும்
இருந்ததீமதியமைச்சனேடிறந்தமையுணரார்
திருந்துமாமதிப்பாண்டவர் செயலுமற்றறியார்
வருந்தினர்தமதுயிரிழந் தெனப்புவிமன்னர்.

(இ-ள்.) புவி மன்னர்-பூமியிலுள்ள அரசர்கள்,—விருந்தர் ஆய் விடம் இட செல்-புதியவர்களாய்(த் துரியோதனன் கட்டளையின்படி பாண்டவர்க்கு) விஷங்கொடுக்க வந்த, ஐ வேடர்உம்-ஐந்து வேடர்களும், தாய்உம்-(அவர்கள்) தாயான வேட்டுவச்சியும், இருந்த தீ மதி அமைச்சனோடு-(முன்னமே அங்கு) இருந்த துர்ப்புத்தியுடைய மந்திரியாகிய புரோசனனுடனே, இறந்தமை-மரித்ததை, உணரார் - அறியாதவர்களாய்,—மற்று - மற்றும், திருந்து மா மதி பாண்டவர் செயல்உம் அறியார்-திருத்தமுற்ற சிறந்த அறிவையுடைய பாண்டவரது செய்கையையும் அறியாதவர்களாய்,- தமது உயிர் இழந்து என வருந்தினர்-(பாண்டவரை யிழந்தோமென்றே கருதியதனால்) தமது உயிரை யிழந்தாற்போல வருந்தினர்கள்; (எ-று.)

பாண்டவர்க்கு விஷங்கலந்த தேனைக்கொடுத்துக்கொல்லும்படி துரியோதனனால் அனுப்பப்பட்ட ஐந்து வேடர்களும் அவர்கள் தாயும் அன்று அங்கு வந்திருந்து தீயின்வாய்ப்பட்டு இறந்தனரென்பதை இதனால் அறிக. விருந்தர் = விருந்தினர். மற்று - வினைமாற்றுமாம். பாண்டவர்செயல் - அரக்குமாளிகையைத் தீக்கொளுவித் தப்பிச்சென்று உய்ந்தமை. (407)

134.—இச்செய்தியறிந்த முனிவர்கள் முதலியோர் வருத்தம்.

போதுபட்டிருள்புகுந்தொளி போனவானகம்போன்
மாதுபட்டபார்மடந்தைதன் மதிமுகமழுங்கத்
தீதுபட்டதுகுருகுலச் செல்வமென்றிரங்கி
ஏதுபட்டனமுனிவரர் முதலினோரிதயம்.

(இ-ள்.) முனிவரர் முதலினோர் இதயம் - சிறந்த இருடிகள் முதலானவர்களுடைய மனங்கள், 'போது பட்டு - பொழுது சாய [சூரியன் அஸ்தமிக்க], இருள் புகுந்து-இருள் வர, ஒளி போன - ஒளிநீங்கிய, வான் அகம் போல்-ஆகாயம்போல, மாது பட்ட பார் மடந்தைதன் மதி முகம் மழுங்க - அழகுபொருந்திய பூமிதேவியினது சந்திரன்போன்ற முகம் ஒளிமழுங்கும்படி, குருகுலம் செல்வம் தீதுபட்டது - குருகுலத்தினது செல்வம் பழுதுபட்டது', என்று—, இரங்கி-விசனமுற்று, ஏது பட்டன - என்ன பாடுபட்டன! (எ.- று.)

பாண்டவர் அழிவை, குருகுலச்செல்வம் அழிந்ததெனக் குறித்தார்; செல்வம்-சிறந்தசந்ததி. பட்டு, புகுந்து-எச்சத்திரிபு.

**135.— இச்செய்தியறிந்த துரியோதனுதியர் நிலை.**

**கொட்பனற்சுடவிறந்தமை கேட்டலுங்குருக்கள்**
**துட்பதத்துடனழுதிடுஞ் சுயோதனன்முதலோர்**
**உட்பனித்துமேல்வெயிலுற வெதும்புநீரொத்தார்**
**பெட்புறப்புவிமுழுவதும் பெறுங்கருத்துடையோர்.**

(இ-ள்.) கொட்பு அனல் சுட-சூழ்தலையுடையதீ எரிக்க,இறந்தமை-(பாண்டவர்) இறந்த செய்தியை, கேட்டலும்-கேட்டறிந்தவுடனே,—துட்பதத்துடன் அழுதிடும்-கொடிய கோட்பாட்டோடு புலம்புகின்ற, சுயோதனன் முதலோர் குருக்கள் - துரியோதனன் முதலியகுருகுலகுமாரர்கள்,-பெட்பு உற புவிமுழுவதுஉம் பெறும் கருத்து உடையோர்-ஆசைமிகப் பூமிமுழுவதையும் பெறும் எண்ணத்தை யுடையவர்களாய், வெயில் உற உள் பனித்து மேல் வெதும்பும் நீர் ஒத்தார்-(மேலே) வெயில்படுகையில் உள்ளே குளிர்ந்து மேலேசுடும் இயல்பையுடைய நீரைப் போன்றூர்கள்;

துரியோதனுதியர் அகத்தில் மகிழ்ச்சிகொண்டு புறத்தில் தபிப்புக்காட்டினர் என்பதாம். அப்பொழுது அவர்கட்கு மகிழ்ச்சி இயற்கையும், சோகம் செயற்கையுமாய் நின்றமை, உவமையால் விளங்கும். துஷ்பதம்-வடசொல். (409)

**136.—உண்மையிற்பாண்டவர் எரிந்திடாமையைப்பற்றிய கவிவர்ணனை.**

**பொன்ன லங்கொள மெழுகினு லாலயம் புனைந்து**
**துன்னு வெங்கதைப் படைமருச் சுதனையே சுடுவான்**
**என்ன வாண்மைகொ லெண்ணினு னெண்ணினுஞ் சுடுமோ**
**வன்னி தன்பெயர் மருச்சக னென்பது மறந்தே.**

(இ-ள்.) பொன் நலம் கொள-(வெளியே) பொன்னுக்குஉரிய அழகு விளங்கும்படி, மெழுகினுல் ஆலயம் புனைந்து-அரக்கினுல் மாளிகையைச் செய்து, துன்னு வெம் கதை படை மருத் சுதனை சுடுவான்-பொருந்திய கொடிய (சத்துருக்நினியென்னும்) கதாயுதத்தையுடைய வாயுகுமாரனுகிய வீமனையே சுடும்படி, எண்ணினுன்-(துரியோதனன்) கருதினுன்: (அங்ஙனங் கருதியது), என்ன ஆண்மைகொல்-என்ன ஆண்திறமையோ? எண்ணின்உம்-(அவ்வாறு அவன்) நினைத்தாலும், வன்னி-அக்கினி,தன் பெயர் மருத்சகன் என்பது மறந்து-தனது பெயர் காற்றின் சகாயனென்பதை மறந்து, சுடும்ஒ-(அவ்வாயுகுமாரனை) எரித்திடுமோ? (எ-று.)

துரியோதனனுக்கு நேரெதிரியான வீமன் தப்பியுய்ந்தனனென்ற உண்மையை, காற்றின் நண்பனுன அக்கினிதேவன் அக்காற்றின் மகனை எரித்திடானென வருணித்தார்; இது - ஏதுத்தற்குறிப்பேற்றவணியின் பாற்படும். மருத்ஸுதன், மருத்ஸக: என்ற வடமொழிப்பெயர்கள் திரிந்தன. (410)

வாரணவதச்சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது

# வேத்திரகீயச்சருக்கம்

வேத்திரகீய மென்னும் இடத்தில் நிகழ்ந்த செய்கையைச் சொல்லும் சருக்கமென்றுபொருள். பாண்டவரும் குந்தியும் இடிம்பவனஞ் சார்ந்ததும், அங்குத் தம்மைக்கொல்லும்படி இடிம்ப னென்னும் பேரரக்கனால் அனுப்பப்பட்ட இடிம்பி வந்து வீமனைக் கண்டு காமுற்று ஆசைவார்த்தைபேசியதும், அதுகண்டுசினந்து வந்து பொருத இடிம்பனை வீமன் கொன்றதும், பின்பு தாயின் நியமனப்படி வீமன் இடிம்பியை மணந்ததும், வியாசமுனிவர் வந்து பாண்டவர்க்கு இதோபதேசஞ்செய்ததும், இடிம்பி கடோற்கச னென்னுங் குமாரனைப் பெற்றதும், பாண்டவர் வேத்திரகீயஞ் சார்ந்து ஓர் அந்தணன்மனையில் வசிக்கையில் அவ்வூரவர்க்கு இடையூறு இயற்றிவந்த பகனென்னும் அரக்கனை வீமன் போர் செய்து கொன்றொழித்ததும், இதிற் கூறப்படும்.

### 1.—தெய்வவணக்கம்: கவிக்கூற்று.

**சீத நாண்மலர்க் கோயின் மேவுசெந் திருவி னுயகன் றேவ நாயகன்**
**வேத நாயகன் பூத நாயகன் விரத நாயகன் விபுத நாயகன் [நினைந்து**
**போத காதிபன் முதலை வாயிடைப் பொறைத ளர்ந்துமுன் பொதுவி லே**
**ஆதி மூலமே யென்ன முன்வரு மாதி நாயக னடிவ ணங்குவாம்.**

(இ-ள்.) சீதம்-குளிர்ச்சியுள்ள, நாள்-புதிய [அன்றுமலர்ந்த], மலர்-தாமரைமலராகிய, கோஇல் - சிறந்த இடத்தில், மேவு-வீற்றிருக்கிற, செம் திருவின்-செம்மையுடைய இலக்குமிக்கு, நாயகன்-தலைவனும், தேவ(ர்) நாயகன்-தேவர்கட்குத் தலைவனும், வேதம் நாயகன்-வேதங்களுக்குத் தலைவனும், பூதம் நாயகன் - பிரபஞ்சத்துப் பொருள்களுக்கெல்லாம் தலைவனும், விரதம் நாயகன்-விரதங்கட்குத் தலைவனும், விபுத(ர்) நாயகன்-விசேஷபுத்தியுடைய முனிவர்கட்குத் தலைவனும், முன்-முன்பு, போதக அதிபன்-கஜேந்திராழ்வான், முதலை வாயிடை-முதலையின்வாயிலே யகப்பட்டு, பொறை தளர்ந்து-வலிமைகுன்றி, நினைந்து-தியானித்து, பொதுவில் ஆதி மூலமே என்ன-பொதுப்பட 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, முன் வரும்-அந்த (யானையின்)முன்னே எழுந்தருளி யருள்செய்த, ஆதி நாயகன்-(எல்லா வுயிர்கட்கும்)முதல்தலைவனுமாகிய திருமாலினது, அடி-திருவடிகளை, வணங்குவாம்-நமஸ்கரிப்போம்;(எ-று.)

விரதநாயகன்-விரதானுட்டானஞ் செய்வார்க்கு அவ்விரதங்கட்கு ஏற்றபடி அருள்செய்யுந் தலைவ னென்க. சீவகசிந்தாமணியில் "யானையு ளரசன்" என்றாற்போல, 'போதகாதிபன்' என உயர்திணைவாய்பாட்டாற் கூறினர்: இது, சிறப்புப்பற்றிவந்த திணைவழுவமைதி: சிறந்ததை அரசனென்றல், மரபு. ஆதிமூலம்-முதற்பொருள்களுக்கெல்லாம் முதற்பொருள்.

இதுமுதல் பதினைந்துகவிகள்-பெரும்பாலும்இரண்டு நான்கு ஆறுஞ்சீர்கள் விளச்சீர்களும்,மற்றையவை மாச்சீர்களுமாகிவந்த எண்சீராசிரியவிருத்தங்கள். (411)

**2.—வீமன் துணைவரையுந் தாயையும் கொண்டு ஒருவனஞ் சேர்தல்.**

**தோள்கரம்புறந்தன்னிலன்னையுந் துணைவர்நால்வருந்தொக்குவைகவே**
**கோள்கரந்தபஃறலையராவெனக் குகரநீணெறிக்கொண்டுபோயபின்**
**தாள்களின்கதித்தாள்பறிந்துவீழ் தருவனத்ததோர்சாரன்மன்னினன்**
**மூள்கடுங்கொடுஞ்சினவனற்கண்மா மும்மதக்களிறனையமொய்ம்பினன்.**

(இ-ள்.) மூள் கடு கொடு சினம் - (மனத்திற்) பற்றியெழுகிற மிகக்கொடிய கோபத்தையும், அனல் கண்-அக்கோபாக்கினியைச் சொரிகிற கண்களையும், மும் மதம் - மூன்றுவகை மதங்களையு முடைய, மா களிறு-பெரிய ஆண்யானையை, அனைய - ஒத்த, மொய்ம்பினன்-வலிமையையுடையவனான வீமசேனன்,—தோள் கரம் புறம் தன்னில்-(தனது) தோள்களிரண்டிலும் கைகளிரண்டிலும் முதுகு ஒன்றிலும், அன்னைஉம் துணைவர் நால்வர்உம் தொக்கு வைக-(தனது) தாயான குந்தியும் (தனது) உடன்பிறந்தவர் நால்வரும் பொருந்தியிருக்க, கொண்டு-எடுத்துக்கொண்டு,-கோள் கரந்த பல் தலை அரா என-வலிமையோடு (புற்றினுள்ளே) மறைந்துசெல்லுகிற பலதலைகளையுடையதொரு நாகம் போல, குகரம் நீள் நெறி - மலைக்குகைபோன்ற நீண்ட சுரங்கவழியாக, போய பின்-சென்றபின்பு,—தாள்களின் கதி-(தனது) கால்களின் நடைவேகத்தால், தாள் பறிந்து வீழ் - அடிபெயர்ந்து கீழ்விழப்பெற்ற, தரு-மரங்களையுடைய, வனத்தது-காட்டினது, ஓர் சாரல்-ஒரு பக்கத்தை, மன்னினன்-சேர்ந்தான்; (எ-று.)

மூன்றும் அடி - வீமனது வலிமையையும் விசையையுங் காட்டும். உடன்பிறந்தவரின் தலைகளும் தாயின் தலையும் வீமன் தலையும் ஒருசேர விளங்குகின்றமையின், பஃறலையராவை உவமை கூறினர். பாலபாரதத்தை நோக்குமிடத்துச் சாரலென்றவிடத்துச் சாசு என்று பாடமிருக்குமோ என்று கருதவேண்டியிருக்கிறது. குஹரம்-வடசொல். மும்மதம்-கன்னமிரண்டு, குறியொன்று ஆக மூன்றிடத்தினின்றும் பெருகுவன. புறந்தம்மில் என்றும் பாடம். (412)

**3.—அங்கு இடிம்பி வந்து வீமனைச் சில வினவுதல்.**

**அவ்வனத்தில்வாழரமடந்தையென்றையமெய்தவோரடலரக்கிவந்து**
**இவ்வனத்திலிந்நள்ளியாமநீயென்கொல்வந்தவாறிவர்கள்யாரெனச்**
**செவ்வனத்திதழ்க்கூரெயிற்றெழுந் தெண்ணிலாவினிற்றிமிரமாறவே**
**வெவ்வனற்சுடர்க்கொத்தவோதியாள் வீமசேனனோடுரைவிளம்பினள்.**

(இ-ள்.) வெம் அனல் சுடர்க்கு ஒத்த - வெவ்விய அக்கினியின் சுவாலைக்குச் சமமான, ஓதியாள் - செம்பட்டமயிரையுடையவளான, ஓர் அடல் அரக்கி-வலிமையையுடைய ஒரு இராக்கதப்பெண்,—அ வனத்தில் வாழ் அரமடந்தை என்று ஐயம் எய்த வந்து-அந்தக் காட்டில்வாழும் தெய்வமகளோ வென்று (பார்த்தவர்கள்) சந்தேகமடையும்படி (அருகில்) வந்து,—செம் வனத்து இதழ் கூர் எயிறு எழும் தெள் நிலாவினில் திமிரம் மாற - செந்நிறத்தையுடைய வாயிதழினுள் கூரிய பற்களினின்று வெளியெழுகிற தெளிவான சந்திரகாந்தி போன்ற வெள்ளொளியால் இருளொழிய,—'இ வனத்தில் இ நள் யாமம் நீ வந்த ஆறு என்கொல்-இக்காட்டில் இந்தநடுராத்திரியில் நீ வந்தவிதம் என்ன

காரணத்தாலோ? இவர்கள் யார்—?' என-என்று, வீமசேனனோடு உரைவிளம்பினாள்-வீமசேனனை நோக்கி வினவினாள்; (எ - று.)

'வெவ்வனற்சுடர்க்கொத்த வோதியாள்' என்றது-அவளது இயல்பாகவுள்ள வடிவை விளக்கும். 'அவ்வனத்தில் வாழா மடந்தை யென்றைய மெய்த வந்து' என்றது, மாயையினால் அழகிய வடிவமெடுத்து வந்தமை விளக்கும். பாலபாரதத்திற்கேற்ப, வனத்தில் வாழமடந்தை என்பதற்கு-வனதேவதை யென்று பொருள்கொள்ளலாம். அரமடந்தை - அமரமடந்தையென்பதன் விகாரம். திமிரம்-வடசொல். பீமஸேநன்-பயங்கரமான சேனைகளையுடையவன். மூன்றுமடியில். வனம்-வர்ணம்: வடசொல். (413)

4.—இதுமுதல் நான்குகவிகள் - வீமனுக்கு இடிம்பி கூறும் விடை.

யானும்வந்தவாறுரைசெய்கேனினக் குரைசெய்நீயெனக்கியார்கொலென்ன
தானுமங்கவன்றன்னொடோதுவா டழுவுமாதரந்தங்குசிந்தையாள் [னும்
ஊனுகந்துதின் றிடுமிடிம்பனென் றொருவனிங்கிராவணியையொத்துளான்
மானுடங்கொண்மெய்க்கந்தமூர்தலால் வரவறிந்தனன்வாளரக்கனே.

இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (அதுகேட்டு வீமன் அவளை நோக்கி), 'யான்உம் வந்த ஆறு நினக்கு உரை செய்கேன் - நானும் இங்கே வந்த வகையை உனக்குச் சொல்லுவேன்; நீ யார்கொல் எனக்கு உரை செய்-நீ யார்? (அதனை) எனக்கு முந்திச்சொல்வாய்,' என்னலும் - என்று கூறியவளவிலே, தழுவும் ஆதரம் தங்கு சிந்தையாள் தான்உம்-(அவனைப்) புணரும் ஆசை பொருந்திய மனத்தையுடைய அவ்விடிம்பியும், அங்கு அவன் தன்னொடு ஓதுவாள்-அப்பொழுது அவ்வீமனுடன் சொல்லுவாள்;—ஊன் உகந்து இன்றிடும் இடிம்பன் என்று-தசையை விரும்பியுண்கிற இடிம்பனென்று பேர்பிரசித்தனாய், ஒருவன் வாள் அரக்கன் - கொடிய ஓரிராக்கதன், இராவணியை ஒத்து-இராவணன் மகனான இந்திரசித்தைப் போன்று, இங்கு - இவ்வனத்தில், உளான்-இருக்கின்றான்; (அவன்),மானுடம் மெய் கொள் கந்தம் ஊர்தலால் - மனித சரீரத்தின் சம்பந்தமான வாசனை வீசுதலால், வரவு அறிந்தனன்-(உங்கள்) வருகையை அறிந்தான்; (எ-று.)

வீமனுக்கு விடைகூறலுற்றதன் காரணம், அவள் கொண்ட காதலே யென்பது தோன்ற, 'தழுவுமாதரந் தங்கு சிந்தையாள்' என்றார். ராவணி-வடமொழித் தத்திதாந்தம்; இவனது பலபராக்கிரமங்களும், மாயைவல்லமையும், கொடுமையும், இராமாயணத்தில் பிரசித்தம். வாள்-கொடுமைக்கு, இலக்கணை. 'ஒருவனுண்டிராவணியை' என்றும் பாடம். (414)

5. எம்முனேவலால்யான்மலைந்திடற்கெய்தினேனினைக்கொன்றுமென்பயன்
அம்மவெற்பிரண்டனையபொற்புயத் தழகெறிக்குநீடாரமார்பகேள் [ன்
கொம்மைவெம்முலைத்தெரிவையர்க்குளங்கூசுமாசைநோய்கூறுகிற்பதெ
எம்மனோர்களுஞ்சொல்வர்யானுனக் கெங்ஙனேகொலாமிறுதிகூறுகேன்.

(இ - ள்.) எம்முன் ஏவலால் - எனது தமையனான அவனது கட்டளையினால், யான் மலைந்திடற்கு எய்தினேன்-நான் (உங்களைப்) பொருதுகொல்லுதற்காகவே (முதலில்) வந்தேன்; நினைகொன்று உம் என் பயன்-உன்னைக் கொல்லுதலால்தான் (நான்) அடையும் பிரயோசனம் என்ன? வெற்பு இரண்டு அணைய பொன் புயத்து அழகு எறிக்கும் நீடு ஆரம் மார்ப-இரண்டுமலைகள் போன்ற அழகிய தோள்களையுடைய அழகுமிக்க நீண்ட இரத்தினமாலையை யணிந்த மார்பையுமுடையவனே! கேள் - (யான் சொல்வதைக் கேட்பாயாக: கொம்மை வெம் முலை தெரிவையர்க்கு-திரட்சியுள்ள விரும்பப்படுந் தனங்களையுடைய மகளிர்க்கு, ஆசை நோய் கூறு இற்பது-(தம்முடைய) காமநோயை(ப் பிறர்க்கு) எடுத்துச்சொல்லுதற்கு, உளம் கூசும்-மனம்நாணும், என்று—, எம் அனோர்கள் உம் சொல்வர்-(நாணமில்லாத) எம்மவர்களும் [அரக்கியர்களும்] சொல்லுவார்கள்; (அங்ஙனமாக), யான்—, உனக்கு—, எங்ஙனே-எப்படி, இறுதிகூறுகேன்-(என்கருத்தின்)முடிவைச் சொல்வேன்!

இராமாயணத்தில் "தாமுறு காமத்தன்மை தாங்களே யுரைப்பதென்பது, ஆமென லாவதன்று லருங்குல மகளிர்க்கம்மா" என்றது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. அம்மவென்பது-உரையசை. உன்னைக் கொல்லுதலன்று யான்கருதிய பயனென்பாள் 'நினைக்கொன்றுமென்பயன்' என்றாள். (415)

6. பெருஞ்சுழிப்படக் கரைபுரண்டெழப் பெருகும்யாறுபின் பிறழ் கலங்கல்போய், அருஞ்சுவைப்படுந் தெளிவினோடுசென் றாழிவேலைவா யணையுமாறெனப், பொருஞ்சினத்துடன் கொன்றுதின்றிடப் போதருந் தொழிற் பேதைநான்மெலிந்து, இருஞ்சிறைச்சுரும் பிசைகொண்மாலையா யின்பமாலுழந் துன்னையெய்தினேன்.

(இ-ள்.) இருஞ் சிறை சுரும்பு இசை கொள் மாலையாய்-பெரிய இறகுகளையுடைய வண்டுகள் கீதம்பாடப்பெற்ற பூமாலையையுடையவனே! பெரு சுழி பட கரை புரண்டு எழ பெருகும் யாறு-பெரிய சுழிகளுண்டாகவும் கரைபுரண்டு வெள்ளமெழவும் நீர்பெருகுகிற நதியானது, பின்-பின்பு, பிறழ் கலங்கல் போய்-மாறுபட்ட கலக்கம் நீங்கி, அரு சுவைபடும் தெளிவினோடுசென்று - அருமையான இன்சுவை பொருந்திய தெளிதலோடுபோய், ஆழி வேலைவாய் அணையும் ஆறு என-ஆழ்ந்தகடலிற் சேரும்விதம் போல,— பொரும் சினத்துடன் கொன்று தின்றிட போதரும் தொழில் பேதைநான்-மோதுகிற கோபத்துடனே கொன்று தின்னவந்த கொடுந்தொழிலையுடைய அறிவில்லாமகளாகிய யான், (பின்பு), மெலிந்து-அக்கடுமை நீங்கி, இன்பம் மால்உழந்து - காமமோகமடைந்து, உன்னை எய்தினேன்-உன்னை யடைந்தேன்; (எ-று.)

மழைக்காலத்திற் கலக்கத்தோடுபொருந்திய யாறு வெயிற்காலத்தில் கலக்கம் தணிந்து கடலிற் புகுவதுபோல, கோபத்தோடுவந்தயான் பின்பு கோபந்தணிந்து உன்னைச் சேர்ந்தேனென்றாள். எனக்கு நீயேகதியும் கொழுநனும் என்றனளென்க.

ஆசையோடு விரைந்துசார்ந்த வண்டுகளுக்குப் பசி தாகந்தீரும் படி தேனூட்டிக் களிப்புண்டாக்கும் மாலையுடைய நீ, ஆசையோடு விரைந்து உன்னைச்சேர்ந்த எனக்கு இந்நோயைநீக்கி மகிழ்ச்சி யளிப்பா யென்பாள், 'இருஞ்சிறைச்சுரும்பிசைகொள் மாலையாய்' என்றாள். (416)

**7. நீடியிங்குநானிற்கின்மாரனு நிருதனிற்கவந்நிருதன்வெம்மையோடு ஓடிவந்தெனைக்கொல்லுமும்மையு மொருகணத்திலேயுயிர்செகுத்திடும் நாடியென்கொன்மற்றுய்ந்துபோகலா நம்பியென்னை நீநலனுறத்தழீஇக் கோடியம்பரத்திடையெழுந்துனைக் கொண்டுபோவலோர்குன்றிலென்னவே.**

(இ-ள்.) நான் இங்கு நீடி நிற்கின்-நான் இவ்விடத்தில் நீட்டித்து நின்றால், மாரன் ஆம் நிருதன் நிற்க-மன்மதனாகிய இராக்கதன் (என்னைக் கொல்லுதற்கு அமைந்து) நிற்க, (அவனுக்கும் முந்தி), அ நிருதன்-அந்த இடிம்பனாகிய இராட்சசன், வெம்மையோடு ஓடி வந்து-கடுமையுடனே ஓடிவந்து, எனை கொல்லும்-என்னைக் கொல்லுவான்: உம்மைஉம் ஒரு கணத்தில் உயிர் செகுத்திடும் - உங்களையும் ஒருகணப்பொழுதிலே உயிர்நீக்கிவிடுவான்: நாடிமற்று என்கொல்-(அதனைக்குறித்து) வேறு சிந்தித்து ஆவதென்ன? உய்ந்து போகல் ஆம்-(ஒருபாயத்தால் நாம்) தப்பிச்செல்லலாம்: (எங்ஙனமெனின்),—என்னை நீ நம்பி நலன் உற தழீஇக் கோடி-நீ என்னை விரும்பி இன்பம்மிகத் தழுவிக்கொள்வாய்; அம்பரத்திடை எழுந்து உனை ஓர் குன்றில்கொண்டு போவல்-(நான்) வானத்திலெழும்பி உன்னை ஒருமலையினிடத்தே கொண்டுசெல்வேன், என்ன-என்றுசொல்ல,—(எ - று.)—'காளை இயம்பலும்' (9) என்று இயையும்.

என்னை நீ தழுவுதல், மன்மதனாகிய அரக்கனினின்று நானும், இடிம்பனாகிய அரக்கனினின்று நீயும்நானும் ஆகிய இருவரும் தப்பியுய்தற்குக் காரணமாமென்றாள். 'உம்மை' என்றது, மற்றைப் பாண்டவரையும் குந்தியையும் உட்படுத்து மென்னலாம். நம்பி யென்பதை ஆடவரிற்சிறந்தவனே யென அண்மைவிளியாக் கொள்ளினும் பொருந்தும். சிறிதும் இரங்காது வருத்துதலால், மன்மதனை 'அரக்கன்' என்றாள். 'மாரனுநிருபன்' என்றும் பாடம்.

8.—அவள்வேண்டுகோளை மறுத்து வீமன் தனது ஆண்மை கூறல்.

**இரக்கமின்றியேதனிவனத்திலே யிளைஞரெம்முன்யாயிவரைவிட்டெமைப் புரக்கவல்லளென்றொருமடந்தைபின் போவதாடவர்க்காண்மைபோதுமோ[ர் வரைக்கண்வாழ்வுகூர்நும்முனெம்முனே மலையவெண்ணிமேல்வந்தபோதுபா அரக்கனுகிலென்னவுணனுகிலென் னவனையோர்கணத்தாவிகொள்வனே.**

(இ-ள்.) இரக்கம் இன்றி-இரக்கமில்லாமல், வனத்தில் - காட்டிலே, இளைஞர் எம் முன் யாய் இவரை-எமது தம்பியர் தமையன் தாய்ஆகிய இவர்களை, தனி விட்டு-தனியே விட்டிட்டு, எமை புரக்க வல்லள் என்று ஒரு மடந்தைபின்போவது-எம்மைக்காக்கவல்லவ

ளென்பதுபற்றி ஒரு பெண்ணின் பின்னே செல்லுவது, ஆடவர்க்கு ஆண்மை போதும்ஓ-புருஷர்க்கு உரியஆண்திறமைக்குத் தகுமோ? [தகாதென்றபடி]; வரைக்கண் வாழ்வு கூர் நும்முன்-மலையில் வாழ்தல்பொருந்திய உன்தமையன், எம்முன் மலைய எண்ணி மேல் வந்தபோது-எமது எதிரே போர்செய்யக்கருதி எம் மேல் எதிர்த்து வரும்பொழுது, பார் - (நீ) காண்பாய்: அரக்கன் ஆகில் என் அவுணன் ஆகில் என் - இராக்கதனானாலென்ன அசுரனானாலென்ன? அவனை ஓர் கணத்து ஆவிகொள்வன்-அவனை ஒருகணப்பொழுதிலே உயிர்கவர்வேன்; (எ-று.)

'அரக்கனாகிலென் அவுணனாகிலென்' என்றது, அலக்ஷ்யத்தாற் கூறினது. அரக்கர், அவுணர்-பதினெட்டுத் தேவகணங்களுட் கொடிய சிலவகை. ஈற்று ஏகாரம்-தேற்றம்; மற்ற ஏகாரங்கள்-அசை. (418)

9.—இதுவும், அடுத்தகவியும்-இடிம்பன்தன்மையும் வரவுங் கூறும்.

**இடிம்பைதன்மனங்கொண்டகாளையிங் கிவையியம்பலுந் நவையிடிம்பனும்**
**கொடும்பெருஞ்சினங்கதுவுகண்ணினன் குருதிநாறுபுண்கூரெயிற்றினன்**
**உடம்புபெற்றதோரிருண்முகத்திலே யோரிரண்டுவெஞ்சுடருதிக்கவும்**
**நெடும்பிறைக்கொழுந்தோரிண்டுவா ணிலவெறிக்கவுந்நின்றநீர்மையான்.**

(இ - ள்.) இடிம்பை தன் மனம் கொண்ட காளை - இடிம்பையினது மனத்தை(த் தனது அழகினாற்) கவர்ந்த இளவீரனான வீமன், இங்கு இவை இயம்பலும்-கீழ்க்கூறிய இவ்வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிரா நின்றவளவிலே, கொடு பெருஞ்சினம்கதுவு கண்ணினன் - கொடியபெரிய கோபக்கனல் வெளித்தோன்றும் கண்களையுடையவனும், குருதி நாறு புண் கூர் எயிற்றினன்-இரத்தம்நாறப்பெற்ற தசைதோய்ந்த கோரதந்தங்களையுடையவனும், (அதனால்), ஓர் உடம்புபெற்றது இருள் - ஒருபுருஷவடிவத்தைப்பெற்ற இருளானது, முகத்திலே-(தன்) முகத்திலே, ஓர் இரண்டு வெம்சுடர் உதிக்கஉம் - வெவ்விய சூரியர் இருவர் தோன்றிவிளங்கவும், நெடு பிறைகொழுந்து ஓர் இரண்டு வாள் நிலவு எறிக்கஉம் - நீண்ட இளம்பிறைகளிரண்டு ஒளியுள்ள நிலாவை வீசவும், நின்ற-நின்றாற்போன்ற, நீர்மையான் - தன்மையையுடையவனாகிய, நவை இடிம்பன்உம் - குற்றங்களையேயுடைய இடிம்பனென்பவனும்,—(எ-று.)—'கூவிக் குறுகினான்' என வருங் கவியோடு முடியும்.

பின்னிரண்டடி - இல்பொருளுவமை. அவ்வரக்கனது மிகக்கரிய வடிவத்தை உடம்புபெற்ற இருளாகவும், அவன்முகத்திலுள்ள கோபாக்கினிச் சுவாலை வீசுகிற கொடிய சிவந்த இரண்டுகண்களை இரண்டு சூரியராகவும், அவனது கடைவாயில் வெளிப்பட்டு விளங்குகிற வளைந்தவெண்மையான இரண்டு கோரப்பற்களை இரண்டு பிறைகளாகவுங் குறித்தார்; இதனை, தன்மைத்தற்குறிப்பேற்றமென்னலாம். குருதியும்தசையும், தின்ற உடம்புகளினின்று பற்றியவை. 'புன்கூர்' 'வானிலவு' எனவும் பாடம். (419)

10. இடிபடுத்தெழுந்தெழிலிமின்னுமாறென்னநீடுகுன்றெதிரொலிக்கவே
வெடிபடச்சிரித்திருபுறத்துநா மிளிரவுட்புகைந்தொளிரும்வாயினன்
நெடில்படுத்தவெங்கானமெங்கணுந் நிழல்படுத்திவானுறநிமிர்ந்துளான்
கொடிபடுத்தநுண்ணிடையிடிம்பையைக்கூவியவ்விடைக்குறுகினனரோ.

(இ-ள்.) எழிலி-மேகம், எழுந்து-(வானத்தில்) எழுந்து, இடி படுத்து - இடியை வெளிப்படுத்திக்கொண்டு, மின்னும் ஆறு என்ன-மின்னும் விதம்போல, நீடு குன்று எதிர் ஒலிக்க வெடிபட சிரித்து-பெரியமலை பிரதித்தொனிசெய்யும்படி பெருமுழக்கமுண்டாகச் சிரித்து, இரு புறத்துஉம் நா மிளிர - இரண்டு வாயோரங்களிலும் நாக்குப் பிறழ்ந்துதோன்ற, உள் புகைந்து ஒளிரும்-உள்ளேபுகை கொண்டு விளங்குகிற, வாயினன் - வாயையுடையவனாய்,—நெடில்படுத்த வெம் கானம் எங்கண்உம் - மூங்கில்கள் அடர்ந்த வெவ்விய காடு முழுவதிலும், நிழல் படுத்தி - நிழலையுண்டாக்கிக்கொண்டு, வான் உற நிமிர்ந்துளான் - ஆகாயத்தையளாவ உயர்ந்து எழுந்தவனாய்,—கொடிபடுத்த நுண் இடை இடிம்பையை கூவி-பூங்கொடியை(த் தனக்கு ஒப்பாகாதென்று) கீழ்ப்படுத்திய நுண்ணிய இடையையுடைய இடிம்பையைக் கூப்பிட்டுக்கொண்டு, அ இடை குறுகினன் - அவ்விடத்தில் வந்து சமீபித்தான்; (எ - று.)

கரியபெரிய அரக்கனுக்குக் காளமேகமும், அவனது பெருஞ்சிரிப்பொலிக்கு இடிமுழக்கமும், நா மிளிர்வுக்கு மின்னலொளியும் உவமையெனக்காண்க. 'நெடிபடுத்த' என்றபாடத்துக்கு - சிள்விடுகள் பொருந்திய என்க. "கொழுநற் றொழு தெழுவாள்" என்றதில், 'தொழுது' என்றதற்குப்போல, 'இடிபடுத்து, நிழல் படுத்தி,கூவி' என்ற இறந்தகாலவினையெச்சங்களுக்கு நிகழ்காலப் பொருள் கொள்ளவேண்டும். வானுற நிமிர்ந்த பெருவடிவத்தாற் காடெங்கும் நிழலுண்டாகுமென்க. நாக்கைப் பிறழவைத்தல், கோபக்குறி. வாயினுட் புகைதல், கொடுமைபற்றியது. அரோ - ஈற்றசை. (420)

11.—இடிம்பன்வார்த்தை: தங்கையைக் கோபித்துக் கூறியது.

உணவினுசையாற்கொல்லவந்தநீ யுவகையாசையாலுள்ளழிந்திவன்
கணவனுமெனக்காதலிப்பதே கங்குல்வாணர்தங்கடனிறப்பதே
அணவுவெம்பசிக்கனலவிந்துபோ யனங்கவெங்கனற்கொளுமடற்புலிப்
பிணவையன்பினிற்கலைநயப்பதே பேதைமானுடன்பேசுகிற்பதே.

மூன்று கவிகள் - ஒரு தொடர்.

(இ-ள்.) உணவின் ஆசையால் கொல்லவந்த நீ - உணவில் விருப்பத்தாற் கொல்லுவதற்குவந்த நீ, உவகை ஆசையால் உள் அழிந்து-காமவிருப்பத்தால் மனமழிந்து, இவன் கணவன் ஆம் என காதலிப்பதுஏ - இவன் (எனக்குக்) கணவனாவனென்று ஆசைப்படுவதா! கங்குல் வாணர்தம் கடன் இறப்பதுஏ - இராக்கதர்க்குஉரிய முறைமையினின்று தவறுவதா! அணவு வெம் பசி கனல் அவிந்து போய்-பொருந்திய வெவ்விய பசித்தீ அடங்கிப்போக, அனங்க வெம் கனல் கொளும்-வெவ்விய காமாக்கினியைக் கொண்ட, அடல் புலி பிணவு-வலிமையையுடைய ஒரு பெண்புலி,

அன்பினில் கலையை நயப்பதுவே - ஓர் ஆண்மானை அன்பினால் விரும்புவதா! பேதை - அறிவில்லாதவளே! மானுடன் பேசுகிற்பதுவே-(அரக்கியாகிய உன்னோடு) ஒரு மனிதன் பேசுவதா?(எ-று.)

முன்னிரண்டடிகட்கு ஏற்ப அடற்புலிப்பிணவைக்கலை நயப்பதே என்ற இடத்து உருபுபிரித்துக்கூட்டப்பட்டது: எடுத்துக் காட்டுவமையணி. ஏகாரங்கள் நான்கும்-வினாவகையால், வியப்பையும் தகுதியின்மையையும்விளக்கும். 'உணவினுசையாற்கொல்ல வந்த நீ' என்றதனால்-நீ மானுடராற்சேர்த்துக்கொள்ளத்தக்கவளல்லையென்றும், 'கங்குல்வாணர்தங் கடனிறப்பதே' என்றதனால் இப்போது அரக்கராலும் பஹிஷ்காரஞ்செய்யத்தக்கவளானுயென்றும் அரக்கியை மருட்டியவாறு. கங்குல்வாணர்-இரவில் மிக்கவலிமையுடையராய்த் திரிபவர்: அரக்கர்க்கு வடமொழியில் 'நிசாசரர்' என ஒருபெயர் வழங்குதல் காண்க. இங்கே 'கங்குல் வர்ணர் கடன்' என்றது, மனிதரை உணவாக்கொள்ளுதலை. பிணவு-பெண்மைப்பெயர்; இது, பிண என்பதன் விகாரம். (421)

12.—இதுவும் அது: வீமனை நோக்கிய வீரவாதம்.

**வாரடாவுனக்கியாதுதானர்தம் மகளடுக்குமோவானமாதர்தோள்**
**சேரடாமலைந்துயிரைமெய்யினைத் தின்றுதேவரூர்சேருவிப்பன்யான்**
**போரடாதுனேடாளியேறுபுன் பூனைதன்னுடன்பொரநினைக்குமோ**
**பாரடாவெனுண்மையையரக்கர்கைப் பட்டபோதில்யார்பாரில்வைகினர்.**

(இ-ள்.) வார் அடா - அடேஎ! (போருக்கு) வா: உனக்கு—, யாதுதானர்தம் மகள்-இராக்கதப்பெண், அடுக்கும்ஓ-தகுவளோ? யான்—, மலைந்து-போர்செய்தழித்து, மெய்யினை தின்று - (உன்) உடம்பைத் தின்று, உயிரை-(உன்) உயிரை, தேவர் ஊர் சேருவிப்பன்-தேவலோகத்திற் செலுத்துவேன்: (அப்பொழுது அங்கு), வானம் மாதர் தோள் சேர் அடா-(உனக்கு உரியராகும்) தெய்வ மகளிரது தோளைத் தழுவடா;உனேடு போர் அடாது-உன்னுடன் போர்செய்தல் (எனக்குத்) தகாது: ஆளி ஏறு புல் பூனைதன்னுடன் பொர நினைக்கும்ஓ-ஆண்சிங்கம் எளிய பூனையுடனே போர் செய்ய நினைக்குமோ? என் ஆண்மையை பார் அடா - என்னுடைய வீரத்தைப்பாரடா; அரக்கர் கைபட்ட போதில் யார் பாரில் வைகினர் - இராக்கதரது கையில் அகப்பட்டபொழுது பூமியில் உயிருடன் இருந்தவர் ஆர்? [எவருமில்லை]; (எ - று.)

மூன்றுமடியில் எடுத்துக்காட்டுவமையணியும், நான்காமடியில் வேற்றுப்பொருள்வைப்பணியும் காண்க. போரிற் புறங்கொடாது இறந்தவர் வீரசுவர்க்கமடைந்து தேவமாதரைச் சேர்வரென்பது நூற்றுணிபு. வாஅடா என்பது எதுகைநோக்கி இடையில் ரகர மெய்விரிந்து 'வாரடா' என நின்றது. அடா - இகழ்ச்சிவிளக்கும் இடைச்சொல்; முன்னிலையாண்பால் விளியடையாய் வரும்; இதன் பெண்பால் - 'அடி'. யாதுதாநர் - வடசொல். யாதுவென்னும் ஒருபெயரையுடையவரென்று உறுப்புப் பொருள். (422)

**13.—இதுவும் வருங் கவியும் - வீமனுக்கும் இடிம்பனுக்கும் நிகழ்ந்த போர் கூறும்.**

**என்றுசீறிமற்றிவனடுத்தல்கண் டிணையிலாவிறற்றுணைவர்நால்வரும்**
**நின்றயாயுமற்றொருபுறத்திலே நிற்கமையல்கூர்நிருதவல்லியும்**
**வென்றிநல்குமாவந்தவிந்தைபோல் விழிபரப்பமேல்வீமசேனனும்**
**சென்றுகைகளாற்பற்களுவுடன் சிதறவாயினிற்சென்றுகுத்தினன்.**

(இ-ள்.) என்று-என்று சொல்லிக்கொண்டு, சீறி-கோபித்து, இவன்-இந்த இடிம்பன், அடுத்தல்-சமீபித்தலை, கண்டு—, இணை இலா விறல்துணைவர் நால்வர்உம் - ஒப்பில்லாத வலிமையை யுடைய உடன் பிறந்தவர் [பாண்டவர்] நால்வரும், நின்ற யாய் உம்-(கலங்கி) நின்ற தாயும் [குந்தியும்], மற்று ஒரு புறத்திலே நிற்க-வேறொரு பக்கத்திலே ஒதுங்கிநிற்க,—மையல் கூர் நிருத வல்லிஉம்-காம மயக்கம்மிக்க இராக்கதப்பெண்ணும் [இடிம்பியும்], வென்றி நல்கும் ஆ (று) வந்த விந்தைபோல்-(வீமனுக்கு)வெற்றியைக் கொடுக்கும்படி வந்த வீரலக்ஷ்மிபோல, விழி பரப்ப - கண்களைப் பரப்பிப் பார்த்துக்கொண்டுநிற்க,—வீமசேனனும்—, மேல் சென்று-(அவ்வரக்கனை) எதிர்த்துச் சென்று, பற்கள் நாவுடன் சிதற-(அவனுடைய) பற்கள் நாவோடு சிதறும்படி, கைகளால் வாயினில் சென்று குத்தினன்-(தன்னுடைய) கைகளால் (அவனுடைய) வாயிலே நெருங்கிக்குத்தினன்; (எ-று.)—மற்று-அசை.

வல்லி-பூங்கொடி: மகளுக்கு உவமவாகுபெயர். வீமனிடத்துக் காதல்கொண்ட இடிம்பை அப்பொழுது வீமன் இடிம்பனை வெல்ல வேண்டுமென்னுங் கருத்தோடு அவனது வெற்றியை எதிர் பார்த்து நின்றமையால், 'வென்றிநல்குமா வந்த விந்தைபோல் விழிபரப்ப' என்று குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. பழித்ததனால், வாயில் முதலி லடித்தான். (423)

**14. குத்தினனிவன் குணபவல்சிதன் கூர்நகக்கரங்கொண்டுவீமன்மேல்**
**மொத்தினன் முனைந்திருவரும்பொருர் முரணுடன்சினம்மூளமூளவே**
**தத்தினர்பிடுங்கியமரங்களாற்சாடினர்புயச் சயிலமொன்றொடொன்று**
**ஒத்தினரிரண்டம்புதங்கள்வா னுருமெறிந்ததொத்தோசைவிஞ்சவே.**

(இ-ள்.) இவன்-வீமன், குத்தினன்—; குணபம் வல்சி-பிணங்களை உணவாக வுடைய [அரக்கனாகிய] இடிம்பன், தன் கூர் நகம் கரம்கொண்டு-கூரிய நகங்களையுடைய தன் கையால், வீமன்மேல் மொத்தினன்-வீமனுடம்பில் அடித்தான்;(இங்ஙனம்),இருவர்உம்-இவ்விரண்டுபேரும், பொருர்-மனம்பொருதவர்களாய், முரணுடன் முனைந்து-வலிமையோடு முயன்று, சினம் மூள மூள-கோபம் மிக அதிகப்பட, தத்தினர் - பாய்ந்து தாக்கினர்கள்; பிடுங்கிய மரங்களால் சாடினர்-மரங்களைப் பெயர்த்தெடுத்து அவற்றைக் கொண்டு அடித்தார்கள்; இரண்டு அம்புதங்கள் வான்உரும் எறிந்தது ஒத்து-இரண்டுமேகங்கள் வானத்தில் இடியிடித்ததைப் போன்று, ஓசை விஞ்ச-ஒலிமிக, புயம் சயிலம் ஒன்றொடு ஒன்று ஒத்தினர்-மலைகள் போன்ற தோள்களை ஒன்றோடொன்று(படத்) தாக்கினர்கள்; (எ-று.)

குணபவல்சி யென்பது - பண்புத்தொகையன்மொழியாய், அரக்கனுக்கு ஒருகாரணக்குறியாயிற்று; குணபம் - வடசொல், வல்சி-சோறு. அம்புதம்-நீரைக் கொடுப்பது, மேகம்: வடசொல்.()

15.—வீமன் இடிம்பனை வதைத்தல்.

வளர்ந்த திண்கருங் குன்று காந்தளை மலர்வ தென்னவே வானகம்படக்
கிளர்ந்தசெம்புணீர்பொசியுமெய்யினன்கேதநெஞ்சினன்கோதவாய்மையன்
தளர்ந்துவிழ்நிசாசரனுமாடகன் றன்னையொத்தனன்பின்னைமுன்னுறப்
பிளந்த கோளரிதன்னை யொத்தனன் பிரதையென்னுமின் பெற்ற காளையே.

(இ-ள்.) வளர்ந்த திண் கருங் குன்று-ஓங்கிவளர்ந்த வலிய கரிய ஒருமலை, காந்தளை மலர்வது என்ன-செங்காந்தட்பூப் பூக்கப் பெற்றது போலவே, செம் புண் நீர் பொசியும்-சிவந்த இரத்தநீர் வழியப்பெற்ற, வானகம் பட கிளர்ந்த மெய்யினன்-ஆகாயத்தை அளாவ ஓங்கிவளர்ந்த உடம்பையுடையவனும், கேதம் நெஞ்சினன்-துன்பமுற்ற மனத்தை யுடையவனும், கோத வாய்மையன்-பழுதுபட்ட சபதத்தையுடையவனுமாய், தளர்ந்து வீழ்-சோர்ந்து கீழ் விழுந்த, நிசாசரன்உம்-இராக்கதனாகிய இடிம்பனும், ஆடகன் தன்னை ஒத்தனன்-இரணியாசுரனைப் போன்றான்: பின்னை-பின்பு, பிரதை என்னும் மின் பெற்ற காளை - பிரதையென்னும் பெண் [குந்தி] பெற்ற சிறந்தவீரனான வீமன், முன் உற பிளந்த கோள் அரி தன்னை ஒத்தனன்-முற்காலத்தில் (அவ்விரணியனை) நன்றாகப் பிளந்த வலிய நரசிங்கமூர்த்தியைப் போன்றான்; (எ - று.)

பாலபாரதத்தில் மதுவைக்கொன்ற திருமாலை வீமனுக்கு உவமையாகக் கூறியுள்ளது. வீமனைக்கொல்வே னென்று கூறிய இடிம்பன்வார்த்தை வீண்பட்டதனால், 'கோதவாய்மையன்' என்றார். குன்று (செங்) காந்தளைமலர்வது-ஒன்றனன்வினை மற்றொன்றன்மேல் ஏற்றப்பட்டது: உபசார வழக்கு. புண் நீர்-தசையின் சம்பந்தமான நீர். கோத - கோது என்னும் பகுதியின்மேற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். இரணியன் என்ற பெயர்-பொன் னிறமானவ னென்னும் பொருளதாதலால், ஆடகனென்றது - அதன் பரியாயநாமமாய் நின்றது. 'பிளந்தளந்த கோளரியை யொத்தனன்' என்றும் பாடமுண்டு. மின்-உவமவாகுபெயர். (425)

வேறு.

16.—அத்தகைய வீமனது ஆற்றலைக் குந்தி மகிழ்ச்சியோடு காண்டல்.

வன்றிற லிடிம்பனை வயக்கை யாலுடல்
ஒன்றிரண் டாகுமா றுடன்ற மைந்தனை
அன்றுகண் டனளியா யரியின் பேடுதன்
கன்றுதிண் கரிபொரக் கண்ட தென்னவே.

(இ - ள்.) வல் திறல் இடிம்பனை - மிக்கவலிமையையுடைய இடிம்பனை, வய கையால் - வலிய (தனதுவெறுங்) கைகளால், உடல் ஒன்று இரண்டு ஆகும் ஆறு உடன்ற-ஒருடம்பு இரண்டு துண்டாம்படி போர்செய்துபிளந்த, மைந்தனை-வீரனான வீமனை,—

அன்று-அப்பொழுது,—யாய்-தாயாகிய குந்தி, அரியின் பேடு-பெட்டைச் சிங்கம், தன் கன்று திண் கரி பொர கண்டது என்ன-தனது கன்றாகிய சிங்கக்குட்டி வலிய பெரிய யானையைப் பொருது அழிக்கக் கண்டதுபோல, கண்டனள்-(மகிழ்ச்சியோடு) கண்டாள்;

கன்று-இளமைப்பெயர்; இது சிங்கத்துக்கு உரிய தாதலை, "யானையும்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்து 'உரிய' என்றதனாற் கொள்க.

இதுமுதல் இருபத்திரண்டு கவிகள்-இச்சருக்கத்தின் முதற் கவி போன்ற கலிவிருத்தங்கள். (426)

**17.—அப்போது தருமன் முதலியோர் மகிழ்ச்சியும், இடிம்பியின் நிலையும்.**

இளைஞருந்தம்முனு மிவனரும்பகை
களைகுவனினியெனக் கண்களித்தனர்
விளைவுறுகாதலான் மெலிந்தபாவையும்
உளைவுடனுவகையு மொருங்கினெய்தினாள்.

(இ-ள்.) இளைஞர்உம் - தம்பியரான (அருச்சுனன் முதலிய) மூவரும், தம்முன்உம்-தமையனான தருமனும், இவன் இனி அரு பகை களைகுவன் என-இவ்வீமன் இனிமேல் அரிய (நமது) பகைவர்களை அழித்திடுவானென்று தெளிந்து, கண் களித்தனர்-கண் களிப்படைந்தார்கள்; விளைவுறு காதலால் மெலிந்த பாவைஉம் - மிக்க ஆசைநோயால் மெலிவடைந்த அழகிய பெண்ணான இடிம்பையும், உளைவுடன் உவகைஉம் ஒருங்கின் எய்தினாள்-வருத்தத்தோடு மகிழ்ச்சியையும் ஒருசேர அடைந்தாள்; (எ-று.)

தருமன்முதலியோர் மிகவலிய அரக்கனைக் கொன்ற செயலைக் கண்ணெதிரிற் கண்டதனால், வீமன் இனி அரியபெரிய பகைவரனைவரையுந் தவறாது கொல்வானென்று நிச்சயித்துக் களித்தனரென்க. தமையனிறந்ததனால் வருத்தமும், தன்னாற் கணவனாக வரிக்கப்பட்ட வீமனை இடையூறின்றிச் சேரலாமென்னும் ஓர் கருத்தினால் மகிழ்ச்சியும் இடிம்பிக்கு ஒருங்கு நிகழ்ந்தனவென்க. உளைவை முன்னும் உவகையைப் பின்னுமாக நிறுத்தியதனால், இவளுக்குச் சோகம் தோன்றிக் கழிய முந்திய காதலே நிலைத்து நின்றதென்க. (427)

**18.—சூரியோதய வருணனை.**

பெருந்திறனிசாசரப் பிணத்தையவ்வனத்து
இருந்துளபறவைகட் கிருள்செய்கங்குலின்
விருந்திடக்கொளுத்திய விளக்கெனும்படி
அருந்திசைபொலிவுற வருக்கன்றோன்றினான்.

(இ-ள்) பெருந் திறல் நிசாசரன் பிணத்தை-வலிமையையுடைய அவ்வரக்கனது உயிர்நீங்கியபேருடலை, அவனத்து இருந்துளபறவைகட்கு-அக்காட்டில்தங்கியுள்ள(பருந்துகழுகுமுதலிய) பறவைகளுக்கெல்லாம், இருள்செய் கங்குலின் விருந்து இட - இருளைச்செய்கிற அவ்விராப்பொழுதிலே விருந்துணவாக இடு

தற் பொருட்டு, கொளுத்திய-ஏற்றிய, விளக்குஎனும்படி—, அருக்கன்-சூரியன், அரு திசை பொலிவு உற-மேன்மையான கிழக்குத்திக்கு விளக்கமடையும்படி, தோன்றினன்-உதித்தான்; (எ - று.)

இரவு இருக்கையில் சூரியனாகிய விளக்குக் கொளுத்தப்படவே, அது பகலாய்விட்டதென்க; தற்குறிப்பேற்றவணி. (428)

19.—வீமனைச் சூரியனோடு உவமித்தல்.

கரங்களானிசாசர விருளைக்காய்ந்துகொண்டு
இரங்கிநீள்வனத்திடை யிரவின்மாழ்கிய
வரங்கொடாமரைமுக மலர்த்துநீர்மையால்
உரங்கொள்வீமனுக்கெதி ருதயபானுவே.

(இ - ள்.) கரங்களால் - (தனது) கைகளால் [தன்கிரணங்களால்], நிசாசர இருளை-அரக்கனாகிய இருட்டை [இரவிற்பொருந்தும் இயல்பினதாகிய இருட்டை], காய்ந்துகொண்டு-அழித்து,— நீள் வனத்திடை இரவில் இரங்கி மாழ்கிய வரம் கொள் தாமரை முகம் மலர்த்தும் நீர்மையால்-பெரிய காட்டிலே இராப்பொழுதிலே (இவனுக்கு என்னாகுமோவென்று) பரிதபித்து வாடிய (தருமன் முதலியோரது) மேன்மைகொண்ட தாமரைமலர் போன்ற முகத்தை (மகிழ்ச்சியால்) மலரச்செய்யுந் தன்மையினால் [பெரியநீர்நிலையிலே இரவில் குவிந்து வாடிய மேன்மைகொண்ட தாமரை மலர்களின் இதழை மலர்த்துந் தன்மையினால்],—உதயம் பானு-உதித்த சூரியன், உரம் கொள் வீமனுக்கு எதிர்-வலிமைகொண்ட வீமனுக்கு ஒப்பாவன்; (எ - று.)

இங்குச் சூரியனுக்கும் வீமனுக்கும் ஒப்புமையைச் சொற்பொதுமை கொண்டு காட்டியதனால், செம்மொழிச்சிலேடையுவமையணி; 'தாவதுத்திதகர: தமோமயம்-ராக்ஷஸம்விசகலய்யபாநுமாந் | பீமஸேநஇவ பார்த்த மாநஸாநி-அம்புஜாநி தத்ருசே விகாஸயந்'' என்றது, பாலபாரதம். கரமென்பது-கையுங் கிரணமும். வனமென்பது-காடும் நீருமாம். 'காய்ந்து கொண்டு' என்பதில் 'கொண்டு' என்பது-அசைநிலை. (429)

20.—வீமன் இடிம்பையின் குறிப்பை நோக்குதல்.

எண்டகுகவர்மனத் திடும்பைமன்மதன்
மண்டெரிசுடுதலின் வாடுமேனியள்
கொண்டவெங்காதலின் குறிப்பையவ்வழிக்
கண்டனன்காணலற் செற்றகாளையே.

(இ - ள்.) மண்டு மன்மதன் எரி சுடுதலின் - மிக்க காமனாகிய அக்கினி சுடுதலினால், வாடும்-வாட்டமுற்ற, மேனியள்-மேனியையுடையளாகிய, எண் தகு கவர் மனத்து இடிம்பை-ஆலோசனை மிக்க கவர்த்த [சஞ்சலப்பட்ட] மனத்தையுடைய இடிம்பை, கொண்ட-(தன்மீது) கொண்ட, வெம் காதலின்-வெவ்விய ஆசையினது, குறிப்பை—, காணலன் செற்ற காளை - பகைவனாகிய இடிம்பனைக் கொன்ற வீமன், அ வழி கண்டனன்-அப்போது நோக்கினான்; (எ - று.)

தமையனைக் கொன்றபின்பும் காதல் கைவிஞ்சி 'என்னை இவன் மணப்பனோ, மாட்டானோ?' என்று கவலைகொண்ட இடிம்பையின் நிலைமையை அப்போது வீமன் கவனித்தா

னென்க. காமத்துக்கு உரிய தலைவன் மன்மத னாதலால், 'மன் மதனெறி' எனப்பட்டது; இச்சருக்கத்துப் பதினோராங்கவியில் "அனங்கவெங்கனல்" என வந்ததுங் காண்க. (430)

21.—வீமன் இடிம்பையை மணம் மறுத்தல்.

மாய்ந்தவன்றுணைவிகேள் வதுவையின்னமும்
ஏய்ந்திலனெம்முனும் யாங்கண்மானிடர்
ஆய்ந்துகொண்முறைமையா லரக்கர்பாவைநீ
காய்ந்தமையறிதிமுன் கணையிராமனே.

(இ-ள்.) மாய்ந்தவன் துணைவி - இறந்தவனான இடிம்பனது தங்கையே! கேள்—: எம் முன் உம்-எங்கள் தமையனும், இன்னம் உம் வதுவை ஏய்ந்திலன்-இன்னமும் மணஞ்செய்திலன்; (அன்றியும்), யாங்கள் மானிடர்-நாங்கள் மனிதர்; நீ அரக்கர் பாவை - நீ இராக்கதப்பெண்: முறைமையால் ஆய்ந்து கொள் - (இவற்றை) முறைமையால் ஆராய்ந்து (நான்உன்னைமணஞ்செய்தல் தகுதியன்றென்று) கொள்வாய்; (மற்றும்), முன்-முற்காலத்தில், கணை இராமன்-அம்பு செலுத்தலில்வல்ல [க்ஷத்திரியவீரனான] ஸ்ரீராம பிரான், காய்ந்தமை - (சூர்ப்பணகை யென்னும் இராக்கதப் பெண்ணை மணம்மறுத்து) வெறுத்ததனை, அறிதி-அறிவாயாக; —(எ-று.)—என்று இடிம்பையை நோக்கி வீமன் கூறினனென்க.

'மாய்ந்தவன் துணைவி' என்ற விளி, உடன்பிறந்தவன் இறந் ததுபற்றி நீ சோகிக்கவேண்டிய காலத்தில் அவனைக்கொன்ற என்னைக் காதலித்து மணஞ்செய்யக் கருதுதல் அடாது என்ற குறிப்பினது. 'தமையன் விவாகமின்றியிருக்கையில் தம்பி விவா கஞ் செய்துகொள்ளலாகாது' என்ற தருமசாஸ்திரக்கொள் கையை, 'வதுவை இன்னமும் ஏய்ந்திலன் எம்முன்' என எடுத் துக் கூறினான். அரக்கரை மனிதர் மணக்கலாகா தென்பதை "வருத்த நீங்கரக்கர் தம்மின் மானுடர் மணத்தல் நங்கை, பொருத்தமன் றென்று சாலப் புலமையோர் புகல்வர்" என்ற இராமாயணத்தாலும் அறிக. ராமலட்சுமணரைக் காதலித்த சூர்ப்பணகை அங்க பங்கப் பட்டசெய்தி, ராமாயணத்திற் பிர சித்தம். (431)

22.—இதுவும், அடுத்தகவியும் - குளகம்: இடிம்பையை மணக்கும்படி வீமனுக்குக் குந்தி அநுமதி செய்தல்.

ஆசைகொளரக்கியோ டனிலன்காதலன்
பேசியகட்டுரை கேட்டபெற்றதாய்
ஓசைகொண்மைந்தரோ டுசாவிநண்பினுல்
ஏசறவுரைத்தன ளினிமைகூரவே.

(இ - ள்.) ஆசை கொள் அரக்கியோடு - (தன்மீது) காதல் கொண்ட இடிம்பையுடனே, அனிலன் காதலன்-வாயுகுமாரனான

வீமன், பேசிய—, கட்டுஉரை-உறுதிமொழிகளை, கேட்ட—, பெற்ற தாய்-(வீமனைப்) பெற்ற தாயான குந்தி, ஓசைகொள் மைந்தரோடு உசாவி-புகழ்பெற்ற தனதுமற்றைக்குமாரர் நால்வருடனும் கலந்து ஆலோசித்து, நண்பினால்-அன்பினால், ஏசு அற - குற்றம் நீங்க, இனிமை கூர-இனிமைமிக, உரைத்தனள்-(வீமனைநோக்கிச் சில) கூறினாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த கவியிற் காண்க.

நண்பினால் என்பதற்கு-அவர்களுடைய மனவொற்றுமையால் என்க. பாலபாரதத்தில் "பாண்டுஸூநுருபலப்யமாத்ருத:***பீமமாப்ரஸவம்ஆதிசத்ஸ-ுநீ:" என்று வருவதற்கு ஏற்பவும், "உறத்தகும் இவளை நீ யும்முன்வாய்மையால்", "அன்னையுந் தம்முனுமறைந்த வாசகம்" என்று மேற்செய்யுள்களில் வருவதற்கேற்பவும் 'மைந்தனோடுசாவி' என்று பாடம்இருக்கலாம். (432)

**23.** மறுத்துரைப்பதுகட னன்றுமாந்தருக்கு
அறத்தியலார்கணு மமைதல்வேண்டுமால்
உறத்தகுமிவளைநீ யும்முன்வாய்மையால்
கறுத்தவருயிர்கவர் காளையென்னவே.

(இ-ள்.) 'கறுத்தவர் உயிர் கவர் காளை-கோபித்த பகைவர்களுடையஉயிரை (உடம்பினின்று) கவர்கிற மகனே! மறுத்து உரைப்பது கடன் அன்று-(தம்மிடத்துக் குறைவேண்டியவரை) மறுத்துப்பேசுவது முறைமையன்று; மாந்தருக்கு ஆர்கண்உம் அறத்து இயல் அமைதல் வேண்டும் - மனிதர்க்குஎவரிடத்தும் தருமத்தினியல்பு பொருந்தவேண்டும்; உம்முன் வாய்மையால் இவளை நீ உற தகும்-உனதுதமையன்சொற்படி இவளை நீ மணஞ்செய்தல் தகும்,' என்ன-என்று,—(எ - று.)—'உரைத்தனள்' (22) என கீழ்க் கவியோடு இயையும். ஆல்-ஈற்றசை.

தமையன் விவாகமின்றியிருக்கையிலும் அவன் அனுமதி செய்தால் தம்பி மணஞ்செய்துகொள்ளலா மென்பது நூற் கொள்கை யாதலால், 'இவளை நீ உம்முன்வாய்மையால் உறத்தகும்' என்றாள். பகைத்தவரை அழித்தல் போலவே அன்பு கொண்டு சரணமடைந்தவரை ஆதரித்து அருள்வதும் தகுதி என்பாள் 'கறுத்தவருயிர்கவர் காளை மறுத்துரைப்பது கடனன்று' என்றும், இம்முறைமையை அரக்கர்விஷயத்திலும் ஒழியலாகா தென்பாள் 'மாந்தருக்கு அறத்தியல் ஆர்கணும் அமைதல் வேண்டும்' என்றுங் கூறினாள். (433)

**24.—வீமன் அதற்கு உடன்படுதலும், அனைவரும் நீராடுதலும்.**

அன்னையுந்தம்முனு மறைந்தவாசகம்
முன்னையின்மறையென முடியிற்சூடினன்
பின்னையுமுடன்கொடு போந்துமேவுநீர்
தன்னையுங்கண்டதிற் றுளைந்துதங்கினார்.

(இ-ள்.) அன்னைஉம் தம்முன்உம் அறைந்த வாசகம்-தாயும் தமையனும் சொன்ன வார்த்தையை, (வீமன்), முன்னையின் மறை என முடியில் சூடினன்-பழமையான வேதவாக்கியத்தைப்

போலத் தலைமேற் கொண்டு கௌரவித்தான்: (பின்பு அவர்க ளெல்லோரும்), மின்னை உம் உடன் கொடுபோந்து-மின்னல் போன்ற இடிம்பையையும் உடனழைத்துக்கொண்டு சென்று, மேவு நீர் தன்னை உம் கண்டு-(அங்குப்) பொருந்திய ஒரு நீர்நிலையை யுங் கண்டு, அதில் துளைந்து-அதில் மூழ்கி, (அதன்கரையில்), தங்கினார்—;(எ-று.)

கீழ்ச் சூரியோதயங் கூறினவர், இங்கு, அவர்கள் காலைக் கடன் முடித்தல் கூறினரென்க. நீராடியது கூறினமை, மற்றைக் கடமைகளுக்கும் உபலக்ஷணமாம். இடிம்பனைக்கொன்று இடிம்பை யைப்பெற்றபின் சாலிகோத்திரசரஸைப் பாண்டவ ரடைந்தன ரென்று நூல்கள் கூறும். (434)

**25.—அங்கு வியாசமுனி எழுந்தருள, பாண்டவர் உபசரித்தல்.**

அத்தினத்தவர்வயி னவலநீக்குவான்
மெய்த்தவப்பழமறை வியாதன்வந்தனன்
பத்தியிற்சிறுவரும் பணிந்துபோற்றினர்
முத்திபெற்றவரினு முற்றுஞ்சிந்தையார்.

(இ-ள்.) அ தினத்து - அந்நாளில், அவர்வயின் அவலம் நீக்குவான்-அவர்களுக்குநேர்ந்த வருத்தத்தை நீக்கும்பொருட்டு, மெய் தவம் பழமறைவியாதன் வந்தனன்-உண்மையான தவத்தை யுடையவனும் பழமையான வேதங்களை வகுத்தருளியவனு மாகிய வியாசமுனிவன் (அங்கு) வந்தருளினான்; (அதுகண்டு), சிறுவர் உம்-இளம்பிள்ளைகளான பாண்டவர்களும், முத்தி பெற்றவரின் உம் முற்றும் சிந்தையார்-மோக்ஷமடைந்தவர்களினும் (ஆனந்தம்) மிக்கமனத்தையுடையவர்களாய், பத்தியின் பணிந்து போற்றி னார்-பக்தியோடு (அவனை) வணங்கித் துதித்தார்கள்; (எ-று.)

அவலம் நீக்குதல்-துரியோதனனது சூழ்ச்சியால் நேர்ந்த மனவருத்தத்தைத் தணித்தல். மெய்த்தவம் - ஒழுக்கத்திலும் பயனிலும் தவறாத தவம். 'முந்துஞ் சிந்தையார்' என்றும் பாடம். (435)

**26.—வியாசன் பாண்டவர்க்குக் கூறிய நன்மொழி.**

தனிவனமிகந்துநீர் சாலிகோத்திர
முனிவனஞ்சிலபகல் வைகிமுந்துற
மனனுறப்பார்ப்பன மாக்களாகியே
இனிமையின்வேத்திர கியமெய்துவீர்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீர்-நீங்கள், தனி வனம் இகந்து - தனிமையான காட்டைக் கடந்து, முந்துற-முந்தி, சாலிகோத்திர முனி வனம் சில பகல் வைகி-இங்குள்ளசாலிகோத்திரனென்னும் முனிவனது வனத்தில் சிலநாள் இருந்து, (பின்பு), மனன் உற பார்ப்பனமாக் கள் ஆகி-(கண்டார் எவரும்) மனத்தால் நம்பும்படி பிராமண வேடங்கொண்டு, வேத்திரகியம் இனிமையின் எய்துவீர்-வேத்திர கியத்தை இனிது சேர்வீராக; (எ - று.)

தனிவனம்-மநுஷ்யசஞ்சார மில்லாத வனம். துரியோதனுதி யரால் இன்னா ரென்று அறிந்து இடரிழைக்க வொண்ணாதபடி வேற்றுவேடங்கொள்ளச் சொல்லின னென்க. புருபுண்ணிய

னென்னும் முனிவன் இல்லறம் நடத்துகையில் பிள்ளையில்லாக் குறையால் சாஸ்திர விதிப்படி சாலியஜ்ஞத்தைப் புரிகையில் பிரதியட்சமான திருமாலின் அநுக்கிரகத்தாற் பிறந்த குமாரனுக்குச் சாலிகோத்திரனென்ற பெயர் அத்திருமால் கட்டளையின்படி வைக்கப்பட்டது என வரலாறு அறிக; சாலிஹோத்ரன்-சாலியென்ற நெல்லின் ஹோமத்தினால் தோன்றியவன். (436)

27.—பாண்டவர்கள் சாலிகோத்திரவனம் சேர்தல்.

எனத்தமபடரொழித் திமையவன்செல
வனத்தைவிட்டவ்வன மருவிவைகினர்
வினைப்படுத்தியாழினோர் முறையின்வேள்விசெய்
கனக்குழற்கன்னிதன் காதலானொடே.

(இ-ள்.) என - என்றுசொல்லி, தம படர் ஒழித்து - தங்களுடைய மனத்துயரத்தை நீக்கி, இமையவன்-வியாசமாமுனிவன், செல-செல்ல,—(தருமன் முதலியோர்)—வினை படுத்து - மேற்செய்யவேண்டிய தொழிலில் மனம்பொருந்தி,—யாழினோர் முறையின்-காந்தருவமுறைப்படி, வேள்விசெய் - மணஞ்செய்த, கனம் குழல் கன்னிதன்-மேகம்போன்ற கரிய கூந்தலையுடைய இளம்பெண்ணான இடிம்பியினது, காதலானொடே - கணவனான வீமனுடனே,—வனத்தை விட்டு-அவ்விடிம்பவனத்தைவிட்டு, அ வனம் மருவி வைகினர்-அந்தச் சாலிகோத்திரமுனிவனத்தைச் சேர்ந்து அங்கு வசித்தார்கள்; (எ-று.)

நல்வினைப்பயனால் தனியே ஒருவரையொருவர் சந்தித்துக் கூடுகிற கந்தர்வர்களின் வழக்கத்தைத் தழுவிய மணமாதலால், இது, காந்தர்வ மென்று பெயர்பெறும்: இதற்கு'யாழோர்கூட்டம்' என்று தமிழிற் பெயர். கந்தர்வர் வீணைகைக்கொண்டு இசைபாடுந் தன்மைய ராதலால், 'யாழினோர்' எனப் பட்டனர். திருமாலின் திருவவதாரமூர்த்தி யாதலால், வியாசன், 'இமையவன்' என்று சிறப்பித்துக் கூறப்பட்டான். அன்றியும், சிறந்த முனிவர் சிறுபான்மை 'கடவுளர்' என வழங்கப்படுவர். இடிம்பை அழகிய வடிவங்கொண்டு வந்ததனால். 'கனக்குழற்கன்னி' எனப்பட்டாள்:

28.—இதுவும், அடுத்த கவியும்-குளகம்: வீமனும் இடிம்பியும் உல்லாசமாகக் கூடிக்குலாவல்.

குந்தியையிரவுநன் பகலுங்கோதிலா
வந்தணைபுரிதலின் மகிழிடிம்பையும்
வெந்திறல்வீமனும் விழைந்துவள்ளியும்
கந்தனுமெனப்பெருங் காதல்கூரவே.

(இ-ள்.) இரவுஉம்-இராத்திரியிலும், நல்பகல்உம்-நல்ல பகற்காலத்திலும் [எப்பொழுதும் என்றபடி], குந்தியை-(தனது மாமியாகிய) குந்திதேவிக்கு, கோது இலா வந்தணை புரிதலின் - குற்றமில்லாத வந்தனை வழிபாடுகளைச் செய்தலிலே, மகிழ் - மகிழ்ச்சிகொண்ட, இடிம்பையும்—, வெம் திறல்-(பகைவர்க்குக்) கொடிய வலிமையையுடைய, வீமனும்-,வள்ளிஉம் கந்தன்உம் என-வள்ளி

யம்மையும் முருகக்கடவுளும்போல, விழைந்து-(ஒருவரை யொருவர்) விரும்பி, பெரு காதல் கூர-மிக்க அன்பு வளர,—(எ-று.)—'மணம் புணர்ந்தனர்' என வருங் கவியோடு முடியும்.

முருகக்கடவுள் வள்ளிமலையில் வந்து அங்குவளர்ந்துவந்த வள்ளியம்மையைக் காந்தருவமணம்புணர்ந்துமலைச்சாரலில்சுனைக் கரையிலும் தினைப்புனத்திலும் மலர்ப்பொழிலிலும் அவளுடன் கூடிக்குலாவியமை, புராணங்களிற் பிரசித்தம். வள்ளி - முருகக் கடவுளின் மனைவியரிருவருள் ஒருத்தி; (மற்றொருத்தி - தேவயானை.) வள்ளிக்கிழங்கு தோன்றிய குழியிலே பிறந்தமை பற்றி, இவளுக்கு வள்ளியென்று பெயர். (438)

29. மான்மதங்கமழ்கொடி மந்திரந்தோறும்
கான்மணங்கமழ்தடங் காவகந்தோறும்
தேன்மிகுஞ்சுனைநெடுஞ் சிலம்பகந்தோறும்
மேன்மணம்புணர்ந்தனர் வேட்கைவிஞ்சவே.

(இ-ள்.) மான்மதம் கமழ்-கஸ்தூரிமணம் வீசப்பெற்ற, கொடி மந்திரம் தொறுஉம்-கொடிவீடுகளிலும், கான் மணம் கமழ்-மிக்க நறுமணம் வீசுகிற, தட கா அகம் தொறுஉம்-பெரியசோலைகளினிடங்களிலும், தேன் மிகும் சுனை-தேன்மிக்க சுனைகளையுடைய, நெடு சிலம்பு அகம் தொறுஉம்-பெரிய மலைகளினிடங்களிலும், வேட்கை விஞ்ச-ஆசைமிக, மேல் மணம் புணர்ந்தனர்-மேன்மையான கலவியின்பத்தை அனுபவித்தார்கள்; (எ-று.)

மான்மதம்-கஸ்தூரியென்னும் ஒருசாதிமானினது கொழுப்பு: இது, குறிஞ்சி நிலப்பொருள்களுள் ஒன்றாதலின், இங்குக் கூறப்பட்டது. கொடிமந்திரம்-பூங்கொடிகளின் படர்ச்சியால் வீடுபோல் அடர்ந்த இடம்; லதாக்ருஹ மெனப்படும். சுனையில்தேன், நீர்ப்பூக்களினின்றும் கரைமரங்களினின்றும் பெருகியவை. 'மணம் புரிந்தனர்' என்றும் பாடம் உண்டு. (439)

30.—இடிம்பை கடோற்கசனென்ற மகனைப் பெறுதல்.

நிறந்திகழிருட்பிழம் பென்னநீண்டறப்
புறந்தருமுரோமமும் பொருப்புத்தோள்களும்
மறந்தருகனைகுரல் வாயுமாகவே
பிறந்தனன்கடோற்கச னென்னும்பேரினன்.

(இ-ள்.) அற புறம் தரும் உரோமம்உம்-மிகுதியாக முதுகிலே பொருந்திய மயிர்களும், பொருப்பு தோள்கள்உம் - மலைகள் போன்ற தோள்களும், மறம் தரு கனை குரல் வாய்உம் ஆக-பெரு வலிமையைக் காட்டுகிற கர்ச்சிக்கும் ஒலியையுடைய வாயும் பொருந்த,—நிறம் திகழ் இருள் பிழம்பு என்ன நீண்டு - கருநிறம் விளங்குகிற இருளின் தொகுதிபோல(க் கரிய தாய்)வளர்ந்த வடிவமுடையனாய்,—கடோற்கசன் என்னும் பேரினன் - கடோத்கசனென்னும் பெயரையுடைய மகன், பிறந்தனன் - (இடிம்பையினிடம்) தோன்றினான்; (எ - று.)

கடம்-குடம்: உத்கசம்-மயிரில்லாதது: இவனுடைய, குடம் போன்றதலை மயிரின்றி யிருந்ததனால், கடோத்கசனென்று

இவனுக்குப் பெயரிடப்பட்டதென்று வடநூல் கூறும். 'இருப் பிழம்பென்ன நீண்டு' என்று அவனது கரியபெரியவடிவுக்கு உவமைகூறினர். (440)

31.—கடோற்கசன் பாண்டவரை வணங்குதல்.

காதியதிறல்நர காசுரன்றனை
ஆதிவெங்கோலமன் றளித்தவாறுபோல்
மேதினிமதித்தபோர் வீமனல்கிய
சோதியம்புதல்வனுந் தொழுதுசொல்லுவான்.

(இ-ள்.) வெம் ஆதி கோலம்-வெவ்விய ஆதிவராக மூர்த்தி, காதிய திறல் நரகாசுரன் தனை-(அனைவரையும்) தாக்கியழிக்கவல்ல வலிமையையுடைய நரகாசுரனை, அன்று-அக்காலத்தில் [முன்பு], அளித்த ஆறுபோல்-பெற்ற விதம்போல, மேதினி மதித்த போர் வீமன் நல்கிய-பூமியிலுள்ளோர் யாவரும் கொண்டாடும் போரை யுடைய வீமன்பெற்ற, சோதி அம் புதல்வன் உம்-ஒளியையுடைய புத்திரனான கடோற்கசனும், தொழுது சொல்லுவான் - (பாண்ட வர்களை) வணங்கி (அவரைநோக்கிச்) சொல்லுவான்; (எ-று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க.

பிரளயசலத்தில் முழுகியிருந்த பூமியைத் திருமால் வராகாவ தாரஞ்செய்தருளிக் கோட்டு நுனியாலே பூமியை யெடுத்த பொழுது அத்திருமாலினது பரிசத்தாற் பூமிதேவியினிடம் ஒரு குமாரன் பிறந்தனனென்றும், அஸமயத்திற் சேர்ந்து பெறப்பட் டதனால் அவன் அசுரத்தன்மைபூண்டு நரகனென்று பெயர் பெற்று எல்லாப்பிராணிகளையும் மிகவும் வருத்திவந்தன னென் றும், பின்பு அவனைத் திருமால்தானே க்ருஷ்ணவதாரத்திற் கொன்றருளின னென்றும் உணர்க. முன்னொருகாலத்திற் சிவ பிரான் அளித்த வரத்தின்படி, இராக்கத ஸ்திரீகளுக்குப் பிறக் கும் பிள்ளைகள் பிறந்தபொழுது தாயினவ்வளவு பருவவளர்ச்சி யுறுதலால், கடோத்கசன் பிறந்தவுடனே பாண்டவரைத் தொழுது பேசுவானுயினனென அறிக. சோதியம் புதல்வன், அம்-சாரியை. (441)

32.—பாண்டவரிடம் விடைபெற்றுக் கடோற்கசனும் இடிம்பியும் சேறல்.

நிறையுடைத்தந்தையர் நீர்நினைத்தபோது
உறைவிடத்தெய்தியாங் குரைத்தசெய்குவேன்
இறைவரிப்பணிவிடை தருகென்றேகினன்
பிறையெயிற்றியாயொடும் பெற்றபிள்ளையே.

(இ-ள்.) 'நிறை உடை தந்தையர் - நற்குணநிறைவையுடைய தந்தையர்களே! நீர் நினைத்த போது-நீங்கள் (என்னை) நினைக்கும் பொழுது, உறைவு இடத்து எய்தி-(நீங்கள்) வசிக்குமிடத்தில் (நான்) வந்து, ஆங்கு உரைத்த செய்குவேன்-அவ்விடத்து (நீங் கள்) சொன்னவற்றைச் செய்வேன்; இறைவர்-தலைவர்களே! இ பணிவிடை தருக-இந்தக்கட்டளையையும் விடையையும் (எனக் குத்) தந்தருள்வீராக', என்று - என்றுவேண்டி,—பிறை எயிறு யாயொடு உம்-பிறைச்சந்திரன் போன்ற கோரதந்தங்களையுடைய

(தன்) தாயாகிய இடிம்பையுடன், பெற்ற பிள்ளை-அவள்பெற்ற மகனுன கடோற்கசன், ஏகினுன்-(இடிம்பவனத்துக்குச்) சென் ருன்; (எ-று.)

வீமன், இடிம்பையை மணக்கும்போது கூறிய வாக்குப்படியே மகன் பிறந்தபின் அவள் அவனைவிட்டு நீங்கின ளென்பதை, முத னூலால் அறிக. இங்கே, 'பிறையெயிற்றியாய்' என்றது, அவளது இயல்பாகிய அரக்கிவடிவத்தை. 'இறைவ' என்றும், 'இப்படி விடைதருக' என்றும் பாடமுண்டு. (442)

**33.—பாண்டவர் பிராமணவேடங்கொண்டு வேத்திரகீயஞ் சார்தல்.**

சாத்திரமறைதெரி முனிவர்தன்மையின்
காத்திரமாறியக் காவல்வேந்தரும்
கோத்திரஞ்சூத்திரங் குடியுரைத்துளார்
வேத்திரகீயமா நகரின்மேயினுர்.

(இ-ள்.) அ காவல் வேந்தர்உம்-(பூமிமுழுவதையுங்) காக்குந் தொழிலுக்கு உரிய அரசர்களாகிய அந்தப்பாண்டவர்களும், சாத் திரம் மறை தெரி முனிவர் தன்மையின் காத்திரம் மாறி-சாஸ்திரங் களையும் வேதங்களையும் அறிந்த அந்தணர்களுடைய வேடமாக வடிவம்மாறி, கோத்திரம் சூத்திரம் குடி உரைத்துளார் - (அவ் வேடத்திற்கு ஏற்றபடி) ஒரு கோத்திரத்தையும் சூத்திரத்தையும் குடிப் பெயரையும் கற்பித்துச் சொல்லிக்கொண்டு, வேத்திரகீயம் மா நகரில்—, மேயினுர்-போய்ச் சேர்ந்தார்கள்; (எ-று.)

வேத்திரகீயநகரத்திற் சேர்ந்தாரென்று பாலபாரதமும் கூறும். பாண்டவர் சேர்ந்தநகரம் ஏகசக்கரநகரமென்பதும், அங்கு இவர்களுறைந்தஇடம் வேத்திரகீயமெனப்படுமென்பதும் வியாசபாரதத்தாற் பெறப்படும். ஆகவே, வேத்திரகீயமா நகரம் என்பதற்கு-வேத்திரகீயம் என்ற இடத்தைத் தன்னிற் கொண்ட ஏகசக்கரநகர மெனப் பொருள்காணலாம். சாஸ்திரம்-தருக்கம் வியாகரணம் வேதாந்தம் முதலியன. கோத்திரம்-பாரத்வாஜம், ஆத்ரேயம் போல்வன. சூத்திரம்-ஆபஸ்தம்பம், ஆச்வலாயநம் போல்வன. குடிப்பெயர் ஏற்றபடி கண்டுகொள்க. (443)

**34.—அவர்கள்வரவுக்கு அவ்வூரந்தணர் மகிழ்தல்.**

அந்தணரைவரும் யாயுமந்நகர்
வந்துழியதிதியர் வரவுகாண்டலும்
முந்துபுமுந்துபு முகமன்கூறினுர்
செந்தழல்வேள்விகூ ராதிதேவரே.

(இ-ள்.) அந்தணர் ஐவர்உம் - பிராமணராகிய பாண்டவர் ஐந்துபேரும், யாய்உம்-அவர்கள் தாயும், அ நகர் வந்த உழி- அந்த நகரத்திற்கு வந்த பொழுது,—அதிதியர் வரவு காண்ட லும்-அந்த விருந்தினர்களுடைய வருகையைக் கண்டவளவிலே, செம் தழல் வேள்வி கூர் ஆதிதேவர்-செந்நிறமான அக்கினியி னிடத்து யாகஞ் செய்தலில் மிக்கவர்களான [சிறந்த] பிராமணர் கள், முந்துபு முந்துபு முகமன் கூறினர்-ஒருவரினும் ஒருவர் முற் பட்டு எதிர்கொண்டு வந்து உபசாரவார்த்தை சொன்னுர்கள்;

ஆதிதேயரே என்ற பாடத்துக்கு, அதிதிபூசையைச் செய்பவ ரென்க. இச்செய்யுள் வியாசபாரதத்தையொட்டி யெழுதியது.

35.—அவர்களை ஓரந்தணன் தன்மனைக்கு அழைத்துச்செல்லுதல்.

நன்மனைவாழ்க்கையி னயந்தசிந்தையான்
மன்மனையனையதன் மனையிலோர்முனி
தன்மனையம்மனை தம்பிமாரொடும்
என்மனைவருகென வெதிர்கொண்டேகினன்.

(இ-ள்.) நல் மனை வாழ்க்கையில் நயந்த சிந்தையான்-சிறந்த இல்லறவாழ்விலே விரும்பிய மனத்தையுடையவனாகிய, ஓர் முனி-ஓர் அந்தணன்,—தன்மனை-தருமபுத்திரனை, அம்மனை-தாயோடும், தம்பிமாரொடும்—, என் மனை வருக என - என்வீட்டுக்கு வருவீராக என்றுசொல்லி, எதிர்கொண்டு - எதிர்சென்று உபசரித்து, மன் மனை அனைய தன் மனையில் - இராசமாளிகையைப்போன்ற தன்வீட்டில், ஏகினன்-அழைத்துச்சென்றான்; (எ - று.)

இல்லறம் அனைவர்க்கும் உதவக்கூடியதாய்ச் சிறத்தலால், 'நன் மனைவாழ்க்கை' எனப்பட்டது. பொருள்வளத்திலும் பெருமையிலும் மிக்க வீடு என்றற்கு, இராசகிருகத்தை உவமை கூறினார். (445)

36.—பாண்டவர்கள் அவ்வூரில் விருந்துண்டு காலங்கழித்தல்.

ஒருதினத்தமிழ்தென வுள்ளநாளெலாம்
வருமுறைப்படிவிருந் தாகிவைகினர்
அருநெறிக்கடவுளர்க் கமுதமூட்டுதல்
இருபிறப்பாளருக் கென்றுந்தன்மையே.

(இ-ள்.) ஒரு தினத்து அமிழ்து என - ஒருநாளையுணவுபெற்றாற்போலவே, உள்ள நாள் எலாம்-மற்றுமுள்ள எல்லாநாள்களிலும், வரு முறை படி - (பிராமணசாதிக்குத் தொன்றுதொட்டு) வருகின்றமுறைமைப்படி, விருந்து ஆகி வைகினர்-(பாண்டவரும் குந்தியும்) விருந்தினராய் (அவ்வூரில்) தங்கியிருந்தார்கள்; அரு நெறி கடவுளர்க்கு அமுதம் ஊட்டுதல் - அருமையானவழியில் (நடந்து தேசாந்தரிகளாய்) வந்த அந்தணர்களுக்கு இனிய உணவை உண்பித்தல், இருபிறப்பாளருக்கு என்றும் தன்மைஏ-அந்தணர்களுக்கு என்றுமுள்ள இயல்பேயாம்; (எ-று.)

ஒருநாள்போலவே அவ்வூரில் இருந்த நாள்களிலெல்லாம் அவர்கள் ஒவ்வொருவீட்டில் ஒவ்வொருநாளைக்கு விருந்ினராய்ச் சென்று அவ்வவ்வீட்டுக்கு உரிய அந்தணரால் உபசாரத்தோடு இன்னுணவளிக்கப்பெற்று வாழ்ந்தன ரென்ற சிறப்புப்பொருளை, வழிப்போக்கராய்நேர்ந்த அந்தணர்க்கு விருந்திட்டு உதவுதல் பிராமணசாதியார்க்கு இயற்கையே யென்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியதனால், வேற்றுப்பொருள்வைப்பணி. 'வருமுறைப் படி' என்பதற்கு-நாள்தோறும் முறையே ஒவ்வொரு வீட்டுக்குச் சென்று என்றுமாம். பூமியில் தேவர்போலக் கொண்டாடப்படுதலால், அந்தணர், 'கடவுளர்' எனப்பட்டனர். தாய்வயிற்றிற் பிறத்தலாகிய இயற்கைச் சன்மத்தோடு உபநயனச்சடங்கினால் வருகிற ஞானசன்மமும் ஒருபிறப்பாமென்பது நூற்கொள்கையாத

லால், இருபிறப்பாள ரென்றது. அமுதெனை, விருந்தயின்று என்று பாடபேதங்கள். (446)

**37.—அக்காலத்து அங்கு நடந்த ஓர்செய்தி கூறத்தொடங்கல்: கவிக்கூற்று.**

பொன்னக ரணுகினர் போல நெஞ்சுறத்
தந்நக ரெனும்படி தாயு மைந்தரும
இந்நக ரநேகநா ளிருந்த வெல்லையில்
அந்நகர் புரிந்ததோ ராண்மை கூறுவாம்.

(இ-ள்.) தாய்உம் மைந்தர்உம் - குந்தியும் பாண்டவர்களும், தம் நகர் எனும்படி-தங்களுடைய (சொந்த) நகர மென்றுசொல் லும்படி, இ நகர்-இந்தவேத்திரகீயநகரத்தில்,பொன் நகர் அணுகி னர் போல நெஞ்சு உற-பொன்மயமான (தேவலோகத்து) அமரா வதிநகரத்தை யடைந்தவர்கள் போல மனம்மகிழ, அநேகம் நாள் இருந்த எல்லையில்—, அ நகர் புரிந்தது ஓர் ஆண்மை-அந்நகரத் திற்செய்த ஒருவீரத்தை,கூறுவாம்-(யாம்) இனிச் சொல்லுவோம்; (எ-று.)—அதனை, இச்சருக்கம் முடியுமளவுங் காண்க. (447)

வே று.

**38.—பாண்டவர் வசிக்கிற வீட்டுக்கு,உரிய பார்ப்பனி ஒருநாள் புலம்புதல்.**

மறையு முருவினொ டரிய குருகுல மகிபர் நெடுவன சரிதராய்
உறையும் வளமனை யுடைய மடவர லுருகு பிரதைத னுயிரனாள்
குறைவில்பொலிவினள் விரதநெறியினள் குழுவுநிதியினள் கொடுமையால்
இறையு மொழிவற விருக ணறல்வர வெரிகொள் கொடியென விளையினாள்.

(இ-ள்.) அரிய குரு குல மகிபர் - அருமையான குருகுலத்து அரசர்களாகிய பாண்டவர்கள், மறையும் உருவினொடு - மறைந்த வடிவத்துடனே [மாறுவேடங்கொண்டு],நெடு வனம் சரிதர் ஆய்- பெரிய காட்டிற் சஞ்சரிப்பவர்களாகி, உறையும்-(அவ்வூரில்)வசித் திருக்கிற, வளம் மனை-செல்வவளம்நிறைந்த வீட்டுக்கு, உடைய- உரிமையுடைய, மடவரல்-பெண்,—உருகு பிரதைதன் உயிர் அனாள்-(கருணையால்) மனமுருகுந்தன்மையுள்ள குந்தியின் உயிர் போன்றவள்: குறைவு இல் பொலிவினள் - குறைவில்லாத [நிறைந்த] அழகுடையவள்; விரதம் நெறியினள் - நோன்புகளைத் தவறாமல் அனுட்டிக்கும் முறைமையுடையவள்: குழுவு நிதி யினள்-மிகுதியாகத் திரண்ட செல்வத்தையுடையவள்: (அவள்), கொடுமையால் - (பகாசுரனால்நிகழுங்) கொடுமைகாரணமாக,— இறைஉம் ஒழிவு அற இரு கண் அறல் வர-சிறிதும் இடைவிடு தலில்லாமல் (தனது) இரண்டு கண்களினின்றும் சோகநீர் சொரிய,—எரி கொள் கொடி என-தீப்பற்றிய பூங்கொடி போல, (தவித்து), இனையினள்-வருந்தினாள்; (எ-று.)

துயருறுங் கணவனுடைய மடியிலிருக்கும் இருமக்களைத் தழுவிக்கொண்டு அந்தணி யழ, குந்திதேவி வினாவின ளென விவரம் காண்க. பாண்டவரோடு குந்தியைத் தன்மனையி லிருத்தி மிகவும் உபசரித்து வந்தமைபற்றிக் குந்தியினால் உயிர் போலப் பாவித்து மிகவும் அன்புசெய்யப்பட்டு நின்றவளென்... பார், 'உருகுபிரதைதனுயிரனாள்' என்றார்.

இதுமுதற் பதின்மூன்றுகவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களு மாகிவந்த எழுசீராசிரியச்சந்தவிருத்தங்கள். தனன தனதன தனன தனதன தனன தனதன தனதனா என்பது, இதுமுதல் மூன்று கவிகளுக்குச் சந்தக்குழிப்பு. (448)

**39.—இதுமுதல் ஆறுகவிகள்-ஒருதொடர்: புலம்புவானேன்?' என்று வினவிய குந்திக்குப் பார்ப்பனி பகன்செய்தியைக் கூறல்.**

மறுகியழுவதென்மொழிகமுனிவரன் மனைவியெனவிவள்வினவலும்
குறுகியவளுடனுரைசெய்குவளுறு குறையையுளநனிகுறையவே
முறுகுசினவனல்பொழியும்விழியினன் முகனில்பகனெனுமுரனுடை
தறுகணிசிசரனுளனிவ்வளநகர் தழுவும்வனனுறைதகுதியான்.

(இ - ள்.) 'முனிவரன் மனைவி-சிறந்த அந்தணனுடைய மனைவியே! மறுகி அழுவது என்-(நீ) கலங்கிப் புலம்புவது யாதுகாரணத்தால்? மொழிக - சொல்வாயாக', என—, இவள் வினவலும்-இக்குந்தி கேட்டவளவிலே,—(அப்பார்ப்பனி), குறுகி-அருகில்வந்து, உறு குறையை-(தனக்கு) நேர்ந்த மனக்குறையை, உளம் நனி குறைய - மனம்மிகவும் மெலிய, அவளுடன் உரைசெய்குவள்-அக்குந்தியுடன் கூறுவாள்:—முறுகுசினம் அனல்பொழியும்விழியினன்-மிக்க கோபாக்கினியைச் சொரிகின்ற கண்களையுடையவனாகிய, முகன் இல் பகன் எனும் - கண்ணோட்டமில்லாத பகனென்கிற, முரண் உடை தறுகண் நிசிசரன் - வலிமையுடைய வன்கண்மையுள்ளவனாகிய இராக்கதனொருவன், இ வளம் நகர் தழுவும் வனன் உறை தகுதியான்-வளங்களையுடைய இந்த நகரத்தைச்சார்ந்த காட்டில் வசிக்கும் உரிமையுடையவனாய், உளன் - இருக்கின்றான்;

முகன்-இலக்கணையாய், அன்போடு முகங்கொடுத்தலை உணர்த்தும். இந்நகரத்தையடுத்த யமுனைக்கரையில் அரக்கன்வசிக்கின்றானென்று பர்லபாரதம் கூறும். வனன் = வனம். (449)

**40.** அருளிலிதயமுநெறியில்சரிதமு மழகிலுருவமுமதிர்குரற்
பொருளிலுரைகளுமுடையன்முழுதுடல் புலவுகமழ்தருபொறியினன்
மருளுநரியொடுகழுகுதொடர்தர வலியபிணநுகர்சுவையரு
திருளின்மிசையிருபிறைகளெனவளை யெயிறுநிலவெழுமிதழினன்.

(இ- ள்.) (அவ்வரக்கன்),—அருள் இல் இதயம்உம் - கருணையில்லாத மனத்தையும், நெறி இல் சரிதம்உம் - நல்வழியில்லாத ஒழுக்கத்தையும், அழகு இல் உருவம்உம்-அழகில்லாதகோரரூபத்தையும், அதிர் குரல்-முழங்குகிற கர்ச்சனையொலியையும்,பொருள் இல் உரைகள்உம்-பயனில்லாத பேச்சுக்களையும்,உடையன்-உடையவன்; முழுது உடல் - உடம்பு முழுவதும், புலவு கமழ் தரு-புலால் நாற்றம் வீசுகிற, பொறியினன் - அடையாளத்தையுடையவன்; மருளும்நரியொடு கழுகு தொடர்தர-(காண்பவர்மனம்) வெருளும்படியுள்ள நரிகளும் கழுகுகளும் விடாதுதொடர, வலிய பிணம் நுகர் சுவை அருது - வலிய பிணங்களைத் தின்னும் உருசி நீங்காமல், இருளின்மிசை இரு பிறைகள் என வளை எயிறு நிலவு எழும்-

இருளின்மேல் இரண்டுபிறைகள் (விளங்கினாற்) போல வளைந்த கோரதந்தங்கள் (இரண்டு கடைவாயிலும்) வெள்ளொளி வீசப் பெற்ற, இதழினன்-வாயிதழையுடையவன்; (எ - று.)

தொடர்தர அருது எழும் இதமெனக. நரியுங் கழுகுந்தொடர்தல், தசையினிடத்து நசையால். கரியவடிவத்தில் விளங்கும் பற்களுக்கு, இருளின்மிசைப் பிறைகள் உவமையாம். 'உடல் முழுதும் புலால்நாறும் பொறி' என்றது, உயிர்நீங்கிய உடல்களை மிகுதியாகத் தின்னும்போது அவற்றினின்று மேலேதெறித்த இரத்தம் முதலியவற்றால் ஆகிய அடையாளங்களைக் குறிக்கும். பீபத்ஸரஸமெனப்படும் இழிப்புச்சுவைக்கு இச்செய்யுள் உதாரணமாம். 'பொறியிலன்' என்றும் பாடம். (450)

41. அந்தகனுமிகவஞ்சிமுதுகிடு மந்தநிசிசரனிந்தவூர்
வந்துகுடியொடுகொன்றுபலரையு மன்றமறுகிடைதின்றநாள்
எந்தைமுதலியவந்தணருமவ னிங்குவருதொழிலஞ்சியே
சிந்தைமெலிவுறநொந்துதலைமிசை சென்றுகுவிதருசெங்கையார்.

(இ - ள்.) அந்தகன் உம் மிக அஞ்சி முதுகு இடும்-யமனும் மிகப்பயந்து (முன்நின்று எதிர்க்கமாட்டாமல்) புறங்கொடுக்கும்படியாகவுள்ள, அந்த நிசிசரன்-அந்த அரக்கன், இந்த ஊர் வந்து - இந்த ஊரினுள்ளேவந்து, பலரை உம் - இவ்வூரார் பலரையும், குடியொடு - (அவரவர்) குடும்பத்துடனே, மன்ற-மிகுதியாக, கொன்று—, மறுகிடை - தெருவுகளிலே, தின்ற நாள் - தின்ற நாளிலே,—எந்தை முதலிய அந்தணர் உம்-எனது தந்தைமுதலான பிராமணர்களும், அவன் இங்கு வரு தொழில் அஞ்சி-அவன் இங்கேவந்த செயலுக்குப்பயந்து, சிந்தை மெலிவு உற நொந்து - மனம்சோர்வடைய வருந்தி, தலைமிசை சென்று குவிதரு செம் கையார்- (அச்சமிகுதியால் தாமாகவே) தலைமேற் சென்றுகுவிந்து தொழுகிற சிவந்த கையையுடையவர்களாய்:— (எ - று.)—'என்றலும்' என அடுத்த கவியோடு குளகமாய்த் தொடரும்.

அந்தகன்-பிராணிகளுக்கு அந்தத்தைச் செய்பவன்; அந்தம்-அழிவு. தலைமிசைக் குவிதரு செங்கையராய்ச் சென்றுஎனக்கூட்டியுரைப்பினும் அமையும். மறுஇடை இன்ற - சந்தவின்பத்திற்காக வலிமிகவில்லை.

*தந்த தனதன தந்த தனதன தந்த தனதன தந்தனஎன்பது, இந்தக் கவிக்குச் சந்தக்குழிப்பாம்.* (451)

42. ஒன்றுபடவெதிர்கொன்றுபலருயி ருண்பதறநெறியன்றுநீ
இன்றுமுதலினியென்றுமுறைமுறையெங்கண்மனைதொறும்விஞ்சையோர்
குன்றமெனவொருபண்டியறுசுவை கொண்டவடிசிலுநங்குலம்
துன்றுநரபலியொன்றுமிவைதிறை தொண்டுபுரிகுவமென்றலும்.

(இ - ள்.) 'நீ—,ஒன்றுபட - ஒருசேர, எதிர்-எங்கள்எதிரிலே, பலர் உயிர் கொன்று உண்பது-பலருடைய உயிரைநீக்கி(உடலைப்) புசிப்பது,அறம் நெறி அன்று-தருமமார்க்கமன்று; இன்று முதல்

இனி என்றும்-இன்றைநாள்முதல் இனிமேல் என்றைக்கும்,முறை முறை எங்கள் மனைதொறுஉம் - வரிசைக்கிரமப்படி எங்கள் வீடு தோறும், விஞ்சையோர் குன்றம் என அறுசுவை கொண்ட ஒரு பண்டி அடிசில்உம் - வித்தியாதரர்வசிக்கும் மலை யென்றுசொல் லும்படி அறுவகையுருசியும் அமைந்த ஒருபண்டிசோறும், நம் குலம் துன்றும் நரன் பலி ஒன்றுஉம்-எங்கள் குலத்திற்பொருந் திய ஒரு மனிதனுகிய பலியும், இவை-ஆகிய இவற்றை, திறை - (உனக்குத்) திறைப்பொருளாகச்செலுத்தி, தொண்டு-அடிமையை, புரிகுவம் - செய்வோம்', என்றலும் - என்றுசொன்னவளவிலே,— (எ - று.) 'அன்று முதல்***தின்றுதிரிகுவன்' என அடுத்த கவி யில் முடிபு காண்க.

நாங்களே நாளுக்குஒருவீடாக முறைவட்டம் ஏற்படுத்திக் கொண்டு ஒருவண்டிச்சோற்றையும், ஓராளையும் உனக்கு உண வாக இடுவோமென்று ஊரந்தணர் கூறி அவனைச் சாந்தப்படுத் தினரென்க. விஞ்சையோர்=வித்தியாதரர்; மாயவித்தைகளைத் தரித்தவர்; இவர்கள், பதினெட்டுத்தேவகணங்களுள் ஒரு சாதி யார். இவர்களுக்குஉறைவிடம் வெள்ளிமலையாதலை, சிந்தாமணி சூடாமணிகளிற் காணலாம். நரபலி-வடமொழித்தொடர்.

தன்ன தனதன தன்ன தனதன தன்ன தனதன தன்னன என்பது, இனி மூன்று செய்யுட்களுக்குச் சந்தக்குழிப்பு. (452)

43. அன்றுமுதலடல்வஞ்சகனுமிறை யன்பினெடுபெறுவன்பினல்
என்றுநிலைபெறவுண்டியுடன்மனை யெங்குமிடுபலியெஞ்சுறத்
தின்றுதிரிகுவனின்றென்மனைமுறை சென்றுபணிகவர்திங்கள்போல்
நின்றுதளர்வுறுகின்றதெனதுயிர் நெஞ்சமிலதொருதஞ்சமே.

(இ-ள்.) அன்று முதல் - அந்நாள்முதலாக, அடல் வஞ்சகன் உம்-கொடியவஞ்சகனை அவ்வரக்கனும், இறை அன்பினெடு - சிறிதுஅன்புடனே, பெறு வன்பினல்-(தான்) பெற்ற வலிமையால், என்றுஉம் நிலை பெற-எந்நாளும் நிலையாக, மனை எங்குஉம் உண்டி யுடன் இடு பலி-வீடுதோறும் உணவோடுசெலுத்தும் நரபலியை, எஞ்சுற தின்று திரிகுவன் - ஒழியும்படி தின்று திரிவான்: (அந்த நியமத்தின்படி), இன்று என் மனை முறை-இன்றைக்கு என்வீட் டின் முறை: (ஆதலால்), எனது உயிர்—, பணி சென்று கவர் திங் கள் போல்-(இராகுகேதுவாகிய) பாம்பினல் (அருகிற்) சென்று பிடிக்கப்பட்ட சந்திரன்போல, நின்று தளர்வு உறுகின்றது - தளர்ச்சி பொருந்தி நிற்கின்றது; நெஞ்சம் ஒரு தஞ்சம் இலது - என்மனம் ஒரு பற்றுக்கோடுமில்லாதிருக்கின்றது; (எ - று.)

உயிர்அழியாது துயருறுதல்பற்றி, அதற்கு, பணிகவர்திங்கள் உவமை. எஞ்சுற-(நாளடைவிலே ஊரில் ஆள்) குறையஎன்றுமாம்.

44. கன்னியிவள்பிறர்பன்னியெனதிரு கண்ணின்மணிநிகர்சன்மனும்
மன்னுகுலமுதல்பின்னையொருவரு மண்ணினுறுதுணையின்மையால்
இன்னல்பெரிதுளதென்னபுரிகுவ தென்னவறிகிலனன்னைகேள்
முன்னைமனைநிகழ்தன்மமுனிவனை முன்னிலிடர்நனிதுன்னுமால்.

(இ - ள்.) கன்னி இவள் - (எனது) இந்த இளம்பெண், பிறர் பன்னி-வேறொருவரதுஉடைமையாகிய மனைவி: எனது இரு கண்ணின் மணி நிகர் சன்மன் உம்-எனது இரண்டுகண்களிலுள்ள கருமணியையொத்த அருமைப் புதல்வனும், மன்னு குலம் முதல் - நிலையானவமிசத்துக்குஒர் அடியாயுள்ளான்; மண்ணின் உறு துணை பின்னை ஒருவர் உம் இன்மையால் - பூமியிற் பொருந்திய துணை வேறொருவரும் இல்லாமையால், இன்னல்பெரிது உளது-(எனக்குத்) துன்பம்மிகுதியாயுண்டாயிற்று: என்னபுரிகுவது என்ன அறிகிலன் -யாது செய்வதென்று அறியேன்: அன்னை கேள் - தாயே! கேள்; முன்னை மனை நிகழ் தன்மம் முனிவனை முன்னில் - இவ்வீட்டுக்கு முதன்மையாய் இல்லறவாழ்க்கையைநடத்துகிற (என் கணவனாகிய) அந்தணனை (ப்பலிசெலுத்த) நினைத்தாலோ, இடர் நனி துன்னும்- துன்பம் மிகுதியாக உண்டாகிறது; (எ - று.)—என்று பார்ப்பனி இடர்க்காரணத்தைக் குந்தியிடம் கூறிமுடித்தாளென்க.

எனதுமகளைப் பலிசெலுத்தலாமென்றால், அவள் ஒருபுருஷனுக்கு வாழ்க்கைப்பட்டுஅவனுக்குஉரிய பொருளாய்விட்டதனால், அவளைச்செலுத்த இடமில்லை; எனதுமகனோ, ஏகபுத்திரனாதலால் அவனைச்செலுத்திவிடின் சந்ததியின்றி வமிசம் அழியும்: என்னையே செலுத்துவதென்றால், வேறொருவர் உதவுவாரில்லை; அதனால், என்கணவன் விரும்பகில்லான்; என்கொழுநனைச் செலுத்தும் விஷயத்தில் உண்டாகிற துயரத்துக்கு எல்லையில்லை என்று பலவகையிலும் தன் துயரத்துக்குப் பரிகாரமில்லாமையைக் கூறினள். ஜந்மம் - பிறப்பு: அதனையுடையவன், சன்மன்: மகன். (454)

## 45.—இருகவிகள்-அதுகேட்டுக் குந்தி தனது மக்களில் ஒருவனை அனுப்பலாமென்றல் கூறும்.

ஏதமறவுறவானமனைமகள் யாவுமுரைசெயயாதவன்
தீதில்குலமகளார்வமுடனவ டேறவொருமொழிகூறுவாள்
ஆதியநுமனொடோதுமுவமைய னுடல்வலியுடையாண்மையான்
மோதியிடையிருள்யாமசரிதனை மூளையுகவுடல்கீளுமே.

நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஏதம் அற உறவு ஆன - களங்கமில்லாமல் (குந்தியோடு) நண்புரிமைபூண்ட, மனை மகள்-அந்தவீட்டுக்குஉரிய பார்ப்பனி, யாஉம் உரைசெய - (இங்ஙனம்) எல்லாவற்றையும் சொல்ல, யாதவன் தீது இல் குலம் மகள்-யதுகுலத்திற்பிறந்த சூரராசனது குற்றமற்ற குலத்துக்கு உரியமகளாகிய குந்திதேவி, ஆர்வமுடன்- அன்புடனே, அவள் தேற ஒரு மொழி கூறுவாள் - அப்பார்ப்பனி தேறுதலடையும்படி ஒருவார்த்தைசொல்வாள்:—ஆதி அநுமனொடு ஓதும் உவமையன்-பழமையான அநுமானொடு சொல்லத்தக்க ஒப்புமையுடையவனும், ஆடல் வலி உடை ஆண்மையான்- போர்வலிமையோடுகூடிய பராக்கிரமசாலியும் ஆகிய என்மக்களில் ஒருவன், இருள் இடை யாமசரிதனை-இருளையுடைய நள்ளிரவிற்சஞ்சரிப்பவனான [இராக்கதனாகிய] அந்தப்பகனை, மோதி- தாக்கி, மூளை உக-மூளை சிதறும்படி, உடல் கீளும் - உடம்பைப்பிளந்திடுவான்.

பாலபாரதத்திற் கூறியதற்கு ஏற்ப, ஆடல் வலியுடையாண்மையான் என்பதற்கு-பௌருஷத்தோடுபகையடவல்லமந்திரசக்தியையுடையவனெனினுமாம். அநுமானது பலபராக்கிரமச்செயல்கள், இராமாயணத்து மிகப்பிரசித்தம். இரவுக்குஉரிய நான்குயாமங்களுள் ஒருயாமகாலம் பிராணிசஞ்சாரம் முதலியவற்றாற்பகல் போலுதலால், யாமத்தில் இப்படி விசேஷமுடைய இரவு, யாமமெனச் சிறப்பாகவழங்கப்படும். மோதிமிகுதிறல் என்றும் பாடம்.

தான தனதன தான தனதன தான தனதன தானனா என்பது, இதற்குச் சந்தக்குழிப்பு. (455)

46. கோவ்வையிதழ்மடநவ்வியலமரல் குவ்வினனலினும்வெவ்வியோர்
அவ்வருளர்சுதர்கைவில்விறலின ரவ்வியமுமிலர்செவ்வியோர்
இவ்விவரிலெமையுய்வுகொளுமவனெவ்வெவ்வுலகையும்வவ்வுதிண்
பௌவமெனநனிதெய்வமுனிவரர் பையுளறநெறிசெய்வனே.

(இ - ள்.) கொவ்வை - கொவ்வைக்கனிபோலச் சிவந்த, இதழ்-வாயிதழையுடைய, மடம் நவ்வி-(கண்ணின்நோக்கத்தால்) இளமையான மான்போன்றவளே! அலமரல் - (நீ மனங்) கலங்க வேண்டா; குவ்வின் - இந்நிலவுலகத்தில், அனலின்உம் வெவ்வியோர்-(பராக்கிரமத்தால்) அக்கினியினும் கொடியவர்களும், கைவில் விறலினர்-கைதேர்ந்த வில்லின் வல்லமையை யுடையவர்களும், அவ்வியம்உம் இலர் - பொறாமையில்லாதவர்களும், செவ்வியோர்-நற்குண முடையவர்களுமாகிய, அய்வர்சுதர்-ஐந்துபிள்ளைகள், உளர்-(எனக்கு) இருக்கிறார்களன்றோ? இஇவரில்-இத்தன்மையான ஐந்துபுத்திரர்களுள், எமை உய்வு கொளும் அவன்-மற்றையெங்களெல்லோரையும உயிருய்யச்செய்பவனான அந்த ஒரு குமாரன், எ எ உலகைஉம் வவ்வு திண் பௌவம் என நனி தெய்வம் முனிவரர் பையுள் அற-உலகங்களெல்லாவற்றையுங்கவர்கிற வலிய சமுத்திரம் போல (அளவின்றி) மிகுகிற தெய்வத்தன்மையுள்ள சிறந்த அந்தணர்களுடையவருத்தம்நீங்க, நெறி செய்வன்-(அதற்குஉரிய) முறைமையைச் செய்வான்; (எ - று.)—ஏ-தேற்றம்.

சிஷ்டர்களாகிய முனிவர்களைப் பரிபாலிக்கும்பொருட்டுத் துஷ்டனாகிய அவ்வரக்கனை அழித்தொழித்திடுவ னென்பதாம். இங்கு'அவன்' என்றது வீமனை. அவன் அரக்குமாளிகையினின்று தங்களையெல்லாம் உய்வித்தமையை யுட்கொண்டு, அவனுக்கு 'எமை யுய்வுகொளும்' என்ற அடைமொழி கொடுத்தாள். நவ்வி - உவமவாகுபெயர். அலமரல்-எதிர்மறை யொருமையேவல்: அலமா-பகுதி. கு - பூமி: வடசொல். அய்வர் = ஐவர்.

இச்செய்யுள்-கீழ்க்கூறியவகையில் வகரச்சந்தத்தாற் பெரும்பாலும் வந்தது. 'தைய தனதன தைய தனதன தைய தனதன தையதா' என்பது. இதற்குச் சந்தக்குழிப்பு. 'பைதலற' என்ற பாடம், சந்தத்துக்குச் சிறவாது. (456)

47.—அதுகேட்டு மகிழ்ந்து அவ்விட்டார் சமையல்செய்யத்தொடங்கல்.

அவனையிடுபலியருளுகெனமொழி யளவின்மறலியுமுளைவுறச்
சிவனைவழிபடுமகவையருளிய செனகசெனனியர்திகரெனத்

தவனின்முதிர்தருமுனியும்வழுவறு தனதில்லறனுடைவனிதையும்
துவனியறமனமகிழ்வொடினிதறு சுவைகொளமுதடுதொழிலராய்.

(இ - ள்.) அவனே - அப்புதல்வனே, இடு பலி அருளுக-(அவ்வரக்கனுக்கு) இடவேண்டிய நரபலியாகச் செலுத்துவையாக, என - என்று, மொழி அளவில் - (குந்தி) சொன்னவளவில், — மறலிஉம் உலைவு உற சிவனை வழிபடு மகவை அருளிய செனக செனனியர் நிகர் என - யமனும் வருந்தும்படி சிவபிரானைப் பூசித்த (மார்க்கண்டேயனென்ற) குமாரனைப் பெற்ற தந்தையும் தாயும் போல, தவனில் முதிர் தரு முனிஉம் வழு அறு தனது இல் அறன் உடை வனிதைஉம்-தவவொழுக்கத்தில் முதிர்ந்த (அவ்வீட்டுக்குஉடையவனான) அந்தணனும் தவறில்லாத அவனது இல்லறவாழ்க்கையையுடைய மனைவியும், மனம் மகிழ்வொடு-மனமகிழ்ச்சிகொண்டவர்களாய், துவனி அற-(அழுகை) ஒலி நீங்க, அறு சுவை கொள் அமுது இனிது அடு தொழிலர் ஆய்-ஆறுவகைஉருசியும்பொருந்திய உணவை இனிமையாய்ச் சமைக்குந்தொழிலை யுடையவராக, —(எ - று.)—"பண்டி கெழுமிய பண்டமே" என வருங் கவியோடு முடியும். ஆய் - ஆக என்ற எச்சத்தின் திரிபு.

'மறலியு முலைவுறச் சிவனை வழிபடு மகவு' என்பதிற் குறித்த கதை:— மிருகண்டுமுனிவனது தவப்பயனால் பதினாறுபிராயமேயுடையவனாகச் சிவபிரான் வரமளிக்கப் பிறந்த மார்க்கண்டேயன் இடைவிடாது சிவபூசனை செய்துகொண்டு வளர்ந்து வருகையில், பதினாறுபிராயம் முற்று மளவிலே மாதாபிதாக்கள் 'இனி இவனுக்கு யமனால் இறுதிநேருமே!' என்றுமிகக்கலங்கிநிற்க, அந்தமார்க்கண்டேயன் சிவபூசை செய்கையில் கூற்றுவன் வந்து காலபாசத்தாற் கட்டியிழுக்க, அவன் அப்பொழுது பரமசிவனைச் சரணமடைய, அப்பெருமான் யமனைக் காலால் உதைத்துத்தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறாகத் தீர்க்காயுசு கொடுத்தருளி னனென்பது. அக்குமாரன் சிவானுக்கிரகத்தால் ஊழ்வினையையுங் கடந்துஉய்வு பெற்றதனால், அத்தாய்தந்தையர் துயரம் நீங்கி மிகவும் மனமகிழ்வுற்றார்.

மறல்-கொடுமை; அதனையுடையவன்-மறலி. ஜநகஜநநீ என்ற வடசொற்கள்-தமிழில் சனக சனனி எனத் திரிந்து, மோனைப் பொருத்தத்திற்காக 'செனக செனனி' என எகரம் பெற்றன. இல்லறம்-'இலறம்' எனச் சந்தவின்பம் நோக்கித் தொகுத்தல்விகாரப்பட்டது. இச்செய்யுள்-குறுஞ்சீர்வண்ண முடையது; அதாவது - குற்றெழுத்துப்பயில்வது. 38, 39, 40, இச்செய்யுள்களிலும் இதுகாண்க. இதற்குச் சந்தக்குழிப்பு-38 ஆங் கவிக்குக் கூறியவாறே கொள்க.

48.—அப்பொழுது சமைக்கப்பட்ட உணவின் மிகுதி.

தண்டரளமலைவெண்கயிலைமலை சங்கமலையெனநங்கைமார்
மொண்டுசொரிதருகின்றவடிசிலு முந்துகறிகளும்வெந்தபான்
மண்டுநறுநெயொடந்தவிடலையு மைந்தரனைவருமுண்டுதம்
பண்டிநிறைவுறுபின்புமிறிதொரு பண்டிகெழுமியபண்டமே.

(இ- ள்.) தண் தரளம் மலை - குளிர்ச்சியான முத்தின்மயமான தொருமலை, வெள் கயிலைமலை-வெண்மையான[வெள்ளிமயமாகிய]

கைலாசமலை, சங்கம் மலை - சங்குமயமானதொரு மலை, என-என்று (கண்டவர் உவமை) கூறும்படி, நங்கைமார் மொண்டு சொரிதரு கின்ற - (சமையல்செய்யும்) மகளிர் (பாத்திரங்களினின்று) முகந் தெடுத்துத் தொகுதியாய்ச்சொரிகின்ற,அடிசில்உம்-அன்னத்தை யும், முந்து கறிகள்உம் - சிறந்த கறிகளையும், வெந்த பால் மண்டு நறு நெ(ய்)யொடு-காய்ந்த பாலோடும் மிக்க நறுமணமுள்ள நெய் யோடும்,அந்த விடலைஉம் மைந்தர் அனைவர்உம்-கீழ்க்குறித்த வீர னை வீமனும் மற்றைப் புதல்வரெல்லோரும், உண்டு-புசித்து, தம் பண்டி நிறைவு உறு பின்பு-தங்கள் வயிறுநிறைந்தபின்பு,பண்டம்- அவ்வுணவுப்பொருள்கள், பிறிது ஒரு பண்டி கெழுமிய - வேறொரு வண்டி நிறைந்தன; (எ - று.)—கெழுமிய-பலவின்பால்முற்று.

வெண்மையும் பெருந்தொகுதியும்பற்றி, அன்னத்திரளுக்கு முத்துமலை வெள்ளிமலை சங்குமலைகளை உவமை கூறினர். பண்டி என்பது வயிறென்னும் பொருளதாதலை, "உதரமோ டகடு குக்கி யுடன் பண்டி வயிற்றின் பெயராம்" என்ற நிகண்டினாலும் அறிக.

இதற்குச் சந்தக்குழிப்பு - 41 -ஆங் கவியிற் கூறியதே. (458)

**49.—வீமன் சித்தனாய்த் தன்னை அலங்கரித்துக்கொள்ளுதல்.**

வய்யமுழுதுடையையனிளவலும்வைகலுடன்மனைவைகுவோர்
உய்யும்வகைபுகலையையுரையினை யொய்யென்விரைவொடுகைகொளா
வெய்யபகனுடல்பெய்தகுருதியின் மெய்யையெழிலணிசெய்தனன்
செய்யமலர்கொடுசெய்யதுகில்கொடு செய்யகலவையின்மொய்கொடே.

(இ - ள்.) வய்யம் முழுது உடை-பூமிமுழுவதையும் (தனக்கு உரியதாக) உடைய, ஐயன் - தலைவனான தருமனது,இளவல்உம்- தம்பியான வீமனும்,—மனை வைகுவோர் உய்யும் வகை புகல்ஐயை உரையினை-(தங்கட்குத் தங்க இடங்கொடுத்த)வீட்டிலிருப்பவர்எல் லோரும் பிழைத்திருக்கும்படி உபாயங்கூறிய (தனது) தாயான குந்தியின் வார்த்தையை, ஒய்யென் விரைவொடு கை கொளா - மிக்கவிரைவோடு அங்கிகரித்து,—வைகலுடன் - பொழுதோடே [பலிசெல்லுங்காலம் கடவாமல்],—செய்ய மலர்கொடு - செந்நிற முள்ள பூக்களைக்கொண்டும், செய்ய துகில் கொடு-செந்நிறமுள்ள ஆடையைக்கொண்டும், செய்ய கலவையின் மொய் கொடு-செந்நிற முள்ள கலவைச்சாந்தின் மிகுதியைக்கொண்டும்,—மெய்யை-(தன்) உடம்பை, வெய்ய பகன் உடல் பெய்த குருதியின் - கொடியபக னென்னும் அவ்வரக்கனது உடம்பு சொரியும் இரத்தத்தால் (பின்புபூசப்படுவது) போல, எழில் அணி செய்தனன்-அழகிய அலங்காரஞ் செய்துகொண்டான்; (எ - று.)

செவ்வணி செய்தல், பலிப்பொருளுக்கு உரியதென அறிக. தாயின் கட்டளையை நிறைவேற்றுதலிற் கொண்ட விரைவோடு, போர்நேர்கிறதென்ற களிப்பினாற் கொண்ட விரைவையுங் காட்டு தற்கு, 'ஒய்யென் விரைவு' எனப் பலசொல் கொடுத்தார். வீமனை 'தருமன் தம்பி' என்றது, தனது சிரமம் பாராமல் நல்லோரைக் காக்கும் உதவியைச் செய்யுங் கருத்தை யுடையவனென்று காட்டு தற்கு. கைகொளா என்பதில், கை என்பது-தமிழுபசர்க்கம்.இனிப் பெய்யுங்குருதியை 'பெய்த குருதி' என்றது - இயல்புபற்றிவந்த

காலவழுவமைதி; தெளிவுபற்றிய தெனினுமாம். வய்யம் = வையம். கலவை - (பலவகைவாசனைப்பொருள்களோடுங்) கலந்த சந்தனம். பின்னிரண்டடி - தற்குறிப்பேற்றம். இக்கவி - பெரும்பாலும் தையச் சந்தத்தால் வந்தது.

## 50.—வீமன் சோற்றுவண்டியில் ஏறிச்செல்லுதல்.

துற்ற பலகறி செற்றி யமலைசெய் துப்போ ரிமகிரி யொப்பெனச்
சற்று மிடனற மொய்த்த சகடிரு சக்ர வுருளைக ளுய்க்கவே
உற்ற நிரைநிரை பத்தி படவலி யொத்த பகடுகள் கட்டினன்
நெற்றி மிசையொரு கொற்ற வடலரி நிற்ப தெனவொளிர் பொற்பினன்.

(இ-ள்.) துற்ற-மிகுதியாய்ப் பொருந்திய, பல கறி-பலவகைக் கறிகளை, செற்றி-இடையிடையே இட்டு, அமலை செய்-பெருந்திரளாகச்செய்த, துப்பு-சோறு, ஓர் இமம் கிரி ஒப்பு என - (வெண்ணிறத்தாலும் பெருவடிவாலும்) இமயமலைக்குச் சமமென்று சொல்லும்படி, சற்றும் இடன் அற மொய்த்த-சிறிதும் வெற்றிடமில்லாதபடி நெருங்கப்பெற்ற, சகடு-வண்டியை, இருசக்ரம் உருளைகள்-வட்டவடிவமான இரண்டுசக்கரங்கள், உய்க்க - இயக்கும்படி, பத்தி பட-ஒழுங்காக, நிரை நிரை உற்ற - வரிசைவரிசையாய்ப் பொருந்திய, வலி ஒத்த பகடுகள்-வலிமையில் ஒன்றுக்கொன்று சமமான கடாக்களை, கட்டினன்-கட்டி,—நெற்றி மிசை-(அவ்வண்டியின்) முற்பக்கத்திலே, ஒரு கொற்றம் அடல் அரி நிற்பது என - வெற்றியைத்தரும் ஓர் ஆண்சிங்கம்நிற்பது போல, ஒளிர் - விளங்கி நிற்கிற, பொற்பினன்-பொலிவையுடையவனானான்; (எ - று.)

ஹிமகிரி - வடசொல். சகடு - ஶகடம்: பத்தி = பங்க்தி : வடசொல்லின் விகாரங்கள். இரட்டையிரட்டையாய்ப் பலபகடுகள் கட்டினனென்பார் 'நிரைநிரை பத்திபடக் கட்டினன்' என்றார். 'சக்கிர வுருளை' என்ற பாடம் சந்தத்திற்கு முரணும்.

தத்த தனதன தத்த தனதன தத்த தனதன தத்தன என்றது இதற்குச் சந்தக்குழிப்பு. (460)

வேறு.

## 51.—வீமன் வனத்திற்சென்று பகனை நாடுதல்.

மண்ட லங்கொள்வடி வுடன டற்பரிதி மண்ணில் வந்ததென மறுகினிற்
கண்ட கண்டமுனி குலம டங்கவிரு கண்க ளிக்கவரு காட்சியான்
வெண்ட ரங்கமென வீசு பேயிரதம் விஞ்சு கானநெறி மீதுபோய்
அண்ட ரண்டமுக டுறவ ளர்ந்தனன ரக்க னின்றவழி யறியவே.

(இ-ள்.)அடல்-மேன்மையையுடைய, பரிதி-சூரியன்,மண்டலம் கொள் வடிவுடன்-வட்டவடிவத்தைக்கொண்ட (தனது) உருவத்துடனே, மண்ணில் வந்தது என-பூமியில் வந்தமைபோல, மறுகினில் கண்ட கண்ட முனிகுலம் அடங்க இரு கண் களிக்க வரு - வீதியிலே பார்த்தபார்த்த அந்தணர்கள் கூட்டமெல்லாம் இரண்டு கண்களுங் களிப்படையும்படி வருகிற, காட்சியான்-தோற்றத்தையுடையவனான வீமன்,—வெள் தரங்கம்என வீசுபேய் இரதம்விஞ்சு கானம் நெறி மீது போய் - வெண்மையான அலைகள் வீசுவது போல் தோன்றுகிற கானல்மிகுந்த காட்டுவழியிலேசென்று,—

அரக்கன் நின்ற உழி அறிய - பகன்நின்ற இடத்தை அறியும் பொருட்டு, அண்டர் அண்டம் முகடு உற வளர்ந்தனன் - தேவர்கள் வசிக்கிற அண்டகோளத்தின்மேலிடத்தை அளாவ நிமிர்ந்தான்;

திரிவிக்கிரமனைப்போலவளர்ந்தானென்றுகொள்ளற்க: அரக்கனிருக்குமிடம் காண ஓங்கியதை உயர்வுநவிற்சியாற் கூறியதென்க. செந்நிறமுள்ள மலர் துகில் கலவைகளால் தன்னை அலங்கரித்துக்கொண்டு விளங்குகிற வீமனுடையபருத்தவடிவத்துக்கு,சூரிய மண்டலம் உவமை. சூரியனுக்கு அடல் - நெடுந்தூரம் ஒளியைச் செலுத்தி இருளை அறக்கெடுக்கும் வலிமை. கண்களாற்கண்டு மனங்களித்தலையே கண்ணின்மே லேற்றி 'கண்களிக்க' என்றார்: இது, ஒருபொருளின் வினையை மற்றொரு பொருளின்மேலேற்றிக் கூறும் உபசாரவழக்கு. பேயிரதம்-பேய்த்தேர்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள்மாச்சீர்களும்,ஏழாஞ்சீர் விளச்சீரும், மற்றையவை விளங்காய்ச்சீர்களுமாகிய எழுசீராசிரியவிருத்தங்கள். (461)

**52.—இதுமுதல் மூன்று கவிகள்-ஒருதொடர்: வீமன் பகனைக் காணுதலும், சோற்றை உண்ணுதலும்.**

களிந்தவெற்புதவுநீலமாநதி யடுத்தகுன்றிலொருகழிமுழைத்
தெளிந்தபற்களொடுநாவைமென்றுநனி தின்றுவெம்பசிகொடீயினுல்
முளிந்துமுற்றுமனம்வேவவேவநெடு மூச்செறிந்துபுகைமுகனுடன்
விளிந்ததொத்துவழிகுழியநின்றுசுழல் விழிநிரைத்தயரும்வெகுளியான்.

மூன்று கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) களிந்தம் வெற்பு உதவு-களிந்தமலையினுற் பெறப்பட்ட,நீலம் மா நதி-நீலநிறமுடைய பெரிய யமுனாநதியை,அடுத்த -அடுத்துள்ள, குன்றில்-ஒருமலையிலே, ஒரு கழி முழை-ஒருபெரிய குகையிலே, கொள் வெம் பசி தீயினுல்-(தான்) கொண்ட கொடிய பசியாகிய வயிற்றழலினுல், தெளிந்த பற்களொடு நாவை நனி மென்று தின்று-வெண்மையாய் விளங்குகிற பற்களோடு நாக்கை மிகுதியாக மென்றுதின்றுகொண்டு, மனம் முற்றுஉம் முளிந்து வேவ வேவ - (இன்னும் இரைவாராமையா லாகிய கோபத்தால்) மனம் முழுவதும் காய்ந்து மிகவும் வேவ, நெடு மூச்சு எறிந்து-பெருமூச்சு விட்டுக்கொண்டு, புகை முகனுடன் - புகை வெளிக்கிளம்பப்பெற்ற முகத்தோடு, விளிந்தது ஒத்து வழி குழியநின்று-மறிந்தாற்போல (த் தான் செல்லும்) வழியும் குழிபடும்படிநின்று,சுழல் விழி நிரைத்து - சுழலுகிற கண்ணின் நோக்கங்களை எல்லாப்புறமுஞ் செலுத்தி, அயரும் வெகுளியான்-(தன்னையும்) மறந்த கோபத்தை யுடையவனுய்,—(எ - று.)''உற்றுநின்றநிலை'' (53) என்க. 'முழை' என்றதற்கும் 'உற்றுநின்ற' என்பதே முடிக்குஞ்சொல்.

அரக்கன் தன்மையை இனிது வருணித்தது,தன்மைநவிற்சியணி. களிந்த மலையினின்று உற்பத்தியாதலால், யமுனைக்கு, 'காளிந்தி' என்றுபெயர்; அந்நதியின்நீர், நீலநிறமுடையது.விளிதல்-பூகம்பம் முதலிய காரணங்களால் தரை இயல்புகெடுதல். கழி-உரிச்சொல்.

53. வெற்றெலும்பினுயராசனந்தனில் விகங்கநீழலிடைமேவரச்
சுற்றுநின்றுபலசம்புகங்கடுதி சொல்லவல்லன்மிகுதுன்முகன்
உற்றுநின்றநிலைகண்டுகந்திவனை யுயிரொழிந்திடவுடற்றினல்
இற்றையுண்டிகெடுமென்றுபண்டியி லெடுத்தவல்சிநுகரிச்சையான்.

(இ - ள்.) வெறு எலும்பின் உயர் ஆசனந்தனில்-தசைப்பற்றில்லாத எலும்புகளினு லாகிய உயர்ந்த ஓர் ஆசனத்தில், விகங்கம் நீழலிடை-(கழுகு பருந்து முதலிய) பறவைகளின் நிழலிலே, மேவர-(அப்பறவைகள்) விரும்பவும், பல சம்புகங்கள் சுற்றுஉம் நின்று துதிசொல்ல - அநேக நரிகள் சுற்றிலும் நின்று தோத்திரங்களைச்சொல்லவும், அல்லல் மிகு துன்முகன்-(காண்பவர்களுக்குத்)துன்பம் மிகுதற்குக் காரணமான கெட்டமுகத்தையுடைய பகனென்ற அவ்வரக்கன், உற்றுநின்ற - பொருந்தினின்ற, - நிலை-நிலைமையை, கண்டு-பார்த்து, உகந்து-மனம்மகிழ்ந்து,— இற்றை இவனை உயிர் ஒழிந்திட உடற்றினல் உண்டி கெடும் என்று-இப்பொழுதே இவனை உயிர் நீங்கும்படி கொன்றால் பின்பு இவ்வுணவு அசுத்தமாய் வீணய்விடுமென்று எண்ணி, பண்டியில் எடுத்த வல்சி நுகர் இச்சையான்-பண்டியில் ஏற்றிய உணவை (அவனைக் கொல்லுமுன்னமேதான்) உண்ணும் ஆசையை யுடையவனாய்,— (எ - று.)—"அருந்தினன்" என அடுத்த கவியோடு முடியும்.

வெற்றெலும்பு, இவன் நாள்தோறும் கொன்றுதின்ற பிராணிகளினுடையவை. இவனைச் சிலகொடிய பறவைகள் விரும்பிவட்டமிடுவதற்கும், பல நரிகள் சூழ்ந்து துதித்தற்குங் காரணம்- இவன் தசைபெற்று உண்ணுங்கால் தமக்கும் ஏதேனுஞ் சிறிது மிச்சில் கிடைக்குமென்ற அவா. நீழல்-நீட்டல். நரிகள் ஊளையிடுவதையே துதிகூறுதலாகக் குறித்தார். வீமன் போரின்றித் தினவு கொள்ளுந்தோளையுடையவனுதலால், கொடிய அவ்வரக்கனைக் கண்டவளவிலே மகிழ்ச்சியுற்றான். 'சுற்றிநின்று' என்றும் பாடம். (463)

54. வன்பினுலுரகபதியளித்தநெடு வாரியாரமுதமுண்டகோ
முன்பினுகவுயர்சகடிருந்தெதிர் முகந்துகொண்டுவரைமுழையுளே
அன்பினலடையுமன்னமென்னநிறை யன்னமுற்றவுமருந்தினன்
பின்பினுகவிதுகண்டுவெம்பசிகொள் பகனுமெய்தியிவைபேசுவான்.

(இ - ள்.)வன்பினல்-(தனது) வலிமையைக்கண்டதனுல்,உரகபதி அளித்த-சர்ப்பராசனுகிய வாசுகி (தனக்குக்) கொடுத்த, நெடு வாரி ஆர் அமுதம்-பெரிய பாற்கடலினின்று (முன்பு) தோன்றிய பெறுதற்கரிய அமிருதத்தை, உண்ட—, கோ-அரசனான வீமன், உயர் சகடு - உயர்ந்த அவ்வண்டியிலே, முன்பின் ஆக எதிர் இருந்து-முன்பின்னாகத் திரும்பியிருந்து,-வரைமுழைஉளே அன்பினல் அடையும் அன்னம் என்ன-மலைக்குகையினுள்ளே அன்போடு புகும் அன்னப்பறவைபோல, நிறை அன்னம் முற்றஉம் முகந்து கொண்டு அருந்தினன்-(அவ்வண்டியில்) நிறைந்தஅச்சோறுமுழுவதையும் அள்ளியெடுத்து(த் தனது பெருவாயினுள்ளேபுகும்படி) புசித்தான்;பின்-பின்பு,வெம்பசிகொள் பகன்உம்-கொடியபசியைக் கொண்ட பகனென்பவனும்,இதுகண்டு-இவன் இவ்வாறுஉண்ணு

தலைப் பார்த்து, பின் ஆகளய்தி-வீமன்பின்னே வந்து, இவை- இச் சொற்களை, பேசுவான்-; (எ - று.)—அவற்றை மேலே காண்க.

வெண்மையான சோற்றுத்திரளை நெடியபெரிய வாயினுள்ளே விரையச் செல்லுதற்கு, வெண்ணிறமான அன்னப்பறவை நெடிய பெரிய மலைக்குகையினுள்ளே விருப்பத்தோடு செல்லுதல் உவமை. வண்டியில் வீமன் முன்பின்னாக மாறியிருந்து உண் கின்றதனால், எதிர்வந்த அரக்கன் வீமனுக்குப் பின்னாயின னென்க. அன்னம் - பறவையைக் குறிக்கும்போது ஹம்ஸம்என்ற வடசொல்லின் திரிபும், சோற்றைக் குறிக்கும்போது அந்நம்-என்ற வடசொல்லின் திரிபுமாம். (464)

## 55.—பகன் விரவாதங்கூறிக்கொண்டு வீமனைக் கைகளாற்புடைத்தல்.

புலிதனக்கிடுவிடக்கைநின்றதொரு பூனைதின்னுமதுபோலநீ
பலியனைத்தையும்விழுங்கினலிது பலிக்குமோவெளிமைபாரெனு
ஒலிபடக்கிரியிலுருமெறிந்ததென வோடிவந்துபிடரொடியவே
வலிபடப்பணைவிறற்றடக்கைகொடு மாறிமாறிமுறைசீறினன்.

(இ - ள்.) 'புலிதனக்கு இடு விடக்கை - புலிக்கென்று இட்டு வைத்த இறைச்சியை, நின்றது ஒரு பூனை-அருகில் நின்றதொரு பூனை, தின்னுமது போல-தின்பதுபோல, நீ—, பலி அனைத்தைஉம் விழுங்கினல் - (எனக்கென்று செலுத்திய) உணவுமுழுவதையும் உண்டால், இது பலிக்குமோ - இது சித்திக்குமோ? எளிமை பார்-(எனது) எளிமையைப் பார்', எனு - என்றுசொல்லி, ஓடிவந்து—, (பகன்), கிரியில் உரும் எறிந்தது என - மலைமேல் இடி இடித்தாற் போல, ஒலி பட - பேரோசை யுண்டாக, பிடர் ஒடிய-(வீமனுடைய) பிடரி ஒடியும்படி, பணை விறல் தட கை கொடு-பருத்த வலியபெரிய (தன்) கைகளால், வலி பட - பலமாக, முறை மாறிமாறி-முறையே மாறிமாறிப் புடைத்து, சீறினன் - கோபங்காட்டினன்; (எ - று.)

நீ என்னிடத்துக் கருதிய எளிமையை எனது தொழிலால் அங்ஙனமன்றெனக் காட்டுவே னென்பான், 'எளிமைபார்' என்றான்; இது-குறிப்புமொழி. கைகொடு முறை மாறி மாறி-ஒரு கைமாற்றி ஒருகையால் விடாது அடித்து என்க. (465)

## 56.—அப்புடையல்களைச் சிறிதும் இலட்சியஞ்செய்யாமல் வீமன் புசித்துக்கொண்டிருத்தல்.

பக்கமும்பிடருமொக்கமுட்டிகள் படப்படக்கவளபாரமாய்
விக்கநின்றனவயிற்றிரண்டருகும் விழவிழமுன்விழுங்கலும்
புக்கபண்டமுடனுன்றுடற்றசை புசிப்பனெங்ஙனிவைபோவதென்
றக்கடுங்கையுமினைத்துவெஞ்சினமு மாறிநின்றனனரக்கனே.

(இ - ள்.) பிடர்உம்-பிடரியிலும், பக்கம்உம்-விலாப்புறத்தி லும், முட்டிகள் - (பகனது) முட்டியாகப்பிடித்த கைக்குத்துகள், ஒக்க - ஒருங்கிகரனவாக, பட பட - மிகுதியாகப் படுந்தோறும், (அதனால்) கவளம் பாரம் ஆய் விக்க நின்றன வயிறு இரண்டு அருகும் விழ விழ -(முன்பு) பருத்த கவளங்களாய் (உட்புகாது)

விக்கும்படி நின்றவைகள் வயிற்றின் இரண்டு பக்கங்களிலும் விழ விழ, முன்விழுங்கலும் - (வீமன் அவற்றை) விரைவாக விழுங்கு மளவிலே,—அரக்கன் - பகன்,—'புக்க பண்டமுடன் உன் உடல் தசை புசிப்பன் - (உன்வயிற்றினுட்) புக்க உணவுகளுடனே உனது உடம்பின் தசையை யுண்பேன்: இவை போவது எங்ஙன் - இவை எங்கே போவது?' என்று - என்றுசொல்லி, அ கடு கைஉம் இளைத்து - (குத்திய) அந்தக் கடினமான (தன்) கைகளும் இளைக் கப்பெற்று, (அதனால்), வெம் சினம்உம் ஆறி நின்றனன் - கொடிய கோபமும் சிறிது குறைந்து நின்றான்; (எ - று.)

கவளம் - கையளவுகொண்ட உணவு; அல்லது, வாயளவு கொண்டஉணவு. முஷ்டிகள்படுதலாகிய தீயசெயலையே சிறிது தடைப்பட்ட கவளங்கள் எளிதில் உட்புகுதலாகிய நன்மைக்குக் காரணமாகக் கூறியது-தகுதியின்மையணி: வடநூலார் 'விஷமாலங் காரம்' என்பர். 'புக்க பண்டமுட னுன்னுடற்றசைபுசிப்ப னெங்ங னிவைபோவது' என்ற இதில், பலிபண்டங்களையுண்ட உன்னை யுண்பதால் பண்டத்தையும் உன்னையும் தனித்தனியே புசித்த லாகிய இரண்டுவேலையில்லாமற் போய்விடுகிற தென்று பாராட்டி னமை தோன்றும். போவது - தொழிற்பெயர். (466)

57.—இதுவும், அடுத்த கவியும்-வீமன் வீரவாதங்கூறிப் போர்தொடங்கல்.

அச்சகட்டினிலோரெட்டுணைச்சுவடு மற்றபிற்சிறிதுமச்சமற்று
உச்சமுற்றவெயிலர்க்கனொத்திவனொ டுத்தரித்துரைசெய்தொட்டினன்
மெச்சுமெச்சுமுலகந்தரக்கர்களில் விக்ரமத்திறலின்மிக்கநீ
கச்சகச்சபலகத்தைவிட்டுனது கட்டுரத்தினொடுகட்டுவாய்.

(இ - ள்.) அ சகட்டினில்-அந்தப் பண்டியிலே, ஓர் எள்துணை சுவடுஉம்அற்றபின் - ஓர் எள்ளின் அளவு (அன்னத்தின்) அடை யாளமும் இல்லாது தீர்ந்தபின்பு, (வீமன்), சிறிதுஉம் அச்சம் அற்று - சிறிதும் பயமில்லாமல், உச்சம்உற்ற வெயில் அர்க்கன் ஒத்து-(வானத்து) உச்சியையடைந்த உக்கிரமான உஷ்ணகிரணங் களையுடைய சூரியன்போல (உக்கிரங்கொண்டு எழுந்துநின்று), உத்தரித்து இவனொடு உரைசெய்து ஒட்டினன் - தருக்குக்கொண்டு பகனொடு (இங்ஙன்கூறி வீரவாதஞ்செய்தான்:—மெச்சும் மெச்சும் உலகத்து அரக்கர்களில் - (எல்லோராலும்) மிகவுங்கொண்டாடி வியக்கப்படுகிற உலகத்து உள்ள அரக்கர்களுள், விக்ரமன் திறலில் மிக்க - பராக்கிரமத்தோடு கூடிய வலிமையில் மேம்பட்ட, நீ—, கச்சகச்ச பல கத்தை விட்டு - மிகவும் வெறுக்கத்தக்க பல வேற் றொலியை [பயனில் சொற்களைப் பேசுதலை] விட்டு, உனது கட்டு உரத்தினொடு கட்டுவாய் - (என்னோடு)சமமாகப்பொரும்பொருட்டு உனது கச்சுக்கட்டை வலிமையோடு கட்டிக்கொண்டு சித்தப் படுவாய்; (எ - று.)

போர்செய்யச் சிறிதும்பின்னிடாமல் மிகஊக்கங்கொண்டென் பார், 'சிறிதும் அச்சமற்று' என்றார். உத்தரித்து - (வயிற்றைத் தடவியுண்டதைச்) சரித்துக்கொண்டு என்று கூறலுமாம்: உத்த ரித்து உரைசெய்து-உத்தரமான வார்த்தையைச்சொல்லி என்

பாருமுளர். கச்சகச்ச - அடுக்கு, மிகுதிப்பொருளது: கச்ச - கைத்த என்பதன் போலி: இனி, 'கச்ச கச்ச' என்பதை,வடமொழி ஒருமையேவலாகக் கொண்டு, 'போ போ' என்று உரைப்பாரும் உளர். கத்து - கத்துதல்: பிறத்று: முதனிலைத் தொழிற்பெயர். கட்டு - இடைக்கட்டு.

இச்செய்யுள் - 'தத்த தத்தனன தத்த தத்தனன தத்த தத்தனன தத்தன'என்ற சந்தக்குழிப்புக்கு ஏற்ப வந்தது. இதில் வல்லோசைமிக்குவந்தது-வல்லிசை வண்ணம். (467)

58. சொல்லியென்பயனரக்கனீமனிதன் யானுனக்குரியதொழில்களாம்
மல்லினும்படைவிதத்தினுஞ்செருவில் வல்லவல்லனபுரிந்துபோர்
வெல்லநெஞ்சமுளதாகில்வந்துபொரு விறலிடிம்பனையும்வென்றுனைக்
கொல்லவந்தனனெனப்புகன்றிருகை கொட்டிமார்பின்மிசைகுத்தினன்.

(இ - ள்.) சொல்லி என் பயன் - வீண்வார்த்தை பேசிப் பயனென்ன? நீ அரக்கன்-நீ (இயல்பில் வலிய) இராக்கதன்: யான் மனிதன்-யான் (இயல்பில் எளிய) மனிதன்:(ஆயினும்),செருவில்-யுத்தத்தில், உனக்கு உரிய தொழில்கள் ஆம்-உனக்குஉரியசெய்ல்களாகிய, மல்லின் உம் - மற்போர்த்தொழிலிலும், படைவிதத்தின் உம்-பலவகை ஆயுதத் தொழில்களிலும்,வல்ல வல்லன-(நீ)தேர்ந்தவற்றையெல்லாம், புரிந்து - செய்து, போர் வெல்ல - போரில் (என்னை) வெல்லுதற்கு, நெஞ்சம் உளது ஆகில் - (உனக்கு)மனத்துணிவு உள்ளதானால், வந்துபொரு-எதிர்வந்து போர்செய்: விறல் இடிம்பனை உம் வென்று - வல்லமையுடைய இடிம்பனையுஞ் சயித்து, உனை கொல்ல வந்தனன்-உன்னைக் கொல்லுதற்கு வந்தேன்,என புகன்று-என்று வீரவாதங் கூறி,(அவ்வீமன்),இருகை கொட்டி-(தனது) இரண்டுகைகளையுந்தட்டி, மார்பின்மிசை குத்தினன் - (பகனுடைய) மார்பிலே குத்தினன்; (எ -று.)

மனம்போனபடி வாயில்வந்தவற்றைச் சொல்லுதலிற் பயனில்லை; தொழிலில் திறங்காட்டவேண்டுமென்பான் 'சொல்லியென்பயன்' என்றான். கைகொட்டுதல் - மற்போர்தொடங்கற்கு அறிகுறி. வந்தனனெனப்புகுந்து என்றும் பாடம். (468)

59.--இதுவும், அடுத்தகவியும்-இருவருஞ்செய்யும்போர்த்திறத்தைக் கூறும்.

பட்டவர்த்தனர்கள்பொற்சிரத்தின்மலர் பொற்புடைச்சரணபற்பனும்
நெட்டிருட்சரனும்வெற்புவெற்பினொடு நிச்சயித்துடலநிற்பபோல்
வட்டம்வட்டம்வரவொட்டியொட்டியுறு மற்றொழிற்செருவின்மட்டியா
முட்டியுத்தநிலைகற்றகற்றவகை முற்றமுற்றவெதிர்முட்டினர்.

(இ - ள்.) பட்டம் வர்த்தனர்கள்-பட்டந்தரித்து அரசாளும் அரசர்களுடைய, பொன் சிரத்தின்-பொன்முடியையணிந்த தலைகளின்மீது, மலர் - மலர்கிற, பொற்பு உடை சரணம் பற்பன்உம் - அழகுள்ள பாததாமரைமலரையுடையவனான வீமனும், நெடு இருள் சரன்உம்-நெடிய நிசிசரனாகிய பகனும்,—வெற்பு வெற்பினொடு உடல நிச்சயித்து நிற்ப போல்-மலை மலையோடு போர்செய்ய

நிச்சயித்து நிற்பதுபோல,—வட்டம் வட்டம் வர - மண்டலகதியால் மாறி மாறி வர, ஒட்டி ஒட்டி - (ஒருவரோடொருவர்) கலந்து கலந்து, உறு - செய்கிற, மல் தொழில் செருவில்-மல்லுத்தொழிலாகிய போரிலே, மட்டியா - தொடங்கி, முட்டி யுத்தம் நிலை-கைக் குத்துச்சண்டை நிலைகளில், கற்ற கற்ற வகை முற்ற முற்ற - தாம் தாம் அறிந்த வகைகள் எல்லாவற்றாலும், எதிர் முட்டினர் - (ஒருவரையொருவர்) எதிரே குத்தினர்கள்; (எ - று.)

பட்டாபிஷேகம் பெற்று அரசாளும்பல சிறந்த அரசர்களைப் போரில் வென்று அவ்வெற்றிக்கு அறிகுறியாக அவர்கள் தலைமீது தன்கால்களை வைப்பவ னென்பதும், அவ்வரசர்களால் தங்கள் தலை தன்கால்களிற்படும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கப் படுபவ னென்பதும், முதலடியின் கருத்து. வட்டம் என்றமண்டல கதியில் ,வலசாரி இடசாரியாகிய கதிவிசேடங்களும் அடங்கும். முட்டி யுத்தம்-குத்துச்சண்டை. இச்செய்யுளிலும் 57-இல்போல வல்லிசைவண்ணமும் சந்தப்பொருத்தமுங் காண்க. (469)

**60.** கரங்கரத்தொடுபிணங்கவுந்தமது கால்கள்கால்களொடுகட்டவும்
சிரஞ்சிரத்திறெடுதாக்கவுங்கொடிய சிங்கவேறனையதிறலினர்
உரங்களிட்டும்வளர்தோள்களிட்டுமெதி ரொத்திமற்சமருடன்றபின்
மரங்களிட்டுமுயர்கற்களிட்டுநெடு வாதினேடிகலிமோதினர்.

(இ-ள்.) கொடிய சிங்கம் ஏறு அனைய திறலினர் - கொடிய ஆண்சிங்கத்தை யொத்த வலிமையையுடைய அவ்விருவரும்,— தமது கரம் கரத்தொடு பிணங்கஉம் - தங்கள் கைகள்கைகளோடு பின்னவும், கால்கள் கால்களொடு கட்டஉம்-கால்கள் கால்களோடு பிணங்கவும், சிரம் சிரத்திறெடு தாக்கஉம் - தலை தலையோடுமோதவும், உரங்கள் இட்டுஉம் - மார்புகளைச் சேர்த்தும், வளர்தோள்கள் இட்டுஉம்-வளர்ந்த புயங்களைச் சேர்த்தும், எதிர் ஒத்தி-(ஒருவரையொருவர்) எதிரிலேதாக்கி, மல் சமர் உடன்ற பின் - மற்போரை உக்கிரமாகச் செய்தபின்பு, மரங்கள் இட்டுஉம்-மரங்களைப் பெயர்த்து மேலெறிந்தும், உயர் கற்கள் இட்டுஉம் - பெரிய கற்களையெடுத்து மேல்வீசியும், நெடு வாதினேடு-மிக்க வீரவாதத்துடனே, இகலி - மாறுபட்டு, மோதினர் - போர் செய்தார்கள்; (எ - று.)

உயர்கல்-வினைத்தொகை, வாது-வாதம் என்ற வடசொல்லின் திரிபு. 'உடன்றுபின்' என்றும் பாடம். (470)

**61.— வீமன் உதைக்கப் பகன் ஒடுங்கிச் சோர்ந்து திகைத்தல்.**

உலாவருந்தனதுதாதையொத்தவலி யுடையகாளைகழலுதையினல்
விலாவொடிந்துதடமார்பொடிந்துமிடல் வேரினேடிந்துபடுவெம்பினப்
புலாலைநந்தவிருகவுளொடிந்துபோரு புயமொடிந்துகடையொத்தவாய்
நிலாவெழுங்கொடியவெயிறேடிந்துசெய லின்றிவாணிருதனிற்கவே.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) உலா வரும்-(எங்குந் தடையின்றி)இயங்குந்தன்மையுள்ள, தனது தாதை - தனதுதந்தையாகிய வாயுவை, ஒத்த—, வலிஉடைய - வலிமையையுடைய, காளை - இளவீரனான வீமனது,

கழல் - கால்களின், உதையினால் - உதையால்,—வாள் நிருதன் - கொடிய அவ்வரக்கன், விலா ஒடிந்து - விலாப்புறம்முறிந்து, தட மார்பு ஒடிந்து - பரந்தமார்புமுறிந்து, மிடல் வெரின் ஒடிந்து-வலிமையையுடைய முதுகு முறிந்து, படு வெம் பிணம் புலால் அளைந்த இரு கவுள் ஒடிந்து - உயிரற்ற பயங்கரமான பிணங்களின் தசை பொருந்திய இரண்டு கன்னங்களும் முறிந்து, பொரு புயம்ஒடிந்து -போர்செய்கிற தோளும் ஒடிந்து, ஒத்த கடைவாய் நிலா எழும் கொடிய எயிறு ஒடிந்து - (தம்மில் ஒன்றோடொன்று) ஒத்த கடைவாய்களில் வெள்ளொளி விளங்குகிற கோரதந்தங்கள் முறிந்து, செயல் இன்றி நிற்க - ஒருசெயலுமில்லாமல் நிற்க,—(எ - று.)— 'விழுத்தி' என வருங் கவியோடு தொடரும்.

'விலாஒடிந்து...நிருதன் நிற்க' — சினைவினை முதல்வினை கொண்டு முடிந்தது. உலாவரும்=உலாவும்; வா - துணைவினை: 'உலாவிவரும்' என்பது விகாரப்பட்டதெனினுமாம். விலா-வயிற்றின்பக்கம். 'வெரிந்', 'புலாலளைந்த விருகை யொடிந்து', 'கடை பொய்த்தவாய்' என்றும் பாடம். (471)

## 62.—பகனைக் கொன்று வீமன் ஊருக்கு மீளுதல்.

உண்டியற்றயரும்யாதுதானனடி யுண்டுமெய்த்தளர்வொழிந்தபின்
மண்டியிட்டெதிர்விழுத்திமார்பிலிப மத்தகத்திடைமடங்கலின்
திண்டிறற்பெருமிடற்றைவன்பினெடு திருகிவீசியொருசெங்கையால்
பண்டியிற்கடிதிளிட்டுமாருதி புகுந்தனன்பழையபதியிலே.

(இ - ள்.) உண்டி அற்று அயரும் யாதுதானன் - உணவில்லாமற் சோரும் அரக்கனாகிய பகன், அடி உண்டு - (இவ்வாறு வீமனது) காலடி [உதை] பட்டு, மெய் தளர்வு ஒழிந்த பின்-உடம்பின் சோர்வு நீங்கினபின்பு, மாருதி-வாயுகுமாரனான வீமன், இபம் மத்தகத்திடை மடங்கலின்-யானையின் தலையில் சிங்கம் (பாய்தல்)போல, எதிர் விழுத்தி மார்பின் மண்டி இட்டு-(அவனை) எதிர்த்துக் கீழே தள்ளி அவன்மார்பின்மேல் மண்டியிட்டு உட்கார்ந்துகொண்டு, ஒரு செம் கையால் - (தனது) சிவந்த ஒருகையினால், திண் திறல் பெரு மிடற்றை வன்பின் நெடு திருகி வீசி - மிக்கவலிமையையுடைய (அவனது)பெரியகழுத்தை வலிமையோடு திருகியெறிந்து,கடிதின் பண்டியில் இட்டு-(அவனுடைய உடம்பை) விரைவாகப் பண்டியிலே போகட்டு, பழைய பதியில் புகுந்தனன் - பழமையான அவ் வேத்திரகீயநகரத்துக்குத் திரும்பிவந்தான்; (எ - று.)

உணவில்லாததனாலேயே சோர்வுற்ற அவ்வரக்கன் அதன் மேல் உதையும்பட்டுத் தளர்ந்து நிற்கிற நிலையில் அவனை மேலுந் தாக்கி வதைத்தல் நீதியன்றென்று வீமன் சிறிதுபொழுது போரொழிந்து நின்று,அவன்சோர்வு தீர்ந்த பின்னரே மீண்டும்எதிர்த்தனனென்க. மண்டியிடுதல் - இருகால் முடக்கிநிற்கும் நிலை. வேத்திரகீயநகரத்திலுள்ளார் பார்த்துத் துன்பம்நீங்கி மனம்மகிழ்தற்பொருட்டு அவ்வரக்கனுடலைப் பண்டியிலிட்டுக் கொணர்பவனானான். எதிர்=எதிர்த்து: வினைப்பகுதியே வினையெச்சப்பொருள் தந்தது; இனி, எதிரிலே என்றும் பொருள்கொள்ளலாம். அடியுண்டு என்றவிடத்து 'உதையுண்டு' என்றும் பாடமுண்டு (472)

## 63.—வீமன் மங்களஸ்நாநஞ்செய்தலும், சூரியன் அஸ்தமித்தலும்.

ஏகசக்கரவனத்திருந்ததிறல் யாதுதானனையிமைப்பினில்
சாகமுட்டியினடர்த்துமாமுனிவர் தம்பதிப்புறனடுத்ததோர்
வேகரிக்கடுவனத்திலிட்டுமல ரோடைமூழ்கவிறல்வீமனும்
மோகரித்தவுணரைத்தடிந்துகடன் முளரிநாயகனுமூழ்கினன்.

(இ - ள்.) விறல் வீமன் உம் -வலிமையையுடைய வீமனும்,ஏக சக்கரம் வனத்து இருந்த திறல் யாதுதானனை-ஏகசக்கரமென்னும் பெயரையுடைய காட்டிலிருந்த வலிமையையுடைய அரக்கனாகிய பகனை, இமைப்பினில்-ஒருமாத்திரைப் பொழுதிலே [மிகவிரைவிலே]சாக-இறக்கும்படி, முட்டியின் அடர்த்து-முஷ்டியுத்தஞ்செய்து கொன்று, (பின்பு அவனுடலை), மா முனிவர் தம் பதி புறன் அடுத்தது வே கரி கடு ஓர் வனத்தில் இட்டு-சிறந்த அந்தணர்கள் வசிக்கிற அந்த வேத்திரகீயநகரத்தின் வெளிப்புறத்தைச் சார்ந்ததான (பிணங்கள்) வெந்த கரிகளையுடைய கொடிய ஒரு காட்டிலே [மயானத்திலே] போகட்டு, மலர் ஓடை மூழ்க - பூக்களையுடைய ஒரு நீரோடையிலே ஸ்நாநஞ்செய்ய,—முளரி நாயகன் உம்-தாமரைக்குத் தலைவனான சூரியனும், அவுணரை மோகரித்து தடிந்து-(மந்தேகரென்ற) அசுரர்களை வீராவேசங்கொண்டு கொன்று, கடல் மூழ்கினன்-(மேல்) கடலில் நீராடினான் [அஸ்தமித்தனனென்றபடி];

வீமன் அரக்கனைக் கொன்றுஓடையில்நீராடுமளவிலே,சூரியன் அஸ்தமித்தானென்றவாறு. வீமன் பகனைப்பொருது கொன்றபொழுது அசுத்தி நீங்கும்பொருட்டு ஏற்றநீரில் மூழ்கியமைபோல, சூரியன் அசுரர்களைப்பொருது கொன்றபொழுது அசுத்தி நீங்கும் பொருட்டு நீரில்மூழ்குவானாயினன் எனஉவமையணி தொனித்தலையுணர்க.முன்பு வீமனுக்கு உதயசூரியனையும்[செ-19],உச்சசூரியனையும்[செ-57] உவமைகூறியவர், இங்கு அஸ்தமனசூரியனை உவமை கூறினார். ஏகசக்கரவனம்-ஏகசக்கர நகரத்தைச்சார்ந்தவனமென்ன இடமுண்டு.

மந்தேகாருணம் என்னும் தீவில் வாழும் மந்தேகர் என்னும் அரக்கர்கள் உக்கிரமான தவத்தைச் செய்து பிரமனிடத்து வரம் பெற்று அதனாற் செருக்கி எப்பொழுதுஞ் சூரியனை வளைந்து எதிர்த்துத்தடுத்துப் போர்செய்கின்றனரென்றும், அந்தணர்கள் சந்தியாகாலங்களில் மந்திரபூர்வமாகக் கையில் எடுத்துவிடும் அருக்கிய தீர்த்தங்கள் வச்சிராயுதம்போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால்தள்ளிச் சூரியனது சஞ்சாரத்துக்குத் தடையில்லாதபடி செய்கின்றனவென்றும்,அப்படி அந்தணர்கள்செலுத்தும் அருக்கியத்தின் ஆற்றலால் சூரியமண்டலத்தினிடையே ஒரு செந்தீ எழுந்து சொலிக்க அத்தீயில் அவ்வரக்கர்கள் விளக்கில் விட்டில்போலவிழுந்து ஒழிகின்றனரென்றும் நூல்கள்கூறும். 'முளரிநாயகன் அவுணரை மோகரித்துத் தடிந்து'—அந்தணர்கள் அருக்கியப்பிரதானஞ்செய்ய அதனால் தன்னிடம்எழுந்துவிளங்கும் சுவாலையைக்கொண்டு சூரியன் அவ்வரக்கர்களை அழித்து என்க.

### 64.—வீமன், மாளிகைக்குவந்து பந்து மித்திரரோடு அளவளாவுதல்.

வாசமாமணிவிளக்கெடுப்பவிவன் வந்துதாமுறையுமனைபுகுந்து
ஈசனோடுமையெனத்தவம்புரியு மிருவர்தாள்களுமிறைஞ்சியே
நேசமானவருளன்னையைத்தொழுது தம்முனைத்தொழுதுநெஞ்சுறத்
தேசினோடிளைஞர்தொழமகிழ்ச்சியொடு தழுவினன்முறைமைதிகழவே.

(இ - ள்.) வாசம்-வாசனையுள்ள [நறுநெய்கொண்டு ஏற்றிய], மா மணி விளக்கு - சிறந்த அழகிய விளக்குகளை, எடுப்ப - (நகரத்தார் எங்கும்) ஏற்ற, இவன்-வீமன், வந்து—, தாம் உறையும் மனை புகுந்து-தாங்கள் வசிக்கும் வீட்டிற்புக்கு, —முறைமைதிகழ-(அவரவர்க்குஉரிய) முறைமை விளங்க,—ஈசனோடு உமை என தவம் புரியும் இருவர் தாள்கள்உம் இறைஞ்சி-சிவபிரானும் பார்வதி தேவியும் போலத் தவவொழுக்கத்தைநடத்துகிற அவ்வீட்டு அந்தணனும் அவன் மனைவியுமாகிய இருவருடைய பாதங்களையும் நமஸ்கரித்து, நேசம் ஆன அருள் அன்னையை தொழுது - அன்புமிக்க கருணையையுடைய தன் தாயாகிய குந்திதேவியை வணங்கி,—தம்முனை தொழுது-தமையனாகிய தருமனை வணங்கி, இளைஞர் தேசினோடு நெஞ்சுஉற தொழ-(தனது) தம்பியர் பெருமையோடு மனப்பூர்வமாக (த்தன்னை) நமஸ்கரிக்க, மகிழ்ச்சியொடு தழுவினன்-சந்தோஷத்தோடு (அவர்களைத்) தழுவினான்; (எ-று.)

இல்லறத்தில் நின்றபடியே நல்லொழுக்கத்தை மிக்கசிறப்பாக நடத்துதற்கு ஈசனும் உமையும் உவமைகூறப்பட்டனர். ஈசன் - எல்லாஐசுவரியமுமுடையவன். பார்வதி ஐந்துபிராயமான வளவிலேபரமசிவனை மணம்புரிதற்குத் தவஞ்செய்யவிரும்பியவளாய்த் தன் கருத்தைப் பெற்றோர்க்குத் தெரிவிக்கையில், 'உ! மா [அம்ம! வேண்டா]' என்று கூறினமையால், அவளுக்கு உமை யென்று பெயராயிற்று. (474)

### 65.—நகரத்திலிருந்த பலரும் வீமனைப் பாராட்டியமை.

அகம லர்ந்துமுனி யாசி சொற்றிடவு மன்னை யார்வவுரை கூறவும்
முகம லர்ந்துரிய துணைவ ராண்மைநிலைமொழியவுஞ்சமரமொய்ம்பனைச்
சகம லர்ந்ததிரு வுந்தி மால்கொலிவ னென்று மற்றுளச னங்களும்
மிகம லர்ந்துபுன லோடை யிற்குமுமி நனிவி யந்திசைவி ளம்பினர்.

(இ - ள்.)—சமரம் மொய்ம்பனை - போர்வீரனானவீமனை,—முனி-(இருந்தவீட்டிற்குஉரிய) அந்தணன், அகம்மலர்ந்து-மனங்களித்து, ஆசி சொற்றிடஉம்-வாழ்த்துக்கூறவும்,—அன்னை - தாய்[குந்தி], ஆர்வம் உரை - அன்பைத்தெரிவிக்கும்பேச்சுக்களை, கூறஉம் - சொல்லவும்,—உரிய துணைவர் - உரிமைபூண்டசகாயரான உடன்பிறந்தோர், முகம்மலர்ந்து - முகமலர்ச்சிகொண்டு, ஆண்மை நிலைமொழியஉம் - பராக்கிரமச்செயலைப்பாராட்டிக் கூறவும்,—மற்றுஉள சனங்கள்உம் - மற்றும் அந்நகரத்திலிருந்த சனங்களெல்லாம்,—'இவன்—, சகம் மலர்ந்த திருஉந்தி மால் கொல் - உலகத்தைவெளிப்படுத்திய அழகியநாபியையுடைய திருமாலோ?' என்று-என்றுசங்கித்து, மிக மலர்ந்து-மிகவும் மனம்

மகிழ்ந்து, புனல் ஓடையின் குழுமி-நீர் ஓடையில்திரளுதல்போல ஒன்றுகூடி, நனி வியந்து - மிகவும் கொண்டாடி, இசை விளம்பினர்-(அந்தவீமசேனனுடைய)புகழைக் கூறினார்கள்; (எ - று.)

துஷ்டநிக்கிரகஞ்செய்து சிஷ்டரைப்பரிபாலிக்குஞ் செயல்இவ் வீமனுக்கும்இருத்தலால், 'மால்கொல்' என்றனர். ஓடையில்புனல் திரண்டுதாமரைமலர் மலர்ந்திருத்தல்போல, இந்நகரில் சனங்கள் திரண்டு மகிழ்ச்சியால் தம் கண்கள் மலர்ந்திருந்தன ரென்க.(475)

வேத்திரகீயச்சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## திரௌபதி மாலையிட்ட சருக்கம்.

திரௌபதியானவள் விவாகத்துக்குஉரிய பூமாலையைஅருச்சுனனுடையதோள்களிலிட்ட செய்தியைக் கூறுகின்ற சருக்கமென்று பொருள். அருச்சுனனுக்கு உரிமைபூண்ட திரௌபதியைத் தாயின் சொற்படி பாண்டவர் ஐவரும் மணஞ்செய்துகொண்ட வரலாறு இச்சருக்கத்திற் கூறப்படுகின்றது.

இச்சருக்கத்திற் கடவுள்வாழ்த்துச்செய்யுள் *காணப்படவில்லை. மானசிக மாத்திரமாகக் கடவுள்வணக்கம் நிகழ்ந்துவிட்டதென்றுவது, கடவுள்வாழ்த்தாக நூலாசிரியராற் பாடப்பட்டதொரு செய்யுள் பிற்காலத்தில் ஏடெழுதுவோரால் எழுதாது விடப்பட்டு ஒஞ்சிய தென்றுவது கொள்க.

1.—கவிக்கூற்று: சருக்கத்துக்குத் தோற்றுவாய் செய்தல்.

இங்கிவ ரிவ்வா றிந்த விருக்கையி லிருக்கு நாளில்
அங்கண்மா ஞால மெங்கு மரக்குமா ளிகையில் வீந்தார்
பங்கமில் குணத்தான் மிக்க பாண்டவ ரென்று மாழ்கத்
துங்கவேற் றுருப தன்றுன் சூழ்ந்தது சொல்ல லுற்றும்.

(இ - ள்.) இவர்-இப்பாண்டவர்கள், இ ஆறு-இந்தவிதமாய், இங்கு - இவ்விடத்தில் [வேத்திரகீயத்தில்], இந்த இருக்கையில்-கீழ்க்கூறிய அந்தணன் மாளிகையில், இருக்கும் நாளில்-தங்கியிருக்கும் காலத்தில்,—அம்கண் மா ஞாலம் எங்கும்-அழகிய இடமகன்ற பெரிய பூமிமுழுவதிலுமுள்ளோரெல்லோரும், பங்கம் இல் குணத்தால் மிக்க பாண்டவர் அரக்குமாளிகையில் வீந்தார் என்றுமாழ்க - 'குற்றமற்ற நற்குணங்களாற்சிறந்த பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் இறந்தார்கள்' என்றுகருதி மனம்வருந்த,—துங்கம் வேல் துருபதன் சூழ்ந்தது-சிறந்த வேலாயுதத்தையுடைய துருபத

---

*"குண்டலமிலங்கச்சங்குமாழியுங்குலவுகாந்தி
மண்டலந்துதிக்குந்திங்களிரவிமேல்வடிவந்தூண்ட
விண்டலத்திலங்குபீதவ்வுணனைவெறுத்துவீழ்த்த
புண்டரிகங்கள்பூத்தபுயலினைப்போற்றிசெய்வாம்"

என்கிற செய்யுளொன்று, இச்சருக்கத்துக் கடவுள்வாழ்த்தாகச் சிலபிரதிகளிற் காணப்படுகிறது.

மகாராசன் ஆலோசித்துச்செய்த செயலை, சொல்லல் உற்றும் - இனிச்சொல்லத்தொடங்கினோம்; (எ - று.)—அதனை, அடுத்தகவி முதற் காண்க. தான் - அசை.

இதுமுதல் முப்பத்தொரு கவிகள்-பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிய அறுசீராசிரிய விருத்தங்கள். (476)

## 2.—துருபதனது உட்கருத்து.

*வரத்தினற்பிறந்தவாறும் வான்மொழிபுகன்றவாறும்
சிரத்தினல்வணங்கிக்கேட்பத் தேசிகனுரைத்தவாறும்
உரத்தினர்கெடாதவாறு முணர்ந்துதன்பேதையின்னம்
சரத்தினலுயர்ந்தவின்மைத் தனஞ்சயற்குரியளென்னு.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) (துருபதமகாராசன்),—வரத்தினல் பிறந்தஆறுஉம்- (தான்) வரம்வேண்டியபடி (திரௌபதி) தோன்றிய தன்மையையும், வான் மொழி புகன்ற ஆறுஉம் - (அங்ஙனந்தோன்றிய பொழுது) ஆகாயவாணி சொன்ன தன்மையையும், சிரத்தினல் வணங்கி கேட்ப தேசிகன் உரைத்த ஆறுஉம் - (தனது) தலையால் வணங்கி வினவ (அதற்குத் தன்) குரு சொன்ன தன்மையையும், உரத்தினர் கெடாத ஆறுஉம்-வலிமையையுடைய பாண்டவர்கள் இறவாத தன்மையையும், உணர்ந்து - ஆலோசித்து,—'தன் பேதை-தனது மகளான அத்திரௌபதி, இன்னம்-இன்னமும், சரத்தினல் உயர்ந்த வின்மை தனஞ்சயற்கு உரியள்-அம்பினற் சிறந்த வில்லின் தொழிலில் வல்ல அருச்சுனனுக்கே உரியவளாவள்,' என்னு - என்று கருதி,— (எ - று.)—"காவலர்க்கோலை போக்க" என அடுத்த கவியோடு தொடரும்.

இக்குளகச்செய்யுள்களில் 'உணர்ந்து', 'என்னு', 'போக்க' என்ற வினையெச்சங்களுக்கு, 'துருபதன்' என்றதோன்ருஎழுவாய் வருவிக்க. 'அருச்சுனனுக்கு மணஞ்செய்துகொடுத்தற்பொருட்டு ஒருபுத்திரிவேண்டும்' என்று யாசன்உபயாசன்என்னும்முனிவர்களிடம் துருபதன் வரம்வேண்ட, அப்படியே அவர்கள் அநுக்கிரகித்துப் புத்திரகாமயாகஞ் செய்வித்ததனல் திரௌபதி தோன்றியமை, பிரசித்தம். அக்காலத்தில் தெய்வத் தன்மையுள்ள அசரீரி வாக்கு 'இவள் பாண்டவர்க்கு உரியளாய்ப் பல அரசர் இறத்தற்கு மூலமாவாள்' என்று வானத்தில் உரைத்தமையும்; பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்துபோயினரென்ற உலகவதந்தியைக் கேட்டவுடனே மிகவுங்கவலைகொண்ட துருபதன் தன்குருவைச்

---

*"மறைவழாமுனிவர்நின்றமரபினைநோக்கிமன்னன்
இறையெனுமைவர்மாண்டாரேந்திழைக்கினிமைகூர்தன்
முறைமையாதென்னப்பொய்யார்முந்துவரைவரென்னக்
குறைவிலதென்னவிண்ணின்வாணியுங்கூறக்கேட்டான்"

என்கிற செய்யுளொன்று, இச்செய்யுளுக்குமுன் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகிறது.

சரணமடைந்து 'இனி என் செய்வது?' என்று வினவ, அவன் தனது ஞானக்கண்ணால் உண்மையையுணர்ந்து 'அவர் இறந்திலர்' என்று கூறித் துருபதனைத் தேற்றியமையும்; பாண்டவர்மிக்கபல சாலிகளாதலால் பகைவர்களால் எவ்வகையாலும் எளிதில் அழிக்கப்படுபவரல்ல ரென்று துருபதன் துணிந்தமையும் - இங்குக் குறிக்கப்பட்ட விஷயங்கள். 'இன்னம்' என்றதனால், துருபதன் செய்த முயற்சி ஒன்றினாலும் அவர்கள் கிடைத்தில ரென்பது பெறப்படும். இங்ஙனமிருக்கவும் துருபதன் ஆஸ்திக னாதலால், வரம், வான் மொழி, குருமொழி இவற்றில்மிக்கநம்பிக்கைகொண்டு அதனால் இன்னும் இவள் அருச்சுனனையே மணஞ்செய்து கொள்வளென்று உறுதிகொண்டிருந்தனனென்க. தேசிகன் பெயர் - உலூகமுனிவனென்ப. 'வான்மொழிகேட்ட வாறும்', 'தேசிகருரைத்தவாறும்', 'உரத்தினாற் கெடாதவாறும் என்று பிரதிபேதம். (477)

### 3.—துருபதன் சுயம்வரநாள் குறித்தலும், அரசர் திரளலும்.

தான்வரித்தவற்கேயெய்த வுரியளென்றனையையென்று
கான்வரிச்சுரும்புண்மாலைக் காவலர்க்கோலைபோக்க
மான்வரிக்கண்ணிக்கேற்ற வதுவைநாண்மலர்ப்பூவொன்றைத்
தேன்வரித்தென்னவந்து திரண்டதுகுமரர்சேனை.

(இ - ள்.) 'என் தனயை-எனதுமகள், தான்வரித்தவற்குஎ எய்தஉரியள்-(சுயம்வரத்தில்)அவள் தானாக விரும்பிக்கொள்ளும் புருஷனுக்கே பெறுதற்கு உரியள்', என்று—, கான் வரி சுரும்பு உண் மாலை காவலர்க்கு ஓலைபோக்க-இசைப்பாட்டையும்உடம்பிற் புள்ளிகளையுமுடைய வண்டுகள் (மொய்த்துத்) தேனுண்ணுகிற பூமாலையைத் தரித்த அரசர்களுக்கு(த் துருபதன்) திருமுகம் அனுப்ப,—மான் வரி கண்ணிக்கு ஏற்ற வதுவை நாள் - மானின் பார்வைபோன்ற செவ்வரிபரந்த கண்களையுடைய அத்திரௌபதிக்கு இயைந்த அந்தச் சுயம்வர தினத்தில்,—மலர் பூ ஒன்றை தேன் வரித்து என்ன - மலர்ந்த ஒருபூவை வண்டுக்கூட்டம் (தனித்தனி தம்தமக்கென்று கொண்டு) விரும்பிவந்துமொய்த்தாற்போல, குமரர்சேனை-இராசகுமாரர்களுடையகூட்டம்,(திரௌபதியொருத்தியை விரும்பி), வந்துதிரண்டது—; (எ - று.)

திரௌபதிக்குச் சுயம்வரமென்று உலகமெங்குந்தெரிவித்தால் அவளைப் பெறும்விருப்பத்தாற் பலரும் வரும்போதுபாண்டவரும் வருவ ரென்று கருதிச் சுயம்வரம்நாட்டி அதற்குஉரிய பத்திரிகையைத் தூதர்மூலமாக எல்லாத்தேசத்தரசர்க்கும் அனுப்பினனென்க. சுயம்வரமாவது - (ஓர் இராசகன்னிகை ஓரிடத்திலே வருவித்துச் சேர்க்கப்பட்ட இராசகுமாரர்பலருள் தனக்குப்பிரியமான ஒருவனைத்) தானே கணவனாக ஏற்படுத்திக்கொள்ளுதல். பெருந்திரளென்பதை உணர்த்தற்கு 'சேனை' என்றார். (478)

### 4.—சுயம்வரத்தைச் செவியுற்றவுடன் பாண்டவர் பிரயாணப்படுதல்.

ஆங்கதுநிகழ்ந்தமாற்ற மந்தணனொருவன்வந்தோன்
ஈங்கிவர்க்குரைப்பமைந்த ரைவரும்பாயுங்கேட்டுப்

பாங்குடைப்பதியில்வாழும் பார்ப்பனமாக்களோடும்
தாங்கருங்கொடியகானந் தம்மனத்தேரிற்போனர்.

(இ - ள்.) ஆங்கு அது நிகழ்ந்த மாற்றம் - அவ்விடத்தில் [பாஞ்சாலநகரத்தில்] அந்தச்சுயம்வரம் அமைந்த செய்தியை, வந்தோன் அந்தணன் ஒருவன் ஈங்கு இவர்க்கு உரைப்ப - (அங்கு நின்று) வந்தவனாகிய ஒருபிராமணன் இவ்விடத்தில் [வேத்திரகீயத்தில்] இருக்கிற இந்தப்பாண்டவர்கட்குச் சொல்ல,—மைந்தர் ஐவர் உம் யாய் உம் கேட்டு - குமாரர்களாகிய பாண்டவர் ஐவரும் அவர்கள் தாயான குந்தியும் (அச்சொல்லைச்) செவியுற்று,—பாங்கு உடை பதியில் வாழும் பார்ப்பன மாக்களோடு உம்-அழகுள்ள அவ் வூரில் வாழ்கிற பிராமணர்களுடனே (புறப்பட்டு), தாங்கு அரு கொடிய கானம்-பொறுத்தற்கு அரிய கொடுமையையுடைய காட்டு வழியிலே, தம் மனம் தேரின் போனர்-தங்கள்மனமாகிய தேரிற் சென்றார்கள்; (எ-று.)

ஒருவர் பலவிடத்தும் திரிதற்குத் தேர் துணையாவதுபோல மனத்தைப் பலவிடத்தும் செல்லும்படி ஆசை செய்தலால், அவ் விருப்பத்துக்கு 'மனோரதம்' என்று வடமொழியிற்பெயர்: அச் சொற்பொருளைத் தழுவி, தம்இச்சைப்படி விரைவாகச்சென்றார்க ளென்றபொருளில் 'தம்மனத்தேரிற்போனர்' என்றார்: திரௌ பதியைத்தாம்பெறலாகுமென்றகாதல்தூண்டச் சென்றனரென்று கருத்து. இக்கருத்தை யுட்கொண்டு, அந்தணவடிவத்தோடு மறைந்துவசிக்கிற இவர்கள், திரௌபதிவிவாககாலத்தில்நடக்கும் போசனத்தையுண்டு அங்குக்கொடுக்கிற தட்சிணையைப்பெற்று அங்குநிகழும் பலவகைவிநோதங்களைக் கண்டு மகிழலா மென்ற கருத்துடன் புறப்பட்ட அந்தணர்களுடனே பிரயாணமாயின ரென்க. தாங்கு-முதனிலைத்தொழிற்பெயர். 'ஐவரும்யாவுங்கேட்டு', 'தாங்களும்' என்று பிரதிபேதம். (479)

### 5.—அவ்வனத்தில் பாண்டவரெதிரில் வியாசமுனிவன் வந்து தோன்றல்.

சாரதந்திரத்தின்மிக்க தபோதனன்சதுர்வேதங்கள்
பாரதந்தன்னேடைந்தாம் படியினுற்பகர்ந்தமூர்த்தி
நாரதமுனியையொப்பா னராதிபர்நடந்துசெல்லும்
நீரதநெறியில்வாவிநிறைந்தநீரென்னநின்முன்.

(இ-ள்.) சாரம் தந்திரத்தில் மிக்க-சாரமான நூலறிவிற் சிறந்தவனும், தபோதனன் - தவத்தையே செல்வமாகவுடையவனும், சதுர் வேதங்கள்-நான்கு வேதங்கள், பாரதந்தன்னோடு ஐந்து ஆம் படியினால்-பாரதத்தோடு சேர்ந்து ஐந்தாகும்படி, பகர்ந்த - (அவ் வேதங்களைவகுத்துப் பாரதத்தைச்) சொல்லியருளிய, மூர்த்தி - பெரியோனும், நாரதமுனியை ஒப்பான் - நாரதமுனிவனை யொப்ப வனுமாகிய வியாசமுனிவன்,—நர அதிபர் நடந்துசெல்லும் நீரதம் நெறியில்-அரசர்களாகிய அப்பாண்டவர்கள் நடந்துசெல்லும் நீ ரற்ற அக்காட்டுவழியில், வாவி நிறைந்த நீர் என்ன - குளத்தில் நிறைந்தநீர்போல, நின்றான்—; (எ - று.)

நீரற்ற காட்டுவழியிற் செல்வோர்க்கு நீர்நிறைந்தவொரு குளம் எதிரில் தோன்றினால் மிக்கமகிழ்ச்சியைத்தந்து அவர்களுடைய தாகத்தைத் தணிவித்து ஆற்றுவதுபோல, பாண்டவர்க்கு மகிழ்ச்சியைவிளைவித்து வருத்தத்தை ஆற்றுபவனாய் வியாசன் வந்து நின்றனனென்க. வேதங்களிலுள்ளவைபோன்ற சாரமான பலவிஷயங்கள் பொருந்துதலால் அனைவரும் 'ஐந்தாம் வேதம்'என்று கொண்டாடும்படி இவன்பாண்டவசரித்திரத்தைப் பாரதம் என்ற இதிகாசமாகச் செய்தது பாண்டவர்காலத்தின் பின் நடந்த செயலாயினும், பிற்பட்டவராகிய கவி, அதனையுஞ் சேர்த்து 'சதுர்வேதங்கள் பாரதந்தன்னோ டைந்தாம்படியினாற் பகர்ந்த மூர்த்தி' என்றார். சாரதந்திரம் - எல்லாச் சாஸ்திரங்களினுஞ் சிறந்ததான வேதாந்தம். பிரமனது மனத்தினின்று தோன்றிய குமாரனாய்த் தேவவிருடியாகியநாரதன் தத்துவஞானத்திலும் தவவொழுக்கத்திலும் லோகோபகாரஞ் செய்தலிலும் மிகச்சிறத்தலால், வியாசனுக்கு அவனை உவமைகூறினார். நாரதர் என்ற பெயர்-ஆத்தும ஞானத்தை உபதேசிப்பவனென்றும், மனிதர்களுக்கு உள்ள ஒற்றுமையைக்கெடுப்பவனென்றுங் காரணப் பொருள்படும். நரன் - ஆத்மா, அதற்குஉரிய ஞானம் - நாரம்; த-கொடுத்தல். அல்லது, நரர் - மனிதர், அவர் சம்பந்தமான ஒற்றுமை-நாரம்; த - கெடுத்தல். நீரஸம் - நிர்+ரஸம்; ரஸம் - நீர்: அது இல்லாதது, நீரஸம்: வடமொழிப்புணர்ச்சி: அது, நீரதம் எனத் திரிந்தது. (480)

**6.—வியாசன்பாண்டவர்க்குஇனிநடக்குஞ்செய்தியைக்குறிப்பாகக்கூறல்.**

வணங்கலும்வாழ்த்திமுந்த வந்துநீர்வாழ்வுசெய்தீர்
இணங்கிநுங்கேண்மைகொள்வானிச்சையால்யாகசேனன்
அணங்கினையன்றுவேள்வியழலிடையளித்தானந்தச்
சுணங்கணிமுலையாணளைச்சூட்டுவடொடையன்மாதோ.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) வணங்கலும்-(அப்பொழுது பாண்டவர்கள்)வணங்கினவுடனே,—(வியாசமுனிவன்), வாழ்த்தி - ஆசீர்வாதஞ்செய்து, (அவர்களைநோக்கி), 'நீர் முந்த வந்து வாழ்வு செய்தீர் - நீங்கள் முன்னேவருதலால் வாழ்வுபெற்றீர்கள்; யாகசேனன் - துருபதராசன், இணங்கி நும் கேண்மை கொள்வான் இச்சையால் - (உங்களோடு) சம்பந்தஞ்செய்து உங்களுறவைக்கொள்ளக்கருதிய விருப்பத்தால், அன்று - அக்காலத்தில், வேள்வி அழலிடை - யாக அக்கினியிலே, அணங்கினை-சிறந்தமகளை [திரௌபதியை], அளித்தான் - பெற்றான்; அந்த சுணங்கு அணி முலையாள் - தேமல் படர்ந்த தனங்களையுடைய அக்கன்னிகை, நாளை - நாளைக்கே, தொடையல் சூட்டுவள் - மணமாலையைச் சூட்டுவாள்; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசைகள்.

'முந்தவந்து நீர் வாழ்வு செய்தீர்' என்பதற்கு - திரௌபதி மணமாலை சூட்டும் தினம் நாளைக்கே யாதலால் நீங்கள் முந்திவந்ததனால்வாழ்வுபெற்றவராவீர் என்பது கருத்து.வாழ்வுசெய்தீர் என்

றது, எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. அணங்கு-மோகினி யென்னும் பெண்தெய்வம்: இச்சொல்- இலக்கணையாய், அழகிற்சிறந்த பெண்ணை யுணர்த்தும். சுணங்கு- நிறவேறுபாடு: பொன்னுரைபோலச் சிறிதும் பெரிதுமாகப் படர்வது. (481)

7. இப்பகலிரவும்வைகா தேகியாங்கெய்துமங்கண்
அப்பகன்மன்றல்பெற்றாற் றோற்றுதலாண்மையென்று
செப்பியேமுனிவன்போகச் சிறுவரும்பெரியகங்குல்
மைப்புறப்பார்த்தன்செங்கை மணிவிளக்காரப்போனார்.

(இ - ள்.) இ பகல் இரவும் வைகாது - இன்றைப் பகலும் இராத்திரியும் எங்குந்தங்காமல், ஏகி - விரைவாகநடந்து, ஆங்கு எய்தும் - அவ்விடத்துக்கு [சுயம்வரமண்டபத்துக்கு]ப் போய்ச் சேருங்கள்; அங்கண் - அவ்விடத்தில், அ பகல் - அத்தினத்தில், [நாளைக்கு], மன்றல் பெற்றால் - (திரௌபதியின்) மணமாலையைப் பெற்றபின்பு, தோற்றுதல் - (அங்கு உங்கள் உண்மைவடிவத்துடன்) வெளிப்படுதல், ஆண்மை - ஆண்தன்மைக்குஉரிய செயலாம், என்று செப்பி - என்றுசொல்லி,—முனிவன் - அவ்வியாசமுனிவன், போக-செல்ல,—சிறுவர்உம் - யௌவனபருவமுடையவராகிய பாண்டவர்களும், பெரிய கங்குல் - நீண்ட அவ்விராப்பொழுதில், மைபுறம் பார்த்தன் செம் கை மணி விளக்கு ஆர போனார் - கருநிறமான உடம்பையுடைய அருச்சுனனது சிவந்த கையில் அழகியவிளக்குப்பொருந்தச் சென்றார்கள்; (எ - று.)

அவ்விரவில் மிக்கதைரியசாலியான அருச்சுனன் வெளிச்சத்துக்காகக்கையில் தீக்கோல்பிடித்து முன்னேவழிகாட்டிக்கொண்டு செல்ல, மற்றையோர் அவன்பின் சென்றன ரென்பதாம். நீங்கள் அந்தணவேடத்தோடே சென்று வில்வளைத்து இலக்கை எய்து திரௌபதியின்மணமாலையைப்பெற்றால், அவ்விஷயத்திற்பொறாமைகொண்டவராய் அரசரனைவரும் எதிர்த்துப்பொருவராதலின் அவர்களை வென்றபின்னரே வெளிப்படுதல், நெடுநாளாக மறைந்திருந்தஉங்களது ஆண்மைஉங்கள் பகைவர்முதலியோர்க்கு நன்கு புலப்படுதற்கு ஏற்றவழி யென்னுங் கருத்தால், 'அப்பகல்மன்றல் பெற்றால் தோற்றுதலாண்மை' என்றான். திரௌபதியின் மணத்திற் கருத்தூன்றிய அவர்கட்கு இடையேநேர்ந்த அவ்விராப்பொழுதுநீட்டித்ததாகத் தோன்றிய தென்பதுபட, 'பெரியகங்குல்' என்றார். இங்கே, 'சிறுவர்' என்றது - இளமைப்பருவமுடையோ ரென்றபொருளோடு, அவ்வியாசமுனிவனது பௌத்திர ரென்ற கருத்தையுங் காட்டும். மன்றல்-விவாகம்; இலக்கணையாய் அதை நிச்சயித்தற்குஉரிய சுயம்வரமாலையை உணர்த்திற்று. (482)

8.—சித்திரரதனென்னும் கந்தருவனை அருச்சுனன் வெல்லுதல்.

புத்திரன்பேரர்கங்கைப் பூந்துறையடைந்தபோதில்
குத்திரவிஞ்சைவேந்தன் குறுகிவெங்கோடும்போர்செய்யச்
சித்திரத்தேரோன்றன்னைத் தேவர்கோன்மதலைசெந்தீ
அத்திரத்திருந்தைத்தேரோ டுக்கினனிமைப்பினம்மா.

(இ - ள்.) கங்கை பூ துறை-கங்காநதியினது பொலிவுள்ள நீர்த்துறையை, புத்திரன் பேரர்-(அக்கங்கையினது) குமாரனாகிய வீடுமனுடைய பௌத்திரராகிய அப்பாண்டவர்கள், அடைந்த போதில் - அடைந்தசமயத்தில்,—குத்திரம் விஞ்சை வேந்தன் - வஞ்சனையையுடைய மாயவித்தையையுடைய தலைவனாகிய(சித்ரரத னென்னும்) கந்தருவன், குறுகி - நெருங்கிவந்து, வெம் கொடு போர் செய்ய - மிகக்கொடியபோரைச் செய்ய,—(அப்போரில்), தேவர் கோன் மதலை - தேவர்கட்கு அரசனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனன், இமைப்பின் - ஒருமாத்திரைப் பொழுதிலே, சித்திரம் தேரோன் தன்னை-அழகிய தேரையுடைய அந்தச்சித்திரரதனை, செம் தீ அத்திரத்து - சிவந்த நெருப்பு மயமான ஆக்கிநேயாஸ்திரத்தினால், இருந்தை தேரோன் ஆக்கினன்-கரிபட்ட தேரையுடையவனாகச் செய்தான் [அவனதுதேரைக்கரியாகுமாறு எரித்தான் என்றபடி]; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்.

பாண்டவர் கங்கையைச்சார்ந்து அதன் துறையிலிறங்குமளவில், அங்குப் பலமகளிருடனே ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்த சித்திரரத னென்னும் மறுபெயர்கொண்ட அங்காரபர்ண னென்னும் கந்தர்வன், இவர்கள்வருகை தன் நீர்விளையாட்டுக்குத் தடையாதலை நோக்கிக் கோபங்கொண்டவனாய், இவர்களை 'இங்கு வரலாகாது' என்று தடுத்து வீரவாதங்கூறி மாயப்போர் தொடங்க, அப்போரில் முன்னின்ற அருச்சுனன் ஆக்கிநேயாஸ்திரத்தால் அவன்மாயைகளை ஒழித்ததோடு அவனதுதேரையும் கரியாக்கின னென்பதாம். 'ஸ்த்ரைணக்லுப்த ஜலகேலிம் உத்ந தம்-தத்ரசித்ரரத மாஹி தாஹவம் - ஆததாந தநயஸ் ஸசிபதே:- ஆஶு தக்தரதம் அஸ்த்ரவஹ்நிநா" என்றது பாலபாரதம். இவனை மாயவித்தை வல்லவனென்றும் கந்தர்வனென்றும் வியாசபாரதங் கூறுவதற்கு ஏற்ப, விஞ்சைவேந்தனென்பதற்கு - வித்தியாதர ராசனென்று கொள்ளாமல் மாயவித்தையில்வல்ல கந்தர்வ ராஜனென்று பொருள் கூறப்பட்டது. இருந்தை - கரி. (483)

## 9.—சித்திரரதன்சொற்படி பாண்டவர் தௌமியனுடன் வழிநடத்தல்.

தோற்றவன்றிரிந்துமீண்டு தோழனவ்விசயற்காக
ஆற்றரும்புனலும்யாறு மவன்றுணையாகநீந்திச்
சாற்றுமுற்கசதீரத்துத் தௌமியமுனியைக்கண்டு
போற்றிமற்றவன்றனேடும் புன்னெறிப்புறம்விட்டாரே.

(இ - ள்.) தோற்றவன் -(இவ்வாறு அருச்சுனனிடம்)தோல்வியடைந்த சித்திரரதன், மீண்டு திரிந்து-பின்பு பகைமை நீங்கி, அ விசயற்கு தோழன் ஆக - அந்த அருச்சுனனுக்கு நண்பனாக,—(அதன்பின் பாண்டவர்கள்), ஆற்று அரு புனல்உம் யாறுஉம் - கடத்தற்கு அரிய நீர்நிலைகளையும் நதிகளையும், அவன் துணை ஆக நீந்தி - அந்தச்சித்திரரதனைத் துணைவனாகக்கொண்டு அவனுதவியாற்கடந்து,—சாற்றும் உற்கசதீரத்து தௌமியமுனியை கண்டு போற்றி - (அந்தக்கந்தர்வனாற்) கூறப்பட்ட உற்கசதீர்த்தத்தின் கரையிலே தௌமியனென்னும் முனிவனைக்கண்டுவணங்கி,மற்று-

பின்பு, அவன் தனோடும் புல்நெறி புறம் விட்டார்-அந்தத்தௌமியனுடனே சென்று சிறிதுமிச்சமாய்நின்ற வழியினெல்லையைக் கடந்தார்கள்; (எ - று.)

அருச்சுனன் சித்திரரதனது தேரைக் கரியாக்கியபின் அந்த அஸ்திரத்தினாலேயே அவனது அம்புகளையும் உடல்வலிமையையும் ஒடுங்கச்செய்து அவனைத் தலைமயிர்பற்றியிழுத்துவந்து தருமபுத்திரனது பாதத்திற்போகட, தருமபுத்திரன் அவன்மனையாளான கும்பீநசியின் வேண்டுகோளின்படி அருள்கொண்டு அவனை விடுவிக்க, அவன் இவர்கள் பாண்டவரென்று அறிந்து தன்பிழையைப் பொறுக்கும்படி வேண்டிச் சரணமடைந்து அபயமளிக்கப்பெற்றபின் நண்புபூண்டு சிறந்த ஐந்நூறு குதிரைகளைக்கொடுப்பதாக வாக்களித்துத் தானறிந்த மாயவித்தையை அருச்சுனனுக்குக் கற்றுக்கொடுத்து அதற்கு ஈடாக அவனிடமிருந்து ஆக்கிநேயாஸ்திரத்தைஉபதேசம்பெற்றுஅதன்பின் அவர்களைநோக்கி 'உங்களுக்குப் புரோகிதனொருவன் இருத்தல் வேண்டும்' என்று சிலகதைகளை யெடுத்துக்காட்டிக் கூறி, 'அதற்கு ஏற்றவன் நீங்கள் செல்லும்வழியிலுள்ள உற்கசமென்னுந் தீர்த்தத்தின் கரையி லிருக்கிறவனும் தேவலமுனிவனது தம்பியுமான தௌமியமுனிவனே' என்றும் சொல்லி, இடையிலுள்ள ஆற்றுநீர்ப்பெருக்கைக் கடத்தற்குவேண்டியநாவாயையும் உதவி, அப்பாற்செல்லுதற்கு நல்வழியையும் அடையாளத்தோடு சொல்லி அனுப்பியபின், அவ்வாறே, பாண்டவர் இடைவழியில் அம்முனிவனைக்கண்டு வணங்கித் துதித்து வேண்டிப்புரோகிதனாகக்கொண்டு அப்பால் அவன் வழிகாட்டிக்கொண்டு முன்செல்ல அவனைத்தொடர்ந்து நடப்பாராகி அவன் கூறும் இனியவார்த்தைகளால் வழிநடைவருத்தந் தெரியாமலே அரிய வழியை எளிதிற்கடந்து சென்றனரென்ற விவரத்தைப் பிறநூல்களாலறிக. 'திரிந்து' என்றவிடத்து 'தெரிந்து' என்றும் பாடமுண்டு. (484)

## 10.—சூரியோதய வருணனை.

புலர்ந்தனகங்குற்போதும் பொழிதருபனியுஞ்சேர
மலர்ந்தனமனமுங்கண்ணும் வயங்கினதிசையும்பாரும்
அலர்ந்தனதடமுங்காவு மார்த்தனபுள்ளுமாவும்
கலந்தனகுருகும்பேடுங் கலித்தனமுரசுஞ்சங்கும்.

(இ - ள்.) கங்குல் போதுஉம் - இராப்பொழுதும், பொழிதரு பனிஉம்-(அவ்விரவிற்)சொரிகிற பனியும், சேர புலர்ந்தன-ஒருங்கு நீங்கின; (அப்பொழுது), மனம்உம் கண்உம் - (நிலவுலகத்தாரது) மனமும் கண்களும், மலர்ந்தன-மலர்ச்சிபெற்றன; திசைஉம் பார் உம் - எட்டுத்திக்குக்களும் பூமியும், வயங்கின-விளக்கம்பெற்றன; தடம்உம் காஉம்-தடாகங்களும் சோலைகளும், அலர்ந்தன-மலர்ச்சி பெற்றுவிளங்கின; புள்உம் மாஉம் - பறவைகளும் விலங்குகளும், ஆர்த்தன - ஆரவாரஞ்செய்தன; குருகுஉம் பேடுஉம்- சக்கரவாகப் பறவைகளும் அவற்றின் பெடைகளும், கலந்தன - (ஒன்றோடொன்று)கூடின; முரசும் சங்கும்—, கலித்தன-முழங்கின;(எ-று.)

கங்குற்போதுக்குப் புலர்தல் - விடிதல். பனிக்குப் புலர்தல்- அழிதல். மனத்துக்கு மலர்ச்சி - உணர்வுறுதல். கண்ணுக்கு மலர்ச்சி - விழிப்பு. திசைகளுக்கும் பாருக்கும் வயங்குதல்-வெளிச்சம்பெறுதல். தடாகம் அலர்தல் - சூரியனுதித்தவளவிலே தாமரைமலரப்பெறுதலும், நீர்த்தெளிவும்: சோலையலர்தல் - ஒடுக்கமொழிதல். சக்கரவாகப்பறவை இரவில் ஆணும் பெண்ணும் பிரிந்திருந்து பகலிற் கூடும் இயல்பின தாதலால், அத்தன்மையை 'கலந்தன குருகும் பேடும்' என்றார். உதயகாலத்தில் மங்களகரமாக முரஜ சங்கங்களை முழக்குதல, இயல்பு. இரண்டிரண்டுபொருளின் வினைகளுக்கு உடனிகழ்ச்சி கூறியது - உடனநவிற்சியணி. இதனோடு தன்மைநவிற்சியணி கலந்துவந்தது. இதுமுதல் குலாலனது இருக்கையைச் சேர்தற்குமுன் வரையிலுள்ள வருணனைகள் பாலபாரதத்தில் இல்லை. (485)

## 11.—உதயகாலத்துத் தென்றல் இனிமையாக வீசுதல்.

குன்றமுங்கொடியகானுங் கூரிருட்கங்குனீங்கி
நன்றுநன்றுதவவந்தீர் நடந்துநீரிளைத்தீர்போலும்
என்றுகொண்டுவகையோடு மின்மலர்க்கழுநீர்வாச
மன்றலந்தென்றல்வீசி வழிவிடாய்தணித்ததன்றே.

(இ - ள்.) மன்றல் அம் தென்றல் - நறுமணத்தையுடைய இனிய தென்றற்காற்றானது, — (பாண்டவர்களைநோக்கி), 'கூர் இருள் கங்குல் - மிக்க இருளையுடைய இரவிலே, குன்றம்உம் கொடிய கான்உம் நீங்கி - மலைகளையும் கொடுமையையுடைய காடுகளையுங் கடந்து, உதவ வந்தீர்-(எனதுநண்பனாகிய அக்கினியின் மகளான திரௌபதியை மணம்புரிந்து) உதவுதற்கு வந்தீர்கள்; நன்று நன்று-(உங்கள்வரவு) மிகவும்நல்லது; நீர் நடந்து இளைத்திர்போலும் - நீங்கள் வழிநடந்துவருவதால் இளைப்படைந்தீர்போலும்,' என்று கொண்டு - என்றுசொல்லிக்கொண்டு, உவகையோடும் - மகிழ்ச்சியுடனே, இன் மலர் கழுநீர் வாசம் வீசி-இனிய செங்கழுநீர்மலர்களின் வாசனையை மேல்வீசி, வழிவிடாய் தணித்தது - (அவர்களுடைய) வழிநடைவருத்தத்தைத் தணியச்செய்தது;

காலையில் இயல்பாக மந்தகதியோடு இனிது வீசுகிற தென்றலை, பாண்டவர் வழிவிடாயைத் தணித்தற்கென்றே வீசுவதாக ஒருபயனைக்கற்பித்துக்கூறியது - பயன்தற்குறிப்பேற்றவணி. இங்ஙன் இனியதென்றல்வீசியது பாண்டவர்க்குச்சுபசூசகம். நன்றுநன்று- அடுக்கு, மகிழ்ச்சிபற்றியது. அன்று, ஏ - ஈற்றசைகள். (486)

## 12.—ஐந்துகவிகள்-பாண்டவர்க்குநிகழும் நன்னிமித்தங் கூறும்.

வெறிபடுமுளரிமொக்குள் விரிபதனோக்கிச்சுற்றும்
பொறிவரிவண்டினீட்டம் புறத்திருந்திரங்கவண்டோன்
றிறகரால்வீசியுள்புக் கின்மதுநுகர்தல்கண்டு
நெறியினன்னிமித்தமாக நெஞ்சுறநினைந்துசென்றார்.

(இ - ள்.) வெறி படு - தேன்பொருந்திய, முளரி மொக்குள் - தாமரையரும்பு, விரிபதன் - மலருஞ் சமயத்தை, நோக்கி - எதிர்

பார்த்துக்கொண்டு, பொறி வரி வண்டின் ஈட்டம் - உடற்புள்ளிகளையும் இசைப்பாட்டையுமுடைய வண்டுகளின் கூட்டங்கள், புறத்து சுற்றும் இருந்து இரங்க-வெளியிலே சுற்றிலும் இருந்து ஆரவாரிக்க,-வண்டு ஒன்று - ஒருவண்டானது, இறகால் வீசி உள்புக்கு-(தன்) சிறகுகளால் (அத்தாமரையரும்பின் இதழ்களை) நெகிழ்த்தி அதனுள்ளே புகுந்து, இன் மது நுகர்தல் - இனிய தேனையுண்ணுதலை, கண்டு - (பாண்டவர்கள்) பார்த்து,—நெறியில் நல் நிமித்தம் ஆக நெஞ்சு உற நினைந்து சென்றார் - (அதனைத் தமக்கு) வழியிலே நேர்ந்த நற்குறியாக மனத்திற்பொருந்த நினைத்து வழிச்சென்றார்கள்; (எ - று.)

திரௌபதியைக் கருதி வந்த பல்ர் வாளாசூழ்ந்துநிற்கத் தாம் தடையறச்சென்று அவளைப் பெறுதல் கூடு மென்பதற்கு, வண்டின்செயலை ஓர் அறிகுறியாக எண்ணிச்சென்றனரென்க. ()

13. வண்டுறைமருங்கினுங்கோர் மாங்கனிவிழ்தல்கண்டே
தண்டுறைமீன்களெல்லாந் தத்தமக்கிரையென்றெய்த
விண்டுறைகிழியவோடி வென்றொருவாளைதன்வாய்க்
கொண்டுறைவலிமைநோக்கிக் குறிப்பினுவகைகூர்ந்தார்.

(இ-ள்.) ஆங்கு-அவ்வழியிலே, வண் துறை மருங்கின்-செழிப்பான ஒரு நீர்த்துறையின் ஓரத்திலே, ஓர் மாங்கனி வீழ்தல் - ஒரு மாம்பழம் விழுந்ததை, கண்டு—, தண் துறை மீன்கள் எல்லாம்- குளிர்ச்சியான அந்நீர்த்துறையிலுள்ள மீன்கள்யாவும், தம் தமக்கு இரை என்று எய்த-(அதனைத்) தங்கள் தங்களுக்கு இரையாகக் கடவதென்று எண்ணி(க் கவர்தற்கு) வர, ஒரு வாளை-ஒரு வாளை மீன், உறை விண்டு கிழிய ஓடி - நீர் கிழிந்துபிரியும்படி ஓடிவந்து, வென்று - (அம்மீன்களையெல்லாம்) பயன் பெறுதொழியச்செய்து, தன் வாய் கொண்டு உறை-(அம்மாங்கனியைத்) தன் வாயினாற் கவர்ந்துகொண்டிருந்த, வலிமை-வல்லமையை, நோக்கி - (பாண்டவர்கள்) பார்த்து,—குறிப்பினால் - அந்தக்குறிப்பினால், உவகை கூர்ந்தார்—; (எ - று.)

திரௌபதியைக்குறித்துத் தம்தமக்கு உரியளாகக்கடவளென்ற விருப்பத்தோடு பற்பல அரசர்வந்து சூழ்ந்துநிற்கத் தாம் தடையறச்சென்று அவர்களைப் பயன்பெறுதொழிபவராக்கி அவளைக் கைக்கொண்டு கவலையற நுகர்ந்து வாழலா மென்பதற்கு, மாங்கனியை மீன்களுக்குஇல்லாமல் வாளைமீன் கவர்ந்த இச்செயலைச் சூசகமாகக்கண்டு மிகமகிழ்ந்தனர். (488)

14. மாக்குரலளகவல்லி வதுவையினழகுகாணத்
தாக்குரலடிகொள்யானைத் தரணிபரெவரும்வந்தார்
வீக்குநன்மிளிர்பொற்பூணீர் விரைவுடன்வம்மினென்று
கூக்குரல்விளிப்பபோலுங் கோகிலக்குரலுங்கேட்டார்.

(இ - ள்.) 'மா - கருநிறமான, குரல் அளகம்-கூந்தலையுடைய, வல்லி.பூங்கொடிபோன்ற திரௌபதியினது, வதுவையின் அழகு- கலியாணக்காட்சியை, காண - காணுதற்கு, தாக்கு உரல் அடி கொள் யானை தரணிபர் எவர்உம் வந்தார் - (பகைவரைத்) தாக்கு

நின்ற உரல்போன்ற கால்களைக் கொண்ட யானைச்சேனையையுடைய அரசர்களெல்லோரும்வந்தார்கள்; விக்கும் நல் மிளிர் பொன் பூணீர் -தரித்த நல்ல விளங்குகிற பொன்னணிகளையுடையவர்களே ! விரைவுடன் வம்மின்-(நீங்கள் அவளைமணஞ்செய்தற்கு) விரைவாக வாருங்கள்', என்று—, கூக்குரல் விளிப்ப போலும்-உரத்துக்கூவுகிற குரலால் (தம்மை) அழைப்பன போன்ற, கோகிலம் குரல்உம் - குயில்களின் குரலையும், கேட்டார்-(பாண்டவர்கள்) கேட்டார்கள்;

இது, தற்குறிப்பேற்றவணி. பாண்டவர் தவிர மற்றைய அரசர்களின் வருகை திரௌபதியை மணஞ்செய்துகொள்ளுதற் கன்றி அவளது மணக்கோலத்தைப் பார்த்தற்காகவே முடிவதனால், 'வதுவையினழகு காணத் தரணிபரெவரும் வந்தார்' எனப்பட்டது. 'விக்குநன்மிளிர்பொற்பூணீர்' என்றது, முன்னிலைமையைப்பற்றியது. மா-கருமை. குரலளகம் - ஒருபொருட்பன்மொழி; இரண்டும், பெண்மயிரென்னும் பொருளன. மாக் குர லளகம் - வண்டுகள் ஒலிசெய்யும் கூந்தலெனினுமாம். *(489)*

**15.** நீடுதலில்லையின்றே நிருபதிகன்னிமன்றல்
கூடுதலிவர்க்குண்டாகுங் கொற்றவர்குறைபொருதே
ஓடுதலுண்மையென்னுத் தோகைகளோகைபோடும்
ஆடுதனோக்கிநோக்கி யகமகிழ்ந்தேகினரே.

(இ - ள்.) 'நிருபதி கன்னி மன்றல் - (பாஞ்சால) ராசனுடைய புத்திரியான திரௌபதியின் விவாகம், நீடுதல் இல்லை - நீட்டித்தலில்லை; இன்றுஏ - இன்றைக்கேயாம்; இவர்க்கு கூடுதல் உண்டாகும்-இப்பாண்டவர்கட்கு (அவ்விவாகம்) கைகூடும்; (அதனால்), கொற்றவர் - மற்றையரசர்கள், குறை பொருது - (தமக்கு நேர்ந்த) அவமானத்தைப் பொறுக்காமலே, ஓடுதல் - ஓடிப்போதல், உண்மை-நிச்சயம்', என்னு-என்றுகருதி, (அதனால்), தோகைகள்-மயில்கள், ஓகையோடும் ஆடுதல் - மகிழ்ச்சியோடு கூத்தாடுதலை, நோக்கி நோக்கி-, (பாண்டவர்கள்), அகம் மகிழ்ந்து ஏகினர் - மனமகிழ்ந்து சென்றார்கள்; (எ-று.) நிருபதி=ந்ருபதி.

இதுவும்-தற்குறிப்பேற்றவணியே. மயில்கள் ஆடுதலை, இங்ஙனங் கருதியாடுவனவாக இவர்கள்கொண்டனரென்க. நோக்கி நோக்கி - அடுத்தடுத்துப் பலவிடத்தும் உற்றுப்பார்த்து என்றபடி. *(490)*

**16.** பூவெலாஞ்சுரும்புமொய்ப்பப் புனலெலாம்புள்ளுவைக
மாவெலாந்துணையின்மேவ மரனெலாம்வல்லிபுல்ல
ஏவெலாம்பயின்றவிற்கை யேற்றிளஞ்சிங்கம்போல்வார்
காவெலாமருங்குதோறுங் கண்டுகண்களித்துநின்றார்.

(இ - ள்.) கா எலாம் - (இடைவழியிலுள்ள) சோலைகள்யாவும், மருங்கு தோறுஉம் - தம் இடங்களிலெல்லாம், பூ எலாம் சுரும்பு மொய்ப்ப-மலர்களிலெல்லாம் வண்டுகள் மொய்க்க, புனல் எலாம் புள்ளு வைக-நீரிலெல்லாம் பறவைகள் தங்க, மா எலாம் துணையின் மேவ-விலங்குகளெல்லாம் (தம்தமக்குரிய) துணையான பெண்பாலுடனே பொருந்த, மரன் எலாம் வல்லி புல்ல - மரங்களிலெல்லாம் கொடிகள் தழுவ,—ஏ எலாம் பயின்ற வில் கை ஏறு இளஞ்சிங்கம்

போல்வார் - அம்புத்தொழில்களையெல்லாம்பழகியவில்லையேந்துங் கையையுடைய இளமையான ஆண்சிங்கத்தைப்போன்ற பாண்டவர்கள்,—கண்டு-(அவற்றைப்) பார்த்து,—கண் களித்து நின்றார்- (சுபசூசகமாகக் கருதியதால்) கண்கள் களிப்படையப்பெற்று நின்றார்கள்; (எ - று.)

வண்டு மலரில்மொய்த்துத்தேனையுண்ணுதலையும்,பறவைகள் நீரிற் குடைந்து விளையாடுதலையும், விலங்குகள் துணையோடு மேவுதலையும், மரங்களைக் கொடிகள்தழுவுதலையும், தாம் திரௌபதியைப்பெற்றுக் கூடிக்கலந்து இன்பமனுபவித்தலை முந்தித்தெரிவிக்கும் நன்னிமித்தமாகக்கொண்டனர். 'ஏவெலாம்'—பெயர்ச்சொல் ஏகாரத்தின்முன் வகரவுடம்படுமெய்தோன்றிற்று. பாண்டவர் ஐவராதற்கேற்ப நன்னிமித்தங்கூறும் பாடல்களும் (செ. 12-16) ஐந்தாக அமைத்தார்போலும். (491)

17.—பாண்டவர் பாஞ்சாலநகரத்தின் மதிலைக் காணுதல்.

வாரணமாயைசூழ்ந்த மாயவன்றேற்றம்போலப்
பேரொளிபம்பியார்க்கும் பேசருஞ்சிறப்பிற்குகிப்
பூரணகும்பம்பொற்கோ புரங்களாற்பொலிந்துதோன்றும்
ஆரவமிகுந்தபல்புள் ளகழிசூழ்புரிசைகண்டார்.

(இ - ள்.)) வாரணம் மாயை சூழ்ந்த - (பொருள்களை விளங்கவொட்டாது) மறைக்குந்தன்மையுள்ள மாயையாற் சூழப்பட்ட, மாயவன் தோற்றம்போல-திருமாலினது சொரூபம்போல,பேர்ஒளி பம்பி - மிக்கஒளிசிறந்து, யார்க்குஉம் பேசு அரு சிறப்பிற்று ஆகி - எத்துணைவல்லோர்க்கும் சொல்லுதற்கரிய சிறப்பையுடையதாய், பூரண கும்பம் பொன் கோபுரங்களால் பொலிந்து தோன்றும் - பூர்ணகும்பங்களினாலும் அழகிய கோபுரங்களினாலும் விளக்கமுற்றுத் தோன்றுகிற, ஆரவம் மிகுந்த பல் புள் அகழி சூழ் புரிசை-ஆரவாரம் மிக்க பல நீர்ப்பறவைகளையுடைய அகழியினாற் சூழப்பட்டதான (அந்நகரத்தின்) மதிலை, கண்டார் - (பாண்டவர்கள்) பார்த்தார்கள்; (எ-று.)

ஒளிமயமாய் மனமொழிமெய்களுக்கு எட்டாததாய் எங்கும் வியாபகமாயிருப்பது, பரப்பிரமமென்கிற திருமாலினுடைய சொரூபம். மூலப்பிரகிருதியும் சிவனும் காலமும் பிரபஞ்சமும் சராசரங்களும், அந்தப்பகவானுடைய உருவங்களாம். தத்துவங்களையெல்லாம்தனக்குள்அடக்கிக்கொண்டிருக்கிற அந்தப்பரமாத்மாவினது பிரபஞ்சவடிவமான சொரூபத்தை, மாயையென்றும் அவ்யக்தமென்றும் பிரதானமென்றும்மறுபெயர்களையுடையபிரகிருதிசூழ்ந்திருக்கின்றதென்ப. இங்கு, சர்வவியாபகமான பகவானது சொரூபத்தை-மிகவுயர்ந்த மதிலுக்கு உவமையாகவும், வியக்தமான பிரபஞ்சசொருபத்தைச் சூழ்ந்த அவ்யக்தமான பிரகிருதி சொரூபத்தை-அம்மதிலை அடிப்புறத்திலேசூழ்ந்துள்ள அகழிக்குஉவமையாகவும் கூறினர். அன்றியும், எம்பெருமானது திவ்வியசொரூபத்தை அனைவரும் எளிதில் அடையவொண்ணாதபடி சூக்ஷமரூபமான மாயை இடைநின்று தடைசெய்கின்றதுபோல,மதிலை அனைவரும் எளிதிற் சேரவொண்ணாதபடி தடைசெய்கின்றது அகழி

யென்றுங் கொள்ளலாம்; வாரணம்-தடை. அலங்காரஞ் செய்யப் பட்டகுடங்களை நீர்நிறைத்து மங்களகரமாக முன்வைத்தல் மரபு.

### 18.—பாண்டவர் பாஞ்சாலநகரத்தினுட் புகுதல்.

மங்கலமுழவம்விம்ம மன்னுபல்லியங்களார்ப்பச்
சங்கினமுழங்கவெல்லாத் தானையும்பரந்துசூழ
எங்கனுநெருங்கிவைகு மிராசமண்டலங்களோடும்
துங்கவேற்றுருபதன்றன் றொல்லைமாநகரிபுக்கார்.

(இ - ள்.) மங்கலம் முழவம் விம்ம-மங்கள முரசங்கள் ஒலிக்க, மன்னு பல் இயங்கள் ஆர்ப்ப-(மற்றும்) பொருந்தியபலவகைவாத்தியங்கள் முழங்க, சங்கு இனம் முழங்க - சங்குக்கூட்டங்கள் ஆரவாரிக்க, எல்லாம் தானைஉம் பரந்து சூழ-நால்வகைச்சேனையும்பரவிச் சூழ்ந்துநிற்க, எங்கன்உம் நெருங்கி வைகும்-அந்நகரத்தில் எல்லாவிடத்திலும் நெருங்கியிருக்கின்ற, இராச மண்டலங்களோடு உம்-அரசர்கூட்டங்களுடனே, (பாண்டவர்களும்), துங்கம் வேல் துருபதன் தன் தொல்லை மா நகரி புக்கார்-சிறந்தவேலையுடைய துருபதனது பழைய பெரிய அந்நகரத்தினுட் சென்றார்கள்; (எ - று.)

பல்இயம்-கொட்டுவன ஊதுவனமுதலியன. விம்ம ஆர்ப்ப முழங்க என்ற ஒருபொருட்பன்மொழிகள்வந்தது, பொருட்பின்வருநிலையணி.

### 19.—அந்நகரம் அப்பொழுது இருந்த தோற்றம்.

தொடங்கியுந்தொடக்கந்தொட்டுத் துகளறவளர்ந்துமீள
மடங்கியுஞ்செல்லுகின்ற மன்னுயிருலகமெல்லாம்
முடங்கியசார்ங்கச்செங்கை முகுந்தன்வாய்புகுந்தகாலத்
தடங்கியவுதரம்போன்ற தந்தமாநகரியம்மா.

(இ - ள்.) அந்த மா நகரி-பெரிய அந்தப்பாஞ்சாலநகரமானது, தொடங்கிஉம் - தோன்றியும், தொடக்கம் தொட்டு துகள் அற வளர்ந்துஉம்-அத்தோன்றியகாலம்முதல் பழுதறவளர்ந்தும், மீள மடங்கிஉம் - பின்பு அழிந்தும், செல்லுகின்ற - (இவ்வாறு) நடைபெற்றுவருகிற, மன் உயிர்-மிக்க பிராணிகளையுடைய, உலகம் எல்லாம்-உலகங்கள் யாவும், முடங்கிய சார்ங்கம் செம் கை முகுந்தன் வாய் புகுந்த காலத்து - வளைந்த சார்ங்கமென்னும்வில்லையேந்திய சிவந்த திருக்கையையுடைய திருமாலினது வாயினுட் புகுந்த பொழுது, அடங்கிய.(அவையாவும்) அடங்கப்பெற்ற, உதரம்-(அவ்வெம்பெருமானது) திருவயிற்றை, போன்றது-ஒத்தது; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல். யாவும் அழியும் யுகாந்த காலத்திலே, பிரளயசமுத்திரத்திலே மகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றிற்கொண்டு சிறுகுழந்தைவடிவமாய் ஆதிசேஷனது அமிசமானதோ ராலிலையின்மீது பள்ளிகொண்டிருந்த பின்பு பிரளயம் நீங்கியவுடன் அவ்வுலகங்களை யெல்லாம் வெளிப்படுத்தியருளுகின்றன னென்பது, வரலாறு. அப்பொழுதுஉலகத்திலுள்ள சகலசராசரங்களும் அடங்குகின்ற திருமாலின் திருவயிற்றை, உலகத்து உயிர்கள் பல வந்து கூடி நெருங்கியுள்ள பாஞ்சாலநகருக்கு உவமை கூறினர். காலவசத்தால் சிருஷ்டி

ஸ்திதி சங்காரங்கள் பிரவாகம் போல அவிச்சின்னமாக நடந்து வருதலும், உயிர்கள் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து இருந்து இறத்தலும், முன் இரண்டு அடிகளில் விளங்கும். முகுந்தன் - முத்தியுலகவின்பத்தையும் இவ்வுலகவின்பத்தையும் (தன் அடியார்க்குத்) தருபவனென்று பொருள்படும். (494)

2¹.—அந்நகரத்து வீதிகளில் நாட்டிய துவசங்களின் வருணனை.

குழைப்புறங்கடந்தசெங்கட் குறுநகைக்கொவ்வைச்செவ்வாய்
இழைப்பொலிமுலையினளுக் கிற்றைநாள்வதுவையென்று
மழைப்புறமாடமேறி வருநரைமலர்க்கைகாட்டி
அழைப்பனபோன்றவீதி யணிகொடியாடையெல்லாம்.

(இ - ள்.) வீதி அணி கொடி ஆடைஎல்லாம் - அந்நகரத்து வீதிகளில் அலங்காரமாக நாட்டப்பட்ட துவசங்களின் சீலைகளெல்லாம்,—குழை புறம் கடந்த - காதின்புறத்தைக் கடந்துசென்ற [மிகநீண்ட], செம் கண்-சிவந்தகண்களையும், குறுநகை - புன்சிரிப்பையும், கொவ்வை செம் வாய்-கொவ்வைப் பழம்போலச் சிவந்த வாயையும், இழை பொலி முலையினளுக்கு - (தம்மிடத்து அணிந்த)ஆபரணங்கள் விளங்குதற்குக் காரணமான தனங்களையுமுடைய திரௌபதிக்கு, இற்றை நாள் வதுவை என்று - இன்றைத்தினம் சுயம்வரமென்று தெரிவித்து, மழை புறம் மாடம் ஏறி -மேகங்களைத் தம்மேலுடையனவான [மிகவுயர்ந்த] மேல்மாளிகைகளின்மீது ஏறி, வருநரை மலர் கை காட்டி அழைப்பன போன்ற- (அவ்விவாகத்தின்பொருட்டு) வருகின்றபாண்டவர்களை (விரைந்து வருமாறு) மலர்போன்ற கைகளைக்காட்டியழைப்பன போன்றன;

இங்கு ஆடைகளைக் கைகளாகவும், கொடிகளை அக்கைகளையுடையராகவும் கொள்க. தற்குறிப்பேற்றவணி. திரௌபதியின் கண்கள் மிக நீண்டுள்ளன என்ற கருத்தை விளக்க, 'குழைப்புறங்கடந்த செங்கண்' என்றார். குழை-ஒருவகைக் காதணி; இலக்கணையாய், காதை யுணர்த்திற்று. (495)

21.—பாண்டவர் அவ்வூரில் ஒருகுயவன்வீட்டில் இடங்கொள்ளுதல்.

விண்டலம்புதைத்தபைம்பொற் றுகிலிடுவிதானநீழல்
மண்டகிற்புகையின்மூழ்கி யாவணமறுகிற்செல்வம்
கண்டுகண்டரியேருனின் கவினுடைநெடுந்தோல்போர்த்துக்
கொண்டனசெயலாராங்கோர் குலாலனதிருக்கைசேர்ந்தார்.

(இ - ள்.) அரி ஏறு - ஆண்சிங்கம், ஆனின் கவின் உடை நெடு தோல் போர்த்துக்கொண்டு அன-பசுவினுடைய அழகுள்ள நெடியதோலைப் போர்த்துக்கொண்டாற் போன்ற, செயலார்-செய்கையையுடையவர்களாகிய பாண்டவர்கள்,—விண் தலம்புதைத்த -ஆகாயத்தினிடம்முழுதையும் மூடிய, பைம் பொன் துகில் - பசும் பொன்சீலையினால், இடு - இடப்பட்ட, விதானம் - மேற்கட்டியின், நீழல்-நிழலிலே (கடந்துசென்ற), மண்டு அகில் புகையில் மூழ்கி - (அங்கு) நெருங்கிய அகிற்புகையிலே முழுகி, ஆவணம் மறுகில் செல்வம் கண்டு கண்டு-கடைவீதியிலுள்ள செல்வங்களைப் பார்த்

துக்கொண்டே, ஆங்கு ஓர் குலாலனது இருக்கை சேர்ந்தார் - அந் நகரில் (பார்க்கவனென்னும்) ஒரு குயவனுடைய வீட்டிற் சேர்ந் தார்கள்; (எ - று.)

'அந்தணர் குயவர்மனையில் தங்கலாம்' என்பது, நூற் கொள்கை. பராக்கிரமம்மிகுந்த பாண்டவர் அத்திறத்தை வெளிக் காட்டாது நீறுபூத்தநெருப்புப்போல உள்ளடக்கிச் சாந்தகுண முடைய அந்தணர்களின்வடிவத்தை மேற்கொண்டுள்ளாராதலின், சிங்கம் பசுவின்தோலைப் போர்த்தாற்போன்ற செய்கையரென்றார்.

### 22.—பாண்டவர் சுயம்வரமண்டபஞ் சேர்தல்.

ஆங்கணைற்றவத்தான்மிக்க வன்னையையிருத்திமைந்தர்
தாங்கண்முற்றுணையாய்வந்த தாபதன்தன்னேடெய்தித்
தூங்கணங்குரீஇயின்மஞ்சந் தலந்தொறுந்தூங்குகின்ற
தேங்கண்மாத்தெரியல்வேந்தர் சேர்ந்தபேரவையிலானர்.

(இ - ள்.) மைந்தர்-புதல்வர்களாகிய பாண்டவர்கள், நல் தவத்தால் மிக்க அன்னையை-சிறந்த தவத்தினால் மேம்பட்ட தங்கள் தாயான குந்திதேவியை, ஆங்கண் இருத்தி - அவ்விடத்திலே [அக்குயவன்வீட்டிலே] இருக்கச்செய்து,—தாங்கள்—, துணை ஆய் முன் வந்த தாபதன் தன்னோடு எய்தி-(தங்களுக்குத்) துணை யாய் முன்னேவந்த தௌமியமுனிவனுடனேகூடி,—தூங்கணங்குரீஇயின் மஞ்சம் தலம்தொறும் தூங்குகின்ற தேம் கள் மா தெரியல்வேந்தர் சேர்ந்த பேர் அவையில் ஆனர் - தூக்கணங்குருவி (ஒடுங்கியிருத்தல்) போலச் சிங்காசனங்களில்(வேட்கைமிகுதியாற்) சோர்வுற்றிருக்கிற இனியதேனையுடைய சிறந்தமாலையைத் தரித்த அரசர்கள் கூடிய பெரிய சுயம்வரசபையிற் சென்று சேர்ந்தார்கள்;

தாபதர் தம்மோடெய்தி என்ற பாடத்துக்கு-முன்னமேதொடங்கித் தமக்குத் துணையாய்வந்த வேத்திரகியநகரத்து அந்தணர்களோடு கூடி யென்று உரைக்க. (497)

### 23.—பாண்டவர்க்காக இரங்குகிற திரௌபதி, தாதியரால் தேறுதல்.

ஆதியிற்குந்திமைந்த ரைவர்க்குமுரியளாமென்று
ஓதியவிதியினனெஞ்சுலப்புருவுவகைகூர்வாள்
சோதிடம்பொய்யாதென்றுந் தோன்றுவருரியோரென்றுந்
தாதியர்தேற்றத்தேற்றத் தன்மனத்தளர்வுதீர்வாள்.

நான்கு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) ஆதியில்-முன்பு, குந்திமைந்தர் ஐவர்க்குஉம்உரியள் ஆம் என்று ஓதிய-குந்தியின் குமாரர்களான பாண்டவரைவர்க்கும் (இவள்) உரியவளாவளென்று (தன்னைக்குறித்துச் சோதிடர்) கூறிய, விதியினால் - அச்சாஸ்திரப்பயனைத் தான் கேட்டதனால், நெஞ்சுஉலப்புறு உவகை கூர்வாள்-(அதுமுதல்) மனத்தில் நீக்க மில்லாத மகிழ்ச்சி மிகுபவளும்,—சோதிடம் பொய்யாது என்று உம்-(பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்தில ரென்று ஆய்ந்து கூறிய) சோதிடசாஸ்திரக்கொள்கை பிழைபடாதென்றும், உரியோர் தோன்றுவர் என்றுஉம் - (உனக்கு) உரிய கொழுநராகிய அவர் வந்து தோன்றுவரென்றும், தாதியர் தேற்ற தேற்ற -

(தனது) தோழியர் அடிக்கடி தேறுதல்கூறுதலால், தன் மனம் தளர்வுதீர்வாள்-(பாண்டவர் அரக்குமாளிகையில் இறந்தனரென்று கேள்வியுற்றதனால்) தன்மனத்திற்கொண்ட தளர்ச்சி நீங்குபவளும்,—(எ - று.)—கூர்வாள், தீர்வாள் என்ற இரண்டும், 26-ஆம் கவியில் வரும் 'நுதலாள்' என்பதற்கு அடைமொழி: அடுத்த இரண்டுகவிகளிலும் இவ்வாறே.

இந்தக் குளகச்செய்யுள் திரௌபதியின் தன்மையைத் தெரிவிக்கும். ஆதிமுதல் திரௌபதி பாண்டவரிடம் காதல்கொண்டிருந்தமையும், அவர்க்கு அபாயம் நேர்ந்ததென்று கேள்வியுற்ற பின்பும் அந்தஅன்பு குறையாதிருந்தமையும், இதில் நன்கு விளங்கும். சோதிடம் - சூரியன்முதலிய கிரகங்கள் அசுவினிமுதலிய நட்சத்திரங்கள் என்பவற்றின் சஞ்சாரத்தைக்கொண்டு பயன்வகுத்துக் கூறும் நூல்; ஜ்யோதிஸ் - ஒளி. (498)

### 24.—திரௌபதி அருச்சுனன்மீது காதல்கொண்டிருத்தல்.

சூட்டியதொடையன்மாலைத் தோழியர்வைகறோறும்
தீட்டியபடங்களுந்தஞ் சிந்தையும்பொலிவுகொள்ளக்
கோட்டியசிலையினேடுங் கொடிமணித்தேரினேடும்
காட்டியகோலமன்றிப் பிறிதொன்றுங்காண்கிலாதாள்.

(இ-ள்.) சூட்டிய-(கூந்தலிற்)சூட்டப்பட்ட, தொடையல்மாலை-தொடுத்த பூச்சரங்களையுடைய, தோழியர் - தோழிகள், வைகல்தோறும்-நாள்தோறும், தீட்டிய-எழுதிய,படங்கள்உம்-சித்திரப்படங்களும், தம் சிந்தைஉம்-(அவற்றையெழுதிக்காட்டுகிற)அவர்களுடைய உள்ளக்கருத்துக்களும், பொலிவு கொள்ள - மிகுதியடைய,--(அந்தப்படங்கள்பலவற்றுள்ளும்),கோட்டியசிலையினேடுஉம் கொடி மணி தேரினேடுஉம் காட்டிய கோலம்அன்றி-வளைத்த வில்லோடும் கொடிகட்டிய அழகிய தேரோடும் காண்பித்த (அருச்சுனனுடைய)வடிவமொன்றையேயன்றி,பிறிதுஒன்றுஉம்காண்கிலாதாள்-வேறு எந்தவடிவத்தையும் ஆசையோடுபாராதவளும்,—

திரௌபதிக்கு விவாகத்திற்குஉரிய பருவம் வந்தவளவிலே அவளுடைய தோழிகள் அநேக அரசர்களின் உருவத்தைப் படத்திற் சித்திரித்து அவளுக்குக் காட்டினராக, அவற்றுள் அருச்சுனனொருவனது உருவத்திலேயே திரௌபதி அன்புநோக்கைச் செலுத்தினளென்பதாம். அங்ஙன் மிகப்பலஉருவங்களையெழுதிக் காட்டுவாரது கருத்தும் அதற்கு ஏற்ப மிகப்பலவா மாதலால், 'படங்களுந் தஞ்சிந்தையும் பொலிவுகொள்ள' என்றார். 'மாலைதோழியர்' எனவும் பாடம். (499)

### 25.—'அருச்சுனனையன்றிப் பிறரைமணஞ்செய்யேன்'என்றுதிரௌபதி துணிவுகொண்டிருத்தல்.

ஆண்டெரிப்பிறந்தபோதே யன்பினலெந்தைநேர்ந்த
பூண்டெரிமார்பனின்றிப் பொன்னவைபொலியத்தோன்றி
ஈண்டெரிமுன்னர்மன்ன ரிழிவுறவேட்டிலானேல்
மீண்டெரிபுகுவனென்னு மெண்ணமேவினையுநேராள்.

(இ-ள்.) 'ஆண்டு - அக்காலத்தில், எரி பிறந்த போதுஎ - (நான்) யாகாக்கினியில் தோன்றியபொழுதே, அன்பினால் எந்தை நேர்ந்த - அன்போடு எனது தந்தை (எனக்குக் கொழுநனாக) நிச்சயித்த, பூண் தெரி மார்பன் - ஆபரணம் விளங்குதற்குக்காரணமான மார்பின்பொலிவையுடைய அருச்சுனன், இன்று-இன்றைத்தினத்தில், இ பொன் அவை பொலிய தோன்றி - இந்த அழகிய சுயம்வரசபை பொலிவடையும்படி (இதில்)வந்து தோன்றி,மன்னர் இழிவு உற-மற்றையரசர்கள் அவமானமடைய, ஈண்டுஎரிமுன்னர் வேட்டிலான் எல் - சொலிக்கிற அக்கினியின் முன்னிலையிலே (என்னை) விவாகஞ்செய்யாதொழிவனாகில், மீண்டு எரி புகுவன் - திரும்ப நான் அக்கினியிலே பிரவேசித்துவிடுவேன்', என்னும் - என்றுதுணிகிற, எண்ணமே - நினைப்பே, விளையும்-முதிர்கிற, நீராள் - தன்மையையுடையவளும்,—(எ - று.)—''(ஆகிய) பிறை நுதலாடன்னை'' (26) என்க.

எரியினின்று பிறந்தவளாதலால், 'மீண்டு எரிபுகுவன்' என்றாள். அக்கினிசாக்ஷியாக விவாகஞ்செய்தல், மரபு. (500)

**26.—தோழியர் திரௌபதிக்கு அலங்காரஞ்செய்தல்.**

**கோண்பிறைநுதலாடன்னைக் கோதையர்பலருங்கூடிச்**
**சேண்புனல்பலகொண்டாட்டிச் செழுந்துகிறெழுதுசேர்த்திப்**
**பூண்பனவிசையப்பூட்டிப் புகைகமழ்தாமஞ்சூட்டிக்**
**காண்பவராண்மைதேயக் காமவேள்கலகஞ்செய்தார்.**

(இ - ள்.) கோண் பிறை நுதலாள் தன்னை-வளைவாகியபிறைச்சந்திரன்போன்ற நெற்றியையுடையளான திரௌபதியை,கோதையர் பலர் உம்கூடி-தோழிப்பெண்கள் பலருஞ் சேர்ந்து,சேண்புனல் பல கொண்டு ஆட்டி-சிறந்த பல நதிகளினின்று (கொணர்ந்த) புண்ணியதீர்த்தங்களைக்கொண்டு ஸ்நாநஞ்செய்வித்து, செழு துகில் தொழுது சேர்த்தி - சிறந்த புதிய பட்டாடையை வணக்கத்தோடு (அவட்கு) உடுத்தி, பூண்பன இசைய பூட்டி - பூணுதற்கு உரிய ஆபரணங்களை (அவட்கு)த் தகுதியாக அணிவித்து, புகை கமழ் தாமம் சூட்டி-(அகிற்) புகை மணம்வீசுகிற மலர்மாலையை (அவட்கு முடியிற்) சூட்டி,—காண்பவர் ஆண்மை தேய காமவேள் கலகம் செய்தார்-(அவளைக்) காணும் ஆடவர்கள் ஆண்தன்மை குறையும்படி மன்மதனது போரை விளைத்தார்கள்; (எ - று.)

அவளது இயற்கையழகோடு செயற்கையழகின் பொலிவையும் காணும் ஆடவர்கள் அவளிடத்தே காதல்மிக்கு அதனால் அறிவு முதலிய ஆண்மைக்குணங்கள் குன்றும்படி அலங்கரித்தனரென்பதாம். ஆண்மை - அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி யென்பன; இவை, ஆடூஉக்குணம் எனப்படும். (501)

**27.—திரௌபதியைச் சேவிலித்தாயர் சுயம்வரமண்டபத்துக்கு அழைத்து வருதல்.**

**வந்தனர்குமரர்யாரும் வருகெனமகிழ்ந்துபோற்றிச்**
**சந்தணிமுலையினாளைத் தாயினும்பரிவுகூர்ந்தோர்**

கந்தனுமுவமையாற்ருக் காவலர்காமத்தீயில்
இந்தனமிடுவதேய்ப்ப வேந்தவையேற்றினுரே.

(இ - ள்.) தாயின்உம் பரிவு கூர்ந்தோர் - (அவளிடத்துப்) பெற்றதாயினும் அன்புமிக்கவர்களான செவிலியர்,—சந்து அணி முலையினளை - சந்தனக்குழம்பையணிந்த தனங்களையுடைய அத் திரௌபதியை,—'குமரர் யார்உம் வந்தனர் வருக' என மகிழ்ந்து போற்றி - 'இராசகுமாரரெல்லோரும் (சுயம்வரமண்டபத்திற்கு) வந்துசேர்ந்தார்கள் : (நீயும்) வருவாயாக' என்று மகிழ்ச்சியோடு உபசாரமாகக்கூறி,—கந்தன்உம் உவமை ஆற்ரு காவலர் காமம் தீயில் இந்தனம் இடுவது ஏய்ப்ப - முருகக்கடவுளும் ஒப்பாகாத [மிக்க அழகையும் ஆற்றலையுமுடைய] அரசர்களுடையகாமாக்கினி யில் விறகிடுதலைப்போல, வேந்து அவை ஏற்றினுர் - (அவளை) இராசசபையில் அழைத்துக்கொண்டு வந்து சேர்ந்தார்கள்;(எ-று.)

பாஞ்சாலியின் அழகுமிகுதியைக் கேள்வியுற்றதனுலேயே மிக்க காதல் கொண்டுள்ள அரசர்கள் அவ்வழகை நேரே கண்டு பின் னும் மிக்கமோகத்தை யடையும்படி செவிலியர் அவர்களெதிரிற் கொணர்ந்தன ரென்பார், 'காவலர்காமத்தியில் இந்தன மிடுவ தேய்ப்ப வேந்தவை யேற்றினுர்' என்ருர். (503)

## 28.—திரௌபதியைக் கண்டவளவிலே அரசர்கள் மோகித்தல்.

வெங்கழற்படைக்கைவேந்தர் விழிகளால்விளங்குமேனிப்
பொங்கழற்பிறந்தபாவை பொற்பினைப்பொலியநோக்கிப்
பைங்கழைத்தனுவோன்செங்கைப் பகழியாற்பாவமெய்தி
அங்கழற்பட்டநெய்போ லனைவருமுருகினுரே.

(இ - ள்.) வெம் கழல்-(பகைவர்க்கு) அச்சந்தருகிற வீரக்கழ லையும், படை கை-ஆயுதங்களையேந்திய கையையுமுடைய, வேந்தர் அனைவர்உம் - அரசர்களெல்லோரும்,—விளங்கும் மேனி - ஒளி வீசிவிளங்குகிற வடிவத்தையுடைய, பொங்கு அழல் பிறந்தபாவை -சொலிக்கிற யாகாக்கினியில் தோன்றிய சித்திரப்பதுமைபோன்ற திரௌபதியினது, பொற்பினை - அழகை, விழிகளால் பொலிய நோக்கி - (தங்கள்) கண்களால் நன்ருகப் பார்த்து, அங்கு - அப் பொழுது, பைங் கழை தனுவோன் செம் கை பகழியால் பாவம் எய்தி - பசிய கரும்பை வில்லாகவுடைய மன்மதனது சிவந்த கையி னுலெய்யப்பட்ட அம்புகளினுல் நிலைவேறுபாட்டை யடைந்து, அழல் பட்ட நெய்போல் - தீப்பட்டநெய்போல (நெகிழ்ந்து), உருகினர்—; (எ - று.)

பாவம்-ஹாவம்: வடசொல்; அதாவது மெய்ப்பாட்டுக்குறிப்பு; இங்கு சிந்தனை, அசைவின்றி நிற்றல், தோள்மெலிதல், ஒடுங்கல், நெஞ்சழிதல், மயிர்சிலிர்த்தல்,உடல்வியர்த்தல்,நிறம்வேறுபடுதல் நெடுமூச்செறிதல், மொழிபலபிதற்றல், கலக்கம் முதலிய் காமவி காரத்தாலாகுஞ் செய்கைகள். மன்மதனுக்குக் கரும்பு வில்லென் றும்,தாமரை முதலிய மலர்கள் அம்புகளென்றும் கூறுப.வேந்தர் களுடைய வெம்மையைக் கழலின்மேலேற்றி 'வெங்கழல்' என்ருர்: இது; ஒருவகை உபசாரவழக்கு. அழலிற்பிறந்தபாவை

யைக் கண்டவுடனே அழற்பட்டநெய்போ லாயின ரெனச் சமத்காரந்தோன்றக் கூறியவாறு. (503)

### 29.—திரௌபதி அச்சபையில் பாண்டவர்வரவை எதிர்பார்த்தல்.

மங்குலின்மங்குன்மூடி வயங்கொளிமறைந்துதோன்ருச்
செங்கதிர்ச்செல்வன்போலச் சீர்கெழுவடிவமாறி
அங்கவரிருந்ததன்மை யறிந்ததோசெறிந்தபொய்கைப்
பங்கயம்போன்றதாலப் பரிவுறுபாவைபார்வை.

(இ- ள்.) மங்குலின் - வானத்தில், மங்குல் - மேகம், மூடி- மூடுதலால், வயங்கு ஒளி மறைந்து - விளங்குகிற (தனது) ஒளி மறைபட்டு, தோன்ரு - வெளித்தோன்ருத, செம் கதிர் செல்வன் போல - சிவந்தகிரணங்களின் வளத்தையுடைய சூரியன்போல, அவர் - அப்பாண்டவர்கள், சீர் கெழு வடிவம் மாறி - சிறப்புமிக்க (தங்கள்) உருவம்மாறி, அங்கு இருந்த தன்மை - அச்சபையில் வந்து வீற்றிருந்த தன்மையை, அ பரிவு உறு பாவை பார்வை - (அவர்களிடம்) அன்புமிக்க அந்தத் திரௌபதியினுடைய கண், அறிந்ததுஒ-தெரிந்துகொண்டதோ? செறிந்த பொய்கை பங்கயம் போன்றது - நீர்நிறைந்த தடாகத்திலுள்ள தாமரைமலரை யொத்திருந்தது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

வானத்தில் மேகம் படர்ந்து மறைத்தலால் விளங்காமல் மறைந்து நின்ருலும், தாமரை அச்சூரியன் உதயமாகித்தோன்றுதலையே எதிர்பார்த்திருக்கும்; அவ்வாறே திரௌபதியின்பார்வை தனக்குஉரிய கணவராகிய பாண்டவர் உண்மைவடிவத்துடன் அங்கு வெளிப்படுதலை எதிர்நோக்கியிருந்த தென்க. (504)

### 30.—அப்பொழுது திருஷ்டத்யும்நன் ஒன்றுகூறத்தொடங்குதல்.

மனக்கடுங்காதல்விம்ம மாலைதாழ்புயங்கள்வாட
எனக்கெனக்கென்றென்றேமாந் திருந்தகாவலரைநோக்கிச்
சினக்கடமொழுகுங்கன்னக் களிறனுன்றிட்டத்துய்மன்
நினைக்கவுமரியதொன்றை நினைவினேடுரைசெய்வானே.

(இ - ள்.) மனம் கடு காதல் விம்ம - மனத்திற் பேராசை மிக, மாலை தாழ் புயங்கள் வாட-(அதனல்) மலர்மாலைதொங்குந் தோள்கள் மெலிய, எனக்கு எனக்கு என்று என்று ஏமாந்து இருந்த - '(திரௌபதி) எனக்கு (உரியளாகக்கடவள்) எனக்கு (உரியளாகக் கடவள்)' என்று தனித்தனி (கருதி) மிகுகளிப்புக்கொண்டிருந்த, காவலரை நோக்கி - (சுயம்வரத்துக்குவந்த) அரசர்களைப்பார்த்து, சினம் கடம் ஒழுகும் கன்னம் களிறு அனுன் இட்டத்துய்மன் - சீற்றத்தையும் மதசலம்ஒழுகுங் கன்னங்களையுமுடைய ஆண்யானையைப் போன்றவனை திருஷ்டத்யும்நன், நினைக்கஉம் அரியது ஒன்றை நினைவினேடு உரைசெய்வான் -நினைத்தற்கும் அரிய ஒரு வார்த்தையைக் கருத்தோடு சொல்பவனுனன்; (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

இவன் கூறிய வார்த்தை சுயம்வரத்திற்குவந்த அரசர்கள்சிறிதும் எதிர்பாராத தென்பதும், பாண்டவரை உளரோ இலரோ

எனக் காணும் கருத்தோடு ஏற்படுத்திக் கூறிய தென்பதும் விளங்கும். த்ருஷ்டத்யும்நனென்றபெயர்-காம்பீரியமும் பாதுகாத்தல்தொழில்வன்மையு முடையனாய் ஆற்றல் முதலியவற்றோடு சிறப்பாகப்பிறந்தவனென்னுங் காரணம்பற்றிய தென்று வியாசபாரதம் கூறுகின்றது, 'களிற்றினான்' என்றும் பாடம். (505)

**31.—'குறியைத்தவறாது எய்தார்க்குத் திரௌபதி உரியள்'எனல்.**

சிலையிது சிலீமு கங்க ளிவைகடுந் திரிகை வேகத்து
இலைமுகத் துழலு கின்ற வெந்திரத் திகிரி நாப்பண்
நிலையிலா விலக்கு மஃதே நெஞ்சுற யாவ னெய்தான்
கலைவலீ ரவற்கே யிந்தக் கன்னியு முரிய ளென்றான்.

(இ - ள்.) 'கலை வலீர் - கலைஞானங்களில் வல்லவர்களே! சிலை இது - வில் இதோ இருக்கிறது; சிலீமுகங்கள் இவை - அம்புகள் இதோ இருக்கின்றன; கடுந் திரிகை வேகத்து-முறுக்கிவிட்ட விசையையுடைய(குயவனது)சக்கரத்தின் வேகம்போன்ற வேகத்தோடு, இலை முகத்து உழலுகின்ற - ஆர்களின் நுனியமைந்த விளிம்பிற் சூட்டை யுடையதாய்ச் சுழலுகின்ற, எந்திரம் திகிரி - சக்கரவடிவமான யந்திரத்தினது, நாப்பண் - நடுவிலே, நிலைஇலா- நிலைப்படாமலிருக்கிற, இலக்குஉம் - குறியும், அஃது ஏ - அதோ காணப்படுகிறது; (அந்த இலக்கை), நெஞ்சுஉற யாவன்எய்தான்- மனம் அமைய (உங்களில்) எவன் எய்துவீழ்த்துவனோ,அவற்குஏ- அவனுக்கே, இந்த கன்னிஉம் உரியள் - கன்னிகையான இத் திரௌபதியும் உரியவளாவள்,' என்றான்—; (எ -று.)

பதினெட்டு வித்தைகளுள்ளும், அறுபத்து நான்கு கலைகளுள்ளும் வில்வித்தை ஒன்றாதலால், அதில் தேர்ந்தவர்களே யென்று உயர்த்திவிளிப்பான் 'கலைவலீர்' என்றான். வில்லேற்றினான் இவளை எய்துமென்றஇது, எண்வகை மணத்துள் ஆசுரமாம்.சிலீமுகம் - வடசொல்; கூர்மையுள்ள நுனியை யுடையதென்பது பொருள். திரிகை - திரியுந்தன்மையது. 'எய்தான்'-இயல்பினால்வந்தகாலவழுவமைதி.'வேகத்திலையமொத்து'என்றும்பாடம்.

வேறு.

**32.—இரண்டுகவிகள்-அதுகேட்டு அரசர்கள்கலங்கினும் ஆசையொழியாமை கூறும்.**

இச்சொற் பழனப் பாஞ்சாலர்க் கிறைவன் புதல்வ னியம்புதல்கேட்டு
அச்சொற் றந்தஞ் செவிக்குருமே றாகக் கலங்கு மரவன்னர்
கச்சைப் பொருது புடைபரந்து கதித்துப் பணைக்குங் கதிராரப்
பச்சைக் குரும்பை யிளமுலைமேற் பரிவா னுணம் பிரிவுற்றார்.

(இ - ள்.) இ சொல் - இந்தவார்த்தையை, பழனம் பாஞ்சாலர்க்கு இறைவன் புதல்வன் - கழனிகள் சூழ்ந்த பாஞ்சாலதேசத்திலுள்ளார்க்கு அரசனான துருபதனது குமாரனாகிய திட்டத்துய்மன், இயம்புதல் - சொல்லியதை, கேட்டு - செவியுற்று, அசொல் தம் தம் செவிக்கு உரும் ஏறு ஆக கலங்கும் - அந்த வார்த்தை தம்தம்காதுகளுக்குப் பேரிடிபோலாக (அதனால்) கலங்கிய, அரவு

அன்னார்-பாம்புபோன்றவர்களாகிய அரசர்கள்,—கச்சைபொருது-கஞ்சுகத்தை மோதி, புடை பரந்து - பக்கங்களிற் பரந்து, கதித்து-வளர்ந்து, பணைக்கும் - பருத்துள்ள, கதிர் ஆரம் பச்சைகுரும்பை இளமுலைமேல் - ஒளியையுடைய முத்தாரங்களை யணிந்த பசிய தென்னங்குரும்பைபோன்ற இளைய தனங்களையுடைய திரௌபதியினிடத்துக் கொண்ட, பரிவால்-ஆசையினால், நாணம்பிரிவுற்றார் -வெட்கம்நீங்கினார்கள்; (எ - று.)

இடியோசையைக் கேட்டவளவில் நாகம் அஞ்சுதல் இயல்பு; அதுபோல அவன் கம்பீரமாக உரத்தகுரலோடுசொன்ன இச்சொல்லைக் கேட்டு அரசர்கள் அஞ்சினர். அங்ஙன் அஞ்சினும் 'ஆசை வெட்கமறியாது' என்றவாறு அரியகுறியைஎய்யத் தமக்கு இயலாதாயின் மானக்கேடு நேருமே யென்பதைச் சிறிதும் ஆலோசியாமலே திரௌபதியினிடங் கொண்ட காதல்மிகுதியால் அரசர்களெல்லோரும் அந்தஇலக்கை எய்ய முயலுங் கருத்தினராயின ரென்பதாம். த்ருஷ்டத்யும்நன் அங்ஙன்சொல்லிவிட்டுத் திரௌபதிக்கு ஆங்குவந்திருந்த மன்னரைக் காட்டினானென்று பாரதங்களிற் காண்கின்றது.

இதுமுதற்பதினாறு கவிகள் - பெரும்பாலும் மூன்று ஆறாஞ் சீர்கள் காய்ச்சீர்களும், மற்றையவைமாச்சீர்களுமாகிய அறுசீராசிரிய விருத்தங்கள். (507)

33. கண்போலம்புநுதல்போலுங் கடுங்கார்முகமுங்காண்டொறுமத்
திண்போர்வேந்தர்மனக்கலக்கஞ் செப்புந்தகைத்தன்றானாலும்
விண்போயுழன்றுசுழலிலக்கை மெய்யேயெய்துவீழ்த்திமலர்ப்
பெண்போல்வாளைக்கைப்பிடிக்கும் பேராசையினாற்பேதுற்றார்.

(இ - ள்.) கண் போல் - (திரௌபதியின்) கண்பார்வை போன்ற, அம்புஉம் - அம்புகளையும், நுதல் போலும்-(அவளுடைய) புருவம் போன்ற, கடு கார்முகம்உம் - வலியவில்லையும், காண்தொறுஉம் - பார்க்குந்தோறும், அ திண் போர் வேந்தர் - வலிய போர்செய்யவல்ல அவ்வரசர்களுக்கு உண்டான, மனக் கலக்கம்—, செப்பும் தகைத்து அன்று - (எவராலும்) சொல்லுந் தன்மையுடைத்தன்று [மிக அதிகமானது என்றபடி]; ஆனால் உம் - அங்ஙனமிருக்கவும், (அவர்கள்), விண் போய் உழன்று சுழல் இலக்கை - மிக்கவுயரத்திற்பொருந்தி விரைவாகச்சுழல்கிற அக்குறியை, எய்து மெய்எ வீழ்த்தி - (அம்பு) எய்து தவறாது விழுத்தி, மலர்ப்பெண் போல்வாளை கை பிடிக்கும் - தாமரைமலரில் வாழுந் திருமகள்போன்ற அத்திரௌபதியை மணஞ்செய்து கொள்ளவேண்டுமென்ற, பேர் ஆசையினால்—, பேது உற்றார் - மதிமயங்கி அம்முயற்சியை மேற்கொண்டார்கள்; (எ - று.)

இங்கே, பேதுறுதல் - இயலாதகாரியத்தை ஆலோசியாது செய்யத்தொடங்குதல். சுயம்வரத்தில் தன்னடைவிலே மணஞ்செய்துகொள்ளலாமென்று கருதி வந்த அரசர்கட்கு அக்கருத்து நிறைவேறுதற்கு இடையூறாய் நிற்றலால், அம்பும் வில்லும் வருத்தஞ்செய்தலே யன்றி, அவை பாஞ்சாலியின் கண்போலவும்

நுதல்போலவும் இருத்தலாலும் வருத்தஞ் செய்தன என நயந் தோன்றக் கூறினர். 'கண்போலம்பும் நுதல்போலுங் கடுங்கார்முக மும்' என்றது-எதிர்நிலையணி. (508)

34.—செவிலித்தாயர் திரௌபதிக்கு அரசர்களை இன்னரின்னரென்று கூறத்தொடங்கல்.

திருந்தார்மன்றற்குழலணங்கின் செவிலித்தாயர்கடல்கடைந்து
வருந்தாவமுதநிகர்வாளை மயில்போற்கொண்டுமன்னவைபுக்கு
இருந்தாரிருந்தகாவலரை யின்னோரின்னோரிவரென்று
முருந்தார்பவளத்துவரிதழ்வாய் முகிழ்வாணகைக்குமொழிகின்ருர்.

(இ-ள்.) கடல் கடைந்து வருந்தா-(சிரமப்பட்டுப்) பாற்கடலைக் கடையாமலே பெற்ற, அமுதம்-அமிருதத்தை, நிகர்வாளை-ஒப்பவ ளான அத்திரௌபதியை, மயில் போல் கொண்டு - மயில்போல அழைத்துக்கொண்டு, மன் அவை புக்குஇருந்தார்-இராசசபையிற் சென்று சேர்ந்தவர்களாகிய, திருந்து ஆர் மன்றல் குழல் அணங் கின் செவிலித்தாயர்-ஒழுங்காக அலங்கரித்தல் அமைந்த நறு மணமுள்ள கூந்தலையுடையஅவளது செவிலித்தாய்மார்,—இருந்த காவலரை-(அங்கு)வீற்றிருந்த அரசர்களை, இவர் இன்னோர் இன் னோர் என்று-இவர் இன்னர் இன்னரென்று, பவளம் துவர் இதழ் வாய் முருந்து ஆர் முகிழ் வாள் நகைக்கு மொழிகின்ருர் - பவழம் போலச் சிவந்த இதழ்களையுடைய வாயையும் மயிலிறகின் அடிக் குருத்தையொத்த முல்லையரும்புபோன்ற ஒள்ளியபற்களையுமுடைய அவளுக்கு (ச் சுட்டிக்காட்டி)ச் சொல்லுகின்றவரானுர்கள்; (எ-று.) —அதனை மேலிற்காண்க. திருந்து - முதனிலைத்தொழிற்பெயர்.

35.—இது, துரியோதனனைக் குறித்தது.

மாற்றம்பிறிதொன்றுரையானிவ் வன்போர்வில்லின்வலிநோக்கிச்
சீற்றஞ்சிந்தைகொண்டழலப் பொய்யேமலர்ந்ததிருமுகத்தான்
ஏற்றந்தன்னில்வேறொருவ ரிப்பேருலகிலிலரென்னத்
தோற்றம்படைத்தோன்றனைக்காட்டித் துரியோதனன்மற்றிவனென்ருர்.

(இ-ள்.) 'இ பேர் உலகில்-இந்தப்பெரிய உலகத்திலே, தன் னில் வேறு ஒருவர் ஏற்றம் இலர்-தன்னைப்போல வேறொருத்தர் உயர்வுள்ளவர் இல்லை', என்ன-என்று, தோற்றம் படைத்தோன் தனை-எண்ணங்கொண்டவனை வணங்காமுடிமன்னனை, காட்டி - (செவிலித்தாயர் திரௌபதிக்குச்) சுட்டிக்காண்பித்து,—இ வல் போர் வில்லின் வலி நோக்கி-வலியபோருக்குஉரிய இந்த வில்லின் வலிமையைப்பார்த்து, சிந்தை சீற்றம் கொண்டு அழல - (அதனை யெடுத்துவளைக்குந் திறமில்லாமையால்) மனம் கோபங்கொண்டு கொதிக்க, மாற்றம் பிறிது ஒன்று உரையான்-யாதொருவார்த்தை யையுஞ் சொல்லாதவனுய், பொய்ஏ மலர்ந்த திருமுகத்தான் - (திறமையுடையான்போலப்) பொய்யாக மலர்ச்சிகொண்ட அழகிய முகத்தையுடையவனுகிய, இவன்—, துரியோதனன்—,என்ருர்—.
சுயம்வரத்திற்கு என்று சபைகூட்டியவிடத்தில் குறியெய்வ தென்ற ஒருசெயலைக்குறித்துக் கூறியது தகுதியன்றென்றுகூறக்

கருதினனாயினும், அங்ஙனம் தான் மாறுகூறினால் மற்றோர் யாது கருதுவார்களோ என்று ஒன்றுஞ்சொல்லாது சும்மாஇருந்தன னென்பது, 'மாற்றம் பிறிதொன்றுரையான்' என்றதன் கருத்து. தன்மனத்திலுண்டான எண்ணத்தை மறைக்கவேண்டு மென்ற கருத்தோடு முகத்தில் பொய்யாக மலர்ச்சிகாட்டுகின்றன னென்பதும், அந்த அசட்டுத்தனத்தைக் குறிப்பறியவல்லசெவிலித்தாயர் அறிந்தாரென்பதும் இங்கு விளங்கும். பொய்யே மலர்ந்த திரு முகத்தான்-பொய்யையேபேசும் வாயையுடையான் என்றுமாம்.

36.—இது, துரியோதனன் தம்பியரைக் குறித்தது.

மணியின்கிரணவெயிலெறிப்ப மண்ணேழ்தாங்குநச்செயிற்றுப்
பணியின்முடிநாயகத்தலையின் பாங்கேநிரைத்தபலதலைபோல்
துணியுங்கொடுமைவகிரன்ன துணைவர்துச்சாதனன்முதலோர்
அணியுங்கழற்காற்சுயோதனனுக் கருகாசனத்தரிவரென்றார்.

(இ - ள்.) மணியின் கிரணம் வெயில் எறிப்ப - (தம்மிடத்து உள்ள) மாணிக்கங்களின் ஒளியாகிய வெயில் வீச, மண் ஏழ் தாங்கும் நஞ்சு எயிறு பணியின் முடி நாயகம் தலையின் பாங்கு நிரைத்த-ஏழுலகங்களையும்(மேலிருந்து)தாங்குகிற விஷமுள்ள பற்களையுடைய ஆதிசேஷனது சுடிகையையுடைய பிரதானமான தலையினதுபக்கங்களில் வரிசையாகவுள்ள, பல் தலைபோல்-பலதலைகள்போல, அணியும் கழல் கால் சுயோதனனுக்கு அருகு ஆசனத்தர் - அணிகிற வீரக்கழலையுடைய காலையுடைய துரியோதனனுக்குப்பக்கத்துஆசனங்களில் வீற்றிருக்கின்றவர்களான, இவர்-இவர்கள், துணியும் கொடுமை வகிர் அன்ன துணைவர் - துணிபட்ட கொடுமையின் துண்டுகள் போன்ற அவன்தம்பியராகிய, துச்சாதனன் முதலோர் —, என்றார்—; (எ - று.)

ஆதிசேஷனது நடுநாயகத்தலை துரியோதனனுக்கும்,அதனையடுத்துள்ள மற்றைத்தலைகள் அவனையடுத்துள்ளஅவன்தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மருக்கும் உவமை. இவ்வுவமையால், அவர்களுக்குள் இருக்கிற ஒற்றுமை விளங்கும். மண் ஏழ் - ஏழு தீவுகளாகவுள்ள பூமியென்றுமாம். ஆதிசேஷன் தலைக்குச்சுடிகை போல அரசர்கள் தலைக்குக் கிரீடம் அமையும். துரியோதனன் தம்பிமார் கொடியவர்களாதலால், கொடுமை பல துண்டுகளாகத் துணிபட்டதுபோன்றவ ரெனப்பட்டார்: தற்குறிப்பேற்றவணி. துச்சாதனன் முதலியோரின் கொடுமையைக் கற்போர்க்கு அறிவிக்கக் கவி கூறியதன்றிச் செவிலியர் 'கொடுமைவகிரன்னதுணை' வர் எனக் கூறினாரெனக் கொள்ளற்க. (511)

37.—இது, சகுனியைக் குறித்தது.

உலைவந்தயருஞ்சூன்மந்திக்குருகாநிலங்கீண்டுதவுகுலக்
கலைவன்பலவின்சுளைகிறிக்களிப்போடளிக்குங்காந்தாரத்
தலைவன்சகுனியிவன்கண்டாய்தக்கோரடாச்சூதுக்கும்
நிலைவஞ்சனைக்குந்தரணிபரில்யாரேயிவற்குநிகரென்றார்.

(இ-ள்.)உலைவந்து அயரும்-மெலிந்து தளர்கிற,சூல்மந்திக்கு-கருப்பம்முதிர்ந்த பெண்குரங்குக்கு, உருகா-மனமுருகி, உதவு-(இரை

தேடிக் கொணர்ந்தளித்தல் முதலிய) உதவிசெய்கிற, குலம் கலை-உயர்ந்த சாதி ஆண்குரங்கு, நிலம் கீண்டு - தரையைத்தோண்டி, வல் பலவின் சுளை கீறி - வலிய பலாப்பழத்தைக் கீண்டு (அதன்) சுளையையெடுத்து, களிப்போடு அளிக்கும்-களிப்போடு கொடுக்கிற, காந்தாரம் - காந்தாரதேசத்துக்கு, தலைவன் - அரசனாகிய, சகுனி - சகுனியென்றும் பெயருடையான், இவன்—,கண்டாய் - அறிவாய்; தக்கோர் ஆடா சூதுக்குஉம்-பெரியோர் ஆடாதசூதாட்டத்திலும், நிலை வஞ்சனைக்குஉம்-நிலையான வஞ்சனைசெய்வதிலும், தரணிபரில் இவற்கு யார் நிகர் - அரசர்களுள் இவனுக்கு எவர்தாம் ஒப்பாவர்? என்றார்—; (எ - று.)

முன்னிரண்டடிகளிற் கூறிய நாட்டின் வருணனையால், காந்தாரநாட்டரசனான இவன் தனக்குரிய மகளிர்பால் மிக்கஅன்புடையா னெனத் தொனிப்பித்தவாறும். ஆயினும் அவன் தீக்குணங்களின் மிக்கா னென்றது, இறுதிவாக்கியம். இங்கு, பலா-வேர்ப்பலா. நிலைவஞ்சனை - எவராலும் மாற்றமுடியாத வஞ்சனை.

### 38.—இது, அசுவத்தாமனைக் குறித்தது.

பேசாதொடுங்கும்பேரறிவாற் பெரும்போர்வலியாற்பிறப்பான்மெய்த்
தேசாலியற்றும்பலபடையாற் றிண்டோள்வலியாற்செஞ்சிலைக்கை
யாசான்மைந்தனிவன்றனக்கிங் காரேயுவமையமரரிலும்
ஈசானனைமற்றொருசிறிதொப் பெனலாமல்லதிலையென்றார்.

(இ - ள்.) பேசாது - (பயனில்லாதபலவார்த்தைகளைப்) பேசாமல், ஒடுங்கும் - அடங்கியிருக்கிற, பேர் அறிவால் - மிக்க அறிவினாலும், பெரு போர்வலியால்-பெரிய போரைச்செய்யும் வல்லமையினாலும், பிறப்பால்-பிறப்பின்சிறப்பினாலும்,மெய் தேசால்-உடம்பின் ஒளியாலும், இயற்றும் பல படையால் - செய்யும் பல படைக்கலத் தொழிலினாலும், திண் தோள் வலியால் - உறுதியுள்ள தோள்களின் வலிமையினாலும், செம் சிலை கை ஆசான் மைந்தன் இவன் தனக்கு இங்கு ஆர் ஏ உவமை - சிறந்தவில்லையேந்திய கையையுடைய துரோணாசாரியனது குமாரனாகிய இந்த அசுவத்தாமனுக்கு இவ்வுலகில் எவர்தாம் ஒப்பாவர்? அமரரில்உம் - (அவ்வுலகத்திலுள்ள) தேவர்களுள்ளும், ஈசானனை ஒரு சிறிது ஒப்பு எனல் ஆம் அல்லது - சிவபிரானை (இவனுக்கு) ஒருசிறிது ஒப்பாவனென்று கூறலாமேயல்லாமல், மற்று இலை-வேறுஒப்பவர் இல்லை, என்றார்-என்று சொன்னார்கள்; (எ - று.)

இவன் பிராமணசாதியனாயினும், இவன் தந்தையான துரோணன் அரசன்போல ஒழுகியதனாலும், தன்மாணாக்கனாகிய அருச்சுனனைக்கொண்டு வெல்லப்பட்ட துருபதனுடைய இராச்சியத்திற் பாதியைக் கைக்கொண்டு அதற்குத்தலைமைபூண்டதனாலும், அரசரிடை இவனைக் கூறினார். (513)

### 39.—இது, கர்ணனைக் குறித்தது.

பெண்மைக்கிரதியெனவந்த பெண்ணாரமுதேபேருலகில்
உண்மைக்கிவனேவலிக்கிவனே யுறவுக்கிவனேயுரைக்கிவனே

திண்மைக்கிவனேநெறிக்கிவனே தேசுக்கிவனேசிலைக்கிவனே
வண்மைக்கிவனேகன்னனெனு மன்னன்கண்டாய்மற்றிவனே.

(இ - ள்.) பெண்மைக்கு - பெண் தன்மையில், இரதி என-ரதி தேவிபோல்வா ளென்று சொல்லும்படி, வந்த - தோன்றிய, பெண் ஆர் அமுதே-பெண்களுள் பெறுதற்கு அரிய அமிருதம்போலச் சிறந்தவளே! பேர் உலகில் - பெரிய உலகத்தில், உண்மைக்கு-சத்தியத்துக்கு, இவனே—;வலிக்கு - பலத்துக்கு, இவனே—; உறவுக்கு-சிநேக தருமத்துக்கு, இவனே-;உரைக்கு-புகழுக்கு,இவனே-; திண்மைக்கு - கலங்காத நெஞ்சுறுதிக்கு, இவனே—; நெறிக்கு - நல்லொழுக்கத்திற்கு, இவனே—;தேசுக்கு - ஒளிக்கு, இவனே—; சிலைக்கு - விற்றொழிலுக்கு, இவனே—;வண்மைக்கு-தானத்துக்கு, இவனே—; இவன்—, கன்னன் எனும் மன்னன் - கர்ணனென்று சொல்லப்படும் அரசன்; கண்டாய் - காண்பாய் (என்று சொன்னார்கள்); (எ - று.)—மற்று-அசை.

'என்றார்' என்பதை வருவித்துக்கொள்க; இன்னும் சிலசெய்யுள்களுக்கும் இது கொள்க. செய்யுளாதலின், 'இவன்' என்ற சுட்டுப்பெயர் 'கன்னன்' என்ற இயற்பெயரின்முன் வந்தது; "செய்யுட்கு ஏற்புழி"என்றார்,நன்னூலார். இவனேயென்பதற்கு-இவனே சிறந்தவனென்றும், இவனல்லதில்லை யென்றுங் கருத்து. (514)

## 40.—இது, பலராமனைக் குறித்தது.

அலத்தான்முன்னம்பிளந்தபகை யடர்ப்பான்கருதிப்பிளப்புண்ட
சலத்தால்யமுனைபிணித்ததெனத் தயங்கும்படிசேர்தானையினன்
குலத்தாலுயர்ந்தவசுதேவன் குமரன்களபக்கொங்கையர்மெய்ந்
நலத்தான்மகிழுஞ்சிந்தையின னறுந்தாரிராமனிவனேன்றார்.

(இ - ள்.) 'யமுனை - யமுநாநதி, முன்னம் அலத்தால் பிளந்த பகை அடர்ப்பான் கருதி - முன்பு (தன்னை இவன்) கலப்பையைக் கொண்டுபிளந்தபகைமைக்கு எதிர்செய்து வெல்லக்கருதி, பிளப்புண்ட சலத்தால் பிணித்தது - பிளவுபட்ட நீரினால் (இவனைச்) சூழ்ந்திட்டது,' என - என்றுசொல்லும்படி, தயங்கும் படி சேர்-(நீலநிறமாய்) விளங்குந் தன்மையைக் கொண்ட, தானையினன் - ஆடையையுடையவனாகிய, இவன்—, குலத்தால் உயர்ந்த வசுதேவன் குமரன் - குடிப்பிறப்பினாற் சிறந்த வசுதேவனுடைய புத்திரனும், களபம் கொங்கையர் மெய் நலத்தால் மகிழும் சிந்தையினன்-கலவைச்சந்தனத்தையணிந்த தனங்களையுடைய மகளிரது உடம்பைத் தழுவும் இன்பத்தால் மகிழும் மனத்தையுடையவனுமாகிய, நறுந் தார் இராமன் - நறுமணமுள்ளமாலையையணிந்த பலராமன், என்றார்—; (எ - று.)

பலராமன் - கண்ணனுக்குத் தமையன் ; திருமாலின் எட்டாம் அவதாரம். வசுதேவனுடைய பத்தினியருள் தேவகியின் கருப்பத்தில் ஆறுமாசமும், ரோகிணியின்கருப்பத்தில் ஆறுமாசமும் இருந்து பிறந்தவன். இவன், நீலநிறமான ஆடையை யுடுப்பவனாதலால் நீலாம்பர னென்று பெயர்பெறுவன். இவன், ஒரு

சமயத்தில் துவாரகையினின்று கோகுலத்துக்கு எழுந்தருளி, தன்னிடங் காதல்கொண்ட கோபஸ்திரீகளுடன் விளையாடுபவனாகி யமுநாநதிக்குச் சமீபத்திலுள்ள ஒரு சோலையைச் சேர்ந்து, வருணனால் அனுப்பப்பட்ட வாருணியென்னும் மதுவைப் பானஞ்செய்து களித்தவனாய், ஜலக்கிரீடை செய்யக்கருதி, பக்கத்திலோடுகின்ற யமுநாநதியைநோக்கி 'ஓ யமுனாய்! நீ இங்கே வா' என்று அழைக்க, அவ்யமுனை 'இவன்மதுபானவெறியால்இப்படிச்சொல்லுகின்றான்' என்று அக்கட்டளையைப்பொருள்செய்யாது அங்கேவாராதொழிய, இவன் வெகுண்டு தனது கலப்பையின் நுனியால் அந்நதியை இழுக்க, அந்த ஆறு மீறிப்போகும் ஆற்றலில்லாமையால் தான் செல்லும் வழியை விட்டு அவன் எழுந்தருளியிருக்கும் வனத்தில் வந்துபெருகியதன்றித் தன்னுடைய தெய்வவடிவத்தோடு அவனெதிரில் வந்து தன்பிழையைப் பொறுக்கும்படி மிகவும்பிரார்த்தித்துத் திவ்வியமான ஒருபூமாலையையும் இரண்டு நீலவஸ்திரங்களையும் சமர்ப்பிக்க,பின்பு இவன் கோபந்தணிந்து நீராடியபின் அந்நதியை விட்டிட்டனனென்பது, வரலாறு. இங்ஙனம் பலராமனால் வெல்லப்பட்ட யமுனாநதி தன்னைவென்ற அவனைத் தான்வென்று பழிதீர்த்துக்கொள்ளக் கருதி இரண்டுபிரிவாகப் பிரிந்து அவனுடம்பை வளைந்து கொண்டாற் போன்றது, அவன் அரையிலும் மேலும் சாத்திய நீலஆடைகளென வருணித்தவாறு; யமுநாநதியின்நீர் கருநிறமுடையதாதலால், இங்ஙனம் கற்பிக்கப்பட்டது; தற்குறிப்பேற்றவணி.

சலம் = ஜலம்: சலம் என்ற வடசொல்லின் திரிபுஎனக்கொண்டால், கோபமாம். வசுதேவன் - யதுகுலத்தில் சூரனென்பவனது குமாரன். வசுதேவன் என்பது - ஐசுவரியங்களால் விளங்குபவனென்று பொருள்படும். (515)

### 41.—இது, கண்ணபிரானைக் குறித்தது.

இந்தக்குரிசில்யதுகுலத்துக் கெல்லாந்திலகமெனுமாறு
வந்துற்பவித்துப்பொதுவருடன் வளருங்கள்ளமாமாயன்
முந்தக்கஞ்சமாமனுயிர் முடித்தானிவற்குமுகிலூர்தி
அந்தப்புரத்திலாராம மந்தப்புரத்திலாராமம்.

(இ - ள்.) இந்த குரிசில்-இந்த உத்தமபுருஷன், யது குலத்துக்கு எல்லாம் திலகம் எனும் ஆறு வந்து உற்பவித்து - யதுவமிசமுழுவதுக்கும் ஒரு திலகமென்று சொல்லும்படி அலங்காரமாய் அக்குலத்தில் வந்து திருவவதரித்து, பொதுவருடன் வளரும் - இடையர்களுடனே வளர்ந்த, கள்ளம் மா மாயன்-(எவரும்) அறியவொண்ணாத பெரிய மாயையையுடைய கண்ணபிரான்; முந்த - முன்னமே [இளம்பருவத்திலேயே], கஞ்சன் மாமன் உயிர் முடித்தான் இவற்கு - கம்சனாகிய மாமனுடைய உயிரை யொழித்தவனாகிய இவனுக்கு, முகில் ஊர்தி அந்த புரத்தில் ஆராமம் - மேகங்களை வாகனமாகவுடையவனான இந்திரனது அந்த அமராவதிநகரத்திலுள்ள கற்பகச்சோலை, அந்தப்புரத்தில் ஆராமம் - (தனது மனையாள்வசிக்கும்) அந்தப்புரத்திலிருக்குஞ் சோலையாம்.

திலகம் நெற்றிக்கு அழகுசெய்வதுபோல, கண்ணன் யது குலத்துக்குச் சிறப்புத்தந்தன னென்க. வசுதேவனும் தேவகியும் கம்சனால் வடமதுரையில் தளைபூண்டிருக்கையில் திருமால் தேவகியினிடம் எட்டாவதுகருப்பத்திற் கண்ணனாய் அவதரிக்க, அந்தக் குழந்தையைக் கம்சன் கொல்லக்கூடுமென்கிற அச்சத்தால் தாய் தந்தையர் அத்தெய்வக்குழவியின் அனுமதிபெற்று அந்தச் சிசுவைஅதுபிறந்தநடுராத்திரியிலேயே திருவாய்ப்பாடியிலிருக்கிற நந்தகோபனது திருமாளிகையில் இரகசியமாகக் கொண்டுசேர்த்து விட்டு,அங்கு அவன்மனைவியான யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்திருந்தவொரு பெண்குழந்தையையெடுத்துக்கொண்டு வந்துவிட, அதுமுதல் கம்சனைக்கொல்லுகிறவரையில் கண்ணபிரான் அக்கோகுலத்திலேயே இடையர்களுடன் திருவிளையாடல்கள் புரிந்து வளர்ந்தருளினன். **கம்ஸன்** - தேவகிக்குத் தமையனாதலால்,கண்ணனுக்கு மாமனானவன். தன்னைக்கொல்லப் பிறந்த தேவகி புத்திரன் யசோதையினிடம் ஒளித்துவளர்தல் முதலிய விருத்தாந்தங்களை நாரதர் சொல்லக் கேட்டுக் கம்சன் அதிககோபங்கொண்டு கிருஷ்ணனைக் கொல்லநிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம்வைத்து வடமதுரைக்கு வரவழைத்துப்பலவகையில் வதைக்க வழிதேடுகையில், கம்சசபையில்கிருஷ்ணபகவான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனதுகிரீடம் கழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிரைப் பிடித்துத் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்று ஒழித்தன னென்பது, **முன்னிரண்டடியிற் குறித்த கதை.**

**ஈற்றடியிற் குறித்த கதை:**—கண்ணன் நரகாசுரனையழித்தபின்பு அவனால் முன்புகவர்ந்துபோகப்பட்ட (இந்திரன் தாயான) அதிதி தேவியின் குண்டலங்களை அவளுக்குக் கொடுக்கும்பொருட்டுச் சத்தியபாமையுடனே கருடன்தோளின்மே லேறித் தேவலோகத்துக்குச் செல்ல, அங்கு இந்திராணி சத்தியபாமைக்குச் சகலஉபசாரங்களைச்செய்தும் தேவர்க்கேயுரிய பாரிஜாதபுஷ்பம் மானுடப் பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று சமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக் கண்டு விருப்புற்றவளாய்ச் சுவாமியைப் பார்த்து 'பிராணநாயகனே! இந்தப் பாரிசாததருவைத் துவாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்ன, கண்ணன் உடனே அந்தவிருட்சத்தை வேரோடு பெயர்த்துக் கருடன் தோளின்மேல் வைத்தருளி, அப்பொழுது இந்திராணிதூண்டிவிட்டதனால்வந்து மறித்துப் போர்செய்த இந்திரனைச் சகலதேவசைனியங்களுடன் சங்காதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு பாரிசாதமரத்தைத் துவாரகைக்குக்கொண்டுவந்து சத்தியபாமைவீட்டுப் புறங்கடைத் தோட்டத்தில் நாட்டியருளின னென்பதாம்.

இச்செய்யுளின் ஈற்றடியில் அந்தப்புரம் என்பதுவெவ்வேறு பொருளில் வந்தது, மடக்கு என்னுஞ் சொல்லணி. (516)

### 42.—இது, சாத்தகியையும் சிசுபாலனையும் குறித்தது.

**தண்ணந்துளவோன்றனக்கிளவ லிவன்காண்மின்னேசாத்தகியென்று**
**என்னும்போசகுலத்தலைவ னெவருஞ்சூழவிருக்கின்றான்**

கண்ணன்றன்னையவமதித்துக் கழறும்புன்சொற்கார்முகத்தைத்
திண்ணனென்கருத்தானிங்கிவன்காண்; சேதிப்பெருமான்சிசுபாலன்.

(இ-ள்.) மின்னே-மின்னல்போன்றவளே! இவன்—,——தண் அம் துளவோன் தனக்கு இளவல் - குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலையையுடைய கண்ணபிரானுக்குத் தம்பியாகிய, சாத்தகி என்று எண்ணும் போசகுலம் தலைவன் - சாத்தகியென்று (எவராலும்) நன்குமதிக்கப்படுகிற போசகுலத்துக்குத்தலைவன்; காண் - அறிவாய்: ஈங்கு-(அவனுக்கு) இப்பால், எவர் உம் சூழ இருக்கின்றுன்-பல அரசர்கள் (தன்னைச்) சுற்றிலும் இருக்க இடையில் வீற்றிருக்கின்றவனாகிய, இவன்—, கண்ணன் தன்னை அவமதித்து கழறும்-கிருஷ்ணனை அவமதித்துச் சொல்லுகிற, புன்சொல்-இழிவான சொற்களாகிய, கார்முகத்தை-வில்லை, திண்ணென்-வலியதென்று எண்ணுகிற, கருத்தான்-எண்ணத்தையுடையவனும், சேதி பெருமான் - சேதி தேசத்து அரசனுமாகிய, சிசுபாலன்—: காண் - அறிவாய்; (எ - று.)

சாத்தகி - ஸாத்யகி: சத்தியகனது புத்திரன். யதுகுலத்தரசர்களுள் வசுதேவனுக்கு உடன்பிறந்தமுறையாகிறவனும் சினியென்பானது மகனுமான சத்தியகனது குமாரனான சாத்தகி, பிராயத்திற் கண்ணனினும் இளையவனாதலால், கண்ணனுக்குத் தம்பிமுறையாவன். இவனுக்குச் சிலதலைமுறைகளுக்குமுன் இக்குலத்தில் தோன்றின மகாபோசனென்கிற அரசன் அதிகதருமிஷ்டனாயிருந்ததனால் அவன்வமிசத்திற்பிறந்தவர்கள் போசரென்று பிரசித்திபெறுவர்.

பாலபாரதத்தில் பகதத்தனைக்கூறியபின் சிசுபாலன் கூறப்பட்டுள்ளான். சிசுபாலன் - வசுதேவனது உடன்பிறந்தவளும், சேதி தேசத்து அரசனாகிய தமகோஷனுக்குப் பத்தினியுமாகிய சுருதசிரவை யென்பவளுடையமகன். திருமாலினது வைகுண்டலோகத்தின் துவாரபாலகராகிய ஜயவிஜயரென்பவர் ஒருசமயத்தில்ஆங்கு உட்செல்லவந்த சநகாதியோகிகளைத் தடுத்தமைபற்றி அவர்கள் வெகுண்டுகூறிய சாபமொழியால் மூன்றுபிறப்புத் திருமாலுக்குப் பகைவராய்ப் பூமியிற் பிறப்பெடுத்து அத்திருமாலின் கையாலிறப்பவராகி முதலில் இரணிய இரணியாக்ஷராகவும், அதன்பின் இராவண கும்பகர்ணராகவும், அப்பால் சிசுபால தந்தவக்கிரராகவும் தோன்றினரென அறிக: இச்சிசுபாலன், பிறந்தபொழுது, நான்கு கைகளையும் மூன்றுகண்களையு முடையவனாயிருந்தான்; அப்பொழுது ஆகாயவாணி 'யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும், மூன்றும்விழியும் மறைகின்றனவோ, அவனால் இவனுக்கு மரணம்' என்று கூறிற்று: அவ்வாறே பலரும் தொடுகையில் மறைபடாத கைகளும் கண்ணும், கண்ணபிரான் தொட்டளவிலே மறைபட்டன; அதனால், இவனைக்கொல்பவன் கண்ணனேயென்று அறிந்த இவன்தாய் 'யாதுசெய்யினும் என்மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனை வேண்ட, அந்த அத்தையின் நன்மொழிக்கு ஒருசார் இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழை செய்யுமளவும் இவன்பிழையை நான்பொறுப்பேன்'

என்று கூறியருளினன். பின்பு சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்துருவென்பதை இளமையிலேயே அறிந்து அதனாலும் முந்தின சன்மங்களின் தொடர்ச்சியாலும் மிக்கபகைமையைப் பாராட்டி எப்பொழுதும் அம்மெம்பெருமானை நிந்திப்பதே தொழிலாகஇருந்தான். இவன், தான் கண்ணன் விஷயமாகப் பலவாறுகூறும் தூஷணைச்சொல்லையே அவனை வெல்லப் போர்தொடுக்கும் வலிய கருவியாகக் கருதியிருந்தனனென்பதுதோன்ற, 'கண்ணன் தன்னை யவமதித்துக் கழறும் புன்சொற் கார்முகத்தைத் திண்ணென் கருத்தான்' எனப்பட்டான். (517)

### 43.—இது, சராசந்தனைக் குறித்தது.

தார்வண்டிமிரத்தேனொழுகுந் தடந்தோள்வீரன்சராசந்தன்
போர்வெஞ்சரத்தால்யாவரையும் புறங்கண்டன்றிப்போகாதான்
சீர்வண்மதுராபுரிவிடுத்துத் துவராபதியிற்சென்றொதுங்கக்
கார்வண்ணனையுநெடுங்காலம் வென்றானிவன்காணென்றாரே.

(இ - ள்.) தார் - மாலையில், வண்டு இமிர - வண்டுகள் ஒலிக்க, தேன் ஒழுகும்-(அதனினின்று) தேன்வழியப்பெற்ற, தட தோள்- பெரிய தோள்களையுடைய, வீரன் - இந்தவீரன், போர் - போரில், வெம்சரத்தால் - கொடிய அம்புகளால், யாவரைஉம்-எதிரிகளெல்லோரையும், புறம் கண்டு அன்றி-முதுகுகொடுக்கச்செய்தல்லாமல், போகாதான் - (அப்போரினின்று) மீண்டுசெல்லாதவனான, சராசந்தன்—; கார் வண்ணனைஉம் - காளமேகம் போலும் திருநிறமுடைய கண்ணனையும், சீர் வள் மதுராபுரி விடுத்து துவராபதியில் சென்று நெடு காலம் ஒதுங்க - சிறந்த அழகிய மதுராபுரியை விட்டுத் துவாரகையிற் போய் நெடுங்காலம் ஒதுங்கும்படி, வென்றான் - சயித்தவன், இவன்—; காண் - அறிவாய்: என்றார்-என்று (செவிலித்தாயர்) சொன்னார்கள்; (எ - று.)

மகததேசத்து அரசனான பிருகத்ரதனென்பவன் மைந்தனில்லாக்குறையால் வனத்திற்சென்று சண்டகௌசிக முனிவனை வணங்கி வரம்வேண்ட, அவன் மாமரத்தின் கனியொன்றைக் கொடுக்க, அதனை அவ்வரசன் தன்மனைவியரிருவர்க்கும் பகிர்ந்து கொடுத்தான், அதனால், அவ்விருவரிடத்தும் பாதிபாதியாகக் குழந்தை பிறந்தது. அவற்றை அவன் ஊர்ப்புறத்தி லெறிந்துவிடும்படி கட்டளையிட, அங்ஙனம் எறியப்பட்ட அப்பிளவுகளை அந்தக்கிராமதேவதையாகிய ஜரையென்பவள் இரவில் ஊர்வலம் வருகையில் கண்டு எடுத்துப் பொருத்திப் பிழைப்பித்து, தன்னாற் பொருத்தப்பட்ட காரணத்தால் ஜராசந்தனென்று பெயரிட்டு வளர்க்கும்படி அக்குழந்தையைத் தந்தையினிடம் கொடுத்துப் போயினள். அங்ஙனம் வளர்ந்து, அந்நாட்டில் கிரிவிரசமென்னும் நகரத்தில் அரசாண்டு செருக்குக் கொண்டு பற்பல அரசர்களைப் போரிற் கொன்று அநேக அரசர்களை வென்று சிறையில் வைத்திருந்த சராசந்தன், அஸ்தி, பிராஸ்தியென்னும் தனது பெண்களிருவரைக் கண்ணனதுமாமனாகுங் கம்சனுக்கு மணஞ்செய்வித்திருந்தான். பின்பு கண்ணன் கம்சனைக்கொன்றது காரணமாகச்

சராசந்தன் வெகு கோபங்கொண்டு இருஷ்ணனை வமிசத்தோடு கொல்ல வேண்டுமென்று அநேகம்பெருஞ்சேனையோடு எதிர்த்து வந்து கண்ணன் எழுந்தருளியிருந்த மதுராபுரியை வளைத்துப் பெரும் போர்செய்து பல ராமகிருஷ்ணர்களாலும் யாதவசேனையாலும் தானும் தன்சேனையும் வெல்லப்பட்டவனாய் ஓடிப்போயினன்; இங்ஙனம் பதினெட்டுமுறை மீண்டும் வருவது பொருவது தோற்பது ஓடுவதாய்ப் பங்கப்பட்டபின் கோபாவேசமுற்றுப் பலமான பெருஞ்சேனையைத் திரட்டிக்கொண்டு ஒருகால் போருக்கு வந்தான். அச்சமயத்திலேயே, யவன தேசாதிபதியான காலயவனன் பலபராக்கிரமங்களாற் செருக்குக்கொண்டு கிருஷ்ணபலராமர்களையேதான் எதிர்த்தற்கு ஏற்ற பலவான்களென நாரத முனிவரால் அறிந்து சேனையைச் சித்தஞ்செய்துகொண்டு போரின் பொருட்டு மதுரைக்கு வந்தான். அப்பொழுது கண்ணன் ஏக காலத்தில் இருதிறத்தாரோடு பெரும்போர்செய்தால் யாதவ சேனைக்கு நாசமுண்டாகக்கூடுமென்று நினைத்துச் சமுத்திரராசனைப் பன்னிரண்டுயோசனைதூரம் இடம்விடும்படி கேட்டு மேல்கடலிடையே பகைவர் உட்புகவொண்ணாதபடி மிகவும் பாதுகாவலுடையதான துவாரகாநகரத்தை நிருமித்து மதுரையிலிருந்த சனங்களை யெல்லாம் அந்நகரத்திற்கொண்டுசேர்த்துத் தானும் துவாரகைசேர்ந்து அங்கேயே எழுந்தருளியிருந்தன னென்பது வரலாறு. கண்ணன் இங்ஙன் செய்தது, பகைக்குப்பயந்து பங்கப்பட்டதாகவே முடிதலால், சராசந்தனுக்கு அஞ்சிக் கண்ணன் மதுரைவிட்டுத் துவாரகைக்கு ஓடின னென்று ஓரபவாதம் பரவியது.

மது என்னும் அரசனால் முதலிற் சீர்திருத்தி யாளப்பட்டதாலும், கண்ணுக்கு இனியதாயிருத்தலாலும், மதுரா என்று பெயர். இங்குக் குறித்தது, வடமதுரை. த்வாரவதீ என்ற வடசொல், துவராபதி யெனவிகாரப்பட்டது. (துவரை எனவும் திரியும்.) இவையிரண்டும் முத்திதரும் நகரினுட்சேர்ந்தவை. 'போர் வந்தெதிர்த்தால்' என்பதும், 'துவாரகையினில்' என்பதும் பாடம்.

## 44.—இது, பகதத்தனைக் குறித்தது.

பனைக்கைப்பிறைவெண்கோட்டயிரா வதமேபோலும்பகட்டிலிவன்
வினைக்கட்புகுந்தாலெதிர்நின்று வேருரிவனைவெல்கிற்பார்
முனைக்கட்செங்கட்டீயுமிழு முகத்தான்மாதேபகதத்தன்
தனக்குத்தானேநிகரென்னத் தருக்கொடீண்டேயிருக்கின்றான்.

(இ-ள்.) மாதே - அழகியபெண்ணே! தனக்கு தானே நிகர் என்ன - தனக்குத்தானே ஒப்புமை [தனக்கு ஒப்பாவர் யாருமில்லை] என்று எண்ணி, தருக்கொடு - செருக்குடனே, ஈண்டுஏ இருக்கின்றான் - இங்கே இருக்கின்றவன், பகதத்தன்—; முனைக்கண்-போர்க்களத்திலே, செம் கண் தீ உமிழும் - (மிக்க கோபத்தாற்) சிவந்த கண்களினின்றும் நெருப்புப்பொறியைச் சொரிகின்ற,முகத்தான்-முகத்தையுடையவனாகிய, இவன்—, பனை கை -பனைமரம்போன்ற துதிக்கையையும், பிறை வெள் கோடு - பிறைச்சந்திரன் போன்ற

வெண்மையான தந்தங்களையுமுடைய, அயிராவதம்எபோலும் - ஐராவதமென்ற அரசயானையையே ஒத்த, பகட்டில் - யானையின் மேலேறி, வினைக்கண் புகுந்தால் - போர்த்தொழிலிலே பிரவேசித்தால், வேறு எதிர்நின்று இவனை வெல்கிற்பார் ஆர் - இவனுக்குப் பகையாய் இவனெதிரில்நின்றுஇவனைவெல்லவல்லவர்யாவருளர்?

பகதத்தன்-நரகாசுரனதுமகன்; கண்ணன் நரகாசுரனைக்கொன்ற பின் அப்பெருமானால் அவனது பிராக்சோதிஷமென்னும் பட்டணத்தில் இராச்சியபட்டாபிஷேகஞ் செய்யப்பட்டவன். ஒருகாலத்தில் தேவாசுர யுத்தத்தில் தோல்வியடைந்த தேவேந்திரன், இவனைத் துணைவேண்ட, இவன் சென்று பொருது அசுரரை யொழித்து இந்திரனுக்கு அரசாட்சியை நிலைநிறுத்தினன். அக்காலத்தில் நூறுயிரம்யானை பலமுடைய சுப்பிரதீகமென்னும் தெய்வயானை இந்திரனால் இவனுக்கு அளிக்கப்பட்டதென்றும், அதனைப் பதினுயிரம்யானையையொத்தவனாகிய இவன் பட்டத்துயானையாகக்கொண்டு அதன்மேல் ஏறிப் பொருது தவருதுபகைவென்று வந்தனனென்றும் அறிக. இவன், யானைப்போரில் வல்லவன். ஐராவதமென்பது - இந்திரனது பட்டத்துயானை; வெண்ணிறத்தையும் நான்குதந்தங்களையும் உடையது. எட்டுத்திசையானைகளுள் கிழ்திசைக்கு உரியதும் இதுவே. (519)

**45.—இது சல்லியனையும் நீலனையும் சேரசோழபாண்டியரையும் குறித்தது.**

**இவன்சல்லியனென்றுரைசான்ற விகல்வேன்மன்னர்க்கேறனையான்**
**இவன்றன்பகைவர்யாவரையு மிமையோராக்குமெழினீலன்**
**இவன்றண்டமிழ்தேரடல்வழுதி யிவன்றேரிரவிகுலவளவன்**
**இவன்செந்தழலோன்மரபாகி யீரேழுலகும்புகழ்சேரன்.**

(இ-ள்.) இவன்—, சல்லியன் என்று உரை சான்ற - சல்லியனென்றுபேர்பெற்ற, இகல் வேல் மன்னர்க்கு ஏறு அனையான் - வலியவேலாயுதத்தையுடைய அரசர்களுக்குச் சிங்கம்போன்றவன்: இவன்—, தன் பகைவர் யாவரைஉம் இமையோர் ஆக்கும் - தன் பகைவர்களெல்லோரையும் தேவர்களாகச்செய்கின்ற, எழில் நீலன் - அழகையுடைய நீலனென்பவன்; இவன்—, தண் தமிழ் தேர் அடல் வழுதி - இனிய தமிழ்ப்பாஷையை ஆராய்ந்துதேர்ந்த வலிமையையுடைய பாண்டியன்; இவன்—, தேர் இரவி குலம் வளவன் - தேரையுடைய சூரியனது குலத்தில் தோன்றிய சோழன்; இவன்—, செம் தழலோன் மரபு ஆகி ஈர் ஏழ் உலகுஉம் புகழ் சேரன் - சிவந்த அக்கினியினது குலத்தில் தோன்றியவனாய்ப் பதினான்கு உலகத்தாரும் புகழப்பெற்ற சேரன்; (எ-று.)

சல்லியன் - (பகைவர்க்கு) அம்புநுனிபோல் (வருத்தஞ்செய்) பவன்; சல்யம் - அம்புமுனை. இவன் மத்திரநாட்டரசன்; பாண்டு மகாராசனது இரண்டாவது மனைவியாகிய மாத்திரிக்கு உடன் பிறந்தவன். நீலனென்பவன் பிரசித்தரான அரசர்களில் ஒருவனாக முதனூலிலுங் குறிக்கப்பட்டுள்ளான். இவனை மாஹிஷ்மதிநாதனென்று பாலபாரதம்கூறுகிறது. போரிற் புறங்கொடாது

இறந்தவர், உடனே தேவர்களாகி வீரசுவர்க்கம் புகுகின்றன ரென்பது நூல்துணிபாதலால், பகைவர்களைத் தவறாதுகொல்கிற என்ற பொருளில் 'இமையோராக்கும்' என்றார்; இது, பிறிதினவிற்சியணி. பாலபாரதத்தில் தமிழ்மன்னரைக் கூறவில்லை. (520)

**46.—இது, பல அரசர்களைப் பொதுப்படக் குறித்தது.**

வில்லாண்மையினல்வெங்கருப்பு வில்லோன்றனக்கேநிகரென்னப்
பல்லார்புகழும்பான்மையினுற் பதினெண்புவிக்கும்பதியாய
எல்லாவரசுநின்பொருட்டா லீண்டேதிரண்டவின்னமுதச்
சொல்லாய்நல்லாய்மென்பூவாய் தோகாய்பாவாய்திரௌபதியே.

(இ - ள்.) இன் அமுதம் சொல்லாய்-இனிய அமிருதம்போன்ற சொற்களையுடையவளே! நல்லாய் - அழகையும் நற்குணநற்செய்கைகளையுமுடையவளே! மெல் பூவாய்-(இன்குரலாற் பேசுதலில்) மெல்லிய நாகணவாய்ப்புள் போன்றவளே! தோகாய் — (சாயலில்) மயில்போன்றவளே! பாவாய் - (அழகில்) சித்திரப்பதுமையையும் (அருமையில்) கண்மணிப்பாவையையும் (மோகிப்பித்தலில்)கொல்லிப்பாவையையும் போன்றவளே! திரௌபதியே—!வில் ஆண்மையினுல் - விற்கொண்டு போர்செய்யுந் திறத்தினல், வெம் கரும்பு வில்லோன் தனக்கே நிகர் - கொடிய கரும்பு வில்லையுடைய மன்மதனுக்கே ஒப்பு, என்ன-என்று, பல்லார் புகழும் பான்மையினுல் -பலரும் புகழுந் தன்மையோடு, பதினெண் புவிக்கும் பதி ஆய எல்லா அரசுஉம்-பதினெட்டுத்தேசங்களுக்கும் தலைவர்களாகிய எல்லாவரசர்களும், நின்பொருட்டால்—, ஈண்டே திரண்ட-இங்கே வந்து கூடியுள்ளார்; (எ - று.)

எளியகரும்பை வில்லாகக்கொண்டு அதில்மெல்லியமலரம்புகளைத்தொடுத்துஎய்து காமப்போரை நடத்திப் பிரமன்முதல் எறும்புஈறாக எல்லாவுயிர்களையும் தன்வசப்படுத்துதலால், மன்மதன், சிறந்தவில்வீர னெனப்படுவன். கருப்புவில்லோன் றனக்கே, ஏ-உயர்வுசிறப்போடு பிரிநிலை. பதினெட்டுத்தேசங்கள் திரவிடம், சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம்,குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம்,வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், குசலம் என்பன; பிறவாறும் உரைத்தல் உண்டு. புவி - வடசொல்; இது அந்தப்பாஷையில் ஏழாம்வேற்றுமைவிரியாயினும் தமிழில்பெயர்மாத்திரமாய்நிற்கும்.

**47.—'இவர்களுள் இலக்குஎய்பவன் உனக்கு உரியான்' எனல்.**

இவரிற் றனது தோள்வலியா லரியே றென்ன வெழுந்திருந்தத்
தவரிற் புரிநா ணுறவேற்றித் தழல்கான் முனைவெஞ் சாயகத்தால்
பவரிற் செறிய நிரைத்துருளும் பல்வாய்த் திகிரிப் பயிலிலக்கைக்
கவரிற் செழுந்தார் புனைந்தவனைக் கைக்கொண் டிடுநீ கடிதென்றார்.

(இ - ள்.) இவரில் - இந்த அரசர்களுள், (எவனாயினும்), அரி ஏறு என்ன எழுந்திருந்து - ஆண்சிங்கம்போல எழுந்து, தனது தோள் வலியால் - தன்னுடைய புஜபலத்தால், அ தவரில் - அந்த வில்லில், புரி நாண் உற ஏற்றி-நாணிக்கயிற்றைப் பொருந்தப்

பூட்டி, தழல் கால் முனை வெம் சாயகத்தால் - நெருப்பைச் சொரிகிற நுனியையுடைய கொடிய அம்பினால்,பவரின்செறிய நிரைத்து உருளும் பல் வாய் திகிரி பயில் இலக்கை - ஆர்களால் நெருங்க நிரைக்கப்பட்டு உருளுகின்ற பலநுனிகளையுடைய யந்திரசக்கரத்திற் பொருந்திய இலட்சியத்தை, கவரின் - எய்துதள்ளினால், செழு தார் புனைந்து - செழிப்பான மணமாலையை (அவனுக்கு)ச் சூட்டி, அவனை நீ கடிது கைக்கொண்டிடு - அவனை நீ விரைந்து (கணவனாகக்) கைக்கொள்வாய், என்றார்-என்று (செவிலித்தாயர்) சொன்னார்கள்; (எ - று.) (523)

வேறு.

## 48.—சில அரசர்கள் சோர்வுறச் சிலஅரசர்கள் ஊக்கங்கொண்டுஎழுதல்.

முத்தநகைப் பவளவிதழ்க் குளிர்வெண் டிங்கள் முகத்தாளைக் கைத்தாயர் மொழிந்தகாலைச், சித்திரமொத் துணர்வழிந்து தந்தம்பைம்பொற்றிகழரியாசனத் திருந்தார்சிற்சில்வேந்தர், அத்தநுவின்பெருமையையு மிலக்கத்துள்ள வருமையையுங் கருதாம லாண்மைகூறி, எத்தனையெத் தனைவேந்தராசைகூர யான்யானென் றெழுந்திருந்தார் யானைபோல்வார்.

(இ - ள்.) முத்தம் நகை - முத்துப்போன்ற பற்களையும், பவளம் இதழ் - பவழம்போன்ற வாயிதழையும், குளிர் வெள் திங்கள் முகத்தாளை - குளிர்ந்த வெண்ணிறமான பூர்ணசந்திரன் போன்ற முகத்தையுமுடைய திரௌபதியைநோக்கி,கைத்தாயர்-செவிலித்தாய்மார், மொழிந்த காலை - (இவ்வாறு) சொன்னபொழுது,— சிற் சில் வேந்தர் - (அந்தச்சுயம்வரசபையிலிருந்த) சில சில அரசர்கள், (அவ்வில்லின் வலிமையையும் இலக்கின் அருமையையும் ஆலோசித்து), உணர்வு அழிந்து - அறிவுஒடுங்கி, சித்திரம் ஒத்து - சித்திரப்பதுமை போன்றவர்களாய்[செயலற்று],தம் தம் பைம் பொன் திகழ் அரி ஆசனத்து இருந்தார் - பசும்பொன்னாற் செய்யப்பட்டு விளங்குகிற தங்கள் தங்கள் சிங்காசனங்களில் இருந்தபடியே இருந்தார்கள்;(இதுநிற்க);யானைபோல்வார்-யானை போலக் கொழுத்தவர்களாகிய,எத்தனை எத்தனைவேந்தர்-எத்தனை எத்தனை அரசர்கள், ஆசை கூர - (திரௌபதியின்மேல்) ஆசை மிகுதலால், அ தனுவின் பெருமையைஉம் இலக்கத்து உள்ள அருமையைஉம் கருதாமல் - அந்த வில்லின் பெருமையையும்அக்குறியிலுள்ள எய்தலில் அருமையையும்ஆலோசியாமல்,ஆண்மை கூறி - வீரவார்த்தை சொல்லிக்கொண்டு, யான் யான் என்று எழுந்திருந்தார் - யான் யான் என்று சொல்லி ஒருவர்முன்ஒருவர் எழுந்திருந்தார்கள்! [மிகப்பலர் எழுந்தனர்]; (எ - று.)

மதயானை களிப்புமிகுதியால் செய்வது தவிர்வது அறியாது அடக்கமின்றி ஒன்றைச் செய்யத்தொடங்கி அழிவதுபோல,இவர்களும் வேட்கை விஞ்சுதலால் ஆலோசியாமல் துணிந்தெழுந்து விற்றிறங்காட்டத்தொடங்கிப் பங்கப்படுதலால், 'யானைபோல்வார்' எனப்பட்டார்.

இதுமுதற் பதினைந்து கவிகள்-பெரும்பாலும் ஒன்றுஇரண்டு ஐந்து ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றையநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எண்சீராசிரியவிருத்தங்கள்.

### 49.—கண்ணன் பலராமனுடன்சொல்லித்தன்குலத்தாரைத்தடுத்தல்.

**தநுவெடுத்து நாண்பிணிப்பான்கிளராநின்றதன்குலத்திலவனிபரைத்தடுத்து வேதப், பனுவலுக்குந்தவத்திநுக்குமுரியவேள்விப் பார்ப்பனமாக்களினிடையே பாண்டுமைந்தர், அநுவுருக்கொண்டுருமாறியிருந்ததன்மையறிந்தருளியலாயுதனோ டருளிச்செய்தான், மனுமுறைக்குவரம்பாகிவருத்தம்வீட மாநிலமீதவதரித்தவாசு தேவன்.**

(இ - ள்.) மனு முறைக்கு வரம்பு ஆகி - மனுதர்மசாஸ்திரத்திற் கூறப்பட்ட நீதிநெறிக்கு எல்லையாகி, மா நிலம்மீது - பெரிய பூமியின்மேல், வருத்தம் வீட-(அப்பூமிதேவியின்) துன்பம் நீங்க, அவதரித்த-தோன்றியருளிய, வாசுதேவன்-வசுதேவகுமாரனை கண்ணபிரான்,—வேதம் பனுவலுக்கும் தவத்திநுக்கும் உரிய-வேதங்களாகிய நூல்களுக்கும் தவத்துக்கும்உரிய,வேள்வி-யாகங்களையுடைய, பார்ப்பன மாக்களின் இடையே - அந்தணர்களின் நடுவே, பாண்டு மைந்தர் - பாண்டவர்கள், அநு உரு கொண்டு-(அந்த அந்தணர்களுக்கு)ஒத்த உருவத்தைக்கொண்டு, உரு மாறி இருந்த தன்மை - தம்வடிவம்மாறி வீற்றிருந்த தன்மையை, அறிந்து அருளி—,தநு எடுத்து நாண் பிணிப்பான் கிளராநின்ற தன் குலத்தில் அவனிபரை தடுத்து - வில்லையெடுத்து நாணியைப்பூட்டுதற்கு ஊக்கங்கொண்டெழுகிற தனது (யது) குலத்து அரசர்களை (நீங்கள் எழவேண்டாவென்று)தடுத்து,அலாயுதனோடுஅருளிச்செய்தான்-(பாண்டவர்கள்மாறுவேடங்கொண்டு வந்திருக்கிற தன்மையைப்) பலராமனுடன் கூறினான்; (எ - று.)

கூறுதலென்ற பொருளில் அருளிச்செய்தல் என்றல், ஒரு வகை மரபு. துஷ்டர்கள் மிக்கதனால் உண்டான பூமிபாரத்தை நிவிருத்திசெய்யும்பொருட்டும், அவர்களால் உலகத்தில் வரம்பழிந்த தருமத்தை நிலைநிறுத்தற்பொருட்டும், திருமால்வசுதேவ குமாரனாய்க் கண்ணனாகத் திருவவதரித்தானாதலறிக. அநுரூபம்என்றவடமொழி, அநுவுரு எனச் சிதைந்துவந்தது; ஒத்த வடிவமென்பது பொருள். ஹலாயுதன் - கலப்பையை ஆயுதமாகவுடையவன். (524)

### 50.—பலஅரசர்கள் விற்றிறங்காட்டமுயன்று மாட்டாதொழிதலை, இது முதல் நான்குகவிகளிற் கூறுகிறார்.

**பலருமுடனகங்கரித்துமேருசாரப்பாரவரிசிலையினிலைபார்த்துமீண்டார், பலருமொருகையிற்பிடிக்கவடங்காவில்லின் பருமைதனைக்குறித்துமனம் பதைக்கப்போனார், பலருமலர்க்கைப்படுத்திப்பெயர்க்கமாட்டார் பணைத்தோளுநெந்தமையுமெனப்பயந்துநின்றார், பலருமெடுத்தனிமணிநாண்பூட்டவாராப் பரிசோடுமற்றதன்வலிமைபகர்ந்தேவிட்டார்.**

(இ - ள்.) பலர்உம் - பல அரசர்கள், உடன் - ஒருசேர, அகங்கரித்து - செருக்குக்கொண்டு, (அருகில் வந்து), மேரு சார் பாரம் வரி அ சிலையின் நிலை பார்த்து மீண்டார்-மகாமேருகிரியையொத்த பாரமான கட்டமைந்த அந்தவில்லின் தன்மையைப் பார்த்து (அஞ்சி)த்திரும்பினார்கள்; பலரும் - பல அரசர்கள், ஒரு கையின்

பிடிக்கு அடங்கா வில்லின் பருமைதனை குறித்து-ஒரு கையினாற் பிடித்தற்கு அடங்காத அவ்வில்லின் பருத்ததன்மையைக்கருதி, மனம் பதைக்க போனார் - (தம்தம்) மனம் திடுக்கிடத் திரும்பிப் போய்விட்டார்கள்; பலரும் - பல அரசர்கள், மலர் கை படுத்தி - தாமரைமலர்போன்ற (தம்) கைகளாற் பிடித்து, பெயர்க்க மாட்டார்-அசைக்கவும் மாட்டாதவர்களாய், பணை தோள் நொந்து - பருத்த தோள்கள் நோவப்பெற்று, அமையும் என பயந்து நின்றார் - இதுபோதுமென்று அஞ்சி நின்றார்கள்; பலரும் - பல அரசர்கள், எடுத்து - (அவ்வில்லைக் கையாற் பிடித்து) நிலைபெயரச் செய்து, (அவ்வளவிலே), அணி மணி நாண் பூட்டவாரா பரிசொடு அதன் வலிமை பகர்ந்தே - அழகிய உறுதியான நாணியைப்பூட்ட(த் தம்மால்) இயலாத தன்மையையும் அவ்வில்லின் வலிமையையுஞ் சொல்லிக்கொண்டே, விட்டார் - (அம்முயற்சியைக்) கைவிட்டார்கள்; (எ - று.)—மற்று - அசை; வினைமாற்றுமாம்.

இதுமுதல் நான்கு கவிகளில், மேன்மேலுயர்ச்சியணி தோன்ற ஒன்றன்மேலொன்று உயர்த்திச்சொல்லிக்கொண்டு செல்கின்றனராதலால், அதற்குஇணங்க, 'எடுத்து'என்பதற்கு-நிலைபெயர்த்து என்று உரைத்து, அதனை 'பகர்ந்து' என்பதனோடு இயைக்க. இச்செய்யுளின் முதலடியிற்கூறியவர், செருக்கிச்சென்று அந்த வில்லின் நிலைமையைப் பார்த்தமாத்திரத்தோடுமீண்டவர்; இரண்டாமடியிற் கூறியவர், பார்த்துக் கையிற்பிடிக்கக்கருதி அதன் கைக்கடங்காப்பருமையைக்குறித்து மனம்வருந்தி மீண்டவர்; மூன்றாமடியிற் கூறியவர், கைகளாற்பிடித்து அதனை நிலைபெயர்க்க மாட்டாமல் தோள்நொந்து அஞ்சி மீண்டவர்; நான்காமடியிற் கூறியவர், கைகளாற்பிடித்து நிலைபெயர்த்துப் பின்பு யாதொன்றுஞ் செய்யமாட்டாமையால் தமதுவலிமையின்மையையும்அதன் வலிமையையுங் கூறிக்கொண்டே கைவிட்டவர் எனக்காண்க. ()

**51.** **வல்லியம்போனடந்துதனுவிருகையாலும் வாரியெடுத்தெதிர்நிறுத்தி மல்லல் வாகுச், சல்லியனுநாணேற்றமுடியாதந்தத் தனுவுடனேதன்றனுவுந்தகரவீழ்ந் தான், வில்லியரின்முன்னெண்ணத்தக்கவின்மை வேந்தடுபோர்ப்பகதத்தன்வில் வேதத்தில், சொல்லியவாறெடுத்தூன்றிமற்றைக்கையாற் றெல்வலிநாணியுமெடுத் துத்தோளுஞ்சோர்ந்தான்.**

(இ - ள்.) மல்லல் - வலிமையைக்கொண்ட, வாகு-தோள்களையுடைய, சல்லியனும்—, வல்லியம் போல் நடந்து-புலிபோல (வலிமையோடு) சென்று, தனு-வில்லை, இருகையால்உம் வாரி எடுத்து எதிர் நிறுத்தி - இரண்டுகைகளாலும் வாரியெடுத்து (த் தன்) எதிரிலே நிற்கச்செய்து, (அதன்மேல்), நாண் ஏற்ற முடியாது - நாணியைப்பூட்ட முடியாமல்,அந்த தனுவுடனே-அவ்வில்லுடனே, தன் தனுஉம் தகர வீழ்ந்தான் - தனது உடம்பு நொருங்கக் கீழ் வீழ்ந்திட்டான்; வில்லியரில் முன் எண்ணத்தக்க வின்மை - வில் வீரர்களுள் முதலில்வைத்து எண்ணத்தக்க வில்லின்திறமையையும்,வேந்து அடு போர்-அரசர்களை அழிக்கின்ற போரையுமுடைய, பகதத்தன் —, வில் வேதத்தில் சொல்லிய ஆறு எடுத்துஊன்றி-தனுர்வேதத்திற் சொல்லியுள்ளபடி ஒருகையால் (வில்லை)எடுத்து

நிறுத்தி, மற்றைகையால் தொல்வலி நாணிஉம் எடுத்து - மற்றொருகையினால்முதிர்ந்தவலிமையையுடைய நாணியையும்எடுத்து, தோள்உம் சோர்ந்தான் -(அவ்வளவில்)கைசோர்ந்து விட்டிட்டான்.

சல்லியன் தன்வலிமையைக்கொண்டு இரண்டுகைகளாலும் அவ்வில்லைத் தழுவியெடுத்து எதிர்நிறுத்தியிட்டனனாயினும் அதன்பின் ஒருகையில் விற்பிடித்து மற்றொருகையால் நாணியை எடுத்து ஏற்ற இயலாமல் அதற்கு உரிய முயற்சி செய்தவளவிலே வில்லோடு வீழ்தலால் தன் உடம்பு நன்கு நொருங்கும்படி சாய்ந்திட்டானென்றும், பின்பு பகதந்தன் ஒருகையால் வில்லையெடுத்து நிறுத்தி மற்றொருகையால் நாணியையும் எடுத்து அவ்வளவில் தோள்சோர்ந்தான் என்றும் மேன்மேலுயர்ச்சியணி காண்க. தனுர்வேதமாவது - ஆயுதங்களிற்பயிலும்வகைகளையும், பகை வெல்லுதற்கு உரிய மந்திரம் முதலியவற்றின் பிரயோகங்களையும் தெரிவிக்கிற சாஸ்திரம். தனு - வில்என்ற பொருளில் தநுஸ் என்ற வடசொல்லின் விகாரமும், உடம்பைக்குறிக்கும்போது தநு என்ற வடசொல்லின் விகாரமுமாம். 'வேந்தடுபோர்ச்சராசந்தன்' என்ற பாடம் பொருந்தாது, அடுத்தசெய்யுளில் 'மாகதன்' எனப்படுபவன் சராசந்தனாதலால். தனுவும், உம்மை - அசைநிலை: உயர்வுசிறப்புமாம்: எச்சவும்மையாக,வில்லுந்தகரஎன உரைத்தலாகாது: தனுவுடனே வீழந்தானென இயையும். (526)

**52.** பூகதனாகியவன்றேபகைவரெல்லாம் போற்றவளர்ந்துலகாளப் புனைந்தமௌலி, மாகதனும்வில்லெடுத்துவரிநாண்வில்லின் மார்பளவும் போக்கினன்வன்போர்நீலன், சாகதனென்றவைதுதிக்கநெடுநாண்கொற்றத்தனுவொருசாணெனக் கோணர்ந்தான்சாணேயல்ல, வேகதனுநால்விரலென்றுரைக்கநாணி வீக்கினன் வலம்புரித்தார்வேந்தர்வேந்தே.

(இ - ள்.) பூ கதன் ஆகிய அன்றுஏ-பூமியைஅடைந்தவனான அப்பொழுதே [பிறந்தபொழுதே தொடங்கி என்றபடி], பகைவர் எல்லாம் போற்ற-பகைவர்களெல்லோரும் கீழ்ப்படிந்துவணங்கித் துதிக்கும்படி, வளர்ந்து—, உலகு ஆள - உலகத்தை அரசாளுமாறு, புனைந்த-அணிந்த, மௌலி - கிரீடத்தையுடைய, மாகதன் உம்-மகததேசத்து அரசனான சராசந்தனும், வில்எடுத்து -(ஒருகையால்)வில்லையெடுத்துநிறுத்தி, (மற்றொருகையால்),வரி நாண்-நீண்ட நாணியை, வில்லின் மார்பு அளவுஉம் போக்கினன் - அவ்வில்லின் நாணிபூட்டுங் கோடியின் ஒருமார்புதூரம்வரையிலும் கொண்டுபோய் அதற்குமேல் இயலாதவனானான்; வல்போர் நீலன்-வலிய போரையுடைய நீலனென்னும் அரசன், சாகதன் என்று அவை துதிக்க - அருஞ்செயல்செய்பவனென்று சபையிலுள்ளோர் தன்னைக் கொண்டாடும்படி, நெடு நாண் - நீண்டநாணியை, கொற்றம் தனு ஒரு சாண் என கொணர்ந்தான் - வெற்றியையுடைய அவ்விற்கோடி ஒருசாண்தூரத்திலுள்ளதென்ற அளவும் கொண்டுபோய் அதற்குமேல் இயலாதவனானான்; வலம்புரி தார் வேந்தர் வேந்து-நஞ்சாவட்டைப் பூமாலையையணிந்த அரசர்க்கரசனாகிய துரியோதனன், வேகம் தனு - உக்கிரமான அவ்வில்லின்

கோடி, சாணே அல்ல - ஒருசாணளவுதூரமுமில்லை, நால் விரல் - நாலுவிரல்தூரமே யுள்ளது, என்று உரைக்க - என்று சொல்லும ளவும், நாணி விக்கிளுன் - நாணியைக் கொண்டுபோய் அதற்கு மேல் இயலாதவளுனுன்; (எ - று.)

சராசந்தனது நாடு-மகதமும், நகரம்-கிரிவிரசமும்;மேல் சபாபருவத்தில்''கிரிவிரசநக ரெய்திக்கிரித்தடந்தோள் மகதேசன்இளருங் கோயில்'' என்பதனுலும் உணர்க. சாகதன் = ஸாஹஸன்: ஸாஹஸத்தையுடையவன்: ஸாஹஸம்-துணிச்சலான அருஞ்செயல். ()

**53.** **கலைவருந்தமறக்கற்றகன்னனென்னுங் கழற்காளையரனிருந்தகயிலையென்னும், மலைவருத்தமறவெடுத்தநிருதனென்னமன்னவையின்வலியுடனே வந்து தோன்றி, நிலைவருந்தமறநின்றுபரியகோலநீள்வரிநாண்மயிர்க்கிடைக்கீழ் நின்ற தென்னச், சிலைவருத்தமறவளைத்துவளைந்தவண்ணச் சிலைக்காறன் முடித்தலையைச்சிந்தவிழ்ந்தான்.**

(இ - ள்.) கலை-நூல்களை, வருத்தம் அற கற்ற-வருத்தமில்லாமல் கற்றறிந்த, கன்னன் என்னும் - கர்ணனென்கிற, கழல் காளை-வீரக்கழலையுடைய இளவீரன்,—அரன் இருந்த-சிவபிரான் வீற்றிருக்கிற, கயிலை என்னும் மலை - கைலாசமென்னும் மலையை, வருத்தம் அற எடுத்த - வருத்தமில்லாமல் [எளிதில்] பெயர்த்தெடுத்த, நிருதன் என்ன-அரக்கனுகிய இராவணன் போல, மன் அவையின் வலியுடனே வந்து தோன்றி - இராசசபையினின்று வலிமையோடு எழுந்து முன்வந்து, நிலை வருத்தம் அற நின்று - (வில்வீரர்க்குஉரிய) நிலையிலே வருத்தமில்லாமல் நிலைநின்று,பரிய கோலம் நீள் வரி நாண்-பருத்த அழகையுடைய நீண்டமுறுக்குள்ள நாணி, மயிர்க்கிடை கீழ் நின்றது என்ன-ஒருமயிரினளவுதூரத்தின் கீழ் நின்றதென்றுசொல்ல, (அதுவரையிலும்), சிலை வருத்தம் அற வளைத்து - வில்லை வருத்தமில்லாமல் (எளிதில்) வளைத்து நின்று, (அவ்வளவிலே), வளைந்த வண்ணம் சிலை கால் தன் முடி தலையை சிந்த-வளைத்த அழகிய அவ்வில்லின் கால் (நிமிர்ந்து) தனது கிரீடமணிந்த தலையைத் தாக்க, விழ்ந்தான்—; (எ - று.)

கர்ணன் அவ்வில்லை எளிதில் எடுத்துவளைத்து நாணேற்றி விரைவாக அம்பைத்தொடுத்து எய்யச் சித்தனுனவளவில் திரௌபதி உரத்தகுரலோடு 'நான் பாகன்மகனை விவாகஞ்செய்துகொள்ளேன்'என்று மறுத்துக் கூறவே,அவன் உடனே வருத்தத்தோடு வில்லை எறிந்துவிட்டு மீண்டனனென முதனூல் கூறும். ''சாபம் மஹாந்தம் தபஸ்யஸூநௌ-அதிஜ்யமாதந்வதி ரோமமாத்ரே | ஸ தம் விசிக்ஷேப'' என்றது, பாலபாரதம். நிருதன்-நிருருதியென்னுந் திக்பாலகியினது மரபினன். மகாபலசாலியான கர்ணனுக்கு ராக்ஷசராசனுன இராவணனும், இவன் எளிதாக எடுத்த பருத்த பாரமான வில்லுக்கு அவன் எளிதில் எடுத்த பெரிய கைலாசகிரியும் உவமை. இராவணன் தனது பலத்தால் அலட்சியமாகக் கைலாசத்தைப்பெயர்த்து எடுத்தபொழுது உடனேபங்கப்பட்டமை போல,இவனும் அலட்சியமாக வில்லையெடுத்து வளைத்தபொழுது உடனே பங்கப்படுதலால், உவமை ஏற்கும். நிலை - அம்புஎய்வார்

நிற்றற்குஉரிய நிலை: அது பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரதியாலீடம் என நான்கு. இவற்றுள், ஒருகால்நின்று ஒருகால்முடக்கல்-பைசாசநிலை; இருகாலும் பக்கல்வளைய மண்டலித்தல் - மண்டலநிலை; வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறல்-ஆலீடநிலை; வலக்கால்முந்துற்று இடக்கால்மண்டலித்தல்-பிரதியாலீடநிலை.

### 54.—அந்தணவடிவங்கொண்டிருந்த அருச்சுனன் எழுந்துபேசலுறல்.

அரவநெடுங்கொடியுயர்த்தோன்முதலாவுள்ள வனைவருமங்கொருதனுவுக்காற்ருராகி, உரவுமெலிந்தெழின்மாழ்கிச்செயல்வேறின்றியுள்ளமழிந்திருந்தநற்பினுரு மேறென்னக், கரவுடனந்தணர்நாப்பணிருந்தகொற்றக் கருமுகில்வாகனன்புதல்வன்கரியமேனி, இரவிகுலச்சிறுவனைப்போலெழுந்துமன்றலிளங்கொடிதம்முனை நோக்கியியம்பினுனே.

(இ-ள்.) அரவம் நெடு கொடி உயர்த்தோன் முதல் ஆ உள்ள அனைவர்உம் - பாம்பின்வடிவமெழுதிய நீண்டகொடியை உயர நாட்டிய துரியோதனன் முதலாக அங்குஉள்ள அரசர்கள் எல்லோரும், அங்கு-அவ்வாறு, ஒரு தனுவுக்கு ஆற்றுர் ஆகி - ஒப்பற்ற அவ்வில்லில் திறங்காட்டமாட்டாதவர்களாய், உரவு மெலிந்து - வலிமை குன்றி, எழில் மாழ்கி-மனவெழுச்சி சோர்ந்து, செயல் வேறு இன்றி - ஒன்றுஞ்செய்யமாட்டாமல், உள்ளம் அழிந்து இருந்ததன் பின்-மனமழிந்து இருந்தபின்பு,—அந்தணர் நாப்பண்-பிராமணர்களுக்கு நடுவிலே, கரவுடன் இருந்த - மறைந்தவடிவத்தோடு வீற்றிருந்த, கொற்றம் - வெற்றியையுடைய, கரு முகில் வாகனன் புதல்வன்-கருநிறமுள்ள மேகத்தை வாகனமாகவுடைய இந்திரனது குமாரனுகிய அருச்சுனன்,—இரவி குலம் கரிய மேனி சிறுவனை போல் எழுந்து-சூரியகுலத்தில் திருவவதரித்த கரிய திருமேனியையுடைய இராசகுமாரனுன இராமபிரான்போலஎழுந்து நின்று, மன்றல் இள கொடி தம்முனை நோக்கி - விவாகத்துக்கு உரிய இளமையான பூங்கொடிபோன்ற திரௌபதியினது தமையனை திட்டத்துய்மனைப் பார்த்து, உரும் ஏறு என்ன இயம்பினுன்-சிறந்த இடிபோலக் கம்பீரமான உரத்தகுரலோடு ஒன்று சொல்வானுனன்; (எ - று.)—அவ்வார்த்தையை, அடுத்த கவியிற் காண்க.

மன்றல் என்பதற்கு - நறுமணமென்றும் பொருள்கொள்ளலாம்; அது-உபமானமாகியபூங்கொடிக்கும், உபமேயமாகிய திரௌபதிக்கும் ஏற்கும்: திரௌபதி உத்தமஸ்திரீசாதிலக்ஷணமான நறுமணத்தைத்தன்உடம்பில் மிகுதியாகவுடையளாயிருந்தனளென்று பலவிடத்தும் முதனூல் கூறும். (529)

### 55.—அருச்சுனன் திட்டத்துய்மனிடம்அநுமதிபெற்றுவில்லையெடுத்தல்.

மன்மரபிற்பிறந்ததிருதோள்வலியாலிந்த மன்னுளுமவர்க்கன்றிமறைநூல் வாணர், தொன்மரபிற்பிறந்தவருமிலக்குவிழ்த்தாற் சூட்டுமோதொடையயளிந்தோகையென்னத், தன்மரபுக்கணிதிலகமானவீரன்றகவன்றோமன்றலுக்குத்தாழ்வோவென்முன், விண்மரபிற்சிறந்தநெடுவில்லையீசன் மேருகிரியெடுத்ததேனவிரைவிற்கொண்டான்.

(இ - ள்.) 'மன் மரபில் பிறந்து - க்ஷத்திரியசாதியிலே பிறந்து, இரு தோள் வலியால் இந்த மண் ஆளும் அவர்க்கு அன்றி-(தங்கள் தோள்களிரண்டின் வலிமையினால் இந்தப்பூமியை ஆளுகிறஅரசர்களுக்கே யல்லாமல், மறை நூல் வாணர் தொல் மரபில் பிறந்தவர் உம் இலக்கு வீழ்த்தால் - வேதங்களாகிய நூல்களுக்கு உரிமை பூண்ட அந்தணர்களுடைய தொன்றுதொட்டுவருகிற சாதியிலே தோன்றியவர்களும் குறித்த இலக்கைஎய்துவிழுத்தினால்,(அவர்க்கும்),இள தோகை-இளமையானமயில்போன்றசாயலுள்ள திரௌபதி, தொடையல் சூட்டும்ஓ - சுயம்வரமாலையைச் சூட்டுவளோ?' என்ன-என்று (அருச்சுனன்) வினவ,—தன் மரபுக்கு அணி திலகம் ஆன வீரன்-தான்பிறந்தசோமககுலத்துக்கு அழகிய திலகம்போல மேன்மைவிளைப்பவனான வீரனாகிய திட்டத்துய்மன், 'மன்றலுக்கு தாழ்வுஓ - (அது) விவாகத்துக்குக் குறைவோ? தகவு அன்றுஓ - (அது) பெருமையன்றோ?' என்றான் - என்று சொன்னான்;(உடனே அருச்சுனன்), வில் மரபில் சிறந்த நெடு வில்லை - வில்லின் இனங்களுட் சிறந்த நீண்ட அவ்வில்லை, ஈசன் மேருகிரி எடுத்தது என-சிவபிரான் மகாமேருமலையாகிய வில்லைஎடுத்ததுபோல,விரைவில் கொண்டான் - விரைவில் எடுத்தான்; (எ - று.)

அந்தணன் இராசகன்னிகையை மணத்தல் அப்பெண்ணின் குலத்தார்க்குப் பெருமையாகுமே யன்றி இழிவாகா தென்று சொல்லித் திட்டத்துய்மன் அருச்சுனனதுகொள்கையைமகிழ்ச்சியோடு அங்கீகரித்தன னென்க. ஈசன் மேருகிரி யெடுத்தது, திரிபுரசங்காரகாலத்தில். (530)

## 56.—அருச்சுனன் இலக்கைஎய்ய, முனிவரும் தேவரும் மகிழ்தல்.

**கிளர்மகுடவயவேந்தர்நாண்களெல்லாங் கீழாகத்தனிநெடுநாண்கிளரவேற்றித், தளர்வறுசாயகந்தொடுத்துக்கற்றோர்யாருந் தனுநூலுக்காசிரியன்றானே யென்ன, உளர்திகிரிச்சுழலிலக்கையவையோர்தங்க ளூக்கமுடன் விழவெய்தானுரவுத்தோளான், வளருமருந்தவவேள்விமுனிவரார்த்தார் வாசநறுமலர்சொரிந்து வானோரார்த்தார்.**

(இ - ள்.) உரவு தோளான் - வலிமையையுடைய தோள்களையுடையவனான அருச்சுனன்,—கிளர் மகுடம் வய வேந்தர் நாண்கள் எல்லாம் கீழ் ஆக தனி நெடு நாண் கிளர ஏற்றி-விளங்குகிற கிரீடத்தை யணிந்த வலிமையையுடைய அரசர்களின் நாண்களெல்லாம் கீழ்ப்பட ஒப்பற்றநீண்டநாணியைமேலாம்படி உயரப்பூட்டி, தளர்வு அறு சாயகம் தொடுத்து-தளர்ச்சியில்லாத[மிகவலிய]அம்பைத்தொடுத்து, கற்றோர்யார்உம் தனு நூலுக்கு ஆசிரியன் தான் ஏ என்ன-படித்தவர்களெல்லோரும் 'வில்வித்தைக்கு ஆசாரியன் இவனே'என்று(தன்னைக்குறித்துக்கூறிக்)கொண்டாடும்படி,உளர் திகிரி சுழல் இலக்கை அவையோர் தங்கள் ஊக்கமுடன் விழ எய்தான்-சுழலுகிறயந்திரசக்கரத்திற் பொருந்திச் சுழல்கிறஇலக்கை அச்சபையிலுள்ள அரசர்களுடைய உற்சாகத்தோடு கீழ்விழும்படி அடித்துத்தள்ளினான்; (அதுகண்டு), வளரும் அரு தவம் வேள்வி முனிவர் ஆர்த்தார் - (மேன்மேல்) வளர்கிற அரிய தவத்தையும்

யாகத்தையு முடைய அந்தணர்கள் (மகிழ்ந்து) ஆரவாரித்தார்கள்: வானோர் - தேவர்களும், வாசம் நறு மலர் சொரிந்து-பரிமளமுள்ள நல்ல பூக்களை மேற்சொரிந்து, ஆர்த்தார்—; (எ-று.)—'தழல் வேள்வி' எனவும் பாடம்.

இலக்கைத் தங்கள் சாதியானொருவன் எய்துவீழ்த்திப் பெருமையுற்றனனென்று கருதியதனால், அந்தணர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தார்கள். நிலவுலகத்தில் விசேஷமான செய்கைகள் நடக்கும்போது அவற்றை மேலிருந்துகாணுதலும் மலர்மாரிசொரிதலும், தேவர்களியல்பு. இரட்டுறமொழிதல் என்னும் உத்தியால் முதலடிக்கு - கீழ் அரசர்கள் விற்கோடியை யெட்ட நாணியைக் கொண்டுசென்ற மார்பளவு சாணளவு விரலளவு மயிரளவுஎன்னும் எல்லைகளெல்லாம் கீழ்ப்பட அவற்றின்மேல் உரிய இடத்தில்தான் நாணியைப்பூட்டியென்றும், அவ்வரசர்களுடைய நாணங்கள் இழிவு பெற [அவர்கட்கு மானபங்க முண்டாம்படி] தான் நாண் பூட்டி யென்றும் கருத்துக்கொள்க. அரசர்களால் எய்துவிழுத்த முடியாத இலக்கை இவன் எய்து வீழ்த்துமளவிலே அவர்களுடைய மனவெழுச்சி ஒழிதலால், 'இலக்கை யவையோர் தங்களுக்கமுடன் விழவெய்தான்' என்றார்; இது, புணர்நிலையணி. 'ஆர்த்தார்' என்ற சொல் ஒருபொருளிலேயே மீண்டுவந்தது, சொற்பொருட்பின் வருநிலையணி. (531)

## 57.—திரௌபதி அருச்சுனனுக்கு மணமாலை சூட்டுதல்.

தாஞ்சாரற்கரியதனுவளைத்தானென்று தரணிபர்தம்முகங்கருகத்தனுவினோடும்,பூஞ்சாரன்மணிநீலகிரிபோனின்ற பூசுரனையிவனவனேபோன்மென்றெண்ணிப், பாஞ்சாலர்பதிகன்னியிருதன்செங்கட் பங்கயத்தாற்பாங்காகப்பரிந்துநோக்கித், தேஞ்சாரநறுங்கழுநீர்ச்செய்யதாமஞ் செம்மணிகாலருவியெனச்சேர்த்தினளே.

(இ - ள்.) 'தாம் சார்தற்கு அரிய - தாங்கள் அருகிற்செல்லுதற்கு அருமையான, தனு - வில்லை, வளைத்தான்-(இவன்) வளைத்திட்டான்,' என்று - என்ற காரணத்தால், தரணிபர் தம் முகம் கருக - அரசர்கள் தங்கள்முகம் கருகிவாட, தனுவினோடு உம் - (கையிற்பிடித்த) வில்லுடனே, பூ சாரல் மணி நீலகிரி போல்நின்ற- பொலிவுள்ள சாரல்களையுடைய அழகிய நீலமலைபோல நின்ற, பூசுரனை - அந்த அந்தணனை, பாஞ்சாலர்பதி கன்னி - பாஞ்சால தேசத்தார்க்குஅரசனாகிய துருபதனுடைய பெண்ணான திரௌபதி, இவன் அவன்ஏ போன்ம் என்று எண்ணி-'இவன் அந்த அருச்சுனனேயாவன்' என்று நினைத்து, இரு தன் செம் கண் பங்கயத்தால் பாங்கு ஆக பரிந்து நோக்கி - தாமரைமலர்போன்ற சிவந்த தனது இரண்டு கண்களாலும் நன்றாக அன்புகொண்டு பார்த்து, தேம் சாரம் நறு கழுநீர் செய்ய தாமம்-இனிய தேனையுடைய வாசனை வீசுகிற செங்கழுநீர் மலர்களால் தொடுக்கப்பட்ட சிவந்த மாலையை, செம்மணி கால் அருவி என - சிவந்த மணிகளைக் கொழித்துக்கொண்டுவருகிற மலையருவிபோலத்தோன்ற,சேர்த்தினாள்-(அவன் மார்பில்) இட்டாள்; (எ - று.)

மாலைக்கு அருவியை உவமைகூறியதற்கு ஏற்ப, தோளையும் மார்பையும் மலையெனக்கொள்க. 'நீலகிரிபோல்நின்ற பூசுரன்' என்றதுங் காண்க. இவன் நின்ற நிலையைக் காண்கையிலேயே அரசர்கள் முகம் கருகுதலை இவனது மேனியின் நீலநிறம் மேல்விழுதலாற் கருகுவதுபோலுமென்ற கற்பனை தொனிக்க, 'தரணிபர்தம் முகம்கருக நீலகிரிபோல்நின்ற' என்றார். பூஸுரன் - வடசொல். சாரம் = ஸாரம்: தேன் புஷ்பத்தின்சாரமாதல் காண்க. (532)

## 58.—அருச்சுனன் திரௌபதியோடும் உடன்பிறந்தாரோடும் செல்லல்.

அந்தரதுந்துபிமுழங்கச்சங்கமார்ப்ப வானகதுந்துபி புதல்வனாதியாக, வந்திருந்தபேரவையைமதியானாகி மாலையிடுபசுஞ்செம்பொன்மாலையோடும், சந்திரனுமுரோகிணியுமென்னமுன்னர்த் தான்வளைந்தநடஞ்சிலைக்கைத்தலத்திலேந்தி, இந்திரசூனுவுமெழுந்தாங்கேகலுற்றா னிருபுறமுந்துணைவர்வர விணையிலாதான்.

(இ - ள்.) அந்தரம் துந்துபி முழங்க - வானத்தில் (தேவர்கள் முழக்கிய) துந்துபிவாத்தியம் ஆரவாரிக்க, சங்கம் ஆர்ப்ப - சங்கவாத்தியங்கள் ஒலிக்க, இந்திர சூனு உம் - இந்திரனதுகுமாரனான அருச்சுனனும், ஆனகதுந்துபி புதல்வன் ஆதி ஆக வந்திருந்த பேர் அவையை மதியான் ஆகி - வசுதேவகுமாரனான பலராமன் முதலாக வந்திருந்த பெரிய அந்தச்சபையிலுள்ளோரை மதியாதவனாய், மாலை இடு பசு செம் பொன்மாலையோடுஉம்-(தனக்கு)மணமாலையையிட்ட பசிய சிறந்த பொன்னாலாகிய மாலைபோல் விளங்குகிற திரௌபதியுடனே, சந்திரன்உம் உரோகிணிஉம்என்ன -சந்திரனும் (அவன்மனைவியாகிய) உரோகிணிதேவியும்போல, முன்னர் தான் வளைத்த வட சிலை கைத்தலத்தில் ஏந்தி - முன்பு தான் வளைத்த பெரிய அந்தவில்லைக் கையிலெடுத்துக்கொண்டு, துணைவர் இரு புறம்உம் வர-(தனது) உடன்பிறந்தவர்நால்வரும் தனது இரண்டுபக்கத்திலும் உடன்வர, இணை இலாதான் - ஒப்பில்லாதவனாய், ஆங்கு எழுந்து ஏகல் உற்றான்-அவ்விடத்தினின்று புறப்பட்டுச் செல்லத்தொடங்கினான்; (எ . று.)

'ஆனக துந்துபிபுதல்வன்' என்பதற்கு - கண்ணன் என்று உரைத்தலும் ஒன்று. 'ஆனகதுந்துபி முதல்வன்' என்றும் பாடமுண்டு; அப்பொழுது தனது நிசரூபத்தை மறைத்து வேற்று வடிவங் கொண்டிருத்தலால், கண்ணனையுமுட்பட மதியாது சென்றான், வெளிப்படாதிருத்தல் வேண்டியென்க. வசுதேவர் பிறந்த காலத்தில், தேவர்கள், பின்பு இவரிடத்துத் திருமால் கண்ணனாகத் திருவவதாரஞ்செய்வதையறிந்து, ஆனகம் துந்துபி என்கிற வாத்தியங்களை முழக்கினார்களாதலால், வசுதேவர்க்கு'ஆனகதுந்துபி' என்று ஒருபெயராயிற்று. சீவகசிந்தாமணியில் "செம்பொன் வரைமேற் பசும்பொன் னெழுத் திட்டதே போல்" என்ற இடத்து, ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'செம்மை பசுமை - தொடை முரண்; ஈண்டு வண்ணவேறுபாடு இன்று' என்றுஉரைத்தது, இங்கு 'பசுஞ் செம்பொன்மாலை' என்ற விடத்துங் கொள்ளத்தக்கது. பசுஞ்செம்பொன்மாலை - உவமையாகுபெயர். (533)

## 59.—துரியோதனன் தூண்டுதலால் அரசர்கள் போர்க்கு எழுதல்.

பார்ப்பான்வந்தொருகோடியரசைச்சேரப் பரிபவித்துப்பாஞ்சாலன்பயந்த தெய்வச், சீர்ப்பாவைதனைவலியாற்கொண்டுபோகச் செயலின்றியிருந்தீரென் செய்தீரென்று, வேர்ப்பாடுநுதல்சிவந்தவிழியனுகி விழியிலான்மகன்கழறவெகுண்டு மேன்மேல், ஆர்ப்பாகக் கொதித்தெழுந்ததுகாந்தகாலத்தார்க்குமகராலயம்போ லரசரீட்டம்.

(இ - ள்.) விழி இலான் மகன் - கண்களில்லாத[பிறவிக்குருடனுகிய]திருதராட்டிரனது புத்திரனுன துரியோதனன், வேர்ப்பு ஆடு நுதல் சிவந்த விழியன் ஆகி - (பொருமையாலாகிய கோபத்தால்) வேர்வைநீர் தளும்புகிற நெற்றியையும் சிவந்தகண்களையுமுடையவனுய், (மற்றையரசர்களைநோக்கி), 'பார்ப்பான்-பிராமணனெருவன், வந்து—, ஒரு கோடி அரசை-கோடிக்கணக்கான (மிகப்பல) அரசர்களை, சேர பரிபவித்து-ஒருசேர அவமானப்படச்செய்து, பாஞ்சாலன் பயந்த தெய்வம் சீர் பாவைதனை - பாஞ்சாலராஜன்பெற்ற தெய்வத்தன்மையுள்ள சிறந்த பர்வைபோன்ற திரௌபதியை, வலியால் கொண்டு போக-(தன்) வலிமையால் உரிமையாக்கிக் கொண்டு செல்ல, செயல் இன்றி இருந்தீர்-(அதற்கு மாருன)செய்கை யொன்றுஞ்செய்யாமல் இருந்தீர்கள்; என்செய்தீர்-என்ன காரியஞ்செய்தீர்கள், என்று-, கழற-உறுத்திக்கூற, -(அத்தூண்டுதலால்), அரசர்ஈட்டம் - அரசர்களுடையகூட்டம், வெகுண்டு - கோபங்கொண்டு, உக அந்தகாலத்துஆர்க்கும் மகராலயம்போல்- கல்பாந்தகாலத்திற் கொதித்தெழுந்து ஆரவாரிக்கிற கடல்போல, மேல்மேல் ஆர்ப்பு ஆக கொதித்து எழுந்தது-மேல்மேல் ஆரவாரமுண்டாக (மனங்) கொதித்து (ப்போருக்கு) எழுந்தது; (எ - று.)

'பரிவித்து' என்னும் பாடத்துக்கு வருத்தி யென்றுபொருள். சுயம்வரத்தில்மாலைசூட்டியபின் மற்றையோர் மணமாலை பெற்றவனை எதிர்த்துப்பொருதலும், அங்ஙன் பொருவாருள் எவனேனும் அவனை வெல்வானுயின் அவன் அக்கன்னிகைக்கு உரியனுதலும், அங்ஙனம் பொருவாரையெல்லாம் வென்றபின்பே மாலைசூட்டப்பெற்றவன் அவளை மணஞ்செய்துகொள்ளுதலும், இயல்பு.

## 60.—வீமனும் அருச்சுனனும் அரசர்களை எதிர்க்க இருக்கையில், அந்தணர் போர்செய்யத்தொடங்கல்.

முருந்துவாணகைத்துவர்வாய்முகத்தினளை மூத்தோன்பின்னிறுத்தியமர் முருக்குமாறு, மருத்துவான்றிருமகனுமருத்தின்செல்வ மைந்தனுமேபுரிந்திட்டார் மறையோருள்ளார், உருத்துவாய்மடித்தெழுந்துகோகுதட்டிட்டுன்றியதண்டெதிரோச்சியுடன்றவேந்தர், கருத்துவார்தக வெருக்கொண்டோடவோடக் கையுரங் காட்டினர்வளர்த்தகனலேயன்னுர்.

(இ - ள்.) முருந்து - மயிலிறகின் அடிக்குருத்தைப் போன்ற, வாள் நகை-ஒள்ளிய பற்களையும், துவர்வாய்-பவழம்போன்றவாயையுமுடைய, முகத்தினளை - முகத்தையுடையவளான திரௌபதியை, மூத்தோன் பின் நிறுத்தி-தமையனுகிய தருமனுக்குப் பின்னேநிற்க வைத்து, மருத்துவான் திருமகன்உம் மருத்தின்செல்வம் மைந்தன் உம்ஏ-இந்திரனது சிறந்தகுமாரனுகிய அருச்சுனனும்

வாயுவினது செல்வப்பிள்ளையான வீமனும் ஆகிய இருவருமே, அமர் முருக்கும் ஆறு புரிந்திட்டார்-போர்செய்து (அப்பகைவர்களை) அழிக்கும்படி சித்தரானார்கள்; (அதற்குள்ளே), மறையோர் உள்ளார் - (அங்கு) உள்ளவர்களான அந்தணர்கள், உருத்து - கோபங்கொண்டு, (அக்கோபமிகுதியால்) வளர்த்த கனலே அன்னார்-(தாம் நாள்தோறும் வைதிகமாக நெய்ம்முதலியன கொண்டு) வளர்க்கிற அக்கினியையே போன்றவர்களாய், வாய் மடித்து - உதட்டைமடித்துக்கொண்டு, எழுந்து - போர்செய்யப் புறப்பட்டு, கோகு தட்டிட்டு - (வீராவேசத்தால்) தோள்தட்டி ஆரவாரஞ்செய்துகொண்டு, ஊன்றிய தண்டு எதிர் ஓச்சி - (தாங்கள்) ஏந்திய தண்டங்களை எதிரேஉயரஎடுத்து, உடன்ற வேந்தர் கருத்து வார்தக வெரு கொண்டு ஓட ஓட - பகைத்த அரசர்கள் மனத்தில் மிகுதியாக அச்சங்கொண்டு விரைந்தோடும்படி, கை உரம் காட்டினர் - (தங்கள்) கைவலிமையைக் காட்டத் தொடங்குபவரானார்கள்; (எ - று.)

ஓரந்தணன் கன்னிகையைக் கைக்கொண்டதற்காகப்பொறுமைகொண்டு அரசர்கள் போர்க்குஎழுவதை நோக்கி,சாதியபிமானத்தால் அந்தணரெல்லாரும் கோபங்கொண்டு அரசரை எதிர்ப்பாராயினரென்க. கோகுஎன்பது புயமென்றபொருளில் வருதலை "கொற்றவன்றன் கோகின்மேல் வீரவாளின் வீசினான்" என்ற சூளாமணியிலும் காண்க. இனி, கோகுதட்டிட்டு-தங்கள் குடுமியைத் தட்டிமுடிந்துகொண்டு என்று உரைப்பாருமுளர். அந்தணர் கோபாவேசங் கொள்ளுங்கால் தமது சிறியகுடுமிநெகிழ்ந்துஅவிழ்தலைத் தட்டி உறுதியாக முடிந்துகொண்டு எதிர்க்கச்செல்லுதல் சாதியியல்பு. 'வளர்த்தகனலேயன்னார்' - தாம் வளர்க்கிற ஆகவனீயம் காருகபத்தியம் தக்ஷிணாக்கினி என்ற வைதிக அக்கினிகள் போலப் பரிசுத்தமூர்த்திகளாகிய என்றுஉரைத்து, மறையோர்க்கு அடைமொழியாக்கினுமாம். மருத்வான் - தேவர்களையுடையவனென்றுஉறுப்புப்பொருள்படும்வடசொல்:மருத்-தேவர்.

## 61.—அந்தணரை விலக்கி அருச்சுனன் கர்ணனை வெல்லல்.

**மிகைத்தமுனிவரர்முனிந்தவுறுதிநோக்கி வென்றெடுத்தவிற்றடக்கைவிசயன் சற்றே, நகைத்துநகைத்தவரவரைவிலக்கியென்முன் னமன்வரினும் பிளப்பலென நவிலாநின்றான், புகைத்தகனல்விழிக்கன்னன்றருக்காலெள்ளிப்பூசுரனென்றவமதித்துப்புனைவில்வாங்கி, உகைத்தபகழியுமுகைத்தானுரனுந்தன்கை யொருகணையாலுடன்பிளந்தானுருமேறேப்பான்.**

(இ - ள்.) உரும் ஏறு ஒப்பான்-(பகைவர்க்குப்) பேரிடிபோல் பவனாகிய, வென்று எடுத்த வில் தட கை விசயன்-(எல்லா வரசர்களையுங்) கீழ்ப்படுத்தித் தான் எடுத்த வில்லையேந்திய பெரிய கையையுடைய அருச்சுனன்,— மிகைத்த முனிவரர் முனிந்த உறுதி நோக்கி-மிக்கஅந்தப்பிராமணசிரேஷ்டர்கள்கோபங்கொண்ட துணிவைப் பார்த்து, சற்றுஏ நகைத்து நகைத்து - சிறிது சிரித்துச் சிரித்து, அவரவரை விலக்கி - அவர்களையெல்லாம் தடுத்து, என் முன் நமன் வரின்உம் பிளப்பல் என நவிலாநின்றான் - 'என் எதிரிலேநமன்(போர்க்கு)வந்தாலும் (அவனை நான்) பிளந்துவிடுவேன்'

என்று(அவர்கட்குத் துணிவு) கூறிநின்றவனாய்,—புகைத்த கனல் விழி கன்னன் புகைகின்ற கோபாக்கினியை வெளிப்படுத்துகின்ற கண்களையுடைய கர்ணன், தருக்கால்எள்ளி-செருக்கினால் இகழ்ந்து, பூசுரன் என்று அவமதித்து-பிராமணனென்று (தன்னை) அலட்சியஞ்செய்து,புனை வில் வாங்கி-அழகியவில்லை வளைத்து, உகைத்த-(தன்மேற்) செலுத்தின, பகழிஉம் - அம்புகளையும், உகைத்தான் உரன்உம்-(அம்பு) செலுத்தினவனான அவனுடைய மார்பையும், தன் கை ஒரு கணையால்-தனதுகையினாலெய்யப்பட்ட ஓரம்பினால், உடன் பிளந்தான்-ஒருசேரப் பிளந்திட்டான்; (எ-று.)—'மிகைத்து' என்றும் பாடம்; அளவுகடந்து என்று பொருள். (536)

## 62.—வீமன் சல்லியனை வெல்ல, அவனும் கர்ணன்போலவே ஓடுதல்.

குன்றான்மெய்வகுத்தனையவீமன்றன்மேற்கொல்லியல்செய்சல்லியனைக்குத்தி வீழ்த்திக்,கன்றான்முன் விளவெறிந்த கண்ணனென்னக் கான்முடியோடுறவளைத்து வான்மேல் வீசி, நின்றான்மற்றவனயலேதெறித்துவீழ்ந்துநெஞ்சொடிந்தா னிருவரு முன் னில்லா ராகி, வென்றாலுந் தோற்றாலும் வசையே வெம்போர் வேதியரோ டுடற்றலென மீண்டு போனார்.

(இ - ள்.) குன்றால் மெய் வகுத்து அனைய வீமன் - மலையினால் உடம்பைச் செய்தமைத்தாற்போன்ற [மிகவலிய பேருடலையுடைய] வீமசேனன், தன்மேல் கொல் இயல் செய் சல்லியனை குத்திவீழ்த்தி -தன்னை எதிர்த்துப் பெரும்போரைச்செய்த சல்லியனைக்(கையினாற்) குத்திக்கீழே தள்ளி, கன்றால்முன் விளவு எறிந்த கண்ணன் என்ன - (முன்பு பசுவின்) கன்றைக்கொண்டு விளாமரத்தின்மேலெறிந்த கிருஷ்ணன் போல, கால் முடியோடு உற வளைத்து வான்மேல் வீசி நின்றான் - கால் தலையோடு பொருந்த அவனுடம்பை வளைத்து அதனை வானத்தில் வீசிநின்றான்; (அதனால்), அவன் - அச்சல்லியன், அயல் தெறித்து வீழ்ந்து-பக்கத்திலே தெறித்து விழுந்து, நெஞ்சு ஒடிந்தான் - நெஞ்சுமுறிந்தான்: (உடனே), இருவர்உம் - (அந்தக்கர்ணன்சல்லியன் என்ற) இரண்டுபேரும், முன் நில்லார் ஆகி-எதிரில் நிற்கமாட்டாதவர்களாய், வென்றால்உம் தோற்றால் உம் வெம்போர் வேதியரோடு உடற்றல் வசைஏ என-'சயிப்பதாலும் தோற்பதாலும் கொடியபோரை அந்தணர்களோடுசெய்தல் இகழ்ச்சியேயாம்' என்றுசொல்லிக் கொண்டே, மீண்டுபோனார் -திரும்பிச்சென்றார்கள்; (எ - று.)—மற்று-அசை.

அந்தணவடிவத்தி லிருக்கும் வீமார்ச்சுனரிடம் தம்வலிமையைக் காட்டமாட்டாது தோற்ற சல்லியகர்ணர்கள் வெம்போர் வேதியரோடுடற்றலால் வென்றாலும் தோற்றாலும் வசையே என்று முன்னில்லாராகிச் சென்றனரென்க. 'குன்றால்மெய் வகுத்தனைய' என்றது-தன்மைத்தற்குறிப்பு. 'கொல்லியல்' என்றது - கொல்லுந் தன்மையுடையதென வினைத்தொகையன்மொழியாய்ப் போரைக் குறிக்கும். இங்குப்பாலபாரதத்தில், கர்ணனோடு அருச்சுனனும் சல்லியனோடு வீமனும் பொருகையில், மற்றையரசர் அவர்கள் திறத்தைக்கொண்டாடியவண்ணம் வானவரைப்போலப் போரைக் காண்பவரானார்களென்றுஉள்ளது. கன்றால் விளவெறிந்த கதை:— கம்சனால் ஏவப்பட்ட கபித்தாசுரன், விளாமரத்தின்வடிவமாய்,

கண்ணன் தன்கீழ்வரும்பொழுது தான் மேல்விழுந்து கொல்வதாக எண்ணிவந்துநிற்க, அதனையறிந்து கிருஷ்ணபகவான் அவ்வாறே தன்னை முட்டிக்கொல்வதாகக் கருதிஒருகன்றின் வடிவங்கொண்டு தான் மேய்க்குங் கன்றுகளோடு கலந்திருந்த வத்ஸாசுரனைப் பின்னங்கால்களைப்பிடித்து எடுத்துச்சுழற்றி விளாமரத்தின்மேலெறிய, இருவரும் இறந்து தமது அசுரவடிவத்துடன் விழுந்திட்டனரென்பதாம். (537)

வேறு.

## 63.—கண்ணன்விலக்கவே, மற்றையரசர்கள் தம்நம்மூர்சேர்தல்.

வண்ணநூன் முனிவ ரல்லர் மருத்து வான்மருத்து நல்கும்
அண்ணலங் குமர ராமென் றயிர்ப்புறு மரசர் யாரும்
கண்ணனுல் விலக்கப் பட்டுக் கடிநகர் தோறுந் தங்கள்
எண்ணமும் பயனும் வேரு வெய்தின ரென்ப மன்னே.

(இ - ள்.) '(இவ்விருவரும்), வண்ணம் நூல் முனிவர் அல்லர்-அழகிய பூணூலையுடைய அந்தணரல்லர்; மருத்துவான் மருத்து நல்கும் அண்ணல் அம் குமரர் - இந்திரனும் வாயுவும் பெற்ற பெருமையையுடைய அழகிய புத்திரர்களாகிய அருச்சுனனும் வீமனுமாவர்,' என்று—, அயிர்ப்பு உறும் - சந்தேகங்கொண்ட, அரசர் யார்உம் - மற்றையரசர்களெல்லோரும், (பின்பு), கண்ணனுல் விலக்கப்பட்டு-கிருஷ்ணனுல் (இனிப் போர்வேண்டாவென்று) விலக்கப்பட்டு, தங்கள் எண்ணம்உம் பயன்உம் வேறு' ஆ-தங்கள் நினைப்பும் அதன் பயனும்வேருக, கடிநகர் தோறுஉம் எய்தினர்-பாதுகாவலையுடைய தம்தம் நகரத்திற் சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)—என்ப, மன் ஓ - அசைகள்.

திரௌபதியைச் சுயம்வரத்தில் மணஞ்செய்துகொள்ள விரும்பிவந்த தங்கள் எண்ணமும், இங்குத் தங்களுக்குநேர்ந்த அவமானமும் மாறுபாடுடைமையால்,'எண்ணமும் பயனும்வேரு' என்றார். மன்னவர்கள் துருபதனேடு பொருமாறு மாறுபட, போர்க்குச் சித்தராகி அருச்சுனனும் வீமனும் கர்ணசல்லியரைவெல்ல, தருமன் முதலியோர் துரியோதனதியரை வென்றனராக, மீண்டும் அரசர்கள் குழுமிப் போர்வளைக்க முனைகையில் ஸ்ரீக்ருஷ்ணபகவான் அப்போரை விலக்கினனென்று வியாசபாரதம் கூறும்.

இதுமுதற் பத்துக் கவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (538)

## 64.—பாண்டவர் குந்தியிடஞ்சென்று 'இன்று ஒருபிச்சைபெற்றேம்' எனல்.

அன்றிலக்கெய்தகோவுந் துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்கு மின்னிடைப்பொன்னுந்தாமும்
சென்றுமட்கலஞ்செய்கம்மி செழுமனைமுன்றிலெய்தி
இன்றுபெற்றனமோரைய மென்செய்வதிதனையென்றார்.

(இ - ள்.) அன்று இலக்கு எய்த கோஉம் - அன்றைத்தினத்தில் இலக்கையெய்த சிறப்புள்ள அருச்சுனனும், துணைவர்உம் - மற்றை அவனுடன்பிறந்தவர்களும்,—ஆன வெம் போர்வென்று-நிகழ்ந்த கொடிய போரிற் பகைவென்றபின், கொற்றவையோடு

ஒக்கும் மின் இடை பொன்உம் தாம்உம்-வீரலக்ஷ்மியோடு ஒத்த மின்னல்போன்ற இடையையுடைய செல்வப் பெண்ணான திரௌபதியும் தாங்களும், சென்று-போய், மண் கலம் செய் கம்மி செழு மனை முன்றில் எய்தி-மட்பாத்திரங்களைச்செய்யுந்தொழிலையுடைய குயவனது செழுமையான வீட்டின் முற்றத்தை யடைந்து, (அவ் வீட்டினுள்ளே யிருந்த தங்கள் தாயைக் குறித்து), 'இன்று ஓர் ஐயம் பெற்றனம் - இன்றைத்தினத்தில் நுகரப்படும்பொருளொன்றைப் பெற்றுவந்தோம்; இதனை என் செய்வது - இதனை என்ன செய்வது?' என்றார்-; (எ - று.)

சிலகாலமாய் அந்தணவடிவங்கொண்டுள்ள இவர்களில் அருச்சுனனும் வீமனும் நாள்தோறும் வெளிச்சென்று தமது சாதிக்கு உரிய இரத்தல் தொழிலால் உணவை ஈட்டிக் கொணர்ந்து மீண்டுவந்தவுடனே தம்தாயை நோக்கி 'இன்று பிக்ஷைகொணர்ந்தோம்' என்றுசொல்லி அவளனுமதிபெற்று அதனைத் தமையன் தம்பியருடன் உண்ணும் வழக்கத்தின்படி, திரௌபதியைக்கொணர்ந்த தினத்திலும் கூறுகின்றார்களாதலால், 'இன்று பெற்றனமோரையம்' என்றார். பகைவென்று கைக்கொள்ளப்பட்டமையின் திரௌபதிக்குக் கொற்றவை உவமை கூறப்பட்டனள்.-'கன்மிசெழுமனை' என்றும்பாடம். (539)

65.—'அதனை அனைவிரும் உண்ணும்' என்று கூறியபின், குந்தி திரௌபதியைப் பார்த்தல்.

உள்ளிருந்தன்னைமைந்த ருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள் சேரநீரருந்துமென்னுப்
புள்ளினமொடுங்குமாலைப் பொழுதவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக் கரும்பெனவிரும்பிக்கண்டாள்.

(இ-ள்.) மைந்தர் உரைத்த சொல் - (தன்) பிள்ளைகளான பாண்டவர்கள் சொன்ன வார்த்தையை, அன்னை-தாயாகியகுந்தி, உள் இருந்து கேட்டு-(தான்) உள்ளே யிருந்துகொண்டே கேட்டு, (அப்பிள்ளைகளை நோக்கி), 'மக்காள் - புத்திரர்களே! நீர் - நீங்கள், தெள்தேவர் அமுது என்ன-தெளிவானதேவாமிருதத்தைப்போல [மிகவும் இனிமையாக], சேர அருந்தும் - ஒருங்குஉண்ணுங்கள்,' என்னு-என்றுசொல்லி, (பின்பு), அவள்-அந்தக்குந்திதேவியானவள், புள் இனம் ஒடுங்கும் மாலை பொழுது-பறவைக்கூட்டங்கள் (தம்தம் கூடுகளில்) ஒடுங்கும்படியான (அந்த) மாலைக்காலத்திலே, புறம்பர் எய்தி - (உள்ளிருந்து) வெளியே வந்து, கள் அவிழ்கூந்தலாளை - (சூடியமலர்களினின்று) தேன் சொரியுங் கூந்தலையுடைய திரௌபதியை, கரும்பு என-கரும்பைப்போல, விரும்பிகண்டாள்-மகிழ்ந்துகாண்பவளானாள்;(எ-று.)-'பொழுதிவன்'என்றும்பாடம்.

66.—கழிவிரக்கமுற்ற குந்திக்குத் தருமன்தேறுதல்கூறல்.

என்னினைந்தென்சொன்னேன்மற்றென்செய்தேனென்றுசோரும்
அன்னையைவணங்கிநின்சொ லாரணப்படியதாகும்
நின்னினைவன்றுலெங்க ணெஞ்சிலுநினைவுண்டென்றுன்
தன்னிகரிலாதகேள்வி சான்றசீர்த்தருமனென்பான்.

(இ-ள்.) 'என் நினைந்து-என்ன நினைந்து, என் சொன்னேன்-யாதுசொன்னேன்! என் செய்தேன்-என்னகாரியஞ்செய்திட்டேன்,' என்று - என்றுசொல்லி, சோரும் - (பின்பு மனஞ்) தளர்கிற, அன்னையை-தாயான குந்தியை, தன் நிகர் இலாத கேள்வி சான்ற சீர் தருமன் என்பான் - தனக்கு ஒப்பில்லாத நூற்கேள்விமிக்க புகழையுடைய தருமபுத்திரன், வணங்கி- நமஸ்கரித்து, (அவளைநோக்கி) 'நின் சொல்-உனது வார்த்தை, ஆரணம் படியது ஆகும்-வேதத்தின் தன்மையதாம்; நின் நினைவு அன்று - (இது) நீ நினைத்துக் கூறியது அன்று [தற்செயலாய் உன்வாயில்வந்த வார்த்தை]: (அன்றியும்), எங்கள் நெஞ்சில்உம் நினைவு உண்டு - எங்கள்மனத்திலும் இந்த எண்ணம் உண்டு,' என்றான் - என்று சொன்னான்;

'என்செய்கேன்' என்றும் பாடம். தாய்வார்த்தை வேதவாக்கியம்போலக் காரணங்கருதாமலே விதிரூபமாக அங்கீகரிக்கத்தக்கதென்பான், 'நின்சொல் ஆரணப்படியதாகும்' என்றான். சாஸ்திர விரோதமானதைச் சொல்லத்தக்கவனல்லாத தருமன் ஒரு பெண்ணை நாங்கள் ஐவரும் மணஞ்செய்துகொள்ளக்கருதுகின்றோமென்றல் அப்பெண்ணினிடத்து வைத்த காதல்பற்றியேயன்று விதிவயத்தனா யென்பது விளங்க, 'தன்னிகரிலாதகேள்விசான்ற சீர்த்தருமனென்பான்' என்றார். மற்று-அசை; வினைமாற்றுமாம்.

67.—குந்தி ஒருவாறுதேறுதலும், இரவுகழிதலும்.

பாரனைத்தினுந்தன்னுமம் பரப்பியபார்த்தனென்னும்
வீரனைப்பயந்தபாவை விதிவழியிதுவென்றெண்ணி
மாரனுக்கரசுநல்கு மங்கையுந்தானுமந்தக்
காரிருட்கங்குன்மைந்தர் கட்டுரைகசிந்துகேட்டாள்.

(இ - ள்.) பார் அனைத்தின்உம் - பூமி முழுவதிலும், தன் நாமம்-தனது பெயரை, பரப்பிய - (புகழாற்) பரவச்செய்த, பார்த்தன் என்னும் வீரனை-அருச்சுனனென்கிறவீரனை, பயந்த-பெற்ற, பாவை-பெண்ணாகிய குந்திதேவி, இது விதி வழிஎன்று எண்ணி-(தான் கூறியதும் தருமன் கூறுகிறது மாகிய இச்செயல்) ஊழ்வினைவசத்ததாமென்று நினைத்து,—மாரனுக்கு அரசு நல்கும் மங்கைஉம் தான்உம்-மன்மதனுக்கு அரசாட்சியைக்கொடுக்கின்ற இளம்பெண்ணான திரௌபதியும் தானுமாக, அந்த கார் இருள் கங்குல் - கரிய இருளையுடைய அவ்விரவில், மைந்தர் கட்டு உரை கசிந்துகேட்டாள்-(தன்) பிள்ளைகளான அப்பாண்டவர்கள் கூறும் பொருளுள்ள மொழிகளை அன்புகொண்டு கேட்டாள்; (எ - று.)

விற்றிறம் போர்த்தொழில் முதலிய வீரர்க்குஉரிய வார்த்தைகள் பலவற்றை அவர்கள் இரவிற் சொல்லிக்கொண்டிருக்க, அவற்றைக் குந்தியும் திரௌபதியும் கேட்டனரென்க. பாவை தானும் மங்கையும் கேட்டாள்-இரண்டு பெண்பாற்பெயர்கள்சிறப்பினால் ஒரு முடிபைஏற்றன; [நன் பொது-27] (542)

68.—அங்குநிகழ்ந்த செய்திகளைத் துருபதன் ஒற்றரால்அறிந்துமறுநாள் அவர்களைத் தன்மனைக்கு அழைத்தல்.

பொற்றொடிக்கனகமாலைப் பொலங்குழைப்பூவைதன்னைப்
பெற்றபூபதியவ்வீரர் பெருமிதவாய்மையெல்லாம்

ஒற்றராலுணர்ந்துநெஞ்சத் துவகையோடையமின்றி
மற்றைநாள்வந்துகொற்ற வாழ்மனைகொண்டுபுக்கான்.

(இ - ள்.) பொன் தொடி - பொன்னாலாகிய தொடியென்னும் வளையையும், கனகம் மாலை-பொன்னாலாகிய ஆரத்தையும், பொலம் குழை - பொன்னாலாகிய குழையென்னுங் காதணியையுமுடைய, பூவை தன்னை - பூவைபோன்ற திரௌபதியை, பெற்ற—, பூபதி - அரசனாகிய யாகசேனன், அ வீரர் பெருமிதம் வாய்மைஎல்லாம்- அந்தப்பாண்டவர்களுடைய வீரத்தைவிளக்கும் வார்த்தைகளை யெல்லாம், ஒற்றரால் உணர்ந்து - ஒற்றர்களால் அறிந்து, ஐயம் இன்றி-சந்தேகமில்லாமல், நெஞ்சத்து உவகையோடு-மனமகிழ்ச்சி யுடனே, மற்றை நாள் - மறுநாளில், வந்து - (அவர்கள் தங்கி யிருக்கும் இடம்)வந்து, கொற்றம் வாழ் மனை கொண்டு புக்கான் - வெற்றியையுடைய (தான்) வாழ்கிற மாளிகைக்கு (அவர்களை) உடன்கொண்டு சென்றான்; (எ-று.)—வாண்மனை என்றுமாம்.

ஒற்றராவார் - வேண்டிய இடங்களில் உரியபடி சென்று உள்ளபடி செய்தியறிந்துவந்துகூறுபவர். திருஷ்டத்யும்நன் தானே மறைவாக அவர்கள் பின்சென்று பதிவிருந்து அங்குநிகழ்ந்தவை யனைத்தையும் அறிந்துவந்து தந்தைக்குக் கூறினனென்றும், பின்னும் ஐயந்தீர்தற்பொருட்டுத் துருபதன் தனதுபுரோகிதனை அனுப்பிப் பின்பு தூதன்மூலமாக அவர்களைத் தன்மனைக்கு வருவித்தானென்றும் முதனூல் கூறும். அரசனது வெற்றியை அவனது அரண்மனைமேலேற்றி 'கொற்றமனை' என்றார். (543)

## 69.—அவர்களைச்சோதனையால் துருபதன் பாண்டவர்களென்றே நிச்சயித்து உபசரித்தல்.

அடுத்தபல்பொருளும்வைக்க வாயுதமன்றிவேறொன்று
எடுத்திலரென்றும்வேத முனிவரரல்லரென்றும்
கொடுத்தனசிறப்பினோடுங் குருமணித்தவிசினேற்றித்
தொடுத்ததார்க்குருக்களென்றே துணிந்தனன்யாகசேனன்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) அடுத்த பல் பொருள்உம் வைக்க-பொருந்திய பல பொருள்களையும் (கொணர்ந்து அவர்கள் முன்னிலையில்) வைக்க, (அவர்கள்), ஆயுதம் அன்றி வேறு ஒன்று எடுத்திலர்-ஆயுதங் களையேயன்றி வேறொருபொருளையும் எடுத்தார்களில்லை, என்றும் —, (அதனால்), வேதம் முனிவர் அல்லர் என்றுஉம்-வேதத்துக்கு உரிய அந்தணர்களல்லரென்றும், (அறிந்து),—யாகசேனன்- துரு பதன்,-தொடுத்த தார் குருக்கள் என்றுஏ துணிந்தனன்- தொடுக் கப்பட்ட மாலையையணிந்த குருகுலகுமாரர்களாகிய பாண்டவர்க ளென்றே (அவர்களை) நிச்சயித்து, கொடுத்தனசிறப்பினோடுஉம்- (தான்) கொடுத்த பலவகைச்சிறப்புக்களுடனே, குருமணி தவிசின் ஏற்றி-நிறம் விளங்குகிற இரத்தினங்கள் பதித்த ஆசனத்தில் (அவர்களை) வீற்றிருக்கச்செய்து,—(எ-று.)—'என்ன' (70) என்க.

துருபதன் பின்னும்தெளிந்துகொள்ளுதற்பொருட்டுத்தனது பரிசனர்களை யேவி அவர்களெதிரில் பலவகைப்பொருள்களைக் கொணர்ந்துவைக்கச் சொல்ல, அவர்கள் அவற்றில் படைக்கலங்

களைத் தவிர வேறொன்றையும் எடுத்துக்கொண்டிலராக, அச்செய்தியை அறிந்தபின் அரசன் அவர்களைப்பாண்டவரென்றே துணிவு கொண்டனனென்க. பின்பு அவர்களும் துருபதனது வேண்டுகோளின்படி தாம் இன்னாரென்று உள்ளபடி உணர்த்தித் தமது நிஜரூபத்தைக் கொண்டு அரக்குமாளிகை யெரிப்பின்பின் நிகழ்ந்த வரலாற்றை அவனுக்குக் கூறினரென முதனூலால் அறிக. (544)

### 70.—துருபதன்மணவினைதொடங்க, தருமன் 'நாங்கள்ஐவரும் இவளை மணப்போம்' என்றல்.

கைவருசிலையின்வென்று கைப்பிடித்தவனுக்கின்றே
மைவருகண்ணினளை வதுவைசெய்திடுதுமென்ன
நெய்வருமுனைகொள்கூர்வே னிருபனைநோக்கியாங்கள்
ஐவரும்வேட்டுமென்றா னசைவிலாவறத்தின்மைந்தன்.

(இ - ள்.) 'கை வரு சிலையின்-(தனக்குக்) கைவந்த விற்றொழிலினால், வென்று-(பிறரைக்) கீழ்ப்படுத்தி, கை பிடித்தவனுக்கு - கைப்பற்றின அருச்சுனனுக்கு, இன்றே - இன்றைத்தினமே, மை வரு கண்ணினாளை-மையிட்ட கண்களையுடைய திரௌபதியை, வதுவை செய்திடுதும்-கலியாணஞ்செய்விப்போம்,' என்ன-என்று (யாகசேனன்) சொல்ல,-அசைவு இலா அறத்தின் மைந்தன்-(தருமத்தினின்று) சோர்தலில்லாத தருமபுத்திரன், நெய் வரு முனை கொள் கூர் வேல் நிருபனை நோக்கி - நெய்பூசிய நுனியைக் கொண்ட கூரியவேலாயுதத்தையுடைய அவ்வரசனை நோக்கி, யாங்கள் ஐவர்உம் வேட்டும் என்றான்-'நாங்கள்ஐந்துபேரும் (இவ்வொருத்தியை)மணஞ்செய்துகொள்வோம்' என்று சொன்னான்;
யாங்கள்ஐவர்-தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி: 'யாங்கள்ஐவேம்', என்று இருப்பின் வழாநிலையாம். (545)

### 71.—அதற்குஉடன்படாத துருபதனுக்கு வியாசர் அறிவுறுத்தலுறல்.

தருமன்மாமதலைசொல்லாற் றளர்வுறுகாலைமாலை
நிருபநின்மனத்தையம் நீக்குகநீக்குகென்னாத்
துருபதன்முன்னர்வந்து தோன்றினன்சுருதியாவும்
விரைமலர்விதியின்மிஞ்ச விதித்தருள்வியாதனென்பான்.

(இ-ள்.) தருமன் மா மதலை சொல்லால் - (இங்ஙனம்கூறிய) யமதருமராசனது சிறந்த புத்திரனாகிய யுதிட்டிரனது வார்த்தையைக்கேட்டதனால், தளர்வுஉறு காலை-(துருபதன்)வருத்தமடைந்த சமயத்தில்,-'மாலை நிருப-மாலையையணிந்தஅரசனே! நின் மனத்தில் ஐயம்நீக்குக நீக்குக-உன் மனத்தில்சந்தேகத்தைநீக்குவாயாகநீக்குவாயாக,' என்னா - என்றுசொல்லிக்கொண்டே, விரைமலர் விதியின் மிஞ்ச சுருதியாஉம் விதித்துஅருள்வியாதன்என்பான்-வாசனையையுடைய (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமனினும் மேலாக வேதங்களையெல்லாம் வகுத்தருளியவியாசனென்று பெயர்பெற்ற முனிவன், துருபதன் முன்னர் வந்து தோன்றினன்-அந்தத்துருபதராசனுக்கு எதிரிலே வந்துதோன்றினான்; (எ-று.)

நீக்குக நீக்குக - அடுக்கு, துணிவுப்பொருளது. ஶ்ருதி என்ற வடசொல் - எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்ய க்ரமத்திலே கர்ண பரம்பரையாக வழங்குவதென்று காரணப் பொருள்படும். (546)

## 72.—ஒருத்தியை ஐவர்மணத்தற்குக் காரணங் கேட்பா யென்று வியாசர் கூறலுறல்.

தொழுதுபொற் றவிசி னேற்றிச் சூழ்ந்தன னிருந்துகேட்ப
முழுதுணர் கேள்வி ஞான முனிகுலத் தரசு போல்வான்
பழுதறு கன்னி தன்னைப் பாண்டவ ரைவ ருக்கும்
எழுதரு மறையின் வேள்வி யியற்றுதற் கியற்கை கேண்மோ.

பதினாறுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) (இங்ஙனம் எழுந்தருளிய வேதவியாசமுனிவனைத் துருபதராசன்), தொழுது - நமஸ்கரித்து, பொன் தவிசின் ஏற்றி- பொன்மயமான சிங்காசனத்தில் எழுந்தருளப்பண்ணி, சூழ்ந்தனன் இருந்து-(அவனைப்) பிரதக்ஷிணஞ்செய்துஇருந்துகொண்டு, கேட்ப- கேட்க,—முழுது உணர் கேள்வி ஞானம் முனி குலத்து அரசுபோல் வான் - எல்லாவற்றையும் அறிந்த நூற்கேள்வியையும் தத்துவ ஞானத்தையுமுடைய முனிவர்கூட்டத்துக்கு ஓர்அரசன்போல் தலைமைபெற்றவனான அம்முனிவன்,—பழுது அறு கன்னி தன்னை- குற்றமற்ற கன்னிகையான இந்தத்திரௌபதியை, பாண்டவர் ஐவருக்குஉம் - பாண்டவர்கள் ஐந்துபேருக்கும், எழுதுஅரு மறை யின் - எழுதுதற்கு அரிய [எழுதாக்கிளவியாகிய] வேதத்தின் விதிப்படி, வேள்வி இயற்றுதற்கு - மணஞ்செய்வித்தற்கு(க் காரணமான), இயற்கை - இயல்பை, கேண்மோ - கேட்பாயாக; (எ-று.)—'சூழ்ந்தனரிருந்து' என்றும் பாடம்.

இச்செய்யுளில், கேட்ப, போல்வான்என்றவற்றிற்கு முடிக்குஞ் சொல், மேல் 87 - ஆங்கவியில் வருகிற 'என்று' என்பது. (547)

வேறு.

## 73.—இனி 15-கவிகள்-திரௌபதியின் முற்பிறப்புவரலாறு கூறும்.

மூளா ரழலுற் பவித்தாளிவண் முற்ப வத்தில்
நாளா யணியென் றுரைசால்பெரு நாம மிக்காள்
வாளார் தடங்க ணவட்காரண வாணர்க் கென்றும்
கேளான மௌற்கல் லியனென்பவன் கேள்வ னானன்.

(இ - ள்.) மூள்-மூண்டெரிகிற, ஆர்-நிறைந்த, அழல்-யாகாக் கினியில், உற்பவித்தாள் - தோன்றியவளான, இவள்-இத்திரௌ பதி, முன் பவத்தில்-முற்பிறப்பில், நாளாயணி என்று உரை சால் பெரு நாமம்மிக்காள்-நாளாயணியென்றுபுகழ்நிறைந்தபெருமையை யுடைய பெயரினாற் சிறந்தவள்: வாள் ஆர் தட கண் அவட்கு- வாட்படைபோன்றபெரியகண்களையுடையஅவளுக்கு, ஆரணவா ணர்க்கு என்றும் கேள் ஆன மௌற்கல்லியன் என்பவன - அந்த ணர்களுக்கு எப்பொழுதும் தலைவனான' மௌத்கல்ய னென்னும் முனிவன், கேள்வன் ஆனான்-கணவனாயினான்; (எ - று.)

3.1.59

உரைசால்பெருமை-கற்பினாலாகிய புகழ்ச்சி; "தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்றது காண்க.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள்-பெரும்பாலும்மூன்றுஞ்சீர் மாங்கனிச்சீரும், மற்றையவை மாச்சீர்களுமாகிய கலிநிலைத்துறைகள்.

**74.** காதிற்கலந்தகடைக்கண்ணிதன் கற்புமன்பும்
சோதித்தலுன்னித்தணியாத துவக்குநோயன்
கோதித்தநெஞ்சன்பெருமுப்பினன் கூர்ந்துநாளும்
வாதித்தலன்றிமகிழாமனை வாழ்வுபூண்டான்.

(இ-ள்.) (அவன்), காதில் கலந்த கடைக்கண்ணிதன்-காதை யளாவிய கண்ணின்கடையையுடைய அம்மனைவியினது, கற்புஉம்-பதிவிரதாதருமத்தையும், அன்புஉம்-(தன்னிடம்அவளுக்குஉள்ள) அன்பையும், சோதித்தல் உன்னி-(தான்) பரிசோதித்தறிய நினைத்து, தணியாத துவக்கு நோயன்-குறையாத[மிக்க]குட்டநோயைக் கொண்டவனும், கோதித்த நெஞ்சன்-(எப்பொழுதும்) கோபத்தை யேகொண்ட மனத்தையுடையவனும், பெருமுப்பினன் - முதிர்ந்த முதுமையையுடையவனுமாய்,—நாள்உம்-தினந்தோறும், கூர்ந்து வாதித்தல் அன்றி-மிகுதியாக (மனையாளை) வருத்தப்படுத்துதலே யல்லாமல், மகிழா-(ஒருபொழுதாயினும்)மகிழ்ச்சிக்குஇடமில்லாத, மனை வாழ்வு-இல்லறவாழ்க்கையை, பூண்டான்-மேற்கொண்டான்;

அந்த மௌற்கலியன், அவளதுகற்பின் உறுதியையும், அன்பின்நிலையையும் சோதிக்கக்கருதி, மிகுந்த குஷ்டநோயும், அதனாற் சிதைந்த வடிவமும், மிக்க கிழத்தனமும், எப்பொழுதும் பெருங் கோபமும், உடம்பில் துர்க்கந்தமு முடையவனாகத் தன்னைக் காட்டியதோடு மனையாளை மிகவும் வருத்துதலுஞ்செய்தனன் என்பதாம். துவக்குநோய் - உடல்நோய்: த்வக் - வடசொல்; தோல்: உடம்புக்கு இலக்கணை. கோதித்த-க்ரோதம் என்ற வடசொல்லின் திரிபான கோதம்என்பதனடியாப்பிறந்த பெயரெச்சம். "குழைப்புறங்கடந்த செங்கண்" என்றாற்போல, 'காதிற்கலந்த கடைக்கண்ணி' என்றார்; "கண் செவியுறப்போந் தகன்றனவே" என்றார் சிந்தாமணியாரும். (549)

**75.** கச்சிற்கடங்காமுலையாளக் கணவனுண்ட
மிச்சிற்புறத்துவிரல்விழவும் விழ்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றிநுகர்ந்தாள் கொடுங்காமநோய்கொண்டு
இச்சித்தவின்பநுகராம லிளைத்தமெய்யாள்.

(இ - ள்.) கொடும் காமம் நோய் கொண்டு இச்சித்த இன்பம் நுகராமல் இளைத்த மெய்யாள்-கொடிய காமநோயைப் பொருந்தி விரும்பிய சிற்றின்பத்தை அனுபவியாமல் மெலிந்தஉடம்பையுடையவளான,கச்சிற்குஅடங்காமுலையாள்-கச்சுக்குஅடங்காத[பருத்த] தனங்களையுடைய அந்த நாளாயணி, அ கணவன் உண்ட மிச்சில் புறத்து விரல் விழஉம்-அந்தக்கணவன் உண்ட அந்நசேஷத்தில் (அவன்) கைவிரல் அழுகிவிழுந்துகிடக்கவும், குச்சித்தல் இன்றி-அருவருப்புக்கொள்ளுதலில்லாமல், விழ்தல் மிஞ்சி நுகர்ந்தாள் - விருப்பம்மிக்கு (அந்தச்சேடித்த அன்னத்தை) உண்டாள்;(எ-று.)

மௌற்கல்யன் அங்ஙனம் பலவாறு கொடுமைசெய்யவும் நாளாயணி அவன்பக்கல் அன்புசிறிதுங்குறையாமல் பலவகை உபசாரங்களையும் வழுவாது நன்மனத்தோடு புரிந்து முறைப்படி அவன் உண்டுமிகுந்த எச்சிலைத்தான் உண்டு வாழ்ந்திருக்கையில் ஒருநாள் அவன்உண்ட மிச்சிலில் அவனுடைய கைவிரலொன்று அற்றுவிழுந்துகிடக்கக் கண்டும் சிறிதும் அருவருப்புக்கொள்ளாமல் அவ்வுணவை அன்போடு உண்டனளென்பதாம். (550)

**76.** அன்பன்றெரிவைவழிபாடுகண் டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழி தோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன் சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாத வடிவுகொண்டான்.

(இ - ள்.) அன்பன்-கணவனான அம்முனிவன், தெரிவை வழிபாடு கண்டு-(தன்) மனைவி (தன்னை) வழிபட்டுவந்த விதத்தைப் பார்த்து, ஆர்வம் எய்தி-(அவளிடத்து) அன்புபொருந்தி, துன்பம் பயந்த பிணியால் அழி தோற்றம் மாற்றி-துன்பத்தைத்தந்த பெருவியாதியினால் இயல்பழிந்த தன்வடிவத்தை மாற்றி, ஈசன் முன் தன் பங்கை திறை நல்க சாபம் வாங்கும் வன்பன் தனக்கும் கிடையாத வடிவு கொண்டான்-சிவபிரான் முன்பு தன்வாமபாகத்தை(த் தன்மனைவியான பார்வதிக்கு) உரியபொருளாகக் கொடுக்கும்படி (தன் கரும்பு) வில்லை வளைத்துப் போர்செய்த வலிமையையுடைய மன்மதனுக்கும் பெறுதற்கு அரிய [மிக்க அழகையுடைய] வடிவத்தைக் கொண்டான்; (எ - று.)

அங்ஙனம் அவள் நிலைகுலையாது வழிபட்டுவந்ததை அவன் பார்த்து மிகுந்த திருப்திகொண்டு தனதுநோய்வடிவத்தையொழித்துத் தவமகிமையாற் காமனினுஞ் சிறந்த கட்டழகுடைய வடிவத்தைக் கொண்டனனென்பதாம். மன்மதன் சிவபிரான் நெற்றிக் கண்ணினால் எரிபட்டானாயினும், பின்பு அக்கடவுள் பார்வதியினிடம் காதல்கொண்டு அவளை மணம்புணர்ந்து அவளை என்றும் பிரியாது அர்த்தநாரீசுவரமூர்த்தியாயினமைபற்றி, 'தன் பங்கை யீசன் திறைநல்க முன்சாபம்வாங்கும் வன்பன்' என்றார். சிவபிரான் உமைக்குக்கொடுத்த இடப்பாகம், மன்மதனுக்குத் தோற்றுத்தந்த திறைப்பகுதியாகக் கற்பிக்கப்பட்டது. (551)

**77.** மின்னேயுனக்குமிகுகற்புடை மீனுமொவ்வாள்
இன்னேவரம்வேண்டுவவேண்டுக வீண்டையென்ன
நின்னேயமென்றும்பிரியாநல நேர்கவென்றாள்
தன்னேரிலாதமனைவாழ்விற் றவத்தின்மிக்காள்.

(இ - ள்.) 'மின்னே-மின்னல்போன்றவளே! மிகு கற்பு உடை மீன் உம் - மிக்கபதிவிரதாதருமத்தையுடைய நக்ஷத்திரரூபமுள்ள அருந்ததியும், உனக்கு ஒவ்வாள்-நினக்கு(க் கற்பில்) நிகராகாள்; இன்னே - இப்பொழுதே, ஈண்டை - இவ்விடத்தில், வேண்டுவ வரம் வேண்டுக - (நீ) விரும்பும் வரங்களை (என்னிடம்) வேண்டிப் பெற்றுக்கொள்வாயாக,' என்ன - என்று (மௌற்கலியன் நாளாயணியை நோக்கிச்) சொல்ல,—தன் நேர் இலாத மனை

வாழ்வில் தவத்தில் மிக்காள்-தனக்கு ஒப்பில்லாத இல்லறவாழ்க்கையிலிருந்து செய்யுந் தவத்திற் சிறந்தவளான அவள், நின் நேயம் என்றுஉம் பிரியா நலன் நேர்க என்றாள் - 'உனது அன்பு எந்நாளும் நீங்காமையாகிய நல்லவரத்தை (எனக்கு) உடன்பட்டுத் தருவாயாக' என்று (கணவனை வரம்) வேண்டினாள்; (எ - று.)

அவன் மிக்க அன்போடு அவளைக் கொண்டாடி 'நினக்கு வேண்டும் வரம் வேண்டுவாயாக' என்று சொல்ல, அவள்வேறொரு வரத்தையும் வேண்டாமல் 'உன் அன்பு எப்பொழுதும் நீங்காதாகுக' என்று வேண்டினள் என்பதாம். (552)

78. குன்றுந்நதியும்மரனும்பைங் கொடியுமாகித்
துன்றுந்துணையாய்ப்பலயோனிக டோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமரும்போக நெடிதுதுய்த்நார்
என்றும்பிரியாதிருவோரு மிதயமொத்தே.

(இ - ள்.) (அவன் அங்ஙனம் வரங்கொடுத்தபின்பு), -இருவோர்உம் - (கணவனும் மனைவியு மாகிய) அவ்விருவரும்,- இதயம் ஒத்து-மனங்கலந்து, குன்றுஉம் நதிஉம் மரன்உம் பைங்கொடிஉம் ஆகி - மலையும் (அதனைச்சார்ந்து பெருகுகிற) நதியும் மரமும் (அதன்மேற் படரும்) பசியபூங்கொடியுமாய், துன்றும்துணை ஆய் பல யோனிகள் தோறும் எய்தி - (இங்ஙனமே இன்றியமையாது) பொருந்திய துணையாகிப் பலவகையுருவங்களிற் பொருந்தி, நின்றுஉம் சரித்துஉம் - (ஓரிடத்து) நின்றும் (பலவிடங்களிற்) சஞ்சரித்தும், என்றுஉம் பிரியாது - எப்பொழுதும் (ஒருவரையொருவர்) பிரியாமல், நெடிது-நெடுங்காலம், அரு போகம் - அரிய இன்பத்தை, துய்த்தார் - அனுபவித்தார்கள்; (எ - று.)

அவன் குன்றாக வடிவுகொள்ள இவள் நதியாகவடிவுகொண்டு அதனைச் சார்ந்தும், அவன் மரவடிவுகொள்ள இவள் கொடிவடிவு கொண்டு அதனைத் தழுவியும். இவ்வாறு பற்பல யோனிபேதங்களிற் புக்கு அவ்விருவரும் சுகானுபவஞ் செய்தன ரென்க. (553)

79. இந்தப்பிறப்பினலமெய்தி யிறந்தபின்னும்
சிந்தித்தவண்ணமிவளிந்திர சேனையாகி
அந்தப்பதியையடைந்தாள் மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லையருமாதவ மன்னிநின்றான்.

(இ - ள்.) இந்த பிறப்பில் - (நாளாயணியாகிய) இந்தச்சன்மத்திலே, நலம் எய்தி - (இப்படிப் பலவாறு) இன்பத்தை அனுபவித்து, இறந்த பின்னும்—, இவள்—, சிந்தித்தவண்ணம்-நினைத்தபடியே, இந்திரசேனை ஆகி - (அடுத்தபிறப்பில்) இந்திரசேனையென்பவளாய், அந்த பதியை அடைந்தாள் - (முன்பிறப்பிற் கணவனான)அந்த மௌத்கலியனையே அடுத்தாள்;(அப்பொழுது) அவனும்—, அஞ்சி - (முத்திப்பேரின்பத்தில் விருப்பத்தால் இவளைச்சேர்ந்து சிற்றின்பம் நுகர்தற்குப்) பயந்து, வந்தித்த தொல்லை அரு மா தவம் மன்னி நின்றான் - (கடவுளை) வணங்கிச் செய்கிற தொன்றுதொட்டு வருகிற அரியபெரிய தவவொழுக்கத்திற் பொருந்திநின்றான்; (எ-று.)—மற்று - வினைமாற்று.

உடம்புநீங்குங்காலத்து அடுத்த வினையும், அதுகாட்டுங் கதி நிமித்தங்களும், அக்கதியினிடத்து அவாவும், உயிரினிடத்துமுறை யே வந்து உதிக்க, அறிவை மோகம் மறைக்க, அவ்வுயிரை அவ்வவா அக்கதியிற் கொண்டுசெலுத்து மாதலால், 'சிந்தித்த வண்ணம் அந்தப்பதியையடைந்தாள்' என்றார். மௌத்கல்யன் இல்லறவாழ்க் கைக்கு அஞ்சித் துறவறஞ்சேர்ந்தன னென்க. (554)

80. அன்னோனகலவவன்மேலவ ளாசைவிஞ்சி
என்னோபுரிவதினியென்றலு மேந்தல்கூற்றால்
தன்னோர்வடிவினொருகூறொரு தையலாளும்
முன்னோனைநோக்கித்தவஞ்செய்தனன் மூரல்வாயாள்.

(இ - ள்.) அன்னோன் அகல-(தன்கருத்துக்கு இணங்காமல்) அந்த மௌத்கல்யன் விலகிச்செல்லுமளவில்,—அவள் - அந்த இந்திரசேனை, அவன்மேல் ஆசைவிஞ்சி-அவனிடம்விருப்பம்மிக்கு, இனி புரிவது என்னோ என்றலும்-'(உன்னைப்பிரிந்து) இனி (நான்) செய்வது யாதோ?' என்று வினவிய வளவிலே,—ஏந்தல் கூற்றால்-அக்கணவன்சொன்ன வார்த்தையின்படி, மூரல் வாயாள் - புன் சிரிப்புக்கொண்டவாயையுடைய அவள், தன் ஓர் வடிவின் ஒருகூறு ஒரு தையல் ஆளும் முன்னோனை நோக்கி-தனது ஒருவடிவத்திலே ஒருபாதியில் ஒருபெண்ணை [அம்பிகையை]க் கொண்டுள்ள கடவு ளான சிவபிரானைக் குறித்து, தவஞ்செய்தனள்—; (எ - று.)

தவத்திற்கு இடையூறாக இந்திரசேனை தன்னைமணந்து கொள்ளுமாறு வேண்டவே, அன்னோன் 'நீ என் தவத்திற்குஇடை யூறுபுரிவதனால் துருபதபுத்திரியாய்ப் பிறக்க, உன்னை ஐவர் மணப்பர்' என்று சபித்தானாக, பிறகு சிவனை நோக்கித் தவம்புரிந்தா ளென்று வியாசபாரதமும், தவம்புரியுமாறு மௌத்கல்யன் கூறிய தாகப் பாலபாரதமும் கூறும். மிஞ்சி என்றும் பாடம். (555)

81. ஐந்தானனத்தோனருள்செய்ய வழகின்மிக்காள்
ஐந்தானசொல்லால்கணவற்றரு கையவென்றாள்
ஐந்தானசொல்லானளித்தான்மற் றவனுமுன்னாள்
ஐந்தானபோகமிவளெய்திய வாறறிந்தே.

(இ-ள்.) ஐந்து ஆனனத்தோன்-ஐந்துமுகங்களையுடையவனான சிவபிரான், அருள் செய்ய-கருணைசெய்ய [பிரசன்னனாய்ப் பிரதி யக்ஷமாக], அழகில் மிக்காள்-அழகிற் சிறந்தவளான இந்திரசேனை, ஐந்து ஆன சொல்லால் கணவன் தருக ஐய என்றாள் - 'சுவாமி! (எனக்குக்) கணவனைத் தருவாயாக' என்று ஐந்துமுறைசொல்லி வேண்டினாள்; அவன் உம்-பஞ்சாநந மூர்த்தியான அச்சிவபிரானும், இவள் முன் நாள் ஐந்து ஆன போகம் எய்திய ஆறு அறிந்து - இவள் முற்பிறப்பில் (தனபுருஷனது) ஐந்துவடிவங்களோடுகூடி இன்பம்அனுபவித்த தன்மையைத் திருவுள்ளத்திற் கொண்டு, ஐந்து ஆன சொல்லான் அளித்தான்-'அங்ஙனமே ஆகுக; ' என்று ஐந்துமுறை கூறி அருள்செய்தான்; (எ - று.)—மற்று - அசை.

இவள் தவத்துக்குஉகந்த அப்பிரான் கட்புலனாக, இவள் 'எனக்குஏற்ற கணவனைத் தருக' என்று ஆதரத்தால் ஐந்துதரம்

அடுக்கிச்சொல்லிவேண்ட, சிவபிரானும் 'அப்படியேஆகுக'என்று ஐந்துதாம்கூறி, அவள் ஐந்துகொழுநரைப் பெறும்படி அநுக்கிரகித்தனன் என்பதாம். 'வேண்டும் வரம்வேண்டுக' என்று மௌற்கலியன் சொன்னபோது 'ஐந்து வடிவுகொண்டு கிரீடிப்பாய்' என்று நாளாயணி வரம்வேண்ட, மௌற்கலியன் அவ்வாறே கிரீடித்தா னென்பதை முதனூலா லறியலாம். சதாசிவ மூர்த்தியாகிய சிவபிரானுக்குச் சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என ஐந்துமுகங்க ளென்று அறிக.

82. முன்னின்றதேவன்மொழியின்படி கங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவந் தையல்கண்ணீர்
பொன்னங்கமலவனமான புதுமைநோக்கி
என்னென்றிவளையிமையோர்பதி யெய்தினனே.

(இ - ள்.) முன் நின்ற தேவன் மொழியின்படி - தனக்கு முன்னே எழுந்தருளிநின்று காட்சிதந்த சிவபிரான் கட்டளைகூறிய படி, கங்கை மூழ்கி-கங்காநதியில் நீராடி, தன்னந் தனி நின்று அழுகின்ற - ஒரு துணையுமில்லாமல் தனியேநின்று அழுகின்ற, அ தையல் - அந்தப்பெண்ணினுடைய, கண் நீர் - கண்களினின்று சொரியும் நீர்த்துளிகள், பொன் ஆம் கமலம் வனம் ஆன - பொன் மயமான அழகிய தாமரைமலர்களின் தொகுதியாய்ப் பரிணமித்த, புதுமை-அதிசயத்தை, நோக்கி - பார்த்து, இமையோர் பதி-தேவ ராசனான இந்திரன், என் என்று இவளை எய்தினன் - இது என்ன வென்று வினவிக்கொண்டே இவளைச் சமீபித்தான்; (எ - று.)

சிவபிரான் ஐந்துகொழுநரைப் பெறும்படி அநுக்கிரகித்த தற்கு இவள் மகிழாமல் தக்கஒருநாயகனைப் பெறும்படி பிரார்த்திக்க, பரமசிவன் 'நீ ஐந்துதாம் வேண்டியபடிநான் உனக்கு ஐந்து தாம் அருளியது தவறாது; ஆனால் அவ்வரத்தை மறுபிறப்பில் அநுபவிக்கும்படி அருள்செய்கிறோம்' என்று அநுக்கிரகித்து அவளைக் கங்காநதியில் மூழ்கிவரும்படியும் அங்ஙனம்முழுகி வரும்பொழுது எதிரில்தோன்றும் புருஷனைத் தன்னிடம் அழைத்துவரும்படியும் கூறியனுப்ப, அவ்வாறே சென்ற அவள் அப்பொழுதே ஒருபதியைப் பெறாமல் மறுபிறப்பில் ஐந்துபதிகளைப் பெறவேண்டுமே யென்று கொண்ட சோகத்தோடு கங்கையில் முழுகியெழுகையில், அவளது விழிகளினின்றுபெருகிய கண்ணீர் கங்கையில்விழுந்து பொற்றாமரையானசெயலை அங்குவந்ததேவேந்திரன் பார்த்து 'இது என்ன?'என்று வினவிக்கொண்டு அவளை அடுத்தன னென்பதாம்.

முன்னொருகாலத்தில் நைமிசாரணியத்திலே தேவர்கள் யாகஞ் செய்கையில்,யமன் தீட்சிதனாய் நெடுநாள் வைதிகச்சடங்கிலிருந்த தனால் தனது அதிகாரத்தொழிலைச் செலுத்தாதொழியவே, பூமியில் சனங்கள் மரணமில்லாமல் மிகுதிப்பட்டுக் கொழுத்திட, அது கண்டு அஞ்சிய இந்திரன் சந்திரன் வருணன் குபேரன் முதலிய தேவர்கள் பிரமனைச் சரணமடைந்து செய்தி கூறலும், அக்கடவுள் 'உங்கள் வீரியத்தால் வளர்ந்த யமனுடைய வேறொரு சொரூபம் அச்சனங்களைக் கொல்லும்'என்றுகூறியனுப்பியவுடனே அவர்கள் மேலுலகிலிருந்து பூலோகத்து நைமிசாரணியத்தைக்குறித்து வரு

கையில் கங்கையிலே ஒரு பொற்றாமரைமலரைக் கண்டுஅதிசயிக்க, அவர்களுள் இந்திரன் அம்மலரினருகில்நின்ற மங்கையைநோக்கி 'இதுஎன்?' என்று வினவினனென முதனூலால் விவரம்உணர்க.

83. அவனைத்தொடர்பால்வருகென்ன வவனுமாங்கண்
சிவனைச்சிறிதுமதியாதெதிர் சென்றகாலை
இவனுக்கென்மேன்மையெனச்சீறலு மெஞ்சினன்போற்
புவனத்தவருநகையாடப் புலம்பிவீழ்ந்தான்.

(இ - ள்.) அவனை - அங்ஙனம் தன்முன்வந்த இந்திரனை, தொடர்பால் வருக என்ன - என்பின்னே வருவாயாக என்று (இந்திரசேனை) அழைக்க,அவன்உம் - அவ்விந்திரனும், ஆங்கண்- அவ்வாறே அவளைத்தொடர்ந்து சென்றஇடத்தில், சிவனை சிறிதுஉம் மதியாது - (எதிர்ப்பட்ட) சிவபிரானைச் சிறிதும்இலட்சியஞ்செய்யாமல், எதிர் சென்ற காலை - அவனெதிரிலே சென்ற பொழுது, (அப்பெருமான்), இவனுக்கு மேன்மை என் என சீறலும்-'இவனுக்கு இவ்வளவு செருக்கு என்ன?' என்று கருதிக் கோபங்கொண்ட வளவிலே, (அவ்விந்திரன்), எஞ்சினன் போல் - இறந்தவன்போல, புவனத்துஎவர்உம் நகையாட புலம்பிவீழ்ந்தான்-உலகத்திலுள்ளோரெல்லோரும் (தனதுநிலையைக் கண்டு) பரிகசிக்கும்படி வருந்திக் கீழ்விழுந்தான்; (எ - று.)

அங்ஙனம்வினவியவனை அவள் தன்னுடன்வந்து செய்தியறிந்துகொள்ளும்படி சொல்லி அழைக்க, அவ்வாறே அந்த இந்திரன் அவளைத் தொடர்ந்து செல்லுகையில்,அங்கு மனைவியுடன் சூதாடிக்கொண்டிருந்த சிவபிரானை மதியாது அலட்சியஞ்செய்து செருக்கிப்பேச,உருத்திரமூர்த்தி கோபித்துச் சிரித்துக்கொண்டே அவனைநோக்கிய மாத்திரத்தில் அவன் தபிக்கப்பட்டவனாய் மரம்போல நின்றிட, பின்பு சிவபிரான் சூதாட்டம்முடிந்தவுடன், அழுது கொண்டுநின்ற இந்திரசேனையை நோக்கி 'இவனை அருகிற்கொண்டு வா; இனி, இவன் செருக்குறான்' என்றுகூற அங்ஙனமே அவள் போய் அவ்விந்திரனைத் தொட்டவளவில், அவன் உடல்நடுங்கித் தரையில் விழுந்திட்டனனென்பதாம்.(558)

84. வெவ்வாயுதங்களுதவாமல் விபுதநாதன்
இவ்வாறுவீழமழுவாளி யிமைப்பின்மீண்டும்
அவ்வாசவற்குப்பிலமொன்றி லடைத்தவச்ரக்
கைவாசவர்களொருநால்வரைக் காட்டினனே.

(இ - ள்.) வெம் ஆயுதங்கள் உதவாமல் - கொடிய (வச்சிரம் முதலிய தனது) ஆயுதங்கள் ஒன்றும் பயன்படாமலே, விபுதநாதன்-தேவராசனான இந்திரன், இமைப்பின்-ஒருமாத்திரைப் பொழுதிலே, இ ஆறு வீழ-இப்படிக் கீழ்விழுந்திட,—மழு ஆளி-மழுவையுடையவனாகிய சிவபிரான்,—மீண்டுஉம்-பின்பு, அ வாசவற்கு-அவ்விந்திரனுக்கு, பிலம் ஒன்றில் அடைத்த வச்ரம் கை வாசவர்கள் ஒரு நால்வரை - ஒருபிலத்தினுள் (முன்புதான்) அடைத்து வைத்திருந்த வச்சிரமேந்திய கையையுடைய இந்திரர் நால்வரை, காட்டினன்-காண்பித்தான்; (எ - று.)

சிவபிரான் இந்திரனை நோக்கி 'இனி இப்படி ஒருபொழுதும் உபேக்ஷை செய்யாதே' என்று அறிவுகூறி ஒருமலையிடையிலுள்ள ஒருகுகையைக் காட்டி 'உன்னைப்போன்றவர்கள் அடங்கிய இதற்குள் நீயும் செல்' என்றுசொல்ல, அவன் அப்பிலவாயிலைத்திறந்து அதனுள் அடைபட்டிருப்பவர்களை நோக்கி 'நான் இங்ஙனம் ஆகாதிருக்க வேண்டும்' என்று கருதுமளவிலே, உருத்திர மூர்த்தி சினங்கொண்டு உறுக்கி விழித்துப்பார்த்து 'நீ இளமையினால் என்னை அவமதித்ததுபற்றி, இதற்குள் நுழை' என்று அதட்டி வலியப்புகுத்த, கூப்பியகையனாய் அவன் உட்புகுவானாயினன் என முதனூலில் விவரம் காண்க. பிலம் - பாதாள அறை. (559)

85. வன்பாதலத்தில்வருநால்வரும் வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடி போற்றிநிற்ப
அன்பான்மகிழ்நரிவட்கைவரு மாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப் புவிமீதுவந்தார்.

(இ - ள்.) வல் பாதலத்தில் வரும்-கொடியபிலத்தில் முன்னமே பொருந்திய, நால்வர்உம்-நான்குஇந்திரர்களும், வானில் வந்த புல் பாகசாதனன்உம் -(அப்பொழுது) சுவர்க்கலோகத்தினின்று வந்த எளிமையையுடைய இந்திரனும், தன் அடி போற்றி நிற்ப-தனது திருவடிகளை வணங்கிநிற்க, மெல் பாவை பங்கன் - மென்மையையுடையஅழகிய உமாதேவியை வாமபாகத்திலுடைய சிவபெருமான்,(அவர்களை நோக்கி),அன்பால் ஐவர்உம் இவட்கு மகிழ்நர் ஆதிர்என்று விதிக்க - 'அன்போடு நீங்கள் ஐந்துபேரும் இவளுக்குக் கணவராவீர்' என்று கட்டளையிட,(அவ்வாறே அந்தஐந்து இந்திரர்களும்), புவிமீது வந்தார்-பூமியில் வந்துபிறந்தார்கள்;

அங்ஙனமே அந்த இந்திரர்கள்ஐவரும் பிறப்பவராயினரென்பதாம். அங்ஙனம்பிலத்தினுட் புகுகிற இந்திரன் சிவபிரானைத் துதிக்க, அப்பெருமான் அவனையும் மற்றைநால்வரையும் நோக்கி, "என்னைமதியாத குற்றத்தால், நீங்களைவரும் பூலோகத்தில் மனுஷ்யராசராய்ப் பிறந்து, இராசகன்னிகையாக மறுபிறப்பெடுக்கும் இவளொருத்தியை மணம்புரிந்துகொண்டு, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்து குற்றந்தீர்ந்து மீண்டும் விண்ணுலகமடைவீர்" என்று கட்டளையிட, அவ்விந்திரர்ஐவரும் 'நாங்கள் மானுடப்பிறப்பெடுக்கையில் எங்கட்கு யமனும் வாயுவும் இந்திரனும் அசுவினீதேவர்களும் தந்தையராகுக' என்றுவேண்ட,முக்கட்கடவுள் அங்ஙனமே அருள்செய்து அவர்கட்கு இம்மங்கையை மனையாளாகுமாறு நியமித்தான் என்ற விவரத்தை முதனூலிற் காணலாம். முந்திய இந்திரர்நால்வர் விஸ்வபுக், பூததாமா, ஸிபி, ஸாந்தி என்பவர்; பிந்திய இந்திரன் பெயர், தேஜஸ்வி என்பது. பாகஸாஸநன் என்ற பெயர்-பாகனென்ற அசுரனை அழித்தவனென்று பொருள்படும்; பாகன்-விருத்திராசுரனுடன் பிறந்தவன்.

86. தருமன்பவனன்றினநாதன் றனயர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வரு மானைமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித் தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன் பிதாவுமானன்.

(இ - ள்.) மாலை மார்பா-மாலையையணிந்த மார்பையுடைய துருபதராசனே! தருமன் - யமதருமராசனும், பவனன்-வாயுதேவ னும், தினம் நாதன் தனயர் தம்பால்-பகற்பொழுதுக்குத் தலைவனா கிய சூரியனுடைய புத்திரர்களான அசுவினிதேவர்களும் ஆகிய இந்நால்வர்களின் சம்பந்தத்தால், வரும்-பிறந்த, இந்த நால்வர் - யுதிட்டிரன் வீமசேனன் நகுல சகதேவர்கள் என்கிற நான்குபேரும், அவர் நால்வர்உம்-முன்னமே பிலத்தில் அடைபட்டிருந்த அந்த நான்கு இந்திரர்களுமாவர்: தெருமந்த இந்த சிலை வீரன்-(பகைவர் மனம்) சுழலுதற்குக் காரணமான இந்த வில்லைக் கையிலேந்திய வீரனான அருச்சுனன், இதேவர்க்கு எல்லாம் பெருமன்-கீழ்க்கூறிய தேவர்களுக்கெல்லாம் அரசனான இந்திரன்: பிறப்பிற்கு - இவன் பிறத்தற்கு, அவனே-இந்திரனே, முன்-முன்பு, பிதாஉம் ஆனான்- தந்தையுமாயினான்; (எ - று.)

தேவவைத்தியர்களாகிய அசுவினிதேவர், பெண்குதிரைவடி வங் கொண்டு வனத்திலொளித்திருந்த சமிஜ்ஞைஎன்னும் மனைவி யினிடத்துக் குதிரைவடிவமாய்ச் சேர்ந்த சூரியனுக்குப் பிறந்த இரட்டைப்பிள்ளைகளாதலால்,'தினநாதன் தனயர்' எனப்பட்டனர். 'தம்மால்' என்றும் பாடம் உண்டு. (561)

87. இம்மாதுதொல்லையருமாதவத் தெல்லைகண்ட
அம்மாதிவள்காதலரைவரு மாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன் றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞான விழியுமீந்தான்.

(இ - ள்.) இ மாது -இந்தப் பெண் [திரௌபதி],—தொல்லை- முற்பிறப்பில், அரு மா தவத்து எல்லை கண்ட-அரிய பெரிய தவத் தின் எல்லையைக் கண்ட [தவத்தை முற்றுஞ்செய்த], அ மாது- அந்த இந்திரசேனையென்னும் பெண்ணானவள்: (ஆதலால்), ஐவர் உம்-இந்தப்பாண்டவர் ஐந்துபேரும், இவள் காதலர் ஆக-இவளுக் குக் கணவராகக்கடவர்,என்று-என்று சொல்லி, தெவ் மாதர் முன் பூண் கவர் மன்னன் தெளியும் ஆறு-பகைவர்களுடைய மனைவியர் களின் மங்கலநாணைக் கவர்கின்ற பாஞ்சாலராசன் நன்குதெளியும் படி,வெம்மாதவத்தோன்-கொடிய[செய்தற்கரிய]பெருந்தவத்தைச் செய்தவனான அந்த வியாசமுனிவன்,பெருஞான விழிஉம்ஈந்தான்- (அவ்வரசனுக்குச்) சிறந்தஞானக்கண்ணையுங் கொடுத்தருளினான்.

பாண்டவரைவரும் திரௌபதியும் என்ற இவர்களது முற்பிறவி வரலாற்றை வியாசன் துருபதனுக்கு எடுத்துக்கூறித் தெளிவித்ததுமல்லாமல், இவ்வுண்மையை அத்துருபதன் தானே தெளிந்துகொள்ளும்படி அவனுக்குத் திவ்வியமான ஞானக்கண்ணை யும் தனது தவமகிமையால் அருளினனென்பதாம். இவ்வரலாறு முழுதையும் வியாசன் துருபதனைத் தனியே அழைத்துச் சென்று அவனுக்குமாத்திரமே கூறினனென முதனூல் தெரிக்கும்.

மாங்கலியசூத்திரம் 'முற்பூண்' எனப்பட்டது. பகைவர்களைத் தவறாது கொல்பவனென்ற பொருளில் 'தெம்மாதர்முற்பூண் கவர் மன்னன்' என்றது - பிறிதினவிற்சியணி. 'மெய்ம்மாதவத்தோன்' என்றும் பாடம். (562)

## 88.—வியாசர்வார்த்தையால் துருபதன் மனந்தெளிதல்.

ஓதாதுணர்ந்துமறைநாலு முருவுசெய்த
வேதாவுமோவ்வாவியாதன்மொழி வெள்ளநீரால்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன் கோடிகோடி
தோதானவண்டுதுதைமாலைகொள் சோமகேசன்.

(இ-ள்.) ஓதாது உணர்ந்து-(எவரிடத்தும்)கற்காமலே (எல்லா நூல்களையும்) தானாக அறிந்து, மறைநால்உம்-நான்குவேதங்களையும், உருவுசெய்த-(வகுத்து) ஒழுங்குபடுத்திய, வேதாஉம் ஒவ்வா வியாதன்-பிரமனும் உவமையாகமாட்டாத வியாசமுனிவனுடைய, மொழி-வார்த்தையாகிய, வெள்ளம் நீரால் - நீர்ப்பெருக்கினால்,— தோது ஆன கோடிகோடி வண்டு துதை மாலைகொள் சோமகேசன்-வரிசையாகவருகின்ற பலகோடிக்கணக்கான வண்டுகள் நெருங்கிய பூமாலையைத் தரித்த சோமககுலத்தார்க்குத் தலைவனாகிய துருபதன், கோது ஆன நெஞ்சை குளிப்புஆட்டினன் - களங்கங்கொண்ட (தன்) மனத்தை நன்றாகக்கழுவினான்; (எ - று.)

மாசுபடிந்த உடம்பை நீரினாற்குளிப்பாட்டித் தூயதாக்குதல் போல, கலக்கங்கொண்ட தன்மனத்தை வியாசர்வார்த்தையாற் சீர்ப்படுத்தி அக்களங்கத்தை யொழித்தனனென்பதாம்; உருவகவணி. வியாதன் வகுத்த மறைவகுப்புக்களின் பெயர் - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்என்றும், இவன்வகுத்தற்கு முன் தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம்என வேதம் நானகாகவழங்கிய தென்றும் கூறுப. உலகோருணரும்படி வேதத்தைப்பகுத்துக் கொடுத்ததனால்,வியாதனுக்கு வேதாவும்ஒவ்வானென்க. 'தூதான வண்டு' எனப் பாடமோதி-இவனிடத்துக் காதல்கொண்ட மகளிர் தூதாகஅனுப்பிய வண்டுகளெனப் பொருள் உரைத்தலும் ஒன்று.

## 89.—துருபதன் தன்மகளை ஐவர்க்கும்மணம்புரிவிக்கத் தொடங்கல்.

வியப்போடுதொல்லைமுனிசொற்றலை மீதுகொண்டு
பயப்போன்மகண்மேற்புரிகின்ற பரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும் வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தன னன்கோர்நாளில்.

(இ - ள்.) பயப்போன் - (திரௌபதியைப்) பெற்றவனான யாகசேனன், தொல்லை முனிசொல்-பழமையான வியாசமுனிவனுடைய வார்த்தையை, வியப்போடு தலைமீது கொண்டு-ஆச்சரியத்தோடு (தனது) முடியின் மேற்கொண்டு [நன்குமதித்து], மகள்மேல் புரிகின்ற பரிவினுக்குஉம் - (தனது) பெண்ணாகிய அத்திரௌபதியினிடம் (தான்) வைத்திருக்கிற அன்புக்கும், வயம் போர் நிருபர் பெருமைக்குஉம்-வெற்றியையுடைய போர்செய்யவல்ல அரசர்களாகிய அப்பாண்டவர்களுடைய பெருமைக்கும், வலிக்கு உம் - (தனது) சக்திக்கும், ஈடு ஆ-தகுதியாக, நன்கு ஓர் நாளில் - நல்ல ஒரு சுபதினத்தில், நயப்போடு மன்றல் அயர்வித்தனன்-விருப்பத்தோடு விவாகஞ்செய்விப்பவனானான்; (எ - று.) (564)

### 90.—பாண்டவரைவரும் கலியாணமண்டபஞ் சேர்தல்.

பாடுஞ்சுருதிமறைவாணரும் பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந் தொக்குநிற்ப
நீடுங்கதிர்மாமணித்தூண்க ணிரைத்தபத்தி
ஆடுங்கொடிமண்டபமெய்தின ரண்டர்போல்வார்.

(இ - ள்.) பாடும் - ஸ்வரத்தோடு சொல்லுகிற, சுருதி-வேதங்களையுடைய, மறை வாணர்உம் - வைதிகபிராமணர்களும், பாரில் உள்ள - பூமியிலுள்ள, சூடும் கனகம் முடி வேந்தர்உம் - தரித்த பொன்மயமான கிரீடத்தையுடைய அரசர்களும், தொக்கு நிற்ப - திரண்டுநிற்க,—அண்டர் போல்வார் - தேவர்கள்போன்ற பஞ்ச பாண்டவர்கள்,—நீடும் கதிர் மா மணி தூண்கள் நிரைத்த பத்தி - நெடுந்தூரஞ்சென்றுவிளங்குகிற ஒளியையுடையசிறந்தஇரத்தினங்கள்பதித்ததூண்களை வரிசையாகவைத்தஒழுங்கையுடைய,ஆடும் கொடி மண்டபம் - அசைகின்ற கொடிகள் கட்டிய மண்டபத்தை, எய்தினர்-அடைந்தார்கள்; (எ-று.)—'கனமாமணி' என்றும்பாடம்.

### 91.—தருமனுக்கும் திரௌபதிக்கும் நடந்த விவாகத்தை இதுமுதல் ஐந்து கவிகளிற் கூறுகிறர்.

குறிக்கும்பணிலமுதலாயிர கோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும் பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச் செம்பொன்வேதி
எறிக்குங்கிரணமணிப்பீடம தேற்றினுரே.

(இ - ள்.) குறிக்கும் பணிலம் முதல் - ஊதப்படுகிற சங்க வாத்தியம்முதலாக, ஆயிரம் கோடி ஆக பிறிக்கும் கருவி - மிகப் பலவாகப் பகுக்கப்படுகிற வாத்தியங்கள், இடம் தோறுஉம் பிளிறி ஆர்ப்ப - பலவிடங்களிலும் மிகுதியாக முழங்க,—செறிக்கும் கழல் கால் அறன் மைந்தனை - உறுதியாக அணிந்த வீரக்கழலையுடைய பாதத்தையுடைய தருமபுத்திரனை, செம்பொன் வேதி - சிவந்த பொன்னினுற் செய்யப்பட்ட விவாகவேதிகையிலுள்ள, எறிக்கும் கிரணம் மணி பீடம்அது-வெளிவீசுகிற கிரணங்களையுடைய இரத்தினங்கள் பதித்த ஆசனத்தில், ஏற்றினர் - இருக்கவைத்தார்கள்.

இதற்குஎழுவாய்,முன்நின்று மணத்தைநடத்தும் புரோகிதன் முதலியோர்: அடுத்தகவியில் "வலத்தில் வைத்தார்"என்பதற்கும் 94 - ஆம் கவியில் "தீவலஞ்செய்வித்தார்" என்பதற்கும், இங்ஙனமே காண்க. கருவி - தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி, நரப்புக்கருவி என நால்வகைப்படும். (566)

92. இடத்தோளிவட்கும்வலத்தோளிவ் விறைவனுக்கும்
திடத்தோடுரைத்தகுறியின்பயன் சேர்ந்துதோய
விடத்தோடமுதங்கலந்தென்ன மிளிரும்வேற்கண்
வடத்தோடிவிம்முமுலையாளை வலத்தில்வைத்தார்.

(இ - ள்.) இவட்கு இடம் தோள்உம் - இந்தத்திரௌபதியின் இடத்தோளும், இ இறைவனுக்கு வலம் தோள்உம்-இந்தத் தரும

புத்திரனது வலத்தோளும், இடத்தோடு உரைத்தகுறியின் பயன் சேர்ந்து-உறுதியாகச் சொல்லப்பட்ட உத்தமஇலக்கணங்களுக்கு உரிய பயனை யடைந்து, தோய - (ஒன்றோடொன்று) பொருந்தும்படி,-விடத்தோடு அமுதம் கலந்து என்ன மிளிரும்வேல்கண்வடத்தோடு விம்மும் முலையாளை - விஷத்துடனே அமிருதங் கலந்தாற்போலவிளங்குகிற வேல்போலுங் கண்களையும்ஆரத்தோடுபூரிக்கிற தனங்களையு முடையவளான திரௌபதியை, வலத்தில் வைத்தார்-(தருமபுத்திரனது) வலப்பக்கத்தில் இருக்கவைத்தார்கள்; (எ-று.)

மணமகனது வலப்பக்கத்தில் மணமகள் இருக்கும்போதுமணமகனது வலத்தோளும் மணமகளது இடத்தோளும் ஒன்றோடொன்று பொருந்துகிற இயல்பை விளக்குவார், 'இடத்தோளிவட்கும் வலத்தோளிவ்விறைவனுக்குந்தோய முலையாளை வலத்தில்வைத்தார்' என்றார். ஆடவருக்கு வலப்பக்கத்து உறுப்புக்களிலும் மகளிர்க்கு இடப்பக்கத்து உறுப்புக்களிலும் உத்தமவிலக்கணம் சிறத்தலாகிய இயல்பின்படி இவர்கள்தோள்களிற் காணப்பட்ட நல்லிலக்கணங்கள் இப்பொழுது பலிக்க என்றது, 'குறியின் பயன்சேர்ந்து' என்றதன் கருத்து. இடத்தோடு உரைத்த குறி-சாமுத்திரிகசாஸ்திரலக்ஷணம் அறிந்தவர்கள் நன்குஆராய்ந்து இவை இன்னபயன் தருமென்று எடுத்துக்கூறியஉத்தமலக்ஷணங்கள். கண்களிற் சுற்றிலு மிருக்கிற வெண்ணிறத்தையும்,இடையிலுள்ள விழியின் கருநிறத்தையுங் கருதி, 'விடத்தோடமுதங் கலந்தென்ன மிளிருங் கண்' என்றார். (567)

93. கேள்விக்கொருவன்னெனுந்தௌமியன் கீதவேத
வேள்விக்குவேண்டுவனயாவும் விதியினீட்டி
முள்வித்தசெந்தீக்கரியாக முரசுயர்த்த
தாள்வித்தகற்குவரமான சடங்குசெய்தான்.

(இ - ள்.) கேள்விக்கு - நூற்கேள்வியில், ஒருவன் எனும் - ஒப்பில்லாதவனென்று சொல்லப்படுகிற, தௌமியன் - தௌமிய முனிவன்,—கீதம் வேதம் வேள்விக்கு வேண்டுவன யாஉம்-சுவரங்களோடுகூறப்படுகிற வேதங்களின் விதிப்படி செய்யப்படுகிற விவாகத்துக்கு வேண்டுவனவான பொருள்களை யெல்லாம், விதியின் ஈட்டி - சாஸ்திரவிதிப்படி தொகுத்துவைத்துக்கொண்டு, மூள்வித்த செம் தீ கரி ஆக-(மந்திரபூர்வமாகச்) சுவலிக்கச்செய்த சிவந்த அக்கினி சாட்சியாக [ஓமாக்கினியின் முன்னிலையிலே], முரசுஉயர்த்த தாள் வித்தகற்கு-முரசவாத்தியத்தின் வடிவத்தை யெழுதினகொடியை உயரநாட்டிய முயற்சியையும் ஞானத்தையுமுடையவனான தருமபுத்திரனுக்கு, வரம் ஆன சடங்கு செய்தான்-மேன்மையான விவாகத்துக்கு உரியதான மங்கலச்சடங்கைச் செய்வித்தான்; (எ - று.)

வேள்விக்கு வேண்டுவன - சமித், தர்ப்பம், பொரி, தீர்த்தம், நெய், அக்ஷதை, அம்மி, பாலிகை முதலியன. வாள்வித்தகற்கு எனவும்பாடம். (568)

94. பன்மங்கலமுமுடன்வைகிய பண்பினுளை
நன்மங்கலப்பூண்டுகிலோடு நயந்துசாத்தித்

தன்மங்கலந்தமனத்தோனையத் தையலோடுந்
தென்மங்கலச்செஞ்சுடர்த்தீவலஞ் செய்வித்தாரே.

(இ-ள்.)பல் மங்கலம்உம்-பலமங்களங்களும்,உடன் வைகிய-ஒருசேரத் தங்கிய, பண்பினாளை-தன்மையையுடையளான திரௌபதிக்கு, துகிலோடு-புதியபட்டாடையுடனே, நல் மங்கலம் பூண்-இருமங்கலியத்தை, நயந்து சாத்தி-விரும்பியணிவித்து, தன்மம் கலந்த மனத்தோனை-தருமம்பொருந்தியமனத்தையுடையவனை தருமபுத்திரனை, அத்தையலோடும்-அந்தப்பெண்ணினுடனே, தென்மங்கலம்செம்சுடர் தீவலம்செய்வித்தார்-அழகியமங்களகரமானசிவந்த சுவாலையையுடையஓமாக்கினியைப்பிரதட்சிணஞ்செய்வித்தார்கள்.

பாணிக்கிரகணத்தின்பின் மணமகன் தன்கையால்மணமகளது கையைப்பற்றிக்கொண்டு அக்கினியை வலம்வருதல், ஒருசடங்கு. துகில்-கூறையென்று சிறப்பித்துச்சொல்லப்படும். சாத்தி-சாத்துவித்து. 'தென்மங்கலஞ்செஞ்சுடர்தீவலஞ்சூழுவித்தார்' என்றும், 'தொன்மங்கலச் செஞ்சுடர்த்தீவலஞ்சூழுவித்தார்'என்றும்பாடம்.

95. கங்குற்பவளவனமீது கடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள்சிந்திப் பொழியுமாபோல்
அங்கிப்புறத்துத்திருக்காப்பணி யங்கையேந்திச்
செங்கட்கரியகுழலாள்பொரி சிந்தினளே.

(இ - ள்.) கங்குல் - இராப்பொழுதில், கடல் தரங்கம்-கடலின் அலை, பொங்கி-பொங்கியெழுந்து, பவளம் வனம்மீது-பவளக்கொடிகளின்தொகுதியின்மேல், தரளம்திரள் - முத்துக்களின் கூட்டத்தை, சிந்தி பொழியும் ஆபோல் - வீசிச்சொரியும்விதம் போல,—செம்கண் கரிய குழலாள் - சிவந்தகண்களையும் கரியகூந்தலையுமுடையளான திரௌபதி, திரு காப்பு அணி அம்கைஏந்தி-மங்கலகரமான ரக்ஷாபந்தனத்தை யணிந்த அழகிய (தன்) கைகளில் எடுத்து, அங்கிப்புறத்து பொரிசிந்தினள்-அக்கினியில் நெற்பொரியைச்சொரிந்தாள்; (எ-று.)

லாஜஹோமம்[பொரிகொண்டு ஓமஞ்செய்தல்]என்றவிவாகச்சடங்கு, இதிற் கூறப்பட்டது. கருநிறமுடைய திரௌபதிசெந்நிறமுடைய தீயில் வெண்ணிறமுடையபொரியைக்கையாற்சொரிதற்குக் கருங்கடல் பவளக்காட்டில் முத்துத்திரளை அலையாற் சொரிதலை உவமைகூறினர். திருக்காப்பு - கங்கணம். காப்பு- காவல்; பாதுகாவலுக்காக அணியப்படுவதான விவாககங்கணத்துக்கு இங்கு ஆகுபெயர். 'கங்கிற் பவளவனம்' என்றும் பாடம். (570)

96.—இவ்வாறே பின்பு திரௌபதிக்கும் வீமன்முதலியநால்வர்க்கும் தனித்தனி நிகழ்ந்த விவாகச் சடங்குகளை இதிற் கூறுகிறர்.

இவ்வாறுமன்றலயர்வித்தபி னீன்றகாதல்
வெவ்வாரழலின்முறைமுழ்கினன் மீண்டுதோன்ற
மைவாரளகவடமீனிகர் கற்பினளை
அவ்வாறுமற்றையொருநால்வரு மன்றுவேட்டார்.

(இ - ள்.) இ ஆறு-இவ்வகையாய், மன்றல் அயர்வித்தபின்-(தருமனுக்கும் திரௌபதிக்கும்) விவாகஞ்செய்வித்தபின்பு,—

(திரௌபதி), ஈன்ற காதல் வெவ் ஆர் அழலில்- (தன்னைப்)பெற்ற தான அன்பையுடைய வெவ்வியநிறைந்த ஓமாக்கினியில், முறை மூழ்கினள்-முறையே மூழ்கி, மீண்டுதோன்ற-மீண்டும்எழுந்துவர, மை வார் அளகம் வடமீன் நிகர் கற்பினளை - கரிய நீண்ட கூந்தலை யுடைய அருந்ததிபோன்ற கற்புநிலையையுடையளான திரௌபதி யை, அ ஆறு - கீழ்க்கூறியபடியே, மற்றை ஒரு நால்வர்உம் - (வீமன் முதலிய) மற்றைநான்குபாண்டவர்களும், அன்று - அன் றைத்தினத்திலேயே, வேட்டார்-மணஞ்செய்துகொண்டார்கள்;

'முறை' என்றதனால், நால்வரையும் மணஞ்செய்யும்போதுஒவ் வொருவர்க்கு ஒவ்வொருமுறை அக்கினிபிரவேசஞ்செய்து மீண்டு எழுந்தனளென்க. அக்கினிபிரவேசஞ்செய்து மீண்ட செய்கை, வியாசபாரதத்திலாவது பாலபாரதத்திலாவது காணப் படவில்லை. "பபூவகந்யைவகதேகதேஹநி" என்று வியாசபாரதத் தில்வருவதை யொட்டி இங்ஙன்கூறினர்போலும். ஒவ்வொருவ ரையும் மணஞ்செய்யும்போது கன்னிகையாயிருத்தல் வேண்டு மாதலால், அதன் பொருட்டு,தீக்குதித்து எழுந்தன ளென்க. முன்பு தீயினின்றுபிறந்தவள் மீண்டுமீண்டும் தீயினின்றேபிறந்த தன்மை தோன்ற 'ஈன்ற அழல்' எனப்பட்டது. இவள்தீக்குதித்த பொழுதுஇவளுடம்பைத் தீ எரித்துஒழித்திடாமைபற்றி, 'காத லழல்' என்றார். பலஆடவரை மணஞ்செய்தவிடத்தும் அதனால் அவள்கற்பிற்குக் குறைவில்லை யென்பார் 'வடமீனிகர்கற்பினள்' என்றார். (571)

## 97.—துருபதன், மருமக்களுக்குப் பலவகைவரிசைகளை அளித்தல்.

மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீரால்
ஈரம் புலராக் கரத்தோருக்கி யாக சேனன்
தேரும் பரியுங் களிறுந்திரள் சேனை யாவும்
பாருந் தனமு முமதென்று பலவு மீந்தான்.

(இ - ள்.)மாரன் கரும்பு வளரும்படி - மன்மதனுடைய(வில்லா கிய) கரும்பு வளரும்படி, வார்த்த-(தான்) தாரைவார்த்துத் தத் தஞ்செய்த, நீரால்-நீரை ஏற்றுக்கொள்ளுதலால், ஈரம் புலரா-ஈரம் நீங்காத, கரத்தோருக்கு-கையையுடைய பாண்டவர்க்கு, யாகசே னன் - துருபதன், தேர்உம்-தேர்த் தொகுதியையும், பரிஉம் - குதிரைக்கூட்டத்தையும், களிறுஉம் - யானைத்திரளையும், திரள் சேனை - திரண்டகாலாட்சேனையையும், யாஉம் - ஆகச் சதுரங்க சேனைகளையும், பார்உம்-பூமியையும், தனம்உம்-செல்வத்தையும், பலஉம் - மற்றும் பலவற்றையும், உமது என்று - உங்கட்கு உரிய தென்று (தனித்தனி) கூறி, ஈந்தான் - கொடுத்தான்; (எ - று.)

கன்னிகையின் தந்தை மந்திரபூர்வமாகத் தானநீரைத் தன் கையால் மருமகன் கையில் வார்த்துக் கன்னிகாதானஞ்செய்ய, அதனை அவன் ஏற்றல் இயல்பு. ஒருவன் தன்மகளை ஒருவனுக் குக் கன்னிகாதானஞ்செய்தபின், அவர்கள் தம்மிற்கூடி வாழ்த லால், 'மாரன் கரும்பு வளரும்படி வார்த்த நீர்' என்றார்; மன்மத னது வில்லின்தொழில், வாழ்க்கையின்பமாம். (572)

வேறு.

### 98.—பாண்டவரின்செய்தியை யறிந்த துரியோதனுதியர் மீண்டுவந்து அவரோடு பொருதல்.

ஆண்டு மன்றல்பெற் றங்குரித் தாரிகற்
பாண்டு மைந்த ரெனுஞ்சொற் பரவலும்
தாண்டு வெம்பரித் தேர்த்தார்த்த ராட்டிரர்
மீண்டும் வந்தவர் மேல்வினை செய்யவே.

இதுவும், அடுத்த கவியும்-குளகம்.

(இ -ள்.) 'இகல் பாண்டு மைந்தர்-வலிமையையுடையபாண்டுவின் குமாரர்கள், ஆண்டு - அவ்விடத்தில் [பாஞ்சாலநகரத்தில்], மன்றல் பெற்று-விவாகத்தைப் பெற்று, அங்குரித்தார்-(மீண்டும்) முளைத்துத் தோன்றினுர்கள்,' எனும்-என்கிற, சொல்-வார்த்தை, பரவலும் - (எங்கும்) பரவியவளவிலே,—தாண்டு வெம் பரி தேர் தார்த்தராட்டிரர்-தாவிச்செல்லுகிறவேகமுள்ள குதிரைகள்பூண்ட தேரையுடைய திருதராட்டிரன் பிள்ளைகள் [துரியோதனுதியர்], மீண்டுஉம் வந்து - திரும்பி வந்து, அவர்மேல் வினைசெய்ய - அப்பாண்டவர்கள்மேல் போரைத் தொடங்கிச் செய்ய,—(எ - று.)— 'வென் கண்டது' என அடுத்த கவியோடு முடியும்.

தார்த்தராஷ்ட்ரர் - வடசொல்; த்ருதராஷ்ட்ர னென்பதன்மேல் வந்த தத்திதாந்த நாமம்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும்-பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும்,மற்றவை விளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள்.

### 99.—துருபதன்சேனை துரியோதனன்சேனையை வெல்லல்.

சென்றசேனையுந் திட்டத்துய்மன்னுடன்
நின்றசேனையு நேருறுபூசலில்
கொன்றசேனை யொழிகுருசேனையை
வென்றசேனை வெருண்டுவென்கண்டதே.

(இ - ள்.) சென்ற சேனைஉம் - (துரியோதனுதியர் கொண்டு சென்ற (கௌரவ) சேனையும்,திட்டத்துய்மன்னுடன் நின்ற சேனைஉம்-(துருபதகுமாரனுன)திருஷ்டத்யும்நனுடனே நின்ற(பாஞ்சால) சேனையும், நேர்உறு-(தம்மில்) எதிர்த்துச்செய்த, பூசலில் - பெரும் போரில், கொன்ற சேனை ஒழி குரு சேனையை - கௌரவசேனையில் கொல்லப்பட்ட பகுதியொழிய எஞ்சிநின்ற பகுதியை, வென்ற சேனை வெருண்டு வென் கண்டது-வெற்றி கொண்ட பாஞ்சால சேனை கோபங்கொண்டு முதுகு கொடுக்கச்செய்தது; (எ - று.)

திட்டத்துய்மன் சேனைத்தலைவனுய்ப் போர்நடத்தியதனுல், 'திட்டத்துய்மன்னுடன் நின்ற சேனை' எனப்பட்டது. திட்டத்துய்மன்னுடன், ன்-விரித்தல். 'கண்டவே' என்றும் பாடம். (574)

## 100.—துரியோதனுதியர்தொகுதிக்குப் பாம்பின்வடிவோடு ஒப்பு.

சாலும்வஞ்சச் சகுனியொடெண்ணிய
நாலுமைந்தரு நச்செயிருகவும்
வாலுமெய்யும் வருக்கங்களாகவும்
ஆலும்வெம்பகை யாடரவானதே.

(இ - ள்.) சாலும் வஞ்சம்-மிக்க வஞ்சனையையுடைய, சகுனியொடு-சகுனியுடன், எண்ணிய-(சேர்த்து) எண்ணப்படுகிற, நாலு மைந்தர் உம்-நான்கு வீரர்களும் [சகுனி கர்ணன் துரியோதனன் துச்சாதனன் என்ற நால்வரும்], நஞ்சு எயிறு ஆக உம்-விஷப்பற்களாகவும், வருக்கங்கள்-(துரியோதனனது) மற்றைத் தம்பியர்வரிசை, மெய் உம் வால் உம் ஆக உம்-உடம்பும் வாலு மாகவும், ஆலும்வெம் பகை-ஆரவாரிக்கின்ற கொடிய பகைவர்தொகுதி, ஆடு அரவு ஏ ஆனது -படமெடுத்து ஆடுகின்ற நாகப்பாம்பையே போன்றது.

உருவகவணி. நாகம் பிறரைவருத்துதற்குக் காளி காளாத்திரி யமன் யமதூதி என்ற நான்கு விஷப்பற்களே கருவியாதல் போல, சகுனி முதலிய துஷ்டசதுஷ்டர்களே இத்தொகுதிக்குத் தலைவராய் நிற்றலால், 'நாலு மைந்தரு நச்செயிறு' எனப்பட்டது. வருக்கம்-அணிவகுப்பு என்றுருமுளர். ஆனதே, ஏ-தேற்றம். 'வருதினியாகவும்', 'வெம்படை' என்றும் பாடம். (575)

## 101.—அப்பகைத்தொகுதியை அருச்சுனன் சிதறடித்தல்.

அந்தநாக மழலுமிழ்கண்விடம்
சிந்தமேல்விடு சீற்றமுந்தோற்றமும்
முந்தவார்சிலைக்கைம் முகில்வாகனன்
மைந்தன்வாளி மழைகளின்மாய்ந்தவே.

(இ - ள்.) அந்த நாகம் - (கீழ்க்கூறியபகைத்தொகுதியாகிய) அப்பாம்பு, அழல் உமிழ் கண் விடம் சிந்த-நெருப்பைக்கக்குகிற கண்கள் விஷத்தைச்சொரிய, மேல் விடு - எதிரிகளின்மேல்வெளியிட்ட, சீற்றம்உம்-கோபமும், தோற்றம்உம்- (அதன்பயங்கரமான) தோற்றப்பொலிவும், (ஆகிய இரண்டும்), வார் சிலை கை முகில் வாகனன் மைந்தன் வாளி மழைகளின் முந்த மாய்ந்த - நீண்ட வில்லைக் கையிலேந்திய மேகவாகனனான இந்திரனது குமாரனாகிய அருச்சுனன் (முன்னின்று விரைவாகச் சொரிந்த) அம்புமழைகளினால் உடனே அழிந்தன; (எ - று.)

இடியோடு மேகம் சொரியும் மழையினால் நாகம் உக்கிரம் அழிந்து ஒடுங்குதல்போல, அருச்சுனன் சொரிந்த அம்புத் தொகுதியால் அப்பகைத்திரள் ஆற்றலொடுங்கி உறுதிநிலை கெட்டதென்க; உருவகவணி. திருஷ்டிவிஷமென்னும் நாகசாதி கண்விழித்து விஷத்தை வெளிப்படுத்தி அவ்விஷப்பார்வையாற் பிறரையழிக்குந் தன்மையதாதலால், 'நாகமழலுமிழ் கண்விடஞ் சிந்த மேல்விடு சீற்றம்' என்றார். தோற்றம்-வலிமையுமாம். நாகம் என்றவடசொல்-நகத்தில் வாழ்வதென்று பொருள்படும்; நகம் - மரமும், மலையும். 'மேலிடு' என்றும் பாடம். (576)

## 102.—நகுலன் கர்ணனைப் புறங்கொடுத்தோடச்செய்தல்.

சமரவேழ முகாசுரன்சாய்ந்தனன்
குமரனாலெனக் கோநகுலன்றனுல்
அமரில்யானை யணிமுகத்தோடுமெய்
கமர்படப்புறந் தந்தனன்கன்னனே.

(இ - ள்.) குமரனால் - முருகக்கடவுளால், சமரம் வேழம் முக(ம்) அசுரன் - போர்வல்ல யானைமுகத்தையுடைய தாரகாசுரன், சாய்ந்தனன் என - அழிந்தாற்போல, கோ நகுலன் தனுல் - தலைமையையுடைய நகுலனால், கன்னன் - கர்ணன், அமரில் - போரிலே, யானை அணி முகத்தோடு மெய் கமர் பட - (தான் முற் செலுத்திய) யானையின் அழகிய முகமும் தன்உடம்பும் பிளப்படைய, புறந்தந்தனன் - முதுகுகொடுத்தான்; (எ - று.)

அசுரேசன்மகளாகிய மாயை யென்னும் பெயர்பெற்ற சுரஸை யென்பவள் காசியபமகாமுனிவரைக்கூடிப்பெற்ற புத்திரர்களாகிய சூரபதுமன் சிங்கமுகன் தாரகன் என்ற மூவரும் பற்பலவகையாக உலகத்தை வருத்தினவளவில், அத்துன்பம் பொறுக்கமாட்டாத தேவர்களின் வேண்டுகோளின்படி சிவபிரான் குமாரக்கடவுளை உண்டாக்கி யனுப்ப, அக்கடவுள் தனக்கு உரிய கணங்களுடனே புறப்பட்டுப் போருக்குச்செல்லும் வழியில்,யானைமுகமுள்ளவனை தாரகாசுரன் கிரௌஞ்சகிரியில் நின்று மாயையாற் கடும்போர்செய்ய, முருகமூர்த்தி, அவ்வசுரனது துதிக்கையையும் தந்தங்களையும் துணித்து முடிவில் அவ்வசுரனையும் அழித்தனன் என்பது, இங்குக்குறித்த வரலாறு: காசியபமுனிவனும் அவனுக்குமனைவியான மாயையும் ஆண்யானை பெண்யானைவடிவங் கொண்ட காலத்தில் அவர்களுக்குப்பிள்ளையாய் யானைமுகத்தோடுபிறந்தவனாதலால், தாரகன் 'வேழமுகாசுரன்' எனப்பட்டான். தமர்பட,சமர்படஎன்றும்பாடம்.

## 103.—சகதேவன் சகுனியைப் புறங்கொடுத்தோடச்செய்தல்.

முன்னிடச்சமர் மோதுஞ்சகுனியை
மின்னிடைப்புயங்கம் வெருக்கொண்டெனத்
தன்னிடக்கைத் தனுவொடுந்தேரொடும்
பின்னிடப்பொரு தானவன்பின்னவன்.

(இ - ள்.) அவன் பின்னவன்-(மேற்கூறிய) நகுலனது தம்பியான சகதேவன்,—முன் இட சமர் மோதும் சகுனியை - முற்படப் போர்செய்த சகுனியை, மின் இடை புயங்கம் வெரு கொண்டுஎன- மின்னலினால் [இடியினால்] பாம்பு அச்சங்கொண்டாற்போல, தன் இடக்கை தனுவொடுஉம் தேரொடுஉம் பின்னிட - தனதுஇடக்கையிலேந்தியவில்லோடும் தேரோடும் புறங்கொடுக்கும்படி,பொருதான்- போர்செய்தான்; (எ - று.)

மின்னிடை, இடை - மூன்றனுருபின்பொருளில் வந்தது; உருபுமயக்கம், (578)

### 104.—துரியோதனுதியர் நூற்றுவரையும் வீமன் வெல்லல்.

தண்மதிக்குடைத் தம்முனுந்தம்பியும்
எண்ணுமற்றை யிளைஞர்கள்யாவரும்
கண்ணுறக்களங் காணுமுன்றீயினல்
வெண்ணெயொத்துடைந் தார்விறல்வீமனுல்.

(இ - ள்.) தண் - குளிர்ந்த, மதி-சந்திரமண்டலம்போன்ற, குடை - ஒற்றைவெண்கொற்றக்குடையையுடைய, தம்முன் உம் - தமையனான துரியோதனனும், தம்பி உம் - (அவனுக்கு) அடுத்த தம்பியாகிய துச்சாதனனும், எண்ணும் மற்றை இளைஞர்கள் யாவர் உம் - மற்றும் (வரிசையாக) எண்ணப்படுகிற தொண்ணூற் றெட்டுப்பேரும்,—கண் உற களம் காணும் முன் - கண்களினல் நன்ருகப் போர்க்களத்தை (எதிரிற்) காண்பதற்குமுன்னே, விறல் வீமனல் - வலிமையையுடைய வீமசேனனல், தீயினல் வெண்ணெய் ஒத்து உடைந்தார் - நெருப்பினல் வெண்ணெய் உடையுந்தன்மை போல உடைந்தோடினர்கள்; (எ - று.)

நெருப்பு அடுத்தவுடனே வெண்ணெய் உடைந்து நெகிழ்ந்து உருகியோடுதல்போல, வீமன் அருகில்வந்தவுடனே துரியோதனுதியர் உறுதிகெட்டு நெகிழ்ந்துஓடினரென்பதாம்: உவமையணி. அத் தன்மையையே, கண்ணுறக்களங்காணுமுன் உடைந்தாரென்று அதிசயோக்திதோன்றக் கூறினர். (579)

### 105.—இங்ஙனந் தோற்ற பகைவரனைவரும் தம்மூருக்கு மீளுதல்.

விரோசனக்கதிர் மைந்தனும்வேந்தனும்
சரோசனத்திறற் றம்பியுமாமனும்
புரோசனப்பெயர்ப் புன்மதிதன்னைநொந்து
அரோசனத்துட னத்தினநண்ணினர்.

(இ - ள்.) விரோசனன் கதிர் மைந்தன் உம் - விரோசனனென்று ஒருபேரையுடைய சூரியனது மகனான கர்ணனும், வேந்தன் உம் - இராசராசனான துரியோதனனும், சரோசனன் திறல் தம்பி உம் - கோபத்தோடுகூடிய வலிமையையுடைய தம்பியான துச்சாதனனும், மாமன் உம் - (துரியோதனுதியர்க்கு) மாமனான சகுனியும்,—புரோசனன் பெயர் புன்மதிதன்னை நொந்து - புரோசனனென்னும்பெயருள்ள துர்ப்புத்தியையுடைய மந்திரியை வெறுத்துக்கொண்டே, அரோசனத்துடன் - பிரகாசமில்லாமையோடு, அத்தினம் நண்ணினர் - அத்தினபுரியை அடைந்தார்கள்; (எ - று.)—'அந்நகர்நண்ணினர்' என்றும் பாடம்.

பாண்டவர்களை அரக்குமாளிகையில் எரிக்கும்படி ஏவியனுப்பப் பட்ட புரோசனனென்ற துர்மந்திரி அங்ஙனஞ்செய்துமுடிக்காமல் அஜாக்கிரதைப்பட்டு இறந்துபோய்விட்டதைப்பற்றி இப்பொழுது துரியோதனுதியர்கள் கழிவிரக்கத்தோடு வெறுப்பாராயினர். மன வருத்தத்தாலும் உடல் புண்பட்டதனுலும் ஒளிமழுங்கச்சென்றன ரென்க. துஷ்டசதுஷ்டர் நகர்நண்ணியதையே தலைமைபற்றி இங் குக்கூறினராயினும், மற்றைத் தம்பியர் நகர்நண்ணியதையும்இங்

குத் தம்பி என்றதில் உபலக்ஷணத்தால் அடக்கிக்கொள்க. விரோசனன் + கதிர் = விரோசனக்கதிர்: புரோசனன் + பெயர் = புரோசனப் பெயர். விரோசநனென்ற வடமொழிப்பெயர்-விசேஷமாய் விளங்குபவ னென்று அவயவப்பொருள்படும். கதிர் - சினையாகு பெயராய். கதிரோனை யுணர்த்தும். ரோஷணம்-கோபித்தல்: அதனோடு கூடுதல்-ஸரோஷணம்; அது தமிழில் சரோசனம்எனத் திரிந்தது. ரோசநம்-பிரகாசித்தல்; அதன்எதிர்மறை - அரோசனம். அரோசனத்துடன் என்பதற்கு - மகிழ்ச்சியின்மையோடு எனினுமாம்.

### 106.—பாண்டவர் பாஞ்சாலநகரிற் சிறப்புட னிருத்தல்.

முந்துபோரின் முதுகிடும்வேந்தரால்
விந்தைதன்னையு மேதகவேட்டபின்
அந்தமாநக ரைவருமாமனும்
வந்தகண்ணனு மன்புடன்வைகினர்.

(இ - ள்.) முந்து போரில் - எதிர்த்துச்செய்த யுத்தத்திலே, முதுகு இடும்-புறங்கொடுத்த, வேந்தரால் - (துரியோதனன் முதலிய) அரசர்களால், (பாண்டவர்கள்), விந்தைதன்னைஉம் - ஜயலக்ஷ்மியையும், மேதக வேட்டபின்-மேன்மைபொருந்த மணஞ்செய்தபின்பு, ஐவர்உம்-அந்தப்பஞ்சபாண்டவர்களும், மாமன்உம்-அவர்கள்மாமனான துருபதனும், வந்த கண்ணன்உம்-(அன்போடு பாண்டவர்களிடம்) எழுந்தருளிய கண்ணபிரானும், அந்த மாநகர்-அந்தப்பெரியபாஞ்சாலநகரில், அன்புடன் வைகினர்-(ஒருவர்க்கொருவர்) அன்போடு பொருந்தி யிருந்தார்கள்; (எ - று.)

துருபதன் கொடுக்கத் திரௌபதியைப் பெற்று மணஞ்செய்தாற்போலத் துரியோதனாதியர் கொடுக்கச் சயலக்ஷ்மியைப் பெற்று மணஞ்செய்தன ரென்பது முன்னிரண்டடிகளின் கருத்து. 'வன்புடன்' என்றும் பாடம். (581)

### 107.—பின்பு திருதராட்டிரன் தருமனுக்கு அரசளிக்கக் கருதுதல்.

தும்பைசூடிய வேற்றுரியோதனன்
வெம்புபோரின் முதுகிட்டுமீண்டபின்
தம்பிகூறு தருமனுக்கீயுமாறு
அம்பிகேய னமைச்சரோடெண்ணினன்.

(இ - ள்.) தும்பை - தும்பைப்பூமாலையை, சூடிய-தரித்த, வேல் - வேலாயுதத்தையுடைய, துரியோதனன்—, வெம்பு போரில்-கொடிய போரிலே, முதுகு இட்டு- (பாண்டவர்க்குப்) புறங்கொடுத்து, மீண்டபின்-திரும்பி வந்தபின்பு, - அம்பிகேயன்-அம்பிகையின்மகனான திருதராட்டிரன், தம்பிகூறு தருமனுக்கு ஈயும் ஆறு - (தன்) தம்பியாகிய பாண்டுவினது (இராச்சிய) பாகத்தை (அவன்மகனான) தருமபுத்திரனுக்குக் கொடுக்கும்படி, அமைச்சரோடு எண்ணினன்-(தன்)மந்திரிகளுடனே ஆலோசித்தான்;

தும்பைப்பூமாலை, போர்செய்வார்க்கு உரிய அடையாளப்பூமாலையாம். தம்பிகூறு - பாதிராச்சியம்: இங்ஙனமே பாலபாரதத்தும் வியாசபாரதத்தும் உள்ளது. அம்பிகேயன் - வடமொழித் தத்தி தாந்தநாமம். (582)

**108.—திருதராட்டிரன்பாண்டவர்களை அத்தினபுரிக்குவரவழைத்தல்.**

தாதினற்பொலி தார்வரைமார்பரைத்
தூதினற்றங்க டொல்பதிசேர்த்தினன்
காதினற்பய னின்றெனக்கண்கள்போற்
கோதினற்றெரி யாமனக்கோளினன்.

(இ - ள்.) கண்கள் போல்-(தன்)கண்கள் (இயல்பில் எவற்றையும் உணராமை) போலவே, கோதினல் தெரியா - குற்றமுடைமையால் (நன்மை தீமைகளைப்) பகுத்தறியாத, மனம் கோளினன் - மனத்தின் தன்மையையுடையவனான திருதராட்டிரன்,—தாதினல் பொலி தார் வரை மார்பரை - பூந்தாதினற் பொலிகின்ற மாலையை யணிந்த மலைபோன்ற மார்பையுடைய பாண்டவர்களை, காதினல் பயன் இன்று என-கொலைசெய்ய முயலுதலாற் பயனில்லையென்று[எந்த உபாயத்தினலும் வெல்லத் தக்கவரல்லரென்று] நிச்சயித்து, (தருமபுத்திரனை அவனுக்கு உரிய அர்த்தராச்யத்திற் பட்டாபிஷேகஞ்செய்யத்தீர்மானித்து), தூதினல் தங்கள் தொல் பதி சேர்த்தினன் - தூதனைக்கொண்டு தங்களுடைய பழமையான அத்தினபுரிக்கு வருவித்தான்;(எ-று.)

விதுரனையனுப்பி வரவழைத்ததாகப் பாரதங்களி லுள்ளது.

**109.—பாண்டவர் அரசுபெறுமாறு அத்தினபுரியில்நெடுநாள்வாழ்தல்.**

வீடு மற்கும் விதுரற்கு மேற்கவந்
நாடு முற்று நரபதி நல்கவே
ஆடு பொற்கொடி யந்நகர் வைகினர்
நீடு விற்றிற லோர்நெடுங் காலமே.

(இ - ள்.) நர பதி-திருதராட்டிரமகாராசன்,வீடுமற்குஉம் விதுரற்குஉம் ஏற்க - வீடுமனுக்கும் விதுரனுக்கும் இசைய, அ நாடு முற்றுஉம்நல்க-(பாண்டவர்க்குஉரிய)அந்நாட்டின்பகுதிமுழுவதையும் (அவர்கட்குக்) கொடுக்குமாறு,—நீடு வில் திறலோர் - நீண்ட வில்லின் வலிமையையுடைய அவர்கள், ஆடு பொன் கொடி அ நகர் நெடுங்காலம் வைகினர் - அசைகிற அழகிய கொடிகளையுடைய அந்த அத்தினபுரியில் நெடுங்காலம் இருந்தார்கள்;

வீடுமற்கும் விதுரற்கும் ஏற்க - அவ்விருவர்மனத்திற்கும் திருப்தியாக என்றபடி; இதனல், திருதராட்டிரன் அவர்களுடைய மனக்கருத்திற்கு ஏற்பப் பாண்டவர்க்கு அரசு தரப்போகினனே யன்றித் தன்மனமொப்பித் தருபவனல்ல னென்பது தொனிக்கும். இனி, இப்பாடலுக்கு-திருதராட்டிரன் தருமபுத்திரனுக்கு மீண்டும் இளவரசுகொடுத்தானென்று முதலிரண்டு அடிகள்கூறும் என உரைவகுப்பாருமுளர்.ஏகாரம் இரண்டும்-ஈற்றசை.

திரௌபதி மாலையிட்ட சருக்கம் முற்றிற்று.

---

ஆறுவது

**இந்திரப்பிரத்தச் சருக்கம்.**

பாண்டவர்கள் இந்திரப்பிரத்த மென்னும் நகரத்தை யமைத்துக்கொண்டு அதனில் வசித்த செய்தியைக்கூறும் சருக்கமென்று

பொருள். இந்த்ரப்ரஸ்தம் என்ற வடமொழி, தமிழில் இந்திரப் பிரத்த மென விகாரப்பட்டது.

## * 1.—தெய்வவணக்கம்.

**வேதமும் வேதம் விளம்புமெய்ப் பொருளு மப்பொருள் விதங்களும் பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனு மப்பயன் பொலிவுற நுகரும்
ஞாதமு முலகம் படைத்தளித் தழித்து ஞானமா யகிலமு நிறைவுற்
ருதியு நடுவு முடிவுமாய் நின்ற வாதியா னடியிணை பணிவாம்.**

(இ-ள்.) வேதம்உம் - வேதங்களும், வேதம் விளம்பும்மெய் பொருள்உம் - அவ்வேதங்கள் சொல்லுகின்ற உண்மைப்பொருளும், அ பொருள் விதங்கள்உம்-அந்த உண்மைப்பொருளின் பகுப்புக்களும், பஞ்ச பூதம்உம்-ஐந்து பூதங்களும், புலன்உம் - ஐந்து புலன்களும், புலன்களின் பயன்உம - அவ்வைம்புலன்களின் பயனும், அ பயன் பொலிவு உற நுகரும் ஞாதம்உம்-அப்பயன்களைத் தகுதியாக அனுபவித்து உணர்கிற ஆத்துமாவும், (ஆகி), உலகம் படைத்து அளித்து அழித்து-உலகங்களைப் படைத்தலும் காத்தலும் அழித்தலுமாகிய செயல்களைச் செய்து, ஞானம் ஆய்-ஜ்ஞாநமயமாய், அகிலம்உம் நிறைவு உற்று-எங்கும்வியாபித்து, ஆதிஉம் நடுஉம் முடிவுஉம் ஆய்நின்ற - (எல்லாப்பொருள்களுக்கும்) முதலும் இடையும் கடையுமாய் நின்ற, ஆதியான்-முழுமுதற்கடவுளாகிய திருமாலினது, அடி இணை-இரண்டு திருவடிகளையும், பணிவாம் - (யாம்) வணங்குவோம்; (எ - று.)

சர்வாத்மகனை ஆதிதேவனை வணங்குவோமென்றவாறு. வேதம் விளம்பு மெய்ப்பொருள் - பரப்பிரஹ்மசொரூபம். மெய்ப்பொருள் - தத்துவார்த்தம். அப்பொருள் விதங்கள்-பரப்பிரஹ்ம சொரூபியான திருமாலின் வியூகமூர்த்திகளாகிய வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருத்தன் என்ற நால்வரும், படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களைச் செய்கிற பிரமவிஷ்ணுருத்திர ரென்னும் அதிகாரபுருஷரான திரிமூர்த்திகளும். புலன்களின் பயன்-ஐம்பொறி யுணர்வுக்கு விஷயமாகிற பொருள்கள்: அவையாவன-கேட்கப்படும் பொருள்களும், பரிசிக்கப்படும்பொருள்களும், காணப்படும்பொருள்களும், சுவைக்கப்படும்பொருள்களும், மோக்கப்படும்பொருள்களுமாம். அப்பயன் பொலிவுற நுகரும் ஞாதம்-புலன்களால் பொருள்களை அறிகிற உயிர்கள்; அவை - ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர் எனப்

---

* 'அஃதேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ்சொல்லுதலன்றி அதிகாரந்தோறுஞ் சொல்லியதுஎன்னையோ வெனின்?—நூல் ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலாலும் முன்னையோருசாரார் ஒரோவதிகாரத்தை ஒரு நூலாக்கிப் பாயிரம் முழுதும்பகர்தலானும், "ஆதியு மந்தமு நடுவு மங்கலம், ஓதிய முறைமையி னுரைப்ப ராயிடின், ஏதமி லிருநிலக் கிழத்தி யின்புற, நீதியம் பனுவல்கள் நிலவு மென்பவே" என்பவாதலானும், 'கற்பதனுற்பயன், குற்றமற்று முற்றுமுணர்ந்த ஒற்றை நற்றவன் பொற்றுளிணைமலர் போற்றல்' என்பதனுனும், சொன்னரெனக் கொள்க' என்ற நன்னூலின் பழையவுரைகாண்க.

பகுக்கப்படும். ஜ்ஞாதா என்னும் வடசொல்லின் திரிபாகிய ஞாத மென்பது - இயல்பில் உணர்வுடையதென்று பொருள்படுதலால், அது, அத்தன்மையதாகிய ஆத்மாவுக்கு ஒருகாரணக்குறி யாயிற்று; சித், சேதனம் என்ற ஆன்மாக்களின் பெயர்களும் இப் பொருள்படுவனவே.உலகம்...அழித்து-பிரமரூபியாய்ப்படைத்தலை யும் தானனநிலையில்நின்றுகாத்தலையும்ருத்திரரூபியாய்அழித்தலை யுஞ்செய்து என்க.அகிலமும் நிறைவுற்று-எள்ளினுள் எண்ணெய் போல அந்தர்யாமியாய் எங்கும் வியாபித்துப் பரவிநின்று; 'விஷ்ணு' என்ற திருநாமத்தின் பொருள், சருவவியாபியென்ப தாதல் காண்க. எல்லாப்பொருள்களும்உதித்தற்குமூலமாய் அவை தோன்றுதற்குமுன் நின்றவனும், அவை யனைத்தும் லயித்தற்கு இடமாய் அவையழிந்தபின் நிற்பவனும், இடையில் ஒரு நிகராக நிற்கின்றவனும் தானேயாதலால், 'ஆதியு நடுவுமுடிவுமாய் நின்ற ஆதியான்' எனப்பட்டான். 'ஆழியான்' என்றும் பாடம்.

இனி,புலன் என்பதற்கு-மெய் வாய் கண் மூக்குச் செவியென் னும் ஐம்பொறிகளென்றும், 'புலன்களின்பயன்' என்பதற்கு-அந் தப்பஞ்சேந்திரியங்களுக்கு உரியபஞ்சவிஷயங்களென்றும்உரைத் தலும் ஒன்று. புலன்களைப் படைத்ததற்குப் பயன் அவற்றை எம் பெருமான்பக்கல் உபயோகித்தலே யாதலால், 'புலன்களின்பயனு மாய்' என்றதாகவும் கொள்ளலாம்.

இதுமுதல் 27-கவிகள்-பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும்,மற்றவை விளச்சீர்களு மாகிவந்த எழுசீராசிரிய விருத்தங்கள். (585)

**2.—திருதராட்டிரன் தருமனுக்கு முடிசூட்ட நிச்சயித்தல்.**

அத்தினபுரியிலையிருபதின்மரைவரேன்றிரண்டறத்தம்மில்
ஒத்தனர்மருவத்தெவ்வர்மெய்வெருவ வுளமகிழ்நாளின்மற்றொருநாள்
மைத்துனன்முதலாந்தமரையுந்தக்க மந்திரத்தவரையுங்கூட்டி
இத்தினமுயர்ந்ததினமெனமகுடஞ் சூட்டுதற்கெண்ணினனிகலோன்.

(இ-ள்.) அத்தினபுரியில்-அஸ்தினபுரத்திலே, ஐ இரு பதின் மர் ஐவர் என்ற இரண்டு அற-நூற்றுவரும் ஐவரும் என்ற இரண்டு பகுப்பு இல்லாமல் [அந்த நூற்றைவரும்], தம்மில் ஒத் தனர் மருவ-தங்களுள் ஒற்றுமையுடையராய்க்கூடிவாழ, தெவ்வர் மெய் வெருவ - (அதனால்) பகைவர்கள் உடம்புநடுங்க,உளம்மகிழ் நாளில் - (அனைவரும்) மனம்மகிழ்ந்திருந்த நாள்களில், ஒரு நாள்- ஒருதினத்தில்,—இகலோன்-வலிமையையுடையனான திருதராட்டி ரன்,—மைத்துனன் முதல் ஆம் தமரைஉம்-(தன்)மைத்துனனாகிய சகுனி முதலான பந்துக்களையும், தக்க மந்திரத்தவரைஉம்-தகுதி யையுடைய மந்திரிகளையும், கூட்டி-ஒருங்கு வரவழைத்துச் சபை சேர்த்து(ஆலோசித்து), இ தினம்உயர்ந்த தினம்எனமகுடம்சூட்டு தற்கு எண்ணினன் - இந்தத்தினமே உத்தமமானதினமென்று குறிப்பிட்டு(அன்றைக்கே தருமனுக்கு) முடிசூட்ட நிச்சயித்தான்.

மந்திரிகளுக்குத் தகுதி-அறிவு, முயற்சி, இராசகாரியங்களில் தேர்ச்சி, அரசனுக்கு இடித்திடித்துக் கட்டுரை கூறும் வன்மை, பழுதெண்ணுமை, தவறாது ஆலோசிக்குந்திறம் முதலியன. (586)

**3.—இதுமுதல்நான்குகவிகள்-தருமபுத்திரனதுபட்டாபிஷேகம் கூறும்.**

செழுமுரசுயர்த்தவேந்தனுக்கின்று திருவபிடேகநாளென்று
முழுமுரசறைந்துநகரிகோடித்து முடிபுனைகடிகொண்மண்டபத்தின்
எழுமுரசதிரப்பகீரதிமுதலா மெத்துறைப்புனல்களுமியற்றித்
தொழுமுரசுடன்வெள்வலம்புரிமுழங்கச் சுருதிமாமுனிவருந்தொக்கார்.

(இ - ள்.) (திருதராட்டிரன்), 'செழு முரசு உயர்த்த வேந்தனுக்கு-மாட்சிமையுடைய முரசவாத்தியத்தின் வடிவத்தையெழுதிய கொடியை உயரநாட்டிய தருமராசனுக்கு, இன்று-இத்தினம், திரு அபிடேகம் நாள்-சிறந்த பட்டாபிஷேகம்செய்வதற்கு உரிய நாள்,' என்று-என்றுசொல்லி, முழுமுரசு அறைந்து-பெரிய முரசவாத்தியங்களை அடிப்பித்து எங்குந்தெரிவித்து, நகரி கோடித்து - அந்நகரத்தை அலங்கரிப்பித்து, முடி புனை கடி கொள் மண்டபத்தின்-முடிசூட்டுதற்குஉரியவிளக்கத்தைக்கொண்ட(பட்டாபிஷேக) மண்டபத்திலே, எழு முரசு அதிர பகீரதி முதல் ஆம் எ துறை புனல்கள் உம் இயற்றி-ஒலியெழுகிற முரசவாத்தியங்கள் முழங்கக் கங்கை முதலிய எல்லாப்புண்ணிய தீர்த்தங்களினின்று நீர் கொணர்வித்து, தொழு முரசுடன் வெள் வலம்புரி முழங்க-(யாவராலுங்) கொண்டாடப்படுகிற முரசவாத்தியங்களுடனே வெண்மையான வலம்புரிச்சங்குகளையும் முழங்குவிக்க, சுருதி மா முனிவர் உம் தொக்கார்-வேதங்களையறிந்தபெரிய இருடிகளும்வந்துகூடினார்கள்.

முதலடியில், முரசு - ஆகுபெயர். முழு முரசு - முரசுக்குஉரிய இலக்கணத்திற் குறையாத முரசு. அறைந்து, கோடித்து,முழங்க-பிறவினைப்பொருளில் வந்த தன்வினை. மங்கலவாத்தியம் வாசிப்போர் அதனைத்தொழுது தொடங்கும் மரபுபற்றி, 'தொழுமுரசு' என்றதாகவுங் கொள்ளலாம்; அன்றியும், வாத்தியம் வாசித்தல் என்ற பொருளில் 'வாத்தியம் சேவித்தல்' எனப் பரிபாஷையாக வழங்குதற்கு ஏற்ப, 'தொழுமுரசு' என்றதாகவுங் கொள்ளலாம்.

4.　அத்தியின்பலகைநவமணியழுத்தி யாடகத்தமைத்தரிமுகத்தால்
பத்திகொள்பீடத்தழகுறவிருத்திப் பசும்பொனின்றசும்புகணிறைந்த
சுத்தநீர்வியாதன்றௌமியன்முதலோர் சொரிந்தனர்சோமன்வந்துதித்துச்
சித்திரகிரியினெடுநிலாவெள்ளஞ் சீருடன்வழியவார்த்தெனவே.

(இ - ள்.) வியாதன் தௌமியன் முதலோர் - வியாசனும் தௌமியனும் முதலான முனிவர்கள்,—அத்தியின் பலகை-அத்திமரத்தின் பலகையின்மேல், ஆடகத்து அமைத்து-பொன்னினால் தொழில்செய்து, நவ மணிஅழுத்தி-நவரத்தினங்களைப் பதித்து, அரி முகத்தால் பத்தி கொள் பீடத்து-சிங்கத்தின்முகம்தோன்ற ஒழுங்காகச் சித்திரிக்கப்பட்ட சிங்காதனத்திலே, அழகு உற இருத்தி-(தருமபுத்திரனை)அழகாகவீற்றிருக்கச்செய்து,(அவனது முடியின்மேல்), பசும் பொனின் தசும்புகள் நிறைந்த சுத்தம் நீர் - பசும்பொன்னாலாகிய குடங்களில் நிறைந்துள்ள பரிசுத்தமான புண்ணியதீர்த்தங்களை,—சோமன் வந்து உதித்து சித்திரகிரியில் நெடு நிலாவெள்ளம் சீருடன் வழியவார்த்து என - சந்திரன்வந்து

உதித்து அழகிய மலையின்மேல் மிக்க நிலாப்பெருக்கை அழகோடு வழியும்படி வார்த்தாற்போல, சொரிந்தனர் - சொரிந்தார்கள்.

தௌமியன் முதலியோர் பொற்குடங்களினின்று புண்ணிய தீர்த்தங்களை அபிஷேகஞ்செய்யுமாறு ஊற்றுவது, மலையிலிருந்து எழுகின்ற உதயசந்திரன் நிலாவைப்பொழிதலையொக்குமென்க: சந்திரமண்டலம் வெண்ணிறமுடையதாயினும் உதிக்கும்போது செந்நிறமுடையதுபோலத் தோன்றுதல்இயல்பு. இனி, சுத்தனை சந்திரன்-பரிசுத்தரான முனிவர்களுக்கும், நிலாப்பெருக்கு - புண்ணிய தீர்த்தப்பெருக்குக்கும், மலை-தருமனுக்கும் உவமை யென்பாரும் உளர்; **தற்குறிப்பேற்றவணி.** பீடமமைத்தற்கு அத்திப்பலகை சிறத்தலால், அதனை, யெடுத்துக்கூறினார். "ஔதும்பரம்தத்ர நரேந்த்ரஸௌநௌ-ப்ரஸஸ்த மாதஸ்துஷி **பத்ரபீடம்**" என்றது, பாலபாரதம். (588)

5. **உதயமால்வரையினுதயராகத்தோ டுதித்ததேருதயனென்றுரைப்பத்**
**துதையளிததைந்தமாலையான்சென்னிச் சோதிமாமகுடமுஞ்சூட்டிப்**
**பதயுகமரசர்முடிகளாற்சிவப்பப் பகர்விதிமுடித்தபின்பலரும்**
**இதயமோத்தமிர்தமொழியவரடைவே யிருகைநீராசனமெடுத்தார்.**

(இ - ள்.) 'மால் உதயம் வரையின்-பெரிய உதயகிரியின்மீது, உதயம் ராகத்தோடு உதித்த - உதிக்குங்காலத்து (மிக்கவிளங்குகிற) செந்நிறத்தோடு தோன்றிய, தேர் உதயன்-(ஒற்றைத் தனியாழித்) தேரையுடைய சூரியன்,' என்று உரைப்ப-என்று உவமை சொல்லும்படி, துதை அளி ததைந்த மாலையான் சென்னி-நெருங்கிய வண்டுகள் மொய்க்கிற மாலையையுடையனான தருமபுத்திரனது சிரசில்,சோதி மா மகுடம்உம் சூட்டி-ஒளியையுடைய சிறந்த கிரீடத்தையும் கவித்து, பதம் யுகம் அரசர் முடிகளால் சிவப்ப - (அவனுடைய) இரண்டுபாதங்களும் (அவற்றை வணங்குகிற) அரசர்களுடைய முடிகள் படுதலாற் சிவக்க, பகர் விதி முடித்த பின்-(நூல்களில்) விதிக்கப்பட்ட பட்டாபிஷேகச்சடங்கை நிறைவேற்றிய பின்பு, அமிர்தம் மொழியவர் பலர்உம் - அமிருதம்போல் இனிய சொற்களையுடைய பல மகளிர், இதயம் ஒத்து - (தம்மில்) மனங் கலந்து[அன்புடனும் மகிழ்ச்சியுடனும்],அடைவே-முறையே,இருகை - இரண்டுகைகளாலும், நீராசனம் - மங்களவாலத்தியை, எடுத்தார்—;(எ - று.)

உதயகிரி-தருமபுத்திரனுக்கும்,அதன் சிகரம்-அவனது சிரசுக்கும், உதயசூரியமண்டலம் - கிரீடத்துக்கும் ஒப்பு எனக் காண்க. மகுடஞ்சூட்டுதல், விதிமுடித்தல் இவற்றுக்கு எழுவாய்-இழ்க்கவியில் வந்த 'வியாதன், தௌமியன் முதலோர்' என்பது. மகுடமுஞ்சூட்டி, உம் - இறந்தது தழுவியது. (589)

6. **ஒற்றையோடிரட்டைவலம்புரிமிழற்ற வொருகுடைமதியெனநிழற்றக்**
**கோற்றவர்முன்பின்போதரமடவார் குழுப்பொரிசிந்திவாழ்த்தெடுப்ப**
**இற்றைநாளேவரும்வாய்த்தவாவென்னவேழுயரிராசகுஞ்சரமேல்**
**மற்றைநால்வருந்தற்சூழ்வரத்தருமன் மைந்தன்மாநகர்வலம்வந்தான்.**

(இ - ள்.) ஒற்றையோடு இரட்டைவலம்புரி மிழற்ற-மூவகைச் சங்க வாத்தியங்கள் முழங்க, ஒரு குடை மதிஎன நிழற்ற-ஒற்றை

வெண்கொற்றக்குடை சந்திரமண்டலம்போல ஒளிசெய்ய, கொற்றவர் முன் பின் போதர - வெற்றியையுடைய அரசர்கள் முன்னும் பின்னும் போக, மடவார் குழு பொரிசிந்தி வாழ்த்துஎடுப்ப-மகளிர் கூட்டம் (மங்களார்த்தமான) நெற் பொரிகளைச்சிந்தி வாழ்த்துக் கூற, எவர்உம் இற்றைநாள் வாய்த்த ஆ என்ன - 'இந்நாள் வாய்த்த வகை (வியக்கத்தக்கது)!' என்று அனைவரும் கொண்டாட, மற்றை நால்வர்உம் தன் சூழ்வர - வீமன் முதலிய தம்பியர் நால்வரும் தன்னைச் சுற்றிலும்வர, தருமன்மைந்தன் - தருமபுத்திரன், ஏழ்உயர் இராச குஞ்சரம்மேல்-ஏழுமுழம்உயர்ந்தபட்டத்து யானையின்மேல் ஏறி, மா நகர் வலம்வந்தான் - பெரிய அந்நகரைப் பிரதக்ஷிணமாகப் பவனிவந்தான் ; (எ - று.)

ஒற்றையோடிரட்டை வலம்புரி - வெற்றிச்சங்கு மங்கலச்சங்கு கொடைச்சங்கு என்பன;"முன்னொற்றை யிருசங்க முடனூத" என்பர், விராடபருவத்தும். இனி, ஒற்றையோடு - ஊதுகொம்புகளுடனே, இரட்டை வலம்புரி-மங்கலச்சங்கும் வெற்றிச்சங்கும் எனினும் அமையும். குஞ்சரம்-மலைப்புதர்களிற் சஞ்சரிப்பதென்று உறுப்புப்பொருள்படும்; குஞ்சம்-புதர். இராசகுஞ்சரம் - அரசுவாவெனப்படும். (590)

### 7.—பின்பு திருதராட்டிரனேவலால் தருமன் காண்டவப்பிரத்தம் சேரத் துணிதல்.

மாநகர்வலமாய்வந்துதன்குரவர் மலர்ப்பதமுறைமையால்வணங்கிக்
கோநகரிருக்கையடைந்தனனொருநாட் கொற்றவனேவல்கைக்கொண்டு
பேய்நகரெனுமாறியாவரும்வழங்காப் பிறங்குநீள்கானிடையழிந்த
தூநகர்முன்னோரிருந்ததொன்றந்தத் தொன்னகர்வைகுமாதுணிந்தான்.

(இ-ள்.) மா நகர் வலம் ஆய் வந்து - (இவ்வாறு) பெரிய அந்நகரத்தைப் பிரதட்சிணமாக ஊர்கோலம் வந்து, தன் குரவர் மலர் பதம் முறைமையால் வணங்கி - தனக்குஉரிய பெரியோர்களுடைய தாமரைமலர்போன்ற பாதங்களை முறைப்படிவணங்கி, கோ நகர் இருக்கை அடைந்தனன்-தலைமையான அவ்வத்தினபுரியில் அரசுவீற்றிருத்தலைப் பொருந்தினன், (தருமன்); (அவன்), ஒருநாள்-பின்பு ஒருநாள், கொற்றவன் ஏவல் கைக்கொண்டு - திருதராட்டிரனுடைய கட்டளையைப் பெற்று, பேய் நகர் எனும் ஆறு-பேய்கள் எவரும் சஞ்சரியாமலுள்ள, பிறங்கு நீள்கானிடை-அடர்ந்த பெரிய காட்டில், முன்னோர் இருந்தது அழிந்த தூ நகர் ஒன்று அந்த தொல் நகர் - பழைய அரசர்கள் இருந்ததான நல்ல நகரமொன்று (பின்பு)அழிபட்டதாக அந்தப்பழையஊரில், வைகும் ஆ-இருக்கும்படி, துணிந்தான் - நிச்சயித்தான்; (எ - று.)

துரியோதனாதியரின் துர்ப்போதனையினாற் பாண்டவரைக் காண்டவப்பிரத்தத்திற்குச் செல்லுமாறு திருதராட்டிர னேவினானென்பது, முதனூலால் விளங்கும். இங்கு 'தன்குரவர்' எனப்பட்டவர்-கிருபன் துரோணன் வீடுமன் திருதராட்டிரன் விதுரன் குந்தி காந்தாரி யென்பவர். முறைமையால் வணங்குதல்-ஒருவரை வணங்கியபின் ஒருவரையாக முறையே வணங்குதலும்,அஷ்டாங்க

முறைப்படிவணங்குதலும்,மங்கலச்சடங்குமுடிந்தபின் பெரியோரை வணங்குத லென்ற வழக்கின்படி வணங்குதலுமாம். (591)

## 8.—பாண்டவர் கண்ணபிரானுடன் காண்டவப்பிரத்தஞ்சேர்தல்.

**அங்கண்மாஞாலமுழுவதுங்கொடுத்தற் காயர்தம்பதியினங்குரித்த**
**செங்கண்மான்முதலாங்கிளைஞரும்வயிரத்தேர்முதற்சேனையுந்தாமும்**
**வெங்கண்மாசுணத்தோனெண்ணமெத்திசையும்வெளிப்படவேந்தரைவரும்போய்த்**
**தங்கண்மாதவத்தாற்காண்டவப்பிரத்த மென்னுமத்தழல்வனமடைந்தார்.**

(இ-ள்.) வேந்தர் ஐவர் உம்-பாண்டவராசர்ஐந்துபேரும்,—அம் கண் மா ஞாலம் முழுவதுஉம் கொடுத்தற்கு-அழகிய இடமகன்ற பெரியபூமிமுழுவதையும் (தங்கட்குக்) கொடுக்கும்படி, ஆயர்தம் பதியின் அங்குரித்த - திருவாய்ப்பாடியி லவதரித்த, செம் கண் மால் - சிவந்தகண்களையுடைய திருமாலை [கண்ணனை], முதல் ஆம்-முதலாகக்கொண்ட, கிளைஞர்உம் - சுற்றத்தார்களும், வயிரம் தேர் முதல்சேனைஉம்-வைரம்பொருந்தியதேர்முதலிய சேனைகளும், தாம்உம்-தாங்களுமாக,-வெம் கண் மாசுணத்தோன் எண்ணம் எ திசைஉம் வெளிப்பட - கொடியகண்களையுடைய பெரும்பாம்பின் வடிவமெழுதிய கொடியையுடைய துரியோதனனது எண்ணம் எங்கும் வெளிப்படும்படி, தங்கள் மா தவத்தால் - தாங்கள் முற்பிறப்பிற்செய்த பெருந் தவத்தின்பயனால், காண்டவப்பிரத்தம் என்னும் அ தழல்வனம் போய் அடைந்தார் - காண்டவப்பிரத்த மென்று சொல்லப்படுகிற அந்தக்கொடியகாட்டிற் போய்ச் சேர்ந்தார்கள்; (எ - று.)

இனிநிகழும்மகாபாரதயுத்தத்தில்பகையெல்லாம்தொலைத்துக் கண்ணபிரான் தருமனுக்கு நிலவுலகமுழுவதையும் உரியதாகச் செய்தல்தோன்ற, 'ஞாலமுழுவதுங் கொடுத்தற்குஅங்குரித்தமால்' என்றார். கண்ணன் திருவவதரித்தது மதுரையிலாயினும் ஆதியிற் சிலபிராயமளவும் அத்தன்மைவெளிப்படாமலே உடனே திருவாய்ப்பாடிசேர்ந்து அங்குப்பிறந்தவனாகவே பிரசித்தி பெற்று வளர்ந்தனனாதலால், 'ஆயர்பதியினங்குரித்த' என்றார். ஆயர்பதி -கோகுலம். பாண்டவர், காண்டவப்பிரத்தமடைந்தபின், அதனை இந்திரப்பிரத்தமென்னுஞ் சிறந்த நகரமாக அமைத்து அதில் வீற்றிருந்துஅரசுபுரிதல்,நாரதமுனிவனருள்பெற்றுக் குடும்பகலகமின்றிவாழ்தல், அருச்சுனனதுதீர்த்தயாத்திரையாலும் காண்டவதகனத்தாலுமாகிய பெருமைகளை யடைதல்,உபபாண்டவரும் அபிமந்யுவுமாகிய புத்திரரைப்பெறுதல், இராசசூயயாகஞ்செய்து மேம்படுதல் முதலிய பேறுகளையடைதலால், 'தங்கள்மாதவத்தால் அத்தழல்வனம் அடைந்தார்' என்றார். மிக்கபொறாமைகொண்ட துரியோதனன் தனதுசூழ்ச்சிக்கு இணங்கியதந்தையைக் கொண்டு ஏவி முன்புஇவர்களை வாரணாவதத்துக்குஅனுப்பியமை போலவே இப்பொழுதும் காண்டவப்பிரத்தத்துக்குச் செலுத்தினனென்ற கொடுமை பிரசித்தமாக வென்பது, மூன்றாமடியிற் குறித்தது. தேர்முதற்சேனை - இரத கச துரக பதாதி. 'வயிரத் தேர்மிசைச்சேனையும்' என்றும் பாடம். (592)

**9.-அங்கு நகர்செய்தற்குக் கண்ணன் இந்திரனேடு விசுவகர்மனைவருவித்தல்.**

போயவட்புகுந்தபொழுதுபைங்கடலும் பூவையும்புயலுநேர்வடிவின்
மாயவற்கெவ்வாறிவ்வுழியிவர்கள் வாழ்வதென்ஞெருநினைவெய்தி
நாயகக்கடவுடன்னைமுன்னுதலு நாகர்நாயகனெடுநடுங்கி
மேயகட்புலன்கள்களித்திடத்திருமுன் னின்றனன்விச்சுவகன்மா.

(இ-ள்.) போய் அவண் புகுந்தபொழுது-போய் அவ்விடத்திற் சேர்ந்தபொழுது,-பைங் கடல்உம் பூவைஉம்புயல்உம் நேர் வடிவின் மாயவற்கு-பசியகடலையும் காயாம்பூவையும் மேகத்தையும் ஒத்த திருமேனியையுடைய கண்ணபிரானுக்கு, இவர்கள் இ உழி வாழ்வது எ ஆறு என்று ஒரு நினைவு எய்தி- இவர்கள் இவ்விடத்தில் வாழ்வது எப்படி யென்று ஓர் எண்ணம் உண்டாக, (அதனால் அப்பெருமான்), நாயகம் கடவுள் தன்னை முன்னுதலும் - தலைமைத் தேவனான [தேவராசனான] இந்திரனை நினைத்தவுடனே, (அங்கு வந்துசேர்ந்த),நாகர்நாயகனெடு-தேவர் தலைவனான இந்திரனுடனே, விச்சுவகன்மா-விசுவகர்மாவும்,நடுங்கி-அச்சங்கொண்டு,மேய கண் புலன்கள் களித்திட திருமுன் நின்றனன்-பொருந்திய (தனது) கண்களாகிய பொறிகள் களிப்படைய (அப்பெருமானது) திருமுன்பே வந்துநின்ருன்; (எ - று.)

காண்டவப்பிரத்தத்தில் முன்னோர் இருந்த தொன்னகரம் முன்னமே அழிந்துவிட்டதாதலின் அங்குப் பாண்டவர் எங்ஙனம் வசித்தற்கு இயலும் என்று திருவுளம்பற்றிய கண்ணபிரான் அங்குத் தேவத்தச்சனான விசுவகர்மனைக்கொண்டு காடுகெடுத்து நாடாக்கி ஒருதிருநகரஞ்செய்விக்கக்கருதி அதன் பொருட்டுத் தேவர்தலைவனான இந்திரனைச் சிந்தித்தவளவிலே, அவன் வந்துசேர, அவனதுபரிவாரங்களில் ஒருவனான விசுவகர்மனும் அவனுடனே வந்துநின்றனனென்பதாம். இந்திரனுக்கும் விசுவகர்மாவுக்ும் கண்ணபிரானிடத்துஉள்ள பயபக்திவிசுவாசங்களைக் குறிக்க 'நாயகனெடுநடுங்கி'என்ருர். விசுவகர்மா-அஷ்டவசுக்களில்எட்டாமவனான பிரபாசனுக்குப் பிரகஸ்பதியினுடன்பிறந்தாளிடம்பிறந்த பிள்ளை. இவன்விசித்திரங்களான அநேகசிற்பகருமங்களை அறிந்தவனாய்த் தேவர்களுக்குத் தச்சனாகி அநேகதிவ்வியாபரணங்களையும், விமாநாதிகளையும் அவர்கட்கு நிருமித்துக்கொடுப்பவன்.

**10.—இந்திரன் விசுவகர்மனைநோக்கி 'இங்கு ஓர்நகர் செய்' என்னல்.**

நுண்ணிதினுணர்ந்தோருணர்தருஞ்சிற்ப நூலறிபுலவனைநோக்கித்
திண்ணிதினமரர்சேகரன்மொழிந்தான் றேவருமனிதரும்வியப்ப
மண்ணினும்புயங்கர்பாதலமுதலா மற்றுளவுலகினுநமதாம்
விண்ணினுமுவமையிலதெனக்கடிதோர் வியனகர்விதித்திநீயெனவே.

(இ - ள்) அமரர் சேகரன்-தேவர் தலைவனாகிய இந்திரன், நுண்ணிதின் உணர்ந்தோர் உணர்தரும் சிற்பம் நூல் அறி புலவனை நோக்கி - நுட்பமாக(க்கருவி நூற்பொருள்களை) அறிந்தவர் அறியத்தக்க சிற்பசாஸ்திரத்தை யறிந்ததேர்ந்த அறிவுடையானாகிய விசுவகர்மாவைப்பார்த்து,—'தேவர்உம் மனிதர்உம்வியப்ப-

தேவர்களும் மனிதர்களும் கண்டு அதிசயிக்க,மண்ணின்உம் புயங்கர் பாதலம் முதல் ஆம் மற்று உள உலகின்உம் நமது ஆம் விண்ணின்உம் உவமை இலது என - பூலோகத்திலும் சர்ப்பசாதியாரது பாதாளலோகம் முதலாகிய மற்றுமுள்ள உலகங்களிலும் நம்முடையதாகிய சுவர்க்கலோகத்திலும் ஒப்பில்லை யென்று சொல்லும்படி,ஓர் வியல் நகர்-ஒரு பெரிய நகரத்தை, நீகடிது விதித்தி-நீ விரைவில் இயற்றுவாயாக,' என-என்று, திண்ணிதின் மொழிந்தான்-உறுதியாகக் கட்டளைகூறினான்; (எ - று.)

கண்ணபிரானது திருவுள்ளத்தை அறிந்து அதற்குஏற்பஇந்திரன் கம்மியர்தலைவனுக்குக் கட்டளையிட்டனனென்க. கண்ணனது திருவுள்ளமுவத்தலைவேண்டுபவனாதலின்,'நமதாம்விண்ணினும் உவமை யிலதென நகர்விதித்தி' என்றான். (594)

## 11.—அக்கட்டளைப்படி விசுவகர்மன்சிறந்ததொருநகரத்தையமைத்தல்.

தேவினுந்தேவயோனியிற்பிறந்த திரளினுஞ்சிறந்தயாவர்க்கும்
பூவினுமெவ்வெவ்வுலகினுமுன்னம் புந்தியாலியற்றியபுரங்கள்
யாவினுமழகும்பெருமையுந்திருவு மின்பமுமேழுமடங்காக
நாவினும்புகலக்கருத்தினுநினைக்க வரியதோர்நலம்பெறச்சமைத்தான்.

(இ - ள்.) தேவின்உம் - தேவசாதியிலும், தேவயோனியில் பிறந்த திரளின்உம் - அத்தேவசாதியிற் சம்பந்தப்பட்ட (அசுரர் முதலிய) கணங்களிலும்,சிறந்த யாவர்க்குஉம்-சிறப்புற்ற(இந்திரன் முதலிய) பலர்க்கும், (பயன்படும்படி), பூவின்உம்-பூலோகத்திலும், எ எ உலகின்உம்-மற்றும் எந்தெந்த லோகங்களிலும், முன்னம் - முன்பு,புந்தியால் இயற்றிய-(தனது)மனத்தால்நினைத்துநிருமித்த, புரங்கள் யாவின்உம்-நகரங்கள் எல்லாவற்றைக்காட்டிலும், அழகுஉம் பெருமைஉம் திருஉம் இன்பம்உம் எழு மடங்கு ஆக-அழகும் பெருமையும் செல்வமும் இன்பமும்ஏழுமடங்குமிகுதியாகஅமையும்படி, நாவின் புகலஉம் கருத்தின் நினைக்கஉம் அரியது ஓர் நலம் பெற-நாவினாற்சொல்லுதற்கும் மனத்தினால்நினைப்பதற்கும் அரியதான ஒப்பற்ற சிறப்பைப் பெற, சமைத்தான் - (விசுவகர்மன் ஒரு நகரத்தை) உண்டாக்கினான்; (எ - று.)

நினைத்தமாத்திரத்தில் தன்சக்தியால் நிருமிக்குந்தன்மையும், தனது புத்திவிசேஷங்களையெல்லாங் காட்டுமாறு செய்தமையும் தோன்ற, 'புந்தியாலியற்றிய' என்றார். தேவயோனியிற் பிறந்த திரள்-அசுரர் கந்தருவர் கின்னரர் வித்தியாதரர் யக்ஷர் கருடர் கிம்புருடர் சித்தர் உரகர் முதலியோர். (595)

## 12.—அந்நகரச்சிறப்பை அனைவருங்கொண்டாடுதல்.

மரகதங்கோமேதகந்துகிர்தரளம் வைரம்வைதூரியநீலம்
எரிமணிபுட்பராகமென்றிவற்றிற் காகரமிந்தமாநகரென்று
அரிமுதலிமையோரனைவரும்புகழ்ந்தா ராடகப்பொருப்பினையழித்துத்
தரணியினகரோன்றமைந்தவாவென்று தபதியர்யாவரும்வியந்தார்.

(இ-ள்.)'மரகதம் கோமேதகம் துகிர் தரளம் வைரம் வைதூரியம் நீலம் எரி மணி புட்பராகம் என்றஇவற்றிற்கு-மரகதம் கோமே

தகம் பவழம் முத்து வச்சிரம் வைடூர்யம் நீலம் விளங்குகிறமாணிக்கம் புட்பராகம் என்ற இந்தநவரத்தினங்களுக்கும், இந்த மா நகர் ஆகரம் - இந்தப்பெரியநகரம் உறைவிடமாம்,' என்று - என்று சொல்லி, அரி முதல் இமையோர் அனைவர்உம் புகழ்ந்தார் - திருமால்முதலிய தேவர்க ளெல்லோரும் கொண்டாடினார்கள்; 'ஆடகம் பொருப்பினை அழித்து-பொன்மயமான மலையாகியமகாமேருவை வடிவழித்து, தரணியில் நகர் ஒன்று அமைத்த ஆ-பூமியில் ஒரு நகரமாகச் செய்தவிதம் என்னே!' என்று—, தபதியர் யாவர்உம் வியந்தார்-சிற்பிகளெல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்; (எ - று.)

இந்நகரம் பொன்மயமாகப் பெரிதாய் அமைந்துள்ளதனால் பொன்மலையை யழித்துச் செய்ததென்று வியக்கவும், எல்லாவகையிரத்தினங்களும் இந்நகரில் எங்கும் நிறைந்திருத்தலால் நவரத்தினங்களுக்கும் ஆகரமென்று புகழவும் ஆயிற்று. தெய்வத்தச்சன் இந்திரனேவலால் தான் வந்திருப்பதையும், இந்திரன் பாண்டவர்க்குத் தன்பெயரால் ஒருநகரை நிருமிக்குமாறு தனக்குக் கட்டளையிட்டிருப்பதையும் ஸ்ரீக்ருஷ்ணனிடம் தெரிவித்து, அவ்வாறே சிறப்புற நகரியற்றினனென்ற இவ்வளவே பாரதங்களிலுள்ளது. இங்குநின்று 26-ஆம் பாடல் வரையிலுள்ள வருணனைகள் பாலபாரதத்திலில்லை. பெரும்பாலும் வருணனைப்பகுதிகளை இந்நூலாசிரியர் தம்கற்பனையாற் கூறுகின்றார். தபதி=ஸ்தபதி: வடசொல். 'புருடராகம்', 'நகரொன்று' என்றும் பாடம். (596)

### 13.—அந்நகரத்தின் சிறப்பு.

என்பதியழகுகுலைந்ததென்றெண்ணி யிந்திரன்வெறுக்கவுமியக்கர்
மன்பதிபொலிவுசிதைந்ததென்றிடவு மற்றுளவானவர்பதிகள்
புன்பதியாகிப்போயினவெனவும் புரையறுபுந்தியாற்புவிமேல்
நன்பதியிதுவொன்றியற்றினனென்று நாரணாதிகடுதித்திடவும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இந்திரன்-தேவேந்திரன், என் பதி அழகு குலைந்தது என்று எண்ணி - 'எனது நகரமாகிய அமராவதி (இந்நகரத்துக்கு முன்) அழகுகெட்டதாம்' என்று நினைத்து, வெறுக்கஉம்-(அதனை) வெறுக்கும்படியாகவும், இயக்கர் மன் - யக்ஷர்களுக்கு அரசனான குபேரன், பதி பொலிவு சிதைந்தது என்றிடஉம் - '(எனது) நகரமாகிய அளகை (இந்நகரத்திற்குமுன்) அழகுகெட்டதாகும்' என்று சொல்லும்படியாகவும், மற்று உள வானவர்-மற்றுமுள்ள(வருணன் முதலிய) தேவர்கள், பதிகள் புல் பதி ஆகி போயின எனவும்-'(எங்கள்) நகரங்கள் (இந்நகரத்திற்குமுன்) இழிந்தநகரங்களாய்விட்டன' என்று சொல்லும்படியாகவும்,— 'புரை அறு புந்தியால்-குற்றமற்ற (தனது) மனத்தின் செயலால், புவிமேல்-பூமியில், நல் பதி இது ஒன்று இயற்றினன்-சிறந்த இந்நகரமொன்றை(விசுவகர்மன்) செய்தான்', என்று—, நாரண ஆதிகள் துதித்திடஉம்-திருமால் முதலானவர்கள் புகழவும்,— (எ - று.)—'சமைத்த' என அடுத்த கவியோடு தொடரும்.

இச்செய்யுளில் அழகுகுலைந்தது, பொலிவுசிதைந்தது, புன்பதியாகிப்போயினஎன ஒருபொருளைத்தருஞ்சொற்கள்வெவ்வேறு

வந்தது, பொருட்பின்வருநிலையணி. இயக்கர்-யக்ஷர் என்ற வடசொல்லின் திரிபு. நாரணதி-நாராயணநதி என்ற வடமொழித் தொடரின் விகாரம். (597)

### 14.—அந்நகரத்துக்குக் கண்ணன் இந்திரப்பிரத்தமென்று பேரிடுதல்.

சந்திராபதமுந்தினகராபதமு மிருபொழுதினுமெழச்சமைத்த
மந்திராதிகளுமஞ்சமுமதிலு மகரதோரணமணிமறுகும்
கொந்திராநின்றசோலையுந்தடமுங் கொற்றவன்கோயிலுநோக்கி
இந்திராபதியவ்விந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான்.

(இ - ள்.) சந்திர ஆபதம்உம்-சந்திரனுக்கு ஆபத்தும், தினகர ஆபதம்உம்-சூரியனுக்கு ஆபத்தும், இருபொழுதின்உம் எழ-(இராபகல்என்ற)இரண்டுகாலங்களிலும் உண்டாகும்படி,சமைத்த-(விசுவகர்மன்) நிருமித்த, மந்திர ஆதிகள்உம் - மாளிகை முதலியவற்றையும், மஞ்சம்உம்-கட்டில்களையும், மதில்உம்-மதில்களையும், மகர தோரணம் மணி மறுகுஉம்-மகரதோரணங்கள்அடர்ந்த அழகிய வீதிகளையும், கொந்து இராநின்ற சோலைஉம் - பூங்கொத்துக்கள் பொருந்திய சோலைகளையும், தடம்உம் - தடாகங்களையும், கொற்றவன் கோயில்உம் - அரசன் வசித்தற்குஉரிய அரண்மனையையும், இந்திராபதி- திருமகள்கணவனான கண்ணபிரான், நோக்கி -பார்த்து, அ இந்திரன் பெயரால் இந்திரப்பிரத்தம் என்று இட்டான் - அந்நகரத்தைச் செய்வித்த இந்திரனுடைய பெயரினால் (அதற்கு) இந்திரப்பிரஸ்த மென்று பெயரிட்டருளினான்; (எ-று.)

பிரஸ்த மென்ற வடசொல் - தங்குமிடமென்று பொருள்படும். இந்நகரம் அமைத்தற்கு இந்திரன் ஏவுதற்கருத்தாவாயினனாதலால், அவன்பெயரால் இதற்கு இந்திரப்பிரஸ்த மென்று பெயரிடப்பட்டதென்க. இந்நகரத்து உபரிகைமுதலியன மிகவும் உயர்ந்துள்ளதனால் சந்திரசூரியர்களுக்கு எப்பொழுதும் தடையுண்டாகின்றதென்பது, முதலடியின் கருத்து: தொடர்புயர்வுநவிற்சியணி. சந்த்ராபதம்.திநகராபதம், மந்திராதி, மகரதோரணம், இந்திராபதி, இந்திரன்-வடசொற்றிரிபுகள். திநகரன் - பகலைச் செய்பவன். மகரதோரணம் - சுறாமீன்வடிவமையச் சித்திரிக்கப்பட்ட தோரணம். கொந்து=கொத்து: மெலித்தல். (598)

### 15.—அந்நகரச்சிறப்பைக் கூறத்தொடங்கல்.

இமையவர்பதியிலுள்ளனயாவு மிங்குளவிங்குமற்றுள்ள
அமைவுறுபொருள்களங்கிலவெனுமா றமைத்தவான்றொல்பதியழகைச்
சமைவுறவிரித்துப்புகழ்வதற்குன்னிற் சதுர்முகத்தவனுமெய்தளரும்
நமர்களானவிலமுடியுமோமுடியா தாயினும்வல்லவாநவில்வாம்.

(இ - ள்.) 'இமையவர்பதியில் உள்ளன யாஉம்-தேவலோகத்திலுள்ள சிறந்தபொருள்களெல்லாம், இங்கு உள - இந்நகரத்தில் உள்ளன: மற்று—, இங்கு உள்ள அமைவு உறு பொருள்கள்-இந்நகரத்திலுள்ள சிறந்தபொருள்கள் (பல), அங்கு இல - அத்தேவலோகத்தில் இல்லை', எனும் ஆறு - என்று சொல்லும்படி, அமைத்த-உண்டாக்கிய, வான் தொல் பதி-சிறந்த பெரிய அந்நகரத்தினது, அழகை—, சமைவு உற விரித்து புகழ்வதற்கு உன்னில்.

தகுதியாக விரித்துச்சொல்லுதற்குஎண்ணினல், சதுர்முகத்தவன் உம் மெய்தளரும் - நான்குமுகங்களையுடையவனுன பிரமனும் மனம் தளர்வான்; (அங்ஙனமாயின்), நமர்களால் நவில முடியும்ஓ- எம்போலியரால்சொல்லமுடியுமோ? முடியாது;— ஆயின்உம் - ஆனாலும், வல்ல ஆ - (எமக்கு) இயன்றவளவு, நவில்வாம்-வருணித்துக்கூறுவோம்; (எ -று.)—அதனை, அடுத்தபதினொருகவிகளிற் கூறுகிருர். மற்று - வினைமாற்று.

மேற்கூறப்படும் நகரவருணனைக்குஇது ஓர் அவையடக்கமாய் அமைந்தது. நான்குமுகங்களையுடையவனுக்கும் முடியாதசெயல் ஒருமுகத்தையுடைய நம்மவர்க்கு [மனிதர்கட்கு] முடியாதுஎன்ற கருத்தை,'சதுர்முகத்தவன்' என்ற பெயர் உட்கொண்டதனுல், கருத்துடையடைகோளியணி. (599)

## 16.—இதுமுதற் பதினெரு கவிகள் - இந்திரப்பிரத்தவருணனை.

விதிமறைமுறையிற்சாந்திசெய்கடவுள் வேதியராரவமொருசார்
மதிமுறைதவருவமைச்சர்சொல்விழையு மன்னவராரவமொருசார்
நிதிகெழுசெல்வத்தளகையோர்நெருக்கா னிறைந்தபேராரவமொருசார்
பதிதொறுமுழவர்வினைபயனெடுக்கும் பறைகறங்காரவமொருசார்.

(இ-ள்.) மறைவிதி முறையின்- வேதங்களிற்கூறிய விதிவாக்கியங்களின் முறைமைப்படி, சாந்திசெய் - (நகரப்பிரவேசத்திற்காகச் சிலதோஷ)சாந்திச்சடங்குகளைச் செய்கிற,கடவுள்வேதியர்-தெய்வத்தன்மையையுடையபிராமணர்களது, ஆரவம் - மந்திர முழக்கம், ஒரு சார்-ஒருபக்கத்திலும்,—மதி முறைதவரு-அறிவுடைமையால் நீதிதவருத, அமைச்சர்-மந்திரிகளுடைய, சொல் - சொற்களை, விழையும் - விரும்பிக்கேட்டொழுகுகிற, மன்னவர் - அரசர்களுடைய, ஆரவம்-பேரொலி, ஒரு சார்-ஒருபக்கத்திலும்— நிதிகெழு செல்வத்து-நிதிபோல் நிறைந்த செல்வத்தையுடைய, அளகையோர் - அளகாபுரிக்குஉரியோராகிய வைசியர்களுடைய, நெருக்கால்-நெருக்கத்தினல், நிறைந்த—, பேர் ஆரவம்-பெரிய ஆரவாரம், ஒரு சார்-ஒருபக்கத்திலும்,—பதிதொறுஉம் - ஊரின் இடந்தோறும், உழவர் வினை பயன் எடுக்கும்-வேளாளர் (ஆங்காங்கு) விளையும்பயன்களை யெடுத்துக்கொள்ளும்போது (களிப்பினுல்) முழங்குகிற, பறை-வாத்தியங்கள், கறங்கு-ஒலிக்கிற, ஆரவம்-முழக்கம், ஒரு சார்-ஒரு பக்கத்திலும், (அந்நகரிலுள்ளன); (எ - று.)—'உள்ளன' என வினைமுற்று வருவிக்க: மேல் 3-கவிகளிலும் இவ்வாறே.

கவிகள் தாம் வருணிக்கும் நாடு நகரம் மலை முதலிய இடங்களில் பலவகை முழக்கமுள்ளன என்று வருணனை கூறுதல், ஒருமரபு. இச்செய்யுளில் அடிதோறும் ஈற்றெழுத்து ஒத்துவந்தது, இயைபுத்தொடை.

இங்கே 'சாந்தி'என்றது, நகரப்பிரவேசகாலத்தில் தோஷநிவாரணமாகச்செய்யும் சடங்கைக்குறிக்கும்.குபேரனது இராசதானியான அளகாபுரியைச் செல்வமிகுதிக்கு உரியவர்களாகிய வைசியர்க்கு உரியதெனக்கூறுதல், கவிசமயமாதலால், இங்குவைசியர்'அளகை

யோர்' எனப்பட்டனர்; திருவிளையாடற்புராணத்து, வன்னியுங் கிணறு மிலிங்கமுமழைத்தபடலத்தில் "பொன்னாட்டின் மடவாரைப் புணர்வதற்கோநம்மளகாபுரத்துவேந்த, னன்னாட்டின்மடவாரை மணப்பதற்கோ" என்றதுகொண்டும் இதனையுணர்க; பந்தனந்தாதியில், பந்தனென்ற வைசியன் "பொன்னளகைப்பந்தன்," "அளகைக்கோன்," "அளகைச்சேய்" என்றுகூறப்படுதலுங்காண்க; ஆதியில் அளகாபுரியினின்றுவைசியர்கள் பிறஇடங்கட்குவந்தனரென ஒருகதைகூறுதலும்உண்டு. பதிதொறும்உழவர் விளைபயன் எடுத்தல்-"கதிர்படுவயலினுள்ள கடிகமழ்பொழிலி னுள்ள,முதிர்பலமரத்தினுள்ள முதிரைகள் புறவினுள்ள, பதிபடுகொடியினுள்ள படிவளர்குழியினுள்ள, மது வனமலரிற் கொள்ளும்வண்டெனமள்ளர்கொள்வார்" எனக் கம்பர்கூறியவாறுகாண்க. அங்ஙனம் பயன்கொள்ளும்பொழுது, களிப்புமிகுதல்காரணமாகப் பறைகறங்குதல் இயல்பு. நெருக்கு-நெருங்குஎன்றமுதனிலை திரிந்த தொழிற்பெயர். (600)

**17.** **தோரணமஞ்சத்தலந்தொறுநடிக்குந் தோகையர்நாடகமொருசார்**
**பூரணபைம்பொற்கும்பமுமொளிகூர் புரிமணித்தீபமுமொருசார்**
**வாரணமிவுளிதேர்முதனிரைத்த வாகமுஞ்சேனையுமொருசார்**
**நாரணன்வனசபதயுகம்பிரியா நலம்பெறுமாதவரொருசார்.**

(இ - ள்.) தோரணம் - தோரணங்களையுடைய, மஞ்சம் தலம் தொறுஉம்-மாளிகைகளின் உபரிகையிடங்களிலெல்லாம்,நடிக்கும்-நாட்டியஞ்செய்கிற, தோகையர்-அழகியமகளிர்களுடைய,நாடகம்-நர்த்தனங்கள், ஒரு சார்-ஒருபக்கத்திலுள்ளன:பைம்பொன்பூரண கும்பம்உம் - பசும்பொன்னாலாகியநிறைகுடங்களும், ஒளி கூர் புரி மணிதீபம்உம் - ஒளிமிக்க அழகியஇரத்தின தீபங்களும், ஒருசார்-ஒருபக்கத்திலுள்ளன: வாரணம்இவுளி தேர் முதல்-யானை குதிரை தேர்முதலாக, நிரைத்த-அணியணியாகத்தொகுக்கப்பட்ட, வாகம் உம் - வாகனங்களும், சேனைஉம் - காலாட்சேனையும், ஒருசார்-ஒருபக்கத்திலுள்ளன ;நாரணன்- திருமாலினுடைய, வனசம் பத யுகம்-தாமரைமலர்போன்ற திருவடியிணையை, பிரியா - இடைவிடாது தியானிக்கிற, நலம் பெறு-நன்மையைப் பெற்ற, மா தவர்-சிறந்த தவத்தையுடைய முனிவர்கள், ஒருசார்-ஒருபக்கத்திலுள்ளார்கள்;

தோரணம் - கட்டுவாயில்: மங்களார்த்தமாக மாவிலைமுதலியவற்றாற் கட்டப்படுவனவுமாம். மஞ்சம் - மேனிலை. 'நாடகம் -கதை தழுவிவருங் கூத்து' என்பது சிலப்பதிகாரவுரை. பூர்ணகும்பமும், தீபமும் - அஷ்டமங்கலங்களிற்சேர்ந்தவை. நால்வகைப்படையுள் முந்தினமூன்றும்முதலிற்கூறப்பட்டதனால்,பின்புசேனையென்றது-பதாதியைக்குறிக்கும். நாராயணனென்றதிருநாமம்-நார அயநஎனப் பிரிந்து, சிருஷ்டிப் பொருள்களுக்கெல்லாம் இருப்பிடமானவனென்றும், சிருஷ்டிப்பொருள்களைத் தனக்கு இருப்பிடமாகவுடையவனென்றும், பிரளயப்பெருங்கடலைத் தனக்கு இடமாகக்கொண்டவனென்றும், மற்றும்பலவாறும்பொருள்படும். வநஜம்-நீரிற் பிறப்பதெனக்காரணப்பொருள்படுவது: தாமரைக்குக் காரணவிடுகுறி.

18. சிற்பவல்லபத்தின்மயன்முதலுள்ள தெய்வவான்றபதியரொருசார்
வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும் விஞ்சையர்கின்னரரொருசார்
அற்புதவடிவினுருப்பசிமுதலா மழகுடையரம்பையரொருசார்
பொற்புடையமரர்பதியுமெய்ம்மகிழ்ந்து பொழிதருபொன்மலரொருசார்.

(இ-ள்.) சிற்பம் வல்லபத்தின்-சிற்பத்தொழில் வல்லமையை யுடைய, மயன் முதல்-மயன் முதலாக, உள்ள—, வான் தெய்வம் தபதியர்-பெருமையையுடைய தெய்வத்தச்சர்கள், ஒரு சார்-ஒரு பக்கத்திலும்,— வெற்பு அகம் மருவி-மலையிடங்களிற் பொருந்தி, வீற்றுவீறு இருக்கும்-வெவ்வேருகச் சிறப்புடனிருக்கிற, விஞ்சையர்-வித்தியாதரர்களும், கின்னரர்-கின்னரர்களும், ஒரு சார் - ஒரு பக்கத்திலும்,—அற்புதம் வடிவின்-(காண்பவர்க்கு) அதிசயத்தை விளைக்கிற வடிவத்தையுடைய, உருப்பசி முதல் ஆம் - ஊர்வசி முதலான, அழகுஉடை அரம்பையர்-அழகையுடைய தேவமாதர் கள், ஒருசார்-ஒருபக்கத்திலும், (அந்நகரத்திலுள்ளார்கள்): பொற்பு உடை - அழகையுடைய, அமரர்-தேவர்களும், பதிஉம்-(அவர்கட்குத்)தலைவனான இந்திரனும், மெய் மகிழ்ந்து பொழிதரு-மனம்மகிழ்ந்துசொரிகிற, பொன் மலர்-பொன்மயமான (கற்பக விருட்சத்தின்) மலர்கள், ஒரு சார்-(அந்நகரத்து) ஒருபுறத்தி லுள்ளன; (எ - று.)

சிற்பம்-கோயில் வீடு முதலியன கட்டுந்தொழில். மயன்-அசுரர்களதுசிற்பி. வித்தியாதரரும் கின்னரரும் மலையில்வாழ்பவராதலால், அவர்கட்கு 'வெற்பகமருவிவீற்றுவீற்றிக்கும்'என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.வீற்று-வேறுபாடு. வீறு-வேறொருவர்க் கில்லாத சிறப்பு. கின்னரர்- கிந்நரமென்னும்வாத்தியத்தைக் கையிற்கொண்டு பாடித்திரியும்தேவசாதியார். ரம்பையென்று ஒரு தேவமாதின்பெயராதலால், அதன்பன்மையாகிய அரம்பையரென்பது தேவமாதர்க்குப் பெயராக வழங்கும். பொன்னுலகமாகிய சுவர்க்கலோகத்தில் உள்ளவை யாவும் பொன்மயமாயுள்ளவையாதலால், அங்கு உள்ள தேவதருக்களின் மலர் பொன்மலரெனப்பட்டது. இந்நகரத்தின் சிறப்புப்பற்றி, பலரும் தம்தம் அழகிய நகரங்களை விட்டு இதில்வந்து தங்குகின்றன ரென அறிக. அமராபுரியும் என்றும் பாடம். (602)

19. வரையெலாமகிலுஞ்சந்தனதருவு மான்மதநாவியின்குலமும்
திரையெலாமுத்தும்பவளவண்கொடியுஞ் செம்மணிகளுமரகதமும்
கரையெலாம்புன்னைக்கானமுங்கண்ட லடவியுங்கைதையங்காடும்
தரையெலாம்பொன்னும்வெள்ளியும்பழன வேலிசூழ்சாலியுங்கரும்பும்.

(இ-ள்.) வரைஎலாம்-(இந்நகரத்தைச்சார்ந்த)மலைகளிலெல்லாம், அகில்உம்-அகில்மரங்களும்,சந்தனம்தருஉம் - சந்தனமரங்களும், மான்மத நாவியின் குலம்உம்-கஸ்தூரிகளின் கூட்டங்களும், திரை எலாம் - (இந்நகரத்தைச் சேர்ந்த)கடல்களிலெல்லாம், முத்துஉம்-முத்துக்களும், வள் பவளம் கொடிஉம்-சிறந்தபவழக்கொடிகளும், செம்மணிகள்உம் - சிவந்தமாணிக்கங்களும், மரகதம்உம் - பச்சை யிரத்தினங்களும்,—கரை எலாம்-(அக்கடற்) கரைகளிலெல்லாம்,

புன்னைகானம் உம் - புன்னைமரங்களின் தொகுதியும், கண்டல் அடவி உம்-வெண்டாமைக்காடும், அம் கைதை காடு உம்-அழகிய செந்தாமரைக்காடும், தரைஎலாம் - (இந்நகரத்தைச் சார்ந்த) இடங்களிலெல்லாம், பொன்னும் வெள்ளியும்—, பழனம்வேலி - (அந்நகரத்தைச்) சூழ்ந்த மருதநிலங்களிலெல்லாம், சூழ் சாலி உம் கரும்பு உம்-நிறைந்த நெற்பயிர்களும் கரும்புகளும் (உள்ளன); (எ - று.)

முதலடியிற் குறித்தவை-குறிஞ்சிநிலப்பொருள்கள். இரண்டு மூன்றாமடிகளிற் குறித்தவை-நெய்தல் நிலப்பொருள்கள். நான்காமடியின் இறுதியிற் குறித்தவை-மருதநிலப்பொருள்கள். பொன்னும் வெள்ளியும் மலையில் தோன்றுதலால் குறிஞ்சிநிலப்பொருள்களேயாயினும், அங்குநின்று யாற்றுநீர்ப்பெருக்கால் கொணர்ந்து கொழிக்கப்பட்டனவென மருதநிலத்தைச் சார்த்திக் கூறுதலும் உண்டு. இந்திரப்பிரஸ்தத்துக்குக் கடல் நெடுந்தூரத்திலுள்ளதாயினும், இவ்வாறு சார்த்திக்கூறிய இதற்குக் கருத்து-இந்நகரின் எல்லை கடலினளவுமெனக் கொள்ளவேண்டும். கண்டல், கைதை என்பன-தாழையின் சாதிபேதம். (603)

**20.** ஆலையிற்கரும்பின்கண்களிற்றெறித்த வாரமவ்வயற்புறத்தடுத்த
சோலையிற்பயிலுங்குயிலையுஞ்சுருதிச் சுரும்பையுநிரைநிரைதுரப்ப
வேலையிற்குதித்தவாளையேறும்பர் வியனதிகலக்கிவெண்டிங்கள்
மாலையிற்பரவும்வானமீன்கொடிபோல் வாவியிற்குளிக்குமாமருதம்.

(இ - ள்.) மா மருதம் - (அந்நகரத்தைச் சார்ந்த) பெரிய மருதநிலங்களில்,—ஆலையில்-ஆலையென்னும் யந்திரத்தில், (இட்டு ஆட்டிச் சாறுகொள்ளப்படுகிற), கரும்பின்-கரும்புகளின், கண்களின்-கணுக்களினின்று, தெறித்த-(நெடுந்தூரமளவும்) வெளிச்சிதறிய, ஆரம் - முத்துக்கள், அ வயல்புறத்து அடுத்த சோலையில் பயிலும்-அந்தக்கழனிகளின் அருகிற்பொருந்தியுள்ள சோலைகளிலிருக்கிற,குயிலை உம்-குயில்களையும், சுருதி சுரும்பை உம்-சுருதிகூட்டுவது போல ரீங்காரஞ்செய்கிற வண்டுகளையும், நிரைநிரை துரப்ப-வரிசை வரிசையாக ஓட்டுவன;வேலையில்குதித்த-(அந்நகரத்தைச் சார்ந்த) கடலினின்று துள்ளியெழுந்த, வாளை ஏறு-சிறந்த வாளைமீன்கள், உம்பர் வியன் நதி கலக்கி-மேலுலகத்திலுள்ள பெரிய தேவகங்காநதியைக்கலக்கி, வெள் திங்கள் மாலையில் பரவும் வானம் மீன்கொடி போல்- வெண்மையாகிய இளம்பிறைதோன்றுகிறமாலைக்காலத்தில் மிகுதியாய் விளங்குகிற நக்ஷத்திரங்களின் வரிசைபோல, வாவியில் குளிக்கும் - (அந்நகரைச்சார்ந்த) தடாகங்களிலே மூழ்கும்; (எ - று.)

முதிர்ந்தஉயர்ந்தசாதிக்கரும்புகளின் கணுக்களினின்று முத்துப்பிறக்குமென்றல், கவிமரபு. சுருதியாவது-முதல் நாதமாகிய ஷட்ஜத்தோடு பஞ்சமமென்னுஞ் சுவரத்தை மனோரஞ்சனமாம்படி சுத்த பொருத்தல். கடல்-நெய்தலும், வாவி-மருதமுமாம்; கடலினின்று குதித்த வாளை வாவியிற்குளிக்கும் எனக் கூறவே, திணைமயக்கமாயிற்று. ஏறு - ஆண்மைப்பெயர்; மீனுக்கு ஏறு என்னும்

பெயர் உரியதாதலை, ''மீனேறுயர்த்த கொடிவேந்தன்', என்ற சிந்தாமணியாலும் அறிக. 'வானமீன்கொடிபோல்' என்ற உவமையால், சிலவாளைமீன்களின்பின்னே சிலவாளைமீன்களாக வரிசையாகச்சென்றமைபெறப்படும். மாலையிற்பயிலும் எனவும் பாடம்.

**21.** புரிசையிற்குடுமிதொறுநிரைதொடுத்த பொற்கொடியாடையினிழலைக்
கிரிமிசைப்பறக்குமன்னமென்றெண்ணிக்கிடங்கில்வாழோதிமக்கிளைகள்
விரிசிறைப்பறலின்கடுமையாலெய்தி மீதெழுமஞ்செனக்கலங்கிப்
பரிசயப்படுதண்சததளப்பொகுட்டுப் பார்ப்புறைபள்ளிவிட்டகலா.

(இ-ள்.) புரிசையின்-(அந்நகரத்து) மதில்களின், குடுமிதொறும்-சிகரங்களிலெல்லாம், நிரை தொடுத்த-வரிசையாகக் கட்டப்பட்ட, பொன் கொடி ஆடையின் நிழலை-அழகியகொடிச்சீலைகளின் தோற்றத்தை, கிரிமிசை பறக்கும் அன்னம் என்று எண்ணி-மலைகளின்மேற் பறக்கிற அன்னப்பறவைகளென்று கருதி, கிடங்கில் வாழ் ஓதிமம் கிளைகள்-அகழியில்வாழ்கின்றஅன்னப்பறவைகளின் கூட்டங்கள், விரி சிறை பறலின் கடுமையால் எய்தி-விரிந்த சிறகுகளைக்கொண்டு பறத்தலின் விசையால் எழுந்துமேற்சென்று (அங்கு அக்கொடித்தோற்றத்தைக் கண்டவுடனே), மீது எழும் மஞ்சு என கலங்கி-மலைமீதுஎழுகிற வெண்ணிறமேகமென்று எண்ணிக் கலக்கமுற்று, பரிசயம் படு தண் சததளம் பொகுட்டு பார்ப்பு உறை பள்ளி விட்டு அகலா-(தாம்)பழகுதல் பொருந்திய குளிர்ந்த தாமரைமலர்களின் பொகுட்டாகிய தம்குஞ்சுகளிருக்கின்ற சயனத்தைவிட்டு நீங்காவாயின; (எ - று.)

அந்நகரத்துமதிற்புறத்திலுள்ள அகழியில் வசிக்கின்ற அன்னப்பறவைகள் அம்மதிலின்சிகரங்களில் அசைந்து விளங்குங் கொடிச்சீலைகளைத் தங்களினமான அன்னப்பறவைகளென்று மாறுபடக்கருதி அவற்றோடு கூடிக்குலாவலா மென்றகருத்தினால் சிறகுகளை அடித்துக்கொண்டு விசையோடு மேலெழுந்தன; அங்ஙனம் சென்று நோக்குகையில் அக்கொடிவரிசையை மேகமென்று மீண்டும் வேறுவகையாக மாறுபடக்கருதி அச்சங்கொண்டு மீண்டு தாமரைப்பொகுட்டில்தங்குகிற தம்குஞ்சுகளை விட்டு நீங்காது காப்பனவாயின வென்பதாம். வெண்ணிறமேகத்தைக் கண்டு அஞ்சியொடுங்குதல், அன்னத்திற்கு இயல்பு. மயக்கவணி. கொடியாடையின் நிழல்-நீரிற் காணப்படும் கொடிச்சீலையின் பிரதிபிம்பமுமாம்; மதில்மீதுள்ளகொடிச்சீலையின்சாயையை நீரிற்கண்டுஅவற்றைமலைமீதுபறக்கும் அன்னங்களின் நிழலென்று கருதின வென்க. பறல்-பறத்தலென்பதன் விகாரம். சிறைப்பாலின் எனவும் பாடம்.

**22.** கயற்றடஞ்செங்கட்கன்னியர்க்கிந்து காந்தவார்சிலையினுலுயரச்
செயற்படுபொருப்பின்சாரலிற்கங்குற்றெண்ணிலாவெறித்தலினுருகி
வியப்பொடுகுதிக்குந்தாரைகொளருவி விழைவுடன்படிவன சகோரம்
நயப்புடையன்னச்சேவல்பேடென்று நண்ணலாலுளமிகநாணும்.

(இ - ள்.) கயல் தட செம் கண் கன்னியர்க்கு-கயல்மீன்போலப் பிறழ்கிற பெரிய செவ்வரிபரந்த கண்களையுடைய இளம்பெண்கள் விளையாடுதற்பொருட்டு, வார் இந்துகாந்தம் சிலையினால் உயர செயல்படு-பெரியசந்திரகாந்தக்கற்களால்உயரமாகச்செய்யப்பட்ட, பொருப்பின்-செய்குன்றுகளின், சாரலில் - பக்கங்களிலே, கங்குல்-இராப்பொழுதில்,தெள்நிலா எறித்தலின்-தெளிவானசந்திரகாந்தி வீசுதலினால், உருகி-(அக்கற்கள்) உருக (அவற்றினின்று), வியப்பொடு குதிக்கும்-(காண்பவர்)அதிசயிக்கும்படியான தன்மையோடு பாய்கிற, தாரை கொள் அருவி-தாரையாகவுள்ள நீரருவிகளில், விழைவுடன்படிவன-விருப்பத்தோடுமுழுகுகின்றனவான,சகோரம் -சகோரபட்சிகளை, நயப்பு உடை அன்னம் சேவல் - விருப்பத்தை யுடைய ஆணன்னப்பறவைகள், பேடு என்று நண்ணலால் -(தம்) பேடையாகிய அன்னப்பறவைக ளென்று எண்ணிச் சமீபித்ததனால், உளம் மிக நாணும் - (அவ்வன்னங்கள்) மனம் மிகவெள்கும்;

சந்திரகாந்தம்-சந்திரனொளிபட்டதனால் நீரை யுமிழுங் கல்; சகோரம்-நிலாவை வாயிலேற்றுஉண்ணும் பறவை. சகோரம் நிலவையுண்டு வாழும் பறவை யாதலால், நிலாத்தோற்றத்தால் சந்திரகாந்தக் கல்லினின்றுபெருகும்நீரில்களிப்போடுமூழ்கி விளையாடிக்கொண்டிருந்தன. வெண்ணிறமான அந்நீரில்படிந்து வெண்ணிறமாகக் காணப்படுதலாலும், நீரில் விளையாடுதலாலும், அவற்றைப் பெண்ணன்னங்களென்று ஆணன்னங்கள் மாறுபடக் கருதி ஆதரத்தோடு அருகில்வந்து தாம் கருதிக் காதலித்த அன்னப்பேடுகளல்லவென்றுதெரிந்ததனால், நாணமுற்றன: மயக்கவணி.

23. அரிமணிச்சிலையின்சலாகையால்வட்ட மாகவேயமைத்தசாலகந்தோறு
எரிமணிக்குழையார்வதனமண்டலத்திலெழிலுடன்மிளிருமைத்தடங்கண்
விரிமணிக்கதிரோனளிக்கமுன்களிந்த வெற்பிடைவிழுமாநதியின்
புரிமணிச்சுழியிற்றுணையொடுமுலாவிப் பொருவனகயல்களேபோலும்.

(இ-ள்.) அரிமணி-நீலரத்தினமாகிய,சிலையின்-கல்லினுடைய, சலாகையால்-சலாகைகளை வைத்து, வட்டம் ஆகவே அமைத்த - வட்டவடிவமாகவே செய்யப்பட்ட, சாலகம் தோறு-(அந்நகரத்து மாளிகைகளின்) பலகணிகள் தோறும், எரி மணி குழையார் வதன மண்டலத்தில் - சொலிக்கிற இரத்தினங்கள் பதித்த குழையென்னுங் காதணியையுடைய மகளிரது முகமண்டலத்திலே,எழிலுடன் மிளிரும்-அழகோடு பிறழ்ந்து விளங்குகிற, மை தடகண்-மையிட்ட பெரியகண்கள்,—விரி மணி கதிரோன் முன்அளிக்க-பரந்தஅழகிய கிரணங்களையுடைய சூரியன் முற்காலத்திற் பெற, களிந்த வெற்பிடை விழும் - களிந்தமலையினின்று விழுகிற, மா நதியின்-பெரிய யமுநாநதியினது,புரமணிசுழியில்-சுற்றுதலையுடையநீலநிறமுள்ள சுழியிலே, துணையோடும் உலாவி பொருவன-ஆணும் பெண்ணுமாக (ஒன்றோடொன்று) மோதி விளையாடுவனவான, கயல்களே - கயல் மீன்களையே, போலும்-ஒக்கும்; (எ - று.)

23. [illegible]

யமுநாநதியின் நீர்ப்பெருக்குக் கருநிறமுடைய தாதலால், நீல ரத்தினக்கற்கொண்டு வட்டமாக அமைத்த சாளரம் யமுனையின் நீர்ச்சுழி போலுமெனவும், அச்சாளரத்தில் விளங்கும் மகளிர் கண்ணிணை அச்சுழியில் விளையாடும் இணைக்கயல் போலுமெனவும் வருணித்தார்: தற்குறிப்பேற்றவணி. சலாகை - நாராசம். அரிமணி - இந்திரநீலம்: அரி-இந்திரன். (607)

**24.** **இனத்தினுலுயர்ந்தவிந்திரபுரியு மிந்திரப்பிரத்தமுமிரண்டும்**
**தனத்தினுணர்வாற்கேள்வியாலழகாற் றக்கதொன்றியாதெனத்துலைகொள்**
**மனத்தினுனிறுக்கவுயர்ந்ததொன்றென்று மண்மிசையிருந்ததுமிகவும்**
**கனத்தினுலன்றித்தாழுமோயாருங் கண்டதுகேட்டதன்றிதுவே.**

(இ - ள்.) இனத்தினுல் உயர்ந்த-(ஒன்றுக்கு ஒன்று)இனமாய் (மற்றையெல்லாநகரங்களினுஞ்) சிறந்த, இந்திரபுரி உம் இந்திரப் பிரத்தம்உம் இரண்டுஉம் - இந்திரனது அமராவதிநகரமும் இந்த இந்திரப்பிரத்தநகரமும் ஆகிய இரண்டனுள், தனத்தினுல் உணர் வால் கேள்வியால் அழகால் தக்கது ஒன்று யாது-செல்வம் அறிவு நூற்கேள்வி அழகு என்னும் இவற்றுக்கு இடமாதலால்மேன்மை யுடையது எது? என-என்று, துலைகொள் மனத்தினுல் நிறுக்க - (இந்திரன்) தராசின் தன்மையைக்கொண்டமனத்தினுல் நிறுத் துப் பார்க்க, ஒன்று உயர்ந்தது - (அமராவதியாகிய) ஒரு நகரம் உயர்ந்தது; ஒன்று மண்மிசை இருந்தது-மற்றென்ருகிய இந்திரப் பிரத்தநகரம் பூமியில் தங்கியது: மிகஉம் கனத்தினுல் அன்றி தாழும்ஓ-மிகவும்பாரமுடைமையாலன்றி ஒன்று தாழ்வது உண்டோ? இது யார்உம் கண்டது-இது எவரும் கண்ணுற்கண்டதே; கேட்டது அன்று-காதினுற் கேள்வியுற்றது மாத்திரமன்று;

பெரிய நகரங்கள் பலவற்றுள்ளும் சிறந்தவையென்று ஓரினப் படுத்தி ஒருங்கு கூறப்படுகிற அமராவதி இந்திரப்பிரஸ்தம்என்ற இரண்டனுள் மகிமைவாய்ந்தது எதுவோ என்ற தன்ஐயத்தை அகற்றக்கருதி நடுநிலைமை தவருத இந்திரன் தன் மனத்தையே தராசுக்கோலாக நாட்டி அதன் தட்டு இரண்டிலும் இவ்விரண்டு நகரங்களையும் வைத்துத் தூக்கிப்பார்க்கையில், அமராவதி பெரு மைக்குறைவால் மிகஇலேசுபட்டு வானத்தின்மீது நெடுந்தூரம் உயர, இந்திரப்பிரத்தம் பெருமைமிகுதியால் அதிககனம் பெற்று நிலத்தில் தாழ்ந்து நின்றதென்க. இவ்விரண்டனுள் ஒன்று மேலும் ஒன்று கீழுமாக இருத்தலை ஆதாரமாகக்கொண்டு இக் கற்பனையைக் கூறுகின்ருராதலால், 'மிகவுங்கனத்தினு லன்றித் தாழுமோ' என்ருர். கனம் குறையக்குறைய உயர்தலும், கனம் அதிகப்பட அதிகப்படத் தாழ்தலுமாகிய இயல்பைவிளக்கிய வாறு. பிரதியக்ஷப்பிரமாணத்தால் தெளியக்கூடியது இது, ஆப்த வாக்கியப்பிரமாணங்கொண்டே நம்பவேண்டியதன்று என்றபடி. 'இது' என்பதற்கு-மிகவும் கனத்தினுலன்றித் தாழ்தல்எனப் பொருள் கொண்டால், 'யாருங் கண்டது கேட்டது அன்று' என்ப தற்கு - (அத்தன்மை) எவரும் கண்டது மன்று கேட்டது மன்று என்று உரை கூறலாம். இந்திரபுரி, இந்திரப்பிரத்தம் என்றபெயர்

களில் இந்திரனது சம்பந்தத்தின் ஒற்றுமையும், மற்றை நகரமனைத்தினுஞ் சிறந்திருத்தலும் இவ்விரண்டிற்கும் உள்ளதனால், 'இனத்தினாலுயர்ந்த இந்திரபுரியும் இந்திரப்பிரத்தமுமிரண்டும்' என்றார். வசிப்பவரது உணர்வும் கேள்வியும் நகரின்மேல் வைத்துக்கூறப்பட்டன. நிறுக்க என்றவினையைநோக்கி, மனமாகிய துலாக்கோலினால் என்று உருவகமாகப்பொருள் காண்க. இச்செய்யுள், உருவகத்தை அங்கமாகக்கொண்ட தற்குறிப்பேற்றவணி.

**25. நிறக்கவல்லிரும்பைச்செம்பொனும்வண்ண நிகழ்த்தியவிரதமேநிகர்ப்பப்**
**பிறக்கமும்வனமுமொழித்தவணமைத்த பெரும்பதிக்குவமையும்பெருமல்**
**மறக்கடுங்களிற்றுக்குபேரன்வாழளகை வடக்கிருந்ததுநெடுவானில்**
**துறக்கமுமொளித்ததிலங்கையும்வெருவித்தொடுகடற்சுழிப்புகுந்ததுவே.**

(இ - ள்.) வல் இரும்பை-வலிய இரும்பை, நிறக்க செம்பொன் ஆம் வண்ணம்-மாற்றுயர்ந்து சிவந்ததாய் விளங்கச்சிறந்த பொன்னாகும்படி, நிகழ்த்திய-செய்த, இரதமே நிகர்ப்ப -இரசகுளிகையை போல, வனம்உம் பிறக்கம்உம் ஒழித்து அவண் அமைத்த-(விசுவகருமன்) காண்டவவனத்தையும் அதைச்சார்ந்த மலையையும் அழித்து அவ்விடத்தில் தகுதியாக நிருமித்த, பெரும்பதிக்கு-பெரிய அந்நகரத்துக்கு, உவமைஉம் பெறுமல்-(தான்) ஒரு புடையொப்பும் ஆகமாட்டாமல், மறம் கடு களிறு குபேரன் வாழ் அளகை-வலிமையையுடைய உக்கிரமான மதயானையையுடைய குபேரன் வாழ்கிற அளகாபுரி, வடக்கு இருந்தது—; துறக்கம் உம்-சுவர்க்கலோகமும், நெடுவானில் ஒளித்தது - நெடுந்தூரத்ததான ஆகாயத்தில் மறைந்துவிட்டது; இலங்கைஉம்-இலங்காபுரியும், வெருவி - அஞ்சி, தொடு கடல் சுழி புகுந்தது-தோண்டப்பட்ட கடலினிடை யிடத்தை யடைந்தது; (எ - று.)

இயல்பில் வடதிசையில் நெடுந்தூரத்திலுள்ளதான அளகாபுரியையும், வானத்தில் நெடுந்தூரத்துக்கு அப்பாலுள்ளதாய் மனிதர் கண்ணுக்குப்புலனாகாத அமராவதிநகரையும், தென்கடலில் நூறுயோசனைக்கு அப்பாலுள்ளதான லங்காபுரியையும், இந்நகரத்திற்குத் தாம்ஒப்பாகமாட்டாமல் தோற்றுவெள்கி அஞ்சி வடக்கிருத்தலும் வானத்திற்சேர்ந்துவிடுதலும் தென்கடலினிடைவிழுந்திடுதலும் செய்தனவாக வருணித்தார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணி. வடக்கிருத்தல் என்றதொடர்-வடதிசையிலேதங்குதலென்றபொருளோடு, உயிரைத்துறப்பதென்றதுணிவுடன் வடதிசைநோக்கித் தருப்பைப்புல்லிற் கிடத்தலாகிய பிராயோபவேசமென்ற பேர்பூண்ட ஒருவிரதத்தையுங் காட்டவல்லதாதலறிக. இரும்பைப் பொன்னாக்குதல் - இரசவாதமென்னும்வித்தை; ஸ்பர்ஸவேதி யென்னும் மகாமூலிகையின் இரசத்தை இரும்பின் மேற்பிழிந்தால் அதுபொன்னாகுமென்பர். இரசம்=ரஸம்: சாறு. இரும்பைப்பொன்னாக்கு மிரசம் போல, வனத்தை நகராக்கின விசுவகருமனென்க. பிறக்கம்-நெடுந்தூரத்திலுள்ளாருங் காணும்படி விளங்குவது: மலை. 'வடக்கிரிந்தது' எனவும் பாடம். (609)

26. வாவியும்புறவுஞ்சோலையுமலர்ந்த மலர்களுமணிகளின்குழாமும்
மேவியெங்கெங்குமயங்கலிற்றந்தம் வேரியும்வாசமுந்தூதாப்
பூவினஞ்சுரும்பையழைக்கும்வண்பழனப் புதுவளஞ்சுரக்குநாடனைத்தும்
ஓவியங்குறித்துப்பூமகள்வடிவை யொப்பனைசெய்தவாறொக்கும்.

(இ - ள்.) பூ இனம்-பலவகை மலர்களாகிய மகளிர், தம் தம் வேரி உம் வாசம் உம் தூது ஆ - தம்தமது தேனையும் நறுமணத்தையும் தூதாகக்கொண்டு, (அவற்றால்), சுரும்பை அழைக்கும் - வண்டுகளாகிய தம்கணவரை அழைக்கப்பெற்ற, வண்பழனம்-வளப்பமுள்ள மருதநிலத்தின், புது வளம் - புதுமையான வளப்பங்கள், சுரக்கும்-மேன்மேல் மிகப்பெற்ற,நாடு அனைத்துஉம்-அந்நாடுமுழுவதிலும்,—வாவிஉம்-குளங்களும், புறவுஉம் - கொல்லைகளும், சோலைஉம்-சோலைகளும், மலர்ந்த மலர்கள்உம் - மலர்ந்த பூக்களையும், மணிகளின் குழாம்உம்-இரத்தினங்களின் கூட்டத்தையும்,மேவி-பொருந்தி, எங்கு எங்குஉம் மயங்கலின் - எல்லாவிடங்களிலுஞ் செறிந்திருத்தலால், (அச்செறிவு), பூமகள்வடிவை ஓவியம் குறித்து ஒப்பனை செய்த ஆறு ஒக்கும்-பூமிதேவியின் வடிவைச் சித்திரமெழுதி அலங்கரித்த தன்மையைப் போலும்;

அந்நாடுமுழுவதிலும், குளங்களும் கொல்லைகளும் சோலைகளும், பலவகைமலர்களையும் பலவகையிரத்தினங்களையும் உடையனவாயிருத்தல், பூமிதேவியின்வடிவத்தைச் சித்திரமெழுதி அலங்கரித்தாற்போலுமென்பதாம்: **நற்குறிப்பேற்றவணி.** மணிகள், மலையருவியாற் கொணர்ந்து கொழிக்கப்பட்டவை. தூதா அழைக்கும் என்ற சொற்களின்குறிப்பால், பூவினத்தினிடத்து மகளிரினத்தின் தன்மையும், சுரும்பினிடத்து நாயகரின் தன்மையும் ஏற்பட்டன; இது, **குறிப்புருவகம்.** தூதுபோலத் தேனும் மணமும் நெடுந்தூரமளவுஞ் செல்கின்ற வியல்பை யறிக. (610)

### 27.—பாண்டவர் நகரப்பிரவேசஞ் செய்தல்.

பரிமள மதுப முரல்பசுந் தொடையற் பாண்டவ ரைவருங் கடவுள்
எரிவலம் புரிந்து முறைமுறை வேட்ட வின்னெழி லிளமயிலன்றி
வரிசையி னணுகி யுரிமையா லவனி மயிலையு மன்றலெய் தினர்போற்
புரிவளை தரளஞ் சொரிபுன லகழிப் புரிசைசூழ் புரங்குடி புகுந்தார்.

(இ - ள்.) பரிமளம்-வாசனையையுடையனவும், மதுபம் முரல்-வண்டுகள் ஒலிக்கப்பெறுவனவும் ஆகிய, பசுந் தொடையல்-பசிய பூமாலைகளையணிந்த, பாண்டவர் ஐவர்உம் - பாண்டவர்கள் ஐந்து பேரும், கடவுள் எரி வலம் புரிந்து முறை முறை வேட்ட இன் எழில் இள மயில் அன்றி - தெய்வத்தன்மையையுடைய அக்கினியைப் பிரதட்சிணஞ்செய்து [அக்கினிசாட்சியாக] முறையே தாங்கள் மணஞ்செய்துகொண்ட இனிய அழகையுடைய இளமையானமயில்போலுஞ் சாயலுள்ள திரௌபதியையே யல்லாமல், உரிமையால் அவனி மயிலைஉம் வரிசையின் அணுகி மன்றல் எய்தினர்போல் - உரிமையினால் பூமிதேவியையும் முறையே அடைந்து மணஞ்செய்துகொண்டவர்போல்,—புரி வளை தரளம் சொரி புனல் அகழி புரிசை சூழ் புரம் குடி புகுந்தார்-உட்சுழிதலையுடைய சங்குகள் முத்துக்களைச் சொரியப்பெற்ற நீர்நிறைந்த

அகழியையுடைய மதில் சூழ்ந்த அந்த இந்திரப்பிரத்தநகரத்திற் குடிபுகுந்தார்கள்; (எ - று.)

பாண்டவரைவரும் ஒருவர்பின் ஒருவராய்த் துருபதன்மகளை மணந்ததுமன்றி மண்மகளையும் மணப்பார்போல அந்நகரினுள் முறையே பிரவேசித்தன ரென்பதாம்; நற்குறிப்பேற்றவணி. மதுபம்- தேனைக்குடிப்பதுஎன வண்டுக்குக் காரணக்குறி. கடவுளெரி-அக் கினிதேவன். மயில் - உவமையாகுபெயர். அகழப்படுவது அகழி யெனக் காரணக்குறி. (611)

வேறு.

## 28.—பாண்டவர்க்கு விசுவகருமன் அந்நகரத்தைக் காட்டுதல்.

உரங்குடி புகுந்த திண்டோ ளுதிட்டிரன் முதலி யோரப்
புரங்குடி புகுந்து தங்கள் பொன்னெயிற் கோயி லெய்தத்
திரங்குடி புகுந்த கல்விச் சிற்பவித் தகன்ற னெஞ்சால்
கரங்குடி புகாமற் செய்த கடிநகர் காட்ட லுற்றான்.

(இ - ள்.) உரம் குடி புகுந்த-வலிமை (தனக்கு) இடமாகக் கொண்டு தங்கப்பெற்ற, திண் தோள்-வலிய தோள்களையுடைய, உதிட்டிரன் முதலியோர்-தருமபுத்திரன் முதலானவர்கள், அ புரம் குடிபுகுந்து-அந்நகரத்தில் புதிதாகச்சேர்ந்து, தங்கள் பொன் எயில் கோயில் எய்த-பொன்மயமான மதில்சூழ்ந்த தங்கட்கு உரிய அரண்மனையை அடைய,—திரம் குடி புகுந்த சிற்பம் கல்வி வித்தகன் - உறுதிக்கு இடமான சிற்பத்தைப்பற்றிய சாஸ்திரத்தில் தேர்ச்சியுடையவனான விசுவகருமன், கரம் குடி புகாமல் தன் நெஞ்சால் செய்த கடி நகர் காட்டல் உற்றான்-கையினால் தொடுதலுமில்லாமல் தனது மனத்தில் நினைத்தமாத்திரத்தினாற் செய்த புதிய அந்நகரத்தை (அவர்கட்குக்) காட்டுபவனானான்;

பட்டணத்தின்வளத்தைக் காண விரும்பி அரண்மனையின் மேலேறியிருந்த தருமனுதியர்க்கு விசுவகருமன் அந்நகரத்தினழகைக் காட்டலுற்றான னென்க. திரங்குடிபுகுந்த கல்வி-நிலைபெற்ற கல்வியுமாம்.

இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவும் இருபதுகவிகள் - கீழ்ச் சருக்கத்தின்முதற்கவிபோன்றஅறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள்.

## 29.—பாண்டவர்கள் கோபுரத்தின்மேலிருந்து அந்நகர்ச்சிறப்பைக்காணுதல்.

நாபுரப்பதற்கேயேற்ற நவிரறுவாய்மைவேந்தர்
கோபுரத்தும்பர்மஞ்ச கோடியினின்றுதங்கள்
மாபுரத்துள்ளவெல்லை வளமனையாவுமாதர்
நூபுரத்தரவவீதி யகலமுநோக்கினரே.

(இ - ள்.) நா புரப்பதற்கு ஏ ஏற்ற-நாவைப் பாதுகாப்பதற்கே இயைந்ததான, நவிர் அறு வாய்மை-குற்றமில்லாத சத்தியத்தை யுடைய, வேந்தர்-அந்தப்பாண்டவராசர்கள்,—கோபுரத்து உம்பர் மஞ்சம் கோடியில் நின்று-கோபுரத்தின்மீதுள்ள மேனிலையின்முகப்பில் நின்றுகொண்டு,—தங்கள் மா புரத்து உள்ள எல்லை வளம்

மணி மாடம் - தங்களுடைய பெரிய அந்நகரத்தின் எல்லையிலுள்ள வளம்பொருந்திய மாளிகைகளெல்லாவற்றையும், மாதர் நூபுரத்து அரவம் வீதி அகலம் உம் - (சஞ்சரிக்கிற) மகளிர்களுடைய சிலம் பென்னுங் காலணியின் ஆரவாரத்தையுடைய வீதியின்பரப்பை யும், நோக்கினர்-பார்த்தார்கள்; (எ - று.)

விசுவகர்மன் காட்டப் பாண்டவர் நகரச்சிறப்பைக் கண்டன ரென்க. பொய்ம்மை நாவை அபரிசுத்தப்படுத்த, மெய்ம்மையே நாவைப் பழுது படாமல் தூய்தாக வைத்தலால், 'நாபுரப்பதற்கே யேற்ற வாய்மை' என்றார். நிகழ்ந்ததுகூறலாகிய அவ்வாய்மை தானும் பிறஉயிர்க்குத் தீங்குவிளையாமலிருந்தால்மாத்திரமே மெய்ம்மையென்று கொண்டாடப்படுதலால், 'நவிரறு வாய்மை' என்றார். எப்பொழுதும் மகளிர் உல்லாசமாக உலாவும் வீதி யென் பது, 'மாதர் நூபுரத்தரவவீதி' என்றதன் கருத்து. (613)

**30.—இதுமுதல் எட்டுக்கவிகளில், அந்நகரச்சிறப்பைப் பாண்டவர் பலவாறு வியந்துகூறுதலைத் தெரிவிக்கின்றார்.**

அரவின்வெஞ்சுடிகைகொண்டவவிர்மணிச்சோதிமேன்மேல்
விரவிவந்தெறிப்பப்பச்சை மெய்சிவப்பேறிற்றாக
இரவிதன்னிரதம்பூண்ட வெழுபெயர்ப்பவனவேகப்
புரவியையையுற்றேகோல் புரிவலம்புரிவதென்பார்.

(இ-ள்.) (இந்நகரத்து மாளிகைகளிற் பதித்துள்ள), அரவின் வெம்சுடிகை கொண்ட அவிர் மணி-நாகங்களின் வெவ்விய உச்சிக் கொண்டையிற் பொருந்திய விளங்குகின்ற மாணிக்கங்களின், சோதி-சிவந்த ஒளி, மேல்மேல் விரவி வந்து எறிப்ப - மேலும் மேலும் மிகுதியாக அடர்ந்துவந்து வீசுதலால், பச்சை மெய் சிவப்பு ஏறிற்று ஆக-(சூரியனுடைய தேர்க்குதிரையினது) இயற் கையிற் பசுநிறமான உடம்பு செந்நிறம்மிக்கதாய்விட, இரவி-(அச் செந்நிறத்தைக்கண்ட) சூரியன், தன் இரதம் பூண்ட எழு பெயர் பவனம் வேகம் புரவியை ஐயுற்றுஏகொல்-தனது தேரிற் பூட்டப் பட்டுள்ள ஏழென்னும் பெயரையுடைய வாயுவேகம்பொருந்திய குதிரையைச் சந்தேகித்ததனாலேதானோ, புரிவலம்புரிவது-(அவன்) இந்நகரத்தைப் பிரதட்சிணஞ் செய்வது, என்பார்-என்று சொல் வார்கள்; (எ-று.)—இதற்கு எழுவாய்-கீழ்க்கவியில் வந்த 'வேந்தர்' என்பதே; அடுத்த ஏழுகவிகளுக்கும் இங்ஙனமே காண்க.

மேருமலையை வலம்வருகிற சூரியனை இந்நகரத்தின் பரப்பை யுணர்த்தும் பொருட்டு இந்நகரை வலம்வருகிறவனாகக் கற்பித்து, அங்ஙனம் வலம்வருதற்குக் காரணம் யாதெனின்,—அவன் இந் நகரத்தின் அருகில் வரும்பொழுது அவனதுகுதிரையினுடம்பு இயற்கையான பசுமைநிறம்மாறிச் செந்நிறம்பொருந்தியதனால் அதனை வேறொருகுதிரை யென்றுகருதித் தன்குதிரையைத் தேடுதற்கு இந்நகரை வலம்வருகின்றனன்போலும் என்று உத்பி ரேக்ஷித்தவாறாம்; தற்குறிப்பேற்றவணி. எழு-ஏழு என்பதன் விகாரம்; இது 'ஸப்த' என்னும் வடசொல்லின் பரியாயநாமமாய் நின்றது. சூரியனது தேர்க்குதிரை ஒன்றே, அதற்கு 'ஏழு' என்றுபெயர்

என்பர் ஒருசாரார்: மற்றொருசாரார் 'அவ்வொருகுதிரைக்கு எழு பெயர்களுள்ளன' என்பர்; அவ்விருவகையும் 'எழுபெயர்ப்புரவி' என்ற தொடரில் அமையும். இந்திரப்பிரத்தத்தின் சிறப்பை விசுவகர்மா தருமனுக்குக் காட்டுவதாகவே 10 - ஸ்லோகங்கள் இங்குப்பாலபாரதத்து உள்ளன: ஆங்குள்ள வருணனைகளும் இதிலுள்ள வருணனைகளும் ஒப்புமைப்பட்டவை சிலவேயாகும். விரவிவந்தெறித்து எனவும் பாடம். (614)

31. அருளுடையறத்தின்வாழ்வா மந்நகரில்லமெங்கும்
இருளுடையிந்த்ரநீலத் தியன்றசாளரங்களநோக்கி
உருளுடையொற்றைநேமி யுறுபரித்தேரோன்சீறத்
தெருளுடைத்திமிரம்போன சின்னெறிபோலுமென்பார்.

(இ - ள்.) அருள் உடை அறத்தின் வாழ்வு ஆம்-கருணையையுடையதான தருமத்தின் வாழ்க்கை யமைந்த, அ நகர் - அந்த நகரத்திலுள்ள, இல்லம் எங்கும் - மாளிகைகளிற் பலவிடத்துமுள்ள, இருள் உடை இந்த்ர நீலத்துஇயன்ற சாளரங்கள்-மிக்ககருநிறமுடைய இந்திரநீலரத்தினங்களாலமைந்த பலகணிகளை, நோக்கி-பார்த்து,—'உருள் உடைஒற்றை நேமி உறுபரி தேரோன் சீற-உருளுதலையுடைய ஒற்றைச்சக்கர மமைந்த குதிரை பூண்ட தேரையுடையவனான சூரியன் உக்கிரங்கொண்டு அழித்தலால், தெருள் உடை திமிரம் போன - தடுமாற்றத்தையுடைய இருள் நுழைந்து ஓடிச்சென்ற, சில் நெறி போலும்-சிறுவழிகள் போலும்', என்பார்—;(எ - று.)

இந்திரநீலரத்தினத்தினாலாகியதனால் நீலநிறமுடையனவாயிருக்கிற சாளரங்களை, இரவிக்கு அஞ்சி இருள் இரிந்து சென்ற சிறுவழிகளென்று குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. 'சின்னெறி' என்பதில், சின்மை-சிறுமை. (615)

32. சமர்முகப்பொறிகண்மிக்க தடமதிற்குடுமிதோறும்
குமருறப்பிணித்தபைம்பொற் கொடித்துகிலசைவுநோக்கி
நமர்புரக்கிழத்தியும்பர் நாயகன்புரத்திநோடும்
அமர்பொரப்பற்பல்கையா லழைப்பதுபோலுமென்பார்.

(இ - ள்.) சமர் முகம் பொறிகள்-போர்செய்தற்குஉரிய தோற்றத்தையுடைய யந்திரங்கள், மிக்க-நிறைந்துள்ள, தட மதில் - பெரிய அந்நகரத்து மதிலின், குடுமிதோறும்-சிகரங்களிலெங்கும், குமர் உற பிணித்த - அழிவின்மைபொருந்த [உறுதியாக]க் கட்டப்பட்டுள்ள, பைம் பொன் கொடி துகில்-பசும்பொற்காம்பையுடைய கொடிச்சீலைகளின், அசைவு-காற்றிலசையுந் தன்மையை, நோக்கி-பார்த்து,—நமர் புரம் கிழத்தி-'நம்முடைய இந்நகரத்துக்குஉரிய தேவதை, உம்பர் நாயகன் புரத்தினோடும் அமர் பொர - தேவராசனான இந்திரனது அமராவதிநகரத்தோடு போர்செய்ய(க்கருதி), பற் பல் கையால் அழைப்பது போலும்-(தனது) மிகப்பலவாகிய கைகளினால் (அந்நகரத்தை) அழைப்பதையொக்கும்,' என்பார்-என்றுசொல்லுவார்கள்; (எ-று.)

துவசங்களின் சீலைகள் அசைதலை, அந்நகரம் தேவநகரத்தைத் தன்னுடன் போர்செய்ய வரும்பொருட்டுக் குறிப்புக் காட்டித்தனது கைகள் பலவற்றாலும் அழைப்பதுபோலு மெனக் குறித்தார்; இதுவும் தற்குறிப்பேற்றவணியே. எளியாரை வலியார் போருக்கு வலிய அழைத்தலாகிய இயல்பின்படி, இந்நகரம் தேவநகரத்தைத் தன்னுடன் வலியப் போருக்கு அழைக்குங்கொழுமை வாய்ந்ததென்பது போதரும். போருக்குஉரிய பலவகையந்திரங்களை மதிலில் அமைத்துவைத்தல் இயல்பு. குமர்-அழியாமை, நகரதேவதை பெண்பாலாயிருத்தல்பற்றி 'புரக்கிழத்தி' என்றார்.

33. தசும்புறுமகிலின்றூபஞ் சாறடுகரும்பின்றூபம்
அசும்பருமடையின்றூப மவிபெறுமழலின்றூபம்
விசும்புறநான்குதிக்கு மிசைமிசையெழுதனோக்கிப்
பசும்புயலேழன்றின்னும் பலவுளவாகுமென்பார்.

(இ - ள்.) தசும்பு உறும் - குடங்களிலிட்டுப் புகைக்கின்ற, அகிலின்-அகிற்கட்டைகளினின்று எழுந்த, தூபம்-புகையும்,கரும்பின் சாறு அடு-கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுதலினா லுண்டாகிற, தூபம்-புகையும், அசும்பு அரு-கால்வழுக்குதல்நீங்காத,மடையின் -மடைப்பள்ளியினின்று எழுகிற, தூபம் - சமையற்புகையும், அவி பெறும்-அவி சொரியப்படுகிற, அழலின்-ஓமாக்கினியினின்றுஎழுகிற, தூபம் - புகையும், (ஆகிய இவை), விசும்பு உற-ஆகாயத்தை அளாவ, நான்கு திக்குஉம் - எல்லாப்பக்கங்களிலும், மிசை மிசை எழுதல்-மேன்மேல் எழுதலை, நோக்கி-பார்த்து,—'பசும்புயல் ஏழ் அன்று-கருநிறங்கொண்ட மேகங்கள் ஏழுமாத்திரமே யல்ல:இன்னும் பல உள ஆகும்-,' என்பார்-என்று சொல்வார்கள்; (எ-று.)

அந்நகரத்திற்பலவிடங்களிலும் மிகுதியாயெழுகிறபலவகைப் புகைகளைப் பார்த்துப் பற்பலமேகங்களென மாறுபடக்கருதிக் கூறியது- மயக்கவணி. புயல்ஏழ்-சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கிருதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் எனப்படும். எப்பொழுதும் சமைத்தல்தொழில் நீங்காததென்றற்கு, 'அசும்பருமடை' என்றார். அசும்பு-வழுக்குநிலம்.மடை - சமைத்தல். இது - ஆகுபெயராய், சமையலிடத்தைக் குறித்தது. விரைவில் புகை தணியாதிருத்தற்பொருட்டு, அகிலைக் குடத்திலிட்டுப் புகைப்பரென்க. (617)

34. அடுக்குறநிலஞ்செய்மாடத் தணியுறுபெரும்பதாகை
மிடுக்கினுலனிலனேற்றி விசையுடனெடுத்துமோத
உடுக்களுநாளுங்கோளு முள்ளமுமுடலுஞ்சேர
நடுக்குறுகின்றவிந்த நகர்வழிபோகவென்பார்.

(இ - ள்.) 'அடுக்கு உற - (ஒன்றன்மேலொன்று) அடுக்காகப் பொருந்த, நிலம் செய் - நிலைகளை யமைத்துச்செய்யப்பட்ட, மாடத்து-மாளிகைகளின்மேல், அணி உறு-வரிசையாகப் பொருந்திய, பெரும் பதாகை - பெரியகொடிச்சீலைகளை, அனிலன் - வாயுதேவன், மிடுக்கினுல் ஏற்றி-(தன்) வலிமையால் வீசி, விசையுடன்

எடுத்து மோத - வேகத்தோடு உயர்த்தியடித்தலால்,—உடுக்கள் உம் நாள்உம் கோள்உம் -மிகப்பலவாகிய தாரகைகளும் (அசுவினி முதலிய இருபத்தேழு) நட்சத்திரங்களும் (சூரியன் முதலிய ஒன்பது) கிரகங்களும், இந்த நகர் வழி போக-இந்த நகரத்தின்வழியே செல்லுதற்கு, உள்ளம்உம் உடல்உம் சேர நடுக்கு உறுகின்ற-(அச்சத்தால்) மனமும் உடம்பும் ஒருசேர நடுக்கமடைகின்றனவாம்,' என்பார்—; (எ . று.)

இந்நகரத்தின் உபரிகைகளின் மீது நாட்டிய கொடிகளின் மிக்க உயர்வை உணர்த்துதற்கு, 'அக்கொடிகளின் சீலைகளைக் காற்று விசையோடு வலியஅடித்து அசைத்தலால் அவை தம் மீது தாக்கி வருத்துமென்ற கருத்தால் சகலகிரகநட்சத்திரதாரகைகளும் இந்நகரத்தின் மேலாகச்செல்லுதற்கு அஞ்சும்'என்றார்: **உயர்வுநவிற்சியணி.** நாள்-நாளையுணர்த்துகிற நட்சத்திரத்திற்கு ஆகுபெயர். கோள் - (காலத்தை அளந்து)கொள்வது: கிரகம்.

**35.** துதையளிமுரலும்வாசச் சோலையின்பொங்கர்தோறும்
விதமுறவெழுந்துகாள மேகங்கள்படிதனோக்கிக்
கதிர்மணியகழிமாமே கலையுடைநகரமாதின்
புகைநறுமலர்மென்கூந்தல் போலுமாகாண்மினென்பார்.

(இ-ள்.) துதை அளி முரலும் - நெருங்கிய வண்டுகள் ஒலிக்கின்ற, வாசம் சோலையின் -நறுமணமுள்ள சோலைகளின்,பொங்கர்தோறும்-மரக்கொம்புகளின்மேலெல்லாம், விதம் உற எழுந்து காளமேகங்கள் படிதல் -பலபகுப்பாக எழுந்து கருநிறமான மேகங்கள் படிந்திருத்தலை, நோக்கி-பார்த்து,-'(இது), கதிர் மணி அகழி மா மேகலை உடை நகரம் மாதின் - ஒளியைக்கொண்ட இரத்தினங்களையுடைய அகழியாகிய பெரிய மேகலாபரணத்தை யுடைய இந்நகரமாகிய பெண்ணினது, புகை நறு மலர் மெல் கூந்தல் போலும் ஆ(று) - அகிற்புகையூட்டிய நறுமணமுள்ள மலர்களைச் சூடிய மெல்லிய கூந்தலை யொத்திருக்குந் தன்மையை, காண்மின்-காணுங்கள்,' என்பார் - என்று (தம்மில் ஒருவரைநோக்கி யொருவர்) சொல்வார்கள்; (எ - று.)

அந்நகரத்துச்சோலைகளின் மரங்கள்மீது படிகின்ற காளமேகங்களை, அந்நகரமாகிய பெண்ணின் கரிய கூந்தல்மயிர்கள் போலுமென்றார்; **தற்குறிப்பேற்றவணி.** அகழிக்கு இரத்தினம், கரைகளிற் பதிக்கப்பட்டவை. மேகலை - எட்டுக்கோவையுள்ள இடையணி: இடையணியென்ற மாத்திரமாய் நின்றது. (619)

**36.** ஈட்டியமணியும்பொன்னு மெழில்பெறப்புடைகடோறும்
பூட்டியசிகரிசாலப் புரிசையின்புதுமைநோக்கிக்
கோட்டியநகரியென்னுங் குலக்கொடிமன்றலெய்தச்
சூட்டியசூட்டுப்போலத் துலங்குமாகாண்மினென்பார்.

(இ-ள்.) ஈட்டிய - தொகுக்கப்பட்ட, மணிஉம்-இரத்தினங்களையும், பொன்உம் - பொன்னையும், எழில் பெற - அழகு உண்டாக,

புடைகள் தோறுவும் பூட்டிய - பக்கங்களிலெல்லாம் அமைத்து வைக்கப்பெற்ற, சிகரி - மேலுறுப்பு, சால்-பொருந்திய, அ புரிசையின்-அந்த மதிலின், புதுமை-அதிசயத்தை, நோக்கி-பார்த்து,— '(இது), கோட்டிய நகரி என்னும் குலம் கொடி-அலங்கரிக்கப்பட்ட அந்நகரமாகிய ஓர் உயர்குலமங்கை,மன்றல் எய்த-விவாகமடைய, சூட்டிய-(கோலஞ்செய்வார் அம்மகளின் நெற்றியிற்) சூட்டிய,சூட்டு போல-சூட்டென்னும் நெற்றிமாலை போல, துலங்கும்-விளங்குகிற, ஆ(று) -தன்மையை, காண்மின்-பாருங்கள்', என்பார்-என்று (தம்மிற்) சொல்லிக்கொள்வார்கள்; (எ - று.)

அந்நகரத்துமதிலின்மேலுள்ளசிகரியென்னும்உறுப்பு,பொன்மயமாய் இரத்தினங்கள் பதிக்கப்பெற்றுவிளங்குவதை, அந்நகரமாகியபெண் அரசனுகிய தலைமகனைமணஞ்செய்துகொள்ளுஞ்சமயமாதலால், அதற்கு ஏற்ப, அம்மகளின் நெற்றியின் மேற்பகுதியிற் கோலஞ்செய்வார் சூட்டிய நுதலணிமாலைபோலுமென்ருர்; தற்குறிப்பேற்றவணி. ஶிகரீ-வடசொல். (620)

37. பணையினம்பலவுமார்ப்பப் பைங்கொடிநிரைத்தசெல்வத்
துணைமணிமாடமன்னுந் தோரணவீதியாவும்
புணைவனநெருங்கநீடிப் பொழிபுயல்கிழிக்குஞ்சாரல்
இணைவரைநடுவட்போதும் யாறுபோலிலங்குமென்பார்.

(இ - ள்.) 'பணை இனம் பலஉம் ஆர்ப்ப-வாத்தியவகைகள் பலவும் ஒலிக்க, பைங் கொடி நிரைத்த-செழுமையான துவசங்கள் அணியணியாக நாட்டப்பெற்ற,செல்வம்-செல்வவளத்தையுடைய, துணை-(வேறு ஒப்புமையில்லாமையால்) தமக்குத்தாமே நிகரான, மணி மாடம்-இரத்தினங்கள் பதித்த [அழகிய] மாளிகைகள், மன்னும்-(இருபாலும்)அமையப்பெற்ற, தோரணம் வீதி யாஉம்-தோரணங்களையுடைய வீதிகளெல்லாம்,—புணை வனம்நெருங்கநீடி-மூங்கிற்காடுகள் அடர்த்தியாகவளர்ந்து, பொழி புயல்கிழிக்கும்-மழைபொழிகிற மேகங்களைக் கிழிக்கின்ற, சாரல்-சாரலையுடைய, இணை வரை-இரண்டுமலைகளின், நடுவண்-நடுவிலே, போதும்-பாய்ந்து வருகிற, யாறுபோல்-நதிபோல, இலங்கும்-விளங்கும்,' என்பார்—.

இருமருங்குமுள்ள ஓங்கியமாளிகைகளுக்கு-இரண்டுமலைகளையும்,அம்மாளிகைவரிசையின் நடுவிலுள்ள வீதிக்கு-அம்மலைகளின் இடையே வருகிற நதியையும் ஒப்புமை குறித்தார்; தற்குறிப்பேற்றவணி. மாடங்களின் மீதுள்ள கொடிவரிசைகளுக்கு ஏற்ப மலைக்கு மூங்கிற்காடு கூறிஞர். 'பணையினம் பல்வுமார்ப்ப' என்றது-செல்வவளத்தை விளக்கும். மூன்ரும்அடி-அதிசயோக்தி. (621)

## 38.—தருமன் விசுவகருமனுக்கு விடையளித்தல்.

கண்ணுறுபொருள்கள்யாவுங் கண்டுகண்டுவகைகூர
எண்ணுறுகிளைஞரோடும் யாதவகுமரரோடும்
பண்ணுறுவேதவாழ்நர் பலரொடும்வைகியாங்கண்
விண்ணுறுதபதிக்கம்ம விடைகொடுத்தருளினனே.

(இ-ள்.) கண் உறு பொருள்கள்யாஉம்-எதிர்ப்படுகிறபொருள் களையெல்லாம், கண்டு கண்டு-பார்த்துப்பார்த்து, உவகை கூர-மகிழ்ச்சிமிக, என் உறுகிளைஞரோடுஉம்-பெருமைபொருந்திய(தன்) சுற்றத்தாருடனும், யாதவ குமரரோடுஉம் - (கண்ணபிரானுடன் வந்த) யதுகுலகுமாரர்களுடனும், பண் உறு வேதம் வாழ்நர் பலரொடுஉம்-ஸ்வரமமைந்த வேதங்களுக்கு உரியராய் வாழ்கின்ற பல அந்தணர்களுடனும், ஆங்கண் வைகி-அந்நகரினிடத்திற் சேர்ந்து தங்கி, (பின்பு), விண் உறு தபதிக்கு விடை கொடுத்தருளினன்-தேவலோகத்திற் பொருந்திய சிற்பியான விசுவகருமனுக்கு அருளோடு அநுமதிதந்து அவனை அனுப்பினன்; (எ-று.)—இங்குச் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப தருமனென்ற எழுவாய் வருவிக்க. அம்ம-உரையசை. (622)

## 39.—கண்ணன்முதலியோர் செல்லுதலும், தருமனது அரசாட்சியும்.

கேசவன்முதலாவுள்ள கிளைஞருங்கேண்மைதப்பா
வாசவன்முதலினேரு மன்னுதம்பதிகள்புக்கார்
ஓசவன்றிகிரியோச்சி யுதயபானுவுக்குமேலாந்
தேசவன்றானும்வையந் திசைமுறைதிருத்தியாண்டான்.

(இ-ள்.) கேசவன் முதல் ஆ(க) உள்ள-திருமாலின் திருவவதாரமான கண்ணபிரான் முதலாகவுள்ள, கிளைஞர்உம்-சுற்றத்தார்களும், கேண்மை தப்பா வாசவன் முதலினேர்உம் - உறவுமுறைமைக்குஉரிய உதவியில் தவறுதலில்லாத இந்திரன் முதலானவர்களும், மன்னு தம் பதிகள் புக்கார்-நிலைபெற்ற தம் தமது நகரங்களுக்குச் சென்றார்கள்; உதயபானுக்குஉம் மேல் ஆம் தேசவன் தான் உம்-உதித்துவிளங்குகிற சூரியனினும் மேலான ஒளியையுடையவனாகிய தருமனும், ஓசம்வல் திகிரி ஓச்சி-ஒளியையும் வல்லமையையுமுடைய (தனது) ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்தி, வையம்-பூமியை, திசை முறை திருத்தி ஆண்டான்-எங்கும் நீதி முறைமை ஒழுங்காக நடக்கச்செய்து அரசண்டான்; (எ - று.)

தன்மகனான அருச்சுனனுக்கும், அவனது உடன்பிறந்தவர்களான தருமன் முதலியோர்க்கும் உதவுமாறு, இந்திரன் நகரமமைப்பித்தமைபற்றி, 'கேண்மைதப்பா வாசவன்' என்றார். கேஸவனென்ற வடமொழி-பிரமனையும் சிவனையும்தன்அங்கத்திற் கொண்டவனென்றும் [க-பிரமன்,ஈசன்-சிவன்], மயிரழகையுடையவனென்றும் [கேசம்-மயிர்], கேசியென்னும்அசுரனைக்கொன்றவனென்றும் [கேசி-கண்ணனைக்கொல்லும்படிகம்சனால்ஏவப்பட்டுக் குதிரைவடிவத்தோடுவந்த் ஓர் அசுரன்] பொருள்படும். ஓசம், தேசு=ஓஜஸ், தேஜஸ் என்ற வடசொற்களின் விகாரம். கேசவன் பதி-துவாரகை. வாசவன்பதி-அமராவதி. (623)

## 40.—ஒருநாள் நாரதமாமுனிவன் அங்குஎழுந்தருளல்.

யாய்மொழிநலமேற்கொண்டு மிளையவர்மொழிகள்கேட்டும்
வேய்மொழிவேய்த்தோள்வல்லி மென்மொழிவிரும்பலுற்றும்
வாய்மொழியறத்தின்மைந்தன் மாநகர்வாழுநாளில்
ஆய்மொழிப்பாடல்யாழோ ரந்தணனங்கண்வந்தான்.

(இ - ள்.) வாய்மொழிஅறத்தின்மைந்தன் - உண்மைச்சொற்களையுடைய தருமபுத்திரன், யாய்மொழி தலைமேல்கொண்டும் - தாயாகிய குந்தியினதுவார்த்தையைச்சிரமேற்கொண்டுநன்குமதித்தும், இளையவர் மொழிகள் கேட்டும் - (வீமன்முதலிய) தம்பியர்களுடைய வார்த்தையைக் கேட்டு அவற்றின்படி நடந்தும், வேய்மொழி-அழகிய சொல்லையும், வேய்தோள்-மூங்கில்போன்ற தோள்களையுமுடைய, வல்லி-பூங்கொடிபோன்ற திரௌபதியினது, மெல்மொழி-மென்மையான சொற்களை, விரும்பல் உற்றும்-விருப்பத்தோடுகேட்டும், மா நகர் வாழும் நாளில்-பெரிய அந்நகரத்தில்வாழ்கின்ற நாட்களில், (ஒருநாள்),—ஆய்மொழி பாடல் - ஆராய்ந்த [சிறந்த]சொற்களையுடையஇசைப்பாட்டைக்கொண்ட, யாழ்-மகதியென்ற வீணையையுடைய,ஓர் அந்தணன்-ஒருமுனிவன்,[நாரதன்] ஆங்கண் வந்தான் - அவ்விடத்தில் வந்தனன்; (எ - று.)

இம்முனிவன்நாரதனுவன். வேய்மொழி-வினைத்தொகை:வேய்தல் - அழகுசெய்தல்; இனி,கரும்புபோல் இனியமொழியெனின், வேய்என்றசொல்-கழையென்றதன்பரியாயமாய்க்கரும்பைக் குறித்ததென்க. 'பாடலோடோரந்தணன்' எனவும் பாடம். (624)

## 41.—பாண்டவர் நாரதனை உபசரித்தல்.

இந்தநாரதனைப்போற்றி யிருபதம்விளக்கிவாசச்
சந்தனுகருவின்றூபந் தவழ்மணித்தவிசினேற்றி
வந்தனுவிதியிற்சற்றும் வழுவறவழிபாடெய்தி
அந்தநால்வருமவ்வேந்து மாதிவாசவர்களானுர்.

(இ-ள்.) இந்த நாரதனை போற்றி - இங்ஙனம்வந்த நாரதமுனிவனை நமஸ்கரித்து, இருபதம்விளக்கி-(அவனுடைய)இரண்டு திருவடிகளையும்(தீர்த்தங்கொண்டு)கழுவி, வாசம் சந்தனம் அகரு தூபம் தவழ் மணி தவிசின் ஏற்றி - பரிமளத்தையுடைய சந்தனக்கட்டையும் அகிற்கட்டையும்ஆகியஇவற்றின் இனியபுகை யூட்டப்பெற்ற இரத்தினம்பதித்த சிங்காசனத்தில் (அவனை) எழுந்தருள்வித்து, வந்தன விதியில் சற்றும் வழு அறவழிபாடுஎய்தி - வழிபாட்டுக்கு உரிய விதிமுறைமையிற் சிறிதும் தவறிதலில்லாதபடி உபசரித்தலைச் செய்து, அந்த நால்வர்உம் அ வேந்துஉம்-(வீமன் முதலிய) அந்தத்தம்பிமார்நால்வரும் அந்தத்தருமராசனும், ஆதி வாசவர்கள் ஆனுர் - (தங்கள்) பூர்வசன்மமாகிய பழைய இந்திரர்களையே போன்ருர்கள்; (எ-று.)

தேவவிருடியாகிய நாரதன் தன்பக்கல் எழுந்தருளஅவனுக்கு மகிழ்ச்சியோடு விசேஷஉபசாரங்களைச் செய்து மேன்மைபெறுதல் இந்திரனுக்கு இயல்பாதலால், இங்ஙனம் கூறினுர். சந்தநாகரு, வந்தநாவிதி, ஆதிவாஸவர் - வடமொழித்தொடர்கள். (625)

## 42.—நாரதன் அவர்கட்கு ஒருகதை கூறத்தொடங்கல்.

வரமிகுகற்பினுளு மாமியும்வணங்கிநிற்பச்
சரிகமபதநிப்பாடற் றண்டுதைவருசெங்கையோன்

இருசெவிபடைவீடாக வெம்பிரானளிக்கப்பெற்ற
பெருமுனியவர்க்கோர்காதை பெட்புறப்பேசுவானே.

(இ - ள்.) (இங்ஙனம் வணங்கிவழிபட்ட பாண்டவர்களுடனே), வரம் மிகு கற்பினாள் உம்-மேன்மைமிக்க பதிவிரதா தருமத்தையுடையவளான திரௌபதியும், மாமி உம்-(இவளுக்கு)மாமியாரான குந்திதேவியும், வணங்கி நிற்ப - (அம்முனிவனை) நமஸ்கரித்துநிற்க,— சரிகமபதநி பாடல் தண்டு தைவரு செம் கையோன் - சரிகமபதநி என்னும் ஏழுசுரங்களையும் அமைத்துப்பாடுதற்கு உரிய வீணாதண்டத்தைத் தடவி இயக்குகின்ற சிவந்த கைகளை யுடையவனும், எம்பிரான் இரு செவி படை வீடு ஆக அளிக்கபெற்ற பெரு முனி- நமக்கெல்லாந்தலைவனான திருமால்(தமது)இரண்டு திருச்செவிகளையும் (தனது)இசைப்பாட்டிற்குத் தங்குமிடமாகக்கொடுக்கப்பெற்ற பெருமையுடைய முனிவனுமான நாரதன், அவர்க்கு ஓர் காதை பெட்பு உற பேசுவான் - அவர்கட்கு ஒருகதையை விருப்பமிகக் கூறுபவனானான்; (எ - று.) — அதனை, மேலிரண்டுகவிகளிற் காண்க. 'ஓர்வார்த்தை' என்றும் பாடம்.

ஸரிகமபதநி என்பன-ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஏழுசுரங்களுக்கும் முறையே உரிய அக்ஷரங்களாம். தண்டு - தண்டமென்ற வடசொல்லின் விகாரம். படைவீடு - சேனைதங்குமிடம்; இங்கு, தங்குமிடமென்ற மாத்திரமாய் நின்றது. 'எம்பிரான்' - சிவபிரானெனினுமாம். (626)

## 43.—இதுவும், அடுத்த கவியும் - சுந்தோபசுந்தர் வரலாறு.

முராரியைமுராரிநாபி முளரிவாழ்முனியைமுக்கட்
புராரியைநோக்கிமுன்னாட் புரிபெருந்தவத்தின்மிக்கார்
சுராரிகடம்மிற்சுந்தோ பசுந்தரென்றிருவர்தங்கள்
திராரியேவலினால்வந்த திலோத்தமைதன்னைக்கண்டார்.

(இ - ள்.) முராரியை - திருமாலையும், முராரி நாபி முளரி வாழ் முனியை - அத்திருமாலின் திருநாபித்தாமரைமலரில் வாழ்கிற பிரமனையும்,முக்கண் புராரியை-மூன்றுகண்களையுடையவனான சிவபிரானையும், நோக்கி - குறித்து, முன் நாள் - முற்காலத்தில் [இளமையில்], புரி-செய்த, பெரு தவத்தில் - பெரிய தவத்தில், மிக்கார்-சிறந்தவர்களான, சுராரிகள் தம்மில் சுந்த உபசுந்தர் என்ற இருவர்-அசுரர்களுள் சுந்தனும் உபசுந்தனு மென்றஇரண்டுபேர், —தங்கள் திரஅரி ஏவலினால்வந்ததிலோத்தமைதன்னைகண்டார்- தங்களுக்குவழிப்பகையாகிய இந்திரனது கட்டளையினால்(தங்களெதிரில்) வந்த திலோத்தமை யென்பாளை (ஒருசமயத்தில்) பார்த்தார்கள்; (எ-று.)

முராரி, புராரி, ஸுராரி, ஸ்திராரி - தீர்க்கசந்திபெற்ற வடசொற்கள். சுந்தோபசுந்தர் - குணசந்திபெற்ற வடமொழித் தொடர்;பன்மைவிகுதிபெற்றஉயர்திணையும்மைத்தொகை. என்றிருவர் - விகாரம். திலோத்தமை=திலோத்தமா: உலகத்தில்

அழகுடைமங்கையரது உடம்பிற் சிறந்த அழகை எள்ளளவு எள்ளளவாக எடுத்துத் திரட்டி அதுகொண்டு அமைக்கப்பட்ட பெண்: திலம்-எள், உத்தமா - மேலானவள். (627)

44. காண்டலுமவண்மேல்வைத்த காதலாலுழந்துநெஞ்சில்
ஈண்டியதுயரத்தோடுமிருவருநயந்தபோழ்தப்
பூண்டகுபொலிவினுடன் பொருட்டமர்தம்மிற்பூண்டு
மாண்டனரென்னும்வார்த்தை மாநிலமறியுமன்றே.

(இ - ள்.) இருவர்உம் - அந்த இரண்டு அசுரர்களும், காண்டலும்-(அவளைக்) கண்டவுடனே, அவள்மேல் வைத்த காதலால் - அவளிடத்திற் கொண்ட ஆசையினால், உழந்து- வருந்தி, நெஞ்சில் ஈண்டிய துயரத்தோடுஉம்-மனத்தில் மிகுந்த காமவேதனையுடனே, நயந்த போழ்து-(ஒருங்கு அவளை) விரும்பிவரித்தபொழுது, அபூண் தகு பொலிவினுள் தன் பொருட்டு-ஆபரணங்கள் (தன்னால் அணியப்படுதலால்) பெருமையடைதற்குக் காரணமான மேனியழகையுடைய அவள்பொருட்டு, தம்மில் அமர் பூண்டு - தமக்குள் போர் புரிந்து, மாண்டனர்-இறந்தார்கள், என்னும் - என்கிற, வார்த்தை-வரலாற்றை, மா நிலம் அறியும் அன்றே - பெரிய உலகத்திலுள்ளார் அறிவார்களன்றோ? (எ-று.)'காதலாலழிந்து'என்றும் பாடம்.

இவ்விரண்டுகவிகளிற் குறித்த கதையின் விவரம்:—இரணியகசிபு என்ற அசுரராசனது குலத்தில் நிகும்பனென்றவனது புத்திரர்களாய்த் தோன்றிய சுந்தன் உபசுந்தன் என்ற இருவரும் தம்மில் மிக்கமனவொற்றுமையுடையராய் எப்பொழுதும் ஒருவரையொருவர் விட்டுப்பிரியாராய்த் தமது சுகதுக்கங்களைச் சமமாகப்பாவித்து வந்தனர். அவர்கள் இளமையில் மூவுலகத்தையும் வெல்லக்கருதி விந்திய மலையைச் சேர்ந்து திரிமூர்த்திகளைக்குறித்து நெடுங்காலம் அரிய பெரிய தவத்தைச் செய்கையில்,அத்தவத்தின் கடுமையைக் கண்டு அஞ்சிய தேவர்கள் மாயையினால் பல மகளிரை யேவி அவர்களுடைய தவத்துக்குப் பலவாறு பங்கஞ்செய்ய முயன்றும் முடியவில்லை. பின்பு பிரதியக்ஷமான திரிமூர்த்திகள் அச்சுந்தோபசுந்தர் வேண்டியபடியெல்லாம் அவர்கட்கு வரங்களைக் கொடுத்து வருகையில், அவ்வசுரர்கள் 'நாங்கள் எவராலும் கொல்லப்படாதவராகவேண்டும்' என்று வரம் வேண்டினர். அதற்கு ஆதிதேவர்கள், 'உங்களிருவர்க்கும் பிறவுயிர்களெவற்றாலும் மரணமில்லை' என்று வரமளித்தார்கள். பின்பு அவ்விருவரும் மிகச் செருக்கி மூவுலகையும் வெல்லத்தொடங்கிஇந்திராதி தேவர்களுக்கும், பற்பல முனிவர்களுக்கும், மனிதர்களுக்கும், மற்றும் பலர்க்கும் மிக்கதுன்பத்தை விளைத்து அநேகம் பிராணிகளை அழித்து வந்தனர். பிறகு தேவர்களும் முனிவர்களும் பிரமனைச் சரணமடைந்து செய்திகூற, அக்கடவுள் விசுவகர்மாவைக் கொண்டு திலோத்தமையை யுண்டாக்கி அவளைச் சுந்தோபசுந்தர் இருக்கிற இடத்திற்கு அனுப்பினான். விந்தியமலையின் தாழ்வரையில் அவ்விருவரும் உல்லாசமாக வீற்றிருக்கையில் அம்மங்

கையைக் கண்டு அவளழகை வியந்து ஒருங்கு காமுற்று அருகிற் சென்று அவளுடைய வலக்கையைச் சுந்தனும், இடக்கையை உபசுந்தனுமாகப் பிடித்துக்கொண்டார்கள். இயல்பில் மிக்ககொழுப்புடைய அவ்விருவரும் காமக்களிப்புற்றுத் தம்மில்மாறுபட்டு அண்ணன் தம்பியைநோக்கி 'தமையனாகிய என்னாற் காதலிக்கப்பட்ட இவள் உனக்குத் தாய்முறையன்றோ? இவளை நீ விரும்புதல் தகுதியோ?' என்ன, அதற்கு எற்பத் தம்பி தமையனைநோக்கி 'தம்பியாகிய என்னாற் காதலிக்கப்பட்ட இவள் உனக்கு மருமகள் முறையன்றோ? இவளை நீ விரும்பலாமோ?' என்று கூறிக் கோபங்கொண்டு தம்கையிலுள்ள கதாயுதத்தால் ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு போர்செய்து இருவரும் ஒருங்கே ஒருவரால் ஒருவர் அழிந்தனர் எனக் காண்க.

இவ்வரலாற்றை நாரதமுனிவன் இங்குப் பாண்டவர்க்குஎடுத்துக்கூறினது, திரௌபதியொருத்தியினிடம் காதல்கொள்ளுகிற பாண்டவரைவரும் ஒருவர்க்கொருவர் எக்காலத்தும்மனவொற்றுமை கெடாதிருக்கும்படி ஒருநியமத்தைச் செய்துகொள்ளவாகும்.

### 45.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: நாரதன் திரௌபதிசம்பந்தமாகப் பாண்டவர்க்குக்கூறிய ஒருநியமம்.

நீவிருமவிதியால்வேட்ட நேயமுண்டேனுமன்றல்
ஓவியமனையாடன்னை யோரோராண்டொருவராக
மேவினிர்புரியுமங்கன் மேவுநாளேனையோரிக்
காவியங்கண்ணினளைக் கண்ணுறல்கடனதன்றே.

(இ - ள்.) நீவிர்-நீங்கள் ஐவிரும், உம் விதியால்-உங்கள் முற்பிறப்பின் வினையால், வேட்ட-(ஒருங்கு) விவாகஞ்செய்துகொண்ட, நேயம் - காதல், உண்டு என்உம் - (திரௌபதியொருத்தியினிடத்தே) உள்ளதானாலும், ஓவியம் அனையாள் தன்னை -சித்திரத்திலெழுதிய பாவைபோல மிக்க அழகையுடையளான அத்திரௌபதியை, ஓர் ஓர் ஆண்டு ஒருவர் ஆக மேவினிர் மன்றல் புரியும் - ஒவ்வொருவருடத்துக்கு (உங்களில்) ஒவ்வொருவராக விரும்பிக் கூடி வாழுங்கள்: அங்கன் மேவும் நாள்-அவ்வாறு (ஒருத்தரோடு) சேர்ந்திருக்கும்பொழுது, ஏனையோர் - மற்றைநால்வரும், இ காவி அம் கண்ணினளை கண்ணுறல்-கருங்குவளைமலர்போன்ற அழகிய கண்களையுடைய இவளைக் காணுதல், கடனது அன்று -முறைமையுடையதன்று; (எ - று.) (629)

46. என்னுறக்காணிலோரா றிருதுவும்வேடமாறிப்
புண்ணியப்புனல்களாடப் போவதேயுறுதியென்று
வண்ணவிற்றிறலினுர்க்கு வாய்மலர்ந்தருளிமீண்டு
பண்ணுடைக்கீதநாத பண்டிதன்விசும்பிற்போனன்.

(இ - ள்.) எண் உற-மனம் பொருந்த, காணில்-(அப்பொழுது இவளைக்) கண்டால், (கண்டவர்),ஓர் ஆறுஇருதுஉம்-ஆறுஇருது [ஒரு வருஷம்] அளவும், வேடம் மாறி-வடிவம் மாறி, புண்ணியம்

புனல்கள் ஆட போவதுவே - (அத்தோஷத்துக்குப் பரிகாரமாகப்) புண்ணிய தீர்த்தங்களில் நீராடச் செல்லுதலே, உறுதி - நன்மையைத்தருவது, என்று-, வண்ணம் வில் திறலினோர்க்கு வாய்மலர்ந்து அருளி-அழகிய வில்லின் வலிமையையுடைய அப்பாண்டவர்கட்குச் சொல்லியருளி, மீண்டு-பின்பு, பண் உடை கீதம் நாத பண்டிதன் - சுரங்களையுடைய பாட்டினிசையில் வல்லவனான நாரத முனிவன், விசும்பின் போனான்-ஆகாயமார்க்கமாகச் சென்றான்;(எ-று.)

ருது-வடசொல்; இரண்டு மாதங் கொண்ட பொழுது. அது-ஆறாகும்; அவற்றிற்கு, முறையே, சித்திரை முதல் இவ்விரண்டு மாதங்கொள்க. அவை முறையே இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி எனப்படும். (630)

**47.—அங்ஙனம் முறைப்படி ஐவரும் மனைவியும் வாழ்தல்.**

சொன்னநாட் டொடங்கி யைந்து சூரருந் தேவர் நாளுக்கு
இன்னநா ளவதி யென்றே யெண்ணியங் கிரதி கேள்வன்
அன்னநாண் மலர்ப்பைந் தாமத் தறன்மக னாதி யாக
மின்னனா டன்னை வேட்ட முறையினான் மேவினாரே.

(இ - ள்.) சொன்ன நாள் தொடங்கி - (அந்த நாரத மாமுனிவன்) சொன்ன தினம் முதலாக, ஐந்து சூரர் உம்-(அந்த) ஐந்துவீரர்களும், தேவர் நாளுக்கு இன்ன நாள் அவதி என்றே எண்ணி - தேவர்களுக்குஒருநாளாகிய மானுடவருஷம்ஒன்றுக்கு இன்னநாள் எல்லை யென்று அறிந்து, அங்கு - அவ்விடத்தில் [இந்திரப்பிரத்தத்தில்], இரதிகேள்வன் அன்ன நாள் மலர் பைந் தாமத்துஅறன் மகன் ஆதி ஆக - ரதிதேவிக்குக் கணவனான மன்மதன் போன்ற [மிக்கஅழகையும்] அன்றுமலர்ந்த [புதிய] மலர்களாலாகிய பசிய மாலையையு முடைய தருமபுத்திரன் முதலாக, மின் அனாள் தன்னை வேட்ட முறையினால் மேவினார் - மின்னல்போன்ற திரௌபதியை(த் தாம்) விவாகஞ்செய்த முறைப்படியே கூடிவாழ்ந்தார்கள்.

இந்திரப்பிரத்தச்சருக்கம் முற்றிற்று.

---

## ஏழாவது

## அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்.

அருச்சுனனது தீர்த்தயாத்திரைவரலாற்றைக் கூறுஞ்சருக்கமென்று பொருள். தீர்த்தயாத்திரை - புண்ணிய தீர்த்தங்களில் நீராடுதலை உத்தேசித்துப் பிரயாணஞ் செய்தல்.

இச்சருக்கத்திலும்* கடவுள்வாழ்த்து காணப்படவில்லை.

---

*"அருமாமறையுணராதலமருசேவடியருளால்
இருமாநிலமிசைதோய்வுறவியலானிரைவழிபோய்த்
திருமாநகரிடைமாதர்கடிகழ்வேல்விழிமகிழ
வருமாதவன் விளையாடலைமறவாதெனதுளமே"
என்ற ஒருசெய்யுள் இச்சருக்கத்துக் கடவுள்வாழ்த்தாகச் சில பிரதிகளிற் காணப்படுகிறது.

### 1.—தருமபுத்திரனது நீதிதவறாத அரசாட்சி.

துன்பம்பய மிடிநோய்பகை சோரங்கொலை யெய்தாது
இன்பம்பொரு ளறன்யாவையு மியல்பாதலி னெய்திக்
தன்பைங்குடை நிழன்மன்பதை தரியார்முனை மதியா
வன்பன்றனை நிகர்வாழ்வுற வருநாள்களி லொருநாள்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ-ள்.) தரியார் முனை மதியா வன்பன் - பகைவர்களுடைய போர்த்திறத்தைப் பொருள்செய்யாத வலிமையையுடையவனான தருமபுத்திரன்,—தன் பைங் குடை நிழல்-தனது குளிர்ந்த குடை நிழலின்கீழுள்ள, மன்பதை - சனங்கள், துன்பம் பயம் மிடி நோய் பகை சோரம் கொலை எய்தாது-துன்பம் அச்சம் வறுமை வியாதி பகை களவு கொலை ஆகிய இத்தீங்குகளை அடையாமல், இன்பம் பொருள் அறன் யாவைஉம் இயல்பு ஆதலின் எய்தி-இன்பம் செல்வம் தருமம் ஆகிய இவையனைத்தையும் இயல்பாக அடைந்து, தனை நிகர் வாழ்வு உற - தன்னையொத்த இனியவாழ்க்கையை யடையும்படி, வரும்-அரசுசெய்துவருகிற, நாள்களில்-தினங்களுள், ஒரு நாள் - ஒரு தினத்தில்,—(எ - று.)—"திருவாயின்மருங்கே*** வைதிகமுனி வந்து புகுந்தான்" என அடுத்த கவியோடு முடியும்.

நீதிதவறாத ஆளுகையைக் குடைநிழ லென்றல் மரபு. தனை நிகர்வாழ்வு என்பது-அரசனாகிய தருமனது வாழ்க்கையையொத்த வாழ்க்கை யென்றும், வேறு ஒப்புமையில்லாமையால் தன்னைத் தானே யொத்த வாழ்க்கை யென்றும் பொருள்படும்.

இனி இருபது கவிகள்-பெரும்பாலும் நான்காஞ்சீரொன்று மாச்சீரும், மற்றவைமூன்றும்மாங்கனிச்சீர்களுமாகிவந்தகலிவிருத்தங்கள்.

### 2.—தருமனது அரண்மனைவாயிலில் ஓர் அந்தணன்வந்து முறையிடல்.

அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்தும்
திறையோடிடமறநிற்பதோர் திருவாயின்மருங்கே
இறையோடுயரிருகையு மெடுத்தெண்ணுறமுறையோ
முறையோவெனவொருவைதிக முனிவந்துபுகுந்தான்.

(இ - ள்.) அறை-ஒலிக்கின்ற, ஓதம் - அலைகளையுடைய, வனம் - (கடலின்) நீரினால், சூழ் - சூழப்பட்ட, புவி-பூமியில், அரசு ஆன அனைத்துஉம் - அரசர்களாகவுள்ள எல்லோரும், திறையோடு - (தாம் தாம் செலுத்தவேண்டிய) திறைப்பொருள்களுடனே, இடம் அற நிற்பது-வெற்றிடமில்லாதபடி [இடம்போதாதபடி] (நெருங்கி)நிற்கப்பெற்ற, ஓர்-ஒப்பற்ற, திரு வாயில்மருங்குஎ-சிறந்த அரண்மனைவாயிலின் புறத்தே,—ஒரு வைதிக முனி - வேதவொழுக்கத்தையுடையவனான ஓர் அந்தணன், இறையோடு-வருத்தத்துடனே, உயர் இரு கைஉம் எடுத்து - இரண்டுகைகளையும் உயர எடுத்து, எண் உற - (காண்பவர் இது என்னகாரணம் பற்றியதோ? என்று) ஆலோசிக்கும்படி, முறையோ முறையோ என-'இது முறையோ' என்று குறைகூறிமுறையிட்டுக்கொண்டு, வந்து புகுந்தான் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

'இறையோடுயரிருகையுமெடுத்து' என்பதற்கு-தலைமேற் கை தூக்கிக்கொண்டு என்றும் உரைக்கலாம்; இறை-தலை. இறையோ டுயர் என்பதற்கு-கைரேகையாற்சிறந்த என்றுருமுளர். முறையோ முறையோ, அடுக்கு-அவலம்பற்றியது. வேதவிதிப்படிஒழுகுபவன்-வைதிகன். (633)

3.—அருச்சுனன் வந்து வினவ, அந்தணன் செய்திகூறல்.

கடைகாவலர்குறைகூறலும் விசயன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்து புவித்தேவனைமறையின்
தொடைகாவலவிதுவென்னென வவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர் வில்வேடுவரென்றான்.

(இ - ள்.) கடைகாவலர்-அரண்மனை வாயில்காவலாளர்கள், குறை கூறலும்-(அந்தஅந்தணனது)முறைப்பாட்டை(அரண்மனை யினுட்சென்று) சொன்னவுடனே, விசயன்-அருச்சுனன், கடிதின்-விரைவாக, தன் புடை காவலர் தொழ வந்து - தனதுபக்கங்களில் அரசர்கள் வணங்க வந்து, புவிதேவனை-பூதேவனாகிய பிராமணனை, (நோக்கி), மறையின் தொடை காவல இது என் என-'வேதங்களின் தொடர்ச்சியைப் பாதுகாத்தலில்வல்லவனே! நீ இங்ஙனம்முறையிடுவது என்னகாரணத்தால்?' என்றுவினவ, அவன் உம்-அந்த அந்தணனும், விடை-(அவ்வினாவிற்கு) விடையாக, 'தொடு கழலோய் - அணிந்தவீரக்கழலையுடையவனே! வில் வேடுவர் நிரை காவலர் கொண்டனர்-வில்லின்திறத்தையுடைய வேடர்கள் (எனது) பசுக் கூட்டங்களை (அவற்றை)க் காக்கின்ற இடையர்களிடத்தினின்று கொள்ளைகொண்டார்கள்,' என்றான்-என்றுசொன்னான்; (எ - று.)

விடைஎன்றான்-என்றுவிடைகூறினானென்க. என்றான் என்பது-என்றுசொன்னானென்றுபொருள்படுதலால், சொல்லெச்சம். எதிர்த்த இடையர்களைப் பொருது வென்ற கருவியை யுடைமை தோன்ற, 'வில்வேடுவர்' என்றான். விடைகாவலர் - இடையர் என் றுரு முண்டு. தொடை - ஒழுக்கமெனினுமாம். (634)

4.—அருச்சுனன் அந்தணனுக்கு அபயமளித்து வில்லெடுக்கச் சென்றவிடத்துத் தருமனுடனே திரௌபதியைக் காணுதல்.

அஞ்சாதொழிமுனிநீயுன தானின்கணமின்றே
எஞ்சாவகைதருவேனென வேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வரு வியசன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிடு மயில்சீறடிகண்டான்.

(இ - ள்.) 'முனி-முனிவனே! நீ—, அஞ்சாதுஒழி - அஞ்ச வேண்டா, உனது ஆனின் கணம்-உன்னுடைய பசுக்கூட்டத்தை, இன்றுஏ-இப்பொழுதே, எஞ்சா வகைதருவேன்-(ஒன்றுங்) குறையாதபடி (யான்மீட்டுக் கொணர்ந்து) கொடுப்பேன்,' என - என்று (அந்தணனுக்கு அபயமளித்து) உறுதிமொழிகூறி, வெம் சாபம் எடுப்பான் வரு-கொடிய (தனது) வில்லையெடுத்தற்கு(ஆயுதசாலை

யில்) வந்த, எவுக்கு ஒரு திலகன் விசயன் - பாணப் பிரயோகவித்தைக்கு ஒரு திலகம்போல அழகுசெய்பவனான அருச்சுனன், தருமனுடன் மஞ்சு ஆர்பொழில் விளையாடிடு மயில் சிறுஅடிகண்டான்-தருமபுத்திரனுடனே மேகம்படிந்த [உயர்ந்த]சோலையில்விளையாடுகிற மயில்போன்ற திரௌபதியினுடைய சிறிய பாதங்களை அங்குப் பார்த்தான்; (எ-று.)

"நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" என்றபடி மகளிர்க்குக் கால்சிறுத்திருத்தல் உத்தமவிலக்கணம். மஞ்சார் பொழில் விளையாடிடு மயில் - அடையடுத்த உவமையாகுபெயர். (635)

## 5.— அருச்சுனன் வேடர்களைவென்று நிரைமீட்டல்.

காணுமெய்ந்நடுங்கா வொளிகருகாமனமிகவும்
நாணுவிரைவொடுசாயக நாண்வெஞ்சிலைகொள்ளாச்
சேணுநெறிசெல்லா நனிசீறுவமர்வெல்லா
மாணுநிரைமீளாவோரிமைப்போதினில்வந்தான்.

(இ - ள்.) காணா-(தருமனுடன் திரௌபதியைக்) கண்டு, மெய் நடுங்கா-(அந்தத்தோஷத்தால்) உடம்புநடுங்கி,ஒளிகருகா - முகத்தில் ஒளிகுன்றி, மனம் மிகவும் நாணா-மனத்தில் மிகவும்வெட்கங்கொண்டு, சாயகம் நாண் வெம்சிலை விரைவொடு கொள்ளா-அம்புகளையும் நாணியையுடைய கொடியவில்லையும் விரைவாக எடுத்துக்கொண்டு, சேண் ஆம் நெறி செல்லா-நெடுந்தூரமாகியவழியிற் போய், நனி சீறா அமர்வெல்லா-மிக்ககோபங்கொண்டு போர்செய்து (வேடர்களை) வென்று, மாண் ஆ நிரை மீளா-மாட்சிமைப்பட்ட பசுக்கூட்டங்களை மீட்டு,ஓர் இமை போதினில் வந்தான்-ஒருமாத்திரைப்பொழுதிலே மீண்டு வந்து சேர்ந்தான்; (எ-று.)

பசுக்களுக்கு மாட்சி-ஓமத்துக்கு வேண்டிய பால் தயிர் நெய் முதலியவற்றை அளித்தல் முதலியன. மிகவும், உம்மை-சிறப்பு. ஸாயகம்-வடசொல். 'விரைவொடுசாலையினுண்' என்றும் பாடம்.

## 6.— அருச்சுனன் தீர்த்தயாத்திரைக்குத் தருமனிடம் விடைபெறுதல்.

தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்படுமறையோன்மன மகிழும்படிநல்கிப்
பொறுக்குந்தவமுனிசொற்படி புனிதப்புனல்படிவான்
நிறுக்குந்துலைநிகர்தம்முனை நிகழ்வோடுபணிந்தான்.

(இ - ள்.) தொறு கொண்டவர் உயிர்உம்-பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொண்டுசென்ற வேடர்களுடைய உயிரையும், தொறு நிரைஉம்-பசுக்கூட்டத்தையும், கவர்-கவர்ந்துகொண்டுவந்த,சூரன் -வீரனாகிய அருச்சுனன்,—மறுக்கம் படு மறையோன் மனம்மகிழும் படி நல்கி-கலக்கமடைந்த அந்த முனிவனது மனம் மகிழும்படி (பசுக்கூட்டத்தை அவனுக்குக்) கொடுத்து,(உடனே),பொறுக்கும் தவம் முனி சொல் படி புனிதம் புனல்படிவான்-தாங்கிய தவத்தையுடைய நாரதமுனிவனது சொல்லின்படி புண்ணியதீர்த்தங்களில் ஸ்நாநஞ் செய்தற்பொருட்டு [தான் தீர்த்தயாத்திரை செல்லும்

மாக, வழிபட-(க்ருஷ்ணன்மொழிப்படியே) வழிபாடு செய்யாநிற்கையில்,—'இற்றை மா மதன் பூசலுக்கு - இப்போது கொடிய மன்மதன் விளைக்கின்ற போருக்கு, என் செய்வோம்-என்னசெய்யக்கடவோம்?' என்று என்று - என்றுசிந்தைகொண்டு, (அருச்சுனன்),—ஒற்றை அன்றில் போல் - பேடையைப்பிரிந்திருக்கும் ஆணன்றில்போல, மெய் மெலிந்து-உடல்தளர்ச்சியுற்று, உள்ளம் உம் உடைந்தான் - மனமும் வருந்தினான்; (எ - று.)

அன்றிற்பறவையின் ஆண் தன் பேடையைக் கணப்போது பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறுமல் இரண்டு மூன்றுதரம் கத்திக்கூவி,பின்பும் அத்துணையைக்கூடாவிடில்உடனேயிறந்துபடும்.

## 63.—சில அடையாளங்களாற் சுபத்திரை அச்சன்னியாசியைக் குறித்துச் சங்கித்தல்.

நல்லிலக்கணம்பலவுடை யவயவநலத்தால்
வில்லிலக்கணத்தழும்புடைக் கரங்களான்மிகவும்
தொல்லிலக்கணம்பலவுடைச் சுபத்திரையொருதன்
இல்லிலக்கணவனையிவன் யார்கொலென்றயிர்த்தாள்.

(இ - ள்.) தொல் இலக்கணம் பல உடை சுபத்திரை - (நூல்களிற் கூறப்பட்டுத்) தொன்றுதொட்டுவருகிற உத்தமஸ்திரீலக்ஷணங்கள் பலவற்றையு முடைய சுபத்திரையானவள்,—நல் இலக்கணம் பல உடை அவயவம் நலத்தால் - (ஆடவர்க்குஉரிய)உத்தமலக்ஷணங்கள் பலவற்றையுமுடைய (அத்துறவியினது) உறுப்புக்களின் அழகினாலும், இலக்கணம் வில் தழும்பு உடை கரங்களால் - நல்லிலக்கணமமைந்த வில்லின் தழும்புகளைக்கொண்ட கைகளினாலும், ஒரு தன் இல்லில் அ கணவனை - ஒப்பற்ற தன் வீட்டில் தனியனாயிருக்கிற (தனக்குக்) கணவனாகும் அவனை, இவன் யார் கொல் என்று மிகவும் அயிர்த்தாள்-"இவன் யாரோ" என்று மிகவும் சந்தேகித்தாள்; (எ - று.)

வில்தழும்பு - சீவகசிந்தாமணியில் தடமித்தனென்னும் அரசன் சீவகனது கைகளின் வில்தழும்புகண்டே அவனை விற்றொழிலில்வல்லவனென்று நன்குமதித்தமை கூறுமிடத்து 'முன்கைச் சந்துக்கும் முழங்கைக்கும் இடையில் முன்கைச் சந்தைச் சேர்ந்து உத்தமவிலக்கணத்தையுடைய கைவிரல்களைந்துக்கு அருகே யானைத் தோலிற் சுண்ணம்பையுரைத்ததுபோலக் காழ்ப்பேறி வெண்ணிறங்கொண்டு சிறுமீன்வடிவமாய்த் தோன்றுகிற மூன்று விரல் நீளமுள்ள சிலைத்தழும்பு' என்றது முதலியன காண்க.

## 64.—இரண்டுகவிகள் - சுபத்திரைக்கும் அருச்சுனனுக்கும் நடந்த சம்பாஷணையைக் கூறும்.

மங்கையங்கொருநாளவன் மலரடிவணங்கி
எங்கும்வண்புனலாடுதற் கேகினீரெனினும்
தங்கும்மாநகர்யாதெனத் தபோதனன்ருனும்
எங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான்.

(இ - ள்.) மங்கை - மங்கைப்பருவமுடையளான சுபத்திரை, அங்கு - அவ்விடத்தில், ஒருநாள்—, அவன் மலர் அடி வணங்கி-

அம்முனிவனுடைய தாமரைமலர்போன்ற பாதங்களை நமஸ்கரித்து, வண் புனல் ஆடுதற்கு எங்குஉம் ஏகினீர் எனின்உம் - சிறந்த புண்ணியதீர்த்தங்களில் நீராடுதற்கு எல்லாவிடங்களிலும் சென்றீராயினும், தங்கும் மா நகர் யாது - தேவரீர் எழுந்தருளியிருக்கும் சிறந்தநகரம் எது? என-என்றுவினவ,—தபோதனன் தான்உம் - அம்முனிவனும், எங்கள் மா நகர் இந்திரப்பிரத்தம் என்று இசைத்தான்-எமது சிறந்தநகரம் இந்திரப்பிரத்தமென்று விடை கூறினன்; (எ - று.)

மங்கைப்பருவத்திற்கு வயதெல்லை-பன்னிரண்டு பதின் மூன்று பிராயங்கள். தபோதநன் - வடசொல்; தவத்தைத் தனமாக வுடையவன்; அனைவரும் செல்வத்தை விரும்பி ஈட்டிப் பாதுகாத்தல் போலத் தவத்தை விரும்பியீட்டிப் பாதுகாப்பவன்.

65. என்றகாலையிலிந்திரன் மதலையையொழிய
நின்றபேரையந்நெடுங்கணாள் வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும் வினவினைமின்னே
மன்றலந்தொடைவிசயனை மறந்ததென்னென்றான்.

(இ - ள்.) என்றகாலையில் - என்று (முனிவன்) விடைகூறிய பொழுது,—அ நெடுங் கணாள் - நீண்டகண்களையுடையவளான அச்சுபத்திரை, இந்திரன் மதலையை ஒழிய நின்ற பேரை வினவலும் - அருச்சுனனைத்தவிர மற்றைத் தருமன்முதலியோரைக்குறித்து (யோகக்ஷேமம்) விசாரித்தவளவிலே—நிருபன் - அருச்சுனன், — (அவனை நோக்கி), 'மின்னே - மின்னல்போன்றவளே! வென்றி மன்னவர் யாரைஉம் வினவினை-வெற்றியையுடைய அரசரெல்லோரையுங் குறித்து வினவினாய்: மன்றல் அம் தொடைவிசயனை மறந்ததுஎன்-வாசனையுள்ள அழகியமலர்மாலையையுடைய அருச்சுனனை (நீ) மறந்ததுயாதுகாரணத்தால்?' என்றான்-என்றுவினவினான்.

66.—இதுவும் அடுத்த கவியும் - தோழிவார்த்தை.
யாழின்மென்மொழியெங்கணாயகியிவளவனுக்கு
ஊழினன்புடைமன்றலுக் குரியளாதலினால்
வாழிவெஞ்சிலைவிசயனை மறைத்தனளென்னாத்
தோழிநின்றவளொருத்திகை தொழுதனள்சொன்னாள்.

(இ - ள்.) நின்றவள் தோழி ஒருத்தி - (அப்பொழுது அங்கு) நின்ற சுபத்திரையின் தோழி யொருத்தி,—கை தொழுதனள் - (துறவியைக்) கைகூப்பி வணங்கி, யாழின் மெல் மொழி எங்கள் நாயகி இவள் - வீணையினிசைபோல மெல்லிய [இனிய]சொற்களையுடைய எங்கள் தலைவியாகிய இவள், அவனுக்கு-அவ்வருச்சுனனுக்கு, ஊழின் அன்பு உடை மன்றலுக்கு உரியள் ஆதலினால்- முறைப்படியமைந்த அன்புடைய விவாகத்துக்கு உரியவளாதலால், வெம் சிலை விசயனை மறைத்தனள்-கொடியவில்லையுடைய அருச்சுனனைக்குறித்து (வினவாமல்)மறைத்தாள்,' என்னா-என்று, சொன்னாள்—; (எ - று.)

இவள் அருச்சுனனை மணஞ்செய்துகொள்ளும் விருப்புடையளாதலால், நாணம் பற்றி, அவனை வினவில ளென்றனளென்பதாம். வாழி - அசை. (697)

**67.** பங்குனன்பெருந்தீர்த்தநீர் படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம் போந்தனனேன்றே
அங்குநின்றுவந்தவருரைத்தன ரவனிப்போது
எங்குளானெனத்தெரியுமோ வடிகளுக்கென்றாள்.

(இ - ள்.) 'பங்குனன் - அருச்சுனன், பெருந் தீர்த்தம்நீர் படிவதற்கு ஆக - சிறந்த புண்ணியதீர்த்தங்களில் நீராடும்பொருட்டு, பொங்கு தெள் திரை புவி வலம் போந்தனன் - பொங்குகிற தெளிவான அலைகளையுடைய கடலினாற் சூழப்பட்ட பூமியிற் பிரதக்ஷிணமாகச் சென்றனன்', என்று—, அங்கு நின்று வந்தவர் உரைத்தனர் - அவ்விந்திரப்பிரத்தநகரத்தினின்று வந்தவர்கள் சொன்னார்கள்; அவன் இப்போது எங்கு உளான் என அடிகளுக்கு தெரியும் ஓ - அவன் இப்பொழுது எவ்விடத்திலிருக்கிறானென்று சுவாமிகளுக்குத் தெரியுமோ? என்றாள் - என்றும் வினாவினாள்;

சங்கித்த சுபத்திரையே வினவியதாகப் பாலபாரதத்தி லுள்ளது. 'என' என்ற செயவெனெச்சத்துக்கு 'என்பது' எனத் தொழிற்பெயராகப் பொருள் கொண்டு, அதனை 'தெரியுமோ' என்ற வினைமுற்றுக்கு எழுவாயாக்குக. (698)

**68.—வினவிய பாங்கிக்கு அருச்சுனன் கூறிய விடை.**

பாங்கிநல்லுரைதன்செவிப் படுதலும்விசயன்
தீங்கிலன்பலதிசைகளுஞ் சென்றுநீராடிக்
கோங்கிளம்கொழுமுகைநிகர் கொங்கையாள்பொருட்டால்
ஈங்குவந்துநும்மில்லிடை யிருந்தனனென்றான்.

(இ-ள்.) பாங்கி நல் உரை - தோழிகூறிய நல்லவார்த்தை, தன் செவி படுதலும்-தன்காதிற் பட்டவுடனே, 'விசயன்-அருச்சுனன், - பல திசைகள்உம் சென்று நீர் ஆடி-பலதிக்குக்களிலுஞ் சென்று புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து, தீங்குஇலன் - யாதோருறுபாடும் இன்றி இனிதுவாழ்பவனாகி, கோங்கு இளங் கொழு முகை நிகர் கொங்கையாள் பொருட்டால்-கோங்கினது இளைய வளப்பமுள்ள அரும்பையொத்த தனங்களையுடையாளின் [சுபத்திரையின்] பொருட்டாக, ஈங்குவந்து-இந்தப்பதியிலேவந்து, நும் இல்லிடை - உம்முடையவீட்டில்தானே, இருந்தனன்—,' என்றான்-என்று உத்தரமளித்தான்; (எ - று.)

தன்னை இன்னானென்று தெரிவித்தற்கு ஏற்றதாயிருந்ததனால் 'நல்லுரை' என்றார். தன்னைப்படர்க்கையாற் கூறி அருச்சுனன் தெரிவித்தா னென்க. (699)

**69.—அந்தச்சொல்லால் யதியை [முனியை] அருச்சுனனேயென்று அறிந்து சுபத்திரை காமக்குறிப்புக் கொள்ளுதல்.**

யதியுரைத்தசொற்கேட்டலும் யாதவிநுதல்வாண்
மதிவியர்த்ததுதுடித்தது குமுதவாய்மலரும்
புதியகச்சணிகுரும்பைக ளரும்பினபுளகம்
பதியிடத்தரிவையர்க்குள மாகுலம்படாதோ.

(இ - ள்.) யதி-அந்தஅருச்சுனசன்னியாசி, உரைத்த-கூறிய, சொல்-சொல்லை, கேட்டலும்-கேட்டவுடனே, யாதவி-யதுகுலத்திற் பிறந்தவளான சுபத்திரையின், நுதல் வாள் மதி-நெற்றியாகிய ஒளியுள்ள சந்திரன், வியர்த்தது—; வாய் குமுதம் மலர்உம் - வாயாகிய செவ்வாம்பல்மலரும், துடித்தது—; புதிய கச்சு அணி குரும்பைகள்-புதிய கச்சையணிந்த குரும்பை போன்ற தனங்கள், புளகம் அரும்பின-மயிர்க்கூச்சு எறிந்தன; பதிஇடத்து-நாயகன் சமீபத்திலிருக்கும்போது, அரிவையர்க்கு - மகளிர்க்கு, உளம் - மனம், ஆகுலம்படாதுஓ - சஞ்சலமாதலையடையாதோ? (எ - று.)

அருச்சுனன் அருகிலிருத்தலாற் சுபத்திரையின்மனம் கலக்க முற்றதென்று முதல்மூன்றடிகளிற் கூறிய பொருளை ஈற்றடியிற் கூறிய பொதுப்பொருளாற் சமர்த்தித்தார்; வேற்றுப்பொருள்வைப் பணி. நுதல் வாண்மதிவியர்த்தது, வாய்க்குமுதமலர்துடித்தது என்பன - பரிணாமாலங்காரமென்னும் திரிபுஅணி: நுதலை வாண்மதியாகவும் வாயைக் குமுதமாகவும் உருவகஞ்செய்தாரெனின், அவை வியர்த்தல் துடித்தல்என்ற தொழில்நிகழ்ச்சிக்கு ஏற்றனவாகாமை காண்க. கச்சணிகுரும்பை - உருவகநவிற்சி. (700)

## 70.—அச்சமயத்தில் அருச்சுனன் சுபத்திரையைக் கைப்பிடித்தல்.

உகவைமுத்தமென்பவளமு நீலமுமொளிர
அகவுபச்சிளந்தோகைபோ னின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின் மெலிந்ததோள்விசயன்
தகவுடைத்தனதடக்கையால்வளைக்கரந்தகைந்தான்.

(இ - ள்.) உகவை-மகிழ்ச்சியினால், முத்தம்மெல் பவளம்உம்-முத்துக்களையுடைய மென்மையான பவழம்போன்றசிவந்த வாயும், நீலம்உம் - நீலோற்பலமலர்போன்ற கண்களும், ஒளிர-விளங்க, அகவு பசு இள தோகைபோல் நின்ற - (கார்ப்பருவத்தில்) ஆடுகின்ற பசுநிறமான இளமயில்போல (க் களித்து) நின்ற, அ அணங்கை-அந்தப்பெண்ணை [சுபத்திரையை], விருப்பம் நோய் மிக வளர்தலின் மெலிந்த தோள் விசயன் - ஆசைநோய் மிகுதியாகவளர்ந்ததனாலிளைத்த தோள்களையுடைய அருச்சுனன், தகவு உடை தன தட கையால்-அழகையுடைய தனது நீண்ட கையினால், வளை கரம் தகைந்தான் - வளையலை யணிந்த கையைப் பிடித்தான்;

வாயிற் பல்லினொளிசிறிதுவெளித்தோன்றும்படி யுண்டான புன்னகையிலும் பார்வையிலும் காதற்குறிப்பு நன்குவெளிப்படவென்பது, முதலடியின் கருத்து. 'முத்தம்' என்றது, பற்களை. பவளம், நீலம் - உவமையாகுபெயர்கள். (701)

## 71.—அச்செய்தியைத் தோழியர் தேவகிக்குத் தெரிவித்தல்.

தகைந்தபோதுயிர்ச்சேடியர் தவிர்கெனச்சிலசொல்
பகர்ந்துபோயொருமாதவிப் பந்தரிற்புகுந்து
புகுந்தநீர்மையைத்தேவகி யறியுமாபுகன்றார்
அகைந்தபல்பெருங்கிளைஞரி லார்கொலோவறிந்தார்.

(இ - ள்.) தகைந்த போது - (இவ்வாறு அருச்சுனசன்னியாசி சுபத்திரையைக்)கைப்பிடித்த போது, 'உயிர் சேடியர் தவிர்க- உயிர்போன்ற தோழியரே !(இத்தன்மையைத்) தவிர்ப்பீராக,' என சில சொல் பகர்ந்து போய் - என்று சில வார்த்தைகளைச் சொல்லி விலகிச் சென்று, ஒரு மாதவி பந்தரில் புகுந்து - (அச்சுபத்திரை விசயனுடனே)குருக்கத்திப்பந்தலொன்றிலேபிரவேசிக்க, (பின்பு), புகுந்த நீர்மையை தேவகி அறியும் ஆறு புகன்றார் - நடந்தசெயலை (அவள்தாயான) தேவகி அறியும்படி சொன்னார்கள்; அகைந்த பல் பெரு கிளைஞரில் ஆர் கொல்லோ அறிந்தார்-(இங்ஙனம் நிகழ்ந்த அச் செய்கையைத்தேவகியொருத்தி அறிந்தனளேயன்றி) நெருங்கின பல பெரியசுற்றத்தாரில் எவர்தாம் அறிந்தவர்? (எ - று.)

புகுந்து- எச்சத்திரிபு. தவிர்க = தவிர்க்க: பிறவினையில்வந்த தன்வினை. இனி, இங்ஙன் கொள்ளாமல், உயிர்ச்சேடியர் தவிர்கெனச் சன்னியாசியை நோக்கிச் சொல்லி, சுபத்திரையுடனே மாதவிப் பந்தரிற் புகுந்து பின்பு தேவகிக்குத் தெரிவித்தாரென்று உரை கூறுவதும் உண்டு. 70-ஆம் செய்யுள் முதல் நான்குசெய்யுள்கள் அந்தாதித்தொடையமையவுள்ளன. (702)

72.—அந்நாளிற் கண்ணன் யாதவர் அனைவரையும் வேறுவியாஜத்தால் வேற்றிடத்துக்கு அழைத்துக்கொண்டு செல்லுதல்.

அறிவுருவகையலாயுதன் முதல்வடமதுரை
செறியும்யாதவர்யாரையுந் தன்னுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர் வான்பெருந்தீவில்
உறியில்வெண்டயிருண்டவன் கொண்டுசென்றுற்றான்.

(இ - ள்.) அறிவு உரு வகை-(இச்செய்தியை) அறியவொண்ணாதபடி, அலாயுதன் முதல் வடமதுரை செறியும் யாதவர் யாரைஉம் -பலராமன்முதலாக வடமதுரையில் (முன்பு)இருந்தவர்களான யதுகுலத்துவீரர்களெல்லாரையும், தன்னுடன்சேர்த்து-தன்னோடு கூட்டி, மறி கொள் செம் கையன் விழா அயர் வான் பெருந் தீவில் கொண்டு சென்று உற்றான்-மானை யேந்திய சிவந்த கையையுடையனான சிவபிரானுக்குத் திருவிழாச் செய்யும் பொருட்டு மகாத்வீபமென்ற இடத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் சேர்ந்தான்: (யாவனெனில்),—உறியில் வெள் தயிர் உண்டவன் - (கோபஸ்திரீகள்) உறியில் வைத்திருந்த வெண்ணிறமான தயிரை இளமையிற் களவாடி அமுதுசெய்தவனான கண்ணபிரான்; (எ - று.)

'வடமதுரை' என்றது, தென்மதுரையினின்று பிரித்துக்காட்டுதற்கு; இனம் விலக்கவந்த அடைமொழியடுத்த பெயர். த்வாரகையிலுள்ளார் யாவரும் வடமதுரையினின்று வந்தவராதலறிக. ஈற்றடி-கண்ணபிரான் ஏமாற்றுந் தன்மையனென்பதைத் தெரிவிக்கும். (703)

73.—அருச்சுன சுபத்திரைகள் பிதாவையும் அன்னையையும் நினைக்க, இந்திரனும் கிருஷ்ணனும் அங்கு வந்து சேர்தல்.

உற்றகங்குலில்யாவருந் தணந்தவாறுணர்ந்து
பெற்றதன்பெரும்பிதாவினை முன்னினன்பெரியோன்

சிற்றிடைப்பெருங்கொங்கையுந் தம்முனைத்தியான
முற்றமுன்னினளிருவரு முன்முன்வந்துற்றார்.

(இ - ள்.) உற்ற - பொருந்திய, கங்குலில்-அவ்விரவில், யாவர் உம்—, தனைத்த ஆறு -வேறுகாரணத்தாற் சென்றிட்டவகையை, உணர்ந்து—, பெரியோன் - பெருமையுள்ள அருச்சுனன், பெற்ற தன்பெரும் பிதாவினை முன்னினன் - (தன்னைப்) பெற்ற பெருமையுள்ள பிதாவாகிய இந்திரனை நினைந்தான்; சிறு இடை பெருங் கொங்கைஉம்-சிறிய இடையையும் பெரிய தனங்களையுமுடையவளான சுபத்திரையும், தம்முனை-தன் அண்ணனாகிய க்ருஷ்ணனை, தியானம் முற்ற முன்னினள் - தியானநிலை நிரம்ப (மனத்தினால்) தியானித்தாள்: இருவர்உம்-(க்ருஷ்ணன் இந்திரன் என்ற) அவ்விருவரும், முன் முன்வந்து உற்றார் - (அவ்விருவருக்கும்) முன்னாக வந்து சேர்ந்தனர். (704)

## 74.—தேவேந்திரனைக் கண்ணபிரான் எதிர்கொள்ளுதல்.

இந்திராணியோடெய்திய விந்திரன்றன்னை
இந்திராபதியெதிர்கொளத் துவரைமாமுதூர்ச்
சந்திராதவமண்டபத் திடுபொலந்தவிசில்
வந்திராவணங்கியதிரு மகனுடன்மகிழ்ந்தான்.

(இ - ள்.)இந்திராணியோடு எய்திய இந்திரன் தன்னை - இந்திராணியுடனே வந்த இந்திரனை, இந்திராபதி எதிர்கொள-இலக்குமிக்குக்கணவனான கண்ணன் எதிர்கொள்ள, (அவன்), துவரை மா முது ஊர் - பெரிய பழமையான அத்துவாரகாபுரியில், சந்திர ஆதவர் மண்டபத்து இடு பொலம் தவிசில் வந்து இரா - சந்திரசூரியர் போல விளங்குகிற மண்டபத்திலே யிட்ட பொன்மயமான ஆசனத்தில் வந்து வீற்றிருந்து, வணங்கிய திருமகனுடன் மகிழ்ந்தான் - (தன்னை) வணங்கின (தனது) சிறந்தகுமரனான அருச்சுனனுடன் கூடி மகிழ்ந்தான் ; (எ - று.)

இந்திராணி-இந்த்ராணீ: இந்திரன்மனைவி. இந்த்ரன், இந்திரா என்ற பெயர்கள், ஐசுவரியமுடையவ ரென்று பொருள்படும்.(705)

## 75.—இந்திரனும் இந்திராணியும் தமது ஆபரணங்களினால் முறையே அருச்சுனனையும் சுபத்திரையையும் அலங்கரித்தல்.

பொருவரும்புருகூதனும் புலோமகன்னிகையும்
இருவருந்தமகலன்களா லிவரிருவரையும்
மருவரும்படியணிதலி னணிகெழுவனப்பால்
ஒருவரும்பிறரோப்பல ரென்னுமாறுயர்ந்தார்.

(இ-ள்.) பொருவு அரும் புருகூதன்உம் புலோமகன்னிகைஉம் இருவர்உம்-ஒப்பற்றவர்களான இந்திரனும் புலோமா என்பவனது மகளான இந்திராணியும் ஆகிய இரண்டுபேரும், தம கலன்களால்-தங்கள் ஆபரணங்களினால், இவர் இருவரைஉம் - (அருச்சுனனும் சுபத்திரையு மாகிய) இவர்கள் இரண்டுபேரையும், மருவரும்படி அணிதலின்-பொருத்தமாக அலங்கரித்ததனால், (அவ்விருவரும்), அணி கெழு வனப்பால் -(தங்கள்) இயற்கையழகின்மீது நிறைந்த

செயற்கையழகினால், ஒருவரும் பிறர் ஒப்பு அலர் என்னும் ஆறு உயர்ந்தார் - பிறரொருவரும் (தங்கட்கு) உவமையாகாரென்னும்படி சிறப்புற்றார்கள்; (எ - று.) (706)

### 76.—கண்ணனது சங்கல்பத்தால் வசிஷ்டன்முதலிய முனிவர்கள் அங்குவந்துசேர்தல்.

பாலருந்ததிநறுநெய்யாய்ப் பாடியிற்கள்ளத்
தாலருந்ததிவிரகன தருளினல்விரைவிற்
சாலருந்ததிதலைவனுந் தலைபெறும்பலநுண்
ணூலருந்ததியுறப்புகுந் தாசிகணுவன்றார்.

(இ - ள்.) ஆய்ப்பாடியில் - இடைச்சேரியில், பால் - பாலையும், அருந் ததி-அருமையான தயிரையும், நறு நெய் - நறுமணமுள்ள சிறந்த வெண்ணெயையும் நெய்யையும், கள்ளத்தால் அருந்து - களவினாலெடுத்து உண்ட, அதிவிரகனது - மிக்கதந்திரமுடையவனான கண்ணபிரானது, அருளினல்—, சால் அருந்ததி தலைவன் உம்-(கற்பினால்) நிறைந்த அருந்ததியின் கணவனான வசிஷ்டனும், தலைபெறும் பல நுண் நூலர் உம் - தலைமைபெற்ற பல நுட்பமான நூல்களை யுணர்ந்த முனிவர்களும், விரைவில்-விரைவாக, ததி உற புகுந்து - கூட்டமாக வந்து, ஆசிகள் நுவன்றார் - ஆசீர்வாதங்களைச் சொன்னார்கள்; (எ - று.)

ததி - தயிர்: தற்பவமான வடசொல். ததி - வரிசை: தற்சம வடசொல். இச்செய்யுளில் 'திரிபு' என்னும் சொல்லணி காண்க.

### 77.—சுபத்ராகல்யாணம்.

தொடங்கிநாதவெம்முரசுடன் சுரிமுகந்தழங்கச்
சடங்கினலுயராகுதித் தழலவன்சான்ற
விடங்கினன்மிகுவிசயனக் கன்னியைவேட்டான்
மடங்கினர்தமபதிதொறு மவ்வுழிவந்தார்.

(இ - ள்.) நாதம் வெம் முரசுடன் - ஓசையையுடைய விரும்பப்படும் முரசவாத்தியங்களோடு, சுரி முகம் - சங்கவாத்தியங்கள், தழங்க - ஒலிக்க, சடங்கினல் உயர் ஆகுதி தழலவன் சான்று ஆ - வைதிகச் சடங்கினற் சிறந்த ஆகுதியை யுடைய அக்கினிதேவன் சாக்ஷியாக, விடங்கினல் மிகு விசயன் அ கன்னியை தொடங்கி வேட்டான் - அழகினல் மிக்க அருச்சுனன் அச்சுபத்திரையை முயன்று மணஞ்செய்தான்; (பின்பு), அ உழி வந்தார் தம பதிதொறும் மடங்கினர் - அவ்விடத்தில் வந்த இந்திரன் முதலியோர் தம்தம் இருப்பிடங்கட்கு மீண்டு சென்றார்கள்;(எ-று.)

மணமுரசு என்றற்கு, 'வெம்முரசு' என்றார். 'வெம்மை வேண்டல்'. சுரிமுகம் - சுழிந்தமுகமுடையதெனப் பொருள்படும் காரணக்குறி; வினைத்தொகையன்மொழி. சடங்கினலுயர் ஆகுதித் தழலவன் - ஓமாக்கினி. (708)

### 78.—மணவினை முடித்தபின்பு கண்ணன் அருச்சுனனை நகையாடுதல்.

முன்னம் யாவையு முடித்தருன் மொய்துழாய் முடியோன்
கன்ன னுருயிர் கொளவளர் காளையைத் தழீஇக்கொண்டு

அன்ன மென்னடை யரிவையர் பொருட்டுநீ யின்னம்
என்ன வென்னமா தவவுருக் கொள்ளுதி யென்றான்.

(இ - ள்.) முன்னம யாவைவும் முடித்தருள் - முன்நின்று (இவ்விவாகத்துக்கு உரியனவை) எல்லாவற்றையும் நிறைவேற்றி யருளிய, மொய் துழாய் முடியோன்-நெருங்கிய திருத்துழாய்மாலை யை யணிந்த திருமுடியையுடையவனான கண்ணன், கன்னன் ஆர் உயிர் கொள வளர்காளையை தழீஇக்கொண்டு - கர்ணனுடைய அருமையான உயிரைக் கவர வளர்கிற இளவீரனான அருச்சுன னைத் தழுவிக்கொண்டு, 'நீ—, அன்னம் மெல் நடை அரிவையர் பொருட்டு - அன்னப்பறவையினது மந்தகதிபோன்ற மென்மை யான நடையையுடைய மகளிரைத் தழுவுதற்காக, இன்னம் என்ன என்ன மா தவம் உரு கொள்ளுதி - இன்னமும் என்ன என்ன பெரிய தவவேடத்தைக்கொள்வாயோ?' என்றான்-என்று நகையாடிச் சொன்னான்; (எ - று.)

காரியத்தைமுடித்தபின் புஉண்டான களிப்பினாலும், மைத் துனமையினாலும், இங்ஙனம் தகுதியாகப் பரிகசித்தன னென்க. முன்னம் - எண்ணமுமாம். (709)

வேறு.

## 79.—கண்ணன்கட்டளையால் சுபத்திரை தேர்செலுத்த, அருச்சுனன் துவாரகாபுரியினின்றுஇந்திரப்பிரத்தநகர்நோக்கிச் செல்லுதல்.

காமற் பயந்தோன் றனதேவலிற் காம பாலன்
வாமம் பதிதன் னினும்வாசவ மாபி ரத்த
நாமப் பதியே திசையாக நடக்க லுற்றான்
தாமக் குழலா டனித்தேர்விடச் சாப வீரன்.

(இ - ள்.) காமன் பயந்தோன் தனது ஏவலின் - மன்மதனைப் பெற்றவனான கண்ணபிரானது கட்டளையினால், சாபம் வீரன் - வில்வீரனான அருச்சுனன்,—தாமம் குழலாள் தனி தேர் விட - மாலையை யணிந்த கூந்தலை யுடையவளான சுபத்திரை ஒப்பற்ற தேரைச் செலுத்த, காமபாலன் வாமம் பதி தன்னின்உம் -பலராம னுடைய அழகிய துவாரகாபுரியினின்றும், மா வாசவ பிரத்தம் நாமம் பதியே திசை ஆக நடக்கல் உற்றான் -பெரிய இந்திரப்பிரத்த மென்னும் பெயரையுடைய நகரமே (தான்) நோக்கிச்செல்லுந் திசையாகச் செல்பவனானான்; (எ - று.)

பலராமன் கண்ணனுக்குத் தமையனாதலாலும் கண்ணன் அவன் கீழ் அடங்கியொழுகியதனாலும், துவாரகை 'பலராமனு டைய ஊர்' எனப்பட்டது. காமபாலன் என்ற வடமொழிப்பெயர் - காமத்தை [அடியார்களுடைய விருப்பத்தை]க் காப்பவனென்று பொருள்படும். (ராஜஸ்திரீகள்சிலர் தேர்செலுத்த வல்லராதலை, சம்பராசுரனோடு பொருகையில் தசரதசக்கரவர்த்திக்குக் கைகேயி தேர்செலுத்தினளென்ற வரலாற்றினாலும் அறிக). மன்மதன் திருமாலின்மகனாதலும், மன்மதாம்சமான பிரத்யும்நன் கண்ணன் மகனாதலும் பற்றி, கண்ணனுக்கு 'காமற்பயந்தோன்' என ஒரு பெயர் கூறினர்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பன்னிரண்டுகவிகள் - திரௌபதிமாலையிட்டசருக்கத்து 73-ஆம் கவிபோன்ற கலிநிலைத் துறைகள். (710)

### 80.—அச்செய்தியைக் கண்ணன் பலராமனுக்கு ஒருவாறு தெரிவித்தல்.

வென்றித்துவரைநகர்காவலர் தம்மைவென்று
மன்றற்குழலினிளையாளை வலிதினெய்திக்
குன்றச்சிறகரரிந்தோன்மகன் கொண்டுபோனன்
என்றப்பலற்குக்கடல்வண்ணனியம்பினனே.

(இ-ள்.) 'குன்றம் சிறகர் அரிந்தோன் மகன்-மலைகளின் சிறகுகளைத் துணித்திட்டவனான இந்திரனுடைய குமாரனாகிய அருச்சுனன், வென்றி துவரைநகர் காவலர் தம்மை வென்று-வெற்றியையுடைய துவாரகாபுரியைக் காவல்செய்தவர்களான வீரர்களை(ப் போரினால்) சயித்து, மன்றல் குழலின் இளையாளை-நறுமணமுள்ள கூந்தலையுடைய (நமது) தங்கையை, வலிதின் எய்தி கொண்டு போனன்-பலாத்காரமாகவந்துகொண்டுபோயினன்,' என்று—, அ பலற்கு-அந்தப்பலராமனுக்கு, கடல் வண்ணன் இயம்பினன்-கடல்போலுங் கருநிறமுடையனான கண்ணன் செய்திகூறினன்;(எ-று.)

பலன்என்ற பெயர்-பலமுடையவனென்று பொருள்படும். பலபத்ரன்,பலதேவன்,பலராமன் என்றபெயர்களும்இதுபற்றியனவே.

### 81.—உடனே பலராமன் சேனையுடன் அருச்சுனனைத் தொடர்ந்து போகுதல்.

சேலாம்பிறப்பிற்றிருமாலிது செப்புமுன்னே
காலாந்தகனும்வெருவுந்திறற் காளைதன்னை
நீலாம்பரனும்யதுவீர நிருபர்யாரும்
நாலாம்படையோடெதிர்சூழ்ந்தமர் நாடினரே.

(இ-ள்.) சேல் ஆம் பிறப்பின் திருமால் இது செப்பும் முன்னே-மத்ஸ்யாவதாரஞ்செய்தவனான கண்ணபிரான் இவ்வார்த்தையைச் சொல்லுமுன்னே [சொன்னவுடன் விரைவிலே], நீல அம்பரன் உம்-நீலவஸ்திரத்தை யுடையவனான பலராமனும், யது வீர நிருபர் யார்உம் - (மற்றும்) யதுகுலத்துவீரர்களான அரசர்களெல்லோரும், நால் ஆம் படையோடு - நால் வகைப்பட்ட சேனையுடனே, கால அந்தகன்உம் வெருவும் திறல் காளை தன்னை-பிரளயகாலத்து யமனும் அஞ்சும்படியான வலிமையையுடைய வீரனான அருச்சுனனை, எதிர் சூழ்ந்து அமர் நாடினர் - எதிர்த்துச் சூழ்ந்து போர் செய்யத் தொடங்கினர்கள்; (எ - று.)

யாதவவீரருடன் கூடிய பலராமன் அருச்சுனனுடன் பொரவேணுமென்று பெருஞ்சிற்றங்கொள்ள ஸ்ரீக்ருஷ்ணன்வார்த்தையாற் சாந்தநிலையை யடைந்தானென்று பாரதங்கள்கூறும். முன்னொருகாலத்திலே பிரமதேவன் கண்துயிலுகையில்,சோமகனென்னும் அசுரன் வேதங்களையெல்லாங் கவர்ந்துகொண்டு கடலினுள் மறைந்துசெல்ல, பிரமன்முதலிய தேவர்களின் வேண்டுகோளினல்

திருமால் ஒருபெருமீனாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ் வசுரனைத் தேடிப் பிடித்துக் கொன்று, அவன் கவர்ந்துசென்ற வேதங்களை மீட்டுக்கொணர்ந்து, பிரமனுக்குக் கொடுத்தனன் என்பது, மத்ஸ்யாவதாரகதை. தனது நிலையைக்குலைத்தாயினும் துஷ்ட நிக்கிரகசிஷ்டபரிபாலனஞ் செய்யும் திருவருட்சிறப்புடையா னென்பது, 'சேலாம்பிறப்பிற்றிருமால்' என்றதனால் விளங்கும்.

## 82.—அருச்சுனன் சுபத்திரைக்குத் தேறுதல்கூறி அனைவரையும்வெல்லுதல்.

அஞ்சேலமரினுமர்தம்மையு மாவிகொள்ளேன்
செஞ்சேலனையவிழியாயெனத் தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவ ளூரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திட வென்றுபோனான்.

(இ - ள்.) 'செம் சேல் அனைய விழியாய் - செம்மையான சேல் மீன்போன்ற கண்களை யுடையவளே! அஞ்சேல் - அஞ்சாதே: அமரில்-போரில், நுமர் தம்மைஉம் ஆவி கொள்ளேன்-நின்சுற்றத் தாரையும் உயிர்கவரேன்,' என தேற்றி -என்று (சுபத்திரைக்குத்) தேறுதல் கூறி, அந்த மஞ்சு அனைய தட தேர் அவள் ஊர - (விரைவினாலும் பரப்பினாலும்) மேகத்தையே போன்ற பெரிய அத் தேரை அச்சுபத்திரையே செலுத்த, வந்த வெம் சேனைமுற்றுஉம் புறம்தந்திட வென்று போனான்-(தொடர்ந்தெதிர்த்துப் போர்க்கு) வந்தபயங்கரமான அந்த யாதவசேனைமுழுதும் (தோற்று) முதுகு கொடுக்கும்படி (அதனைச்) சயித்துச் சென்றான், (அருச்சுனன்).

ஒருவரையுங் கொல்லாமலே அனைவரையும் அஞ்சியோடும்படி செய்து வெல்லும் அருந்திறமை, இங்கு விளங்கும். தனது கண வன் தனது பிறந்தகத்துச் சுற்றத்தார் என்ற இருதிறத்தாரில் எவர்க்கேனும் தீங்குநேர்ந்திடுமே யென்று இருதலைக்கொள்ளியி னிடைப்பட்ட எறும்புபோல அஞ்சிய தனதுகாதலியினது வருத் தத்தைத் தவிர்த்தற்கு, 'அஞ்சேல்'என அபயங் கூறினான். 'நுமர் தம்மையும் ஆவிகொள்ளேன்' என்ற எச்சவும்மையால்,எம்மையும் பாதுகாத்துக்கொள்வே னென்றதைப் புலப்படுத்தினான். (713)

## 83.—தருமன்முதலியோர் எதிர்கொள்ள அருச்சுனன் இந்திரப்பிரத்தஞ் சேர்தல்.

மடைபட்டவாளையகினாறு மருதவேலி
இடைபட்டதங்கள்வளநாடுசென் றெய்தியாங்குத்
தொடைபட்டதிண்டோளறன்காளை துணைவரோடு
நடைபட்டுருகியெதிர்கொள்ள நகரிபுக்கான்.

(இ - ள்.) மடை பட்ட வாளை-நீர்பாயும் மடையிற் பொருந்திய வாளைமீன்கள், அகில் நாறும் - அகிற்கட்டையின் நறுமணம் வீசப் பெற்ற, மருதம் வேலி இடை - கழனிகளாகிய மருதநிலத்துக்கு இடையிலே, பட்ட - பொருந்திய, தங்கள் வளம் நாடு - வளப்பம் மிக்க தங்கள்நாட்டை, (நெடுநாளைக்குப்பின்), சென்று எய்தி - போய்ச்சேர்ந்து, ஆங்கு - அவ்விடத்தில், தொடை பட்ட திண் தோள் அறன் காளை துணைவரோடு உருகி நடைபட்டு எதிர்

கொள்ள-பூமாலைபொருந்திய வலிய தோள்களையுடைய தருமபுத்திரன் தம்பியர்மூவருடனே (அன்பினால்) மனமுருகி நடந்து வந்து எதிர்கொள்ள, நகரி புக்கான்-இந்திரப்பிரத்தநகரை யடைந்தான்;

யாற்றுநீர் மலையினின்று அகிலை அடித்து வருதலால், அந்நீர் பாயும் மடையிலுள்ள வாளை அதன்மணம் நாறுமென்க. நியமங்கொண்டு பன்னிரண்டு வருஷகாலம் தீர்த்தயாத்திரை செய்தனனென முதனூல் கூறும். (714)

## 84.—கண்ணன், பலராமனுடன்சென்று அருச்சுனனைச் சமாதானப்படுத்தி அந்தமணமகனுக்கும் மணமகளுக்கும் மணச்சிறப்புக்கள் கொடுத்தல்.

முன்போர்விளைத்தமுசலப்படை மொய்ம்பினனும்
தன்போலுயர்ந்தோரிலனான தடங்கண்மாலும்
பின்போயினியமொழியாயிரம் பேசிமன்றற்கு
அன்போடுதவுமுபகார மனைத்துமீந்தார்.

(இ-ள்.) முன் போர் விளைத்த முசலம் படை மொய்ம்பினன் உம்-தலைமையாய் நின்று (அருச்சுனனுடன்)போர்செய்தஉலக்கைப்படையையுடைய பலராமனும், தன் போல் உயர்ந்தோர் இலன் ஆன தட கண் மால்உம் - தன்னைப்போலச் சிறந்தவரை வேறு பெறுதவனான விசாலமான கண்களையுடைய கண்ணபிரானும், பின் போய்-(அருச்சுனனுக்குப்) பின்னே சென்று, இனிய மொழி ஆயிரம் பேசி- மிகப்பலவான இன்சொற்களைச் சொல்லி,மன்றற்கு அன்போடு உதவும் உபகாரம் அனைத்துஉம் ஈந்தார் - விவாகத்துக்கு அன்போடு கொடுக்குந்தன்மையனவான காணிக்கைப் பொருள்களை யெல்லாம் (அவர்கட்குக்) கொடுத்தார்கள்; (எ - று.)

மொய்ம்பு-பலம்: அதனை யுடையவன், மொய்ம்பினன்; எனவே, 'பலன்' என்ற வடமொழிப்பெயரின் பரியாயநாமமாயிற்று: முசலத்தை ஆயுதமாகவுடைமையால், பலராமனுக்கு 'முசலீ' என்று ஒருபெயர் வழங்கும். உபகாரம்=உபஹாரம்: காணிக்கைப் பொருள்: வடசொல். உபசாரமென்றும் பாடம். (715)

## 85.—பலராமன் துவாரகைக்கு மீள, கண்ணன் அருச்சுனனுடன் இந்திரப்பிரத்தத்தில் வாழ்தல்.

ஞாலத்தெரிவைகளிகூர நடாத்துசெங்கோல்
தாலத்துவசன்றுவராபதி தன்னில்வைக
நீலக்கடல்களிரண்டாமென நெஞ்சொடொத்த
சீலத்தவனோடவண்வைகினன் செங்கண்மாலே.

(இ - ள்.) ஞாலம் தெரிவை - பூமிதேவி, களி கூர-களிப்புமிகும்படி, நடாத்து - நடத்துகிற, செம் கோல்-நீதிதவறுத அரசாட்சியையுடைய, தாலம் துவசன் - பனைமரத்தின் வடிவ மெழுதிய கொடியை யுடையவனான பலராமன், துவராபதிதன்னில் வைக - (மீண்டு சென்று) துவாரகாபுரியில் இருக்க,—செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரான், நெஞ்சொடு ஒத்த சீலத்தவனோடு-(தன்) மனத்தோடொத்த ஒழுக்கமுடையவனான அருச்சுனனோடு, நீலம் கடல்கள் இரண்டு ஆம் என-நீலநிறமுள்ள இரண்டுகடல்கள் போலுமென்று (தங்கட்கு உவமை) சொல்லு

மாறு, அவன் வைகினன் - அவ்விந்திரப்பிரத்தநகரத்திலே இருந்தான்; (எ - று.)—தாலத்துவசன் - வடமொழிப்பெயர். (716)

## 86.—சுபத்திரையினிடமாக அபிமந்யு பிறத்தல்.

பன்னாளிவரிப்பதிசேர்ந்தபின் பங்கசாத
மின்னாளுமார்பற்குயிர்போலும்விசயனென்பான்
நன்னாளினன்மைதருமோரையி னல்கவஞ்சி
அன்னாளிடத்திலபிமன்னு வவதரித்தான்.

(இ - ள்.) இவர் பல் நாள் இ பதி சேர்ந்த பின் - இந்தக்கிருஷ்ணார்ச்சுனர்கள் பலநாள் இவ்விந்திரப்பிரத்தத்திலேசேர்ந்துஇருந்தபின்பு,—பங்கசாதம் மின் ஆளும் மார்பற்கு உயிர் போலும்விசயன் என்பான் - தாமரைமலரில் வாழ்கிற மின்னல்போன்ற இலக்குமி இடமாகக்கொண்டுவிற்றிருக்கப்பெற்ற திருமார்பை யுடையவனை கண்ணனுக்கு உயிர்போன்றவனை அருச்சுனன், நல்க - கர்ப்பாதானஞ் செய்ய, நல் நாளில்-சுபதினத்திலே, நன்மை தரும் ஓரையில்-நன்மைவிளைக்குஞ்சுபமுகூர்த்தத்திலே, வஞ்சி அன்னாள் இடத்தில் அபிமன்னு அவதரித்தான்-வஞ்சிக்கொடி போன்றவளான சுபத்திரையினிடத்தில் அபிமந்யு என்னுங்குமாரன்தோன்றினன்.

பங்கஜாதம் - வடசொல்; சேற்றி லுண்டாவது. ஓரை - ஹோரா என்ற வடசொல்லின் விகாரம். அபிமந்யு என்ற வடமொழிப்பெயர்க்கு, பயமில்லாதவனும் கோபமுடையவனு மாயிருப்பவ னென்று முதனூலிற் காரணப்பொருள் கூறப்பட்டிருக்கிறது.

## 87.—உபபாண்டவ ருற்பத்தி.

வேதஞ்சிறக்கமநுநீதி விளங்கவிப்பார்
ஆதங்கமாறவருமைவரி னைவர்மைந்தர்
பூதங்களைந்துங்குணமைந்திற் பொலிந்தவாபோல்
ஓதங்கியிலுற்பவித்தாள்வயி னுற்பவித்தார்.

(இ - ள்.) வேதம் சிறக்க - வேதங்கள் சிறப்படையவும், மநு நீதி விளங்க-மநுதர்மசாஸ்திரத்திற்கூறிய நீதிகள்விளக்கமடையவும், இ பார் ஆதங்கம் ஆற - இந்தப்பூமியினது துன்பம் நீங்கவும், வரும் - பிறந்த, ஐவரின் - பஞ்சபாண்டவர்களினின்று, ஐவர் மைந்தர்-ஐந்துபுத்திரர்கள், பூதங்கள் ஐந்தும் குணம் ஐந்தின் பொலிந்த ஆ போல் - பஞ்சபூதங்களும் ஐந்துகுணங்களாற்சிறத்தல்போல, ஓது அங்கியில் உற்பவித்தாள்வயின் உற்பவித்தார் - சிறப்பித்துச்சொல்லப்படுகிற யாகாக்கினியினின்று பிறந்த திரௌபதியினிடமாகப் பிறந்தார்கள்; (எ-று.)

வைதிககிரியைகள் தவறாதுநடைபெறுதலால் வேதம் சிறப்புறும். தருமன் முதலிய பாண்டவரைவர்க்கும் முறையேபிரதிவிந்தியன், சுதசோமன், சுருதகர்மா, சதாநீகன், சுருதஸேநன்என்றஐவர் வருஷத்திற்கு ஒருவராய்ப் பிறந்தனரென்று முதனூலினா லறிக. இவர்கள், உபபாண்டவரென்றும், பஞ்ச திரௌபதேயரென்றுங் கூறப்படுவர். பிருதிவிக்கு மணமும், அப்புக்குச் சுவையும், தேயுவுக்கு ஒளியும், வாயுவுக்கு ஊறுவும், ஆகாயத்துக்கு ஒலியும் குண

மாம். 'பூதங்களைந்திற் குணமைந்தும் பொலிந்த வா போல்' என்றும் பாடம். வயின்-வயிறுமாம். மநுநீதி-வடமொழித்தொடர்; மநு - அவ்வரசனாற் செய்யப்பட்ட நூலுக்குக் கருத்தாவர்குபெயர்.

## 88.—அபிமந்யுவும் உபபாண்டவர்களும் படைக்கலந் தேர்தல்.

அம்மாதுலனும்பயந்தோரு மழகின்மிக்க
இம்மாமகாருக்கியற்றும்விதி யேய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலாய செயல்கள்யாவும்
கைம்மாறுகொண்டுநனிகைவரு மாறுகண்டார்.

(இ - ள்.) அழகின் மிக்க இ மா மகாருக்கு-அழகிற்சிறந்த இந்தப் பெருமையுடைய (அபிமந்யுமுதலிய)குமாரர்களுக்கு, இயற்றும் விதி ஏய்ந்த பின்னர் - செய்யவேண்டிய (ஜாதகருமம் நாமகரணம் அந்நப்பிராசநம் சௌளம் முதலிய) கடமைகள்(சாஸ்திரவிதிப்படி உரியகாலங்களிற்) செய்து முடிந்தபின்பு, அ மாதுலன் உம் பயந்தோர் உம்-அந்தமாமனான கண்ணனும்பெற்றதந்தையரான பாண்டவர்களும், தெவ் மாறு வின்மை முதல் ஆய செயல்கள் யாஉம் - பகைவர்கள் அழிதற்குக்காரணமான வில்வித்தைமுதலான ஆயுதத் தொழில்களெல்லாவற்றையும், கை மாறுகொண்டு நனி கைவரும் ஆறு கண்டார்-கற்பிப்பவரிடத்தினின்று (கற்பவரிடத்தே) மாறி நன்றாகப்பழகித் தேர்ச்சியடையும்படி செய்தார்கள்; (எ-று.)

மாதுலன் -வடசொல்; மாதாவினுடன் பிறந்தவன். கண்ணன் அபிமந்யுவுக்கு மாதுலனாவன். கை-இடம். கை மாறுகொண்டு - ஒருவர்க்கொருவர் போட்டி போட்டுக்கொண்டு என்றுமாம். இனி, கைம்மாறுகொண்டு - கையிலே பிரம்புகொண்டு என்றுபொருள் கொண்டால், மிக்க இளமைக்கு ஏற்ப விளையாட்டில் ஊக்கஞ்செல்லாதிருத்தல் வேண்டியும், மாமனும் தாதையருமாகிற நெருங்கிய உறவுரிமைகாரணமாகப் பராமுகஞ்செய்யா திருத்தல்வேண்டியும் அச்சுறுத்தற்குக் கையில் மாறுகொண்டு கற்பித்தன ரென்க.

## 89.—அவ்வறுவரில் அபிமந்யு சிறத்தல்.

அரிதிற்பயந்தவறுவோருளு மாண்மைதன்னால்
இருதுக்களின்மேலிளவேனிலின் றோற்றமேய்ப்ப
மருதுக்கிடைபோமதுசூதன் மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்ன விளங்கினனே.

(இ - ள்.) இருதுக்களின்மேல் இளவேனிலின் தோற்றம் ஏய்ப்ப - ஆறுவகை ருதுக்களுள் மேலான வசந்தருதுவினது தோற்றம்போல,—அரிதின் பயந்த அறுவோருள்உம் - அருமையாகப்பெற்ற அந்த ஆறுபுதல்வருள்ளும், மருதுக்கு இடை போம் மதுசூதன் மருகன்-(இரட்டை) மருதமரத்தினிடையே தவழ்ந்து சென்ற கண்ணனது மருமகனான அபிமந்யு, ஆண்மை தன்னால் - ஆண்மைத்திறத்தினால், வெம் போர் விருதுக்கு இவன் ஒருவன் என்ன விளங்கினன்-கொடியபோர் வெற்றிக்கு இவனே ஒப்பற்றவனென்னும்படி (சிறப்புற்று) விளங்கினன்; (எ - று.)

மதுஸூதனன் என்ற வடமொழிப்பெயர்-மது என்றஅசுரனைக் கொன்றவனென்று பொருள்படும். மருதுக் கிடை போன கதை:—

கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பலதிருவிளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த நந்தகோபர் மனைவியான யசோதை ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற் கட்டி ஓர் உரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வு ரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருத மரத்தின் நடுவிலே எழுந்தருளியபொழுது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்த வளவில், முன்பு நாரதர்சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னுங் குபேரபுத்திரரிரு வரும் சாபந்தீர்ந்து சென்றன ரென்பதாம். இந்தக் குபேரபுத்திரர் கள் முன்பு ஒருகாலத்திற் பலதெய்வமகளிருடனே ஆடையில்லா மல் ஒரு நீர்நிலையிலே ஜலக் கிரீடைசெய்து கொண்டிருக்கையில் நாரதமகாமுனிவர் அங்கு எழுந்தருள, அதுகண்டு மங்கையரனை வரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்துநீங்க, இந்த மைந்தர்மாத்திரம் மதுபானமயக்கத்தால் நிர்வாணமாகவே யிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போ லிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபித்து உடனே அவர்கள் வேண்டியதற்கு இரங்கி 'நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களையடையுஞ் சமயத்தில் இவ்வடிவம் ஒழிந்து முன்னையவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயின ரென அறிக. (720)

## 90.—ஒருகால் இளவேனிற்பருவத்தின் வரவு.

உரனா லழகா லுரையான்மற் றுவமை யில்லா
நரநா ரணர்க்கு நலங்கூர்தரு நண்பு போல்வான்
அரனார் விழியா லழிந்தங்க மநங்க மான
மரனா ருடனன் பிசைந்தன்று வசந்த காலம்.

(இ - ள்.) உரனால்-வலிமையினாலும், அழகால்-அழகினாலும், உரையால் - சொல்லினாலும், மற்று உவமை இல்லா - (தமக்குத் தாமேயன்றி) வேறுஉவமை பெறாத, நர நாரணர்க்கு - அருச்சுன னுக்கும் கிருஷ்ணனுக்கு முள்ள, நலம் கூர்தரு நண்பு - நன்மை மிக்க சிநேகத்தை, போல்வான்-ஒக்கும் பொருட்டு, வசந்தகாலம்- இளவேனிற்பருவமானது, அரனார் விழியால் அழிந்து அங்கம் அநங்கம் ஆன மரனாருடன் - சிவபிரானுடைய நெற்றிக்கண்ணால் வெந்து உடம்பு அருவமான மன்மதனுடனே, நண்பு—, இசைந் தன்று-கூடிவந்தது; (எ - று.)

மன்மதனது முயற்சியாலாகுந் தொழிலாகிற சிற்றின்பவிளை யாட்டுக்கள் வசந்தகாலத்தில் மிகுதலால், அவன், அக்காலத் துக்கு நண்ப னெனப்படுவன்; மன்மதனுக்கு 'வேனிலான்' என்று ஒரு பெயர் வழங்குதலும் காண்க. இங்ஙனம் காமோத்தீபகமான வசந்தகாலம் இயல்பாகக் காமனோடு கூடிவருதலை, கிருஷ்ணார்ச் சுனர்களுக்கு உள்ள சிநேகத்தை யொக்கும்பொருட்டுக் கூடிவந்த தென்றது, **தற்குறிப்பேற்றவணி.** மரன்-மாரன் என்பதன் குறுக்கல்.

அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம் முற்றிற்று.

---

## எட்டாவது

## காண்டவதகனச் சருக்கம்.

தேவேந்திரனுக்குஉரியதாய்ப் பூலோகத்திலுள்ள காண்டவ மென்னும் வனத்தைக் கிருஷ்ணார்ச்சுனர்களது அநுமதிப்படி அக்கினிதேவன் எரித்திட்ட செய்தியைக் கூறுகின்ற சருக்க மென்று பொருள்; காண்டவதஹநமென்ற வடமொழித்தொடர் - ஆறும் வேற்றுமைத்தொகை: தகனச்சருக்கமென்றதொடர்-இரண்டனுருபும் பயனும் தொக்கதொகை: ஒருசாரார் இந்தச்சருக்கத்தின்முதற் பத்தொன்பது பாடலை இளவேனிற்சருக்கம் என்று தனியேஒருசருக்கமாகக்கொண்டு, பின் ஐம்பதெட்டுப்பாடல்களைக் காண்டவதகனச் சருக்கம்என்றுகொள்கின்றனர்:பதினைன்காம்பாடல்முதல்முதுவேனிற் பருவம் கூறப்படுவதாலும், சருக்கத்தின்பெயர் கதைக்குச்சம்பந்தப்படவே இதுவரையில் வைத்திருத்தலாலும் அங்ஙன் கொள்ள வேண்டியதில்லை.

### 1.—சூரியன் தட்சிணாயனத்தைவிட்டு உத்தராயணத்தில் வருதல்.

நனியாட லனற்கடவுண் யமனிருதி நண்ணுதிசை நாள்க டோறும்
முனியாம னடந்திளைத்து முன்னையினும் பரிதாப முதிர்ந்த தென்று
தனியாழித் தனிநெடுந்தேர்த் தனிப்பச்சை நிறப்பரியைச் சயில ராசன்
பனியாலவ்விடாய்தணிப்பான் பனிப்பகைவன்பனிசெய்வோன்பக்கஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) பனி பகைவன்-பனிக்குப் பகைவனாகிய சூரியனானவன்,—நனி ஆடல்-மிக்ககொடுமையையுடைய, அனல் கடவுள் - அக்கினியும், யமன்-யமனும், நிருதி-நிருருதியும், (என்னும் இவர்கள்), நண்ணு-பொருந்திய, திசை-(தெற்குத்) திக்கில், நாள்கள் தோறுஉம்-தினந்தோறும்,முனியாமல்நடந்து-வெறுப்புக்கொள்ளாமல் நடந்ததனால், (தனதுதேர்க்குதிரை),முன்னையின்உம்இளைத்து பரிதாபம்முதிர்ந்தது-வெப்பம் அதிகப்பட்டு முன்பு இருந்தநிலையினின்று மாறிச்சோர்வடைந்து விட்டது, என்று-என்று எண்ணி, —தனி ஆழி தனி நெடு தேர் தனி பச்சை நிறம் பரியை-ஒற்றைச் சக்கரத்தையுடைய ஒப்பற்ற பெரிய(தனது)தேரிற்பூட்டியதனித்த பசுமைநிறத்தையுடைய அக்குதிரையை, சயிலராசன் பனியால் அவிடாய் தணிப்பான்-மலையரசனாகிய இமயமலையிலுள்ளபனியினால் அந்தத் தாபந்தணியச் செய்தற்பொருட்டு,பனி செய்வோன்பக்கம் சேர்ந்தான்-பனியைச்செய்பவனான அவ்விமயமலையிருக்கிறவடக்குப்பக்கத்தை யடைந்தான்; (எ - று.)

ஆடிமாசமுதல் மார்கழிமாசம் வரையில் ஆறுமாசம் தக்ஷிணாயனமும், தைமாசம்முதல்ஆனிமாசம்வரையில்ஆறுமாசம்உத்தராயணமுமாம். சூரியன் தென்புறமாகச்சஞ்சரிக்கும் காலம், தக்ஷிணாயனம். அவன் வடபுறமாகச்சஞ்சரிக்கும் காலம், உத்தராயணம். ஆயினும்,வடக்கினின்றுமீண்டு தென்புறமாகவும் தெற்கினின்று மீண்டு வடபுறமாகவும் வரும்போது தெற்குத்திசைப்பாகமாகவேனும் வடக்குத்திசைப்பாகமாகவேனும் ஒதுங்காமல் இடையில் நிற்குங்காலம் விஷுவமெனப்படும். சித்திரைமாதத்திற்கு உரிய

மேஷராசியிற் சூரியன் வருகையிலும், ஐப்பசிமாதத்துக்கு உரிய துலாராசியிற் சூரியன் வருகையிலும், விஷுவமென்கிற காலம் உண்டாகின்றது; அதுதான், ஏற்றத்தாழ்வில்லாத இராப்பகல்களையுடையது. இளவேனிற்பருவம் வரலாயிற்றென்று கிழ்ச்சருக்கத்தின் முடிவிற் கூறினவர், அந்தப்பருவத்தின் ஆரம்பமான சித்திரைமாதத்தொடக்கத்தை இங்குக்கூறுகிறாரென அறிக.

தைமாசமுதல் தெற்கினின்று ஒதுங்கிவந்த சூரியன் உத்தராயணத்தின் மத்தியபாகமாகிய சித்திரைமாசத் தொடக்கத்தில் நடுவில் வந்து அதுமுதல் வடபுறமாக ஒதுங்குகின்றனன்: இங்ஙனம் இயல்பாற் சூரியன் தென்திசையினின்று வடதிசையி லொதுங்குதற்குக் கவி தானாக ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறியதனால், இச்செய்யுள் - ஏதுத்தற்குறிப்பேற்றவணி; அக்கினி தென்கிழக்குத் திக்குப் பாலகனாகவும், பிராணிகளையெல்லாம் கண்ணோட்டமின்றிக் கொல்லுகிற யமன் தெற்குத் திக்குப்பாலகனாகவும், இராக்கதர்குலத்துக்கு ஆதிபுருஷனானதலாற் கொடியவனாகிற நிருருதி தென்மேற்குத் திக்குப்பாலகனாகவும் அமைந்துள்ளதனாற் கொடியதாகிற தென்திசையிற் பலநாள் நடந்ததனால் தனதுதேர்க்குதிரை மிக்க தாபமடைந்து இயல்பாகவுள்ளவலிமை குன்றிச் சோர்ந்துவிட்டது என்று எண்ணிச் சூரியன் இனி அக்குதிரையை இமயமலையிலுள்ள பனியைக்கொண்டு அத்தாபத்தைத் தணிக்கக்கருதி அம்மலையிருக்கிற வடபுறத்தைச்சேரலாயினனென்றார்.பகற் சஞ்சாரம் தக்ஷிணாயனத்தில் விரைவாகவும் உத்தராயணத்தில் மந்தமாகவும் இருத்தல், இயல்பு; அது, தக்ஷிணாயனத்தில் பகற்பொழுது குறைவாகவும் உத்தராயணத்தில் பகற்பொழுது மிகுதியாகவும் இருத்தலால் விளங்கும். இங்ஙனம் தக்ஷிணாயனத்திலுள்ள வேகம் பின்பு குறைதல், கொடியவர்கள் பொருந்திய கொடிய தென்திசையிற் பலநாள் வெறுப்பின்றி நடந்ததனால் தனதுகுதிரை தாபமுதிர்ந்து முன்னையினும் இளைத்ததென்று சூரியன் கருதியதற்குக் காரணமென்னலாம்.

ஆடல் - அடலென்பதன் நீட்டல்விகாரம். அனற்கடவுள்-அக்கினிதேவன். சூரியனது தேர் ஸம்வற்சரரூபமான ஒற்றைச்சக்கரத்தையுடையதென்று புராணம் கூறும்.சூரியனது தேர்க்குதிரைகள் ஏழு என்பர், ஒருசாரார்; மற்றொருசாரார், ஏழு [ஸப்த] என்று பெயர்பெற்ற குதிரை ஒன்றேயென்பர்; இக்கொள்கையே இங்குக் கொள்ளப்பட்டது.பரிதாபம்-பெருவெப்பம்: வடசொல்,"பரிதாபம் ரதவாஜிநாம்ஹிஜாநாம் ஹிமவத்பவநைரிவாபநேதும் - திநநாதோ திஸமுத்தராம் ப்ரதஸ்தே" என்றது பாலபாரதம்.

இதுமுதற்பத்தொன்பதுகவிகள், பெரும்பாலும் முதல்நான்குசீரும் காய்ச்சீர்களும்,மற்றைஇரண்டும் மாச்சீர்களுமாகிய அறுசீராசிரியவிருத்தங்கள். (722)

## 2.—வசந்தகால வருணனை.

கலிக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திடும்பசுந்தன் காவுதோறும்
சிலைக்கனிநான்முறுக்குவபோற்றென்றலின்பின் சுழலளிகள்சேரவோட

உலைக்கனலிற்கருங்கொல்லன்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கிமாரன்
கொலைக்கணைகள்சமைப்பனபோற்குயிலலகாற்பல்லவங்கள் கோதுமாலோ.

(இ - ள்.) கலக்கம்உற - கலக்கம் மிகுதியாக உண்டாக, இள வேனில் கலகம் எழுந்திடும் - வசந்தகாலத்துக்குஉரிய போர் முளைதற்கு இடமான, பசும் தண் காவு தோறும்-பசுமையானகுளிர்ந்த சோலைகளிலெல்லாம்,—சிலைக்கு அணி நாண் முறுக்குவ போல் - (மன்மதனுடைய) வில்லுக்கு அழகிய நாணியை முறுக்குதல் போல, சுழல் அளிகள் தென்றலின் பின் சேர ஓட-சுழலுந்தன்மையனவான வண்டுகள் தென்றற்காற்றின்பின்னே ஒரு சேர ஓட,—கருகொல்லன் - கருநிறமுடைய கொல்லனானவன், உலை கனலில் - உலைக்களத்துள்ள நெருப்பில், தகடு புரிந்து - தகடுகளைச் செய்து, (அவற்றை), சிறு குறட்டால் ஒதுக்கி-சிறிய குறடு என்னுங்கருவியினால் ஒதுக்கி, மாரன் கொலை கணைகள் சமைப்பன போல - மன்மதனுக்குஉரிய கொலைத்தொழிலைச்செய்யும் அம்புகளைச் செய்தல்போல, குயில் - குயில்கள், அலகால் - (தம்) வாயலகினால், பல்லவங்கள் - தளிர்களை, கோதும்—; (எ - று.)

இங்ஙனங் காமனோடு நண்புகொண்ட வசந்தகாலத்துக்கு உரிய போராவது - அக்காலத்தில் மன்மதன் ஸ்திரீபுருஷர்களைச் சிற்றின்பவசப்படுமாறு தூண்டுதல். அதற்கு இடமான சோலை யென்றது - மைந்தரும் மகளிருங் காதல்கொண்டு கூடிவிளையாடுதற்கு ஏற்ற ரமணீயமான சோலை யென்றவாறாம். அச்சோலைகளில் வசந்தகாலத்திலே நறுமணமளாவி உலாவுகிற தென்றலின் பின்னே அதனை நுகர்தற்குச் சுழலுமியல்போடுசெல்லுகிற கருநிறமான வண்டுகளின் ஒழுங்கை, மன்மதனதுவில்லின் நாணியாதற்கு முறுக்கியகயிறு போன்றதென்றார். மன்மதனது கரும்பு வில்லுக்கு வண்டொழுங்கு நாணி யெனப்படுதலை "ஆலைக் கரும்பு சிலை ஐங்கணை பூ நாண் சுரும்பு" என்ற இரத்தினச்சுருக்கத்தாலும் அறிக. 'கலக்கம் உற' என்றது - ஸ்திரீபுருஷர்களுடைய மனத்திட்டம் நிலைகுலைய என்றபடி. பின்னிரண்டடியில் கருநிறமுடைய குயிலுக்கு - கருங்கொல்லனும், அதன் அலகுக்கு - சிறு குறடும், தளிராற்செம்மைபெற்ற மரச்செறிவுக்கு-உலைக்கனலும், விரிந்த தளிர்க்கு-பரந்த தகடும், அலகினால் அதனைச் சுருட்டிக் கோதுதற்கு-குறட்டினால் தகட்டை ஒதுக்கி அம்புவடிவாக அமைத்தலும் ஒப்பு ஆம்: தற்குறிப்பேற்றவணி. இங்ஙனம் கவி தன் மனோபாவத்தால் அமைத்துக்கூறுவதை உவமையணி யென்னலாகாது. வண்டினொழுங்கும், குயிலும் தளிரும் தம்மைக் காண்பவர்க்கு வேட்கை விளக்குங் காமோத்தீபகப்பொருள்களாதலால், இங்ஙனங் கூறப்பட்டன. (723)

### 3.—மன்மத னுலாவல்.

செங்காவிசெங்கமலஞ்சேதாம்ப றடந்தொறுமுத் தீக்களாகப்
பைங்காவினெடுஞ்சினைக்கைமலர்நறுநதே னுகுதிகள்பலவும்விழ்த்த
உங்காரமதுரங்களோங்காரச் சுருதியெடுத்தோதவேள்வி
வெங்காமனிரதியுடன்புரிந்துதன தென்றலந்தேர்மேற்கொண்டானே.

(இ-ள்.) செங் காவி-செங்கழுநீர்மலரும், செங் கமலம்-செந்தாமரைமலரும், சேது ஆம்பல்- செவ்வாம்பல்மலரும், (ஆகிய இவை மூன்றும்),—தடம் தொறுஉம்- நீர்நிலைகளாகிய குண்டங்தோறும், முத்தீக்கள் ஆக - காருகபத்தியம் ஆகவனியம் தட்சிணுக்கினி என்றமூன்றுஅக்கினிகளாவும், பைங் காவின்-பசுமையானசோலையின், நெடுஞ் சினை-நீண்டகிளைகளாகிய, கை-கையின், மலர்-மலர்களினின்று, நறுந் தேன் - நறுமுணமுள்ளதேனுகிய, ஆகுதிகள் பல உம் - ஓமங்கள்பலவற்றையும், விழ்த்த- வீழுமாறுசெய்யவும், உங்காரம் மதுகரங்கள் - உங்காரத்தைச் செய்கின்ற வண்டுகள், ஓங்காரம் சுருதி எடுத்துஓத - ஓங்காரமாகிய சுருதியை எடுத்துச் சொல்லவும், வேள்வி - யாகத்தை, வெங் காமன் - விருப்பத்தை யுண்டாக்கவல்ல மன்மதன், இரதியுடன்-இரதிதேவியுடனிருந்து, புரிந்து - செய்துவிட்டு, தன தென்றல் அம்தேர் மேற்கொண்டான் - தனது தென்றலாகிய அழகிய தேர்மேலேறிக்கொண்டான்; (எ - று.)

முத்தீவளர்த்து ஆகுதிசெய்து வேள்வியை முடித்தபின்பு யாகஞ்செய்தவன் தன்பத்தினியோடு தேர்மீது ஏறி யாகசாலையினின்று இருப்பிடத்துக்குச் செல்லுவதுபோல, மன்மதன் ரதிதேவி யுடனே பட்டணப்பிரவேசஞ் செய்யப்புறப்பட்டா னென்பதாம். காவி முதலியவற்றை முத்தீமுதலியனவாக உருவகஞ் செய்ததனால் மன்மதனையும் இரதிதேவியையும் யஜமானனும் யாகபத்தினியுமாக உருவகஞ் செய்யவேண்டிற்று: இது அவயவஉருவகம். தடம் - நீர்நிலையாகிய குண்டமெனச் சிலேடையுருவகம். சினையைக் கையென்றதற்கு ஏற்ப, மலரைக் கைத்தலமாகவும் தேனை நெய்யாகவும் கொள்க. (724)

### 4.—கிருஷ்ணர்ச்சுனர் வேனில்விழாவயரத் தேவியரோடுஞ் சோலைசேர்தல்.

தேவியருந்திருமாலுஞ்செழுமலர்த்தார் தனஞ்சயனுந்தேவிமாரும்
மேவியனந்தரம்வேனில்விழவயர்வான் முரசறைந்துவீதிதோறும்
ஓவியமுமுயிர்ப்பெய்தவுபேந்திரனு மிந்திரனுமுவமைசாலப்
பூவினமுஞ்சுரும்புமெனப்புரமுழுதும் புறப்படவண்பொங்கர்சேர்ந்தார்.

(இ - ள்.) திருமால்உம்-ஸ்ரீக்ருஷ்ணனும், தேவியர்உம்-(அவனுடைய) தேவிமாரும், செழு மலர் தனஞ்சயன்உம்-செழிப்புள்ள மலர்கொண்டு தொடுக்கப்பட்ட மாலையையணிந்த அருச்சுனனும், தேவிமார்உம்-(அவனுடைய) தேவிமாரும், மேவி - மனமொன்றி, அனந்தரம்-பிறகு, வேனில் விழவு அயர்வான் - வசந்தோற்சவம் கொண்டாடும்படி (கருதி), முரசு அறைந்து - பேரிகையறைந்து (நகரிற்செய்திதெரிவித்து), வீதிதோறுஉம்—, ஓவியம்உம்உயிர்ப்பு எய்த-சித்திரப்பதுமைகளும் பெருமூச்சுவிடும்படி,— உபேந்திரன் உம் இந்திரன்உம் உவமை சால - உபேந்திரனும் இந்திரனுமே உவமையாகப்பொருந்த, பூஇனம்உம் சுரும்புஉம் என புரம்முழுது உம் புறப்பட - பூவின் தொகுதியும் வண்டுமேயென்னுமாறு நகரத்தவரனைவரும் புறப்பட, வண் பொங்கர் சேர்ந்தார் - வளப்பமுள்ள சோலையை யடைந்தார்கள்; (எ - று.)

க்ருஷ்ணார்ச்சுனர்கட்கு உபேந்திரனும் இந்திரனும் உவமை யாவர். பூவினம் உள்ள இடத்தைநாடிச் சுரும்புகள்தொடர்வது போல க்ருஷ்ணார்ச்சுனர் தேவிமாருடன் இருக்குமிடத்தை நாடிப் புரமுழுதும் புறப்பட்டதென்க. அவர்களின் அழகைக்கண்டு இவ் வாறு நமக்கு அழகு வாய்க்கவில்லையே யென்று கருதிச் சித்திரம் பெருமூச்சு விடுவதாயிற் றென்க: இனி, ஜநங்களின் உற்சாக மிகு தியை விளக்குவார் 'ஓவியமுமுயிர்ப்பெய்த' என்றுரென்பாரு முண்டு. சோலை யமுனைக்கரையிலுள்ள தென்பது, பிறநூலாற் புலப்படும். (725)

## 5.—இளவேனிலில் மயில்களித்தல்.

**கொண்டலெழமின்னுடங்கக்கொடுஞ்சாபம் வளைவுறச்செங்கோபந்தோன்ற**
**வண்டளவுநறுங்குமிழும்வண்டணிகாந் தளுமலரமலைகடோறும்**
**தண்டரளவருவிவிழத்தையலார் வடிவுதொறுஞ்சாயற்றோகை**
**கண்டுநமக்கிளவேனில்கார்கால மானதெனக்களிக்குமாலோ.**

(இ-ள்.) சாயல் தோகை - மகளிரின் சாயலையுடைய மயில்கள், —கொண்டல் எழ-மேகங்களெழுவதையும், மின் நுடங்க-மின்னல் சலித்துத் தோன்றுவதையும், கொடுஞ் சாபம் வளைவுஉற-கொடிய வில் வளைவுபொருந்தி நிற்பதையும், செங் கோபம் தோன்ற - செந் நிறமுள்ள இந்திரகோபப்பூச்சிகள் தோன்றுவதையும்,வண் தளவு உம் நறுங்குமிழ்உம் வண்டு அணி காந்தள்உம் மலர-வளப்பம் பொருந்திய முல்லையும் நறுமணமுள்ள குமிழமலரும் வண்டுகளா லலங்கரிக்கப்பெற்ற காந்தள்மலரும் மலர்வதையும், மலைகள் தோறும் - மலைகளிலெல்லாம், தண் தரளம் அருவி விழ-குளிர்ந்த முக்தா ஹாரம் அருவி போலவிழுவதையும்,தையலார்வடிவுதொறு உம் கண்டு-மடவாரின் வடிவுகளிலெல்லாங்கண்டு, நமக்கு—, இள வேனில்-இளவேனிற் காலமானது, கார்காலம் ஆனது-கார்காலமா யிற்று, என—,களிக்கும்—; (எ-று.)—ஆல்-வியப்பைக்குறிக்கும்.

மடவாரின் கூந்தல் தோற்றம் கொண்டலெழுதலையும், இடை நுடக்கம் மின்நுடங்குதலையும், புருவவளைவு சாபம்வளைவுறுதலை யும், இதழின்தோற்றம் செங்கோபந்தோன்றுதலையும், பற்கள் மூக்கு கைகள் என்ற இவற்றின் மலர்ச்சி தளவு குமிழ் காந்தள் என்ற இவற்றின் மலர்தலையும், தனங்களில் முத்தமாலை தொங்கு வது மலைகடோறும் அருவிவிழுதலையும் போலுதலால்,அவற்றைச் சோலையிற் கண்ட மயில்கள், இளவேனிலே நமக்குக் கார்காலத் தோற்றமானதெனக் கருதிக் களிக்குமென்றார்: இது மயக்கவணி. கொண்டலெழுதல் முதலியன, கார்காலத்துக்குஉரியன.கோபம்= இந்திரகோபம்: முதற்குறை. (726)

## 6.—மகளிர் பூக்கொய்தல்.

**பாராமனகையாமற்பாடாம லாடாமற்பாதஞ்செங்கை**
**சேராமன் முகராகம்வழங்காம லிகழாமற்செவ்வாயூறல்**
**நேராமனிழலதனைநிகழ்த்தாமன் மலர்ந்தழகுநிறைந்தநீழல்**
**ஆராமந்தொறுந்தங்களவயவம்போல் வனகொய்தாரணங்குபோல்வார்.**

(இ - ள்.) அணங்கு போல்வார் - தெய்வமகளிர் போன்ற மாதர்கள்,—பாராமல் -(தாங்கள்) பாராமலும், நகையாமல் - சிரியாமலும், பாடாமல்-இசைபாடாமலும், ஆடாமல் - நர்த்தனம் ஆடாமலும், பாதம் செம் கை சேராமல் - காலையும் சிவந்தகையையும் சேராமலும், முக ராகம் வழங்காமல் - நட்புச்செய்யாமலும், இகழாமல்-இகழாமலும், செம் வாய் ஊறல் நேராமல்-சிவந்தவாயினால் எச்சிற்படச் சுவையாமலும், நிழலதனை நிகழ்த்தாமல்-நிழலைச் செய்யாமலுமிருக்கையிலேயே, மலர்ந்து—, அழகு நிறைந்த நீழல் ஆராமம் தொறும் தங்கள் அவயவம் போல்வன-அழகுநிறைந்த நிழலையுடைய சோலைகளிலெல்லாம் தங்களுடைய உறுப்புக்கள் போல உள்ளனவான மலர் அரும்பு தளிர் முதலியவற்றை, கொய்தார் - பறித்தார்கள்; (எ - று.)

உத்தமவிலக்கணமுடைய மகளிர் பார்க்க மாமரமும், அவர்கள் நகைக்க முல்லையும், பாடக் குருக்கத்தியும், ஆடப் புன்னையும்,உதைக்க அசோகமும், அணைக்கக் குராவும், நட்புற ஏழிலைம்பாலையும், நிந்திக்கப் பாதிரியும், சுவைக்க மகிழும், நிழல்படச் சண்பகமும் தளிர்த்துஅரும்பிப் பூப்பன வென்றல், கவிஞர்மரபு. இவை மகளிரால்மலர்மர மெனப்படும். "எடவிழ்மகிழ் சுவைக்க வெழிற்பாலை நண்புகூடப், பாடல நிந்திக்கத் தேம்படிமுல்லை நகைக்கப் புன்னை, ஆடநீள்குரா வணைக்க வசோகுஉதைத்திட வாசந்தி, பாடமாப் பார்க்க வார்சண்பக நிழற்படத் தளிர்க்கும்" என்ற சூடாமணிநிகண்டையுங் காண்க. இங்கு அம்மரங்கள் மகளிர்பார்த்தல் முதலியன செய்யாமலிருக்கையிலேயே இயல்பாய்த் தளிர்த்து அரும்பிப்பூத்துச்செழித்தன, இளவேனிலாதலி னென்க. பாதம்சேராமல் செங்கைசேராமல் எனத்தனித்தனி யியைத்து, உதையாமலும் அணையாமலும்எனப் பொருள்கொள்க. முக ராகம் வழங்குதல் - முகமலர்ச்சிகாட்டி அன்புபாராட்டுதல்: எனவே, நண்பு செய்தலாயிற்று: ராகம்-ஆசை. தளிர் அரும்பு பூ என்பவை நிறமும் மேன்மையும் அழகும் பற்றி, மகளிர் உறுப்புக்கு உவமையாம். அவ்வுபமான உபமேயத் தன்மையைமாற்றி 'தங்கள் அவயவம்போல்வன' என்றது-எதிர்நிலையணி. 'தங்கள் அவயவம் போல்வன கொய்தார்' என்றதொடரின் போக்கினால், ஒப்பற்ற தங்கள் அவயவங்கட்குப் போலியாதல் பற்றிப் பகைத்து அவற்றைப் பறிப்பாராயின ரென்ற பொருள் தொனிக்கும். (727)

7.—சோலை நீர்நிலைஎன்ற இவற்றின் வருணனை.

மாற்றுதபனிநீரான்மான்மதகுங் குமமலயவாசச்சந்தின்
சேற்றாலச்சோலையெலாஞ்செங்கழுநீர்த் தடம்போன்றசிந்தைத்தாபம்
ஆற்றுதகாதலருக்கமுதான விளநீராலடர்ந்தபூகத்
தாற்றாலம்மரகதச்செந்துகிராலப் பொழில்போன்றதடங்களெல்லாம்.

(இ - ள்.) அ சோலைஎலாம் - அவர்கள்சென்ற அந்தச்சோலை முழுதும், மாற்றுத பனிநீரால்-மாறுபடுத்தாத [சுத்தமான] பனிநீராலும், மான்மதம் குங்குமம் மலயம் வாசம் சந்தின் சேற்றால் - கஸ்தூரி குங்குமம் மலயமலையில் தோன்றிய நறுமணமுள்ள சந்தனம் என்ற இவற்றின் சேற்றினாலும், செங்கழுநீர் தடம்

போன்ற - செங்கழுநீர்தோன்றப்பெற்ற நீர்நிலையை யொத்தன: தடங்கள் எல்லாம்- நீர்நிலைகளெல்லாம்,—சிந்தை தாபம் ஆற்ருத காதலருக்கு - மனத்திற்கொண்ட தாபத்தைத் தாங்கமாட்டாத காதலைக்கொண்ட ஆடவருக்கு, அமுது ஆன - அமுதம்போலினிமையான, இளநீரால் - இளநீரினுலும், அடர்ந்த பூகம் தாற்ருல் - நெருங்கிய கமுகங்குலையினுலும், அம் மரகதம் செந்துகிரால்-அழகிய மரகதத்திற்கலந்திருக்கிற செம்பவழத்தாலும், அ பொழில் போன்ற-அந்தச் சோலையையொத்தன; (எ - று.)

சோலை தடத்தையும், தடம் சோலையையும் போலுமென்று, ஒன்றன் தன்மையை மற்ருென்று மாற்றிக்கொண்டாற்போலக் கூறிய நயம் பாராட்டுதற்குஉரியது. தடத்திற்கு நீரும் சேறும் உரியன. சோலையில் ஆடவரும் மடவாரும் ஒருவர்மீது ஒருவர் தூவிய பனிநீரும், மான்மதச்சேறுமுதலியனவும் கீழேசிந்துதலால் சோலை நீரையும் சேற்றையுமுடையதாயிற்றென்க. பொழிலுக்கு உரியவை, இளநீர்முதலியன. மடவார்தடங்களிற் குடைந்து புனலாடுகையில், அவர்களுடைய கொங்கைகள் முதலியவற்றைத்தடமெல்லாம் பெறுதலால், அவை பொழில்போன்ற என்ருர். தனங்கள் இளநீரையும், கூந்தல் பூகத்தாற்றையும், மரகதமேனியினுள்ள செவ்வாயிதழ் மரகதச்செந்துகிரையும் போலுமென்க: சோலைக்கு மரகதச் செந்துகிர், பசுமையிற் செந்நிறமும்படவெடிக்கும் இளந்தளிரென்க: பொழிலைச்சேருமிடத்தும் மரகதச்செந்துகிரென்றது - ஆகுபெயரேயாம். (728)

8.—இதுமுதல் ஐந்துகவிகள் - அருச்சுனனும் அவனது தேவியரும் நீர்விளையாடுதலைக் கூறும்.

**மெய்கொண்டமொழிவிசயன்மெய்யினெழி லிமையாமன்மேன்மேனேக்கும்**
**மைகொண்டகுழலொருத்திமற்றவன்செங் கையிற்சிவிறிமழைகண்டஞ்சிப்**
**பொய்கொண்டுவகுத்தனையமருங்கசையத் தனபாரம்புளகமேறக்**
**கைகொண்டுமுகம்புதைத்துத்தன்விரற்சா ளரங்களிலேகண்கள்வைத்தாள்.**

(இ - ள்.) மெய் கொண்ட மொழி - உண்மையைக் கொண்ட பேச்சையுடைய, விசயன் - அருச்சுனனது, மெய்யின் -உடம்பின், எழில் - அழகை, இமையாமல் - கண் கொட்டாமல், மேல்மேல் நோக்கும் - பின்னும்பின்னும் பார்க்கின்ற, மை கொண்ட குழல் ஒருத்தி-கருநிறத்தைக்கொண்ட கூந்தலையுடைய ஒருத்தி,அவன் செங் கையில் சிவிறி மழை கண்டு அஞ்சி - அந்த அருச்சுனனுடைய செங்கையிலுள்ள (நீரை விசிறவீசுங்கருவியான) துருத்தியினின்று வெளிப்படும் நீர்த்தாரையைக் கண்டுபயந்து, பொய் கொண்டு வகுத்து அனைய மருங்கு அசைய - பொய்யைக்கொண்டு வகுத்தாற்போன்ற [இல்லையென்றுசொல்லும் நிலையையடைந்துள்ள] இடை நுடங்காநிற்கவும், தனபாரம் புளகம் ஏற-கொங்கையாகிய சுமையிலே மயிர்ச்சிலிர்ப்புமிகவும், கைகொண்டு முகம் புதைத்து - (தன்) கையினுல் (தன்) முகத்தைமூடிக்கொண்டு, தன் விரல் சாளரங்களில்-(அங்ஙன்மூடிய) கையின் விரல்களினிடைவழியாக, கண்கள் வைத்தாள்-(தன்) கண்பார்வையை வெளியேசெலுத்தினுள்; (எ - று.)

அருச்சுனன் சிவிறியால் நீரைத்தூவ அது தன்முகத்தில் நேரே விழும்போது அவனைக் காணவொட்டாமற் செய்வதால், ஒருத்தி அந்நீர்வீழ்ச்சிக்கு அஞ்சித் தன்முகத்தைத் தன்கையால் மூடியவண்ணம் விரற்சந்தினால் அவ்வருச்சுனனழகைப் பார்க்க லாயினளென்பதாம். மருங்கசைதலும் தனபாரம் புளகமேறுத லும் நீர்வீழ்ச்சியினா லாயினவை. (729)

9. நங்கையங்கோர்கொடியனையாள்வதனமதி சலமதியாய்நடுங்குமாறு
பங்குனன்றன்றிருச்செங்கைப்பங்கயத்தின் சிவிறியினாற்பரிவுகூரக்
குங்குமங்கொள்புனல்விடவுமிமையாமற் புனல்வழியேகூர்ந்தபார்வை
செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடி விளையாடுஞ்சேல்கள்போலும்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில் [அப்பொழுது], கொடி அனையாள் - பூங்கொடிபோன்றவளான, ஓர் நங்கை-ஒரு சிறந்தமக ளினது, வதனம் மதி - முகமாகிய சந்திரன், சலம் மதி ஆய் - நீரி னுள்ளே தோன்றுஞ் சந்திரபிம்பத்தைப் போன்று, நடுங்கும் ஆறு-மிக அசையும்படி, பங்குனன்-அருச்சுனன், தன் திரு செம் கை பங்கயத்தின் சிவிறியினால் - தனது அழகிய சிவந்த தாமரை மலர்போன்ற கையிலுள்ள நீர்த்துருத்தியைக்கொண்டு,பரிவுகூர- (அவட்கு) வருத்தம்மிகும்படி, குங்குமம் கொள் புனல் விடவும் - குங்குமத்தைக் கரைத்த நீரை விசையோடு மேல்வீசவும், இமை யாமல் - இமைகொட்டாமல், புனல் வழிஎ கூர்ந்த-நீரினிடையே நுண்ணிதாய்ப்பார்த்த, பார்வை - (அவளுடைய) கண்கள், செம் கலங்கல் புது புனலுக்கு எதிர் ஓடி விளையாடும் சேல்கள் போலும்- சிவந்த கலக்கமுள்ள புதிய நீர்வெள்ளத்துக்கு எதிரே ஓடிவந்து விளையாடுகிற சேல் மீன்களை ஒக்கும்; (எ - று.)

அருச்சுனன் ஓர் மெல்லியலாளின் முகத்தின்மேல் துருத்தி கொண்டு விசையாகக் குங்குமங் கலந்த நீரைத் தூவினான்;அதைப் பொறுக்கமாட்டாமல் அவள் முகத்தை மிகுதியாக அசைக்கலா னாள்; அச்சமயத்தில், சந்திர மண்டலம் போன்ற அவளுடைய முகமண்டலம் நீரினுள்ளே நடுங்கியது, நீரினுள்ளே காணப்படு கிற சந்திரமண்டலத்தினது பிரதிபிம்பம் அந்நீரின் அசைவினால் அசைந்துதோன்றுவதைப் போன்றது; இங்ஙனம் தனக்கு வருத் தம் மிகுமாறு அருச்சுனன் மேல்மேல் நீர்வீசிக்கொண்டிருக்கவும் அவள் அவன் பக்கலுள்ள ஆசையாற்கண்கொட்டாமல் அவனைப் பார்த்தபடியே யிருந்தாள்; அவ்வாறு நீரிற்கு எதிராக நுட்பமாய்ப் பார்வையைச் செலுத்துகிற அவளுடையகண்கள், செங்கலங்கற் புதுவெள்ளத்திற்கு எதிரோடி விளையாடுஞ் சேல்மீன்கள் போன்றன என்பதாம்; தற்குறிப்பேற்றவணி. பரிவு கூர என்பதற்கு - ஆசைமிக என்று பொருள்கொள்ளினும் அமையும்; அருச்சுனன் தனக்கு அவளிடம் ஆசைமிகுதலால் அவள்மேற் புனல்வீசின னென்றும், தனது காதலனான அவன் கைச்சிவிறிகொண்டுவீசிய நீர் தன் உடலிற்பட்டபோது அவள் அவன்கையால் தீண்டினாற் போல இன்பம்மிக்கனளென்றும் கொள்க. (730)

**10.** **நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்கு நண்பானநரனார்செங்கை**
**உறையுமலர்ச்செந்திருவுமொவ்வாத பொற்புடையாளொருபொற்பாவை**
**நெறிதருபைங்குழலின்மிசை வீசியநீர் பெருக்காற்றிலிறைநீர்வற்றி**
**அறல்படுநுண்கருமணலினரித்தொழுகுஞ் சின்னீரோடமைந்ததம்மா.**

(இ-ள்.) நறை கமழ் - வாசனை வீசுகிற, தண் - குளிர்ச்சியான, துழாய் மாலை - திருத்துழாய்மாலையையுடைய, நாரணற்கு - நாராயணனது திருவவதாரமான கண்ணபிரானுக்கு, நண்பு ஆன - சிநேகிதனான, நரனார் - அருச்சுனன், செம் கை - (தனது) சிவந்த கையினால், மலர் உறையும் செம் திருஉம் ஒவ்வாத பொற்பு உடையாள் - செந்தாமரைமலரில் வாழ்கிற செந்நிறமுள்ள இலக்குமியும் ஒப்பாகாத அழகை யுடையவளாகிய, ஒரு பொன்பாவை-பொன் மயமான பிரதிமையைப் போன்ற ஒரு பெண்ணினது, நெறி தரு பைங்குழலின்மிசை - நெறித்த கருநிறமான கூந்தலின்மேல், வீசிய—, நீர் - நீரானது—பெருக்கு ஆற்றில் நிறை நீர் வற்றி - வெள்ளப்பெருக்கை யுடைய நதியில் நிறைந்த நீர் குறைந்துபோக, அறல் படு நுண் கருமணலின் அரித்து ஒழுகும் - அறுப்புப் பொருந்திய நுண்ணிய கருமணலில் அரித்துப் பாய்கிற, சில் நீரோடு-சொற்பமான நீரோடு, அமைந்தது-ஒத்தது; (எ - று.)

**தற்குறிப்பேற்றவணி.** நெறித்தகருநிறமான கூந்தல் அறல்பட்ட நுண்ணிய கருமணலையும், அக்கூந்தலின்மேல் வீசிய நீர் அக்கரு மணலில் அரித்தொழுகுஞ் சொற்பநீரையும் போலு மெனக் காண்க. பசுமை, கருமை, நீலம் என்ற நிறங்களில் ஒன்றற்கொன் றுள்ள சிறிதுவேறுபாட்டை முக்கியமாகக்கொள்ளாமல் அவற்றை அபேதமாகக்கூறுவது கவிமரபு ஆதலால், கருங்குழல் 'பைங் குழல்' எனப்பட்டது. அம்மா - ஈற்றசை.

முன்னொருகாலத்தில் குருசிஷ்யகிரமத்தை உலகத்தில் அனை வருக்கும் விளக்கும்பொருட்டு நாராயணனென்னுங் குருவும் நர னென்னுஞ் சிஷ்யனுமாகப் பதரிகாச்சிரமத்தில் தோன்றிச் சீட னுக்குக் குரு தத்துவப்பொருள்களை உபதேசிக்கின்றதன்மையாய் வீற்றிருக்கிற திருமாலின் இருமூர்த்திகள்தாமே இங்கு முறையே கண்ணனும் அருச்சுனனுமாக அவதரித்ததனால் 'நாரணற்கு நண்பான நரனார்' என்றார். 'நரனுநாரணனுமானோம்' என முதற் போர்ச்சருக்கத்தும் கூறுவர். (731)

**11.** **விளிந்துமயில்புறங்கொடுக்குமெல்லியலா ளொருத்திநெடுவேயும்பாகும்**
**சுளிந்துவருங்கடகளிற்றுச்சுவேதவா கனன்கடகத்தோளின்மீது**
**தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடு சிவிறியினீர்சிந்துந்தோற்றம்**
**களிந்தகிரிமிசைக்கடவுட்காளிந்தி பரந்ததெனக்கவினுமாதோ.**

(இ - ள்.) மயில் விளிந்து புறம் கொடுக்கும் - மயில் (ஒப்பாக முன்னிற்க மாட்டாமல்) தோற்று முதுகுகாட்டிச் செல்லும்படி யான, மெல் இயலாள் - மென்மையான சாயலை யுடையவளாகிய, ஒருத்தி-ஒரு பெண், நெடுவேய்உம் பாகுஉம் சுளிந்து வரும்- நீண்ட முட்கோலையும் பாகனையும் (தூரத்திலேகண்டளவில்) கோபித்து வருகிற, கடகளிறு - மதங்கொண்ட ஆண்யானைபோன்ற, சுவேத வாகனன் - அருச்சுனனது, கடகம் தோளின்மீது- கடகமென்னும்

பறவைகளிற் கிளிக்கும் பூவைக்குமேபேசுந்திறமிருத்தலும்மற்ற வைகட்கு அத்திறமில்லாமையுந் தோன்ற, இங்ஙனங் கூறினர்.மற்றைப்பறவைகள் அவற்றின்பேச்சொலியைச் செவியுற்றவளவேயன்றி அப்பேச்சின் பொருளை யுணருந் திறமில வாயினும், அவை உடல் பதைத்துப்பேசுங் குறிப்பினால் அக்கருத்தை யுணர்ந்தன வென்க. ஆசுகன் தனோடு அடவியை வளைத்தனன் ஆசுசுக்கணியென்றது, நெருப்பு மேன்மேற்பற்றிவளர்தற்கு அனுகூலமாகக் காற்று வீசுகிற தன்மையை எடுத்துக்கூறியது: இது, 'இங்ஙனம் நம்மையெரித்தழிக்கத் தொடங்கிய அக்கினிக்கு நண்பனான வாயு, நாம் இவ்விடத்தை விட்டு விரைந்துபறந்தோடுதற்கு உதவான்' என்பது குறித்தற்குப் போலும். ஆஶுகன் என்ற வடமொழிப் பெயர் - விரைவாகச் செல்பவ னென்றும், ஆஶுஶுக்ஷணி என்ற வடமொழிப்பெயர் நன்றாக எரிக்க விரும்புபவனென்றும் உறுப்புப் பொருள்படும். (762)

42. நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகா நிருதர்சென்னியில்வன்னி
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங் கொழுந்துவிட்டனமேன்மேல்
வஞ்சிநேரிடையரக்கியர்நகமுழு மதிசிவப்புறந்தீட்டும்
பஞ்சிபோன்றன வவரவர்பதயுகப் பற்றியசிகைவன்னி.

(இ - ள்.) நெஞ்சில் ஈரம்உம் நீதிஉம் குடிபுகா - மனத்தில் அன்பும் நீதியும் வந்து தங்குதலில்லாத, நிருதர் - (அவ்வனத்திலுள்ள கொடிய) அரக்கர்களுடைய, சென்னியில்- தலையிற்பற்றிய, வன்னி - அக்கினிச்சுவாலைகள்,—நீடுற வளர்வ குஞ்சி போல் - நீண்டுவளர்வனவான (அவர்களுடைய) செம்பட்டமயிர்கள்போல, அசைந்து மேல் மேல் செம் கொழுந்து விட்டன-அசைந்து மேலும் மேலும் செந்நிறமான ஒளியை வெளிவீசி யெழுந்தன; அவர் அவர் பத யுகம் பற்றிய -அந்தந்த அரக்கியர்களுடைய கால்களிரண்டிலும் பற்றிய, சிகை வன்னி [வன்னிச் சிகை] - அக்கினிச்சுவாலைகள்,—வஞ்சிநேர் இடை அரக்கியர் நகம் முழு மதி சிவப்பு உற தீட்டும் பஞ்சி போன்றன-வஞ்சிக்கொடிபோன்ற மெல்லிய இடையையுடைய அவ்விராக்கதஸ்திரீகள் (தங்கள்) நகங்களாகிற பூர்ணசந்திரர்கள் செந்நிறம்பொருந்தும்படி (அவற்றிற்கு) ஊட்டுகிற செம்பஞ்சுக் குழம்புகளை யொத்தன; (எ - று.)

அரக்கர்களுடைய தலையிற் பற்றிய அக்கினிச்சுவாலை - அவர்கள் முடியிலுள்ள செம்பட்டமயிர்களையும், அவ்விராக்கத மாதர்களுடைய கால் நுனிகளிற் பற்றிய அக்கினிச்சுவாலை- அவர்கள் தங்கள் வெண்ணிறமான நகம் செந்நிறமடைந்து விளங்கும்படி யூட்டுஞ் செம்பஞ்சுக் குழம்புகளையும் ஒக்குமென்றார். நக முழுமதி - சந்திரமண்டலம்போன்ற நகங்களென்று முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகையாகவுங் கொள்ளலாம். (763)

43. முப்புரங்களைமுக்கணன்முனிந்தநாள் மூவரம்முழுத்தீயில்
தப்பினுருளர்காண்டவவடவிவாழ் தானவரியாருய்ந்தார்
பைப்புறத்தணிமணியொளிபரந்தெனப் பஃறலைகளிற்பற்றி
வெப்புறுத்தலினுரகருந்தங்கள்வாய் விடங்கள்கொன்றெனவீழ்ந்தார்.

(இ-ள்.) முப் புரங்களை-திரிபுரங்களை, முக் கணன்-சிவபிரான், முனிந்த நாள்-கோபித்து எரித்த காலத்தில், அ முழு தீயில் தப்பினர்-அந்தப் பெருந்தீயினின்று தப்பிப்பிழைத்தவர், மூவர் உளர்-மூன்று அசுரராயினும் உண்டு; காண்டவம் அடவி வாழ் தானவர் யார் உய்ந்தார்-இக்காண்டவவனத் (தை யெரித்தகாலத்தில் இ) இல் வாழ்ந்த அசுரரில் தப்பிப்பிழைத்தவர் எவர்? [எவருமில்லை: எல்லாவசுரரும் இறந்துபட்டன ரென்றபடி]; உரகர்உம் - நாகர்களும்,—பை புறத்து அணி மணி ஒளி பரந்து என -(தமது) படங்களின்மே லுள்ள அழகிய மாணிக்கத்தின் செந்நிறமான ஒளி பரவினாற்போல, பல் தலைகளில் பற்றி வெப்பு உறுத்தலின் - (தங்கள்) தலைகள் பலவற்றிலும் நெருப்புப்பற்றிச் சுடுவதனால், தங்கள் வாய் விடங்கள்கொன்றுஎன வீழ்ந்தார்-தங்கள்வாயிலுள்ள விஷங்களே (தங்களைக்) கொன்றாற்போல இறந்து கீழ்விழுந்தார்கள்; (எ - று.)

மிச்சமின்றி அசுரநாசம் நிகழ்ந்த தன்மையில் திரிபுரதகனத்தினுங்காண்டவதகனத்துக்குஉள்ளமேன்மையை முன்னிரண்டடிகளி லெடுத்துக்காட்டினர்; வேற்றுமையணி. திரிபுரவாசிகளான அசுரர்களில் மூவர் தப்பியது கீழ் வாரணாவதச் சருக்கத்து 131 ஆஞ்செய்யுளினுரையிற் கூறப்பட்டது. பல் + தலை=பஃறலை. (764)

## 44.—காண்டவவனத்தில் தீப்பற்றிய செய்தியை இந்திரன் உணர்தல்.

புகைப டப்படக் கரிந்தன பொறியினாற் பொறியெழுந் தனவானின்
மிகைப டைத்தவச் சுரபதி யாயிரம் விழிகளுங் கணப்போதில்
தகைவ றக்கழை முதலிய தருக்களின் சடுலவா ரவமிஞ்சித்
திகைய னைத்தினும் பரத்தலிற் செவிகளுஞ் செவிடு பட்டனசேர.

(இ - ள்.) (இங்ஙனந் தீப்பற்றியவளவிலே), கணம் போதில் - ஒருக்ஷணப்பொழுதிலே, வானில்-மேலுலகத்திலுள்ள, அ சுரபதி- அந்த (க்காண்டவ வனத்தைக் காவல் செய்பவனான) இந்திரனுடைய, மிகை படைத்த ஆயிரம் விழிகள்உம் - அதிகமாகவுள்ள ஆயிரங்கண்களும், புகை பட பட-(அவ்வக்கினியின்) புகை (மேற் சென்று) மிகுதியாகப் படுதலால், கரிந்தன-கருகின [பெருங்கோபங் கொண்டன]; பொறியினால்-(அவ்வக்கினியின்) பொறிகள் மேற் சென்று படுதலால், பொறி எழுந்தன - (கோபாக்கினியின்) பொறிகள் கிளம்பப்பெற்றன; கழைமுதலிய தருக்களின்-மூங்கில் முதலிய மரங்களில் (நெருப்புப்பற்றி யெரிதலா லுண்டாகிய),சடுலம்ஆரவம்- கடுமையான ஒலி, மிஞ்சி-மிகுந்து, தகைவு அற-தடையில்லாமல், திகை அனைத்தின்உம் பரத்தலின்-திக்குக்களிலெல்லாம் பரவியதனால், செவிகள்உம் சேர செவிடு பட்டன-(அவ்விந்திரனுடைய) காதிரண்டும் ஒருசேரச்செவிடாயின; (எ - று.)

அத்தீயின் புகையும் பொறிகளும் ஆரவாரமும் மேலெழுந்து இந்திரலோகமளவுஞ் செல்ல, அவற்றை இந்திரன் கண்ணினாலுங் காதினாலும் உணர்ந்தமாத்திரத்திலே வருந்திக்கண்கள் தீப்பொறியெழப் பெருங்கோபங்கொண்டன னென்பதாம். இவ்வருணனையிற்

பொறிமுதலியவற்றின் மிகுதியும் செயலுந் தோன்றும், கண்ணிரண்டேயன்றிக்காட்சிப்புலனுக்கு வேண்டாதனவான மற்றைக்கண்களெல்லாம் புகைபடுதலாலும் பொறிபடுதலாலும் வருந்துதற்கே காரணமாதலால் அநாவசியமென்றுஅச்சமயத்திற்கருதும்படியிருந்தனவென்பதுதோன்ற, 'மிகைபடைத்த ஆயிரம்விழிகள்' என்றார்.

வேறு.

## 45.-கிருஷ்ணார்ச்சுனர் காண்டவவனத்தையெரிப்பித்தலை இந்திரன் கண்ணுறல்.

விரதமேற் கொண்டு செம்பொன்மால் வரையை விரிசுடர் சூழ்வரு வதுபோல்
இரதமேற்கொண்ட வநுசனுஞ் சுதனு மிமைப்பினிற் பன்முறை தேர்ந்து
சரதமேற் கொண்டு சரிப்பதுந் தனது தாவகம் பாவகன் புகுந்து
பரதமேற் கொண்டு நடிப்பதுங் கருதிப் பார்த்தனன் பாகசா தனனே.

(இ - ள்.) விரி சுடர்-பரந்த கிரணங்களையுடைய சூரியன், விரதம் மேல் கொண்டு-(தவறாத) நியமத்தை மேற்கொண்டு, செம்பொன்மால் வரையை சூழ்வருவதுபோல்-மாற்றுயர்ந்த பொன்மயமானபெரியமகாமேருமலையைப்பிரதட்சிணஞ்செய்துவருவதுபோல, இரதம் மேல்கொண்ட அநுசன்உம் சுதன்உம்-தேரின்மேலேறிய (தனது)தம்பியான கிருஷ்ணனும் (தனது)மகனான அருச்சுனனும், இமைப்பினில்-ஓர் இமைப்பொழுதினுள்ளே,பல்முறை-பலமுறை, தேர்ந்து-ஆராய்ந்து, சரதம் மேற்கொண்டு-(அக்கினிதேவனுக்குத் தாம் துணைசெய்வதாக உறுதிமொழிகூறிய) சத்தியத்தை மேற்கொண்டு, சரிப்பதுஉம்-(அவ்வனத்தைச்) சூழ்ந்துசெல்லுதலையும், தனது தாவகம்-தன்னுடைய காட்டில்,பாவகன்-அக்கினி, புகுந்து-பிரவேசித்து, பரதம் மேற்கொண்டு நடிப்பதுஉம் - பரதசாஸ்திரவிதியைத் தவறாமற்கொண்டு கூத்தாடுவதையும், பாகசாதனன் - இந்திரன், கருதி பார்த்தனன்-கருத்தோடுநோக்கினான்; (எ - று.)

வானத்தையளாவி யுயர்ந்தெழுந்து விளங்குகின்ற பேருமலை-வானத்தையளாவிப் பற்றியெரிகிற காண்டவவனத்துக்கும், அம்மேருகிரியை ஆயிரங்கிரணனான சூரியன்தேர்மேற்கொண்டு இடைவிடாது சூழவருதல்-அவ்வனத்தைக் கிருஷ்ணார்ச்சுனர் தேரிலேறி இடைவிடாது சூழவருதற்கும் உவமையெனக் காண்க. எப்புறத்திலும்எவரும் அவ்வக்கினிக்கு இடையூறுசெய்யாதிருத்தற்பொருட்டும், அவ்வனத்திலுள்ள பிராணிகள்தப்பியோடி வெளிச்செல்லாதபடி தவிர்த்தற்குமாக இருவரும் இங்ஙனம் குறிக்கொண்டு சூழ்வருவாராயினர். விரதமாவது-இன்னவாறுசெய்வேனென்றுதனது ஆற்றலுக்கு எற்பவரைந்துகொள்வது. அருச்சுனன்போர்க்கோலங்கொண்டுதேரேறினதையே கீழ்க்கூறினராயினும்,கண்ணன் அங்ஙனந்தேரேறினதையும் உபலக்ஷணத்தாற் கொள்க. (கீழ் 27-ஆம் கவியின் இரண்டாமடிக்கு-கண்ணபிரான் அருச்சுனனுக்குத்தேர்ப்பாகனாயமர்ந்து தேர்செலுத்த என்று உரைப்பாரு முளர்; அது, முதனூலோடு பொருந்தாது. இருவரும் இரண்டு தேரிலேறி யுத்தசந்நத்தராயிருந்தனரென்று வியாசபகவான் கூறியுள்ளார்.)

முன்னொருகாலத்தில் இந்திரன் அசுரர்கள் நலிதலால் வருந்தித் திருமாலைச் சரணமடைய, ஸ்ரீமகாவிஷ்ணு, அதிதிதேவியின் வயிற்றில் அவ்விந்திரனுக்குத் தம்பியாய் ஓர் அவதாரமெடுத்து உபேந்திரனெனப் பெயர்கொண்டு அவனது துயரைத் தீர்க்கலாயினனென்பதை அறிக.

பாவம், ரஸம், தாளம் இம்மூன்றையுமுடைமைபற்றி, இம்மூன்றுசொற்களின் முதலெழுத்துக் குறிப்பினால், பரதம் என்று நாட்டியத்திற்குப் பெயராயிற்றென்பர். 'பரத மேற்கொண்டு நடிப்பது' என்றது, எழுந்தெழுந்து கிளர்ந்து எரிதலை. சரதம் மேற்கொண்டு என்பதற்கு - விளையாட்டைமேற்கொண்டு என்றலுமொன்று. தாவம், தாவகம் என்பன - காட்டுத்தீயென்ற பொருளன: அவ்வடசொற்கள், சிறுபான்மை காடு என்ற பொருளிலும் வரும்.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும்-பெரும்பாலும்இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும்விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (766)

### 46.—இந்திரன் பார்த்தபொழுது அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி.

முந்திவார்சிலைக்கைப்பற்குனன்றொடுத்த முரணுடைமூரிவெங்கணைகள்
உந்திவாளுரகர்சூடிகாமகுட கோடிகளுடைத்தலினுடைந்து
சிந்திமீதெழுந்தமணிகளுமனலின் சிகைகளிற்றெறித்தெழுபொறியும்
இந்திராலயத்துக்கேற்றியதீப மென்னநின்றிலங்கினவெங்கும்.

(இ-ள்.) வார் சிலை கை பற்குனன் - நீண்ட வில்லை யேந்திய கையையுடைய அருச்சுனன், முந்தி தொடுத்த-விரைவாகச்செலுத்திய, முரண் உடை மூரி வெம் கணைகள்-வலிமையையுடைய பெரிய கொடிய அம்புகள், உந்தி - வலிமையோடுசென்று, வாள் உரகர் சூடிகா மகுட கோடிகள்-ஒளியையுடையநாகர்களின்உச்சிக்கொண்டையையுடைய முடிகளின் நுனிகளை, உடைத்தலின் - உடைத்தலினால், உடைந்து சிந்தி மீது எழுந்த-உடைபட்டுச்சிதறி மேலேயெழுந்த, மணிகள் உம்- (அம்முடிகளிலுள்ள) மாணிக்கங்களும், அனலின் சிகைகளின் தெறித்து எழு பொறி உம் - அக்கினியின் சுவாலைகளினின்று தெறித்து மேலெழுந்த பொறிகளும், இந்திர ஆலயத்துக்கு ஏற்றிய தீபம் என்ன - அவ்விந்திரனுடைய இருப்பிடத்துக்குஏற்றிய விளக்குக்கள்போல, எங்கு உம் நின்று இலங்கின - (வானத்தில்) எவ்விடங்களிலும் பிரகாசித்துநின்றன;

இந்திரன் கருத்தோடு பார்த்தபொழுது தப்பிவெளியேயோட முயல்கிற நாகர்களை அருச்சுனன் அம்புகொண்டு ஊறுபடுத்தி அத்தீயினுள்ளேயே விழுத்துதல் இலக்காயிற் றென்பது, இப்பாட்டின் உட்கோள். அருச்சுனனது அம்புகள் வலியத் தாக்க, உரகரின் முடிமணிகளும் தீப்பொறிகளும் வானத்திலெழுந்து தேவலோகத்துக்கு வைத்த தீபங்கள்போன்றன என்றார்; **தற்குறிப்பேற்றவணி.** சூடிகாமகுடகோடி, இந்த்ராலயம் - வடமொழித்தொடர்கள். சூடிகா - உச்சிக்கொண்டை. (767)

## 47.—இந்திரன் தக்ஷகனைக்குறித்துக் கவலைப்படுதல்.

தானவர்புரங்கணீறெழமுனிந்த தமனியச்சிலைக்கைவெள்ளூர்தி
யானவனமதுபுரத்தையுஞ்சுடுவா னழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுங்கவானவர்க்கரசாம் வலாரியுமனனுறத்தளர்ந்து
கானவருடனேதக்ககனென்னுங் கட்செவிகெடுமெனக்கரைந்தான்.

(இ - ள்.) 'தானவர் - அசுரர்களுடைய, புரங்கள் - (முப்) புரங்களும், நீறு எழ - சாம்பராய்ச்சிதறும்படி, முனிந்த - கோபித்து எரித்த, தமனியம் சிலை கை - பொன்மயமான (மேரு) மலையாகிய வில்லையேந்தியகையையுடைய, வெள் ஊர்தி ஆனவன் - வெண்ணிறமான ரிஷப வாகனத்தையுடையவனான சிவபிரான், நமது புரத்தையும் சுடுவான் அழன்றனன் போலும் - (தேவர்களான) நமது நகரத்தையும் எரிக்கும்படிகோபங்கொண்டனன்போலும்', என்று -என்று எண்ணி, வானவர் அஞ்சி நடுங்க-மேலுலகத்தார்பயந்து (உள்ளமும் உடலும்) நடுக்கமடைய,—வானவர்க்கு அரசு ஆம் வலாரிஉம்-அத்தேவர்கட்கு அரசனான இந்திரனும், கானவருடனே தக்ககன் என்னும் கட்செவி கெடும் என - 'அக்காட்டிலுள்ளாருடனே (அங்கு வசிப்பவனான) தக்ஷகனென்னும் பாம்பு அழிந்திடுமே!' என்று சிந்தித்து, மனன் உற தளர்ந்து கரைந்தான் - மனம் மிகத்தளர்ந்து உருகினான்; (எ - று.)

சிவபிரான் காலாக்கினிசொரூபி யாதலால் அந்நெருப்பைச் சிவசொரூபமாகக் கருதின ரென்றும், காண்டவமெரிக்கிற தீயை முன்பு முப்புரமெரித்த சிவபிரானது நகைத்தீப் போன்றதெனக் கருதின ரென்றுங்கொள்க. இரட்டுறமொழித லென்னும் உத்தியால் சிலை யென்பதற்கு மலையென்றும், வில்லென்றும் இரு பொருள் ஒருங்கு கொள்ளப்பட்டன. வெள்ளூர்தி-அன்மொழித்தொகை. தமனியம் = தபநீயம்; நெருப்பில்தபிக்கப்பட்டு விளங்குவதென்றும், வலாரியென்பது - வலனென்னும் அசுரனுக்குப் பகைவனாய் அவனை யழித்தவனென்றும் பொருள்படும். கட்செவி-கண்களையே காதுகளாக வுடையது; பண்புத்தொகையன்மொழி: பாம்புக்கு, கண்ணென்னும் பொறியொன்றிலேயே செவிப்புலனாகிய கேள்வியும் இருக்கு மென்ப. (768)

## 48.—இந்திரன்தீயையவிக்கும்படி மேகங்களையேவித் தான் தேவசேனையுடன் போர்க்குப்புறப்படுதல்.

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம் பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடும்புயல்களனைத்தையுநெடுநீர் சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருகுவிடாதுதன்னிழல்போ லின்றவானவரையுமேவிப்
புரந்தரன்குறுமிருமருப்புப் பொருப்பின்வேம்பிடர்மிசைப்புகுந்தான்.

(இ-ள்.) புரந்தரன்-இந்திரன்,—பரந்து எழு புகையால் தம் தம் வடிவம் பண்டையின் பதின்மடங்கு ஆக சுரந்திடும் புயல்கள் அனைத்தைஉம்-பரவியெழுகிறஅவ்வனற்புகையினால்தங்கள்தங்களுடைய உருவம் முன்னையினும் பத்து மடங்கு அதிகமாக வளர நீர் சுரக்கப்பெற்ற மேகங்களெல்லாவற்றையும்நோக்கி, நெடு நீர் சொரிந்து

அவித்திடுக என சொல்லி-'(நீங்கள்) மிக்க நீரைச் சொரிந்து (அக்கினியைத்) தணிப்பீர்களாக' என்று கட்டளைகூறி,—நிரந்தரம் அருகு விடாது தன் நிழல் போல்நின்ற வானவரைஉம்-எப்பொழுதும் தன்பக்கத்தை விடாது தனது நிழலைப்போல் அடுத்துநிற்பவரானதேவர்களையும், ஏவி-(போர்க்குப்புறப்படும்படி) கட்டளையிட்டு,—தானும்—, ஈர் இரு மருப்பு பொருப்பின் வெம் பிடர் மிசை புகுந்தான்-நான்குதந்தங்களையுடையமலைபோன்றவடிவமுள்ள(ஐராவத) யானையினது விரும்பத்தக்க [அழகிய] பிடரியின்மேல் ஏறினன்;

அக்கினி மிகுதியாகப் புகையையெழுப்ப அப்புகைமிகுதியால் மேகங்கள் பதின்மடங்குஉடல் பூரித்தன என்க. மேகவாகனனுதலால், மேகங்களையேவலானன். (769)

## 49.—இந்திரன் கட்டளைப்படி யெழுந்து பரந்த மேகங்களில் மிகுதியாகத் தோன்றிய மின்னல்களின் வருணனை.

ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக் கேற்றநாண்முறுக்கிவிட்டடென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ் செஞ்சுடர்வாள்விதிர்த்தென்னப்
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப் பரந்தவப்பாவகற்குணவாந்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்த சலதரசஞ்சலாசாலம்.

(இ-ள்.) அ பாவகற்கு உணவு ஆம்-அந்த அக்கினிதேவனுக்கு உணவாகிய, தாவகம் முழுதுஉம்-காடு முழுவதையும், வளைந்துகொண்டு-சூழ்ந்து கொண்டு, எழுந்த-மேற்பரவிய, சலதரம்-மேகங்களில் (தோன்றிய), சஞ்சலா-மின்னல்களின், சாலம் - கூட்டங்களானவை,—ஏ அகம்-அம்பைத்தன்னிடத்தே தொடுத்தற்கு உரிய, விருத்தம்-வட்டமாகிய [நன்குவளைந்த], செவ்வியின் தனுவுக்கு-அழகிய (இந்திர) வில்லுக்கு, ஏற்ற-இயைவதான, நாண்-நாணியை, முறுக்கி விட்டு என்ன-திரித்துவிட்டாற் போலவும்,—சேவகம் இமையோர்-வீரத்தன்மையையுடைய தேவர்கள், எண் திசாமுகத்துஉம்-எட்டுத்திக்குக்களிலும், செம் சுடர் வாள் விதிர்த்து என்ன-செந்நிறமான ஒளியையுடைய வாளாயுதங்களைச் சுழற்றினாற் போலவும்,—பாவகன்-அக்கினி, பகு வாய் நா-(தனது) திறந்த வாயிலுள்ள நாக்குக்களை, விதிர்த்து என்ன - வெளிச் செலுத்தியசைத்தாற் போலவும், பரந்த-பரவின; (எ - று.)

செந்நிறமாய் அசைந்துவிளங்குதல் பற்றிய உவமை. அக்கினியினது சுவாலைகளேழும் அவனுக்கு நா எனப்படும். 'எழுநா' என்று அக்கினிக்கு ஒருபெயர். சஞ்சலா-அசையுமியல்புள்ளது என மின்னற்குக் காரணக்குறி. (770)

## 50.—அம்மேகங்களின் இடிமுழக்கத்தின் வருணனை.

ஏறியகளிறுபிளிறுநீடொலியு மெடுத்தவிற்றெறித்தநாணொலியும்
தூறியவிமையோர்பெருநகையொலியுந் துந்துபிக்குழாமதிரொலியும்
கூறியவனலன்சடுலவல்லொலியுங் குறைபடத்திசைதொறுமிகுந்த
ஊறியபுவனபவனவேகத்தோ டுருமுடைமுகிலின்வாயொலியே.

(இ - ள்.) ஊறிய புவனம் பவனம் வேகத்தோடு - மிகுதியாக அமைந்த நீரோடும் காற்றின்விசையோடும், உரும் உடை - இடி

யையு முடைய, முகிலின் வாய்-மேகங்களினிடத்தில் (உண்டாகிய), ஒலி-முழக்கங்களானவை,—ஏறிய களிறு பிளிறு நீடு ஒலிஉம்-(இந்திரன்) ஏறிவந்த (ஐராவத) யானை கர்ச்சிக்கின்ற பேரொலியும், எடுத்த வில் நாண் தெறித்த ஒலிஉம் - (அவன்) கையிலேந்திய வில்லின் நாணியை (விரலால்) தெறித்தலினுலாகிய ஓசையும், சூறிய இமையோர் பெரு நகை ஒலிஉம்-சூழ்ந்த தேவர்களுடைய பெருஞ் சிரிப்பி னெலியும், துந்துபி குமாம் அதிர் ஒலிஉம்-(தேவர்கள் முழக்குகிற) துந்துபி யென்னும் வாத்தியங்களின் கூட்டம் முழங்குகிற முழக்கமும், கூறிய அனலன் சடுலம் வல் ஒலிஉம்-கீழ்க் கூறப்பட்ட அக்கினியினுடைய வலிய கடுமையான ஓசையும், குறைபட-குறையும்படி, திசை தொறுஉம் மிகுந்த-திக்குக்கள் தோறும் மிகுந்தன; (எ - று.) —ஏ-ஈற்றசை.

எல்லாவோசைகளையும் அடக்கி மேககோஷங்கள் மிகுத் தோன்றின என்பதாம். சூறுதல்-சுழலுதலாதலை, சுழல்காற்று 'சூறை' எனப்படுமிடத்துங் காண்க. பெருநகை-அட்டகாசம். சடுல வோசை, 39-ஆம் கவியினும், 41-ஆம் கவியினும் சொல்லப்பட்ட தனால், 'கூறிய' என்றஅடைமொழி கொடுத்தார். வாயொலி-வாயினின் றெழுகிற ஒலி யென்ற பொருளுந்தோன்றும். இச்செய்யுளில், 'ஒலி' என்ற ஒருசொல் ஒருபொருளிற் பலமுறைவந்தது-சொற்பொருட்பின்வருநிலை. புவநம்-நீர்: வடசொல். (771)

## 51.—அப்பொழுது அக்கினிதேவன் கொண்ட செருக்கு.

தூமமுமெமதுபவனமுமெமது தோழனத்தோயமுமெமதே
யாமுமிங்கிவற்றேடொன்றுதலொழிது மீரிருபொருள்களும்பிரிந்தால்
மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்து வாசவனென்செயுமெம்மை
ஆமுறையறிதுமென்றுகொண்டறவு மகங்கரித்தனன்வெகுண்டழலோன்.

(இ - ள்.) அழலோன்-(மேகங்கள் தன்னை யவிக்கவந்ததைக் கண்ட) அக்கினிதேவனானவன்,—'தூமம்உம் எமது-புகையும் எம்முடையது: பவனம்உம் எமது தோழன் - வாயுவும் எம்முடைய நண்பன்: அ தோயம்உம் எமதுஏ-அந்த நீரும் எம்மிடத்தினின்று தோன்றியதே: யாம்உம் இங்கு இவற்றேடு ஒன்றுதல் ஒழிதும்-நாமும்இப்பொழுது இந்தமூன்றுபொருள்களுடனேசேர்தலை நீங்குவோம்: ஈர் இரு பொருள்கள்உம் பிரிந்தால்-இந்த நான்கு பொருள்களும்-(தம்மிற் கலவாமற்) பிரிந்துவிட்டால், மாமுகில் எனும் பேர் எங்கு உளது-பெரிய மேகமென்னும்பெயர் எவ்விடத்திலுள்ளது? [எங்குமில்லையென்றபடி]: (அதுஇல்லையாகவே),வாசவன் அடர்த்து எம்மை என் செயும்-இந்திரன் பொருது எம்மை என்செய்யமாட்டுவான்? ஆம் முறை அறிதும்-(இனி) ஆகும் வகையை அறிவோம்,' என்றுகொண்டு-என்று எண்ணி, வெகுண்டு அறஉம் அகங்கரித்தனன்-கோபித்து மிகவும் செருக்குப் பாராட்டினன்; (எ - று.)—'பவனனும்' என்ற பாடம் சிறக்கும்.

புகை, நெருப்பு, நீர், காற்று என்னும் நான்கின் கலப்பினுலாகியது மேகமாதலால், அக்கினி இங்ஙனஞ்செருக்கினன்;("தூம ஜ்யோதிஸ்ஸலில மருதாம் ஸந்நிபாத: க்வமேக:" என்றார், காளிதாஸரும்.)

எம்மையவித்தற்கு இன்றியமையாத துணையாகக்கொள்ளப்பட்ட முகில்கள எமமாலழிந்தால் இந்திரன் நம்மை வெல்லுமாறு வேறில்லையென்று கருதி அக்கினி செருக்கினனென்பதாம். பூதங்கள் தோன்றும் முறையால் அக்கினியினின்று நீர்தோன்றிற்று என்று வேதங் கூறுகின்றது; அதுபற்றியே 'அத்தோயமும் எமதே' என்றான். இச்செய்யுளின் தன்மைப்பன்மைகள், செருக்குப் பற்றியன. முதலிலுள்ள உம்மைகள் நான்கும், எச்சப்பொருளன. ஐந்தாவது உம்மை-முற்று. ஆறுவதுஉம்மை-உயர்வுசிறப்பு. (772)

## 52.—மேகங்கள் செருக்கி மழைபொழிதல்.

முண்டவெங்கனலையுருமின்வெங்கனலான் முருக்கியெங்கால்கையானெருக்கி
ஆண்டவன்களிற்றின்கரநிகர்தாரை யருவியின்கணங்களாலவித்துப்
பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன் பருப்பதமெடுக்கினுமெங்கள்
காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்து பொழிந்தனகணம்படுகனங்கள்.

(இ - ள்.) கணம் படு கனங்கள்-கூட்டமாகக் கூடிய மேகங்களானவை,—'மூண்ட வெம் கனலை - மூண்டெரிகிற வெவ்விய அக்கினியை, உருமின் வெம் கனலால் முருக்கி-(எங்களது) இடியிலுண்டாகும் வெவ்விய அக்கினியால் அழித்து, எம்கால் கையால் நெருக்கி - எங்கள் கால்களாலும் கைகளாலும் அடர்த்து, ஆண்டவன் களிற்றின் கரம் நிகர் தாரை அருவியின் கணங்களால் அவித்து-(எங்கள்) தலைவனான இந்திரனுடைய (ஐராவத) யானையின் துதிக்கையை யொத்த பெருந்தாரையாகிய மழைநீரருவியின் தொகுதிகளால் தணித்து, பாண்டவன் பகழி தொடுக்கின்உம் கண்ணன் பருப்பதம் எடுக்கின்உம் எங்கள் காண்டவம் புரத்தும்-பாண்டு குமாரனான அருச்சுனன் அம்புகளைத் தொடுத்துத் தடுத்தாலும் கிருஷ்ணன் (முன்புகோவர்த்தனமலையையெடுத்ததுபோல) மலையை யெடுத்து (க் குடையாகப் பிடித்து)த் தடுத்தாலும் (தடுக்கமாட்டாதபடி முனைந்து) எங்களுடைய காண்டவவனத்தைப் பாதுகாப்போம்,' என்று கொண்டு - என்று உட்கொண்டு, இழிந்து - (செருக்கோடு) இறங்கி, பொழிந்தன-மழைபொழிந்தன;

"உஷ்ணம் உஷ்ணேந ஶாம்யதி=வெப்பம் வெப்பத்தால் தணிகிறது" என்ற நியாயத்தால், 'மூண்ட வெங்கனலை யுருமின் வெங்கனலான் முருக்கி' எனப்பட்டது. 'கால்கையால்' என்பது-மேல்நோக்கில் தொடர்மொழியாகக் கால்கைகளால் என்று பொருள் பட்டாலும், உள்நோக்கில் தனிமொழியாக 'காலுதலால்' என்று பொருள்படும்; கால்கை - கைவிகுதிபெற்ற தொழிற் பெயர்: பொழிதலென்று பொருள். தமதுதலைவனாகிய இந்திரனாற் காக்கப்படும் உரிமையைப்பாராட்டி, 'எங்கள்காண்டவம்' என்றது.

## 53.—மேகங்கள் சொரிந்த மழைஅவ்வளவும் கனலை அவிக்கமாட்டாமை.

காலைவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக் கட்டறக்காண்டவமென்னும்
பாலைவாயுள்ளசராசரமனைத்து நுகர்தலிற்பைம்புனல்வேட்டோன்

வேலையேழையுமொண்டேழுமாமுகிலும் விதம்படப்பொழிந்ததாரைகளால்
தாலுவேழினையுநனைத்தனனனைத்துந் தணிந்ததோதன்பெருந்தாகம்.

(இ - ள்.) (அக்கினிதேவன்), — காலைவாய் அருக்கன் பனி நுகர்ந்து என்ன - உதயகாலத்திற் சூரியன் பனியை முற்றும் விழுங்கினாற் போல, காண்டவம் என்னும் பாலைவாய் உள்ள சர அசரம் அனைத்தும் உம் கட்டு அற நுகர்தலின் - காண்டவமென்னும் கொடியகாட்டிலுள்ள ஜங்கமமும் தாவரமுமான எல்லாப்பொருள் களையும் தடையில்லாமல் ஒருங்கு உண்டதனால், பைம்புனல் வேட்டோன் - (தாகசாந்திசெய்தற்பொருட்டுக்) குளிர்ந்த நீரை விரும்பியவனாய், ஏழு மா முகில் உம் வேலை ஏழை உம் மொண்டு விதம் பட பொழிந்த தாரைகளால் - ஏழு பெரிய மேகங்களும் கடல்களேழையும் முகந்து பலவகையாகச்சொரிந்த மழைத்தா ரைகளினால், தாலு ஏழினை உம் நனைத்தனன் - (தனது) ஏழுநாக் குக்களையும் நனைத்துக்கொண்டான்; நனைத்து உம் - (அவ்வாறு) நனைத்தும், தன் பெரு தாகம் தணிந்ததுஓ - அவனுடைய அதிக மான தாகம் அடங்கிற்றோ? (எ - று.)

மேகங்களெல்லாஞ் சொரிந்த மிக்கமழைநீர்த்தாரைகளால் அக்கினிச்சுவாலைகள் சிறிதுநனைந்தமாத்திரமே யன்றி அதனால் அக்கினியின் உக்கிரம் சிறிதுந் தணிந்திலது என்பதாம். அதிக தாகங்கொண்டவனுடைய நாவிற்பட்ட நீர் உடனே வறண்டு விடுதல்போல அந்நெருப்பின் மேல்விழுந்த நீர்த்தாரைகள் உடனே வறண்டு போயின வென்க. மனிதசஞ்சாரமில்லாமை பற்றி, 'காண்டவமென்னும் பாலை' எனப்பட்டது. முகில்கள் ஏழுவிதத் தனவாதலால், அவற்றின் தாரைகட்கு 'விதம்படப் பொழிந்த' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. அருக்கன் பனி நுகர்தல் - முற்றும் எளிதில் வறண்டதற்கு உவமை. கட்டழல் காண்டவமென்னும் என்று பிரதிபேதம். (774)

**54.— மேகங்கள் செருக்கி மழைபொழியவும் அனல் பின்னும் மிகுதல்.**

எக்கடல்களினுமினிப்பசையிலதென் றேழிருபுவனமுநடுங்கத்
தொக்கடலுருமோடேழுமெழுகொண்டற் சோனையஞ்சுருவையான்முகந்து
மைக்கடல்வெளுக்கக்கறுத்தமெய்ம்மகவான் வழங்கியவாகுதியனைத்தும்
நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்தி நீடுவான்முகடுறநிமிர்ந்தான்.

(இ - ள்.) மை கடல் வெளுக்க கறுத்த மெய் மகவான் - கரிய கடலும் வெண்ணிறமான தென்னும்படி மிகக்கறுத்த உடம்பை யுடைய இந்திரனாகிய யாகஞ்செய்பவன், எழும் ஏழு கொண்டல் அம் சுருவையால் - மேலெழுகிற ஏழுவகைமேகங்களாகிய அழகிய சுருவையென்னும் ஓமக்கருவியைக் கொண்டு, எ கடல்களின் உம் இனி பசை இலது என்று ஏழ் இரு புவனம் உம் நடுங்க முகந்து - எல்லாக்கடல்களிலும் இனி நீர்ப்பசையு மில்லையென்றுபதினான்கு உலகங்களிலுமுள்ள உயிர்கள் திடுக்கிடும்படி (அக்கடல்களை முற்றும்) மொண்டு, தொக்க அடல் உருமோடு வழங்கிய - நிறைந்த வலிய இடியோசையுடனே மிகுதியாகச் சொரிந்த,

சோனை ஆகுதி அனைத்தும்உம்-விடாப் பெருமழையாகிய ஆகுதிகளையெல்லாம், (அக்கினிதேவன்), நெய்கடல் சொரிந்தது என்னும் ஆறு அருந்தி-நெய்க்கடல் சொரியப் பட்டாற்போல உண்டு, நீடு வான் முகடு உற நிமிர்ந்தான்-பெரிய ஆகாயமுகட்டை யளாவ ஓங்கியெரிந்தான்; (எ - று.)

கடல்களை நெய்ப்பாத்திரமாகவும், அவற்றின் நீர்முதலியவற்றை அப்பாத்திரத்தில்நிறைந்த நெய்யாகவும், கடல்களினின்று நீர்முதலியவற்றைக்கொண்ட மேகத்தை அப்பாத்திரத்தினின்றுநெய்யை முகக்குஞ் சுருவை யெனுங்கருவியாகவும், மேகம் நெருப்பில்மழைத் தாரைசொரிதலைச் சுருவைநெருப்பில்நெய்த்தாரைசொரிதலாகவும் இந்திரனை ஓமஞ்செய்பவனுகவும்உருவகப்படுத்தினர்மேகம்எதிர்த்து மழைசொரிந்தவளவில் அக்கினிகோபங்கொண்டுமிக்கெரிதல்,நெய் சொரிந்தவளவில் நெருப்பு மிக்கெரிதலாகக் கொள்ளப்பட்டது:உருவகவணி. 'பெருநெருப்புக்குசரமில்லை' என்றபடி அம்மழைஅந்நெருப்பைச்சிறிதுதணிக்கவும்மாட்டிற்றில்லையென்பது, இப்பாட்டின்தாற்பரியம். மகவாந்-ஐசுவரியங்களை யுடையவன்; (மகம் - ஐசுவரியம்.) இச்சொல், வேள்விசெய்பவனையுங்குறிக்கும். மகவானுகியமகவான் என, இங்கு 'மகவான்' என்றது-சிலேடையுருவகம். 'தொக்கடலுருமோடு' என்றதற்குஏற்ப, உபமேயத்தில்வேதமந்திரகோஷத்தோடு எனக்கொள்க; இது ஏகதேசவுருவகம். கறுப்போடுநோக்க வெளுப்புக்கு எவ்வளவு வேறுபாடு உண்டோ, அவ்வளவு வேறுபாடு இந்திரனது கருநிறத்தோடுநோக்கக் கடலினது கருநிறத்துக்குஉள்ளதென்பது, 'மைக்கடல் வெளுக்கக் கறுத்த மெய்' என்றதன் கருத்து; பிரசித்தமான கடலின்கருமையினும் மிக்க கருமையை யுடைய மெய்யென்க. (775)

## 55.—அருச்சுனன் அம்பெய்து மழையைத்தடுத்துச் சரக்கூடங்கட்டுதல்.

**தொழுதகுவிசயன்ருலுவேழுடையோன் சுடர்முடிநனைந்திடுவதன்முன்**
**எழுமுகிலினமும்பொழிதருமாரி யாவையுமேவிஞல்விலக்கி**
**முழுதுலகமுந்தன்னிடத்தடக்கியவான் முகடுறமுறைமுறையடுக்கிக்**
**குழுமுவெங்கணையாற்கனற்கடவுளுக்குக் கொற்றவான்கவிகையுங்கொடுத்தான்.**

(இ - ள்.) தொழு தகு விசயன்-(யாவராலும்) வணங்கத்தக்க [மிக்கசிறப்பையுடைய]அருச்சுனனுனவன், தாலுஏழுஉடையோன் சுடர் முடி நனைந்திடுவதன் முன்-ஏழுநாக்குக்களை யுடையவனுன அக்கினியினதுஒளியையுடைய முடி நனைதற்குமுன்னே, ஏழுமுகில் இனம்உம் பொழிதரு மாரி யாவைஉம் ஏவினுல் விலக்கி-ஏழுவகை முகிற்சாதிகளுஞ் சொரிகிற மழைகளையெல்லாம் (தனது) அம்புகளால் தடுத்து,—முழுது உலகம்உம் தன் இடத்துஅடக்கிய வான் முகடு உற-பூலோகம்முழுவதையுந் தன்கீழ் அடக்கிய ஆகாயத்தினது மேன்முகட்டை யளாவ, குழுமு வெம் கணையால் முறை முறை அடுக்கி-கூட்டமான கொடிய அம்புகளை ஒழுங்காக அமையும்படிசெலுத்தி, (அந்தஅம்புகளின்பரப்பினுல்),கனல்கடவுளுக்கு

-அக்கினி தேவனுக்கு, வான் கொற்றம் கவிகைஉம் கொடுத்தான்-பெரியகொற்றக் குடையையுங் கொடுத்தான்; (எ - று.)

அவ்வக்கினியின்மேல் மழைத்துளி சிறிதும் விழாதபடி அம்புகளை அடர்த்தியாகத் தொடுத்துச் சரக்கூடங் கட்டினனென்பதாம். அக்கினிக்குமுடி-சுடர்க்கொழுந்து. அனற்கடவுள் புனற்கடவுளால் வெல்லப்படாதென்பதை இவ்வம்புக்குடை நன்கு விளக்குதலால், 'கொற்றவான்கவிகை' எனப்பட்டது. கவிகை-கவிந்திருப்பதெனக் குடைக்குக் காரணக்குறி. 'கவிகையும்' என்ற உம்மை-உணவைக் கொடுத்ததுமன்றி என எச்சப்பொருளது. (776)

**56.—இதுவும், அடுத்த கவியும்-அந்தச்சரக்கூடத்தின் வருணனை.**

**ஆழ்தருபரவையேழும்வற்றிடுமா றழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர்**
**தாழ்தருசரத்தான்மேய்ந்ததற் கிடையோர் தனித்திவலையும்பொசியாமல்**
**வீழ்தருமருவிபாவகன்றனக்கு விசயனன்றளித்தபொற்குடைக்குச்**
**சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின் சுடர்மணித்தொடையல்போன்றனவே.**

(இ - ள்.) ஆழ் தரு பரவை ஏழ்உம்-ஆழமாகவுள்ள ஏழுகடல்களும், வற்றிடும் ஆறு-வற்றிவிடும்படி, அழித்த-(பருகி) ஒழித்த, கார்-மேகங்கள், உமிழ்ந்திடு - சொரிகின்ற, நெடு நீர் - மிக்க நீர், தாழ் தரு சரத்தான் மேய்ந்ததற்கு இடை-நிலைபெற்றஅம்புகளினால் வேய்ந்த கூடத்திற்கு இடையே, ஓர் தனி திவலைஉம் பொசியாமல் -ஒருசிறுதுளியும் பொசியமாட்டாமையால், வீழ்தரும் - (அச்சரக்கூடத்திற்கு வெளியிற் சுற்றிலும்) விழுகிற, அருவி - நீரருவிகளானவை,—பாவகன் தனக்கு விசயன் அன்று அளித்த பொன் குடைக்கு - அக்கினிதேவனுக்குஅருச்சுனன் அப்பொழுதுகொடுத்த அழகிய அக்குடைக்கு, சூழ்தர நிரைத்து தூக்கிய - சுற்றிலும்வரிசையாகக் கட்டித் தொங்கவிட்ட, முத்தின் சுடர்மணி தொடையல் - முத்துக்களினாலாகிய ஒளியுள்ள அழகியமாலைகளை, போன்ற-ஒத்தன; (எ - று.)

கவிகைபோற் சரக்கூடத்தை அருச்சுனன் கட்டியதனால் இடையே நீர் சிறிதும்விழாமல் சுற்றிலும் நீர்விழுவது, அருச்சுனன் அக்கினிதேவனுக்கு அளித்த சரக்கூடமாகிய கவிகைக்கு முத்துத்தொடையல் போன்றிருந்ததென்க; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. (குடையின்சுற்றிலுந் தொங்குகிற சரங்கள், ஜாலரென்று உலகில் வழங்கப்படும்.) விழும் மழைநீர் அருவிபோலுதலால், அருவியெனப்பட்டது. 'வேய்ந்ததற்கு' என்றும் பாடமுண்டு.(777)

**57.** **மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைக ளிந்திரன்மதலைவாளிகளால்**
**கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக் காண்டகுதூண்டிரள்காட்ட**
**அண்டகூடத்திற்கிந்திரன்பளிங்கா லமைத்தபல்லாயிரகோடி**
**சண்டதூணங்கள்போன்றனபரந்து தனித்தனிமுகில்பொழிதாரை.**

(இ - ள்.) மண்டி மீது எழுந்த வன்னியின் சிகைகள்-நெருங்கி மேலெழுந்த அக்கினிச்சுவாலைகள்,—இந்திரன் மதலை வாளிகளால் கண்ட கூடத்திற்கு அமைத்த காண் தகு செம்பவளம் தூண் திரள்

காட்ட-இந்திர குமாரனான அருச்சுனன் அம்புகளினாலுண்டாக்கிய மண்டபத்தின் மேற்பகுதிக்கு (ஆதாரமாகக்கீழே) அமைத்த அழகிய சிவந்த பவளத் தூண்களின் கூட்டங்களை யொத்திருக்க,—முகில் பரந்து தனி தனி பொழி தாரை-மேகங்கள் பரவித் தனிச் தனிச் சொரிகின்ற மழைநீர்த்தாரைகள், அண்ட கூடத்திற்கு இந்திரன் பளிங்கால் அமைத்த பல் ஆயிரம்கோடிசண்டம்தூணங்கள் போன்றன-அண்டத்தின் மேல்முகட்டுக்கு (ஆதாரமாக) இந்திரன் படிகக்கல்லினாற்செய் தமிகப்பலவலிய தூண்களையொத்தன;

இந்திரன்கட்டளையால் மேகங்கள் வந்து மிக்கமழையைச் சொரியவும், அவன்மகனது உதவியினால் அக்கினி இடையூறு சிறிதுமின்றிச் சொலித்தெரிந்த தென்பதாம். பூமியிலிருந்துபார்ப்பவர்க்குச் சரக்கூடம்வரையும் தாவியெரியும் சுவாலைகள்-சரக்கூடமே ஒருமண்டபமாக, அதன்பவழத்தூண்களைப் போன்றிருந்தன: சரக்கூடத்தின் மேனின்று பார்ப்பவர்க்கு வான்முகட்டிலிருந்து மழைநீர்த்தாரைபொழிவன - அண்டத்தின் மேன்முகட்டிற்கு வைத்த பளிங்குத் தூண்போன்றனவென்க: **தற்குறிப்பேற்றவணி.** மழைத்தாரையின் பருமையை விளக்குவார், அதற்குத் தூணை உவமைகூறினர். மேகங்களையேவி மழைபொழிவித்தவன் இந்திரனாதலால், 'இந்திரன் அமைத்த தூணம்' என்றது. (778)

### 58.—தட்சகன்மனைவியை அருச்சுனன் அம்பெய்துவீழ்த்துதல்.

தக்ககன்றன்னைக்கூயினர்தேடிச் சாயகமண்டபஞ்சுற்றி
மிக்கவிண்ணவர்கடிரிதரவவன்றன் மெல்லியன்மகவையும்விழுங்கி
அக்கணந்தன்னிலந்தரத்தெழலும் வீழ்த்தினனம்பினாற்றுணித்துச்
செக்கனலுருவச்சென்னியையுரகர் கன்னியைத்திருமணஞ்செய்தான்.

(இ-ள்.) மிக்க விண்ணவர்கள் - மிகுந்த தேவர்கள், தக்ககன் தன்னை கூயினர் தேடி - (தங்கள் அரசனான இந்திரனது நண்பனாகிய) தக்ஷகனென்னும்நாகராசனைக் கூவியழைத்துத் தேடிக்கொண்டு, சாயகம்மண்டபம் சுற்றி திரிதர-(அருச்சுனனமைத்த) சரக்கூடத்தைச் சூழ்ந்து திரிய,—அவன் தன்மெல்லியல்-அந்தத் தக்ஷகனுடைய மனைவி, மகவைஉம் விழுங்கி-(தனது) குட்டியான சிறுநாகத்தையும் வாயினுட்கொண்டு, அந்தரத்து எழலும்-(தப்பிப் பிழைத்தற்பொருட்டு) வானத்தின்மீது பறந்தெழுந்தவளவில்,-உரகர் கன்னியை திருமணம் செய்தான் - நாககன்னிகையை விவாகஞ்செய்து கொண்டுள்ளவனான அருச்சுனன், அக்கணந்தன்னில் - அந்தக்ஷணத்திலே, செம்கனல் உருவம் சென்னியை-சிவந்த அக்கினிபோன்ற நிறத்தையுடைய (அந்த நாகமாதின்) தலையை, அம்பினால் துணித்து-(தான் எய்த) பாணத்தினால் துண்டித்து, வீழ்த்தினான் - (அப்பெண்பாம்பைக்) கீழே தள்ளினான்; (எ - று.)

சிலகாலத்துக்கு முன்னே ஒருநாககன்னிகையை விரும்பி மணஞ்செய்து கொண்டவன், அக்கினிக்குத் தான் உறுதிமொழியளித்ததையே முக்கியமாகக்கொண்டு, ஒருநாகமாதை அம்பினால் துணித்துவீழ்த்தினனென அருச்சுனனது பட்சபாதமற்றவுறுதி

தலையை விளக்கினர். உரகர் கன்னி-உலூபி. அருச்சுனன் அம்பி
னால் துணித்து வீழ்த்தியபோது அந்நாகமாதின் தலையும் உட
லும் வேறாகித் தலை அக்கினிக்குவெளியிலும் உடல் அக்கினிக்கு
உள்ளுமாக விழுந்ததனால், தாய்இறக்க, அதன்வாயிலுள்ளமகன்
மாத்திரம் வால்துணிப்புண்டவளவோடு பிழைத்தன னென்று
அறிக. செக்கர் நீடுவட்சென்னியை என்றுபிரதிபேதம். (779)

## 59.—தட்சகன்மகனை இந்திரன் அரிதிற் பாதுகாத்தல்.

மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்தினனைத்துக்
கருவயிற்றெழிலித்தாரையால்வருணக் கடவுடன்கணைகளாலவித்துச்
செருவயிற்புரளவொதுக்கியத்தோழன் சிறுவனைச்சென்றெடுத்தணைத்தான்
ஒருவயிற்பிறந்தோனுதலின்மகவா னுடனுடன்றிலனுதாசனனே.

(இ - ள்.) (உடனே), மருவு அயில்-பொருந்திய கூர்மையைக்
கொண்ட, சதகோடியின்-வச்சிராயுதத்தையுடைய, இறை-(தேவ)
ராசனான இந்திரனானவன்,-சென்று - (அருகிற்) போய், ஐராவ
தத்தின் மும் மதத்தினால் நனைத்து - (அந்த நாகமாதின் துணி
பட்டதலையைத் தான் ஏறிய) ஐராவதமென்னும்யானையின்மூன்று
வகை மதநீரினால் நனைத்து, கரு வயிறுஎழிலிதாரையால் வருணக்
கடவுள் தன் கணைகளால் அவித்து - சூல்கொண்ட வயிற்றை
யுடைய மேகங்களின் மழைத்தாரைகளாலும் வாருணாஸ்திரங்களி
னாலும் (அதிற்பற்றிய தீயைத்) தணித்து, செருவயின் புரள
ஒதுக்கி - அப்போர்க்களத்தினின்று புரண்டுவிலகும்படி (அத்
தலையை) ஒதுக்கி, அ தோழன் சிறுவனை எடுத்து அணைத்தான்-
(அதனுள்ளேயிருந்து பிழைத்த) தனது நண்பனான தக்ஷகனது
குமாரனை எடுத்து அணைத்துக்கொண்டான்; (அங்ஙனம் அருகில்
வருகையில் இந்திரனை அக்கினி சுடாதிருந்த காரணம் என்னெ
னின்,—)உதாசனன்-அக்கினிதேவன், மகவானுடன்-இந்திரனு
டன், ஒரு வயின் பிறந்தோன் ஆதலின் - ஓரிடத்திற் பிறந்தவனா
தலால், உடன்றிலன்-(அவனைப்) பகைத்துச் சுட்டானில்லை;

அக்கினி, இந்திரனுடன் பிறந்தவனாதலால், அவ்வுடற்பிறப்
பாலாகிய அன்புபற்றி அவனை யெரித்தில னென்று **தற்குறிப்பேற்ற**
வகையாற் கவி காரணங் கற்பித்துக்கூறினார். திருமாலினதுமுகத்
தினின்று இந்திரனும் அக்கினியும் தோன்றின ரென்று (முகாதிந்
த்ரஸ்சாக்னிஸ்ச) வேதம் கூறும். ஐராவதத்தின்மே லேறியுள்ள
இந்திரன் அருகிற் சென்றபோது, அந்த யானையின் மதநீர் அந்தப்
பாம்புத்தலையின் மேற்சொரிந்ததனால் 'ஐராவதத்தின் மும்மதத்
தினால்நனைத்து' என்றார்.

## 60.—அதுகண்ட அருச்சுனன் கோபாவேசங்கொண்டு பொருதல்.

அன்னைவாயோடுதன்வாலதிதுணியுண் டலமருமச்சுவசேனன்
தன்னைவாசவன்போய்வீடுகண்டுழியத் தனஞ்சயன்றனதுவெங்கணையால்
முன்னைவானவரைமுனைமுகந்தன்னின் முதுகிடமுதுகிடமுருக்கிப்
பின்னைவாரிதங்களேழையும்பொருது பின்னிடப்பின்னிடப் பிளந்தான்.

(இ - ள்.) அன்னை வாயொடு தன் வாலதி துணியுண்டு அலமரும் - (தனது) தாயின் தலை துணிப்புண்டபோது (அதன் நெஞ்சினுள்ளேயிருந்த) தனது வாலும் (அதனோடு) துணிக்கப் பட்டுத் துடிக்கின்ற, அச்சுவசேனன் தன்னை - அசுவசேனனென் னும்பெயருள்ள தக்ஷகபுத்திரனை, வாசவன் போய் விடு கண்ட உழி - இந்திரன் சென்று (இவ்வாறு) விடுவித்தபொழுது, அ தனஞ்சயன் -(அதுகண்டு பெருங்கோபங்கொண்ட) அவ்வருச்சுன னவன், தனது வெம் கணையால் - தன்னுடையகொடிய அம்புகளி னால், முன்னை - முதலில், வானவரை - (தன்னையெதிர்த்த) தேவர் களை, முனை முகந்தன்னில் முதுகு இட முதுகுஇட முருக்கி-போர்க் களத்தில் மேன்மேற் புறங்கொடுக்கும்படி பொருது, பின்னை - (அதன்) பின்பு, வாரிதங்கள் ஏழைஉம் - ஏழுமேகங்களையும், பொருது-போர்செய்து, பின்னிட பின்னிட பிளந்தான் -மேன்மேற் பின்னிடும்படி பிளந்திட்டான்; (எ - று.)

வாய் - தலைக்கு, ஆகுபெயர். அலமரும், அலமா - பகுதி. கண்டுழி-தொகுத்தல். அடுக்குக்கள், தொடர்ச்சிபற்றியன. (781)

## 61.—அசுவசேனன் அஸ்திரமாய்க் கர்ணனை யடைதல்.

தீரமால்பொருதுவீடுகண்டதற்பின் செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர் பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரண நமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனைவெம்பகழியாகியதெம் மேதினியினும்பெருவார்த்தை.

(இ-ள்.) மால் தீரம் பொருது வீடு கண்டதன்பின் - இந்திரன் தைரியத்தோடு போர்செய்து (அசுவசேனனை) விடுவித்தபின்பு,— செக்கர் மெய் தக்ககன் பயந்த பாரம் மாசுணம் - செந்நிறமான உடம்பை யுடையதும் தக்ஷகன்பெற்றதுமான பருத்த அப்பாம் பானது, அ விசயனுக்கு யாவர் பகை என பலரைஉம் வினவி- (தனது தாயைக் கொன்று தன்னையும் வாலறுத்த) அந்த அருச் சுனனுக்குப் பகையாயுள்ளவர் யாரென்று பலரையும் விசாரித்து, (அவனுக்குப் பகைவன் கர்ணனே யென்று பலருஞ்சொல்லக்கேட் டறிந்து), சூரன் மா மதலை சரணம்ஏ நமக்கு அரணம் என போய் தொழுது எய்தி-சூரியனது சிறந்தகுமாரனான அக்கர்ணனுடைய பாதங்களே நமக்குப் புகலிடமென்று எண்ணிச் சென்று வணங்கி (அவனைச்) சரணமடைந்து, வீரம் மா முனை வெம் பகழி ஆகியது- உக்கிரங்கொண்ட சிறந்த நுனியையுடைய கொடிய அம்பாய் அமைந்தது; எ மேதினியின்உம் பெரு வார்த்தை-(இது) எவ்வுல கத்திலும் பிரசித்தமாகச் சொல்லப்படும் விஷயமாம்; (எ - று.)

'மால்' என்பது - இந்திரனுக்கு ஒருபெயராதலைத் திவாகரத் தாலும் அறிக. அவ்வனத்தினின்று ஓருயிரையும் பிழைக்கவிடுவ தில்லை யென்று அருச்சுனன் செய்கிறமுயற்சிக்கு இந்திரன்நெருங்கி வந்து மாறுசெய்ததும் வாருணாஸ்திரம் பிரயோகித்ததுமே, 'பொருது' எனப்பட்டன. பாண்டவர்களும் துரியோதனாதியர்களும் துரோணாசாரியரிடத்தில் கற்றுத்தேர்ந்த பின்பு தம்தம் திறங்காட் டியபோது கர்ணன் தான் இடையில் வலியப்பிரவேசித்துத் தன்

திறங்காட்டி அருச்சுனனோடு மாறுபட்டு "முனைந்த போரில் முடி துணித்து உன் முகசரோருகத்தினூற் சினந்தணிந்து அரங்க பூசை செய்வன்" என்று சபதங்கூறியுள்ளானாதலால், அவன் அருச்சுன னுக்குப் பகையென்பது பிரசித்தம். வீரம் மா முனை என்பதற்கு- பராக்கிரமத்துக்கு இடமான பெரிய போருக்கு உரிய எனினும் அமையும். திருமாலாற் கொல்லப்பட்ட மதுகைடபரென்னும் அசுரர்களுடைய மேதசினால் [உடற்கொழுப்பினால்] நனைந்தமை பற்றி, பூமிக்கு, மேதினீ என்று பெயர்: அதன் திரிபு ஆகிய மேதினி என்பது-இங்கு, பொதுப்பட, உலகமென்றமாத்திரமாய் நின்றது.

## 62.—இந்திரன் அங்குத் தட்சகனைக் காணாமல் அருச்சுனன்மீது கோபித்தல்.

தோழன்மாமகனைக்கண்டபின்றனது தோழனையொருவயிற்காணான்
வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான் விழிகளாயிரங்களுஞ்சிவந்தான்
யாழமாதிரத்தினெதிரொலியெழுமா றெயிற்றிளநிலவெழநகைத்தான்
தாழமாநிலத்தினின்றமர்விளைக்குந் தன்பெருந்தனயனைமுனிந்தான்.

(இ - ள்.) (இந்திரன்), தோழன் மா மகனை கண்டபின்-(தனது நண்பனான) தக்ஷகனுடைய சிறந்த குமாரனாகிய அசுவசேனனைக் கண்டபின்பு, தனது தோழனை ஒருவயின் காணான்-தனது நண்ப னான அத்தக்ஷகனை ஓரிடத்துங் காணாதவனாய்,(அவ்வருத்தத்தால்), வேழம் மா முகத்தில் கைத்தலம் புடைத்தான் - (தான் ஏறிய) ஐராவதயானையின் பெரியமத்தகத்தின்மேற் கையைப் புடைத்து, விழிகள் ஆயிரங்கள்உம் சிவந்தான் - (கோபத்தால்) ஆயிரங்கண் களுஞ் சிவக்கப்பெற்றவனாய்,மாதிரத்தின் எதிர் ஒலி எழும் ஆறு- திக்குக்களிற் பிரதித்தொனி யுண்டாகும்படி, எயிறு இள நில எழ நகைத்தான்-(தனது) பற்களின் இளநிலாப்போன்ற வெள்ளொளி வெளிவீசச் சிரித்து, தாழ மா நிலத்தில் நின்று அமர் விளைக்கும் தன் பெருந்தனயனை-கீழே பெரிய பூமியில் நின்று (அங்கு நின்ற படியே) பெரும்போர் செய்கிற தனது சிறந்தபுத்திரனான அருச் சுனனை,முனிந்தான்-கோபித்தான்; (எ-று.)—யாழ-முன்னிலையசை யாகற்பாலது அசைநிலையாய் நின்றது.

தான்பெற்ற சிறந்த புதல்வன்மீது கோபிக்கும்படி தக்ஷகனிடம் இந்திரனுக்கு இருந்த நண்பின்சிறப்பு, இதில் விளங்கும். தாழ- கீழாக. தான்கீழ்நின்றபடியே மேலுள்ளாரை வெல்லுமாறு போர் செய்தலின் அருமைதோன்ற, 'தாழ மாநிலத்தில் நின்று அமர் விளைக்கும்' என்றார். கையைக் கீழேபுடைத்தல்-கோபாவேசத்தின் காரியம். கண்சிவத்தல்-கோபக்குறி. (783)

## 63.—இந்திரனும் மற்றைத் திக்குப்பாலகர்களும் போர்க்கு எழுதல்.

மேகசாலங்களிளைத்தது்நிளைத்து மேலிடுவின்னவரணிந்த
பூகசாலங்களுடைந்ததுங்கண்டா னுருத்தெழுந்துள்ளமுங் கொதித்தான்
ஏகசாபமுந்தனனேகசாயகமு மிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின் பாலரும்பகடுமேல்கொண்டார்.

(இ - ள்.) பாகசாதனன்உம் - இந்திரனும்,—மேக சாலங்கள் இளைத்தது உம்-(தான் ஏவிய) மேகக்கூட்டங்கள் இளைப்படைந்த

தையும், திரைத்துமேலிடு விண்ணவர் அணிந்த யூகம் சாலங்கள் உடைந்ததுஉம்-இடைவிடாது நெருக்கிச் சென்றெதிர்த்த தேவர்கள் வகுத்த படைவகுப்பின் கூட்டங்கள் அணிகுலைந்ததையும், கண்டான் - பார்த்து, உருத்து எழுந்து உள்ளம்உம் கொதித்தான் - கோபித்துப் பொங்கி மனமும் வெதும்பப்பெற்று,தன் ஏக சாபம்உம்-ஒப்பற்ற தனதுவில்லையும், (தன்) ஏக சாயகம்உம்-ஒப்பற்ற தனது அம்பையும், இமைப்பு அளவையின் விரைந்து எடுத்தான் - கண்ணிமைப் பொழுதிலும் விரைவாக எடுத்துக்கொண்டான்; ஏனைய திசையின்பாலர்உம் - மற்றைத் திக்பாலகர்களும், பகடு மேல்கொண்டார்-(தம் தம்) வாகனங்களில் ஏறிக்கொண்டார்கள்; (எ - று.)

இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசாநன் என்னும் எண்மரும் அஷ்டதிக்பாலகர்; இவர்களைக் கிழக்கு முதலாக முறையே கொள்க. இவர்களில் அக்கினிக்கு ஆட்டுக்கடாவும், யமனுக்கு எருமைக்கடாவும், வருணனுக்கு ஆண்முதலையும், வாயுவுக்கு ஆண்மானும், குபேரனுக்கு ஆண் குதிரையும், ஈசாநனுக்கு எருதும் வாகனங்களாம்; ஆதலால், விலங்கின் ஆண்பெயராகிற 'பகடு' என்ற சொல்லாற் குறித்தார். 'சுருங்கச் சொல்லல்' என்னும் அழகு பொருந்த இங்ஙனம்கூறியதில், உபலக்ஷணவிதியால், நிருருதிக்கு வாகனமாகிய நரனும் அடங்கும். ஏகசாயகமுமிந்திரதனுவும் என்று பிரதிபேதம். (784)

## 64.—மற்றுமுள்ள தேவர்களும் வந்துபொருதல்.

தேவருங்கோடிதேவருக்கொருவர் சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டு முந்துறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தி னிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடநேக விபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார்.

(இ-ள்.) தேவர்உம்-(முப்பத்துமுக்கோடி) தேவர்களும்,கோடி தேவருக்கு ஒருவர் சிரங்கள் ஆய் நின்ற முப்பத்துமூவர்உம் - ஒவ்வொருகோடி தேவர்களுக்கு ஒவ்வொருவர் தலைமையாய்நின்றமுப்பத்துமூன்று தேவர்களும், தம் தம் வாகம் மேல்கொண்டு-தங்கள் தங்களுக்கு உரிய வாகனங்களில் ஏறிக்கொண்டு, முந்துற வந்து வந்து அணிந்தார்-முற்பட வந்துவந்து அணிவகுத்தார்கள்;(பின்பு) புவனத்து யாவர்உம்-உலகங்களிலுள்ள எல்லோரும், உகத்தின் இறுதி இன்றுகொல் என்று இரங்கினர் நடுங்க-கற்பமுடிவு காலம் இப்பொழுதுதானோ என்று பரிதபித்து அஞ்சும்படி,அநேக விபுதர்உம்-(இங்ஙனம்கூடிய) தேவர்கள் பலரும்,மேவரு மனிதர் இருவரோடு - கூடிநின்ற (கிருஷ்ணார்ச்சுனராகிய) மனிதரிருவருடனே, வெகுண்டு போர் விளைத்தார்-கோபித்துப் போர்செய்தார்கள்;

முப்பத்துமூவரென்று இயற்கை யெண்பற்றிக் கூறினாராயினும், ஏற்புழிக்கோடலால், முப்பத்துமூவரில், அஷ்டவசுக்களைச்சேர்ந்த ஒருவன் சாபத்தினால் வீடுமனாகப்பிறந்திருத்தலால் அவனை நீக்கி அவரைமுப்பத்திருவரென்றே கொள்ளுதல் சாலும்.யான்முன்னே

யான்முன்னே யென்று மிக்க உற்சாகத்தோடு ஒருவரினும் ஒருவர் முற்பட்டு விரைந்து போர்க்குவருதல் சிறந்தவீரரது இயல்பாதலால் 'முந்துற வந்து வந்து அணிந்தார்' என்றார். (785)

## 65.—துவாதசாதித்தர் தோற்றேடுதல்.

பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப் பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்து தனிப்பெருந்திகிரியுந்தகர
உச்சமாமகத்திற்பண்டோடிந்தொடியா தொழிந்தனபற்களுமொடிய
அச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னொருவருமகன்றார்.

(இ - ள்.) பச்சை வாசிகள்உம் செய்யன ஆக-(தங்கள் தேரிற் பூட்டிய) பச்சைநிறக்குதிரைகளும் (அம்புபட்டு இரத்தங்குழம்பிய தனால்) செந்நிறமுடையனவாகவும், பாகர்உம்-(தங்கள்) தேர்ப்பாகர்களான அருணர்களும், பதங்கள்ஏ அன்றி - (இயல்பாகக்) கால்களின்றி யிருத்தல் மாத்திரமேயன்றி, தச்ச வாளிகளால் கரங்கள்உம் இழந்து - தைத்த அம்புகளினாற் கைகளையும் இழக்கவும், பெருதனி திகிரிஉம் தகர-பெரிய ஒற்றைச்சக்கரங்களும் உடையவும், பண்டு உச்சம் மா மகத்தில் ஒடிந்து ஒடியாது ஒழிந்தன பற்கள்உம் ஒடிய-முன்பு உயர்ந்த பெரிய (தக்ஷமுனிவனது) யாகத்தில் ஒடிந்தவை போக ஒடியாது மிச்சப்பட்ட பற்களும் ஒடியவும், அருக்கன்உம்-(பூஷா என்னுஞ்) சூரியனும், ஒழிந்த அருக்கர் பன்னொருவரும் - மற்றைச் சூரியர் பதினொரு பேரும், அச்சம்ஏ துணை ஆ அகன்றார்-பயமே (தமக்குத்) துணையாக அமைய ஓடிப் போனார்கள்; (எ - று.)

துவாதசாதித்தியராவார் - இந்திரன், தாதா, பர்ஜந்யன், த்வஷ்டா, பூஷா, அரியமா, பகன், விவஸ்வான், விஷ்ணு, அம்சுமான், வருணன், மித்ரன் என்னும் பெயரினர். இவர்களில் பூஷா வென்னுஞ் சூரியன் தக்ஷமுனிவன் செய்த யாகத்தில் வீரபத்திரக் கடவுளாற் பல்லொடிந்தமை பற்றி, அவனைத் தனியே யெடுத்துக்கூறி, மற்றையோரை 'ஒழிந்தபன்னொருவர்' என்றார். தனது திருமகளாய்த்திருவவதரித்தஅம்பிகையைப் பரமசிவனுக்குத்திருமணஞ்செய்து கொடுத்த தக்ஷப்பிரஜாபதி, மாமனாகிய தனக்குத் தக்க மரியாதை செய்திலனென்ற காரணத்தாலும் மற்றுஞ் சில காரணங்களாலும் சிவபிரான்மேற் சினங்கொண்டு அவ்வுமாமகேசுரர்களை வரவழையாது அவிர்ப்பாகமுங் கொடாமல் அவமதித்து மற்றைத்தேவர்முனிவராதியோருடனே பெரியதொருயாகத்தைச் செய்யாநிற்கையில், தாக்ஷாயணி தனது தாய்தந்தையரையும் தங்கை தமக்கை முதலிய சுற்றத்தாரையும் ஒருங்கு கண்டு கூடிக் குலாவலாமென்னுங் கொள்கையால் தான் மாத்திரம் அவ்வேள்விக்குச் சென்று அங்கு அம்முனிவன் தன்னை அலட்சியஞ்செய்து தன்பதியையும் பழித்ததனால் அக்கினிபிரவேசஞ்செய்துதக்ஷபுத்திரியான உருவத்தை யொழிக்க, அதுகேட்டுச்சுடுசினங்கொண்ட உருத்திரமூர்த்தி தனது சடையைக் கீழேயடித்து அதனினின்று தோன்றிய வீரபத்திரக்கடவுளை நோக்கி 'நீசென்றுதக்கன்வேள்வியை அழித்து வருக' என்று கட்டளையிட, அவ்வீரன், அம்பிகை

யின் அமிசமான காளியோடும்பலவகைப்பூதகணங்களோடும் புறப்பட்டுப்போய் யாகசாலையில் தீப்பற்றவைத்து, யூபஸ்தம்பத்தை ஒடித்துவிட்டு, அங்கு எதிர்ப்பட்ட தேவேந்திரனை வெள்ளையானையுடனே அள்ளியெடுத்துநிலத்திலரைத்தும், அக்கினியின் கைகளையும் நாக்கையும் அறுத்தும், யமனை எலும்புந் தசையும்அழியச் சிதைத்தும், நிருருதியின் கைகளைத்தறித்தும்,வருணனைக் கடலில் வீசியும், வாயுவை அண்டகோளகைமுகட்டி லடித்தும், குபேரனைச் செண்டாடியும், பகனென்னுஞ் சூரியனது கண்களைப் பறித்தும், அரியமாவென்னும் ஆதித்யனது தாள்களையறுத்தும், பூஷாவினது பற்களை யுதிர்த்தும், சந்திரனைத் தரையில்தேய்த்தும், வசுக்களையும் மருத்துவரையும் இரத்தஞ் சிந்தப்புடைத்தும், மானுருக்கொண்டு ஓடின யாகபுருஷனது கொம்புகளைப் பிடுங்கியெறிந்தும், பிருகு முனிவனது நெற்றிமயிரைப் பறித்தும் பங்கஞ்செய்து, தக்ஷமுனிவனையுந் தலைதுணித்து வேள்வியை யழித்து மீண்டனனென்பது, இங்கு அறியவேண்டிய கதை. 'அருக்கன்' என்றது-அந்த மாதத்துக்குஉரிய சூரியனையும், ஒழிந்த அருக்கர் பன்னொருவரென்றது-மற்றைப் பதினொரு மாதங்கட்கும் உரிய சூரியர்களையுமெனினுமாம்.பச்சைநிறக்குதிரையும், இடைக்குக்கீழ்ப்பட்ட உறுப்பில்லாத அருணனாகிய பாகனும், ஒற்றைத் தனியாழித்தேரும் ஆதித்தனுக்கு உரியனவாதலாற் கூறப்பட்டன. தச்ச-தைத்த: போலி. பன்னொருவர்=பதினொருவர்: மரூஉ. (786)

## 66.—ஏகாதசருத்திரர்கள் தோற்றோடுதல்.

மாறுபட்டுழியப்பற்குனன்கணையான் மழுக்களுஞ்சூலமுமுடைய
நீறுபட்டுடலினீற்றுடன்படிய நெடுங்கொடியூர்தியேறுகளும்
ஏறுபட்டழியச்சடையில்வார்நதியா லேறியதூளிவானெறியும்
சேறுபட்டிடுமாறோடினர்மீளப் பதினொருதிறலுருத்திரரும்.

(இ - ள்.) திறல் பதினொரு உருத்திரர்உம்-வலிமையையுடைய ஏகாதசருத்திரர்களும்,—மாறுபட்ட உழி - எதிர்த்துப்போர்செய்த போது, அ பற்குனன் கணையால்-அந்தஅருச்சுனனது அம்புகளால், மழுக்கள்உம் சூலம்உம் உடைய - (தம்தமது ஆயுதங்களாகிய) மழுவும்சூலமும் உடைபடவும், நீறுபட்டு உடலின் நீற்றுடன் படிய-(அந்தஉடைந்த ஆயுதங்கள்) நீறாகப்போய் (அந்தப்பொடி) தங்களுடம்பிலே(இயல்பாகப்பூசியுள்ள)விபூதியுடனேபடியவும்,—நெடுங் கொடி ஊர்தி ஏறுகள்உம் ஏறுபட்டு அழிய - (தங்கட்கு) உயர்ந்த துவசமும் வாகனமுமான எருதுகளும் பின்னப்பட்டு அழியவும்,—(தாங்கள் ஓடிச்செல்லுங்காலத்து),சடையில்வார்நதியால்-(தங்கள்) சடையினின்றுவழிகின்ற கங்கைநதிப்பெருக்கினால், ஏறிய தூளி - (போரில்)மேற்கிளம்புகிற புழுதி, வான் நெறிஉம் சேறுபட்டிடும் ஆறு-தேவலோகத்துவழியளவும் சேறுபட்டிடும்படியும், மீள ஓடினர்-(தம்மிடத்துக்குத்) திரும்பும்படி புறங்கொடுத்தோடினார்கள்;

'நீறுபட்டுடலினீற்றுடன்படிய' என்றும், 'ஏறுகள் ஏறுபட்டழிய' என்றும் கூறியது-கவிசமத்காரம். ஏறு-ரிஷபம்.ஏறுபட்டு

என்றவிடத்து 'எறு'-படைக்கலத்தழும்பு: வாளேறு, வில்லேறு என வருதலுங் காண்க. (787)

## 67.—வசுக்களும் அசுவிநீதேவரும் தோற்றோடுதல்.

எண்ணியவசுக்களெண்மரிற்கங்கை யென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள் புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசயன்வெங்கணையா னுப்புலர்ந்துள்ளமுநடுங்கி
அண்ணியநிலயம்புகுந்தனரென்று னிற்பரோவாயுள்வேதியரே.

(இ - ள்.) எண்ணிய வசுக்கள் எண்மரில்-எண்ணித்தொகையிடப்பெற்ற வசுக்களெட்டுப்பேரில், கங்கை என்னும் யாய் வயிற்றின் உற்பவித்த புண்ணியன் ஒழிந்தோர்எழுவர்உம்-கங்கையென்னும் தாயின் வயிற்றில்(வீடுமனாய்த்)தோன்றியுள்ளநல்வினையுடையோனை பிரபாசனென்பவனொழிந்தவரான ஏழுபேரும்,—தங்கள் புயம் வலிமையின் பொருதிடுவார் - தங்களுக்கு இயல்பாகவுள்ள தோள்வலிமையினாற் போர்செய்திடுபவர்களாகி,நண்ணிய அமரின்-நேர்ந்த யுத்தத்தில், விசயன் வெம் கணையால் - அருச்சுனனது கொடிய அம்புகளினால், நா புலர்ந்து - நா ஈரம்வறளப்பெற்று, உள்ளம்உம் நடுங்கி-மனமும் நடுங்கி, அண்ணிய நிலயம் புகுந்தனர்-(தாம்) தங்கியுள்ள இடத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள், என்றால்-என்று சொன்னால், ஆயுள்வேதியர் நிற்பர்ஓ-தேவ வைத்தியர்களான அசுவிநீதேவர்கள் (ஓடாது) நிற்கமாட்டுவரோ? [மாட்டார்: ஓடினரென்றபடி]; (எ - று.)

புயவலிமையாற் பொருதிடுபவரான வசுக்களேபுறங்கொடுத்து ஓடினரென்றால், வைத்தியஞ்செய்தலையேதம்தொழிலாகவுடையவரான அசுவிநீதேவர்கள் அருச்சுனன்முன் போருக்கு நிற்கமாட்டுவரோ? என்பதாம். இங்ஙனம்ஒருபொருளைச்சொல்லி அதுகொண்டு கைமுதிகநியாய மென்னும் தண்டாபூபிகாநியாயத்தால் மற்றொருபொருளைச்சாதிப்பது-தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி. தலைமைத்தேவர்களில் ஆதித்தர் பன்னிருவரும் உருத்திரர்பதினொருவரும் வசுக்களெழுவருமாகிய முப்பதுபேர் போரிற் பல்முதலிய சிதையஅடிபட்டுத் தம் தம் வீடுசேர்ந்தனரென்றால், தேவர்கட்குவைத்தியஞ்செய்தற்கே யமைந்தவர்களான அசுவிநீதேவரிருவர் அவ்வாதித்தர் முதலியோர்க்கு நோய்தீர்க்குமாறு வைத்தியஞ் செய்தற்குச் செல்லக்கடவரே யன்றிப் போரில் நிற்கக்கடவரோ? என்ற பொருளும் இதில் தோன்றும். (788)

## 68.—திக்பாலகர்கள் போர்செய்ய மாட்டாமை.

அருணவெங்கனலோன்கனலோடுகலந்தா னுசுகனவற்குநண்பானுன்
கருணையில்யமனுங்காளிடைமடியுங் கனத்திலேகவலையுற்றனனல்
வருணனுங்கடல்கள்வறத்தல்கண்டழிந்தான் மதியுமம்மதிமுடித்தவனும்
இருணிறவரக்கிதானுமிங்கிவரோ டெங்கனம்பொருதுமென்றிளைத்தார்.

(இ - ள்.) அருணம் வெம் கனலோன் - செந்நிறத்தையுடைய வெவ்விய அக்கினிதேவன், கனலொடு கலந்தான்-(அவ்வனத்தை

யெரிக்கிற) அக்கினியோடு சேர்ந்தான்; ஆசுகன் - வாயுதேவன், அவற்கு நண்பு ஆனான் - (வனத்தையெரிக்கிற) அந்த அக்கினிக்குத் துணையாய்விட்டான்; கருணை இல் யமன் உம் - அருளில்லாதவனான யமனும், கானிடை மடியும் கணத்திலே கவலை உற்றனன் - அக்காண்டவவனத்தில் மிகுதியாக அழிகிற சீவராசிகளைக் கவர்தலிலேயே கவலைமிக்கவனானான்; வருணன் உம் கடல்கள் வறத்தல் கண்டு அழிந்தான். (எழுவகை மேகங்களும் ஒருங்குமுகந்துகொள்ளுதலால்) கடல்களெல்லாம் வற்றுதலைக்கண்டு மனமழிந்தான்; மதி உம் - குபேரன் உம், அம் மதி முடித்தவன் உம் - அழகியசந்திரனை முடியிற்பூண்டவனாகிய சிவனும், இருள் நிறம் அரக்கிதான் உம் - கரிய நிறத்தையுடைய நிருருதியும், இங்கு இவரோடு எங்ஙனம் பொருதும் என்று இளைத்தார் - இப்பொழுது இந்தக் கிருஷ்ணார்ச்சுனர்களோடு நாம் எவ்வாறு போர்செய்வோமென்று இளைப்படைந்து போனார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. தான் - அசை.

அறுபத்துமூன்றுஞ் செய்யுளில் 'ஏனைய திசையின்பாலர்' எனப்பட்ட எழுவருடைய நிலைமையை இச்செய்யுளிற்கூறுகின்றாரென்க. ஸோமன் என்ற வடசொற்போலவே அதன்பரியாயநாமமான மதியென்பதும் சந்திரனுக்கேயன்றிக் குபேரனுக்கும் வழங்கும். எழுவரில் நால்வர் வேறுபட்டுப் போர்செய்யமுனையாமையால் மற்ற மூவரும், 'இனி நாம் மாத்திரம் என்செய்வோம்?' என்று இளைத்தனரென்க. இது 'இங்கு' என்பதனால் விளங்கும்; இங்ஙனம் எம்இனத்தவரான நால்வர் வேறுபட்டுச்சென்ற இப்பொழுது என்றபடி. இத்திக்பாலகர் வரிசையினிடையிலேயே சந்திரனைப் புகுத்திச் சொல்லுதல் பொருந்தா தாதலால், மதியும் என்றவிடத்து மதியென்பதற்கு - சந்திரனெனப் பொருள் கூறலாகாது. மதியொடுவைச்சிரவணனுமென்றபாடமும், இருணிறவரக்கன்றானும் என்றபாடமும் பொருத்தமானவையல்ல. (789)

### 69.—அருச்சுனனது அம்புகளினால் மேகங்கள் சிதறுதல்.

சொன்மழைபொழிந்துநாடோறுந்தனது தோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கர்பூபதிதன் பொற்பதம்பொருந்தலர்போலக்
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங் கடவுளர்த்துரந்தவன்கரத்தில்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய் மேனியும்வெளிறிமீண்டதுவே.

(இ - ள்.) நாள்தொறு உம் - தினந்தோறும், சொல் மழை பொழிந்து - சொன்மாரியைச் சொரிந்து, தனது தோள் வலி துதிக்கும் - தன்னுடைய தோள்களின் வலிமையைப் புகழ்கிற, நாவலர்க்கு - புலவர்களுக்கு, பொன் மழை பொழியும் - பொன்மாரியைச் சொரிகின்ற, கொங்கர் பூபதிதன் - கொங்கர்குலத்துத் தோன்றிய வரபதியாட்கொண்டானென்னும்அரசனுடைய, பொன் பதம் - அழகிய பாதங்களை, பொருந்தலர்போல - சரணமடையாத பகைவர்கள் (அவனுக்குப் புறங்கொடுத்தோடுதல்) போல,—கல் மழை பொழியும் காளம் மா முகில் உம் - கல்மழையைச் சொரிகிற கரிய பெரிய மேகங்களும், கடவுளர் துரந்தவன் கரத்தில் வில்மழை

பொழிய - தேவர்களைத் துரத்தியவனான அருச்சுனன் கையிற் கொண்ட (காண்டீவ) வில்லைக்கொண்டு (அம்பு) மழை சொரிதலால், கற்கள்உம் துகள் ஆய் - (தம்மிடத்துஉள்ள) கற்களும் பொடியாகப் பெற்று, மேனிஉம் வெளிறி - உடம்பும் வெளுத்து, மீண்டது - திரும்பிச்சென்றது; (எ - று.)—ஏ - ஈற்றசை.

உவமையணி. சொல்மழை பொழிதல் - நற்பொருள்விளக்கும் இனிய சொற்களைத் தட்டுத்தடையின்றி உபயோகித்தல். நாவலர் - கவிபாடுதலும் உரைகூறுதலும் பிரசங்கஞ் செய்தலுமாகிய நாவின்வன்மையையுடையவர். பொன்மழைபொழிதல் - எதிருதவியையெதிர்பாராமற் புலவர்கட்குப் பொன்னைமிகுதியாகத்தருதல். கடுமையாகப் போர்செய்து வந்த வரபதியாட்கொண்டானது பகைவர்கள் தம்மிடத்து உள்ள ஆயுதம்முதலிய பொருள்கள் உதவாது ஒழிய அச்சத்தால் உடல்வெளுத்து மீண்டுசெல்லுதல் போல, கன்மழைபொழியுங் காளமேகங்கள் கற்கள்துகளாய்த் தம்மிடத்து உள்ள நீர் ஒழிந்ததனால் வெண்ணிறம்பெற்று விலகின என்க. உடல் வெளுத்தல் - அச்சக்குறி. மணி நீர் பொன் பூ மண் கல் தீ என்றவற்றைப் பொழிகிற சம்வர்த்தம் முதலிய ஏழனுள் காளமுகி யென்பதே 'கன்மழை பொழியுங்காளமாமுகில்' என்று இங்குக் குறிக்கப்பட்டதாதலின், 'மீண்டதுவே' என்று ஒருமைமுடிபு கொடுத்தார். பாகையுந்தனது சூரமுந் துதிக்குநாவலர்க்கு என்றும் பாடம். (790)

## 70.—அருச்சுனன் இந்திரனை யெதிர்த்து உக்கிரமாகப் போர்தொடங்குகையில் ஆகாயவாணி யெழுதல்.

மாயவன்றனக்குநேயமைத்துனனா மைந்தனத்தந்தையைமதியான்
தூயவெங்கணையாலவனிடித்துவசந் துணித்தமர்தொடங்குமவ்வளவில்
காயமெங்கணுநின்றொலியெழப்பரந்து காயமில்கடவுளக்கடவுள்
நாயகன்றனக்குப்பரிவுடனவைதீர் நல்லுரைநவின்றதையன்றே.

(இ - ள்.) மாயவன் தனக்கு - கண்ணபிரானுக்கு, நேயம் மைத்துனன் ஆம் - அன்புள்ள மைத்துனனாகிய, மைந்தன் - (இந்திர)குமாரனான அருச்சுனன், அ தந்தையைமதியான் - (தனது) பிதாவாகிய அவ்விந்திரனை லக்ஷியஞ்செய்யாதவனாய், தூய வெம் கணையால் - சுத்தமான கொடிய அம்பினால், அவன் இடி துவசம் துணித்து - அவ்விந்திரனுடைய இடியின் வடிவமெழுதிய கொடியைத் துண்டித்து, அமர் தொடங்கும் அ அளவில் - (மேலும்) போர்தொடங்குகிற அச்சமயத்திலே,—காயம் இல்கடவுள் - அசரீரியானது, காயம் எங்கண்உம் நின்று ஒலி எழ பரந்து - ஆகாயமெங்கும் நின்று ஒலியெழும்படி பரந்து, அ கடவுள் நாயகன் தனக்கு - தேவராசனான அந்த இந்திரனுக்கு, பரிவுடன் - அன்போடு, நவை தீர் நல் உரை நவின்றது - குற்றம்நீங்கிய நல்ல வார்த்தைகளைச் சொல்லிற்று; (எ - று.)—அதனை, மேற்கவியிற் காண்க.

மைத்துனன் என்ற சொல், இங்கு, அத்தையின்மகனை யுணர்த்தும். அவன் துவசம் இடி துணித்து என்று இயைத்து - அவ்விந்திரனுக்குக்கொடியாகிற இடியைத் துண்டித்து என்றும்

பொருள் கொள்ளலாம். காயம்இல் கடவுள்-சரீரமில்லாத சொற்றெய்வம். 'காயமெங்கணும் நின்று ஒலியெழப்பரந்து காயமில் கடவுள்' என்றதில், சொல்லினால் முரண்தொடை அமைந்திருத்தல் காண்க. அருச்சுனனோடு பகைமைகொண்டதனால் இந்திரனுக்கு உளதாகும் அவமானத்தைப் போக்கி அமைதியை விளக்கும் மொழி யாதலால், 'நவைதீர் நல்லுரை' எனப்பட்டது. நவின்றதை, ஐ-சாரியை. அன்றே-ஈற்றசை. (791)

## 71.—அந்த அசரீரிவார்த்தை.

தமரினுமினியதக்ககன்முதலே தப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநும்மாலுய்ந்தனன்றூமக் கொடியனுங்கொண்டலுக்கவியான்
நமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்கு மிங்கிவர்சிறிதிளையார்
அமரினையொழிமினமரினையொழிமி னமரருமமரர்நாதனுமே.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) தமரின்உம் இனிய தக்ககன்-(உங்கட்குச்) சுற்றத்தாரினும் இனியவனான தக்ஷகன், முதலே குருநிலம் சார்ந்தான் தப்பினன் - முன்னமே குருக்ஷேத்திரத்தையடைந்துள்ளானாதலால் (அக்கினிக்குத்) தப்பிப்பிழைத்தான்; குமரன்உம் - (அவனுடைய) புத்திரனான அசுவசேனனும், நும்மால் உய்ந்தனன்-உங்களால் தப்பிப்பிழைத்திட்டான்; தூமம் கொடியன்உம்-புகைக்கொடியையுடையவனான அக்கினியும், கொண்டலுக்கு அவியான்-மேகத்துக்குத் தணியமாட்டான்; நரன்உம் நாரணன்உம் - அருச்சுனனும் கிருஷ்ணனுமாகிய இவ்விருவரும், நமர்களில் இருவர் - நம்மவர்களில் [தேவர்களில்] சேர்ந்த இருவரே; இங்கு இவர்உம் நமக்கு சிறிது இளையார்-இத்தன்மையரான இவர்களும் நமக்குச் சிறிதும் இளைக்கமாட்டார்; (ஆதலால்), அமரர்உம் அமரர் நாதன்உம்-தேவர்களும் தேவராஜனுமான நீங்கள், அமரினை ஒழிமின் அமரினை ஒழிமின் - (இவர்களோடு செய்யும்) போரை ஒழியுங்கள் போரை ஒழியுங்கள்; (எ - று.)

நீங்கள் இவ்வளவு கோபித்துக் கடும்போர்தொடங்குவதற்கு ஏற்றகாரணம் இல்லையென்றும், உங்கள் முயற்சி சிறிதுபயன் பெற்றதாதலால் அவ்வளவோடு மகிழ்ந்து விலகுதல் தகுதியென்றும், இதற்குமேற்செய்யும் முயற்சிகள்எவ்வாற்றாலும் பயன்படா வென்றும் அசரீரிவார்த்தையால் விளங்கும். தக்ககன் ***கெடுமென்று இந்திரன் கரைந்ததாக 47-ஆங் கவியில்வந்தது, அவன் குருநிலஞ்சேர்ந்ததைய றியாமையாலாகும். அக்கினிக்குப்புகைஅறிகுறி யாதலால், அவனுக்கு 'தூமக்கொடியன்' என்று ஒரு பெயர்.

## 72.—அதுகேட்டு இந்திரன் போரொழிய, அருச்சுனன் வெற்றிச் சங்கம் முழக்குதலும் கண்ணன் அருச்சுனன்திறத்தை வியத்தலும்.

என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்ட வெல்லையினிரவிமுன்னிருள்போல்
துன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச் சுரபதிதுறக்கமதடைந்தான்
வென்றுவெங்களங்கொண்டருச்சுனன்றனது வெற்றிகொள் சங்கமுங்குறித்தான்
அன்றுசெந்திருமாலருச்சுனன்பொருத வாண்மைகண்டதிசயித்தனனே.

(இ - ள்.) என்று கொண்டு உரைத்த மொழி-என்று (அசரீரி) சொன்ன வார்த்தை, செவி பட்ட எல்லையின்-காதிற் பட்டவளவில்,—சுரபதி-தேவராசனான இந்திரன், துன்று தன் சேனை கரகணம் சூழ-நெருங்கிய தனது சேனையான தேவர்கள் கூட்டம் (தன்னைச்) சூழ்ந்துவர, இரவி முன் இருள் போல்-சூரியன் முன்னிலையில் இருள் (ஒழிதல்) போல, துறக்கம் அது அடைந்தான்-(அருச்சுனனெதிரில்நில்லாமல் தனது) சுவர்க்கலோகத்தையடைந்தான: (பின்பு), அருச்சுனன்—, வென்று-(இவ்வாறுதேவர்களைச்) சயித்து, வெம் களம் கொண்டு-கொடிய போர்க்களத்தைக் கொண்டு, தனது வெற்றி கொள் சங்கம்உம் குறித்தான்-ஜயத்தைக்கொண்ட தன்னுடையசங்கத்தையும் ஊதிமுழக்கினான்;செம் திருமால்-செந்நிறமுள்ள இலக்குமிக்குக்கணவனானகண்ணபிரான், அன்று அருச்சுனன் பொருத ஆண்மை கண்டு அதிசயித்தனன்-அன்றையதினத்தில் அருச்சுனன் போர்த்திறமையைப் பார்த்து ஆச்சரியப்பட்டான் ; (எ - று.)

பகைவரை வென்றொழித்தபின்பு தமது பெருமிதந்தோன்றப் போர்க்களங்கொண்டு தமதுவெற்றிக்கு அறிகுறியாகத் தம்சங்கத்தை முழக்குதல், வீரரியல்பு. (793)

### 73.—தேவர்களும் இந்திரனும் முனிவர்களும் அருச்சுனனைப் புகழ்தல்.

**வடமதுரையினுந்தென்மதுரையினும்மதிகுல நிருபர்கன்னியரைக்**
**கடிமணம்புரிந்தோன்வின்மையின்வன்மை கண்ணுறக்கண்டவானவரும்**
**புடவியிலொருவரோடுமினிப்பூசல்பொரேனெனப் போனவாசவனும்**
**முடிசடைமவுலிநாரதன்முதலா முனிவருமுடிவறப்புகழ்ந்தார்.**

(இ - ள்.) வடமதுரையின்உம் தென்மதுரையின்உம்-வடக்கிலுள்ள மதுராபுரியிலும் தெற்கிலுள்ள மதுராபுரியிலும், மதிகுலம் நிருபர் கன்னியரை-சந்திர குலத்து இராசகன்னியரிருவரை, கடிமணம் புரிந்தோன்-சிறப்பாக விவாகஞ்செய்துகொண்டவனான அருச்சுனனுடைய, வின்மையின் வன்மை-விற்றொழிலின் வலிமையை, கண் உற கண்ட-கண்ணெதிரிலே பொருந்தக்கண்ட, வானவர்உம்-தேவர்களும், புடவியில் ஒருவரொடுஉம் இனி பூசல் பொரேன் என போன வாசவன்உம்-பூமியில் ஒருவரோடும் இனிப் போர்செய்யமாட்டேனென்று சென்ற இந்திரனும், முடி சடை மவுலி நாரதன் முதல்ஆம் முனிவர்உம்-முடித்த சடைமுடியையுடைய நாரதன் முதலான இருடிகளும், முடிவு அற புகழ்ந்தார்-(அருச்சுனனை) அளவின்றிப் புகழ்ந்தார்கள்; (எ - று.)

மதிகுலநிருபர் கன்னியர் - வசுதேவர்மகளான சுபத்திரையும், சித்திரவாகனபாண்டியன் மகளான சித்திராங்கதையும். முதலில் மதுவென்னும் அசுரன் கைக்கொண்டிருந்தமை பற்றியும், கண்ணுக்கு இனிமையானதுபற்றியும், பின்பு மதுவென்னுஞ் சந்திரகுலத்து அரசனாற் சீர்திருத்தி யாளப்பட்டமை பற்றியும்,

*வடமதுரைக்கு 'மதுரா' என்று பெயர்; வடசொல்: இது, வடநாட்டில் யமுநாநதிதீரத்தி லுள்ளது. †தென்மதுரைக்கு அப்பெயர் வந்த காரணம் - குலசேகர பாண்டியன் காடுகெடுத்து நகராக்கி அந்நகரத்திற்குச் சாந்தி செய்யக் கருதியபொழுது, சோமசுந்தரக்கடவுள் தமது சடையிலுள்ள சந்திரனிடத்தினின்று அமிருதத்தை உகுக்க, அவ்வமுதம் சென்று அந்நகர்முழுவதும் பரவிச் சாந்தி செய்து மதுரமயமாக்கிய தனாலாகும்; இது, தென்னாட்டில் வையையாற்றங்கரையி லுள்ளது. நிலவுலகத்தவனான அருச்சுனனோடு பொருது தோற்றதனால், இந்திரன் 'புடவியி லொருவரொடு மினிப் பூசல் பெர்ரேன்' என்பவனானான். (794)

## 74.—கிருஷ்ணார்ச்சுனரது அருளால் மயன் அத்தீயினின்று தப்பியுய்தல்.

மாசுணத்தரசன்மந்திரமமைத்த வனத்திடையிருந்தமாமயனை
ஆசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனாவபயமென்றரற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கொலோபிழைத்திடாதவரே.

(இ-ள்.) மாசுணத்து அரசன் மந்திரம் அமைத்த வனத்திடை இருந்த மா மயனை-சர்ப்பராசனான தக்ஷகனது அரண்மனை அமைக்கப்பட்டுள்ள அக்காட்டிலே யிருந்த சிறந்த மயனென்பவனை, ஆசுசுக்கணி சென்று அடர்த்தலும் - அக்கினி போய் நெருக்கி வருத்தியவளவிலே, (அந்த மயன்), வெருவி - அஞ்சி, அருச்சுனா அபயம் என்று அரற்ற-'அருச்சுனனே! (நான் உனக்கு) அடைக்கலம்' என்று சொல்லிக் கதற, தேசு உடை திகிரி செம் கண் மால்-ஒளியையுடைய சக்கராயுதத்தையேந்திய சிவந்தகண்களையுடையனான கண்ணபிரான், கருணை செய்தனன்-(அவன் பிழைக்கும்படி) அருள் செய்தான்; தீ வினை உறின்உம்-கொடிய துன்பம் நேர்ந்தாலும், பேசுதற்கு அரிய பெரியவர் நினைக்கின்-சொல்லுதற்கு முடியாத பெருந்தன்மையையுடைய மகான்கள் நினைத்தால், பிழைத்திடாதவர்-(அத்துன்பத்தினின்று) நீங்கிஉய்யாதவர், யார் கொல் ஓ - யார் தான்? (எ-று.)

கொடிய தீயி லகப்பட்ட மயன், கண்ணன் திருவுளத்திற் கருணைசெய்ததனால் அழிவடையாது தப்பிப்பிழைத்தனன் என்ற சிறப்புப்பொருளை 'தீவினையுறினும்பேசுதற்கரியபெரியவர் நினைக்கின் யார்கொலோ பிழைத்திடாதவர்' என்ற பொதுப்பொருள் கொண்டு விளக்கியது - வேற்றுப்பொருள்வைப்பணி. தக்ஷகனுடைய மாளிகையினின்று நெருப்புக்குப் பயந்து ஓடின மயன் 'அருச்சுனா! அபயம்' என்று அரற்ற, அருச்சுனன் அபயங் கொடுக்க, அம்மயனைக் கொல்லும்படி கோபத்தாற் கண்சிவந்து சக்ராயுதத்தையெடுத்த கிருஷ்ணனும் அருச்சுனனபயங்கொடுத்ததைக்கண்டு தானும் அவன்பக்கற் கருணைசெய்தா னென்பது விளங்க 'திகிரிச் செங்கண்மால் கருணைசெய்தனன்' என்றார். நெருப்பின் தொழில் நெருங்கினாலும் என்னும் ஒருபொருள் சமத்காரமாய்த் தோன்று

---

*Muttra. † Mathurai

மாறு 'இவ்வினை உறினும்' என்றார்: பாவப்பயன் நேர்வதாயிருந்தாலும் என்ற பொருளும் தொனிக்கும். கிருஷ்ணார்ச்சுனர் நோக்கத்தைக்கண்டு, அக்கினியும் மயனைத் தகித்திலனென முதனூல் கூறும். மயன், அசுரசிற்பி யெனப்படுவன். (795)

### 75.—அக்கினியினின்று தப்பியவர்கள்.

அழைத்தடல்விசயன்றனைத்துணைசெய்கென் றறுபதியோசனையாகித்
தழைத்தவவ்வனத்தைக்கனத்தைவென்கண்டுதழலவனுகர்ந்திடுங்காலைப்
பிழைத்தவர்மயனுந்தக்ககன்மகவும்பெருந்தவனொருவன்முன்கருப்பம்
இழைத்தநுண்சிறகர்க்கருநிறக்குரீஇயினினங்களுமன்றிவேறிலரால்.

(இ-ள்.) தழலவன்-அக்கினிதேவன்,—அடல் விசயன்தனை-வலிமையுள்ள அருச்சுனனை, துணை செய்க என்று அழைத்து-(எனக்கு) உதவி செய்வாயென்றுகூப்பிட்டு, ஆறுபத்து யோசனை ஆகி தழைத்த அ வனத்தை-அறுபதுயோஜனை விஸ்தீர்ணமுடையதாகித் தழைத்துள்ள அந்தக்காண்டவவனத்தை, கனத்தை வென்கண்டு நுகர்ந்திடு காலை-மேகத்தைப்புறங் கண்டு [வென்று] உண்ட [எரித்திட்ட] போதில்,—பிழைத்தவர்-(அந்த அக்கினியினின்று) தப்பிப்பிழைத்தவர்,— மயனும்—, தக்ககன் மகவும்-தட்சகனுடைய மகனாகிய அசுவசேனனும், பெருந்தவன் ஒருவன் முன்கருப்பம் இழைத்த நுண் சிறகர் கருநிறம் குரீஇயின் இனங்கள்உம்-மிக்கதவமுடைய ஒப்பற்றவனான மந்தபாலமுனிவனால் முன்கருவாகித்தோன்றிய நுண்ணிய சிறகுகளையுடைய கருநிறக்குருவியின் கூட்டங்களும், அன்றி - இவையல்லாமல், வேறு இலர்—; (எ - று.)

பெருந்தவனொருவன் முன்கருப்பம்இழைத்த குரீஇயினங்கள்-மந்தபாலனருளாற் றோன்றிய நான்கு இளையசார்ங்கப்பறவைக் குஞ்சுகள் என்று முதனூலால் தெளியப்படும்: அந்தச் சார்ங்கப்பறவைக்குஞ்சுகள் அக்கினியைப் பிரார்த்தித்ததனாலும் அந்த மந்தபாலமுனிவனது விருப்பத்தைத் தழுவியதனாலும் அக்கினி பறவைக் குஞ்சுகளை எரியாதுவிட்டன னென்பர். யோசனை - காதம். கீழ் 43-ஆம் பாடலில் "தானவரியாருய்ந்தார்" என்று தானவரெவரும் உய்யாமையைக் கூறிய கவி, இங்குஉய்ந்தவரை இன்னாரெனக் கூறினரென்க. பிழைத்தவர் மயனும் மகவும் குரீஇயினினங்களும்-சிறப்பால் உயர்திணை முடிபைக்கொண்டது.

### 76.—அக்கினி திருப்தியடைந்து கிருஷ்ணார்ச்சுனர்களை வாழ்த்திச் செல்லல்.

என்பிறபுகல்வதீரேழுபுவனமெம்பிரானருந்தியதென்னத்
தன்பசிதணியக்காண்டவவனத்திற்சராசரமுள்ளவையனைத்தும்
வன்புடனருந்தி யுதரமுங்குளிர்ந்தான் வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தான்
அன்புடையிருவர்க்காசியும்புகன்றனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தான்.

(இ-ள்.) பிற புகல்வது என் - மற்றும் (நாம்) சொல்வது என்ன? ஈர் எழு புவனம் எம்பிரான் அருந்தியது என்ன - பதினான்குஉலகங்களையும் திருமால் (பிரளயகாலத்தில்) விழுங்குதல் போல, வன்னி - அக்கினிதேவன், காண்டவவனத்தில் சர

அசரம் உள்ளவை அனைத்தும்உம் - அக்காண்டவவனத்திலே ஜங்கமமும் ஸ்தாவரமுமாக வுள்ள பொருள்களையெல்லாம், தன் பசி தணிய வன்புடன் அருந்தி-தனது பசித்தீத்தணியும்படி வலிமையுடன் உண்டு, (தன்) உதரம்உம் குளிர்ந்தான் - தனது வயிறுங் குளிர்ந்தவனாய், தன் வடிவம்உம் குளிர்ந்தான் - தனதுஉருவமும் ஆறி, அன்பு உடை இருவர்க்கு ஆசிஉம் புகன்றான் - அன்பையுடையவர்களான அந்தக் கிருஷ்ணார்ச்சுனரிருவர்க்கும் ஆசீர்வாதத்தையுஞ் சொல்லி, அசைந்துபோய் - அசைந்தசைந்துசென்று, துறக்கம்உம் அடைந்தான்-விண்ணுலகத்தையுஞ்சார்ந்தான்;

வயிறுநிரம்ப உண்டதனாலும், நோய் நீங்கியதனாலாகிய சுகாநுபவத்தாலும், அக்கினி அசைந்தசைந்துசென்றனனென்க. வன்புடன் அருந்தி-முன்பு தன்னால்எளிதில் உண்ண இயலாமையாற் கிருஷ்ணார்ச்சுனர்களுடைய உதவிபற்றி வலியஉண்டுஎன்க.

## 77.—கிருஷ்ணார்ச்சுனர் இந்திரப்பிரத்தநகரஞ் சார்தல்.

அமரரை முதுகு கண்டகா வலரு மவரவ ராண்மைக ளுரைசெய்து
அமரிலன் றெடுத்த பல்பெருங் கொடியா லலங்கரித் தமைத்ததந் தேர்மேல்
தமருடன் துணைவர் நால்வரு நகரச் சனங்களு மகிழ்ந்தெதிர் கொள்ளத்
தமரமும் முரசு முழங்கவெண் சங்கந் தழங்கவந் தணிநகர் சார்ந்தார்.

(இ - ள்.) அமரரை முதுகு கண்ட காவலர்உம்-தேவர்களைப் புறங்கண்ட கிருஷ்ணார்ச்சுனர்களாகிய அரச ரிருவரும், அவர் அவர் ஆண்மைகள் உரை செய்து - (தேவர்களோடு நடத்திய போரில்) தாம்தாம்செய்த ஆண்மைத்தொழில்களைச் சொல்லிக் கொண்டு, அமரில் அன்று எடுத்த பல் பெருங்கொடியால் அலங்கரித்து அமைத்த தம் தேர்மேல் - போரில் அன்றைத்தினத்தில் மேலுயர்த்திய பலபெரிய கொடிகளினால் அலங்காரஞ்செய்து சித்தஞ் செய்யப்பட்டுள்ள தங்கள்தேர்களின்மேலேறினபடியே, தமருடன் துணைவர் நால்வர்உம் நகரம் சனங்கள் உம் மகிழ்ந்து எதிர்கொள்ள- (தங்கள்) சுற்றத்தார்களுடனே துணைவர்களான தருமன்முதலிய நால்வரும் அந்நகரத்திலுள்ள ஜனங்களும் மகிழ்ந்து வந்து எதிர்கொள்ளவும், தமரம் மும் முரசுஉம் முழங்க - ஒலியையுடைய மூன்றுவகை முரசவாத்தியங்களும் முழங்கவும், வெள் சங்கம் தழங்க - வெண்ணிறமான சங்கவாத்தியங்கள் ஒலிக்கவும், வந்து அணி நகர் சார்ந்தார்-மீண்டுவந்து அழகிய இந்திரப்பிரத்த நகரத்தை யடைந்தார்கள்; (எ - று.)

பல் பெருங்கொடி-கிருஷ்ணனது கருடக்கொடியும், அருச்சுனனது அநுமக்கொடியும்; ஒன்றல்லாததெல்லாம் பலவாதல் பற்றி, இவ்விரண்டுமே 'பல்' எனப்பட்டன. மும்முரசு-வெற்றி முரசு கொடைமுரசு மங்கலமுரசு என்பன. (798)

காண்டவதகனச்சருக்கம் முற்றிற்று.

ஆதிபருவம் முற்றிற்று.

---

# ஆதிபருவத்தின்

## அரும்பதவகராதி முதலியன

எரிவிடம்நுகர்ந்தபேருடல் அமுத ருந்தலால் எழில்புரிதல் × கனல் கொளுந்தலின் வெந்த வான் புலம் மாரியால் வயங்குதல், வார-[16
எலும்பினுயாசனம், வேத்-58
எழில்மாழ்கி - யனவெழுச்சிகுன்றி, திரௌ-51
எழிலி-மேகம், வேத்-10
எழிலிசொத்துப் பனிப்பகை × விசித் திரவீரியன்வானடைந்தபின் மதிக்குலம், சம்-3
எழுபெயர்ப் புரவி இரவிக்குரியது, இக்-31 [வேத்-55
எளிமைபார் - ஓர் குறிப்புமொழி,
எற்றுதல், குரு-125
ஏகசக்கரவனம், வேத்-63
ஏச-குற்றம், வார-15
ஏந்தல் - உயர்ந்தவன்: இங்கே கணவன், ஆண்பாற் சிறப்புப்பெயர், திரௌ-80
ஏமாந்திருந்த-களிப்புக் கொண்டிருந்த, திரௌ-30
ஏழிருபுவனம், வார-25 [காண்-66
ஏறு-படைக்கலத்தழும்பு, வாகனம்:
ஏனம்-பன்றி, காண்-31
ஐ-தந்தை, வார-39: சிலேட்டுமம்,
ஐந்தரு-அருச்-34 [குரு-22
ஐராவதம், காண்-59
ஒய்யென்விரைவு, வேத்-49
ஒருமுனைப்பட-மும்முரமாக, காண் -25 [143
ஒல்குதல்-தளர்தல், மெலிதல், குரு-
ஒழுகுநீண்ட-மிகநீண்ட, காண்-14
ஒற்றையோடிரட்டை, இக்-6
ஓகை-மகிழ்ச்சி, குரு-93
ஓச்சுதல்-செலுத்தல், சம்-67
ஓசம்-ஒளி, இக்-59
ஓசை-புகழ், (ஓஜஸ்என்றவடமொழி ச்சிதைவென்னலாம்), வேத்-22
ஓடுதல்-நீண்டுசெல்லுதல், காண்- 32
ஓதம்-அலை, அரு-2
ஓதனம்-உணவு, வடசொல், காண்-
ஓதிமம், இக்-21 [21
ஓரி-நரி, சம்-79
ஓலை - திருமுகம், திரௌ-3

ஓவியம், இக்-45
ஔி-வரிசை, ஒழுங்கு, வார-76
ஔபசாரிகபிரயோகம், குரு-147
ககனம், குரு-99
கங்குல்வாணர் அரக்கர், வேத்-11
கங்குலென்னுங்கடல், அரு-33
கங்கையாள் வீழ்விழ்ந்த சந்தனு மேல் கருணைநீர்பொழிதல் × வாடிய தருவின் மழைபொழிதல், குரு-86
கச்ச-கைதத: போலி; போ என்று பொருள்படும் சொல்லின் திரிபு
கச்சிப்பதி, இக்-13 [மரம், வேத்-57
கஞ்சவாவிகலைமதிகாணல் × திருபார் குழாம்வீடுமனைக்காணல், குரு-120
கஞ்சம்-வடசொல், அருச்-49
கட்செவி-பாம்பு, காண்-47
கட்டு-கச்சைக் கட்டுதல், வேத்-57
கடம்-மதசலம், குரு-51, திரௌ-30
கடல்கடைந்து வருந்தா வமுதநிகர் வாள், திரௌ-34
கடலிடை யொளித்தவெற்பு × பாதலத்தனில்விழுபவனனு, வார-13
கடவுள்-தேவர், குரு-110
கடவுளர்-அந்தணர், வேத்-36
கடவுளெரி-அக்கினிதேவன், 27
கடற்பிறவாவமுதம், அருச்-36
கடி-விவாகம், குரு-41, 147, சம்-24
கடோத்கசன், வேத்-30
கண்-கணு, இக்-20
கண்டல்-வெண்டாழை: கைதை-செந்தாழை; இக்-19
கண்போலம்பு, திரௌ-33
கணவனுடன்உயிர்நீத்த மங்கையர் கற்பகநிழலில் வைகுவர், சம்-106
கணவனையிழந்த கற்புடைப் பெண் டிர்க்கு அனலும்புனலும்ஓரற்றே,
கணையமரன், அருச்-46 [சம்-105
கத்து-கத்துதல், வேத்-57
கதி-நடைவிகற்பம், வார-57
கதித்தல்-கூறுதல், குரு-48
கதித்து-வளர்ந்த, திரௌ-32
கதைகொண்டு நிற்கும் வீமனும் துரியோதனனும் × மாமரமெடுத் திற்கும் மதக்களிறுகள்: வார-58

குழல்-கரை, குரு-34
குழிய-சூழ்ந்த, காண்-50
குனு-மகன், வார-61
செக்கர்வான் × குருதிபொங்கவிழுந்த கருப்பை, சம்-71
செச்சை-வெட்சிப்பூமாலை, இங்-13
செம்பட்ட மயிரில் தீப்பற்றுதல் குஞ்சி நீடுறவளர்வ போலும், காண்-42
செய்குன்று, அருச்-26
செய்ய-சிவந்த, குரு-37
செய்யவன்-சூரியன், சம்-71
செவ்வணி செய்தல் பலிப்பொருளுக்கு உரியது, வேத்-49
செவ்வணியணிந்தவீமன் × மண்ணில் வரு சூரியன், வேத்-51
செவ்வி-அழகு, குரு-8
செழியன்-பாண்டியன், அருச் - 22
செற்றுதல் - இடையிடையே யிடுதல், வேத்-50
சென்னியர்-சோழர், அருச்-22
சேக்கை-படுக்கை, சம்-66,வார-128
சேதுவருணனை, அருச்-46
சேனை-திரள், திரௌ-3
சையம்-மலை, சம்-48
சோதிடம் பொய்யாது, திரௌ-23
சோமகன்-துருபதனது பாட்டன், வார-78
சோரி-இரத்தம், சம்-50
சோலை×தடம்: காண்-7
சோழரிராசதானி ஐந்து, அருச்-20
சோனை-விடாப்பெருமழை,குரு-124
சோனையாகுதி, காண்-54
ஞாதம்-உயிர், இங்-1
தகுதியின்மையணி, வேத்-56
தகைவு-தடை, குரு-88
தங்கடமிழ்க்குழவிசை, அருச்-32
தசும்புருமகிலின்றூபம், இங்-33
தட பெருமை, குரு-69
தடம்×சோலை, காண்-7
தண்டு-வீணைதண்டம், இங்-42
தத்துதல்-பாய்ந்துதாக்குதல், வேத் -14
ததி-கூட்டம், தயிர், அரு-76
ததைதல்-மொய்த்தல், நெருங்குதல், இங்-5; சம்-31
தந்திரம்-நூலறிவு, திரௌ-5
தந்தை-தந்தவன், பிரமன், குரு-60
தந்தைக்கிளமைகொடுத்த கோமகன்-பூரு, குரு-101
தபதி-சிற்பி, இங்-12
தபதியன்-சிற்பி, வார-121
தபனன்-சூரியன், வார-65
தபுதல்-கெடுதல், சம்-4
தம்பியையிழந்த வீடுமன் X திங்கள்மறைந்த யாமினி, சம்-2
தம்முன்-அண்ணன், குரு-112
தமனியச்சிலை-மேருமலை, காண்-47
தமனியம்-பொன், குரு-137
தராபதி-அரசன், சம்-24
தரியலர்-பகைவர், குரு-90
தரு-மரம், காண்-40
தருமபுத்திரன் சிரசிற்கிரீடம் X உதயகிரிசிகரத்துச்சூரியன், இங்-5
தவசியர்க்கு மூலத்தழல் மேலெழுந்தகைத்து, குரு-98
தவப்பயனைப் பெறுதற்குப்புண்ணிய பூமி பூதலமே, குரு-71
தவர்-வில், திரௌ-47
தவனன்-சூரியன், வார-18
தவிசு-ஆசனம், குரு-120
தளவம்-முல்லை, அருச்-20
தனஞ்சயன்-அக்கினி, குரு-128
தனதனும் சிவனும் இசைந்த நட்பு X கர்ணனும் துரியோதனனும் இசைந்த நட்பு, வார-72
தனயன்-புத்திரன், குரு-24
தனயனைக்கண்டமகிழ்ச்சிமுன் மனைவியைப் பிரிந்தவருத்தம்×அருக்கன் றன்னெதிரிருள், குரு-89
தனு-வில், உடம்பு, திரௌ-49,51
தனுர்வேதம், திரௌ-51
தாகம்-பசி, காண்-25
தாசர்-வலைஞர், குரு-91
தாதியர்-தோழியர், திரௌ-23
தாது-காவிக்கல், காண்-34
தாபதன், திரௌ-22
தாமம்-மாலை, தற்-2, சம்-56
தார்த்தாட்டிரார், திரௌ-98
தாரகாசுரன்குமரனுற்சாய்தல் X கர்

பானல்-கருங்குவளை, சம்-95
பானுவின்மகள்காளிந்திநதி, குரு-90, சம்-6
பிரகிருதிXஅகழி, திரௌ-17
பிரிந்தமகளிர், காண்-15
பிலம்-பாதாளவறை, திரௌ-84
பிறக்கம்-மலை, ஏர்-25
பிறப்பினுல்இழிவின்மை, வார-69
பிறிதுமொழித லென்னும் அணி, வார-93
பிறையெழுச்சிகண்ட சலநிதி X மைந்தன் முகநோக்கி மகிழும் பாண்டு, சம்-69
பின்னியபுதல்வராலும் மென்புதல்வியாலும்மகிழ்ந்தலும் தூலங்கிய சுபலன்பாவை X சதவிதழாலும் கன்னிகையாலும் பரிதியாலும் சோதிகலந்தசெங்கமலம், சம்-81
புகரவன்-சுக்கிராசாரியர், குரு-17
புகைமுகன், வேத்-52
புகையின்பலநிறவகை, காண்-31, 32
புங்கம்-அம்பு, வடமொழியில் அம்புமுனையென்றே பொருளாத லால், இங்கு அவ்வாறே பொருள் கொள்ளலாம், வார-81
புட்கலாவர்த்தம்Xஅத்தி, குரு-28
புடவி = ப்ருதிவீ-பூமி, காண்-73
புண்டரீகன்-பிரமன், குரு-29
புணர்நிலையணி, திரௌ-56
புணைவனம்-மூங்கிற்காடு, இங்-37
புத்தேளிர்-தேவர், தற்-2
புதனும் மதியும் X புத்திரனும் சந்தனுவும், குரு-89
புதுப்புனலுக்கு எதிரோடி விளையாடுஞ்சேல்Xகுங்கும நீர்வீழ்ச்சிக்கு எதிரே செலுத்திய கண்,
புயங்கம்-பாம்பு, வார-83[காண்-89
புயலேறு, காண்-25
புரசை - யானையின் கழுத்திடுகயிறு,
புரந்தரன்-இந்திரன்,குரு-12[குரு-27
புரவி-வாகனம், குரு-57
புரிசை-மதில், வார-77
புருகூதன், தற்-2
புல்வாய்-மான், சம்-88
புலர்தல்-விடிதல்,நீங்குதல்,திரௌ-10
புலிக்கொட்டவிடக்கை பூலைருநின்று தல்Xபகனுணவைவீமனுண்ணு தல், வேச்-55
புலிங்கசாலம் - ஸ்புலிங்கஜாலம்,
புலிப்பிணவு, வேத்-11 [காண்-41
புலோமசை-இந்திராணி, குரு-15
புவனம்-உலகம், காண் - 54: நீர், (வடசொல்), காண்-50
புவிதேவன்-அந்தணன், அரு-3
புழை-துவாரம், காண்-36
புளகமேறிய உடல் X பூக்கள் மலர்ந்த கடப்பமரம்: அருச்-56
புளகு = புளகம்: மயிர்ச்சிலிர்ப்பு, காண்-29
புளினம்-மணற்குன்று, குரு-81
புறக்காழன, வடமொழியில் த்ருண த்ருமமெனப்படும், காண்-89
புறந்தருதல்-முதுகுகாட்டி யோடு தல், குரு-12
புறந்தருமுரோமம், வேத்-30
புறவு-கொல்லை, இச்-26
புன்சொல்-இழிவாயசொல், தற்-7
புனல் ஓடையிற்குழுமுதல் × நகரில் சனங்கள் திரளுதல், வேத்-65
பூக்கும்-படைக்கும், தற்சி-3
பூகதன், திரௌ-52
பூசல்-போர், காண்-73 [திரௌ-57
பூசுரன்-அந்தண வேடத்தான்,
பூதங்களைந்திற் குணமைந்தும் பொலிதல்Xபஞ்சபாண்டவர்க்கு உபபாண்டவ ரைவர்தோன்றல்,
பூதி-ஐசுவரியம், வார-95 [அருச்-87
பூதேவர்-அந்தணர், தற்-2
பூபதி-அரசன், திரௌ-68
பூமகன்-பிரமன், வார-78
பூரணகும்பம், இங்-17 [காண்-28
பூரித்து-மகிழ்ச்சியாற் பருத்து,
பூவாளியுழுத புண்வழியே யூசி நுழைதல் × பிரிவுத்துயரை யுழக் கும் மேனியில் தென்றல்படுதல், அருச்-25 [திரௌ-68
பூவை-நாகணவாய்ப்புள், குரு - 9
பூழி-புழுதி, காண்-18
பூழிவேந்தன், அருச்-26
பெட்பு-ஆசை, வார-135

மரு-நறுமணம், குரு-35
மருங்குல்-இடை, வார-90
மருச்சகன்-அக்கினி, வார-136
மருச்சுதன்-வீமன், வார-136
மருத்து-வாயு: திரௌ-63 [60, 63
மருத்துவான் - இந்திரன், திரௌ-
மல்லல்-வலிமை, திரௌ-51
மலயமாருதம்-தென்றல், குரு-81
மலர்த்தோடு மன்னுசுரும்பு × நேரி
ழை மேல்விழுசந்தனு, குரு-110
மலைதல்-பொருதல், குரு-114
மழைக்காலவர்ணனை, அருச்-51, 52
மற்குணம்-மூட்டுப்பூச்சி, வார-9
மறந்தருகனைகுரல்வாய், வேத்-30
மறலி-யமன் வேத்-47
மறுகி-கலங்கி, வேத்-39
மறுகு-வீதி, திரௌ-21[ திரௌ-46
மன்மதன் வில்லாண்மையினன்,
மன்ற-மிகுதியாக, வேத்-41
மன்றல்-விவாகம், திரௌ - 15:
வாசனை, சம்-99, சுயம்வரமாலை,
திரௌ-7
மன்னவர் சுயம்வரத்துக்கு ஈண்டு
தல் × மூசி வண்டினம் மொய்த்
தல், குரு-117
மனக்கொண்டகாளை, வேத்-9
மனத்தேரிற்போனர், திரௌ-4
மன்மதி-இராசநீதி, வார-98
மா-சிறப்பு, தற்-3
மாணக்கர்க்கு நல்லாசிரியர் கிடைத்
தலும் ஆசிரியர்க்கு நன்மாணக்கர்
வாய்த்தலும் நல்வினைப்பயன்,
மாதர்-அழகு, குரு-139 [வார - 53
மாதர்முற்பூண்-மங்கலியம்,திரௌ -
மாதவன்-திருமால், தற்-8 [87
மாயவன் × கடல்,பூவை,புயல்,இந்-9
மார்க்கண்டேயன் சரிதை, வேத்-47
மார்பு-ஓரளவு: திரௌ-52
மார காகளம்-குயில், குரு-8
மாரவசந்தன், காண்-16
மால்-இந்திரன், காண்-61
மால்கைத்திகிரி × விசயன் கைக்
கணை, வார-52
மாலிகை-மாலை, குரு-56
மாழ்க-மனம்வருந்த, திரௌ-1
மாழ்கிய-வாடிய, வேத்-19
மாற்றுதல்-போக்குதல், குரு-70
மான்மதம்-கஸ்தூரி, வேத்-29 [30
மானவர்-பெருமையுள்ளோர், குரு-
மானிடவர்க்கு ஒருவருடம் தேவர்
கட்கு ஒருநாளாகும், குரு-145
மித்திரன்-சூரியன், குரு-5
மின்னல்வருணனை, காண்-49
மீளி, குரு-108, வார-60
மீன்-நட்சத்திரம், குரு-72
மீன்வயிற் பிறந்த குமரனும் குமரி
யும் × யமனும் யமுனையும், குரு-
105
மீனகேதனன்-மன்மதன், குரு-182
மீனெறிகாத்தல் × சோராரிய
வசுக்கள் தமவிருக்கை மீளல்,
முக்குலம், குரு-28 [குரு - 64
முக்கோணக்குன்று, அருச்-46
முக்கோற்பகவன்,அருச்-49[குரு-16
முகங்கெடுதல் - சிதைந்தோடுதல்,
முகடு-உச்சி, காண்-28
முகத்திலிரண்டு வெஞ்சுடர் ×
கோபாக்கினி தோன்றும்
இரண்டு கண், வேத்-9 [குரு-56
முகம்-திக்கு, குரு-16, ஆரம்பம்,
முகராகம் வழங்குதல் - நட்புசெய்
தல், காண்-6
முகன்-கண்ணோட்டம், வேத்-39
முகிழ்-மொட்டு, குரு-40
முகுடம்-கிரீடம், குரு-14
முகுந்தன், திரௌ-19 [சம்-115
முகுரவானனன் - திருதராட்டிரன்,
முசுக்குலம் × முனிவர், குரு-65
முஞ்சி, சம்-7
முட்டி-கைப்பிடி, வேத்-56
முத்திபெற்றவரினும் முற்றுஞ்
சிந்தை, வேத்-25
முத்திரை-குறி, சம்-101 [சம்-8
முதற்குறைதல் - பேறிவுபெறல்,
முப்பத்துமுக்கோடிபுத்தேளிர், தற்-
2
முப்புரிநூல் × பாலாகுதி,காண்-20
முயக்கு-தழுவுதல், குரு-15
முரணுடன்முனைதல் - வலிமை
யோடு பொரமுயலுதல், வேத்-14

வஞ்சினம்-சபதமொழி, குரு-121
வடகமிருத்தல், இங்-25
வடம்-ஆலமரம், வார-51
வடமீன் × காந்தாரி, சம்-23, 58
வடமேருபாரத்தக்குவடு, தற்-1
வடு-மாம்பிஞ்சு, காண்-14
வண்டானம்-நாரைவகை, அரு - 28
வதனம்-முகம், தற்-2
வந்தித்தல்-வணங்குதல், குரு-6
வம்பு-வாசனை, கச்சு, புதுமை, குரு-144
வய-வலிமை, சம்-46
வயந்தன், குரு-83
வயிர்த்தல், சம்-102
வயிரம்-உட்பகை, வார-59 [குரு-51
வயிறு வாய்த்தல் - கருக்கொள்ளல்,
வயினதேய காத்திரவேயர் வரலாறு, சம்-119
வரம்-சாபம், குரு-69
வரவு-சரிதை, குரு-55
வரி-உடற்புள்ளி, இரேகை, திரௌ-3, இசைப்பாட்டு, திரௌ - 12 முறுக்கு, திரௌ-53
வரிசை-சிறப்பு, பெருமை, குரு-32, 55
வரித்தல் - விரும்பிமொய்த்தல், திரௌ-8
வருடல்-வற்புறுத்தல், சம்-64
வல்சி-உணவு, வேத்-53
வல்லபம்-வல்லமை, இங்-18
வல்லியம்-புலி, திரௌ-51
வலம்-வலிமை, குரு-69
வலம்புரி-நஞ்சாவட்டை, திரௌ-52
வழக்கம்-சஞ்சரித்தல், காண்-17
வள்ளியுங்கந்தனும் X இடிம்பையும் வீமனும், வேத்-28
வளையம் - தாமரையிலைத் தளிர்ச் சுருள், காண்-14
வன்பன் - வலிமையுடையவன், அருச்-1
வன்னிவானவன் - அக்கினிதேவன், காண்-20
வனசபதயுகம், இங்-17
வனசரிதர், வேத்-38
வனம்-நீர், காடு, (வடசொல்) வேத்-19, அருச்-2
வாகம்=வாஹம்: வாகனம், இங்-17
வாகு-பாஹு: தோள், திரௌ-51
வாசம்-வாசனை, வேத்-64
வாசி-குதிரை, காண்-65
வாடியதருவின் மழைபொழிதல் × கீழ்வீழ்ந்த சந்தனுமேல் கங்கையாள்கருணைநீர்பொழிதல், குரு-86
வாடுதல்-அழிதல், தற்-1
வாது-வீரவாதம், வேத்-60
வாமன்நுதல்கண்-அக்கினி, வார-91
வாய்மலர்ந்தருளி-சொல்லி, இங்-46
வாய்மை-வார்த்தை, குரு-42
வாயுதேவனுக்குக் கலைமான் வாகனம்-குரு-57-சம்-76
வாயுக்குநண்பன் அக்கினி, வார-129, 136
வாரணமாயை சூழ்ந்த மாமவன், திரௌ-17, (வாரணம்-மறைத்தல், தடை)
வாரடர், வேத்-12
வாரம்-அன்பு, சம்-39
வாரி-கடல், சம்-79
வால்-வெண்மை, குரு-56
வாலதி-வால், காண்-37
வாவிமுதலியன மலர் மணிக்குழாங்கள் எங்கும் மயங்கலின் பூமகள் வடிவைச் சித்தரித்து அலங்கரித்தனபோலும், இங்-76
வாள்-ஒளி, குரு-42
வாளம்-வட்டம், காண்-30
வாளி-குரு-108
வானேயேறு, இங்-20
வானின்று விழும்உற்கைXபூமியில் இறங்கும் வசுக்கள், குரு-61
வானுரு மெறிந்த அரவம்Xகாளி சொற்கேட்ட வீடுமன், சம்-4
விக்க-விக்குளுண்டாக, வேத்-56
விகங்கம்=விஹங்கம்: வானத்திற் செல்வதெனப் பறவைக்குக் காரணக்குறி, வேத்-53
விகங்காசன்-கருடன், (விகங்கம்-பறவை) குரு-144
விசயனெதிர் விற்படைகற்கும் துரியோதினாதியர்X இரவியெதிர்மின் மினிகள்; வார-49

விசித்திரவீரியன் வானடைந்தபின் மதிக்குலம் × எழிலி சிரத்துப் பனிப்பகை, சம்-3

விஞ்சையோர் குன்றம் × பண்டியடிசில், வேத்-42

விடக்கு-இறைச்சி, வேத்-55

விடங்கு-அழகு, அருச்-77

விடம்நீங்கப்பெற்றவீமன் × அற்படுமிருள்புலர் அலரி, வார-14

விடலை-வீரன், வேத்-48

விடவி-மரம், வார-126

விண்போதல்-உயரத்திற் பொருந்துதல், திரௌ-33

வித்தகன்-அறிஞன், இங்-28

விதானம்-மேற்கட்டி, திரௌ-21

விதிர்த்தல்-அசைத்தல், காண்-49

விது-சந்திரன், சம்-92

விந்தை-வீரலட்சுமி, குரு-24: வேத்-13

விநதைபயந்தயானம்-கருடன், குரு-30

விநாயகன்கோடு எழுத்தாணி, தற்-1

விபினசாலம் - காட்டின்தொகுதி, காண்-40

விபுதர்-தேவர், வார-86: அந்தணர், அருச்-35

வியநதி-கங்கை, சம்-109

வியாசன் வகுத்தபாரதத்தை வில்லிபுத்தூரார் கூறுதல் × ஆதவன் விளங்குநீடெல்லையை ஊமன்கேட்டலும் குருடன் காண்டலும், தற்சி-6

வியாசனை இமையவனென்றது, வேத்-27

விரசுதல்-நெருங்குதல் குரு-27

விருத்தம்-வட்டம், காண்-49 [105

விரோசனக்கதிர்-சூரியன், திரௌ-

வில்தழும்பு, அருச்-63

வில்லவர்-சேரர், அருச்-22

வில்லொடு கங்கைமகன் கங்கையில் மறைதல் × இந்திரதனுவோடு இந்திரன் எழிலியிடை மறைதல், குரு-84

விலாசம்-விளையாட்டு, சம்-119

விலோசனம்-கண், வார-60

விழுங்கி-வாயினுட் கொண்டு, காண்-58 |சம்-10

விழுதுடைஆல் × வியாதன்சடை,

விழைவு-விருப்பம், காண்-37

விள்ளுதல்-பேசுதல், வார-19

விளிந்தொத்துவழிகுழிதல், (விளிதல்-இயல்புகெடுதல்) வேத்-52

விளியேகுறிப்பால் பொருளுணர்த்துவது, வேத்-6

விளைதல்-முதிர்தல், திரௌ-25

விறல்-வலிமை, வேத்-13

வின்மை-விற்றிறமை, திரௌ-51

வீக்கும்-அழிக்கும், தற்-3

வீடுமன்வாய்மையால் விசித்திரவீரியன் அரசுபுரிதல் × சிற்பொருள் பரமான பொருட்கெதிர் உற்பவித்தல், குரு-116

வீடுமன் தசரதராமனுக்குநிகர், குரு-142

வீடுமன்மாய வெல்லவல அம்பை × அரவம் மாயவென்றிடு விகங்காசன், குரு-144

வீமனின்றியிருந்த பாண்டவர் ஊதையில் பூதமொத்தனர், வார-22

வீமன் × கோளரி, வேத்-15: X உதயபானு, வேத்-19 X இராகவன் தம்பி, வார-7

வீமனால் துரியோதனாதியருடைதல் X தீயினால் வெண்ணெயுடைதல், திரௌ-104

வீமன் கடோற்கசனை யளித்தது × கோலம் நரகாசுரனை யளித்தது, வேத்-31

வீமன்முதுகில் கைகொடு பகன் குத்துதல் × கிரிமிசை யிடிவிழுதல், வேத்-55

வீமன்வயிற்றிலே செல்லும் சோறு × வரைமுழையுளேயடையும் அன்னப்பறவை, வேத்-54

வீமனைக்கொல்ல ஏவப்பட்ட அரவுகள் × இரவியை மறைக்கும் கோளரவு, வார-8

வீரம்-உக்கிரம், காண்-61

வீழ்தல்-விருப்பம், திரௌ-75

வீற்று-வேறுபாடு, இங்-18

வீறு-சிறப்பு, இந்-18
வெருளிச்சுவை, குரு-140
வெடி-பெருமுழக்கம், வேத்-10
வெந்தபால், வேத்-48
வெப்பு-உஷ்ணம், காண்-43
வெம்மை-விருப்பம், குரு-123
வெய்துற-விரைவாக, காண்-80
வெயிலுறவுட்பனித்து மேல் வெதும்பு நீர் X (பாண்டவர் இறந்த) செய்தியறிந்து அகத்தில் மகிழ்ச்சிகொண்டு புறத்தில் தவிப்புக்காட்டும் துரியோதனாதியர், வார-186
வெரின்-முதுகு, வேத்-61
வெருவுதல்-அஞ்சுதல், வார-80
வெளிறி-வெளுத்து, காண்-69
வெற்பார் நதிகள் சிறுபுன்குழி மேவுதல் X இற்பாலவர்க்குப் பிறர்மேன்மனமேற்பது, சம்-63
வெறி-தேன், திரௌ-12
வென்றிநல்கு மாவித்தை X நிருத வல்லி, வேத்-18
வென்று-பயன்பெறு தொழியச் செய்து, திரௌ-13
வென்னிடுதல் - புறங்கொடுத்தோடுதல், குரு-27
வேகரிக்கடுவனம், வேத்-63
வேணி-சடை, சம்-7
வேத்துமுனி-வீடுமன், வார-37
வேதிகை-வேதிகா: வடசொல்: அக்கினியை வளர்க்கப்படுமாறு கட்டப்படும்மேடை; X தவிசு:காண்-21
வேய்-மூங்கில், குரு-108
வேய்மொழி, இந்-40
வேர்ப்பு-வேர்வை, திரௌ-89
வேரி-தேன், சம்-50
வேழமுகாசுரன்-தாரகன், திரௌ-102
வேழவல்லி - மன்மதன் (வேழம் - கரும்பு), சம்-89
வேள்வி-கலியாணம், திரௌ-72
வேள்விக்குவேண்டுவன, திரௌ-98
வேற்றுப்பொருள்வைப்பணி, சம்-92, வார-49
வேற்றுமைப்பொருள்தரும் இடைச்சொல், குரு-49
வேனிலான்-மன்மதன், குரு-84
வைநதி-சூரியநனி, சம்-117

---

# ஆதிபருவத்தின்

## அபிதான சூசிகை யகராதி.

அங்கிவேசன் - துரோணனுக்கும் துருபதனுக்கும் படைக்கலப் பயிற்சி செய்வித்தவன், வார-38.

அச்சுவசேனன் - தட்சகனுடைய குமாரன்: இந்திரனுற்காக்கப் பட்டுக்கர்ணனிடம் அஸ்திர மாகச்சார்ந்தான், காண்-59-61.

அசுவத்தாமன் - சிவனருளால் தோன்றியவன் வார-42: பேரறிவுமுத லியவற்றுல்க்கமிவன், திரௌ-38.

அசுவினிதேவதைகள் - நகுலசகதேவர் களைமாத்திரியினிடம் உண்டாகினவர், சம் - 85-87: காண்டவ வனத்தைக் கனலெரிக்கையில் அருச்சுனனை யெதிர்க்கவந்து ஆற்றுது போனவர், காண்-67.

அத்தி-ஹஸ்தி: பரதகுலத்தரசன், குரு-28: அத்தி-னுபுரியை யமைத்தவன், குரு-29.

அத்திரி-கண்களினின்று சந்திரன் பிறக்கக்காரணமானவன், குரு-5.

அதிரதன்-இராதைதகணவன், சம்-41: கர்ணனை நதியினின்று எடுத்து வளர்த்தவன், சம்-42.

அபிமன் - அருச்சுனன்மணந்தசுபத்திரைக்குத் தோன்றினுன், அருச்-86: பாண்டவ குமாரர் அறுவருள் ஆண்மைதன்னுல் விளங்கினுன், அருச்-89.

அம்பாலிகை - விசித்திரவீரியனை மணந்தாள், குரு - 128: வியாசனருளால் பாண்டுவைப்பெற்றுள், சம்-15, 16, 17.

அம்பிகை - விசித்திரவீரியனை மணந்தவள், குரு - 128: திருதராட்டிரன்தாய் சம்-22.

அம்பை - காசிமன்னவன் புதல்வி, குரு-117, 130: சாலுவனுலும் வீடுமனுலும் மணமறுக்கப் பட்டவள். குரு-129, 130, 132. பரசுராமனைச் சரண மடைந்தவள், குரு - 134: வீடுமனைவெல்லப் பன்னிரண்டுவருஷங்கள் பெருந் தவமியற்றியவள், குரு:144, 145: சிகண்டியாய் யாகசேனனிடம் பிறந்தவள், குரு-146

அரக்கனென்பதன் பரியாயப் பெயர் கங்குல்வாணன், வேத்-11. யாதுதானன், வேத்-12. குணபவல்சி, வேத்-14. நிசாசரன், வேத்-15.

அருச்சுனன் - பங்குனியுத்தரத்திற் குந்தியிடம் இந்திரனருளால் தோன்றியவன், சம்-83: சிலைத் தொழிலில் இராகவனை யொத்தவன், துரோணரின் சிறந்த அன்பிற்குரியவன். வார-49: துரோணனை முதலையினின்று உய்வித்தான், வார-52. வேடர்களை வென்று நிரைமீட்டுக்கொடுத்தான், அருச்-5: ஐந்து தேவமாதரின் சாபத்தை நீக்கியவன், அருச்-48: தீர்த்தயாத்திரையில் உலூபியென்ற நாககன்னிகையை மணந்து இராவானைப்பெற்றுன். அருச்-8, 9; சித்திரவாகன பாண்டியன் புதல்வி சித்திராங்கதையை மணந்து பப்புருவாகனனைப் பெற்றுன், அருச்-41, 43. சுபத்திரையை மணந்து அபிமனைப் பெற்றுன், அருச்-71, 86. இவனுக்குக் காண்டவ தகனத்தின்போது அக்கினி காண்டீவம் முதலிய ஈந்தான், காண்-26: பத்து நாமங்களையுடையவன், அருச்-44.

ஆயு-புரூரவாவுக்குமகன், ஊருவசியினிடம் பிறந்தவன், குரு-18: இவன் மகன் நகுடன், குரு-14.

இடிம்பன்- அரக்குமாளிகையினின்று பாண்டவர் சென்ற வழியிடையேயிருந்த வனத்தில் வசித்த அரக்கன், வேத்-4: வீமனுற் கொல்லப்பட்டான், வேத்-15.

இடிம்பை. வீமனை விரும்பியவளும் இடிம்பனது உடன்பிறந்தாளுமாகிய அரக்கி, வேத்-4, 9. வீமன்

இவனைத்தாயின் மொழியால் மணந்தான், வேத்-24: இவள் கடோற்கசனைப்பெற்முள், வேத்-30

இந்திரசேனை - மௌற்கலிய முனிவனுக்குப் பத்தினியான நாளாயணி, குன்று முதலிய வடிவு கொண்ட அவனோடு நதிமுதலியனவாயிப் போகந்துய்த்து மறுபிறப்பில் இந்தப் பேரைக் கொண்டவளானுள், திரௌ-78, 78, 79:இவளே திரௌபதியாய் வந்தாள், திரௌ-87.

இந்திரப்பிரத்தம் - காண்டவப்பிரத்தம் விசுவகன்மாவினுல் நகரமாக அமைக்கப்பட்டபோது அவ்விடத்திற்கு இட்ட பெயராகும்,இந்-9, 10, 14.

இந்திரன் - அருச்சுனனைக் குந்தியிடம் பெற்றவன், சம்-83: காண்டவப் பிரத்தத்தை இந்திரப்பிரத்தமாக விச்சுவகன்மனைக்கொண்டு செய்வித்தவன், இந்-7, 10: சுபத்திரையின் மணத்துக்கு இந்திராணியோடு வந்தான், அருச்-74. காண்டவவனத்தை அக்கினிதேவனுக்கு அருச்சுனன் உணவாகக்கொடுக்கையில் அவனையெதிர்த்தவன், காண்—63, 64: இவன் பெயர்ப் பரியாயம்: சதமகன், காண்-32,சுபதி,காண்-44:வாசவன், குரு-27, 83: புரந்தரன், காண்-48: பாகசாதனன், காண்-45: வலாரி, காண்-47,மகவான், வார-60: புருகூதன், காண்-25: குன்றச் சிறகரிந்தோன், காண்-25: முகிலூர்தி, காண்-30

இராதை-அதிரதன் மனைவி, சம்-41: கர்ணனை வளர்த்தவள், சம்-42.

இராவான்-அருச்சுனனுக்கு உலூபியென்னும் நாககன்னிகையிடம் பிறந்தவன், அருச்-9.

இளை - இளன் என்னும் மநுபுதல்வன் அம்பிகையிட்ட விதியறியாமையாற் பெண்ணாகி இப்பெயர் பெற்றனன், குரு-7; புதனைக்கூடிப்புரூரவாவை ஈன்றவன், குரு-9.

உத்கசம் - தௌமிய முனிவன் வசித்த துறை, திரௌ-9.

உதிட்டிரன் - யுதிஷ்டிரன்: தருமபுத்திரனைப் பார்க்க, சம்-68

உபயாசன் - துருபதனுக்காகப் புத்திர காம வேள்வி செய்தவன், வார-85: துருபதன் தேவி நீண்டாளாக, ஓமப்பொருண்மிச்சிலை அக்கினியில் ஓமஞ்செய்து திருட்டத்துய்மனைத்தோற்றுவித்தவன், வார-86: திரௌபதியையும் அங்ஙனே தோற்றுவித்தான்,வார-90.

உருப்பசி - திருமாலின் தொடையினின்று தோன்றிய உருவிற் சிறந்த ஓர்தேவமாது, குரு - 13: அசுரர்களாற் கவரப்பட்டபோது தன்னை மீட்ட புரூரவாவை மணந்துஆயுவைப்பெற்றவள்,குரு-13.

உலூபி - அருச்சுனன் மணந்த நாககன்னிகை, அருச்-8.

ஏகசக்கரவனம் - வேத்திரகீயத்தைச் சேர்ந்தது, வேத்-63.

ஏகலவ்யன்-வேடன், துரோணன் சிடன், வின்மையுடையான்; அருச்சுனனைத் திருப்திசெய்ய அவனுடைய கட்டைவிரலைத் துரோணர் குருதட்சிணையாக வாங்கினர், வார-50

கங்கையாள்-சாபத்தினுல் மானுடமகளாய்த் தோன்றிச் சந்தனுவை மணந்தாள், குரு-60,46: தான் ஈன்ற எழுசிசுக்களைக் கங்கையிலெறிந்தாள், குரு-47, 49: சந்தனுவை மணந்து அட்டவசுக்களைத் தோற்றுவித்தாள், குரு-73: இறுதியிற்பெற்ற புதல்வனுடன் சந்தனுவைப் பிரிந்தாள், குரு-78

கடோற்கசன்-வீமனுக்கு இடிம்பியென்னும் அரக்கியினிடம் பிறந்த குமரன், வேத்-30

களிந்தாநதி - யமுனை, அருச்-11

கன்னன் - குந்தியின்மகன், சம்-64: இந்திராதியரிரந்தன தரத்தக்க

சூரன்-வசுதேவன் தந்தை: பிரதைக் குந்தந்தை, சம்-25: யதுகுலத் தினன், சம்-75
சூரியன்-கர்ணனைக் குந்தியிடம் உண்டாக்கி மீண்டு கன்னிமையை அன்னளுக்கு அளித்தவன், சம்-35,38.
சேது-திருவணையென்னும் புண்ணியத்தலம், அருச்-45.
சேரன்-அக்கினி குலத்தரசன், திரௌ-45.
தக்ககன்-தக்ஷகன்: காண்டவவனத்திலிருந்தநாகன்: இந்திரனுக்கு நண்பன், இவன்மகனான அச்சுவசேனனே கர்ணனுக்குக் கணையானான், காண்-24, 47, 61.
தருமபுத்திரன்-பாண்டவரில் மூத்தவனான இவன் ஒழுக்கத்தழகு வாய்ந்தவன், வார-94: யமதேவனது அருளால் குந்திபயந்த குரிசிலாவன், வார-96: நிறுக்குந் துலைநிகர்ப்பவன், அருச்-6. திருதராட்டிரன் இவனுக்கு இளவரசு முடிசூட்டுதல், வாரணு-96: இவனது பட்டாபிஷேகம், இந்-3-6.
திட்டத்துய்மன் - பாஞ்சாலராசனான யாகசேனன் துரோணனைக் கால்ல மகன் வேண்டுமென்று செய்த யாகாக்கினியினின்று தோன்றியவன், வார-87, 93.
திருக்கோவலூர்-ஒரு விஷ்ணுஸ்தலம், அருச்-16.
திருதராட்டிரன்-பதினாயிரம் யானை பலமுடையவன், சம்-13: அம்பிகை மகன், சம்-22, முகுர வானனன், சம்-115.
திருவகீந்திரபுரம் - விஷ்ணுஸ்தலம், அருச்-17 [15.
திருவண்ணாமலை-சிவஸ்தலம், அருச்-
திருவதிகை-ஒரு சிவதலம்,அருச்-17.
திருவரங்கம் - விஷ்ணுஸ்தலம், அருச்-19.
திருவெண்ணெய்நல்லூர் - ஒரு சிவஸ்தலம், சுந்தரமூர்த்திகளை யடிமைகொண்டதலம்,அருச்-17.
திருவேங்கடம்-ஒரு விஷ்ணுஸ்தலம் அருச்-12.
திரௌபதி-அருச்சுனனை மணக்குமாறு மகள் வேண்டுமென்று பாஞ்சாலராசன் யாச உபயாசரை வேண்டி வேள்வி புரிய, யாகாக்கினியினின்று காவலர் தம்குலமுடிப்பான் தோன்றினாள், வார-90, 91: இவள் பஞ்சபாண்டவரைமணந்து ஐம் மகவைப் பெற்றாள், அருச்-87.
துச்சளை-காந்தாரியின் ஒரே பெண்: சம்-72: துரியோதனனுக்கு இளையள், சம்-80
துச்சாதனன்-துரியோதனன் தம்பி: தேளினும் கொடியன், சம்-80.
துரியோதனன்-தருமனுக்குப் பின் வீமனுக்குமுன் தோன்றியவன், சம்-78: பதினாயிரம் யானை பலமுடையவன் வார-58, தீங்கொரு வடிவமாகப்பிறந்தவன். வார-2: கர்ணனை அங்கதேசாதிபதியாக்கினான், வார-70: துன்மதியுடையான், மன்மதி யாதும்மதிக்காதவன்,வார-98: சிறுபருவத்திலேயே பாண்டவருடன்தெம்முறையாயினன், வார-106: புறத்தில் நட்பாக நடித்து அகத்து வேர்ப்பவன்,வார-135:வலம்புரித்தார் வேந்து, திரௌ-52: அரவக் கொடியுயர்த்தோன், திரௌ-54.
துருபதன்-யாகசேனனைப் பார்க்க, திரௌ-1
துருவாசமுனி-தந்தை மொழிப்படி பணிவிடை செய்த குந்திக்கு மனமுவந்து மகப்பேறளிக்கும் மந்திர முரைத்தவன், சம்-26, 29.
துரோணன்-பாரத்துவாசன்மேனகையைக்காமுறப்பிறந்தவர், வார-34: துரோண கும்பத்தில் தோன்றியவர், வார-69, 93. எழுநாளில் பரசுராமனிடம் படைகளிற் பயின்று தேர்ந்தவர், வார-33: அங்கிவேசனிடமும் படைகள் கற்றவர், வார-38: கிருபியை மணந்தவர், வார-41: வாய்மை சோராதவர்,வார-44: சுகன்நிகர்

ஞானம் பெற்றவர், வார-45: பூமகற்கு மிக்கமாமுனிவர், வார-73: துருபதனுக்குப் பாதியரசும் உயிரும் வாழ்வும் உதவினவர், வார-82: சுருதிவாய்மையினர், வார-83: தன்னைக் கொல்லப் பிறந்த திட்டத்துய்மனுக்கும் வில்வித்தை பயிற்றியவர், அந்தக்கரணமறுவற்றிலங்குந் திறலோர், வார-93.

துவாரகை - வடமதுரையை விட்டுக் க்ருஷ்ணன் யாதவருடன் சேர்ந்த நகரம், திரௌ-43. துவரையென வழங்கும், திரௌ-49, 53.

தென்மதுரை-பாண்டியராசன் நகர், அருச்-21.

தேவயானை - சுக்கிராசாரியரின் மகள், யயாதியை மணந்து(யது, துருவசு) என்ற இருகுமரரைப் பெற்றவள், குரு - 17: சன்மிட்டையை முதலில் உயிர்ப்பாங்கியாகவும் பின் பணிப்பெண்ணாகவும் உடையவள், குரு-18: கணவனோச்சிறித்தந்தையிடஞ் சார்ந்தவள், குரு-21.

தௌமியமுனிவன் - உத்கசதீரத்திருந்த முனிவன்: சித்திராதன் சொற்படியே இவனைத் துணையாகக்கொண்டு பாண்டவர் திரௌபதி சுயம்வரத்துக்குச் சென்றார்கள், திரௌ-9, 93.

நகுடன் - ஆயுவின்மைந்தன், பற்றற்றுநின்று தவஞ்செய்து சதமகம் புரிந்து தேவேந்திரபதவி பெற்றவன், குரு-14: அகத்திய சாபத்தாற்சர்ப்பமானவன், குரு-15: யயாதியின் தந்தை, குரு-16.

நகுலன்-மாத்திரியின் குமாரன், சம்-86: சகதேவனுக்கு மூத்தோன், சம்-87.

நாரதன் - சுந்தோபசுந்தர்சரிதை சொல்லித் திரௌபதியின் சம்பந்தமாக நியமம் ஏற்படுத்திச் சென்றவன், இந்-42, 45.

நாளாயணி -மௌத்கலியமுனிவனால் பரிசோதிக்கப்பட்டு மனைவியாகி இன்பநுகர்ந்தாள்; இவளே திரௌபதியானாள்: திரௌ-78.

நீலன் - திரௌபதி சுயம்வரத்துக்கு வந்திருந்தவலிமையுள்ளஓரரசன், திரௌ-45, 52.

பகதந்தன் - யானைப் போர்வீரன், திரௌ-44: திரௌபதிசுயம்வரத்துக்குவந்தவன்-51.

பகன்-வேத்திரகீயத்திருந்த அரக்கன், வேத்-39: வீமனாற் கொல்லப்பட்டான், வேத்-62.

பப்புருவாகனன் - அருச்சுனனுக்குச் சித்திராங்கதையிடம் பிறந்த குமாரன், அருச்-43.

பரசுராமன் - பூந்துழாய்மாலைப்போர் மழுப்படையோன், வீடுமனுக்கு வில்லாசிரியன், குரு - 87, 135, 136, 137: கார்த்தவீரியனது ஆயிரம் புயங்களையும் துண்டித்தவன், குரு-140: அமரில் வீடுமனுக்கு உடைந்து ஓடினவன், குரு-142, 143.

பரதன் - பூருவின்குலத்தவன், குரு-26: அசுரரைவென்று சுரரைத்தேவலோகத்தில் நிலைநாட்டியவன், குரு-27: மிகுசிறப்பினன், குரு-27

பராசரன் - மச்சகந்தியை யோசனகந்தியாக்கினவன், சம்-6: அவளுடன் கூடி வியாசனைத் தோற்றுவித்தவன், சம்-7.

பலராமன் - க்ருஷ்ணனுக்கு மூத்தவன்: யமுனையையலத்தாற் பிளந்தான், திரௌ-40: வசுதேவகுமாரன்: அலாயுதன், திரௌ-49: தாலத்துவசன், அருச்-85: வண்ணிற மதியமன்னவிடலை, சம்-113, திரௌ-84, 86.

பாண்டவர் - பாண்டுபுத்திரரான இவர் பஞ்சேந்திரரின் அமிசமானவர், திரௌ-85, 86.

பாண்டு - வியாசனருளால் அம்பாலிகையினிடம் பிறந்தான், வெண்ணிறத்தினன், சம்-15,16,17,22: திறலோன், சம்-17: சேனாபதியானான், சம்-22: குந்தியையும், (சம்-44) மாத்திரியையும் (சம்-

45) மணந்தவன்: இந்திரனிடம் சாபம்பெற்றவன், சம்-51: தவம் பூண்டான், சம்-53: ஞானமுனியாயினன், சம்-54. சாபப்படி உயிரிழந்தான், சம்-99

பிரதை-சூரன்மகள், சம்-25: யது குலத்தாள், வேத்-45, சம்-85, யாதவி எனப்படுவள், சம்-85: குந்தி போசனில்லம் வந்தவள், சம்-25: கன்னனைக் கன்னிகையாயிருக்கும் போதே ஈன்றவள், சம்:64: சூரியனருளினுல் அம் மகவை ஈன்று மீண்டும் கன்னிகையானவள், சம்-9, 39: பதுமினிசாதிப்பெண், சம்-32: பாண்டுவைமணந்தவள், சம்-44: தருமபுத்திரனையும், (சம்-67) வீமனையும், (சம்-76) அருச்சுனனையும் (சம்-83) ஈன்றவள்; மகப்பேறு மந்திரத்தை மாத்திரிக்கு உரைத்தவள், சம்-85.

புதன்-சந்திரன்புதல்வன், குரு-6: இளையைக்கூடிப் புரூரவாவைத் தோற்றுவித்தான், குரு-9.

புரூரவா - புதனுக்கும் இளைக்கும் புதல்வன், குரு 9: அசுரர்கவர்ந்த உருப்பசியை மீட்டு இந்திரன் தூதினுற் பூமியில் அவளை மணந்து ஆயுவைத் தோற்றுவித்தான் குரு-10, 13.

புரோசனன்-திருதராட்டிரனுக்கு உயிரன்ன அமைச்சன், வார-110: புன்மதியோன், திரௌ-105: பொறுமையிலாதவன், வார-107: தருமனுக்கு மந்திரியாயிருந்தவன், வார-113. வஞ்சனையொழுக்கமுடையவன்: வார-119; அரக்குமாளிகையெரியில் இறந்தான், வார-133.

பூரு-யயாதிக்கும் சன்மிட்டைக்கும் மகன், குரு-20: தந்தைக்குத்தன் இளமையீந்தவன் குரு-23: மீண்டிளமையும் அரசும் பெற்றவன், குரு-24, 25 [கட்டம், அரு-4⁻.

பொருநைப்பாவநாசத்துறை - தீர்த்த

மயன் - காண்டவவனத்தி லிருந்த அசுரத்தச்சன்: அருச்சுனனருளாலுயிருய்ந்தான்; காண்-74.

மாத்திரி-மத்திரராசன்மகள், சம்-46: பாண்டுவை மணந்தவள், சம்-45: நகுலசகதேவரைப் பயந்தவள், சம்-86. கணவனுடன் சிதையனலிற்குளித்து உயிர் நீத்தாள், சம்-105.

மீனவன் - வசுவென்பானது வீரியத்தையுண்ட மீன்வயிற்றுதித்த பாலகன்: காளிக்கு உடன் பிறந்தவன், குரு-105, 106.

மௌற்கலியன்-நாளாயணிகணவன்-திரௌ-33.

யமன்-தருமபுத்திரனைக் குந்தியிடம் உண்டாக்கியவன், சம்-67.

யயாதி-நகுடன்புதல்வன், குரு-16: சுக்கிராசாரியர் புதல்வியாகிய தேவயானையைமணந்து (யது துருவசு என்னும்) இருகுமாரைத் தோற்றுவித்தவன், குரு-17: சன்மிட்டையைக்கூடி (பூரு, த்ருஹ்யு, அனு) மூவரை அவளிடம் தோற்றுவித்தவன், குரு-19.21: சாபத்தால் முதுமையடைந்தான்: குரு-22: மூப்பைப் பூருவுக்கு ஈந்து மீண்டும்பெற்று அப்பூருவுக்கே அரசளித்தவன், குரு-25.

யாகசேனன்- போதமில்லான், துரோணன் நண்பன், வார-37: பாஞ்சாலராசனுன இவன், துருபதனெனப்படுவான், திரௌ-1: சோமகேசன், திரௌ-88. அக்கிவேசனிடம் படைகள் கற்றவன், வார-38: சத்தியந்தவறியவன், வார-44, 45, 78.

யாசன் - துருபதனுக்காகப் புத்திர காமவேள்வி செய்தவன், வார-85.

யோசனகந்தி-மீன் வயிற்றுஉதித்தவள், குரு-105: மச்சகந்தியாயிருந்தாள், சம்-6: வலைஞர்பதியிடம் வளர்ந்தனள்: குரு-106: காளியென்றும் சத்தியவதி யென்றும்

பெயருடையவள்:குரு-100,108, சம்-17: பராசரனருளால் யோசனை தூரம் கமழும் மேனியுடையாளானுள், சம் 6, குரு-91: பராசரனுல் வியாசனை ஈன்றுள், சம்-7: மீண்டும் அவனருளால் கன்னிகையாயினள், சம்-8: சந்தனுவை மணந்தாள், குரு - 107: சித்திராங்கதன் விசித்திரவீரியன் இருவர்க்குந் தாயானவள், குரு. 112.

வசு-சேதிமாபினன், வாசவனிடம் விமானம் பெற்றவன், கிரிகை கணவன், குரு-104.

வசுதேவன் - க்ருஷ்ணபலராமர்கட்குத் தந்தை, திரௌ-40, 58.

வடமதுரை - துவாரகை சேருமுன் யாதவர் வசித்திருந்த இடம், அருச்-72.

வருணன்-சதயநட்சத்திரத்திற்கு உரிய தேவதை, குரு-72 இவன் சாபத்தினுற் சந்தனுவாய்ப் பிறந்தான், குரு-59,69,72.

வாயு-வீமசேனனைக் குந்தியிடம் உண்டாக்கியவன், சம்-76.

விச்சுவகன்மா-இந்திரனேவலால் இந்திரப்பிரத்த நகரத்தை நிருமித்தவன், சிற்பநூலறிஞன், இந்-9, 10.

விசித்திரவீரியன் - சந்தனுவுக்குக் காளியினிடம் பிறந்தவன், குரு - 111, 112: வீடுமனுல் அரசனுயினன், குரு-115.

விதுரன் - யமனமிசமானவன், சம்-20: வார-23, 54, 122: அமைச்சனுனன், சம்-22: திருதராட்டிரன் தம்பி, வார-94: வில்லில் வல்லவன், வார-103: பாண்டவர்பால் ஆராத அன்புடையவன், வார-122.

வியாசன்-பாரதஞ் சொன்னவன், தற்சி-1: சுகனுக்குத் தந்தை, தற்சி-5: வேதமெலாம் நன்கறிந்தவன்-தற்சி-7: காளிக்கும் பராசரனுக்கும் மகன், சம்-7, 18,14: பிரமசாரியாய் அவதரித்தவன், சம்-7: நெற்றியில் விபூதி யணிந்தவன், சம்-10: தாய் தன்னைச் சிந்திக்க வந்து சேர்பவன், சம்-8: காந்தாரிக்கு நூறுமகவான வரமளித்துக் கல்லினுல் வயிற்றிலிடைமோதிச் சிதைத்த கருப்ப கோசத்தைத் தாழியிலிட்டு உருப்படுத்தியவன்,சம்58,70,71, 78. வேத்திரகீயத்தில் வந்து பாண்டவர்க்கு மேல் நிகழ்த்த வேண்டியவை கூறியவன், வேத்-25: ஐவரைத் திரௌபதிமணத்தற்குரியவனென்று யாகசேனனைத் தெளிவித்தவன், திரௌ-5, 71.

விட்டுமன் - தாயால் தேவவிரதன் என்று பெயரிடப்பட்டவன், பரசுராமனிடம் வில்வித்தை கற்றவன், குரு-87: கடுவிரதம் பூண்டவன், குரு-98: வீடுமன் என்ற பெயர்பெற்றவன், குரு- 99: விருப்பமின்றி இறத்தலில்லாமையாகிய வரத்தைத் தந்தையிடம் பெற்றவன், குரு-102; இருதம்பியர்க்கும்முடி சூட்டியவன்,குரு-113, 115: மீனகேதனனை வென்று தன் கொடிய விரதமே புரிபவன், குரு- 132: பனைக்கொடியினன், குரு-141: பரசுராமனைப் புறங்கண்டவன், குரு-143.

வீமன்-குந்தியினிடம் வாயுவினுல் பிறந்தவன், சம்-76: வேத்-22: பதினுயிரம்யானை பலமுடையவன், வார-27: கொல்லமுயன்ற துரியோதனன் செயலால் நாகலோகஞ்சேர்ந்து அமுது பருகி வலிமைமிகுந்தமீண்டது முதலியன சரிதையிற் காண்க.

வேத்திரகீயம் - ஏகசக்கரத்தைச் சேர்ந்த இடம், வேத்-33.

# சில அருந்தொடர்கள்

கொற்றவைக்கிருபுயங்கொடுத்தோன், குரு-16.
புயர்சலங்களுக்கிசையக்குயாசலந்தழுவினன், குரு-17
பாரினுநமக்கொருபதமுண்டு, குரு-61.
மீனெறிகரந்தென, குரு-64.
மூசுக்குலமணியமெய்ம்முனிவர், குரு-65
மேருவுமணுவுநிறுக்குமாறு, குரு-94.
மகப்பெறுதவருக்குநற்கதியில்லை, குரு-98.

கானமென்குயில்போல்வந்துமீளவுந் தன்காவலர்குலத்திடைக் கலந்தாள், குரு-106.
மலர்த்தோடுமன்னுசுரும்பென, குரு-110

மீனகேதனனை வென்றுதன்கொடிய விரதமேபுரியும்வீடுமன், குரு-132.
அரணியின்புறத்தனலென அவதரித்தனன், சம்-7.
குருகுலப்பெருங்கிரிமிசையிலங்குமுக்குவடு, சம்-21.

புந்தியாலருங்கலைமகள்பொற்பினுற்பூந்திரு புணைகற்பா, லந்தி வாயருந்ததி பெரும்பொறையினு லவனிமான், சம்-25.

மகவின்முகமன்னுபார்வையெய்தாதொழியில்மெய் தானம் வண்மை விரதந்தழல்வேள்விநாளுஞ் செய்தாலுஞாலத்தவர் நற்கதிசென்றுசேரார், சம்-60.

மென்பாலகரைப்பயவாதவர்மெய்ம்மையாகத் தென்பாலவர் தம்பசித்தீநனி தீர்க்கமாட்டார், சம்-61.

இல்வாழ்பவர்க்குமடவாரலதியாவரின்ப, நல்வாழ்வுதேசுபுகழ் யாவு நடத்துகிற்பார், சம்-62.

வெற்பார்நதிகள்சிறுபுன்குழிமேவினன்றே, இற்பாலவர்க்குப் பிறர்மேன்மனமேற்பது, சம்-63.

மதுவயர்ந்தவரில்யாவர்மண்ணின்மேல் மயக்குறுதார், சம்-92.
அஞ்சுதருதீவினையினரமுதுநஞ்சா, நஞ்சமமுதாமுரியநல்வினையின்மாதோ, சம்-100.

முழுகினளனற்புனலின்மொய்ம்பணைவிடாதாள், சம்-105.
வனசமலருங்குமுதமலருமெனவளர்வார், சம்-110.
நீரொடுநீர்சேர்ந்தென்னக்கெழுமினுர், சம்- 115.
தவனணையுததியிற்சாய்த்தமாலைபோல், வார-18.
இருளறமதிநிலவெறித்ததாயினும், பரிதியை நயக்குமிப் பரவைஞாலமே, வார-49.
மருவிவருநல்வினைவயத்தின் வழிவந்தபயன் மற்றொருவருக்குவருமோ, வார-53.
கற்றவர்க்குநலனிறைந்த கன்னியர்க்கும்..........நன்மை தீமையில்லையால், வார-68.
இழிவினேடொன்றி நின்ற வாடகத்தை யோடவைக்குமாறு போல், வார-70.

அருகணுகாவகையகலவிருந்தால் மருவுறு நண்புவளர்ந்திடும், வார-105.

தொழுதகையுளும்படையுள, வார-119.

முக்கணற்புதன்முனிந்தவூர்மூவரோடொப்பான், வார-131.

உட்பனித்துமேல்வெயிலுறவெதும்புநீர், வார-135.

கோள்கரந்த பஃறலையரா வெனக் குகரநீணெறிக்கொண்டு போயபின், வேத்-2.

புரக்கவல்லனென்றொருமடந்தைபின் போவதாடவர்க் காண்மைபோதுமோ, வேத்-8.

உணவினுசையாற் கொல்லவந்தநீ யுவகையாசையாலுள்ள மிந்திவன், கணவனுமெனக் காதலிப்பதே கங்குல்வாணர்தங் கடனிறப்பதே, வேத்-11.

அடற்புலிப்பிணவை யன்பினிற் கலை நயப்பதே, வேத்-11.

ஆளியேறுபுன்பூனைதன்னுடன்பொரநினைக்குமோ,வேத்-12.

அருநெறிக்கடவுளர்க் கமுதமூட்டுத லிருபிறப்பாளருக் கென்றுந் தன்மையே, வேத்-36.

அரியேறனின்கவினுடைநெடுந்தோல்போர்த்துக்கொண்டன செயலார், இரௌ-21.

வென்றலுந் தோற்றலும் வசையே வெம்போர் வேதியரோடுடற்றல், இரௌ-62.

விடத்தோடமுதங் கலந்தென்ன மிளிரும்வேற்கண், இரௌ-92.

நாவினும்புகலக் கருத்தினும்நினைக்கவரியதோர்நலம், இந்-11.

மரகதங் கோமேதகந்துகிர் தரளம் வைரம் வைதூரியநீல, மெரிமணி புட்பராகமென் றிவற்றிற் காகரமிந்தமாநகர், இந்-12.

ஆடகப்பொருப்பினை யழித்துத் தரணியில் நகரொன்றமைத்தவா, இந்-12.

குன்றிலிளவாடை வரும்பொழுதெல்லாஞ் செழுஞ்சாந்தின் மணநாறும் வீதி, அருச்-21.

தங்கொடிக்கயலைப் புறங்காணுங் கண்ணினாள், அருச்-28.

(இராமன்)சென்றவழியின்றளவுந் துளவநாறுஞ்சேது,அருச்-45.

பூங்கமலமலரோடையனையான், அருச்-52.

மதிநிற்கவும் இருள்விடிந்திலது, அருச்-61.

பதியிடத்தரிவையர்க்குளமாகுல்ம்படாதோ, அருச்-69.

அரியவாயினும் வழங்குதற்கேற்றனவல்லவாயினும் தம்மிற் பெரியவாயினுமதிகள்கேட்டனமறுப்பரோ பெரியோரே, காண்-22.

அச்சமேதுணையாவகன்றார், காண்-65.

வடமதுரையினுந் தென்மதுரையினும் மதிநிருபர் கன்னியரைக் கடிமணம்புரிந்தோன், காண்-73.

தீவினையுறினும் பேசுதற்கரிய பெரியவர்நினைக்கின் யார்கொலோ பிழைத்திடாதவரே, காண்-74.

———

# செய்யுள் முதற்குறிப்பகராதி

---

# பிழைத்திருத்தம்.

---

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 36 | 26 | மனதது | மனத்து |
| 77 | 17 | எமு | எழு |
| 171 | 19 | பிரியதனுல் | பிரியனுதல் |
| 225 | 19 | தோரிண்டு | தோரிரண்டு |
| 254 | 37 | ஞெடிந்நு | ஞெடிந்து |
| 256 | 21 | ஒடை | ஓடை |
| 275 | 37 | ஹாவம் | பாவம் |
| 282 | 22 | புன்ட | புண்ட |
| 286 | 5 | அம்வெம் | அவ்வெம் |
| 296 | 33 | காண் | நாண் |
| 339 | 23 | றிக்கும் | றிருக்கும் |
| 356 | 41 | ஒர் | ஓர் |
| 378 | 32 | சித்த | சித்தி |
| 391 | 33 | ரில்பின் | ரியல்பின் |
| 414 | 23 | வாமம் | வாமப் |
| 439 | 5 | ஹத | ஹாத |
| 474 | 4 | கர | சுர |

மற்றும் காணப்படுமவற்றைத் திருத்திக்கொள்ளவும்.